உ

# ஆனந்தபோதினி

## ஒரு சிறந்த மாதாந்தத் தமிழ்ச் சஞ்சிகை.



" எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.

(தொகுதி 8.)

துந்துபிஸூ ஆடிமீ முதல் ருத்ரோத்காரிஸூ
ஆனிமீ வரையில்.
1922ஸூ ஜூலை முதல் 1923மீ ஜூன் வரையில்



நா. முனிசாமி முதலியார்,
" ஆனந்தபோதினி " ஆபீஸ்,
நெ. 6, வெங்கடேச மேஸ்திரி தெரு,
சௌகார்பேட்டை, மதராஸ்.



கலிகோ பைண்ட் விலை ரூபா 1—6—0. } 1923 { தபாற் கூலி வேறு.

# ANANDA BODHINI

## GOLDEN OPINIONS.

---

From Rao Saheb Late T. Ramakrishna Pillay Avl. B.A., F.M.U., F.R.H.S, Chairman, Board of Examiners in Dravidian Languages, Madras University.

I am a regular reader of " Ananda Bodhini" the Tamil monthly published in George Town and I am glad to take this opportunity of expressing my appreciation of the way the Journal is conducted. It is just the kind of magazine we want for the Indian women in their houses and the conductors of the Journal have my best wishes for the success of their undertaking.

*Madras, 28th Nov. 1915,*
THOTTAKADU HOUSE. } (Sd.) T. RAMAKRISHNA PILLAY.

---

From Rao Bahadur A. C. Pranatartihara Iyer Esq., B.A. I.S.O., Retired Inspector of Sohools, *now* Registrar of Books, Nungambakkam.

I have read several numbers of " **Ananda Bodhini**" It is conducted on right lines. The matter is suitable and the diction is unobjectionable. I can unhesitatingly say that the journal deserves public encouragement and support.

NUNGAMBAKKAM,
*Madras, 5th Dec. 1915.* } (Sd.) A. C. PRANATARTIHARA IYER.

---

We have received the current number of the Tamil monthly " **Ananda Bodhini**," containing a variety of information on several subjects of every day importance. The special feature of the monthly is that a separate secttion is set apart for giving advice to women either in the form of abstract statements or small stories containing moral lessons.—*Hindu 22-9-15.*

---

Dear Sir,

Your Tamil monthly entitled " **ANANDA BODHINI**"..............is written in *easy*, *clear* and *readable* style, *well-suited, particularly*, to *ladies* who take a liking to it on account of the varied subjects of interest dealt therein, calculated to mould their character, That such a monthly should be in existence, side by side with the Anglo-Indian contemporaries, is very much to be appreciated. The subjects dealt with in the short compass of the monthly are such that they deserve to be *read* and *re-read* from the view point to quality is contradistinction from style and rhetoric, which a select few of our readers seem to yearn for, as is evident from the pages of the current number *i.e.* pages 288 and 289. A majority of the subscribers now on the rolls will be at one with me when I say that the style now adopted would conduce to the well-being and uninterrupted continuance of the monthly, since it is being and has to be read by both sexes, ... ... ... ... ..., It is very much to be envied that there should be over 10000 * subscribers, on the rolls which no other monthly of the kind is able to secure, or has ever before secured since inception I wish the monthly all success.

Trivandrum
28-1-17. } A. V. SUBRAMANIA AIYAR,
F.N. S.A. (Lon.) F.C.I. (Birm.)

---

* Now more than 19 Thousands,

# ஆனந்தபோதினி

8-ம் வருட அட்டவணை.

---:o:---

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

Subscriber 13245

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| | | |
|---|---|---|
| தொகுதி 8 | துந்துபிஸ்ரீ ஆடிமீ கசு<br>1922ஸ்ரீ ஜூலைமீ 16உ | பகுதி 1 |


## கடவுள் வணக்கம்.

ஆடாம லோய்ந்திட்ட பம்பரம் போல்விசை
யடங்கிமனம் விழ நேரே
யறியாமை யாகின்ற விருளகல விருளொளியு
மல்லா திருந்த வெளிபோற்
கோடா தெனைக்கண் டெனக்குனிறை சாந்தவெளி
கூடியின் பாதி தரும்
கூடினே ஞேசரியை கிரியையின் முயன்றுநெறி
கூடினே ஞேவல்ல னியா
னீடாக வேயாறு வீட்டினி னிரம்பியே
யிலகிவளர் பிராண னென்னு
மிருகிதி யினைக்கட்டி யோகபா னுகாம
வேலைக் குடும்ப னுகித்
தேடா தழிக்கவொரு மதிவந்த தென்கொலோ
தேடரிய சத்தாகி யென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோம யானந் தமே.

குட்டி யெனதென் றிடுஞ்சுமையைச் சுமந்தி யெனையுஞ் சுமையாளாக்
கட்டிப் பிடித்து வினைவழியே கூத்தாட் டினையே நினதருளால்
வீட்டைக் கருது மப்போது வெளியா மூலக வியப்பனைத்தும்
வட்டுக் கடங்காச் சொப்பனம்போ லொந்தா யிருந்த தென்சொல்வேன்.

உரையுணர் விறந்து தம்மை யுணர்பவ ருணர்வி னூடே
கரையிலா வின்ப வெள்ளங் காட்டிடு முகிலே மாருப்
பரையெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே நின்னைப் பற்றித்
திரையிலா நீர்போற் சித்தந் தெளிவனோ சிறிய னேனே.

அரும் பொருள் விளக்கம்.

1. ஆடாம லோய்ந்திட்ட பம்பரம்போல்—மனம் சதா விஷயங்களை நாடி யலைந்துகொண்டே யிருப்பதால் அது சுழன்றுகொண் டிருக்கும் பொம்பரத்திற் கொப்பிடப்பட்டது.

"அம்மனம் விசையடங்கி வீழ" என்றது மனோலயம் வாய்ந்து என்றபடி.

அறியாமையாகின்ற இருளகல=அஞ்ஞானமாகிய அவித்தை யிருளொழிய.

மனமே மாயை யாதலின் மனம் ஒடுங்கின் மாயை யொழியும். அஞ்ஞானமாகிய மாயை யெவ்வாறொழியுமெனின், ஒரு குகையில் அநாதி தொட்டு இருள் இருப்பினும் தீபத்தைக் காட்டியவுடன் நீங்குதல்போல் ஆன்மப் பிரகாசம் தோன்றியதே அஞ்ஞான விருள் நீங்கும்.

"போத மென்பதே விளக்கொவ்வும் அவித்தை பொய் யிருளாம்—தீதிலா விளக்கெடுத் திருள் தேடவும் சிக்காது—ஆதலா லறிவாய் நின்ற விடத்தறியாமை—எதுமில்லை யென் றெம்பிரான் சுருதியே யியம்பும்" என்று இம்மகானே அருளியுள்ளது ஈண்டு கவனித்தற்பாலது.

இருளொளியுமல்லா திருந்தவெளி=நினைப்பு மறப்பற்ற அல்லது சகல கேவல மற்ற இடம்.

ஆறு வீடு=மூலாதார முதலிய ஆறு ஆதாரங்கள்.

எனைக் கண்டு எனக்குள் நிறை சாந்தவெளி கூடி=என் நிச சொரூபத்தை நானறிந்தபின் எனக்குள்ளிருக்கும் உபசாந்தமாகிய சிதாகாச வெளியில் தோய்ந்து.

இன்பாநீதம்=தற்போதமற்ற ஆனந்தா தீதநிலை.

2. குட்டி=(அடியார்களது தொண்டுகளை) ஏற்றுக்கொண்டு.

எனது என்றிடுஞ்சுமை=புறப்பற்றுக்களாகிய பாசச்சுமை.

"எனதென்றிடும்............ஊட்டாட்டினையே" என்றது, "யான் எனது என்ற பற்றுக்களையுண்டாக்கி அவற்றின் மூலமாய் என் வினைக்குத் தக்க போகங்களை யான் அனுபவிக்கும்படி செய்கின்றனை" என்பதாம்.

வினைகள் ஜடமாதலால் அவை தாமே அனுபவத்திற்குவரா ஆதலின் ஈசன் அந்த வினைப்போகங்களை நமக்கு ஊட்டிவைக்கிறான். "ஆட்டிவைத் தாலாரொருவர் ஆடாதாரே" என்றனர் அப்பமூர்த்திகள்.

நினதருளால்.........சொப்பனம்போ லெந்தாயிருந்த தென்சொல்கேன்=எந்தையே! உனதருளால் நான் மோக்ஷமடையக் கருதி ஞானத்தைப் பெறும்போது நாமரூபமாகத் தோன்றும் இந்த உலக அற்புதங்களனைத்தும் பெருங் கனவாய்த் தோன்றியதென்ன அதிசயம் என்பேன்.

மெய்ஞ்ஞான நிலையில் ஆரோபமாகிய உலகத் தோற்றங்க ளனைத்தும் கனவுபோற் றென்றலால் அவ்வாறு கூறினர்.

"விதிக்கும் பிரபஞ்ச மெல்லாம்—சுத்த
வெயின்மஞ்ச ளென்னவே வேதாக மங்கள்
மதிக்கு மதனை மதியார்—அவர்
மார்க்கந் துன்மார்க்கஞ் சன்மார்க்கமோ மானே—சங்கர..."

என்று இச்சுவாமிகளே கூறியுள்ளார்.

"ஆரோபத் தோற்றமாகிய இவ்வுலகம், அதிஷ்டானம் தோன்றிய போது கயிற்றரவு, கிளிஞ்சில் வெள்ளி போலவும், கனவு போலவும் பொய்யாய் விளங்கிவிடும் என்று வேதங்களே முறையிடலால், இதை மதிக்காதவர்கள் மார்க்கம் துன்மார்க்கமாகிய அஞ்ஞான மார்க்கமே யன்றிச் சன்மார்க்கமல்ல" என்பதாம்.

3. உரையுணர்...உணர்பவர்=மனோலயம் வாய்ந்து தன்னை யறிந்த ஞானிகள்.

"பரை யெனுங் கிரணஞ் சூழ்ந்த பானுவே"—சூரியனும் அதன் கிரணங்களும் வெவ்வேறாக விவகரிக்கப்படினும் இரண்டும் ஒன்றேயாதல் போல், "அபின்னமாகிய அருட் சத்தியோடு கூடிய சிவமே" என்றபடி.

---

## நமது புது வருடம்.

பூவுலகனைத்தும் படைத் தளித்தழிக்கும் பரம் பொருளின் கிருபையாலும் நமது அன்பார்ந்த சந்தாநேயரின் ஆதரவாலும் ஆனந்தனது ஏழாவதாண்டு இனிது முடிந்தது. இந்த ஆடிமாஉ 8-வது ஆண்டு தொடங்கி விட்டது. இந்த எழுவருடங்களும் சந்தாதாரர்கள் ஆதரித்து வந்ததுபோலவே இனியும் ஆனந்தனது அபிவிர்த்தியை மனதில் வைத்து நடந்து கொள்வார்க ளென்று பூரணமாய் நம்புகிறோம். ஈசுவரன் நீங்கலாக, நமது சந்தாதாரரைத் தவிர நம்மானந்தனுக்கு வேறு எவ்வித ஆதரவையும் இல்லை யென்பது யாவருமறிந்த விஷயமே.

வி-பி யனுப்புவதா லுண்டாகும் தொல்லையை யுன்னி இவ்வாண்டு சந்தா விற்காக ஒருமாதம் முன்னடியாகவே, அதாவது ஆனிமாத சஞ்சிகையையே வி-பியிலனுப்பி யுள்ளோம். 8-ம் ஆண்டு சஞ்சிகை வேண்டாமென்று தெரிவித்து விட்டவர்களுக்கு ஆனிமாத சஞ்சிகையை வழக்கம் போலனுப்பிவிட் டிருக்கிறோம். நாம் எவ்வளவோ எழுதிக்கேட்டுக்கொண்டும் பலர் சந்தா நம்பரையறிவிக்காமலே பணத்தை யனுப்பிவிட்டிருக்கிறார்கள். அவர்கள் பெயர்களைக் குறித்து வைத்துக்கொண்டு வி-பியனுப்பும் போது சோதனைசெய்தே யனுப்புகிறோம். அதிலும் அகப்படாது தவறி விட்டவர்களுக்கு வி-பி வந்துவிடும். சந்தா நம்பரைத் தெரிவிக்காததாலே

யே இத்தவறு நேர்வதால் அச்சந்தாதாரர்கள் வி-பி யனுப்பியதால் நேர்ந்த கஷ்டத்தை யனுப்பி விடும்படி வேண்டிக் கொள்கிறோம்.

சந்தாதாரர்கள் நமக்குக் கஷ்டமான உதவி செய்யும்படி நாம் கேட்கவில்லை. ஒவ்வொரு சந்தாதாரரும் வேறு ஒரு புது சந்தாதாரரைச் சிபாரிசு செய்வதை யொரு கட்டாய விரதமாகக்கொண்டு நடத்தினுல், போதுமான தொகை சேர்ந்ததே சஞ்சிகையை யின்னும் விமரிசையோடும் விசேஷ அமைப்போடும் நடத்த ஆயத்தமா யிருக்கிறோம். இவ்வுதவி சந்தாதாரர்கள் நம் அருமைத் தமிழ்த் தாய்க்கும், புண்ணிய் பூமியாகிய நம் தாய் நாட்டிற்கும் செய்த பெரும் புண்ணியத் தொண்டாகும். சச்சிதானந்தப் பரம்பொருள் உங்களுக்குத் தீர்க்காயுளையும், குறைவற்ற மற்ற பேறுகளையும், பூரண அருளையும் பாலிப்பாராக.

ஓம் தத் ஸத். பத்திராதிபர்.

---

# ஆனந்தபோதினி

துந்துபிஹு ஆடிமீ ௧௨

## தேகப் பயிற்சி.

தேகப்பயிற்சி என்றால் தேகம் பலத்தையும், சுகத்தையும் அடைவதற்கு அவசியமான செயல்களில் பயிற்சியடைதல் என்று பொருள். தேகம் நல்ல நிலைமையிலிருந்தால் மனமும் நல்ல நிலைமையிலிருக்கும். தேகம் சுகமும் பலமுமுள்ளதாக விருந்தால் மனமும் பலம் பொருந்தியதாய் தைரியமுடையதா யிருக்கும். சாதாரணமாய் நாம் வியாதியுற்றிருக்கும் காலத்தில் மனம் சந்தோஷமின்றிச் சோர்வடைந்திருப்பது அநுபவம். ஸ்தூல தேகத்தில் சூக்ஷ்ம தேகம் குடியிருக்கிறது. இரண்டு தேகங்களும் ஒரு வஸ்துவிலிருந்தே உற்பத்தியாயின. அதாவது, இரண்டும் பஞ்சபூதங்களிலிருந்தே உற்பத்தியாயின. ஆனால் அந்தக்கரணம் சூக்ஷும பஞ்சபூதங்களினின் றுண்டாயிற்று. ஸ்தூல தேகம் ஸ்தூல பஞ்சபூதங்களிலிருந் துண்டாயிற்று. இதனால் சூக்ஷும பூதங்களிலிருந்துண்டான அந்தக்கரணம் கண்ணுக்குப் புலப்படாத வஸ்துவாகவும், ஸ்தூல பூதங்களிலிருந் துண்டான ஸ்தூல தேகம் கண்

னுக்குப் புலப்படக்கூடிய பொருளாகவு மிருக்கின்றன. ஆயினும் இரண்டும் பஞ்சபூதங்களிலிருந்தே உண்டானதால் இரண்டிற்கும் சம்பந்தமுண்டு.

தேகத்தினின்றும் மனதை வேறு பிரித்தறிந்து, அதை யடக்கித் தன்னையறிந்து, தேகம் நாமல்லவென்று நீக்கவேண்டிய ஞானிகள்கூட, ஆரம்பத்தில் அப்பியாசம் செய்யும்போது தேகத்தைச் சுகமாகவும், திடமாகவும் வைத்துக்கொண்டால்தான் மனதை ஒரு வழியில் நிலைநிறுத்த அநுகூலமாக விருக்கும். அதினும் தேகத்தை, யோக சாத்திரத்தில் விதித்திருக்கும் நிலையில் திருத்தினால் மனதை நிலைநிறுத்த அநுகூலம் உண்டாகிறது. இவ்வாற்றால் மனதிற்கும், தேகத்திற்கும் ஒருவிதச் சம்பந்த முண்டென்பது நன்கு விளங்கும்.

உலகில் முன்னேற்ற மடைந்துள்ள எந்த நாட்டாரும் புத்தி பலத்தோடு தேகபலமும் பொருந்தியவர்களாகவே யிருக்கக் காணலாம். தேகபலமின்றேல் தைரியமில்லை. தைரியமில்லாத நாட்டார் அன்னியரால் மிக்க அலட்சியமாய்க் கருதப்படுகிறார்கள். தேகபலமே தைரியம், உரோஷம், துணிகரம், பீதியின்மை முதலிய குணங்களை யளிப்பது. தைரியமென்றால், "சாகிற கிழவிகளின் தலைகளை யெல்லாம் வெட்டிவிடுவேன்," என்று வாய்ப் பறை யறைவதல்ல. சிலர் "இரவில் பணத்தை யெடுத்துக் கொண்டு தனியே காட்டுவழி செல்லாதே யென்றால் "சே! என்ன வந்தடிக்கிற கள்ளன்கூட உண்டா? எவன் வந்தாலும் மண்டையைப் பிளந்துவிடுவேன்" என்று பெருமையாய்க் கூறி விட்டு இரவில் ஒரு கட்டையைக் கண்டதே அப்பா! என்றலறிப் பணப்பையை எறிந்துவிட்டு ஒட்டம் பிடிக்கும் சுபாவமுடையவர்களா யிருக்கிறார்கள். இவையெல்லாம் தைரியமாகா. ஆபத்து வருமுன் அதைத் தடுக்க முயல்வது கோழைத்தனமாகாது. ஆபத்து வந்தபோது மனங் கலங்காமல், மானத்தை யிழக்க நேர்வதாயின் மரணத்துக்கும் அஞ்சாமல், சமயோசித புத்தியோடு நடந்துகொள்வதே சுத்த வீரத்தன்மை யாகும். இதை யடைவதற்குத் தேகப்பயிற்சி அத்தியாவசியமானது.

நம் நாட்டில் முற்காலத்தில் தேகப்பயிற்சி மிக்க அக்கறையாய்க் கவனிக்கப்பட்டு வந்தது. ஒவ்வொரு நகரத்திலும் கலைத்து பயிற்றுவிக்கும் பல சிலம்பக் கூடங்கள் இருந்தன. கிராமங்கள்

தோறும் இருந்தன. அவை மகம்மதிய இராஜாங்கத்தில் அதிகமாக விருந்ததாய்த் தெரிகிறது. எவ்வாறெனில், சிலம்ப வித்தை கற்பிக்கும் உபாத்தியாயருக்கு வஸ்தாத் என்று பெயர். வஸ்தாத் என்றால் உருது பாஷையில் உபாத்தியாயர் என்று பொருள். ஆனால் அது சாதாரணமாய் மல்யுத்தத்தில் கெட்டிக்காரன் என்ற பொருளில் உபயோகிக்கப்படுகிறது. சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்கூட இம்மல்லக சாலைகள் இருந்தன. நம் நாட்டில் அனேகர் இவ்வித்தையில் பிரசித்தி பெற்றிருந்தார்கள். நேரில் புலியோடு யுத்தம் செய்தவர்களெல்லாம் இருந்தார்கள். அந்தோ! வர வர மற்ற விஷயங்களிலெல்லாம் நம்மவர் க்ஷீணதசை யடைந்தது போல் இதிலும் அடைந்துவிட்டார்கள். வெளிப்பகட்டான விஷயங்களில் மனம் செல்லவே, தங்கள் தாய்நாட்டின் கௌரவத்தையும், தங்கள் க்ஷேமாபிவிர்த்தியையும் அடியோடு மறந்தார்கள். அன்னிய பாஷைக் கல்வியும், அன்னிய நாகரீகப்பித்தும் ஏற ஏற நம் முன்னோர் நடக்கை ஆசாரம் முதலியவற்றையும், நம் பூர்விக உன்னத நிலைமையையுமே அவமதிக்கத் தலைப்பட்டார்கள்.

தேகப்பயிற்சிக்கு ஆரம்பம் செய்யப் பாலியப் பருவமே தக்க காலம். இக்காலத்திலுள்ள நமது மாணவர்களுக்குத் தேகப்பயிற்சியே உண்மையிலில்லை. மல்யுத்தமே யின்னதென்று இவர்களுக்குத் தெரியாது. எங்காவது குஸ்தி கோதாவில் பந்தய காலங்களில் சிலர் போய் வேடிக்கை பார்த்திருந்தால் இருக்கலாம். இவர்கள் தேகப்பயிற்சியின்றி மனப்பயிற்சி மட்டுமே செய்து, படித்து உத்தியோகம் செய்வதைமட்டுமே நோக்கமாகக் கொண்டிருப்பதால், உபசாரச் சம்பளம் பெறும்காலம் வருவதற்குள்ளாகவே, க்ஷயமோ, காசமோ, பாரிசவாயுவோ ஏதோ ஒரு வியாதி வந்து அகால மரணத்திற்காளாகிறார்கள். எங்கோ சிலர் தப்பிப் பிழைத்து உபசாரச் சம்பளம் பெற்றால் அவர்களும் சொல்ப காலத்திற்குள் மடிகிறார்களே யன்றி நீண்ட காலம் உபசாரச் சம்பளம் பெற்று வாழ்வது அரிதாகவே யிருக்கிறது. மேல் நாடுகளில் மனிதனுடைய சராசரி வயது 43க்கு அதிகமாக விருக்கிறது. நம் நாட்டிலோ 23 வயதே. என் இந்த வித்தியாசமெனின் மேல்நாடு குளிர்ச்சியுடைய தேசம் என்பது ஒருபக்க மிருக்க, அவர்கள் எப்போதும் தேகப்பயிற்சி செய்கிறார்கள். வேறு தவி

னாமல் போஜனம் செய்கிறார்கள். தங்கள் இலௌகிக விஷயங்கள் எல்லாவற்றிலும் காலக்கிரமம் தவிராது நடந்துகொள்கிறார்கள். மேல்நாட்டார் முன்னேற்ற மடைந்ததற்குத் தேகபலமும் ஒரு உபகரணமே.

அந்தோ! நம்மவர் எது நமக்கு அவசியமோ, எது நன்மை யளிக்குமோ, அந்த விஷயத்தில் மேல்நாட்டாரைப் பின்பற்றுவ தில்லை. எது அனாவசியமோ, எது நமது ஆசாரத்திற்கு மாறான தோ, எது தகுதியற்றதோ, நமது பொருளாதார நிலைமையை நோக்க எது நமக்குத் தீங்கிழைக்குமோ, அத்தகைய விஷயங்களி லேயே மேல்நாட்டாரைப் பின்பற்றி யல்லற் படுகிறதோடு தாய் நாட்டிற்கே பெருந் தீங்கிழைக்கிறார்கள்.

எல்லா விஷயங்களிலும் மேல்நாட்டாரைப் பின்பற்றக் கருது வது பெருங் குற்றமே யாகும். திருட்டாந்தமாய் அவர்களுடைய நாகரீகமும், ஆசாரமும் நமக்குப் பொருந்தாதவை. ஏனெனில் அவர்களுடைய நோக்கமனைத்தும் இவ்வுலக போகபாக்கியங் களைப் பூரணமாய் அனுபவிப்பதையே முடிவாக உடையது. நம் முடைய விவகாரங்களனைத்தும் மறுமைப் பயனையே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளவை. திருட்டாந்தமாய் அவர்களு டைய வேத புத்தகம் தவிர ஏனைய நூற்களனைத்தும் 1000த்தில் 999 ஜடசாத்திர சம்பந்தமாகவும், இம்மண்ணுலக போகத்தைப் பொருந்தியவைகளாகவுமே யிருக்கும். அவர்கள் சம்பாஷணையும் பிரசங்கங்கள் முதலியனவும்கூட அநித்திய உலக சம்பந்தமான வைகளாகவே யிருக்கும். அவர்கள் மதசம்பந்தமான போதனைக ளும், கோயிலில் பிரசங்க வாயிலாகப்போதிக்கப்படுவதும் எழுதப் படுவதும் மாத்திரமே யன்றி அப்பியாசத்தில் காணக் கிடைக்கா வென்பது பிரத்தியட்ச அனுபவம். ஒரு நூல் எழுதத் தொடங்கு முன் கடவுள் வணக்கம் கூறவேண்டுமென்ற விதியே யவர்களிட மில்லை. நமது கொள்கை கடவுள் வணக்கம் கூறப்படாத நூலைக் கையில் தொடலாகா தென்பதே. அவர்களுடைய உடை யும் ஊணும் அவர்கள் தேசத்தின் நிலைமைக்குத் தக்கவாறாக அமைந்திருக்கின்றன. நமது நிலைமைக்கு அவை தகுதியானவை யன்று. இங்கிலாந்தில் சராசரி ஒரு மனிதனுடைய வருமானம் 80 ரூபாய். நம் நாட்டிலோ ரூபா 2—8—0 வருமானம். நாம் அவர்களைப்போல் வேடமணிய முயல்வது எத்தகைய மதியீன

மான செய்கையென்பது நன்கு விளங்குகிறதன்றோ! எத்தனை யறிவாளிகள் இதை யுணர்ந்து நடக்கிறார்கள்? அந்தோ! இன்னும் அரை வேடங் கால் வேடங்கள் மலிவாகவே யிருக்கின்றன. தேகபலமும், தைரியமும் பெற முயலவேண்டு மென்பதுகூட மேல்நாட்டார் பெற்றிருப்பது போன்றவை யென்பதல்ல நமது கருத்து.

மேல்நாட்டாரிடமுள்ள வீரத்தன்மை மிருக பல சம்பந்தமான தமோகுண முடையது. சிங்கத்திற் கிருப்பதுபோன்ற பயமற்ற வீரமும், தைரியமும் தமோகுணத்தைச் சேர்ந்தவையே. அதற்கு நீதி அநீதி யொன்றுமில்லை. அது தன் சுயநல வாஞ்சை கைகூட வேண்டுமென்ற ஒரே நாட்டத்தை யுடையது. அது பொறுமை தணியா ஆசை முதலியவைகளை யுடையது. தெய்வத்திற் கஞ்சாதது.

நமது மூதாதைகளிட மிருந்த சுத்தவீரத் தன்மை இரஜோகுண சம்பந்தமான சத்துவகுணம் பொருந்தியது. அது பிறர்க்குத் தான்பிழைக்கச் சம்மதியாதது. பொறுமையை யஸ்திவாரமாக உடையது. நீதியையும் சத்தியத்தையும் நிலைநிறுத்தவும், தாய் நாட்டிற் காகவும், மதத்திற்காகவும், மானத்தைக் காப்பாற்றவும், ஜீவகாருண்யத்திற்காகவும் தன் உயிரைத் தியாகம் செய்வதை விரதமாகவுடையது. பிறர்செய்யும் அக்கிரமங்களை ஈசுரார்ப்பணம் செய்துவிட்டு அவன் மேல்வைத்த முழு நம்பிக்கையால் மரணத்திற் கஞ்சாத திடமுடையது.

இத்தகைய வீரதீரமே நம் முன்னோர்களாகிய மகான்கள் பெற்றிருந்தார்கள். நம் தாய்மார்களாகிய கற்பரசிகளும் இத்தகைய விரத்தன்மையே பொருந்தியவர்களாகப் பிரகாசித்தார்கள். மல்யுத்தத்தில் தேர்ந்தவர்களுக்கு மல்லர்கள் என்றுபெயர். பீமசேனன் ஒரு பிரசித்திபெற்ற மல்லன். "பலத்தில் பீமன்" என்றதே ஒரு பழமொழியாக வழங்குகிறது. துரியோதனன், இடும்பன், கீசகன் முதலியவர்களும் மல்யுத்தத்திற் தேர்ந்தவர்கள். பீமசேனன் துரியோதனனைக் கதாயுத்தத்தாலும், இடும்பன் கீசகன் இவர்களை மல்யுத்தத்தினாலுமே வென்றான். ஸ்ரீ கிருஷ்ண பகவானும் கம்ஸனுடைய மல்லரோடியுத்தம்செய்து வெற்றிபெற்றிருக்கிறார். இராமாவதாரத்திற்கு முந்திய காலமாகிய இரணியன் ஆண்டகாலத்திலேயே மல்லர்கள் இருந்திருக்கிறார்கள். இரணியன்

முதல் முதல் தன் மல்லர்களை விட்டே பிரகலாதனைக் கொல்ல முயன்றான்.

அந்தோ அத்தகைய நாட்டில் இப்போது தேகப்பயிற்சியே குதிரைக் கொம்பாய்விட்டது. தேகப்பயிற்சியில் இரண்டு மூன்று விதங்களுண்டு.

1. சைனியங்களில் போர்வீரர்களுக்குக் கற்பிக்கப்படும் கவாத்துபழகல் ஒருவித தேகப்பயிற்சியே. அதனால், கூறும் சமிக்கைப்படித் தேகத்தைச் சட்டென்று எந்தப்பக்கம் வேண்டுமாயினும் திருப்பவும், எந்த நிலையில் வேண்டுமாயினும் நிறுத்தவும் பழகுகிறார்கள்.

2. குறுக்குக்கழி (Horizontal bar), இரட்டைக்கழி (Parralel bars), மரக்குதிரை (Vaulting Horse), கதை முதலிய கருவிகளைக் கொண்டு பழகுதல்.

3. கிரிகெட் முதலிய பந்துவிளையாட்டு, குதிரைமேலிருந்தபடி பந்தடித்தலாகிய போலோ, முதலியவை. இவற்றால் ஓடுதல் தாண்டுதல் குதித்தல் முதலியவற்றில் பழக்கமுண்டாகிறது.

2-வது 3-வதில் குறிக்கப் பட்டவைகளில் பெரும்பாலானவற்றில் ஆபத்துக்கு இடமுண்டு. இவை முரட்டுத்தனமான பயிற்சி யெனலாம்.

தேகப்பயிற்சியின் மாதிரி, தேக அமைப்பின் இயற்கையையும், அவயவங்கள் ஒன்றோடொன்று பொருந்தியிருக்கும் நிலைமையையும் அநுசரித்து ஏற்படுத்தப்பட்டதாக விருக்கவேண்டும். தேகத்தின் ஒரு அங்கத்திற்கு மட்டும் பலத்தை யளிக்கத்தக்க பயிற்சியைவிட தேகத்தின் எல்லா அவயவங்களுக்கும் சமபலத்தை யளிக்கத்தக்க பயிற்சிதான் சிரேஷ்டமானது. அதோடு பயிற்சிகள் கஷ்டமின்றி இலேசாகவும் உற்சாகத்தோடும் செய்யக் கூடியவைகளாக விருக்கவேண்டும்.

நம்நாட்டுத் தேகப்பயிற்சி.—

பூர்வீக முதலே நம் முன்னோர்கள் தேக அமைப்பையும் அவயவங்களின் பொருத்தத்தையும், அநுபவமாக உணர்ந்து அவற்றிற்குத் தக்கபடி தேகப்பயிற்சிக்கு வேண்டிய விதிகளை யேற்படுத்தி யிருக்கிறார்கள். அப்பயிற்சிகள் தேகத்திலுள்ள நரம்புகள் தசைக்கட்டுகள் எலும்புகள் முதலிய எல்லாவற்றிற்குமே

பலமுண்டாக்கத் தக்கவை. இப்பயிற்சியே நமக்குப் பொருத்த மானது. இது முன் கூறியவற்றைப்போல் ஆபத்தை யுண்டாக் கத்தக்கதல்ல. சந்தோலா, 'கதை முதலிய கருவிகளை யேந்திச் செய்யும் பயிற்சிகளும் இதிலுண்டு.

இப்பயிற்சிகளில் பெரும்பாலும் மிக்க எச்சரிக்கையும், புத்தியும், உபயோகிக்க வேண்டிய அவசியமில்லை. இப்பயிற்சிகளால் பொதுவாய்த் தேகபலமும், ஆரோகமும், சுகமும் உண்டாகும். இப்பயிற்சிகளெல்லாம் ஒவ்வொருவரும் தனித்தனியாய் செய்யத் தக்கவைகளே யாயினும், சிலர் கூட்டமாகச் சேர்ந்தே ஒரு ஆசிரியன் கீழ் பயில்வதுதான் ஆதிமுதல் வழக்கமாக விருந்து வருகிறது. அப்போது ஒருவித இசையோடு யாவரும் ஏககாலத்தில் உபாத்தியாயரைப் பின்பற்றி பயிற்சி செய்வதால், ஒருவித உற்சாக முண்டாவதோடு எவ்வித வருத்தமும் தோன்றாமல் மனதிற்குச் சந்தோஷமு முண்டாகிறது.

இப்பயிற்சிகள் பொதுவாய்த் தேகத்திற்குப் பலமும் சுகமு மட்டுமே யளிக்குமென்று கூறினோம்:—மல்யுத்தம் இப்பயிற்சியோடுசேர்ந்ததே, குத்துச்சண்டை மல்யுத்தத்தின் ஒருபகுதியே. இது இருவர் சேர்ந்து செய்யவேண்டியது. இதில் மிக்க சாக்கிரதையும், புத்திசாமர்த்தியமும், முன்யோசனையும் உதவியாக வேண்டும். மல்யுத்தத்தில் தேர்ச்சியடைந் திருந்தால் ஆபத்து நேர்ந்தகாலத்தில் ஆயுத மில்லாதவர்கள் ஒருவர் இருவரை வென்று விடலாகும்.

தற்காப்பிற்காக மல்யுத்தத்தோடு சிலம்ப (கத்தி) வித்தையும் கோல் வித்தையும் கற்கவேண்டிய தவசியம். இவற்றில் இன்னும் அதிக ஜாக்கிரதையும், முன்யோஜனையும், புத்திநுட்பமும் வேண்டும். கோல்வித்தையில் நன்றாய்த் தேர்ந்த ஒருவன் ஏககாலத்தில் தன்னை மடக்கிக்கொண்ட பத்து பதினைந்துபேர் கள்ளர்களை அடித்துத் தப்பித்துக் கொண்டான். கோலில் தேர்ந்தவன் கத்திக்கு அஞ்சான்.

தேகபலம் பெறும் நோக்கத்தோடு பயிற்சி செய்வோருக்கு ஒரு விதத் தன்மதிப்புண்டாகிறது. அவர்கள் தேகபலத்திற்கு இடையூறு செய்யத்தக்க துர்க்கிரியைகளில் பிரவேசிக்கமாட்டார்கள். அவர்களிடம் கோழைத்தனமிராது; கபடம், சூது, இச்சகம் பேசுதல், 'துரோகம் முதலிய அற்பகுணங்கள் இரா.

நண்பர்களே! நாம் இப்போது இவ்வளவு கூறியதும் எதற்காக? நமது பூர்வப் பெருமை யிப்படி யிருந்தது என்று புகழ்வதற்கா? அல்லது நீங்கள் வேடிக்கையாய் இதை வாசித்துவிட்டு "அப்பா இதிலும் இவ்வளவு சங்கதிகளிருக்கின்றனவா?" என்று கூறிவிட்டு மறுவிநாடி இதை மறந்துவிடவா? இல்லை யில்லை. நாம் முன்னேற்றமடைய வேண்டுமாயின் தேகபலமும் சுகமும் பெற வேண்டியது அத்தியாவசிய மென்றும், அதற்காகக் கட்டாயம் தேகப்பயிற்சி செய்யவேண்டுமென்று முணர்ந்து, நீங்கள் இப்போது வழங்கும் பெண்பிள்ளை விளையாட்டாகிய பந்துவிளையாட்டு முதலியவற்றை விட்டுவிட்டு நம்நாட்டுத் தேகப்பயிற்சி முறைமைப்படி செய்யத் தொடங்கவேண்டு மென்பதற்கே இவ்வளவும் கூறினோம். தேகபலத்தோடு மனோபலமும் புத்திபலமும் பெறுவீர்கள். "மனம்போல் வாழ்வு" என்றபடி மனோபலம் பெற்றால் கட்டாயம் முன்னேற்ற மடைவீர்கள். உங்கள் முன்னேற்றத்தையும், தாய்நாட்டின் க்ஷேமத்தையும் கருத்தில் வைத்துக் கடவுளைத் துதித்து உடனே நமது கோரிக்கையின்படி செய்யத் தொடங்குவீர்கள் என்று பூரணமாய் நம்புகிறோம்.

நண்பர்களே! எக்காரியத்திற்கும் தேசபக்தியும், "படித்தபடி நடக்கப் பழகாவிடின் நாம் படித்ததால் ஒரு பயனுமடையோம், குங்குமம் சுமந்த கர்த்தபத்திற்குச் சமதையாவோம்" என்ற அறிவு உணர்ச்சியும், தேச நன்மையின் பொருட்டு பொதுநல ஊழியம் செய்யும் பெருந்தன்மையான குணமும் உடைய உத்தமர் ஒருவர் இருவர் முன்வந்து மற்றவர்களுக்குப் போதித்து, முயற்சி வழியில் அவர்களை அழைத்துச் சென்றால்தான் அக்காரியம் சித்தியடையும். செய்வோர்க்குப் பெரும் புண்ணியப் பேறும் சித்திக்கும். அப்படிக்கின்றி "யாரேனும் தொடங்கினால் நாமும் சேரலாம்" என்று, ஒவ்வொருவருமே யிருந்துவிட்டால், நாம் ஒரு போதும் முன்னேற்ற மடையமாட்டோம் என்ற உண்மையைச் சிந்தித்து நடவுங்கள். கருணை சொரூபியாகிய பரம்பொருள் நமக்கு நல்லருள் புரிவாராக.

ஓம் தத் ஸத்.

---

## நட்பு.

ஒருவரிடத்தில் மற்றொருவர் நண்ணுவது நட்பாகும். "முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்—தகநக நட்பது நட்பு" என்றபடி இந்நட்பை, * முக நட்பென்றும், † அக நட்பென்றும் இருவிதமாகப் பகுத்தலாம்.

முக நட்பாவது :—ஒருவரைக் கண்டால் முகமலர்ந்து மரியாதையாக வார்த்தை யாடுவது. காணாவிடில் அவரை வெறுத்துப் பேசுவது. வழியிற் கண்டால் காணாதவரைப்போ லிருக்கிறது. தப்பித் தவறிப் பார்த்துவிட்டால் உண்மை மித்திரனைப்போல், அபிநயித்துப் பேசுகிறது. இதைத் தான் முகநட்பென்பர் பெரியோர். இஃது உண்மை நட்பன்று.

அக நட்பாவது :—ஒருவன் குணாதிசயங்களை யறிந்து அவன்மேல் அன்பு வைத்து, அவனைக் கண்ட விடங்களில் மனமார உவந்து, சம்பாஷித்தலும், அவனுக்குற்ற இன்னல்களைத் தனக்கு வந்ததுபோல் பாவித்து உதவிபுரிதலும் அகநட்பாம். இதுவே உண்மை நட்பென்பர். நட்பை, நன்னட்பென்றும், தீநட்பென்றும் இருவகைப் பகுக்கலாம்.

நன்னட்பாவது :—நற்குணம், நன்னடக்கை, நல்லொழுக்கம், ஈசுர பக்தி, சாந்தம், இரக்கம் முதலியவற்றை யுடையோர் நட்பே நன்னட்பாகும். அத்தகையோரைக் குறித்தே,

"நல்லாரைக் காண்பதுவு நன்றே நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ
டிணங்கி யிருப்பதுவும் நன்று." என்று கூறப்பட்டது.

மேற்கூறிய குணாதிசயங்களை யுடைய நல்லவர்களைக் கண்டால் உளம் மகிழ்ச்சி யடைகிறது. அன்றியும் அவர்களது சொற்களைக் கேட்டுவிட்டால் எல்லாத் துன்பங்களும் 'பகலவனைக் கண்ட பனிபோல' ஓடிவிடும். இன்னாரின் நன்னடக்கைகளை எடுத்து மற்றவர்களுக்குப் பெருமையுடன் சொல்லிக்கொண் டிருப்பதனால் அவர்களுடைய நற்குணங்கள், நம்மிடத்தில் நிலைபெற்று, நம்மையும், அந்நல்வழிக்கே யிழுத்துக் கொள்கின்றன. இதனால் மனம் சுத்தியடைகிறது. அவர்களது நற்குணங்கள் நம்மை இப்படிச் செய்வதென்றால் அவர்களுடன் சேர்ந்து பழகினாலோ?

"முத்திதனை யளிக்கும் மோனநிலை சேர்க்கும்
பத்திமிகப் பெருக்கும் பண்ணிய—சித்தியெலாங்
கூட்டுவிக்கும் நீர்சூழ் குவலயத்தே நன்னெறியி
னூட்டுவிக்கும் நல்லோர்தம் நட்பு." என்றபடி, நமக்குத் தர்ம சிந்தனை யுண்டாக்கும்; பக்தி, சித்தி இவைகளை யடைவிக்கும். இதனால் பிறவித் துன்பத்தை யொழிக்கும். பின்னர் முத்தியை யளிக்கும்.

---

* முகநட்பு அல்லது உடல் நட்பு.

† அகநட்பு அல்லது மனநட்பு என்றும் கூறுவர்.

தீ நட்பாவது:—துர்நடக்கை யுடையவர்கள் நட்பே தீ நட்பாகும்.

“ தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்க ளுரைப்பதுவுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுவுந் தீது.” என்றபடி இவர்கள் நம்மைக் கெடுக்கவே வழி தேடுவார்கள். நம்மை ஓரிடத்தில் நிலையாக யிருக்க வொட்டார்கள், பிறருக்குத் தீங்கு செய்யவே எத்தனிப்பார்கள். அக்காலை அவர்களிஷ்டப்படி நடவாவிட்டால் இவனுயிருக்கே மோசம் வரும். நன்னடக்கை நாசமடையும். இறந்தபின்னர், தென்றிசைக் கோனால் தண்டிக்கப்பட்டு நரகத்தில் வீழ்ந்து வருந்துவான்.

‘மூர்க்கரோ டிணங்கேல்,’ ‘பூரியோர்க் கில்லை சீரிய ஒழுக்கம்,’ ‘நூறுண்டு பழகினும் மூர்க்கர்க் கேண்மை — நீர்க்குட் பாசிபோல் வேர்க்கொள்ளாதே’ ஆனதால் இத்தகையோர் நட்பைக் காட்டிலும் பகைமை நன்றாம்.

“ தெளிவிலார் நட்பிற் பகைநன்று சாதல்
விளியா வருநோயி னன்று—வளிய
விகழ்தலிற் கோற லினிதே மற்றில்ல
புகழ்தலின் வைதலே நன்று.” (நாலடியார்.)

இந்நன்னட்பினரை எங்ஙனம் கண்டுபிடிப்பது என்று ஒரு வினா எழுமாகையால், நாம்

“ குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு,” (திருக்குறள்.)

என்பதுபோல் நாம் குணத்தையுங், குடிப் பிறப்பையும், குற்றத்தையுஞ் சுற்றத்தையு மறிந்து நட்பு செய்யவேண்டும். ஆராய்ந்து பண்ணாத சிநேகம், சாவதற் கேதுவான துன்பந் தரும். ‘ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை—தான்சாந் துயரந் தரும்’ என்ற பொய்யா மொழியார் வாக்குக் கவனிக்கத் தக்கது.

இப்படி பரீக்ஷித்த நண்பர்களை

“ கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை
யிடையாயார் தெங்கி னனையர்—தலையாயா
ரெண்ணரும் பனைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு.” என்று நாலடியாரிற் கூறியதுபோல சிநேகரை அதமர், மத்திமர், உத்தமர் என மூன்றாகப் பிரிக்கலாம்.

அதமர்:—பாக்குமரம் போல ஒருநாள் உபசாரணைத் தவிர்ந்தாலும் பயன் கெடாதவர் அதமர்.

மத்திமர்:—தென்னைமரம் போல இடையிடையே உபசாரணையில்லாமற் போனாலும் பயன் கெடுப்பவர் மத்திமர்.

உத்தமர்:—பனைமரம் போல முதலில் நட்டது மாத்திரமேயன்றிப் பின்பு ஒரு காலத்திலும், யாதொரு உபசாரணையும் வேண்டாமல் என்றும் ஒரு படிப்படப் பயன் படுபவர் உத்தமர். இதை நோக்கியே,

"உத்தமர்தா மீயுமிடத் தோங்குபனை போல்வரே
மத்திமர்தாங் தெங்குதனை மானுவரே—முத்தலரும்
ஆங்கமுகு போல்வ ரதம ரவர்களே
தேங்கதலி யும்போல்வர் தேர்ந்து." என்றார் போலும். இனி உத்தம நண்பரைப் பற்றிக் கவனிப்பாம். இவ்வுத்தமன் ஆடை குலைந்தவன் கைபோலத் துன்பங்களை நீக்குவதே இவனது முக்கியகருத்து. தன்னுடன் கூட விருந்து, காலம் தள்ளிவரும் தனது நண்பனுக்குத் தன் பாகத்தில் மனப்பூர்வமாய் கொஞ்சம் கொடுப்பான். பாலுந் தண்ணீரும் ஒன்றாய் கலந்தால் ஒரே வெண்மைநிறம் எங்ஙனம் உண்டாகிறதோ? அதுபோல் இன்னாரின் உடல் வேறாயினும் உயிர் ஒன்றாகவே யிருப்பார்கள்.

ஜலத்தோடு கூடியப் பாலை அடுப்பில் வைத்துக் காய்ச்சினால், சற்று நேரத்திற்கெல்லாம் ஜலம் ஆவியாகப் போகும். ஜலமற்றும் போனபின்பு பால் தனது நண்பனாகிய தண்ணீர் போனபின்பு எனக்கு இங்கென்ன வேலை? என்று அக்கிப் பிரவேச மாகிறது. * உடனே தனது நண்பனாகிய நீரைத் தெளித்தால் அடங்குகின்றது. இதைப்போலத் தனது நண்பனிறந்தால், தன்னுயிரையும் மாய்த்துக்கொள்வத் துணிவன். துர்யோதனனும், கர்ணனும் உத்தம நண்பர்களாம். இவ்வுத்தம நண்பர்கள் காதலன் காதலிக்கு ஒப்பிடப்படுவார்கள்.

"நீக்க மறுமிருவர் நீங்கிப் புணர்ந்தாலும்
நோக்கி னவர்பெருமை நொய்தாகும்—பூக்குழலாய்
நெல்லி னுமிசிறிது நீங்கிப் பழமைபோற்
புல்லினுந் திண்மை நிலைபோம்." என்றவாறு இவ்வருமை நண்பர்கள் ஒருக்கால் பிரிந்து பிறகு கூடினால் அந்நட்பு மிகவும் சிறந்ததாயிராது.

எதற்கு நமக்கு நண்பர்கள் வேண்டுமென்று சிலர் ஐயப்படலாம். ஆபத்து காலத்தில் அவ்வாபத்திலிருந்து நம்மை நீக்குவதற்கும், சமயாசமயங்களில் புத்தி புகட்டுவதற்கும், தானினைத்தவைகளை முடித்துக் கொடுப்பதற்கும், மாற்றானை வெல்லத் துணை வலிக்கும், துக்க காலங்களிற் தனக்குத் தேறுதல் சொல்வதற்கும் மித்ர னவசியமாகும்.

---

* நாலடியார் 23-ம் அதிகாரத்தைக் கவனிக்கவும்.

'குற்றம் பார்க்கிற் சுற்றமில்லை' என்றபடி ஒவ்வொருவரிடத்தும் குற்றத்தையே நோக்கினுல் நண்பரில்லையாகு மாதலால், தம்மாற் சிநேகிக்கப்பட்டாரிடத்துப் பின்பு காணப்படுங் குற்றங்களை யெல்லாங் குற்றமென்று பாராட்டாமல், அவரிடத்திலுள்ள நற்குணங்களையே முக்கியமாகக் கொள்ள வேண்டும். அன்றியும் தாம் அன்னவர்களுக்கு இரகசியமாகப் புத்தி கூறி அவர்களை அடக்கிக் கொள்ளவேண்டும். நட்பு கலைவதற்கு முக்கியமாக மூன்று காரணங்க ளுண்டு.

1. அவநம்பிக்கை.
2. பொறாமை.
3. பிறர் சொற் கேட்டல். †

இக்காலத்திலோ, நல்ல சாமான்களுக்கும், திரவியங்களுக்கும் நேசிக்கிறார்கள். அவனிடத்திலிருந்து அபகரித்த பிற்பாடு 'அற்ற குளத்தி னறுநீர்ப் பறவைபோல்' அவனைப் புறத்தே விடுத்து வேறொருவனைத் தேடுகின்றனர். தங்கள் "காரியமாகிறவரைக் காலைப் பிடி, பிறகு எட்டி மயிரைப்பிடி" என்பதுபோல் நம்மிடத்தில் பறித்தப் பின்னர், நம்மைக் கண்ணெடுத்துப் பார்க்கவே மாட்டார்கள்.

இத்தகைய துஷ்ட நண்பர்கள் நம்மிடம் சினேகஞ் செய்ய வருவார்களாயின், அவர்களுடன் நட்பு செய்யக்கூடாது. நமது பகைவர்கள் நம்முடன் நேசமா யிருப்பதுபோல் பாவித்தாலும், நாம் அவர்களை நம்பி மோசம் போகக்கூடாது.

ஆனந்தன் செழித்தோங்குமாறு ஸ்ரீ சிவசுப்ரமண்யானந்தன் அனுக்கிரகிப்பானாக!

சுபம்! சுபம்!! சுபம்!!!

எஸ். என். ராமு,
கூறைநாடு.

---

## சொற் பொருள் விளக்கம்.

### முன்னுரை.

இது காலஞ்சென்ற ஆசிரியர் மொழிநூற் பெரும்புலவர் மாகறல் கார்த்திகேய முதலியார் அவர்கள் எழுதிவைத்த குறிப்பிலிருந்து எடுத்து எழுதப்பட்டது.

உலகத்தில் முதல் முதல் மக்கள் ஊமைகள் போலத் தத்தம் கருத்துகளைக் கைக்குறிகளால் அறிவித்தும், பிறர்தம் கருத்துகளை அறிந்தும் வாழ்ந்துகொண்டு வந்தார்கள். அதோடு கட்குறியும் சேர்த்து அப்பாடை பெருகியது. கைக்குறி=கையின்சைகை. கட்குறி = கண்ணின் சைகை.

---

† தனது நண்பன் பேரில் சொல்லும் கோள்களாம்.

இவ்வாறு கைக்குறியாலும், கட்குறியாலும் நெடிதுகாலம் கழிந்தபின் நாவினது முதிர்ச்சியால் ஒலிக்குறிக ளுண்டாயின. இவ்வொலிக் குறிகளா லாகிய பாஷை, மார்பு கழுத்து முதலிய இட வேறுபாட்டாலும், உதடு நாக்கு முதலியவற்றின் முயற்சி வேறுபாட்டாலும், வளர்ச்சி பெறலா யிற்று. அதனுள் இயற்கையும் செயற்கையுமாகிய உச்சரிப்பை யுடைய சொற்கூட்டத்திற்குத் தமிழென்றும், அவற்றோடு செயற்கையிற் செயற்கையும் சேர்த்த உச்சரிப்பையுடைய சொற்கூட்டத்துக்கு ஆரியமென்றும் பெயர் வைத்தார்கள். முனிவர்களால் திருத்தப்பட்ட படியால், இவ்விரண்டு பாஷைகளுமே சிறந்தனவாம். தமிழினின்று மலையாளம், கன்னடம், தெலுங்கு முதலிய மொழிகளுண்டாயின. ஆரியத்தினின்று இந்தி பங்காளி கிரீக்கு முதலிய பாஷைக ளுண்டாயின. தமிழொழிந்த மற்றைய பாஷைகளை இலக்கண மின்றியுங் கற்றல் கூடும். சந்திமுதலிய வைகளை அறியவேண்டி யிருக்கிறபடியால் தமிழ்ப்பாஷையை மாத்திரம் இலக்கண மின்றிக் கற்றல் கூடாது. எவ்வகைப்பட்ட உபாத்திமார்களும் தமிழை இலக்கணத்தோடே கற்பித்தல் அவசியமாகின்றது. இச்சூழ்ச்சியை ஒருவரும் மறத்தற்கூடாது. கல்வியிலாக்கா விசாரணைத் தலைவர்களும் பிறரும் இதைப்பற்றிச் சிறிது கவனிக்க வேண்டுகோள்.

### தமிழ்ச்சொற்காரணம்.

தமிழென்பது இனிமை; இனிமையுடைய மொழிக்கு ஆகிவந்தது. மொழி = பாஷை. தமிழில் வல்லோசையும், மெல்லோசையும், இடைநிகரானவாகிய ஓசையும் நிறைந்திருக்கின்றபடியால் அம்மூவின வெழுத்துகளால் தமிழெனப்பட்ட தெனலும் பொருத்தும்,

த—வல்லினம்.
மி—மெல்லினம்
ழ்—இடையினம்.

தமிழிற் பெரும்பான்மையும் இயற்கைச் சொற்களும், சிறுபான்மை செயற்கைச் சொற்களும் இருக்கின்றபடியால், இயற்கை யெழுத்திரண்டும் செயற்கை யெழுத்தொன்றும் கூட்டித் தமிழெனப் பட்ட தெனலும் பொருந்தும்.

த. மி—இயற்கை யெழுத்து.
ழ்—— செயற்கை யெழுத்து.

இயற்கை யெழுத்தாவது உச்சரித்தற்கு எளிதாய எழுத்து.
செயற்கை யெழுத்தாவது உச்சரித்தற்குக் கடினமான எழுத்து.

அங்காத்தல் எளிதாகலின் அங்காத்தற்குரிய எழுத்துகளால் தமிழெனப்பட்ட தெனலும் பொருந்தும். அங்காத்தல் = வாய்திறத்தல். தமிழ் இயற்கைச் சொற்களால் ஒப்பற்று விளங்குகின்றபடியால் தமிழெனப்பட்ட

தெனலும் பொருந்தும். தமி = தனிமை அதாவது ஒப்பின்மை, ழகர உச்சரிப்பால் ஒப்பற்றதெனலும் பொருந்தும். ழகர வுச்சரிப்பு தமிழொன்றற்கே யுரியது.

## தமிழ்ப் பெருமை.

தமிழ் இயற்கை மொழியாகவுள்ளது; சிறுசிறு சொற்களை யுடையது; நோய்கொண்டோர் மூப்புற்றோர் சிறவர் முதலியோர்க்கும் உச்சரித்தற்கு எளிமையானது; காரணச் சொற்களையே தனக்கு உரிமையாகப் பெற்றுள்ளது; கன்னடம், மலையாளம், தெலுங்கு முதலிய பல பாஷைகளுக்கும் முதன் மொழியானது; இமயம் முதலிய மலைகளில் வளர்ச்சி பெற்றது; சுருக்கக் கூறலென்னும் அழகில் விரித்த பொருட்பொலிவுடையது; மனதின் தோற்றங்களை வெளியிடுவதற்கு நுணுக்கமாகவும், தத்துவ வகையாகவும் அமைந்த சொற்பொலிவுடையது; மனோபாவனைக் கேற்ற செம்பாகமும் தார்க்கிகவழக்கு முடையது; மனத்தோற்றத்தைத் தெளிவாகக் கூறுவதற்கு ஏற்ற வலிமையையும் தரற்பாலது; யாழுக்கமைந்த பண்ணின் அழகுடையது; செவிக்கு இன்பந்தரும் வைதர்ப்ப நெறியுடையது. மற்றைய பாஷைச் சொற்களை வேண்டாது நடைபெறும் பெருமையுடையது; ஆரியம் கிரீக்கு முதலியவற்றிலும் கலந்துள்ளது; ஆரியத்துக்கு முற்பட்டது; மற்றும் இதன் பெருமைகள் அளவில்லன. வைதர்ப்ப நெறியாவது கடின உச்சரிப்பு இல்லாதது.

## தமிழ் வளர்ச்சி.

மணிமலை முதல் இமயமலைவரையில் தமிழரசர்களாலும், அகத்திய முனிவராலும், பிறகு திருவாவடுதுறை முதலிய ஆதினங்களாலும், சமணர்களாலும் தமிழ்வளர்ச்சி பெற்றிருந்தது: இடையில் அதன் சீர் குலைந்து போயிற்று; இப்பொழுதுதான் அதைப் பழைய உன்னத நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமென்ற உணர்ச்சி நாட்டில் தோன்றி யிருக்கிறது. செல்வாக்குடைய தமிழபிமானிகள் தக்க சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டும். மணிமலை, கன்னியாகுமரிக்குத் தெற்கில் பேராற்றருகி லிருந்தது; அது முழுகிப்போய் நெடுங்கால மாயிற்று.

## தமிழ்நாடு.

கன்னியாகுமரி முதல் இமயமலைவரையும் தமிழ்வழங்கு நாடென்பர். ஆரியர் வருமுன் இங்குத் தமிழ்வழக்கே யிருந்தது; குமரிக்குத் தென்பால் எழுநூறு காதமுள்ள தமிழ்நாடுகள் அழிந்து போயின. இப்பொழுது கன்னியாகுமரி முதல் வேங்கடம் வரையில் தமிழ்வழங்கு நாடாக இருக்கின்றது.

## தமிழின் பாகு பாடு.

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் எனத் தமிழ் மூன்றாகும். இயற்றமிழ் மனத்திற் குரியது; இசைத்தமிழ் வாக்கிற்குரியது; நாடகத் தமிழ் உடம்பிற் குரியது.

இயற்றமிழ்—இலக்கணம். இசைத்தமிழ்—இலக்கியம். நாடகத்தமிழ்—கூத்து. கொடுந்தமிழ், செந்தமிழ் எனத்தமிழ் இருவகையுமாகும். கொடுந்தமிழ்=திருத்தப்படாத தமிழ். செந்தமிழ்=திருத்தப்பட்ட தமிழ். இத்திருத்தம் அகத்தியனார்க்கு முன்னமே யுண்டா யிருக்கின்றது.

## எழுத்தின் வடிவு

ஒலிவடிவு வரிவடிவு என வடிவு இருவகைப்படும். ஒலி வடிவாவது செவிப்புலனாலறிவது. வரிவடிவாவது கட்புலனாலறிவது. வரி=எழுத்து. தமிழ் நெடிதுகாலம் ஒலிவடிவாகவே இருந்தது. வரிவடிவு, வட்டெழுத்து, கோலெழுத்து, சதுரெழுத்து என மூவகைப்படும். வட்டெழுத்தாவது குண்டுகுண்டாக எழுதுவது. அதாவது தெலுங்கெழுத்துப்போ லெழுதுவது. இவ்வட்டெழுத்துதான் முதல்முத லுண்டாயது. கோலெழுத்தாவது ஆங்கிலத்தில் கையெழுத்துப் போல எழுதுவது. இப்பொழுதுள்ள தமிழெழுத்து சதுரெழுத்தாகும்.

## நெடுங்கணக்கு.

நெடுங்கணக்கு, குணிதம், ஓனமாலை, அரிச்சுவடி என்பவை ஒரு பொருள் குறித்தனவாம். தமிழர்கள் முதல் முதல், செப்பஞ்செய்த மூங்கில் மடலிலே எழுத்துகளை யெழுதிக் கற்பித்தபடியால் நெடுங்கணக்கெனப் பெயர்வந்தது. நெடு+கணக்கு எனப்பிரிக்க. நெடு=மூங்கில், கணக்கு=நூல். மூங்கில் மடலிலே எழுதப்பட்ட நூலென்பது பொருள். தமிழர்கள் மூங்கிலடர்ந்த மலைகளிலே வசித்தபடியால் மூங்கில் மடலிலெழுத நேர்ந்தது. மூங்கிற்கூழாற் செய்த கடிதத்தில் எழுதப்பட்ட நூலெனலும் பொருந்தும். தமிழர்கள் சிறந்த பொருள்களை யெல்லாம் மூங்கில்களினாலேயே செய்து வந்தனர்: குணித மென்பதற்கு வட்டெழுத்தாக எழுதப்படுவதென்பது பொருள். குணிதம் = வட்டம். இவ்வழக்குத் தெலுங்கிலுள்ளது. வட்டம் இயற்கைவடிவ மாதலால் அதுவே எழுதுதற்கு எளிதாகும்.

சைவர்கள் நெடுங்கணக்கினைத் தொடங்குங்கால் ஓம் நமசிவாய சித்தம் எனத்தொடங்குவது வழக்கமாதலால் ஓனமாலை யெனப் பெயர்வந்தது. வைணவர் அரி ஓம் எனத் தொடங்கலால் அரிச்சுவடி யெனப் பெயர் வந்தது. நெடுங்கணக்கினை ஆரியர் பாலபோதகம், பாலசிட்சை யென்பர் இளமையில் கற்பிப்பது என்பது பொருள்.

## எழுத்து.

எழுத்தென்பது சித்திரம்; எழுத்துப்புடவை யென்றால் சித்திரப் புடவை. முதல் முதல செப்பஞ்செய்த மூங்கில் மடலில் வர்ணங்களால் எழுதினபடியால் எழுத்தெனப் பெயர்வந்தது. எலுத்து-எளுத்து-எழுத்தென்றாயிற்று. சூரியனிடத்துள்ள ஏழுநிறங்களால் சித்திரிக்கப்படுவதென்பது பொருள். எல்+உ+த்+து = எலுத்து. எல் பகுதி, து பெயர்

விகுதி; உ சாரியை, த் சந்தி. எல் = சூரியன். இவனுடைய பெருமையை மொழிநூலிற் கண்டு கொள்க.

வர்ணங்களால் எழுதப்பட்டபடியால் ஆரியரும் எழுத்தினை வர்ண மென்பர். அக்காலத்தில் மூங்கில் மடல் மிகப்பெரிதாக இருந்தது. நங்கைச் சானிமார் பூர்ஜ பத்திரத்தில் குங்குமக் குழம்பினால் எழுதிவந்தார்கள். பூர்ஜபத்திரம் ஓர் மரத்தின்பட்டை; மஞ்சள் நிறமுடையது. நங்கைச்சானி மார் = அரசமாதர். நங்கை = மாதர்களில் சிறந்தவள். சானி=செல்வம் கற்பு முதலியவை நிறையப் பெற்றவள். சால்+ந்+இ=சானி. சால் பகுதி; இ பெண்பால் விகுதி; ந் பெயரிடைநிலை. சால் = நிறைவு. துரை—துரை சானி—வீரமுதலிய வற்றாலுயர்ந்தவன்.

### புத்தகம்.

மூங்கில் மடலிலே மயிலிறகினால் எழுதப்பட்டதனால் புத்தகமெனப் பெயர்வந்தது. புத்தகம்=மயிலிறகு. "சுட்டுப்போடு புத்தகந்தன்னையே" என்னும் குணவாகடத்தில் அறிந்துகொள்க. புத்தகமெனின் வடமொழி யாகும்.

### சுவடி.

எழுத்தாணியால் ஓலையில் சுவடுபட எழுதுவதனால் சுவடியெனப் பெயர் வந்தது. சுவடு=தழும்பு. பாதச்சுவடு எனின் பாதம்வைத்ததழும் பென்பதுபொருள். சுவடு அடையாளமுமாம். எழுத்தாணியா லெழுதும் பழக்கம் பிறகுண்டாயது.

### சுருணை.

எழுதப்பட்ட மூங்கில் மடலைச் சுருட்டிவைப்பதனால் சுருணையெனப் பெயர் வந்தது. சுருளை, சுருணையாயிற்று. கணக்குச்சுருணை யென்பத னால் அறிக. கணக்கு=நூல். கணக்காயர் = நூலாசிரியர்.

கணக்கு + அய்யர் = கணக்காயர். அய்யர் = ஆசிரியர். கற்றோர்க் குக் கண்போன் றிருப்பதனால் கணக்காயிற்று.

கண் + அ + க் + கு = கணக்கு. கண் பகுதி, கு விகுதி, அ சாரியை, ச் சந்தி. "கணக்கினை—முற்றப்பகலு முனியா தினிதோதிக் கற்ற லிற் கேட்டலே நன்று" இங்கே கணக்கென்பது நூலையுணர்த்திற்று. கணக்கு கணிதநூலுமாம். இப்பொழுது ஓலையி லெழுதிச்சுருட்டிய சுரு ணைக்குக் கணக்குச் சுருணையென வழங்குகின்றது. திருமுறை யென்பது வைதிகநூலை யுணர்த்தும். அது சுருட்டப்படுவ தென்னும் பொருளில் அமைந்திருக்கின்றது.

கணக்குகள் கெடாதபடி அடியில் வைத்துச் சுருட்டப் படுகின்றபடி யால் அட்டையெனப் பெயர்வந்தது. அட்டை = கவசிகை. காவல் கவளிகை யாயிற்று. நீரில்வாழும் ஒருயிராகிய அட்டை யென்பதற்கும் சுருள்வதென்றே பொருள். (தொடரும்)

மாகறல்-பொன்னுசாமி முதலியார்,
சென்னை.

## இனியவை கூறல்.

இனியவை கூறல்:—அதாவது கேட்பவர்களது மனத்துக்கும் செவிக்கும் இன்பம் உண்டாக்கும் படியான வார்த்தைகளைப் பேசுதல். 'இனிய சொல் விளக்குவதருள்' என்பதனால் எது மனத்தின் கண் மாசில்லாமல் சாந்தமாய் பக்ஷத்துடன் சொல்லும் மெல்லிய சொற்களாலாயதென்பது வெளியாகும். "யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே" என ஆன்றோர் கூறினர். நாம் உதவி செய்வதற்கும் பொருள் முதலியன இல்லாதிருக்கலாம். ஆனால் நாம் இனியவை கூறுவதற்கு மனத்தின்கண் இல்லாதபொருள்கள் ஒன்றுமில்லை. அறக்கதிர் விளைவதற்கு இன்சொல்லே விளைநிலமாகப், பெரியோர் கூறுவதால் இனியவைகூறல் யாவராலும் ஆகக்கூடிய எளிதான காரியமாகவும் தர்மத்தின் முதற்படியாகவும் இருக்கின்றது.

இவ்வாறிருந்தும் இதை அநேகர் கவனிக்கின்றார்களில்லை, கேட்பவர் மனம் கொதிக்கும்படி கர்ண கடூரமான வசனங்களை வழங்குகின்றனர். சிலர் தாய் தந்தையர்களிடமும், சகோதர சகோதரிகளிடமும், நண்பர் முதலியவர்களிடமும் கோபமான சொற்களையே கூறுகின்றனர். அந்தோ! இது எவ்வளவு இழிவானதும் பாபமானதுமான காரியம்! இதனால் அத்தகையர் எல்லோருடைய வெறுப்புக்கும் பகைக்கும் பாத்திரமாகின்றனரே யன்றி வேறென்ன?

இன்சொல்லின் பெருமை:—அகத்தன்பை மலர்ந்த முகத்தே வெளிப்படுத்தி அழகிய வாயினிடமாகவும் அது தோன்றும்படி கொஞ்சமும் வஞ்சகலவாமற் சுவை பொழியும்படி ஞயம்பட வுரைப்பவற்கு இவ்வுலகத்திற் பகைவர்க ளில்லையாகும். உலகத்தார்க ளன்பையெல்லாம் அவர்கள் வரவாகக்கொண்டு யாவரையும் தங்கள்வசமாக்கிக் கொள்கின்றனர். ஆகவே அவர்களுக்குத் துன்பத்தைத் தருவதாகும் வறுமைவந் தடைவதில்லை. இதனாலன்றோ,

> "துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
> இன்புறூஉம் இன்சொல் லவர்க்கு"

எனத் தேவரும் கூறிப்போயினர். ஆகவே யாவரும் இனியவை கூறுவோனுக்கு உறவாக விருப்பதால் அவன் செல்வத்திற் சிறந்த சீமானாகி, நல்லோருதவி பெற்று புகழுடன் வாழ்வானென்பதிற் றடையென்ன?

கடலானது சூரியனுடைய மிகுந்த வெப்பமுடைய கிரணங்களாற் பொங்காது, குளிர்ச்சி பொருந்திய சந்திரனுடைய வருகையினாலே பொங்கும். அதுபோலவே கடலாற் சூழப்பட்ட பெரியவுலகத்தி லுள்ளவர்களும் பிறர்தம்பால் இனியவை கூறுதலாலன்றி வலியவைகூறுதலால் ஒருநாளும் மகிழ்ச்சியடைய மாட்டார்கள்.

" மென்மதுர வாக்கால் விரும்பும் சகம்கடின
வன்மொழியி னாலிகழும் மண்ணுலகம் "

என்பதையும் உற்றுக் கவனிக்க.

மேலும், வலிய யானையின்மீது பட்டுருவக்கூடிய கொடிய அம்பானது மெல்லிய பஞ்சின்மீது பாய்வதில்லை. இரும்பினாற் செய்த பெரிய கடப்பாறைக்குப் பிளவுபடாத கருங்கற்பாறையானது சிறிய பசிய செடியின் வேருக்கு நெக்கு விடுகின்றது. அதுபோல் கடினச் சொற்களும் மிருதுத் தன்மையுள்ள சொற்களை வெல்லமாட்டாவாகும். இதை

' வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்திற்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது-நெட்டிருப்புப்
பாறைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும் '

என்னும் நல்வழிப்பாடல் உணர்த்துகின்றது.

இன்சொற்களையும் கொடுஞ் சொற்களையும் கூறுவோர்களின் தன்மை.—இனி இன்சொற் கூறுவோர்களையும் கொடுஞ்சொற் கூறுவோர்களையும் முறையே குயிலுக்கும் கழுதைக்கும் ஒப்பிடலாம். எங்ஙனமெனின் குயிலானது தனக்குத் துன்பம் வந்தகாலத்திலும் இனிமையாகவே கூவி கேட்பவர்களுக்கு இன்பத்தை உண்டுபண்ணும், அதுபோல் இனியவை கூறுவோனும் தான் இடுக்கணுற்ற காலத்திலும், எல்லோரிடத்தும் இனியவைகளையே கூறுவான். கழுதையோ வென்றால் தனக்குச் சந்தோஷம் வந்தகாலத்திலும் கேட்பவர் மனம் வெறுக்கும்படி ஆபாசமாகக் கத்தும் அதையொத்து கடுஞ்சொற் கூறுவானும் தனக்குக் களிப்பாயுள்ள காலத்திலும் வன்சொற்களையே வழங்குவான்.

வெம்மையும் தண்மையும்.—சூரியகிரணம் மிகச்சுடும். அக்னியின் காந்தி சூரிய கிரணத்திலும் மிகக் கொடியதாயிருக்கும். ஆனால் இவைகளைப் பார்க்கினும் கல்லறி வில்லாத மூடனுடைய தீயசொல் மிகவும் சுடும். சந்திரனுடைய அமிர்தகிரணம் மிகவும் சீதளமானது, சந்தனமே சந்திரனிலும் குளிர்ந்தது. இவைகளைக் காட்டிலும் அன்பும், அறிவும், அருளுமுடைய நல்லோர் சொல்லும் இனியவார்த்தை மிக்க இன்பத்தைச் செய்கின்ற குளிர்ச்சி யுடையதாகும்.

ஈதலின் இன்சொல்லே நன்று.— ' பல்லுக்கு எறுவதும் நாவாலே, பல்லுடைவதும் நாவாலே ' என்பது ஒரு பழமொழி. சகல நன்மைகளும் இனியவை கூறுவோனுக்கு வந்துறும். சகல கொடுமைகளும் வன்சொற் சொல்லுவோனை வந்தடையும். உபகாரியாயினும், கடுஞ்சொற்களைப் பேசி வந்தவர்கள் மனத்தைப் புண்படுத்தி பின் வேண்டுவ கொடுப்பினும் அவனைப் புகழும் புண்ணியமும் வந்தடைவதில்லை. இன்சொற்பேசி சிறிதளவு உதவினும் அதுவே மிகவும் மேலானதாகும். இதை,

'அகன் அமர்ந்து ஈதலின் நன்றே முகன் அமர்ந்து இன்சொலன் ஆகப்பெறின்'

என்னும் தேவர் திருவாக்கு வலியுறுத்துகின்றது.

இன்சொல் இருமையுமின்பந்தரும்.—

'சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்'

என்பது திருக்குறள். குற்றந்தீர்ந்த இனிய மொழியானது இம்மை மறுமையாகிய இரண்டிடத்தும் இன்பத்தைத் தரக்கூடியதாக விருக்கின்றது. இதற்குமாறாக, வெட்டெனப் பேசுதலானது நட்பைக் கெடுத்து, பகையைப் பெருக்கி, பொருள் நஷ்டத்தையும் இகழ்ச்சியையும் உண்டு பண்ணி இருமையையும் கெடுக்கின்றது. இதனாலன்றோ ஔவையாரும் 'கடிவதுமற', 'வெட்டெனப் பேசேல்', 'ஞயம்படவுரை' எனப் பலவாகக் கட்டளையிட்டருளினர்.

கனியைவிட்டுக் காய்கவர்வது.—அன்னியருடைய இனிய மொழிகள் தனக்கு இன்பந்தருதலை அனுபவித் தறிகின்றவன், அது நிற்கத் தான் மற்றவர்களிடத்தே கடுஞ்சொற் சொல்லுவது என்ன பிரயோசனம் குறித்தோ தெரியவில்லை.

"புன்சொல்லும் நன்சொல்லும் பொய்யென் றுணர்கிற்பார்
வன்சொல் வழியருப வாழ்தலும் உண்டாமோ.
புன்சொல் இடர்ப்படுப்ப தல்லால் ஒருவனை
இன்சொல் இடர்ப்படுப்ப தில்" என்பது பழமொழி.

"இனிய உளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய்கவர்ந்தற்று," எனத்தேவரும் கூறினர். அதாவது இனிமையைப் பயக்கக்கூடிய இன்சொல் உளவாகவும், அதைவிட்டுக் கடுஞ்சொற் சொல்லுதல் ஔவையுண்ட நெல்லிக்கனியை யொத்த அமிர்தமயமான கனிகள் பலவிருக்கும் சோலையின்கண் அவைகளை விட்டு எட்டிக்காயைப் பறித்துத் தின்னப்புகும் அறிவிலியின் செய்கையை ஒக்கு மென்பதாம்.

தாய்தந்தைய ரிடம் இனியவை கூறல்.—

"பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்
கணிஅல்ல மற்றுப் பிற"

எனக் கூறப்படுதலால் வணக்கத்தோடு இன்சொல் உடையவர்களா யிருப்பதுதான் ஒருவற்குச் சிறந்த ஆபரணமாகும். சிலர் யாவர் மாட்டும் இன்சொல் கூறும் இயற்கை உடையவர்களா யிருந்தும், தாய் தகப்பனரிடம் கடுமொழிகளை வழங்குகின்றனர். அந்தோ! இதென்ன பேதைமை! தாய் தந்தையர்கள் நம்மாட்டுப் பட்ட கஷ்டங்களுக்கு அளவுண்டோ? அவர்கள் நமக்குச்செய்த உபகாரங்களுக்கு நாம் பலயுகங்கள் அடிமைபூண்டு

உழைத்தாலும் சிறிதேனும் கைம்மாறு செய்ததாகுமோ? அவர்கள் எப்போதும் நமது க்ஷேமத்தின்மீது நாட்ட முடையவர்கள்; நமது சுக துக்கங்களையே தமதாக எண்ணுபவர்கள். அவர்கள் மனம்நோகப் பேசினால் நாம் நன்றாக வாழமாட்டோம். ஆகவே நாம் மற்றவர்களைக் காட்டிலும் தாய் தகப்பனார்களிடத்து அதிக பக்ஷமுடையவர்களாய் இனியவை கூறல் வேண்டும்.

வன்சொல்லும் இன்சொல்லாம்:—உபாத்தியாயர்களிடத்தும் வகுப்பில் மாணாக்கர்களிடத்திலும் மரியாதையுடன் இனியவைகளையே கூறல் வேண்டும். அவ்வாறு செய்யின் அவர்கள் நமக்கு ஆயுளுள்ளவரைகாறும் சிறந்த நண்பர்களாய் ஒழுகி வேண்டும் நன்மைகளையும் புரிவர். சிலசமயங்களில் உபாத்தியாயரும் தாய்தந்தையர் முதலிய பெற்றோர்களும் கண்டித்துத் தண்டித்தலும் கூடும். அப்பொழுது அது நமது நன்மைக்கென்று அமைந்து நடத்தல் வேண்டும். அவர்களும் மேலோரும் நம்மைத்திருத்துவதின் பொருட்டுச் சொல்லும் வன்சொற்கள்தாம் நமக்கு எவற்றினும் மிக்க இனிய சொற்களாகும். வஞ்சகர்கள் கெடுதலெண்ணங் கொண்டு இனிமையாகப் பசப்பினாலும் அவைகளே நமக்குத் தீராக் கெடுதலையுண்டு பண்ணும் கொடுமொழிகளாகும்.

" இனியவ ரென்சொலினும் இன்சொல்லே இன்னார்
கனியும் மொழியும் கடுவே-அனல் கொளுந்தும்
வெக்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்ப
சிங்கி குளிர்ந்துங் கொலும்."

" மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொற் பிறிதென்க" என்னும் நல்லுரைகளை மறந்தும் மறக்க வொண்ணாது.

எனவே, பெரியோர் வஞ்சகமில்லா மனத்தொடு அன்புடன் நமது நன்மையைக் கருதிச்சொல்லும் வன்சொல்லும் இன்சொல்லே யென்பதும் அது மென்மையுற் றிருப்பின் பொன்மலர் நாற்றமுடைத்தா மென்பதும் உணரல் வேண்டும்.

மற்றவர்களிடம் இனியவை கூறல்.—" புண்படவே வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம்", "கீழோராயினும் தாழவுரை" என்பவை ஆன்றோருடைய வுபதேசங்களாம். எனவே நாம் நமது சகோதர சகோதரிகளிடத்தும் மனைவி மக்களிடத்தும் நமக்குக் கீழ்ப்பட்ட எளியோர் முதலிய எல்லோரிடத்தும் அன்புடன் இனியவைகளையே கூறல் வேண்டும். அவர்கள் நம்மையண்டி நிற்பவர்கள்; உதவியற்றவர்கள். அவர்கள் குற்றஞ்செய்தால் கூடிய வரையிலும் சாந்தமாகவும் இனிமையாகவும் சொல்லி அவர்களை நல்ல வழியில் திருப்பிப் பக்ஷமாய் நடத்தல் வேண்டும். எனது அன்புடைய நண்பர்களே,

'நாவி னுனியி னயமிருக்கிற் பூமாதும்
நாவினிய ரெல்லோரும் நண்ணுவார்—நாவினுனி
ஆங்கடின மாகி லத்திருவுஞ் சேரான்முன்
ஆங்கே வரு மரணமாம்.'

என்பதைக் கவனித்து நீங்கள் வீட்டிலிருந்தாலும்' பள்ளிக்கூடத்தி லிருந்தாலும் உத்தியோக சாலைகளிலும் வெளியிடங்களிலுமான மற்றெவ் விருந்தாலும், நல்லார், பொல்லார்; நண்பர், பகைவர்: பெரியோர், சிறியோர்; இளையோர், முதியோர்; முதலிய யாவரிடத்தும் சாந்தசிலர்களாய் மரியாதையாகவும் பக்ஷமாகவும் இனியவையே கூறுங்கள். அவ்வாறு நடப்பவர்கள் உலகத்தவர்களால் புகழப்படுவார்கள்.

எல்லோருக்கும் மகிழ்ச்சியைத் தரு மின்சொல் ஈசனுக்கும் உவப்பை யுண்டாக்குமென்பது திண்ணம்.

புருஷார்த்தங்களைப் பயத்தல்.

'குழித்துழி நிற்பது நீர்தன்னைப் பல்லோர்
பழித்துழி நிற்பது பாபம்' அதாவது, குழியுள்ள இடத்தே போய் நிற்பது நீருக்கு இயற்கையாவது. அதுபோல், பல்லோராலும் பழிக்கப் பட்டவன் மாட்டே நிற்பது பாபமாவது, எனக் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, இன்சொல் பேசுதலால் பல்லோராலும் புகழப்பட்டவன் மாட்டு நிற்பது புண்ணிய மென்பதும், அதனால் அவன் சுவர்க்கம் முதலிய மறுமை நலன்களையும் பின் மோக்ஷத்தையு மடைவான் என்பதும் சொல்லவேண்டாதாயிற்று. ஆகவே, எல்லோரும் செய்யக்கூடிய எளிதான காரியமாகவும் அறம்பொரு ளின்பம் வீடு முதலான புருஷார்த்தங்களை அடைவிப்பதாயு முள்ள இந்த இனியவை கூறலை நாமெல்லோரும் கைக்கொண்டு நன்மை யடைய முயலுவோமாக.

'அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.' சுபம்!

S. R. கணபதி சுப்பிரமணிய அய்யர்,
தமிழ்ப் பண்டிதர், போர்டு ஹைஸ்கூல், கொள்ளேகாலம்.

---

## இல்லறம்—கன்மம்.

(469-வது பக்கத் தொடர்ச்சி)

நமது ஆரிய சித்தாந்தங்க ளெல்லாம் கன்மத்தை அஸ்திபாரமாகக் கொண்டே கட்டப்பட்டுள்ளன; ஆதலால் கன்மத்தை விட நேர்ந்தால் மதமுற்றும் அழியும். இந்தக்கன்ம விஷயத்தில் ஆரியர்களுக்குத் தினையள வேனும் சந்தேகம் ஜனியாது. யவன—பௌத்தர்களும் கன்மத்தை யொப்

பியே நடக்கின்றார்கள். கன்மம் சித்தசுத்தியைத் தருமென்றும், மறுபிறப்புக்குக் காரணமாமென்றும் கூறுகின்றார்கள். யவனர்கள் அக்கினி யாராதனை முதலிய கன்மங்கள் பரம்பரையில் மோட்சகாரண மாமென்று கூறுகின்றார்கள். ஏனைய ஆஸ்திகர்களும் தத்தம் கடவுளால் கூறப்பட்ட வேதங் கூறிய சில கன்மங்களைச் செய்து வருகின்றார்கள். ஆதலால் ஆஸ்திகர்களுக்குக் கர்மத்தில் பற்றுண்டு என்றே கூறவேண்டும். ஆயினும் அபிப்பிராய வேறுபாடுக ளிருக்கலாம்; அதுபற்றிக் கவலையில்லை. இக்கன்மம் மனம் வாக்குக் காயங்களாற் செய்யப்படுவன வென்றும், அவை நாம்பு எலும்பு தோல் முதலியவற்றையும் பற்றி நிற்குமென்றும், முன்னர் நித்திய விதி கூறுமிடம் குறிப்பிட்டோம். ஆதலாற்றான் பஞ்சகௌவியாதி சில பொருள்களை உட்கொண்டால் தோலைப்பற்றிய பாபம் எலும்பைப்பற்றிய பாபம் இவைகள் ஒழியுமென்று ஸ்மிருதிகள்கூறின. இக்கன்மம் ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என்று மூன்று வகையாய் ஆன்மாவைப் பந்தித்துக் கொண்டு நின்று இன்ப துன்பங்களைப் பயவாநிற்கும். அதன் விரிவு பின்னர் கூறப்படும். இதனை ஆக்ஷேபனை செய்பவர் சிலர் உளர். அதனைச் சிறிது ஆராய்ந்து பிறகு கன்மத்தை விவரிப்போம்.

கன்மம் என்பது யாது என்பது ஓர் கேள்வியுண்டு. அதாவது பொருளைக் கன்மமென்று சில விடத்தும், தொழிலைக் கன்மமென்று ஓரிடத்தும், குணத்தைக் கன்மமென்று வேறிடத்தும் கூறப்படுகின்றது. இதனால் கன்மம் இதுதானென்று துணிந்து கூறமுடியாது. முடியாதபோது கன்மமென்பது சந்தேகமேயாம். பொருளும் குணமும் கன்மமாகாது. ஏனென்றால் அவற்றுக்குச் செயலில்லாமையால். தொழிலையே கன்மமென்று சொல்லவேண்டும். அப்படியாயின் விக்கல் சிரித்தல் புசித்தலாதிகளும் கன்மமேயாம். அவற்றால் பயன்யாது என்று புலப்படவில்லை. அத்தன்மைத்தான கன்மம் மறுபிறப்புக்குக் காரணமாவதும் மோட்சகாரண மாவதும் எப்படி? இதன்பயன் பிரத்தியட்ச மாதலால் இதற்கெனச் சாஸ்திரங்க ளேற்படுத்தப் பட்டதும் வியர்த்தமேயா மென்பது இக்கேள்வியின் கருத்து.

இதுகன் சொரூபமறியாதார் கூற்றேயாம். இடம், காலம், பொருள், தொழில் இவற்றின் சம்பந்தமே நமது வைதிக நூல்களிற் கூறப்படும் கன்மம் என்பதாமென்று யாக்ஞவல்கிய ராதி மகரிஷிகளால் ஸ்மிருதிகளில் விரித்துரைக்கப் பட்டது. இதனை விக்கலாதிகளைப் போல்வதென்று கூறுவது உசிதமன்று. சாஸ்திரங்கள், எல்லாராலும் உணர்ந்த விஷயத்தை விளக்கிக்கூற வந்ததல்ல. மற்றெது வென்றால், ஆன்மாவுக்கும் சரீரத்துக்கும் வேற்றுமை யுள்ளதாயினும், சரீரத்தில் அநாதிகாலந் தொடங்கியுள்ளதோர் நிலைபெற்ற அபிமானமும், அதில் உண்டாகும் விகாரப் பாடுகளைத் தாமடைந்ததுபோலத் தோன்றச்செய்யும் இயல்பு முண்டு. கஞ்சா சாராயம்

முதலிய பொருள்களை யுண்டால் ஆன்மாவின் அறிவும் விகாரப்படுவதைக் காண்கிறோம். மனதில் தோன்றும் நற்குண துர்க்குணங்களால் முகத்தில் வேறுபா டுண்டாவதைக் காண்கிறோம். இக்குறிகளைக் கொண்டே சில புத்திமான்கள் பிறர் மனக்கருத்தை யுள்ளபடியே யுணர்ந்து கொள்வதும் பிரத்தியட்சம். இடத்தாலும் காலத்தாலும் உண்டாகும் வேறுபாடு கண் கூடாம். ஆதலால் காலம், இடம், பொருள், குணங்கள், இவற்றின் கூட்டத் தாலும் சில மாறுபாடுகள் ஜீவசரீரங்களுக் குண்டாகு மென்பதை யெளிதி லுணர்ந்து கொள்ளலாம். இதுபற்றியே ஸ்மிருதிகள் கன்ம இலக்கணம் கூறுமிடத்துப் பொருள், இடம், காலம், தொழில்களின் கூட்டுறவாலுண் டாகும் ஓர் குண விசேஷாதிசயமே கன்மமென்று கூறி விலக்கின.

இனி விக்கலாதிகளாற் பயன்யாது என்றதும் பயன்பெறாது. யாங் ஙனமெனின் விக்கற்றொழிலால் சிலருக்குத் துன்ப முண்டாதல் பிரத்தி யட்சமாதலால் அதன் சம்பந்தமான வேறுபாடு கூர்ந்துணரத்தக்கது. சிரித்தல் மகிழ்ச்சியா லுண்டாகும்போது தனக்கும் பிறருக்கும் மனச்சந் தோஷ முண்டாதலும், பரிகாசம் காரணமாக வுண்டானபோது பிறருக்கு மனவருத்தத்தை யுண்டாக்குவதும், கோபத்தாலுண்டான பெரும்பகையை யும் கொடியசெயல்களையு முண்டாக்குதலு முண்டு. புசித்தலாலுண்டாகும் பயன் ஒவ்வொருவரும் தாமே யறிந்துகொள்ளக் கூடியது. ஆதலால் பய னற்றதெனக் கூறிய அச்செயல்கள் பெரும்பயனை விளைப்பதைக் காண் கிறோ மாதலால் பயனற்றதென வொன்று மில்லை. இதனாலே தானம் கொடுப்போனுக்கு மந்தகாசம், முகமலர்ச்சி, இன்சொல் முதலிய இருக்க வேண்டு மென்றும், அவ்வாறு கொடுக்கப்படும் தானம் சொர்க்கத்தைத் தருமென்றும் நூல்கள் கூறின. இதனால் விக்கல் சிரித்தல்களே கன்ம மென்று யாங்கூறவில்லை. அவற்றால் ஜீவசரீரங்களுக்கு வேறுபாடுண்டாவ தியல்பாதலால் முறைப்படி செய்யப்படும் கன்மம் பயன் தரா தொழியா தென்பதே யெமதுகருத்தாம்.

இங்ஙனம் கூறிவந்ததால் காலம் இடம் தொழில் பொருள் மனம் மாறுதலடையும் என்பதும், அம்மன வேறுபாட்டால் சரீராத்மாக்களிலும், விகாரப்பாடுண்டாகும் என்பதும் எளிதிலுணரலாம். இம்மாறுபாடு நன்மை தீமையென்பன வெனலாம். இதுவே யான்ம பந்தமாம். இது அநாதிபந்த மாதலால் அது எவ்வா றுண்டாயிற் றென்று கேட்பதும் உசிதமாகாது. இச்சம்பந்தத்தா லுண்டாகும் மனக்கலக்கத்தை யொழிப்பதற்கே ஸ்மிருதி நூல்கள் அதற்கேற்ற கன்மங்களை விதிக்க வெழுந்தனவேயன்றி, விக்கல் சிரித்தல் போலப் பயனற்ற செயல்களுக்குப் பயன் கூறவல்லவென்க. ஆத லால் மோட்ச காரணமாகிய சற்கருமங்களை விதிக்கவே யெழுந்தனவே யாமென்க. அதற்குச்சரீரம், மனம், ஆன்மா இம்மூன்றும் சுத்திபெறு தல் வேண்டும். சரீரம் சுத்தியானால் மனமும் சுத்தமாகும். இவ்விரண்டும்

சுத்தமானுல் ஆன்மா தன் இயற்கை யொளியாற் பிரகாசிக்கும். இவ்வாறு சுத்திசெய்யுங்கால் மனதிற் பாஹிம்சை முதலிய துர்க்குணங்கள் தோன்றினுல் யோக அப்பியாசத்தால் அதை விலக்கிக்கொள்ளலாம். அதனுல் மனம் சுத்தியாம். மனமும் சரீரமும் சுத்தியா யிருந்தாலன்றி யான்மா சுத்திபெறுவதில்லை. மனம் சுத்திபெற்ருலும் சரீரம் சுத்திபெருவிடில் ஆன்மா சுத்தமாவதும் அருமையேயாம். ஏனெனின், மனமாகியகருவி சுத்தமாயினும் சரீரத்தில் ஆன்மா பேதமற வசித்தலால் அச்சரீராசுத்தத்தைக் கிரகித்துத் தானும் அசுத்தப்படும். ஆதலாற் சரீரசுத்தமே முதலில் செய்துகொள்ளத் தக்கதாம். அவ்வாறு சரீரம்பெறுதற்குக் காலமறிந்து ஸ்நான முதலிய நற்கருமங்களைச் செய்தலே காரணமாம். ஸ்நான விதியிற் கூறியவற்றை மீண்டு யூகித்தல் வேண்டும். சாம்பலாலன்றி வெண்கலம் சுத்திபெருத வாறுபோல ஸ்நானத்தா லன்றி வேறெவ்வகையாலும் சரீரம் சுத்திபெருது. இவ்விடத்துக் காலமும் ஸ்நானமாகிய தொழிலும் நீரும் நீரின்குணமும் சுத்திக்குக் காரணங்களாய்ச் சற்கருமமாயின. இது வைத்திய சாஸ்திரத்தால் உணர்ந்து கொள்ள வேண்டியது.

(தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்

(7-ம் தொகுதி—463-ம் பக்கத் தொடர்ச்சி)

(பகவான் இனி ஆன்மாவின் சத் இலட்சணம் கூறுகிறுர்)

ஏ பார்த்த ! மண்ணில் செய்யப்பட்ட கடம் முதலிய யாவும் உண்மையில் மண்ணேயாகும். அம்மண்ணை யொழித்து அக்கடம் முதலியவற்றைச் செய்தவர் ஒருவரு மில்லை. கடம் முதலியவை பண்ணப் பட்டதற்கு முன் மண்ணே யிருந்தது. அவை நசிந்ததன் பின்னும் மண்ணே யிருக்கிறது. இரண்டு காலங்களுக்கு மிடையில் அவை உருவமாகத் தோன்றிக்கொண்டிருந்த காலத்திலும் மண்ணே இருக்கிறது—கடம் உண்டாவதற்கு முன் மண்ணில் கடமில்லை, கடம் நசிந்த பின்னும் கடமில்லை, இடையில் தோன்றி மறைந்த உருவத்திற்கே* கடம் என்றுபெயர்—ஆகையால் காரணமான மண்ணே முக்காலத்து முள்ளது - இதுவே சத்து. இடையில் வாக்குமாத்திரத்தால் தோன்றி மறைந்த கடம் அசத்தாம்.

இத்திருஷ்டாந்தப்படி தாஷ்டாந்தத்தில் ஆன்மா சத்தானதால் அது ஒருபோதும் நசியாது. இந்த ஆன்மாவினிடம் பொருந்தானின்றதும் ஆன்

---

* இதற்குப் பிருது புத்னோதராகாரம் என்று பெயர் (பிருது+புத்நம்+உதரம்+ஆகாரம்.) பிருது=ஸ்தூலம், புத்நம்=வட்டவளைவு, உதரம்=வயிறு, ஆகாரம்=வடிவு—இந்த வடிவம் மண்ணிற்கு, இடையில் தோன்றி மறைவது—முன்னும் பின்னும் இல்லாதது-முக்காலு முள்ளது மண்ணே.

மாவிற்கு அன்னியமானது மாயிய தேகாதிப் பிரபஞ்சங்கள் ஓர் போதும் சத்தியமாகா. ஆன்ம சொரூபத்தை அறிந்தவர்கள் இதையறிவார்கள்.

[எது காலதேச வஸ்து பரிச்சேத மற்றதோ அது சத்தென்னப்படும்-கடம் உண்டாவதன் முன்னரும், அது நசித்தபின்னும் மண்ணில் கடமில்லாததுபோல், ஒருகாலத்தில் தோன்றி மற்றொரு காலத்தி லில்லாமற்போவது எதுவோ அதுகால பரிச்சேத முடைய தெனப்படும்—எங்கு கடம் தோன்றுகிறதோ அந்த இடம் நீங்கலான வேறு இடத்தில் கடம் இல்லாததுபோல், ஒரு இடத்தில் தோன்றி ஒரு இடத்தில் தோன்றாதிருப்பது எதுவோ, அந்த வஸ்து தேசப் பரிச்சேத முடையதாகும். சுஜாதிய விஜாதிய சுவகத பேதங்களை யுடையபொருள் எதுவோ, அது வஸ்து பரிச்சேத முடைய தென்னப்படும்.

சுஜாதி பேதம்:—மரம் என்பது ஒரு பொதுப்பெயராய் இருந்தபோதிலும் மாமரம் என்பதற்கு, வாழைமரம், அரசமரம், தென்னமரம் என்றவைகள் போன்ற பேதங்களிருப்பது சுஜாதிபேதம்.

விஜாதி பேதம்.—மரத்திற்கு கல், மண், என்பவை அன்னிய இனமாகத் தோன்றி யிருத்தல் போன்ற பேதம் விஜாதிபேதம் எனப்படும்.

சுவகத பேதம்:—மரத்தில் இலை, மலர், காய் முதலிய தோன்றுவன போன்ற பேதங்கள் உண்டாயிருப்பது சுவகத பேதம். சுஜாதி விஜாதி சுவகதபேதங்க ளற்றது எதுவோ, அது வஸ்து பரிச்சேத மற்றதாகும்.

ஆன்மா காலதேசவஸ்து பரிச்சேத மற்று முக்காலத்தும், எங்கும் நிறைந்து ஒரே தன்மைத்தாய் விளங்கி நிற்கும் வஸ்து வாதலின், அது சத்தாம். கற்பிதங்களாகிய எல்லா வஸ்துக்களுக்கும் பிறப்பிடமாயுள்ள இந்த ஆன்மா எல்லா வஸ்துக்களிலும் வியாபித்து நிற்கும் - இந்த ஆன்மா விகாரமற்றது, சகலப் பிரபஞ்சங்களிலும் பூரணமாய் வியாபித்திருப்பது. நாசரஹிதமான இந்த ஆன்மா ஒருவராலும் அழிக்கப்படாதது.

[பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறியமைதல், தேய்தல், அற மாய்தல் என்ற ஷட்பாவ விகாரமுடைய இத்தேகமே யழியத்தக்கது - இதில் இருக்கும் ஆன்மா நித்தியம், சாசுவதம், புராதனம். குறைதல் வளர்தல் விகாரப்படுதல் இன்றி என்றும் ஒரேபடித்தா யிருப்பதாம்]

இனித் தேகாதிப் பிரபஞ்சமே அநித்தியமாம் - ஊஷரபூமியில் எழும் கானலினிடத்தே, இல்லாத ஜலம் தோன்றி நன்றாய் உற்றுநோக்கியபோது ஒழிந்து போவதுபோல், எல்லாவிதங்களாலும் அழிவது இத்தேகமே—ஆன்மா ஒன்றைக் கொல்லும் கர்த்தாவாகாது, ஒன்றாற் கொல்லப்படு பொருளுமாகாது.

"ஆன்மா என்று மழியாதது, பிறப்பிறப்பற்றது, அநித்தியமான தேகத்தில் இருந்தும் நித்தியமானது" என்ற உண்மையை யறிந்தோர் எதைக்

கொல்வார், எவ்வகையாற் கொல்வார்? எதையும் கொல்லவு மாட்டார், கொல்விக்கவு மாட்டார். நாம் கிழிந்துபோன உடையைக் களைந்தெறிந்து விட்டு வேறு புது உடையை யணியுமாபோல் ஆன்மாவும் ஜீரணமான தேகத்தைப் பரித்தியாகம் செய்து வேறு புது சரீரத்தையடையும்.

[“இப் பீஷ்மத் துரோணாதியர்களாகிய ஆன்மாக்கள் ஒரு போதும் அழிவனவல்ல. இவர்கள் செய்துள்ள தர்மம் தவம் முதலியவற்றின் பலத்தால் உயர்வான தேவசரீரங்களை யடைந்து மேலான சுவர்க்காதி போகங்களை யனுபவிப்பார்கள் - இவர்கள் அப்படிச் செய்வதற்கு நிகழ்காலத்திலிருக்கும் இவர்கள் சரீரங்கள் இடையூறாக விருக்கின்றன. ஆதலின் நீ தர்ம யுத்தம் செய்து இவர்களின் நிகழ்கால சரீரங்கள் நாசமடையச் செய்தால் நீயவர்களுக்குப் பேருபகாரம்செய்தவனே யாவாய். ஆகையால் இவர்களோடு போர்புரிவதால் இவர்களுக்குத் தீங்கிழைப்பதாய்க் கருதும் மதிமயக்கத்தை விட்டொழிதி” என்று தாம் கூறுவதாக அர்ச்சுனன் உணரவேண்டுமென்ற கருத்தோடு பகவான் மேற்கண்டவாறு கூறினார் ]

அர்ச்சுனன்:—ஏ பகவன்! ஒரு வீடு தீயால் அழிந்துபோனால் அதற்குள் இருக்கும் மனிதனும் வெந்தழிவது போல், தேக மழியும்போது உள்ளிருக்கும் ஆன்மாவு மழியாதோ?

பகவான்:—ஏ அர்ச்சுனா! ஆன்மா அவயவாதிகளோடு பொருந்திய உருவமுடையதன்று. ஆதலின் யுத்தத்தில் உபயோகப்படும் வாள் வேல் முதலிய எத்தகைய கொடிய ஆயுதங்களும் அதைச் சேதிக்கமுடியாது. அக்னியால் அது வெந்தழியாது. ஜலமும் அதைக் கரைந்தழியச் செய்யவல்ல தல்ல. வாயுவாலும் அது சலனமடையாது. எதனாலுமே அது பாதிக்கப் படாது.

இவ்வான்மா எல்லாப் பொருள்களுக்கும் பழைமையானது, எங்கும் தானாக வியாபித்திருப்பது, ஸ்திரமானது, நித்தியமானது, அணுன்மாக்களாகிய இந்திரியங்கள் முதலியவற்றால் கோசரிக்கக் கூடாதது. இத்தகைய சுபாவமுடைய ஆன்மாவை யுள்ளபடி உணராமல், அது மற்ற தேகம் முதலிய பதார்த்தங்களைப்போல் அழியும் என்று நீ வருந்தாநிற்பது என்ன காரணங்கொண்டோ வறிகிலேன்.

ஏ! பார்த்த அவ்வாறின்றி இவர்கள் தேகத்தோடு ஆன்மாவு மழிந்தே மறுபடி பிறக்கிறார்கள் என்று கொள்வதாயினுங்கூட, பிறந்த எவரும் மறிப்பர், மறித்த எவரும் மீண்டும் பிறப்பர்; இது நிரவை. ஒருகால் இவர்கள் தேகம் அழிவதற்கே நீ சோகிப்பதாயின், இந்தப் பீஷ்மத் துரோணாதியர் இஜ்ஜன்மமெடுத்ததன் முன்னர் இன்னவிதமாக விருந்தார்கள் என்பதை நீ சற்றும் அறியமாட்டாய். இனி இங்கு இறந்தபின் எந்தவிடத்திற்குச் செல்கிறார்கள், எந்த உருவை யடைவார்கள் என்பதையும் நீ சற்றுமறியாய். இடையிலுள்ள சொற்ப காலமாகவே, நீ இவர்களை யறிந்திருக்கிறாய்-

முன்னுமில்லாது பின்னுமில்லாது இடையில் மட்டும் தோன்றுவது இந்திர ஜாலம்போன்று பொய்யே யாகும். ஆதலின் துச்சமான சரீரங்களைக் குறித்து நீ சோகிப்பது தகுதியன்றாகும்.

அர்ச்சுனன்:—“ சுவாமி ! இவ்வுலகில் சாத்திர விசாரணைசெய்து உண்மையையுணர்ந்த அறிஞரும் சோகமடைதலைக் காண்கிறோம். தாங்கள் நான் அறிந்திருந்தும் சோகமுறுகிறே னென்று என்மேல் குற்றங் கூறுகிறீர்கள். மேலும் கேட்போனுக்குப் பொருள் விளங்காவிடின் அது சொல்வோனிட முள்ள குறையாலேயே என்று சாஸ்திரங்கூறுவதால் தாங்கள் கூறுவதை நான் கிரகித்துக் கொள்ளாததும் என் தோஷமன்றும் எனக்கருதுகிறேன் ” என்றான்.

பகவான்:—ஏ ! கிரீடி ! ஆன்மாவை யறியாத அஞ்ஞானத்தாலேயே உனக்குச் சோக முண்டாகிறது. அதைப்போலவே மற்ற அறிஞர்களுக்கும் சோகமுண்டாதல் ஆத்மாவை யறியாததாலேயே. நான் கூறுவதன் பொருள் உனக்கு விளங்காதிருப்பது உன் அந்தக்கரணத்தின் தோஷமே யன்றி சொல்லும் எமது தோஷம் சிறிதும் இன்றாம்.

(ஆன்மாவையறிவது மிகப்பிரயாசையயேன் றருளல்)

சில அதிகாரிகள் இந்தஆன்மாவின் உண்மையை யென்றுங் கண்டறியாத அதிசயத்தைக் கண்டவர்கள் போல உணர்கிறார்கள். வேறு சிலர் எப்போதும் உரைத்திராத அதிசயத்தை யுரைப்பவர்கள்போல் பிறருக்கு உபதேசிக்கிறார்கள். மற்றும் சிலர் என்றும் கேட்டறியாத அதிசயத்தைக் கேட்டவர்கள்போல் மகிழ்ச்சி யடைகிறார்கள். சிலர் அதைப்பற்றி எவ்வளவுவரைக் கேட்டும் சற்றும் அறிந்துகொள்வ தில்லை.

ஆதலின், ஏ அர்ச்சுனா ! கர்மத்தின்படி ஜீவர்கள் அடையும் பலதேகங்கள் அழியினும் நித்தியமாகிய ஆன்மா அழிவதில்லை யென்ற உண்மையையுணர்ந்து, இப்பீஷ்மத் துரோணாதியரை நான் கொல்கின்றேன் என்று கருதும் சோகத்தை விட்டெழிப்பாயாக. மேலும் ஆயுதமேந்தி யுத்தகளத்தில் முன்வைத்தகாலைப் பின்வைக்காது அமர்புரிவதே க்ஷத்ரியனுக்குரிய தருமமென்று வேதம் முறையிடுவதால், மோக்ஷசாதன மாகிய இந்த யுத்தத்தைச் செய்யத் தொடங்குவாயாக:—

[ போர்முனையில் நின்று யுத்தம் செய்யும் வீரனுடைய மனதில் இழிவான அற்ப இச்சைகள் ஒன்று மின்றி ஜயம்பெறவேண்டு மென்ற ஒரே எண்ணமிருப்பதால், அவ்வீரன் வீரசொர்க்க மடைகிறான் என்று கூறப்பட்டிருப்பதால் மோக்ஷசாதனமான யுத்தம் என்னப்பட்டது.]

அர்ச்சுனன்:—பகவானே ! க்ஷத்ரியனுக்குரிய தருமம் யுத்தம் செய்வதே யெனினும், இந்தப் பீஷ்மத் துரோணாதியரோடு யுத்தம் புரிவது எனக்கு உசிதகர்ம மாகாது.

பகவான்:—ஏ கிரீடி! யாதொரு முயற்சியு மின்றியே சுவர்க்கத்தை யளிக்கக்கூடிய இந்தப்போரை யெந்த க்ஷத்திரியன் அடையப் பெறுவனோ அவன் சுகத்தையே யடைகின்றான். ஆதலால் இப்போரைத் தொடங்குவது அதர்மமென்று நீ ஐயுற வேண்டாம்.

[யுத்தத்தால் வெற்றியுண்டாயின் இவ்வுலகில் கீர்த்தியும் செல்வமும் பூமியும் கிடைக்கும்—அப்படிக்கின்றி அபஜெய மடையினோ துரிதமாக மோக்ஷத்தை யடைவன். ஆதலின் க்ஷத்ரியன் யுத்தத்தால் நலமே பெறுகிறான்.] (தொடரும்)

சீடன்.

# "ஸ்ரீமத் இராமாநுஜ ஆசாரிய சுவாமிகள்."

அலைகடலே ஆடையாகக் கொண்ட விக்காசினியின் கண்ணே உலவாநிற்கும் மானிடர்க் குரிய நற்குணங்களைப் பற்றியும், தீக்குணங்களைப் பற்றியும், 'விச்வகுண தர்சனம்' என்னுமோர் வடமொழிக் கிரந்தத்தில் கூறப்பட்டுள்ளது. வைணவ மதஸ்தாபகரின் ஆற்றலைப் பற்றி, அதில் ஒரு ஸ்லோகம் கூறுவாம். அதன் பொருள் பின்வருமாறு:—

"உண்மையுரைப்பின், நான்கு வேதங்களையும் ஆய்ந் தறிந்தவர்கள் மிகச் சிலரே; அன்றியும் வேதாந்தம், தர்க்கம் முதலிய சாஸ்திரங்களை யறிந்தவர்கள் பின்னுஞ் சிலரே. வேதங்களையும் சாஸ்திரங்களையும், அறிந்தவர்களில் பலர், அடக்கம், கன்னடக்கை, பக்தி, பொறுமை, முதலியவைகளில் குன்றியவர்களா யிருக்கின்றனர். ஆனால் மேற்கூறிய பல்வகை சாஸ்திர ஞானத்திலும், நற்குணங்களிலும், பிரக்யாதி பெற்றவரும் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை நிலை நாட்டியவருமான ஆசாரிய ஸ்வாமிகள், குறைவின்றி மேம்பா டடைந்தவரேயாவர்."

அத்தகைய உத்தம ஸத்புருஷரின் சரிதத்தை நமது 'ஆனந்தன்' வாயிலாய் ஈண்டு சுருக்கமாய் வெளியிடலானோம்.

இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய மேனாட்டுப் பிரதேசங்களில் ஜனங்கள், ஷேக்ஸ்பியரையும், மில்டனையும், நெல்ஸனையும், வாஷிங்டனையும் (Shakespeare, Milton, Nelson and Washington) போன்ற பிரசித்தி பெற்ற கவிராயர்கள், பண்டிதர்கள், சுத்த வீரர்கள் முதலியோரின் நூற்றாண்டு உற்சவங்களைக் (Centenaries) கொண்டாடுவது வழக்கமாயிருக்கிறது. ஆனால் கீழ்நாடாகிய நம் பாரத நாட்டில், கவிகுஞ்சரங்களாகிய 'காளிதாஸர்' முதலிய ஏனையோர்க்கும் அவ்விதமான திருவிழாக்கள் நடத்துவதில்லை. பகவானுடைய அம்சங்களுடன் இப்பாரதப் பூமியில் அவதரித்த 'அவதார புருஷர்கள்' என்று வழங்கப் பெற்றவர்களாகிய ஸ்ரீமத் சங்கர ஆசாரியர், இராமாநுஜ ஆசாரியர், மத்வ ஆசாரியர் முதலிய சமயாசாரியர்களாகிய மகான்களுக்கு மட்டுமே வருஷாந்தர உற்சவங்கள் நடத்தப்

படுகின்றன. எல்லா ஜனங்களுக்கும் பயன்படும்படியாக ஸ்ரீமத் இராமாநுஜ ஆசார்ய ஸ்வாமிகள் இயற்றியுள்ள அரிய கிரந்தங்கள் பின் வருவன :—

(1) வேதாந்தசாரம் (2) வேதாந்த தீபிகை (3) வேதார்த்த சங்கிரகம் முதலியன. 'வியாஸபகவானது ப்ரம்ம ஸூத்ரங்களுக்கும் ஸ்ரீபாஷ்யம் (வ்யாக்யானம்-Commentary) இவர் செய்துள்ளார். அந்த ஸ்ரீபாஷ்யத்தில், பகவானிடத்தில் நம்பிக்கை வைக்கும்படியாயும், பகவத் உபாசனை செய்யும் படியாயும் ஜனங்களுக்கு புத்திமதி கூறியுள்ளார். அன்றியும், பகவத் பக்தி குறைந்தவர்களாயினும், தம்மிடத்தில் நம்பிக்கை யுள்ளவர்களாயின், முத்தி யடைவார்களென்றும் உரைத்திருக்கின்றார்.

ஆசாரிய சுவாமிகள் நமது ஆரிய வர்க்கத்தில் அவதரித்த காலம் இற்றைக்குச் சுமார் ஒன்பது நூற்றாண்டுகளுக்கு முன்ன ரென்னலாம். அவர் ஜனித்த ஸ்தலம் செங்கல்பட்டு ஜில்லா 'ஸ்ரீபெரும்பூதூர்' என்னும் புண்ய க்ஷேத்ரம். அவருடைய பிதாவின் திருநாமம் 'கேசவ சோமயாஜி;' மாதாவின் நாமம் 'காந்திமதி'. முன்னொரு காலத்தில் தேவர்களின் பொருட்டாக ஸ்ரீமந் நாராயணமூர்த்தி சக்ரவர்த்தித் திருமகனாக அவ தரித்தபோது ஆதிசேடன் 'இளைய பெருமாள்' என்னும் லக்ஷ்மண சுவாமி யாக அவதரித்தார். நமது ஆசாரியரை அவரது பெற்றோர்கள் ஆதிசேடன் அவதாரமென்று அறிந்தவர்களாதலால் அவருக்கு 'இராமாநுஜன்' (இராம+ அநுஜன்=ராமன் உடன்பிறந்தவன்-Rama's brother) என்று நாமஞ் சூட் டினர். விப்ரகுலத்துக்குரிய சௌளம், உபநயனுதி வைதிகச்சடங்குகள்யாவும் விதிப்படி தக்க பிராயங்களில் நடத்தப்பட்டன. ஸ்ரீ இராமாநுஜர் தமது பதி னாறும் பிராயத்தில், 'யாதவப் பிரகாசர்' என்னுமோர் பண்டித ஆசாரிய ரிடத்தில் சீடனாய்ச் சேர்ந்து அவரிடம் சாஸ்திரங்களைக் கற்று வந்தார். வேதங்களின் சிலபாகங்களுக்கு அவ்வாசிரியன் தவறான விவரணங்கூறியது, குருவுக்கும் சீடனுக்கும் அடிக்கடி அதிருப்தி யுண்டாவதற்கு ஏதுவாயிற்று. என்றாலும் சிக்ஷை வழக்கப்படி நடந்துகொண்டு வந்தது. யாதவப் பிரகாசர் பிரக்யாதி பெற்றவர். ஒரு சமயத்தில் சோழமண்டலத்தில் காஞ்சிமா நகரை யாண்டுவந்த மன்னன் தனது பேய்பிடித்த குமரியைக் குணப்படுத்த விரும்பி, யாதவப் பிரகாசருக்குச் செய்தி சொல்லியனுப்பி வரவழைத்தான். அவர் தமது சீடர்கள் சகிதமாய் இராஜமாளிகை வந்தடைந்து சில மந்திர உச்சாடனங்களால் இளங்குமரியைப் பிடித்துள்ள பேயை ஒட்டுவதற்கு பிரயத்தனஞ் செய்யும்போது, அப்பேய் அவரைக்கண்டு நகைத்து, 'என்னை அப்புறப்படுத்த உன்னாலாகாது. உனது சீடராகிய ஸ்ரீ இராமாநுஜரின் ஸ்ரீபாத தீர்த்த ப்ரோக்ஷணத்தாலேதான் எனது குறை தீர்க்கப்பட்டு யான் பரிசுத்தனாவேன்' என்று கூறியது. இதைக் கேட்டதும் அரசன் தனது புதல்வியைக் காப்பாற்றும்படி ஸ்ரீ இராமாநுஜரை வேண்டினான். அவர் அவ்வண்ணமே அரசிளங் குமரியின் நலியைத் தீர்க்கவே, மன்னன் அவரை

மிகவும் கொண்டாடி கௌரவப் படுத்தினன். இது காரணமாய் யாதவர் அவமானப்பட்டதால் அவர் ஸ்ரீ இராமாநுஜரைப் பகைக்க ஆரம்பித்தார். இதற்குள், குருவுக்கும் சீடனுக்கும் உண்டாயிருந்த அதிருப்தியும் மனஸ் தாபமும் முதிர்ச்சியடையவே, ஸ்ரீ இராமாநுஜர் அவரிடத்தில் பாடம் கற்பதை நிறுத்திவிட்டார். யாதவர் அடைந்த கோபத்துக்கு அளவேயில்லை. நெற்றிக் கண்ணைத் திறந்துவிட்டார்! யாதவர் 'உருத்திரர்' ஆய்விட்டார். அன்றியும் அந்தோ! உத்தம சீடராகிய இராமாநுஜரின் உயிருக்கே உலை வைத்துவிட எண்ணங்கொண்டார்! இக்கொடுஞ்செயல் புரிவதின் நிமித்தமாக ஒரு சமயம் தீர்த்த யாத்திரை யென்னும் வியாஜத்துடன் ஸ்ரீ இராமாநுஜரை அழைத்துச்சென்று வழியில் அவரைக் கொன்றுவிட எத்தனித்தார். எப்படியோ அது முடியாமற் போய்விட்டது. மற்றோர் சமயம் ஸ்ரீ இராமாநுஜர் பிக்ஷையாய்ப் பெற்ற அரிசியில் தந்திரமாய் விஷத்தைக் கலந்துவிட்டார். தெய்வாதீனமாய் இத்தருணத்திலும் அவருடைய கெட்ட எண்ணம் பலிக்காமற் போய்விட்டது. அனந்தரம் ஸ்ரீ இராமாநுஜர் யாதவரை விட்டகன்று 'திருக்கோட்டியூர் நம்பி' என்னும் சத்குருவை நாடி அவரை ஆசிரயித்து அவரிடம் சீடராயமர்ந்தார். அப்பொழுது ஸ்ரீஇராமாநுஜருக்கு இருபத்தி நான்காவது பிராயம் நடந்துகொண் டிருந்தது. ஒருநாள் தமது புதிய ஆசாரியர் 'ஒரு கீதம் பாடுவதைக் கேட்டு, ஸ்ரீ இராமாநுஜர் அதை யியற்றினவர் யாவரென அறிய வேண்டினர். அது ஸ்ரீரங்கத்தில் வசித்த ஆளவந்தார் சுவாமிகளால் கவனஞ் செய்யப்பட்டதென் றறிந்ததும், ஸ்ரீ இராமாநுஜர் அந்த மஹானைத் தரிசிக்க விரும்பினர். (தொடரும்.)

C. S. V. பாரதி.

---

## ஓர் அறிக்கை

சந்தாநேயர்களுக்கு:— 8-ம் வருடசந்தா தொகைக்காக 7-ம் வருட 12-வது (ஆனிமீ") சஞ்சிகையே வி. பியி லனுப்பப்படுமென்று, 8-ம் வருடம் சஞ்சிகையை நிறுத்திவிட விரும்புவோர் அதற்குள் தெரிவித்து விட்டால் 12-வது சஞ்சிகை யவர்களுக்குச் சாதாரணதபாலில் அனுப்பிவிடப்படு மென்றும் 10-11-வது சஞ்சிகைகளில் விளம்பரம் செய்ததோடு 11-வது சஞ்சிகையில் ஒரு பிரத்யேகத்துண்டு விளம்பரமும் முதல் பக்கத்தில் ஒட்டியிருந்தோம். அப்படி யிருந்தும் சில சந்தாதார் "வழக்கத்திற்கு விரோதமாய் என் 12-வது சஞ்சிகையை வி. பியி லனுப்பினீர்கள்? அது எங்களுக்குச் சும்மா அனுப்பப்பட வேண்டியது தானே" என்று மனம் போனபடி வரைகிறார்கள், இவர்கள் அறியாமைக்கு மிக்க வருந்துகிறோம்.

தபால் ஆபீஸில் வி. பி. க்கள் தினம் 400—500 மட்டுமே எடுப்பதால் 12-வது சஞ்சிகை வி-பி. யில் வந்து யாவர்க்கும் சேர ஆலசியம் நேர்வதைச் சந்தாதாரர் பொறுத்துக் கொள்ளக் கோருகிறோம்.

---

## மாணவர்கள் பக்கம்

மாணவரும் மதமும்:—

அன்பார்ந்த மாணவர்களே! இக்காலத்தில் பெரும்பாலும் மாணவர்களுக்கு மதத்தில் சற்றும் சிந்தனையில்லை யென்பது அநுபவம். கிருஸ்து மதத்தவர்கள் வாரத்திற் கொருநாள் - ஆதிவாரத்தன்று, தங்கள் வேதபுத்தகத்தை யெடுத்துக் கொண்டு கோயிலுக்குச் சென்று பாதிரியார் உபதே

சங்களைக்கேட்டு பிரார்த்தனை செய்துவிட்டு வருகிறார்கள். இதனால் அவர்கள் தங்கள் மதநூலை வாசிக்கச் சந்தர்ப்பம் நேரிடுகிறது. மஹம்மதியர்களோ பெரும்பாலும் தங்கள் மக்களுக்கு முதலில் தங்கள் வேதமாகிய குர்ஆனை ஓதிவைத்த பின்பே வேறுகல்வியை யாரம்பிக்கிறார்கள்.

ஆனால் இந்து மாணவர்களுக்கோ அத்தகைய சந்தர்ப்பங்கள் ஒன்றுமில்லை. பெற்றோரும் தம்மக்களுக்கு மதக்கல்வியைப் போதிக்கவேண்டுமென்ற எண்ணமே கொள்வதில்லை. பையன் முன்னே இங்கிலீஷ்படித்தால் சதுர்வேத பாராயணம் செய்தமாதிரியே. ஏனெனில் "இந்தகாலத்தில் இரண்டு கோணை எழுத்து தெரிந்திருந்தால்தான் நாலு துட்டு சம்பாதிக்கலாம்—அதுதான் கௌரவம்" என்ற மூடக்கொள்கை யிவர்களைப் பேய்போல் பற்றிக்கொண் டிருக்கிறது.

அந்தோ! "இந்துக்கள் தம்மதத்தை உயிரினும் அரிதாகப் போற்றுகிறவர்கள்" என்பது இப்போது வெறும் வார்த்தைமட்டாக விருக்கிறது. எவனுக்கேனும் பூர்வம் விட்டகுறை யிருந்து அவனுக்கே சாத்திர ஆராய்ச்சியில் சிரத்தை ஜனித்தால், அவன் தானே தக்க ஆசானைத்தேடிக்கொண்டு மதக்கல்வியில் தேர்ச்சியடைந்தால் உண்டு. இப்போது நமது நாட்டில் நமது மதக்கல்வியில் பயின்றுள்ளோரில் 100க்கு 94பேர் அவ்வாறு பயிற்சியடைந்தோர்களே யன்றி பெற்றோர்களாலாவது பாடசாலையிலாவது பயிற்சி யடைந்தோர்களல்ல - துரைத்தன பாடசாலைகளில் மதக்கல்வி போதிக்கப்படுவதில்லை. இதனால் நமது இந்து மாணவர் மதக்கல்வி யில்லாமலே வளர்கிறார்கள்.

நமது நாடோ ஞானத்திற்குத் தாயகமானது, உலகிற்கே ஞானவொளியளித்தது - இந்தியா ஆன்மஞானத்திற்குப் பிறப்பிடமானதென்பது உலகப்பிரசித்தமான விஷயம் - அத்தகைய நாட்டுமக்கள் இப்போது மத உணர்ச்சியே யின்றியிருப்பது எத்தகைய இழிவானது. மற்ற நாடுகளிலெல்லாம் மக்களுக்குச் சாதாரணக் கல்வியோடு மதக்கல்வியும் போதிக்கப்படுகிறது. ஆன்மஞானமே நமது நாட்டின் அழியாத கீர்த்திக்கு ஆதாரமானது. அபூர்வமான ஆன்ம சக்திபெற்ற மகான்கள் எண்ணிறந்தோர் நமது புண்ணிய பூமியில் அவதரித் திருக்கிறார்கள். இப்போதும் அவதரித்து அந்நியநாடுகளுக்குச் சென்று தத்துவஞானத்தைப் போதித்து வருகிறார்கள். அத்தகையோர் வழியில் வந்த நீங்கள் மதத்தில் சிரத்தையற் றிருப்பது நீதியாகுமோ என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

சுயமத ஆராய்ச்சி யில்லாததால் நமதுமதத்தின் உன்னதமான கொள்கைகள் இத்தகையவை யென்று உங்களுக்குத் தெரியவில்லை. உங்களில் அனேகர் அன்னிய மதம் போதிக்கப்படும் பாடசாலைகளில் வாசிப்பதால் அம்மத போதனைக்குச் செவி கொடுக்க நேர்கிறது. உங்களைத் தங்கள் மதத்திற்கு இழுத்துக்கொள்ள முயலும் அவர்கள், உங்கள் மதத்தில் உங்களுக்கு அவமதிப்பும் வெறுப்பு முண்டாக்குவதற்காக, உங்கள் மதத்தில் குற்றங்கள் கூறும்போது சுயமத ஆராய்ச்சியில்லாத நீங்கள் எளிதில் மயங்கிவிட நேர்கிறது. அந்தோ! இதுகாறும் எத்தனை மாணவர்கள் தங்கள் தாய் மதத்திற்குத் துரோகிகளாகிப் பின்னர் வருந்தியிருக்கிறார்கள்! அந்தோ! மதக்கல்வியின்மையால் உண்டாகும் தீங்கு இது மட்டுமோ. அவற்றையெல்லாம் விரித்துரைக்க ஈண்டிடம் போதாது.

இப்போது உங்களுக்கு மதக்கல்வி பாடசாலையில் போதிக்கப்படாத வரையில் நீங்களே யதை யடைய ஏன் முயலலாகாது? மேல்நாட்டு வெளிப் பகட்டான நாகரீகத்தைப் பின்பற்றி எவ்வளவோ காரியத்தைச் செய்யும் நீங்கள், உங்களுக்கு அவசியமான ஆன்மார்த்த இலாபத்தை யளிக்கும் காரியத்தை யேன் செய்யலாகாது. பந்தாடுதல் முதலிய வீண் விளையாட்டு களில் காலத்தைக் கழிக்கச் சங்கங்களாகச் சேர்கிறீர்களே, அவற்றை விட் டொழியாவிடினும் அவற்றோடு மதக்கல்வி பயில்வதை யேன் ஒரு நோக்க மாக வைத்துக்கொள்ளலாகாது?

சகோதரர்களே! உங்கள் இருமைப் பயனையும், தாய்நாட்டின் க்ஷேமத் தையும் கருதி யினியேனும் அவ்வாறு செய்ய வேண்டுகிறேன். நாம் கூறும் இப்போதனை யொரு சமயம் உங்களுக்கு வீண் வேலையாகவும், வெறுப்பாக வும் கூடத் தோன்றலாகும். இது பாலிய வயதின் இயற்கை. ஆனால் சற்று அறிவைக்கொண்டு சிந்தித்தால் இது உங்களுக்கு எவ்வளவோ நன்மையை யளிக்கத்தக்க விஷயம் என்று நன்கு புலப்படும். நமது மதக்கல்வியில் ஆன்ம சக்திபெற மார்க்கங்கள் இருக்கின்றன. ஆன்ம சக்தியால் நீங்கள் அடையமுடியாதது ஒன்றுமே யில்லை. இதை நன்றாய் மனதில் நிலைக்க வையுங்கள். பரம்பொருள் உங்களுக்குப் பூரண அருள் புரிவார்.

(தொடரும்.)

சீடன்.

---

## ஸ்திரீகள் பக்கம்.

### மாதர் நிலைமை.

பாரத மாதாவாகிய நமது நாட்டுச் சகோதரிகள் கீழ்க்கூறும் விஷயங் களை நன்கு கவனித் துணருமாறு வேண்டிக் கொள்கிறோம்.

சகோதரிகளே! கால வேறுபாட்டால் இப்போது நமது நாட்டாரு க்கு நவீன நாகரீகமயக்கம் பற்றியிருப்பது யாவருமுணர்ந்த விஷயமே. இந்த மயக்கத்தால் மாதர்கள் உலகில் தாங்கள் இருக்க வேண்டிய நிலைமை யெது? ஆதிமுதல் எந்த நிலைமையில் இருப்பதால் உலகில் வேறெந்த நாட்டுமாதரும் பெறாத "கற்பரசிகளாகிய பத்தினித் தெய்வங்கள்" என்ற அழியாப் புகழை யணிகலமாகப் பெற்றிருக்கிறார்கள் என்பதை யுணராது தடுமாற்ற முறுகிறார்கள். சிவம் சக்தி இரண்டுமே, உலகிற்குக் காரணமா யினும் சிவம் அல்லது பிரம்மம் நிஷ்க்கிரியை யுடையது. அதாவது ஒரு தொழிலும் செய்யாதது. பரை அல்லது சக்தியே சிருஷ்டித் திதயாதிய சகல கிருத்தியங்களையும் செய்வது. அதுவே ஆன்மாக்களுக்கு வேண்டிய சகல போகபாக்கியங்களையு மளித்து இரக்ஷிப்பது. ஆதலின் அதற்கே பெருமையதிகம். இதன் உதவியின்றி மோக்ஷம்பெற யாவராலும் முடியாது. அதனாலே "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்று ஆன்றோ ரருளினர்.

மாதர்களனைவரும் பராசத்தியின் அம்சமே யாவர். குடும்பத்தின் க்ஷேமமும் கௌரவமும் அவர்களைப் பொறுத்ததே. "ஏர் உழுபவன் என்னசெய்வான்—பானை பிடிப்பவள் பாக்கியம்" என்ற பழமொழி யிதை நன்கு விளக்குவது காண்க. சக்தி தன் தொழிலைச் செய்யாது விடுத்தால் உலகத்தின் இயற்கையாவும் தலைதடுமாறி விடும்.

சகோதரிகளே! ஆடவர்கள் கஷ்டப்பட்டு பொருள் சம்பாதிக்கவேண்டியவர்கள். இராஜரீக சம்பந்தமான சகல தொழில்களையும் - வீட்டிற்கு வெளியே சென்று நடத்தவேண்டிய எல்லாக் காரியங்களையும் - செய்ய வேண்டியது அவர்கள் கடமையே.

மாதர்களாகிய உங்கள் தொழிலோ வருவாய்க்குத் தக்கபடி செலவு செய்து குடும்பத்தை நடத்தி வருவதாகும். குடும்பத்தை நடத்துவதில் எத்தனையோ விஷயங்கள் நீங்கள் கவனிக்க வேண்டியவை யிருக்கின்றன. அவற்றை நீங்கள் கவனிக்கா விட்டால் இல்லறவிவகாரம் செவ்வனே நடைபெறாது. உங்களுக்கு அவசியமான கல்வியைக்கற்று குடும்பவிஷயங்களை நீங்கள் சரிவர நடத்தினால்தான் உங்கள் பூர்வீக கௌரவம் நிலைபெற்று விர்த்தியடையும். சிலர் நம் நாட்டில் மாதர்கள் அடிமைகள் போல் நடத்தப்படுகிறார்கள் என்று கூறுகிறார்கள். இது உண்மை அறியார் கூறும் கூற்றேயாகும். மாதர்களை யவர்கள் இஷ்டம்போல் வரம்பின்றி நடக்க விட்டு விடுவதே மாதர்களைக் கௌரவமாய் நடத்துவதென்று அந்த கையார் கருதுகிறார்கள். நம் நாட்டுமாதர்க்கு ஏற்பட்டிருக்கும் ஆசார ஒழுக்கங்கள் அவர்களுடைய மறுமைப் பயனையும் கருதி நம் முன்னோர்களால் ஏற்படுத்தப் பட்டவை. உண்மையில் நமது நாட்டில் தோட்டிமுதல் தொண்டமான் வரையில்—ஒவ்வொரு குடும்பத்திலும்-பார்த்தால் அனுபவத்தில் ஸ்திரீகளின் அதிகாரமே நடைபெறுகிற தன்றி, ஆடவன் பேருக்கு மட்டுமே எஜமானன் என்ற பட்டத்தை வகித்திருக்கிறான் என்பதைப் பிரத்தியக்ஷமாய் விளங்கக்காணலாம். நமது நாட்டில் மனைவிக்கும் கணவனுக்கு முள்ள சம்பந்தம், நன்மைவரினும் தீமைவரினும், உடலும் உயிரும் போல் மரணபரியந்தம் பிரிக்கப்படாத பற்றுடையது.

மேல்நாட்டு மாதரில் அனேகர் கணவரின்றித் தாங்களே தங்கள் ஜீவனத்திற்குப் பாடுபட வேண்டி யிருப்பதால் அவர்கள் ஆடவர்கள் தொழில்களைத் தாங்களும் செய்ய விரும்புகிறார்கள். அம்மாதர்களுக்கும் நமது மாதருக்கும் நேர்மாறான வித்தியாச முண்டு. நமது மாதருக்குத் தெய்வ பக்தியுண்டு. இவர்களுக்கு விரதங்கள் நோன்புகள் பலவுண்டு. அவற்றின் மூலமாக இவர்கள் தெய்வ அருளைப்பெற்று மறுஜன்மத்தில் மேலான பதவியை யடைகிறார்கள். மேல் நாட்டுமாதருக்கு இந்த உலகபோகங்களை யனுபவிப்பது மட்டிலேயே நாட்டமன்றி மறுமைச்சிந்தனையே கிடையாது.

அந்தோ! அப்படி யிருக்க, நமது மாதரில் சிலர் இப்போது வீண் மயக்கில் சிக்கித் தங்கள் உத்தமவரம்பு மீறி ஆடவரைப்போல் ஆங்கிலம் முதலிய கற்கவேண்டு மென்றும், உத்தியோகம் செய்யவேண்டு மென்றும், ஆடவர் நிறைந்த சபைகளில் நின்று பேசவேண்டு மென்றும் அவாக்கொள்கிறார்கள். அந்தோ இது எத்தகைய விபரீதமான முடிவிற்குக் கொண்டு போய் விடுமென்பதை அறிவாளிகள் சிந்திக்கக் கோருகிறோம். அனாதி முதல் நமது மாதர் அனுபவித்துவரும் ஒப்புயர்வற்ற சிறந்த கௌரவத்தை யழிக்கத்தக்க இந்த எண்ணத்தை யடியோடு விட்டுவிடும்படி யுங்களைப் பிரார்த்திக்கிறேன். நமது மதாசாரத்திற்கும் நம் நாட்டின் தெய்வீகத் தன்மைக்கும் பாதுகாவலராகிய நீங்கள் உங்களுக்குரிய சுபாவத்தையும் கடமைகளையும் கைவிட்டு வரம்புகடந்த தொழில்களில் தலையிடுவீர்களாயின் பாரதநாடு புண்ணிய பூமி - ஞானபூமி - என்ற பெயரே யழிந்து

போய், கண்டதேகாட்சி கொண்டதே கோலம் என்ற உலகாயதத்திமிர் ஏறிய மேல்நாடுகளைப்போ லாய்விடு மென்பதில் சற்றும் ஐயமில்லை.

மேல் நாட்டு நாகரீகப் பித்தேறி எல்லா விஷயங்களிலும் நமது மாதர் மேல்நாட்டு மாதர்போ லாகவேண்டு மென்று கண்மூடித்தனமாகக் கருதும் சில ஆடவரின் போதனைக்கு உடன்படா திருக்கும் வண்ணம் ஆண்டவன் உங்களுக்கு மனோவல்லமை யளிக்கப் பிரார்த்திக்கிறோம். பாரதமாதா உங்கட்கு நல்லரு ளளிப்பாளாக.

சீடன்.

---

## தபால் கொள்ளைக்காரர்கள்.

(7-ம் தொகுதி—478-ம் பக்கத் தொடர்ச்சி.)

உடனே யெழுந்து சற்றுதூரத்தி லிருந்த ஒரு குளத்தில் ஸ்நானம் செய்துவிட்டு குளிர்ந்த ஜலத்தைப் பானம்செய்தான். உடனே ஆயாசம் நீங்கி ஆரோக்யமடைந்து மரநிழலில் உட்கார்ந்து இப்போது எங்குசெல்ல லாம், என்ன செய்யலாம் என்று சிந்திக்கத் தொடங்கினன். சற்றுநேரத் திற்குள் ஏதோ சத்தங்கேட்டு எழுந்தோடி ஒரு புதரின்பின் மறைந்து கொண்டு மெதுவாய்ப் பாதையை நோக்கினன்.சற்று தைரியமுண்டாயிற்று. ஏனெனில் வருவது ஒருபெரிய நாட்டுப்புறத்து வண்டி; வண்டியோட்டி வரும் குடியானவன் களங்கமற்ற முகவிலாச முடையவன். அதன்மேல் கோமளவல்லி பாதையோரத்தில் வந்து நின்றாள்.

குடியானவன் அவளைக் கண்டதும் "ஆ! ஏனம்மா இங்குநிற்கிறீர் கள். பாடசாலைக்குத்தானே செல்கிறீர்கள்? என் வண்டியில் ஏறிக்கொள் ளுங்கள்" என்றான்.

கோமளவல்லி மிக்க கலவரமடைந் திருந்ததால் ஒன்றும் சட்டென்று கூற முடியாமல் கடைசியில் "ஆம் அய்யா இச்சமயம் ஏறிச்செல்ல உதவி செய்தால் மிக்க வந்தன மளிப்பேன்" என்றாள்.

குடியானவன் "ஒன்றும் கூற வேண்டாமம்மா, இவ்வாறு நான் ஒரு வர்க்குச் சகாயம்செய்து சந்தோஷ மனுபவித்து நெடுநாளாய் விட்ட தம்மா" என்று கூறி யவளை வண்டியி லேற்றிக்கொண்டு குதிரையைத் தட்டிவிட்டான். கன்னிகை நாணத்தால் ஒன்றும் வார்த்தையாடவில்லை. அவள் மனதிலுள்ள துயரமும் கலவரமும் எண்ணங்களும் இவ்வளவென்று கணிக்கமுடியாது. அப்படி யிருந்தும் குடியானவனுடைய கபடற்றதும் ஜீவகாருண்ய முடையதுமான குணத்தைக் கவனித்துக் கொண்டே சென்றாள்.

சுமார் அரைமணிநேரம் கழிந்தபோது குடியானவன் ஏன் இக்கன் னிகை யிவ்வளவு கூச்சப்படுகின்றாள் என்று தனக்குள்ளேயே சிந்தித்துக் கொண்டு, "ஏனம்மா! சென்றவருடம் சேர்ந்த அத்தனை சீடர்கள் இவ்வரு டம் சேர்ந்தார்களா?" என்றான்.

இதனல் அவன் இருக்கும் கிராமத்தில் பாடசாலை யிருக்கிறதென்றும் தன்னையொரு உபாத்தினியாய் எண்ணி யிருக்கிறா னென்றும் கோமள வல்லி தெரிந்து கொண்டாள். முதலில் தன் நிலைமையைப்பற்றி கூற அவ ளுக்கு மிக்க வெட்கமாயிருந்தது. ஆனல் அவன் நேராய்க்கேட்ட கேள் விக்கு உண்மைகூற வேண்டும். ஆதலால் துணிந்து,

"அய்யா நான் உபாத்தினியல்ல..." வென்றான்.

குடியானவன் மிக்க வியப்படைந்து "உபாத்தினியல்லவா? நான் எங்களூர் பாடசாலையின் தலைமை யுபாத்தினி யென்றல்லவோ எண்ணி யிருந்தேன்" என்றான்.

கன்னிகை:—"நான் பக்கத்திலிருக்கும் நகரத்திற்குச் செல்ல வேண்டும். நடந்துபோகலா மென்று நினைத்தேன்" என்றாள்.

குடியானவன்:—"ஓகோ பிரயாணம் செல்கிறாயோ! எங்கிருந்து வருகிறாய்?

இப்போது என்னென்று பதில் கூறுவது? ஸ்திரீகளின் வழக்கப்படி தன் சங்கதிமுழுமையும் உள்ளது உள்ளபடி இவனிடம் கூறிவிட்டாலென்ன? வென்று சிந்தித்தாள். உடனே அடக்கமுடியாத துயரத்தால் கண்ணீர்விட்டு, "அய்யா என்னுடைய துயரத்தை யிவ்வளவென்று சொல்லமுடியாது. நான் அனாதை. எனக் குதவிசெய்தால் பெரும்புண்ணியம்" என்றாள்.

* * * * * * *

மண்டையில் பட்ட அடியால் ஆனந்தவிங் மூர்ச்சையாய் விழுந்து விட்டானென்று கூறினோமல்லவா; அவன் அக்குடிசைக்குள் பார்த்தபோது அங்கொருமூலையில் நெருப்பு எரிந்துகொண் டிருந்தது. அதைச் சுற்றிலும் கள்ளரனைவரும் கும்பாய் உட்கார்ந்து கொண்டு ஆத்திரத்தோடு பேசிக்கொண் டிருந்தார்கள். சாமிநாதன் மட்டும் அங்கில்லை. அவன் தன் மாளிகையிலேயே புத்தகசாலையில் உட்கார்ந்துகொண்டு அளவின்றி குடித்துக்கொண் டிருக்கிறான்.

கள்ளர் ஓடிவந்து ஆற்றோரத்தில் படகைக் கண்டதும் அதிலேறிக் கொஞ்சதூரம் ஆற்றுவாட்டத்தில் சென்று காட்டைக் கண்டு அங்கு படகைக் கரையில் போட்டுவிட்டு காட்டிற்குள் சென்றவர்கள் தற்செயலாய் அக்குடிசையைக் கண்டு மிக்க ஆயாசமடைந்திருப்பதால் இரவு அதில் தங்கியிருக்கத் தீர்மானித்தார்கள். பிறகு ஆனந்தவிங் அங்கு வரும்போது ஜக்கன் தற்செயலாய் குடிசைக்கு வெளியில் இருந்தான். ஆனந்தவிங் குடிசைக்குள் பார்த்ததைக் கண்டதும் பூனைபோல் பின்னால் சென்று தன் கைக்கோலால் அவன் மண்டைமேல் பலங் கொண்டமட்டும் நோக்கி யடித்துவிட்டான். அந்த அடியின் வேகத்தால் ஆனந்தவிங் ஒரு வார்த்தை கூட பேச முடியாமல் விழுந்துவிட்டான். அச்சத்தம் குடிசைக்குள் கேட்டதும் யாவரும் கலக்கமடைய அதற்குள் ஜக்கன் சமிக்கைசெய்ய யாவரும் வெளியில் வந்தார்கள்.

இரங்கநாதன் ஜக்கனை நோக்கி "யாரவன்? என்ன சங்கதி?" என்றான்.

ஜக்கன் "எனக்குத் தெரியாது. இவன் குடிசையின் பலகைச் சந்தில் உள்ளே பார்த்துக்கொண் டிருந்தான். நான் அதைக் கண்டதும் பின்னால் சென்று மண்டைமேல் ஒரு அடி கொடுத்தேன். இவன் யாரோ தெரியாது" என்றான்.

இரங்கநாதன் குனிந்து பார்த்து யோசனையோடு "இவன் அறிமுகமானவன் என்றே தோன்றுகிறது. ஏதோ வெளிச்சத்தி விழு பார்ப்போம்" என்றான். (தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

## பொது சமாசாரங்கள்.

ம-ா-ா-ஸ்ரீ, ராவ்சாஹேப் கிருஷ்ணராவ் போன்ஸ்லே—பாத்திர மறிந்து பரிசு—கவர்ன்மெண்ட் பரிகைஷ கமிஷனர் ஆபீஸ் மானேஜராக விருந்த ம-ா-ா-ஸ்ரீ ராவ்சாஹேப் கிருஷ்ணராவ்போன்ஸலே அவர்கள் அரியவேலை செய்ததைப் புகழ்ந்து துரைத்தனத்தார் அவருக்கிருந்த மானேஜர் என்ற உத்தியோகப் பெயரைமாற்றி கமிஷனரின் உதவிகாரியதரிசி (அஸிஸ்டெண்ட் ஸெக்ரிடெரி) என்ற உயர்ந்தபெயரை யளித்திருப்பதாய் அறிந்து மகிழ்ச்சி யடைகிறோம். இவருடைய உத்தம குணங்களையும் பாரபக்ஷமின்றிய நெறிதவறா நடக்கையையும், பொறுமை நிரம்பிய இனிய குணங்களையும் அறிந்த எவரும் இதைக்கேட்க மிக்க சந்தோஷ முறுவார்கள் என்பது திண்ணம்.

பத்திரிகைகளின் விர்த்தி:—

இந்தியாவில் பால இந்தியா (எங் இந்தியா) என்ற பத்திரிகைக்கு 1917ஸுல் 11,200 சந்தாதாரர்களும், இந்த வருட ஆரம்பத்தில் 25,000 சந்தாதாரர்களும் இருந்தார்கள்.

கேசரி பத்திரிகைக்கு. 40,000 க்கு அதிகம்.

அமெரிக்காவில் 10 லட்சம் சந்தாதாரர்களையுடையபத்திரிகைகள் சாதாரணம். ஜபானில் "ஒஸாகா—அஸாஹி" என்ற பத்திரிகைக்கு 7 லட்சம் சந்தாதாரர்களிருக்கிறார்கள்.

லண்டன் இல்லஸ்ட்ரேடட் பத்திரிகைக்கு முப்பது லட்சம் சந்தாதாரர்கள் உளர். அந்தோ நமது சென்னை இராஜதானியிலுள்ள பத்திரிகைகளின் நிலைமையென்ன?

ஓர் பெரிய இரயில் ஸ்டேஷன்:—

லண்டனில் புதிதாய் நிர்மாணிக்கப்பட்ட 'வாடர்லூ' என்ற ஸ்டேஷனே அங்குள்ள பெரிய ஸ்டேஷனும். அதன் விஸ்தீரணம் 26 ஏகர்—அதில் 21 மேடைகள் (பிளாட்பாரம்) உண்டு. அந்தஸ்டேஷனில் தினம் 1 லட்சத்து 36 ஆயிரம்பேர் பிரயாணம் செய்வோர் - பிரதிதினமும் அங்கிருந்து 1150 சாதாரண வண்டித்தொடர்கள் புறப்படுகின்றன. ஆனால் விசேஷதினங்களில் இவற்றோடு சுமார் 350 ஸ்பெஷல் வண்டித்தொடர்களும் புறப்பட்டு கின்றன. அங்குள்ள பெரியமேடையின் நீளம் 860 அடி. அங்கு பூமியின்கீழ் செல்லும் பாதைகள்மட்டும் மொத்தத்தில் மூன்றுமைல் நீளமிருக்கிறது. அந்த ஸ்டேஷன் மேல்கூரை கிட்டத்தட்ட 5 லட்சம் சதுர அடி விஸ்திரண முடையது. அதன்மேல் ஆயிரம் பாரம் கண்ணாடி பதியப்பட்டிருக்கிறது.

---

ஜீவிய சந்தாதாரர்கள்.

504. M. T. S. Natarajan Chetty,
Sevvur, (Ramnad.)

8638. Messrs. A. Sawminatha Mudaliar & Sons,
Park Town, Madras.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

துந்துபிஞு ஆவணிமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
பசலி 1331—கோல்லம் 1097-98—ஹிஜரி 1340—41
இங்கிலீஷ் 1922ஞு ஆகஸ்டுமீ—செப்டம்பர்மீ

| ஆவணிமீ | ஆகஸ்டுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | வியா | நவ22-40 | ரோ-42-15 | மர-60 | ஸ்ரீகிருஷ்ணஜயந்தி |
| 2 | 18 | வெ | தச21-28 | மிரு-42-8 | சித்-60 | கரிநாள் |
| 3 | 19 | சனி | ஏக18-15 | திரு-40-5 | சித்-60 | சர்வ ஏகாதசி |
| 4 | 20 | ஞா | துவ12-58 | புன-36-18 | சித்-60 | பிரதோஷம் |
| 5 | 21 | திங் | திர6-23<br>சது58-38 | பூச-31 ... | சித்-60 | விதை விதைக்க |
| 6 | 22 | செ | ● அ50-8 | ஆயி-24-48 | சித்-60 | சர்வத்திர அமாவாசை |
| 7 | 23 | புத | பிர41-10 | மக-17-58 | சி17-58 அ | கன்னியாயனம் நா56-25 |
| 8 | 24 | வியா | துதி32-15 | பூர-11-8 | சி11-8 மர | கல்கிஜயந்தி |
| 9 | 25 | வெ | திரி24-3 | உத்-4-20<br>அஸ்-58-18 | சித்4-20அ | சாமஉபாகர்மம் |
| 10 | 26 | சனி | சது16-8 | சித்-53-18 | ம53-18 சி | விநாயகசதுர்த்தி |
| 11 | 27 | ஞா | பஞ்9-28 | சுவா-49-25 | சி 49-25 ம | சஷ்டி சம்பா சஷ்டி |
| 12 | 28 | திங் | சஷ்4-5 | விசா-46-58 | ம-46-58சி | சூரிய சஷ்டி |
| 13 | 29 | செ | சப்0-8<br>அ57-43 | அனு-46-3 | சி46-3மர | தூர்வ அஷ்டமி |
| 14 | 30 | புத | நவ56-50 | கேட்-46-40 | சி46-40 ம | பிரயாணம் விலக்க |
| 15 | 31 | வியா | தச57-28 | மூல-48-45 | சித்-60 | கெஜலக்ஷ்மி விரதம் |
| 16 | 1922ஞு செப்டம்பர் 1 | வெ | ஏக59-8 | பூரா-52-13 | பி52-13 சி | ஸ்மார்த்த ஏகாதசி |
| 17 | 2 | சனி | து60 ... | உத்-56-55 | சித்-60 | வைஷ்ணவ ஏகாதசி |
| 18 | 3 | ஞா | து2-45 | திரு-60 ... | அமி-60 | பிரதோஷம் |
| 19 | 4 | திங் | திர7-5 | திரு-2-38 | அ2-38சித் | காதுகுத்த |
| 20 | 5 | செ | சது12-18 | அவி-9-10 | சி-10-58ம | இரவில் தனியநாள் |
| 21 | 6 | புத | ○ 18-13 | சதை-16-30 | சி16-30அ | மாளயபக்ஷம் ஆரம்பம் |
| 22 | 7 | வியா | பிர24-48 | பூரட்-24-18 | சித்60 | |
| 23 | 8 | வெ | து31-8 | உத்-32-3 | சித்-60 | |
| 24 | 9 | சனி | திரி37-23 | ரேவ-39-45 | பி39-45 சி | |
| 25 | 10 | ஞா | சது43-23 | அசு-47-3 | சி47-3 பிர | |
| 26 | 11 | திங் | பஞ்48-17 | பர-53-18 | சி53-18ம | |
| 27 | 12 | செ | சஷ்51-58 | கிரு-58-20 | சி58-20 அ | |
| 28 | 13 | புத | சப்54-0 | ரோ-60 ... | சித்60 | |
| 29 | 14 | வியா | அஷ்54-8 | ரோ-1-45 | மர-60 | |
| 30 | 15 | வெ | நவ52-28 | மிரு-3-28 | சித்-60 | |
| 31 | 16 | சனி | தச48-43 | திரு-3-3 | சித்-60 | கன்னிரவி நா 15-5 |

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| | 12உகன்-பு<br>14தனு-செ<br>15-துலா-சு | | |
| | | | கு<br>பு |
| | செ | | சு-கு<br>ச-ரா |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini Power Press, 15, Vekatasa Maistry St. Madras.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 8 } துந்துபி௵ ஆவணி௴ ௧௨ 1922௵ ஆகஸ்டு௴ 17௳ { பகுதி 2

## கடவுள் வணக்கம்.

ஐந்து பூதமொரு கான னீரென
வடங்க வந்தபெரு வானமே
ஆதி யந்தமடு வேத மின்றியரு
ளாய்நி றைந்திலகு சோதியே
தொர்த ரூபமுட னருப மாதிகுறி
குணமி றந்தவளர் வஸ்துவே
துரிய மேதுரிய வுயிரி னுக்குணர்வு
தோன்ற நின்றருள்சு பாவமே
எந்த நாளுமடு வாகி நின்றொளிரு
மாதியே கருணை நீதியே
எந்தை யேயென விடைந்தி டைந்துருகு
மெளிய னேன்கவலை தீரவும்
சிந்தை யானதை யறிந்து நீயுனருள்
செய்ய நானுமினி யுய்வனோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

---

வம்பனேன் கள்ளங் கண்டு மன்னருள் வெள்ள மாய
உம்பர்பா லேவல் செய்யென் றுணர்த்தினை யோகோ வானோர்
தம்பிரா னேநீசெய்த தயவுக்குக் கைம்மா றுண்டோ
எம்பிரா னுய்ந்தே னுய்ந்தே னினியொன்றுங் குறைவிலேனே.

குறைவிலா நிறைவாய் ஞானக் கோதிலா னந்த வெள்ளத்
துறையிலே படிந்து மூழ்கித் திளைக்குநாள் றென்று வாறன்
னுறையிலே யுணர்த்தி மோன வொண்சுடர் வைவா டந்த
இறைவனே யுனைப் பிரிந்திங் கிருக்கிலே னிருக்கி லேனே.

## அரும் பொருள் விளக்கம்.

1. ஐந்து பூதங்கள்:=பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற பஞ்சபூதங்கள். கானல் நீர்=கானலில் பொய்யாய்த் தோன்றும் நீர் அதாவது, கோடைகாலத்தில் ஊஷரபூமியில் தோன்றும் பேய்த்தேர். ஒருவஸ்து உண்மையில் இல்லாத வேறொரு வஸ்துபோல் தோன்றுவதாகிய ஆரோபத்திற்கு, கானல் நீரும் ஒரு திருட்டாந்தம். கயிறு பாம்புபோல் தோன்றுவதும், கிளிஞ்சில் வெள்ளிபோல் தோன்றுவதும், ஆகாயத்தில் தாமரைபோல் தோன்றுவதும் ஆரோபத்திற்குத் திருட்டாந்தங்களேயாம்.

ஐந்துபூதமொரு...பெருவானமே—கானல் நீர்போல் ஆரோபத்தால் பஞ்சபூதங்களும் தோன்றி யொடுங்குவதற்குக் காரணமாகிய பெரிய ஆகாயமே.

அலை திவலை நுரையாதிய யாவும் கடலில் தோன்றி, இருந்து, கடலிலேயே இலயமாவதுபோல் பிரபஞ்ச மனைத்தும் சர்வ வியாபக சச்சிதானந்த சொரூபமாகிய பரம்பொருளிடத்தே ஆரோபத்தால் தோன்றி பரம்பொருளிடத்திலேயே ஒடுங்குவதால் அவ்வாறு கூறினர்.

“ஆதியந்த நடுவேது மின்றி”=ஆதிமத்தியாந்த ரகிதமாய். இது ஆண்டவனது நித்தியத்துவத்தை யுணர்த்துவதாம். அருளாய் நிறைந்திலகு=அருளே திருமேனியாகக் கொண்ட. ‘சோதியே’ என்றது சித்துத் தன்மையை யுணர்த்துகிறது. தொந்தரூப...இறந்து வளர் வஸ்துவே=உருவம் அருவம் ரூபாரூபம் என்ற பாகுபாடுகளைக் கடந்ததும், இன்னகுண முடையது இன்னகுறி யுடையது என்று விவகரிக்கக் கூடாததுமாகிய பொருளே.

துரியம்.=சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி ஆகிய மூன்றவத்தைகளுக்கும் அப்பாற்பட்ட துரியாவஸ்தை - அது ஸ்மரணையற்றுள்ள மூர்ச்சை முதலிய நிலைமைகளிலுள்ள அவஸ்தை. அந்த அவஸ்தையில் ஆன்மா நாபித்தலத்தி லிருக்கும். ஆன்மா தேகத்தைவிட்டு நீங்கும் போது இந்த வழிகடந்தே செல்கிறது. அதைக்கடந்தால் ஆன்மா மறுபடி தேகத்திற்குள் திரும்புவதில்லை. இது அஞ்ஞானவஸ்தை அல்லது கீழாலவஸ்தைகளில் ஒன்றும்.

மேலாலவஸ்தை அல்லது ஞானநிலையிலும் துரியம் என்ற நிலையொன்றுண்டு. அது தன்மை முன்னிலையற்று தற்போத மொழிந்த நிஷ்டை நிலையாகும். இந்த மகானே "சின்மயானந்த குரு" வில்.

"கூடுதலுடன் பிரிதலற்று நிர்த்தொந்தமாய்
* * * * * * "
என்று தொடங்கி,
"தேடுதலு மற்றவிடம் நிலையென்ற மௌனியே"

என்று முடித்திருக்கும் பாசுரத்தில் கூறியுள்ள நிலையே இந்த நிலையாம்.

2. வம்ப...கண்டும்=துஷ்டனாகிய எனது கள்ளத்தனத்தையறிந்திருந்தும்.

மன்னருள்...உணர்த்தினை=அருட்கடலாகிய தேவரீரது தொண்டனாக அடியேனை ஏற்றுக்கொண்டீர்.

எப்போது உமது தொண்டனாகும் பேறு பெற்றேனோ இனி யொன்றும் எனக்குக் குறைவில்லை. எதையும் வேண்டாத பெருஞ் செல்வமாகிய முத்திப்பே றடைவேன் என்றபடி.

3. குறைவிலா......மூழ்கி—அகண்ட பரிபூரண ஞானனந்த வெள்ளத்தில் மூழ்கி

---

# ஆனந்தபோதினி

துந்துபிஞு ஆவணிமீ கூ

## பத்திரிகாபிமானம்.

சகோதர சகோதரிகளே! இப்பூவுலகில் வாழும் மானிடர்களுக்குப் பல விஷயங்களில் அபிமானம் இருப்பது இயற்கை. இவற்றில் மதாபிமானம், பாஷாபிமானம், தேசாபிமானம், ஜாதியபிமானம், குலாபிமானம் என்பன முக்கியமானவை. ஆனால்

இவையொவ்வொன்றும் அதனதன் வரையில் ஒரு வரம்புள்ளது. மதாபிமானம் தன் மதத்திலும் தன் மதத்தினர் மட்டிலுமே யிருக்கும். இவ்வாறே ஒவ்வொன்றும். ஈண்டு நாம் கூறக் கருதும் பத்திரிகாபிமானம் எல்லாச் சாதியாரிடத்திலும், எல்லா மதத்தவரிடத்திலும், எல்லா நாட்டினரிடத்திலும் இருக்கத்தக்க ஒன்ருகும்.

இக்காலத்தில் பத்திரிகைகளின்மேல் அபிமானம் ஒவ்வொருவருக்கும் இருக்கவேண்டியது அவசியமாகும். ஏனெனில் ஒரு தேசம் முன்னேற்ற மடைவதற்குப் பத்திரிகைகள் முக்கியமான சாதனங்களில் ஒன்ருக விருக்கின்றன. பத்திரிகாபிமானத்தில் கல்வி யபிவிர்த்தியும் அடங்கியே யிருக்கிறது. ஒருவர் சாதாரணக் கல்வியேனும் கற்றிருந்தால்தான் பத்திரிகை வாசிக்கலாகும். செல்வம், நாகரீகம், பலம் முதலியவை பெற்று முன்னேற்ற மடைந்திருக்கும் எந்த நாட்டிலும் பத்திரிகாபிமானம் பூரணமாய் வளர்ந்தோங்கி யிருக்கக் காணலாம்.

ஒரு நூலை வாசித்தால் ஏதோ ஒரு விஷயத்தைப்பற்றி மட்டுமே உணரலாகும். பத்திரிகைகளை வாசித்தால் இகபர சாதனங்களுக்கு வேண்டிய சகல விஷயங்களையும் அறிந்துகொள்ளலாம். ஒரு தேசம் க்ஷேம நிலை யடைவதற்கு அத்தேசத்தார் என்ன செய்யவேண்டும் என்பதைப் பத்திரிகைகள் போதிக்கின்றன. உலகிலுள்ள முக்கியமான தேசங்களுக்குச் சென்று நேரில் யாவற்றையும் பார்த்தால் அந்தந்த நாட்டாருடைய ஆசார ஒழுக்கங்களையும், விசேஷ குணங்களையும், அவர்கள் எத்தகைய நடக்கைகளால் முன்னேற்ற மடைந்தார்கள் என்பதையும் அறியலாகும். ஆனல் எல்லாராலும் அவ்வாறே போய்ப் பார்த்துவர முடியாது.

பத்திரிகைகளை வாசிப்பதால் அத் தேசங்களைப் பாராமலே மேல்கண்ட விஷயங்களை யெல்லாம் அறியலாகும். முன்னேற்ற மடைந்துள்ள இங்கிலாந்து, ஜபான் முதலிய நாடுகளில், தாழ்ந்த தொழில் செய்வோர்கள்கூட, இருவர் மூவர் சேர்ந்தேனும் ஒரு பத்திரிகையை வாசிக்காம லிரார்கள். வீட்டில் சமையல் செய்பவன், வீடு சுத்தம்செய்யும் மாது, வண்ணன், நாவிதன், மூட்டை தூக்கும் கூலியாள், ரிக்ஷாவண்டி யிழுப்போன், தோட்டி வேலை செய்வோன் இவர்க ளனைவரும் கூட தினம் பத்திரிகைகளை வாசிக்காம லிருக்க மாட்டார்கள். ஏனெனில் அவர்களுக் கெல்லாம்

தேசட்சேமத்தில் கருத்திருக்கிறது. ஆகையால் "நமது தேசத்தைப்பற்றிய விஷயங்கள் எப்படி நடைபெறுகின்றன; நம் தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு இடையூறின்றி, அதன் அபிவிர்த்திக்கு அனுகூலமாக விவகாரங்கள் நடைபெறுகின்றனவா?" என்றறிவதில் கண்ணும் கருத்தும் வைத்து நடக்கிறார்கள். அவர்களிடம் உண்மையான தேசாபிமானமும் தேசபக்தியும் இருக்கின்றன- அதனாற்றான் அவர்கள் தினம் பத்திரிகைகளை வாசிப்பதோடு, தேசத்தில் பத்திரிகைகள் அபிவிர்த்தி யடையவேண்டுமென்ற நோக்கத்தோடு பத்திரிகைகளை யாதரித்து வருகிறார்கள். இதனால் அவர்கள் செல்வமும், புகழும், அன்னியரால் மதிப்பும் பெற்று உன்னத நிலையி லிருக்கிறார்கள்.

பத்திரிகைக ளெல்லாம் தாய்நாடு முன்னேற்ற மடையவேண்டுமென்ற பொதுநல நோக்கங் கொண்டே வெளியிடப்படுகின்றன. ஒருவன் இலாபம் பெறும் நோக்கத்தோடு ஒரு பத்திரிகையைப் பிரசுரம்செய்து வருவதாக விருந்தாலும், அவனும் அப்பொதுநலத் தொண்டைச் செய்தே தீருகிறான். ஆயிரக்கணக்கான பத்திரிகைகளைப் பிரசுரித்து பல்லாயிரம் பேருக்கனுப்புவதெனின் அது பணச் செலவின்றி நடக்கிற காரியமல்ல. இது மூடனும் அறிந்த சங்கதியே. இச் செலவிற்காகவே அந்தந்தப் பத்திரிகைக்குத் தக்கபடி சந்தா ஏற்படுத்தப்பட் டிருக்கிறது. இதனால் பத்திரி காலயங்களில் தொழில்செய்வோர் ஜீவிக்கிறார்கள்.

நம் தாய் நாட்டிற்கு நன்மை யளிக்கும் வழியில் ஊழியம் செய்யும் சிலர் அதனால் தங்கள் ஜீவனத்தை நடத்துவது ஒரு பெரிய காரியமல்ல. அது அகௌரமாவது குற்றமாவது பாவமாவது உண்டாக்கும் காரியமுமல்ல. அவர்கள் தொழிலால் நம் நாடு முன்னேற்ற மடைவதே முக்கியமான விசேஷம்.

அந்தோ இதை யறியாத மந்த மதியினர் சிலர் இன்னும் நம் நாட்டிலிருப்பது மிக்க விசனிக்கத் தக்க விஷயமே. இவர்கள் "அட! அவன் ஜீவனம் செய்ய, 'அவன் போனான், இவன் வந்தான், அங்கே சண்டை போட்டார்கள். இங்கே இப்படி நடந்தது.' என்று எதெதையோ ரெண்டெழுதிப் பத்திரிகைகளைப் பிரசுரிக்கிறான். வேலையற்றுப்போய் அதற்குக் காசு கொடுத்து நாம் ஏன் வாங்கிப் படிக்கவேண்டும்? அந்த காலத்தில் நம் வேலையைக்

கவனித்தால் நாலுகாசு சம்பாதிக்கலாம்'' என்று உளறுவதோடு பத்திரிகை சஞ்சிகை முதலியவற்றை வாங்கி வாசிக்க முயல்வோரையும் கெடுக்கத் தொடங்குகிறார்கள். அறிவாளிகள் இத் தகையோரைக் கண்ட விடத்தில் கண்டித்து அறிவுறுத்துவது அவசியமாகும்.

நம் நாட்டில் பத்திரிகாபிமானம் எவ்வளவோ குறைவா யிருக்கிற தென்பது பல அத்தாட்சிகளால் நன்கு விளங்குகிறது. இதுவே நம் நாட்டின் முன்னேற்றத்திற்கு முக்கிய இடையூறு யிருக்கிறது. இது போதாதென்று நம் நாட்டிலேயே வெளி வரும் பத்திரிகைகளில் இரண்டொன்று அனுவசியமான கட்சிப் பிரிவினைகளை யுண்டாக்கி, நமக்குள்ளாகவே ஒரு வகுப்பார்க்கும் மற்றொரு வகுப்பார்க்கும் துவேஷத்தை யுண்டாக்கி, நம் தாய் நாட்டின் முன்னேற்றத்தைத் தடுக்க நினைப்போர்க்கு உதவி செய்கின்றன.

முதலில் ஜாதி சம்பந்தமாகவோ வகுப்பு சம்பந்தமாகவோ இரண்டு கட்சியாகப் பிரிந்தால், பிறகு ஒவ்வொரு கட்சியிலும் பல உள் கட்சிகள் ஏற்பட்டு ஒற்றுமை யடியோ டழிகிறது. இத்தகைய கட்சிபேதம் ஒருபோதும் நன்மையை யளிக்காது.

நாம் முன்னேற்ற மடைவதால் தங்கள் வருவாய்க்கும் செல்வாக்குக்கும் பழுது நேரிடுமென்று அஞ்சுவோர் நம்மை முன்னேற வொட்டாது தடுக்க முயல்வது உலகில் சுய நலத்தையே பிரதானமாகக் கருதுவோர்க்கு இயற்கையாகும். ஆனால் தன் குலத்தை யழிக்கும் இரும்புக் கோடரிக்குத் துணையாய்த் தலையை யதற்குள் மறைத்துக்கொண்டு, தன் குலத்தையே யழிக்க உதவி செய்யும் சண்டாளக் கோடரிக் காம்புகளை யென்னென்று கூறுவாம். அந்தோ! இவைகள் "எங்குமுள ஒருவன் காணுங்கோல்" என்று கருதுவதில்லைபோலும். இது நிற்க, தனி மனிதரிலும் இத்தகைய கோடரிக்காம்புக ளிருக்கின்றன. இவைகள் "எந்த நாட்டை யார் ஆண்டாலென்ன. தற்சமயம் நமக்கு நல்ல ஆதாயங் கிடைத்தால் போதும்" என்று கருதி யவ்வாறு நடக்கின்றன.

இவைகள் நிலைத்து நடைபெறுதற்குக் காரணம், விவகாரத்தை யுள்ளவாறெடுத்துப் போதித்து எச்சரிக்கை செய்யப் போதுமான பத்திரிகைகள் நாட்டில் பரவாததே யாகும். அதாவது பத்திரிகாபிமானக் குறைவே. அந்தோ! படித்துப் பட்டம்

கள் பெற்றவர்களிலேயே அனேகர்க்கு இந்த அபிமானமில்லை யெனின் பாமரரைப்பற்றி நாம் குறை கூறுவதெங்ஙனம்? இவர் களுக்குத் தாய் நாட்டின் க்ஷேமத்தில் அபிமான மில்லாததால் அதற்குச் சாதகமான விஷயங்களிலும் அபிமான மில்லாமற் போகிறது. "எனக்குப் பத்திரிகை வாசிக்கவே அவகாசமில்லை யாதலால் வீணே யேன் வாங்கவேண்டும். ஆகையால் இனி யனுப்ப வேண்டாம்" என்று மனங் கூசாது, மதி கூசாது, வாய் கூசாது எழுதியும் கூறியும் விடுகிறார்கள். அந்தோ இத்தகையோர் உயர்தரக் கல்வி கற்பதற்குப் பட்ட கஷ்டமும் கழித்த காலமும் போதாமல், மிச்சமுள்ள வாழ்நாட்களில் தினம் அறுபதுநாழிகை களையும் பொருள் தேடுவதிலும் மற்றகேளிக்கைகளிலும் கழிப் பதுதான் இப்பிறவியால் நாம் அடையவேண்டிய பயன் என்று கருதுகிறார்கள் போலும்.

இவர்களில் சிலர் ,"டமில் (தமிழ்) பேபர்கள் படிப்பதில் இன்டரெஸ்ட் (விருப்பம்) இல்லை" என்று ("என்னைப் பெற்ற தாயாரோடு பேச எனக்கு விருப்பமில்லை" என்பதுபோல்) கூறி விடுகிறார்கள். இது யாவற்றினும் மிக்க விசனிக்கத்தக்க விஷயம்.

அந்தோ! கல்வியில்லாப் பாமரர்களுக்குப் புத்தி புகட்டிப் பத்திரிகைகளின் பிரயோசனத்தைப் போதிக்க வேண்டிய இவர் களே பத்திரிகைகளையும் தாய்ப்பாஷையையும் இவ்வாறு அவ மதிப்பதாயின், இது யார்செய்த பாபமென்பது? மற்ற நாடுகளில் உண்டாகும் கல்வி யபிவிர்த்தி, அந்நாட்டு ஜனங்களுக்குத் தேசாபி மானம், பாஷாபிமானம், தன் மதிப்பு, தன்னம்பிக்கை, முதலிய வற்றை யுண்டாக்கி நாட்டின் முன்னேற்றத்திற்குக் காரணமா யிருக்கிறது. அந்தோ நம்நாடு செய்த பூஜாபலம் இங்குள்ள கல்வி மேற்கண்டவற்றிற்கு நேர்மாறான பலனை யளிக்கிறது. இதுவும் கலிகாலக் கொடுமையே.

கல்வியால் நம் நாட்டார் மட்டும் இத்தகைய மாறான பல னடைவதன் காரணம் யாது? நமது நாட்டார்க்கு அறிவுகுறைவா? எல்லா வித்தைகளிலும் கஷ்டமானதாகிய பிரம்ம வித்தை பிறந்தவிடம்-அறிவை யறிவதே பொருள் என்ற இரகசியத்தை யுணர்ந்தோர், பிறந்தநாடு-பிரம்மஞானிகள் மலிந்தநாடு-இந்நாட்டி னர் அறிவிற் குறைந்தோர் என்று கருதுவது முற்றும் அறியாமை யாகும். அப்படியிருக்க, மற்ற நாட்டார்கள் கல்வியால் நற்பயன்

களை யடைய இவர்கள் மட்டும் ஏன் இப்படி மாறுன பலன்களை யடையவேண்டும்? இதற்குக் காரணம் ஒன்றேதான்.

பழங்களின் தன்மையால் மரத்தின் உயர்வு தாழ்வை யறிய லாகும். நமதுநாட்டில் போதிக்கப்படும் கல்வியும், அது போதிக் கப்படும் முறைமையுமே இதற்குக் காரணமாகும். கல்வி கற்பதன் நோக்கம் அதமமாகிய சேவகாவிர்த்தி செய்வதே என்ற அபிப் பிராயமே நம்மவர்களுக்குள் படிந்துபோ யிருக்கிறது. இதை யடியோடு மாற்றத்தக்கவிதமாகக் கல்விமுறை மாற்றப்படவேண் டும். இப்போதிருக்கும் கல்விமுறை அறிவாளிக ளனைவராலும் அடியோடு கண்டிக்கப்படுகிறது. இதைப்பற்றி "இந்தியாவிற்கு வேண்டிய தற்காலக் கல்வி" என்ற தலைப்பின்கீழ் வேறொரு பக்கத்தில் கூறப்பட்டிருப்பதை நேயர்கள் அவசியம் கவனிக்கக் கோருகிறோம்.

நாட்டில் ஆங்கிலத்திலும் தேசபாஷைகளிலும் பத்திரிகைகள் வெளியாகின்றன. ஆனால் நமது இலௌகிக வைதீக ஆசார ஒழுக் கங்கள், ஆன்மார்த்த விஷயங்கள் முதலியவைகள் நமது தாய்ப் பாஷைப் பத்திரிகைகளில்தான் பெரும்பாலும் வெளியாகின்றன. அந்தோ ஆங்கிலங் கற்ற நம்மவர்களுக்கு தாய்ப்பாஷை மிக்க இழிவாய்த் தோன்றுகிறது. இதனால் தாய்ப்பாஷைப் பத்திரிகை கள் நம் நாட்டில் ஆதரவை பெறுமல் நசித்துப் போகின்றன. கல்விகற்ற அறிவாளிகள் நமது தாய்நாட்டின் க்ஷேமத்தையும், தாய்ப்பாஷையின் க்ஷேமத்தையும் கருதி, இனியேனும் தாய்ப் பாஷைப் பத்திரிகைகளை யாதரிக்க வேண்டுமென்றும், மற்றைய ருக்கும் அறிவுருத்தி அவ்வாறு செய்யும்படி தூண்டவேண்டு மென்றும் வேண்டிக்கொள்கிறோம். எல்லாம் வல்ல பரம்பொருள் அருள் புரியப் பிரார்த்திக்கிறோம். ஓம் தத் ஸத்.

---

## தீண்டா உரிமை.

திருவருளே திருமேனியாகக்கொண்ட இறைவனுல் சிருஷ்டிக்கப்பட்ட மானிடரின் ஜாதி வரம்பை உற்று நோக்குங்கால், ஆண் ஜாதி பெண் ஜாதி யென இரண்டு ஜாதியாரே யன்றி, மூன்ருவதாக வேற்று உருஉடை ஜாதியார் உலகத்து யாண்டேனும் வாழுவதாக யாம் கண்டும் கேட்டு மிலோம். ஜாதி வேற்றுமையானது தொழில் புரிவதனுல் ஏற்பட்டதென்று உணர்ந்த யாம், இன்னுர் இன்ன தொழில்தான் புரியவேண்டுமெனும் வரம்

யில்லா இக்காலத்தில் ஜாதித் துவேஷம் பாராட்டுவது அறியாமையே யாகும்.

மேலும் தீண்டா ஜாதியாரென யாம் மதிப்பவரிடத்து தீய வொழுக்கம் காணப்படுதலின் அவர்களை தீண்டோமெனும் கொள்கை யிருப்பின், நமது புதல்வர்கள் தீய வொழுக்கங்களில் பயிலுவதைக் கண்ணுற்ற யாம் அவர்களை நற்போதனையால் தீய வொழுக்கத்தினின்றும் அறவே அகற்றிச் சீர்திருத்தி நன்னெறியில் செலுத்தும் கொள்கைபோல், தீண்டா ஜாதியாரையும் தீண்டும் ஜாதியாராக்கிச் சேர்ந்து வாழ்வதே நம் கடமை யென்றுணர்க." இக்கடமையை இதுகாறும் செய்யத் தவறியதனாலன்றோ நம் சகோதரர்கள் நம் மதத்தை விட்டகன்று ஏனைய மதத்தை நாடி அடைந்து நம் மதமும் நாளடைவில் குன்றலாயிற்று: பாரத சகோதரர்களே! தீண்டா ஜாதியாரென நாம் மதிப்பவர்களுக்குள்ளே, கல்விமான்களையும் செல்வவந்தர்களையும் உத்தியோகஸ்தர்களையும் மட்டும் கைகுலுக்கி சம்பாஷித்து ஆசனத்திருத்தி அன்புடன் உபசாரம் செய்யும் நாம் அந்நவர்களின் பந்துமித்திரர்களைத் தீண்டோமெனல் வஞ்சகமன்றோ.

மேலும் நாம் அவதார புருஷர் என நன்குமதிக்கும் பரோபகார சிந்தனையிலேயே பொழுது போக்குகின்றவரும், சிறைச்சாலையே தவச்சாலையாகக் கொண்டருளியவருமாகிய "மகாத்துமா காந்தி யடிகளும்" கௌதம சித்தார்த்த சாக்கிய முனிவரும், பிரமஞ் ஞானத்தலைவர்களும் தீண்டாமை யெனும் மாயப்பிசாசை அறவே அகற்றவேண்டு மென்றும் கூறிய உபதேசவாக்கியங்களை வேதவாக்கியமாய்க் கடைப்பிடித்து ஒழுகவேண்டும்.

தேசாபிமானிகளே! ஆழியை ஆடையாகவும், இமய பருவதத்தைக் கிரீடமாகவும் அணிந்த பாரத மாதாவின் வயிற்றிற் பிறந்த நாமெல்லோரும் தத்தம் பாஷைகளிலும் நடை யுடை பாவனைகளிலும் வேறுபாடுடையவராயினும் மதாபிமானத்தாற் ஒரே தாயின் வயிற்றிற் பிறந்த சகோதரர்களைப் போல் ஒற்றுமையுடன் வாழ எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

A. சிதம்பரம் பிள்ளை,
பூதப்பாண்டி.

குறிப்பு:—உலகில் உள்ள தேசங்களில் நமது நாட்டிலேயே ஜாதி பேதம் இருப்பதாகவும் அதனாலேயே நம்மிடம் ஒற்றுமையில்லை யென்றும் குறை கூறப்படுகிறது. ஆனால் உண்மையில் ஜாதிபேத மில்லை யென்றும் யாவரும் ஒரே சகோதரபாவமாக இருப்பதாகவும் கூறப்படும் மேல் நாடுகளிலும் ஜனசமூகத்திற்குள் உயர்வு தாழ்வு முதலிய பேதங்கள் இல்லாமலில்லை. இதிலுள்ள வித்தியாசம் யாதெனின்:—

நமது நாட்டில் ஆதியில் எல்லாம் ஒரேஜாதியா யிருந்து பிறகு தொழிலாலும் ஆசார பேதத்தாலும் ஜாதிபேதம் ஏற்பட்டது. அந்த பேதம்

செல்வம் அந்தஸ்து முதலியவற்றால் மாறுத லடைவதில்லை. ஒரு வண்ணான் கோடீஸ்வரனாகி விடினும், உயர்ந்த பதவியடையினும் அவன் மேல் ஜாதியாக முடியாது, வண்ணான் வண்ணானே.

மேல் நாட்டிலோ அந்தஸ்தாலும் செல்வத்தாலும் மிக்க உயர்வு தாழ்வான பேதங்கள் அனுபவத்தில் காணலாம். பிரபு குடும்பத்தில் ஜனித்த ஒருவன் ஒரு வர்த்தகனுடைய புத்திரியை மணப்பதாயின் ஏறக்குறைய ஜாதிப்பிரஷ்ட மடைந்தவன் போலவே நடத்தப் படுவான். மிக்க இழி தொழிலைச் செய்யும் தாழ்ந்த குடும்பத்தில் பிறந்த ஒருவன் செல்வம் அல்லது அந்தஸ்தை யடைந்தால் அவன் உயர் வகுப்பினராகிய பிரபுக்கள் குடும்பத்தோடு சமமாய் விடுகிறான். அதாவது அவர்கள் நிலையற்றனவாகிய செல்வம் அந்தஸ்து இவைகளால் உயர்வு தாழ்வு கவனிக்கிறார்கள். நமது நாட்டில் ஒருவன் எவ்வளவு செல்வம் அந்தஸ் துடையவனாயினும் தன் இனத்தில் மிக்க ஏழையின் குடும்பத்தில் சம்பந்தம் செய்துகொள்ளப் பின்னிடையான். நாம் வாக்காலும் ஜாதிபேத முடையவர்கள் என்று கூறிக் கொள்கிறோம். செய்கையிலும் அவ்வாறே நடந்து கொள்கிறோம். மேல் நாட்டாரோ வாக்கால் ஜாதிபேதமில்லை, தீண்டாமை யில்லை யென்று பறையறைகிறார்கள். ஆனால் அனுபவத்திலோ பூரண பேதமுடையவர்களாகவே நடந்து கொள்கிறார்கள். எத்தனையோ ஐரோப்பியர் கறுப்புமனிதரைத் தீண்டலாகா தென்று கட்டுப்பா டுடையவர்களாக விருக்கிறார்கள். கறுப்பு மனிதர்களோடு கைகுலுக்க லாகாதென்று தம் மக்களுக்குப் போதிக்கிறார்கள்.

நமது நாட்டிலோ தற்காலத்தில் ஜாதி யாசாரம் என்பது பேச்சுமட்டுமாக விருக்கிறதே யன்றி அனுபவத்தில் தேய்ந்து கொண்டே போகிறது. ஒவ்வொரு ஜாதியாரும், தம் ஜாதி வரம்புகடந்து எத்தொழிலையும் செய்கிறார்கள். சாதாரணமாய் இப்போதிருக்கும் சிற்றுண்டிக் கடைகளாகிய காபிகிளப் என்ற விடங்களில் போய்பார்த்தால் இதற்கு முதல்தரமான அத்தாட்சி காணலாம். நகரங்களி லெல்லாம் தீண்டாமை யென்பது அனுபவத்தி லில்லவே யில்லை—அப்படி யிருந்தும் அந்தோ! நாம் "பெரிய எருமை பேரெடுத்தது" என்ற பழமொழிபோல் வாயால் தீண்டாமை தீண்டாமையென்று கூறிக்கொண்டு தாய்நாட்டின் முன்னேற்றத்திற்குப் பெரிய இடையூறு விளைவித்து வருகிறோம். நம் நாட்டு அறிவாளிகள் தீண்டாமையை யொழிக்க வேண்டியது நம் முன்னேற்றத்திற்கு இக்காலத்தில் அத்தியாவசியமான தென்று கூறுகிறார்கள். நம் தேசமகாசபையே யப்படிகூறும் போது நாம் இன்னும் அதை யொழிக்காதிருப்பது தருமமாகுமோ.

பாரதமாதாவாகிய ஒரேதாயின் கருப்பத்திலுதித்த நமது சகோதரரில் ஒரு வகுப்பாரை நாம் தீண்டக்கூடாத தாழ்ந்த ஜாதியாரென்று கருதி நடத்துவது நீதியாகுமோ? அது பிரிவினையையும் ஒற்றுமைக் குறைவை

யும் உண்டாக்குகிற தென்பதும், அதனால் தீங்கே விளையுமென்பதும் அனுபவமாகத் தெரிகிறதன்றோ. நாம் அப்படி நீக்கிவைத்ததால் அந்நியமதஸ்தர்கள் அவர்களை வசப்படுத்தித் தங்கள் மதத்திற்கு இழுத்துக் கொண்டார்கள் - இன்னும் இழுத்துக்கொண்டே யிருக்கிறார்கள். இதனால் மதத்தை உயிரினும் சிறந்ததாக மதிக்கும் நாம் நமது உன்னதமதம் - ஒப்புயர்வற்ற மதம், க்ஷீணதசை யடையச்செய்யும் பாதகத்திற் குள்ளாகிறோம். அந்தோ இது உண்மையில் பாதகமன்றோ ?

தாழ்ந்தவகுப்பார் என்று கருதப்பட்டவர்களே புறச்சமயத்திற் சேர்ந்து சற்று சுத்தமான உடையணிந்துகொண் டிருந்தாலும், செல்வமோ அந்தஸ்தோ அடைந்து மேல் நாட்டார்போல வேடமணிந்து கொண்டாலும், அப்போது மட்டும் அவர்களோடு கைகுலுக்கி யவர்களை மரியாதையோடு நடத்துகிறோம். நாமே யேன் அவர்கள் கல்வியும் ஆசார சீர்திருத்தமும் அடையும்படி செய்து அவர்களைச் சகோதரர்கள்போல் நடத்தலாகாது. இக்காலத்தில் நம் தாய்நாட்டின் க்ஷேமத்திற்காக அவ்வாறு செய்ய வேண்டியது அத்தியாவசிய மாகிறது.

தாழ்ந்த வகுப்பாரைச் சமநிலைமைக்குக்கொண்டு வரவேண்டுமென்றே இப்போது எங்கும் முயற்சி எடுத்துக்கொள்ளப் படுகிறது. இச்சமயத்தில் அவர்களும் மனப்பூர்வமாய் இதில் கலந்து சகோதரபாவமாய் ஒற்றுமையோ டொழுக வேண்டும். கட்சிப் பிரிவினையிலாவது, மேல் ஜாதியாரென்று சொல்லிக் கொள்கிறார்களே யென்று துவேஷங் கொண்டு ஒரு வகுப்பாரைத் தூஷிப்பதிலாவது தலையிடலாகாது. சகோதரர்களே! கட்சிப் பிரிவினையே ஒற்றுமைக்குச் சத்துருவென்றும், கட்சிபேத முண்டாக்கும் எந்த விஷயமும் துன்பத்தையே யளிக்குமென்றும் பூரணமாக நம்புங்கள். சிநேகத்தாலும் இன்சொல்லாலும் எந்த காரியமும் ஜெயமாகும். துவேஷத்தாலும், தூஷணையாலும் ஒற்றுமை குலைந்து துன்பமே உண்டாகும் என்பது சத்தியம். எந்த அறிவாளியும் இதை மறுத்துக் கூறான்.

ஒருவன் தன் எதிரியை வெல்வதற்காக அவனது ஆட்களுக்குள் பிரிவினையை யுண்டாக்குவது ஒரு தந்திரம். கெட்டகாலத்தால் நமது நாட்டில் நம்மவர்களிலேயே சிலர் அத்தகைய காரியத்தைச் செய்து, அறிந்தோ அறியாமலோ நமது முன்னேற்றத்திற்கு இடையூறு செய்யக் கருதுவோர்க்கு உதவி செய்கிறார்கள். தாய்நாடு க்ஷேமமடைய வேண்டும் என்று உண்மையாகக்கருதும் எவரும் அத்தகைய விஷயங்களில் தலையிடார்கள்.

இனியேனும் நாம் சற்றும் பேதபுத்தியின்றி எல்லா வகுப்பாரோடும் சகோதரபாவமாய் ஒழுகி முன்னே இத்தீண்டாமை யென்னும் பேயை யடியோ டொழிக்க முயல்வோமாக. பொது நலத்திற்கென்று ஆங்காங்கு கூடியிருக்கும் சங்கங்களின் அவயவிகள் இவ் விஷயத்தைப்பற்றி ஜனங்களுக்குப் போதிக்க வேண்டும். கருணையங்கடலாகிய பரமன் அருள்புரிவாராக.

ஓம் தத் ஸத்.

பத்திரிகாசிரியர்.

---

## மதமும் அனுபவமும்.

நண்பர்காள்! உலகிலுள்ள மேல்நாடுகளில் அமெரிக்கா ஐக்கிய மாகாணங்கள் முதல்தர நாகரீகமடைந்த நாடுகளில் ஒன்று என்பது பிரசித்தம். இவர்கள் தங்கள் மதமே நாகரீகமான மதம் என்கிறார்கள். அத்தகைய நாட்டிலுள்ள 'லீ' மாகாணத்தில் இக்காலத்தில் அதாவது 1916ளு ஜனவரிமீ 20வ கீழ்க்கண்ட சம்பவம் நடந்தது.—

"'லீ' மாகாணத்திலுள்ள 'மெக்கின்' என்ற குடியானவன் ஜனக்கூட்டத்தால் சுடப்பட்டு 'லேக்' என்ற ஒரு கிழவன் வீட்டில் ஓடி அடைக்கலம் புகுந்தான். அச்சமயம் அவ்வீட்டில் வசிப்பவர்கள் அனைவரும் வெளியில் சென்றிருந்தார்கள். நகர அதிகாரி (ஷெரிப்) காயமடைந்த மெக்கின் என்பவனைக் காண அவ்வீட்டிற்குள் சென்றபோது அவன் அந்த அதிகாரியைச் சுட்டுவிட்டான். (ஜனக்கூட்டத்தில் சேர்ந்தவர்களும் அதிகாரியும் வெள்ளையர்கள். மெக்கின்னும், லேக் குடும்பத்தாரும் அந்நாடுச் சுதேசிகள் கலப்பைச் சேர்ந்தவர்கள்). நகர அதிகாரியைச் சுட்டதில் லேக் குடும்பத்தார் சம்பந்தப்படவேயில்லையென்று ஜனங்கள் அறிந்திருந்தும், அதிகாரம் வெள்ளையருடையதே யென்பதை ஸ்திரப்படுத்துவதற்காகவே ஜனக்கூட்டம் மறுநாள் இரவு வந்து லேக் என்ற வயோதிகனையும் அவன் புத்திரராகிய மூன்று வாலிபர்களையும் அவன் சகோதரன் புதல்வன் ஒருவனையும் ஒரு பிரம்மாண்டமான மரத்தின் கிளைகளில் தூக்கிவிட்டார்கள்."

இன்னொரு விஷயம் 1916ளு மேமீ சம்பவித்தது. அதாவது,

"மேமீ 8வ ஜெஸ்ஸி வாஷிங்டன் என்ற ஒரு வாலிபன், புத்தி சபலமுடையவன், தன் எஜமான் மனைவியைத் துராக்கிரதமாகப் புணர்ந்து கொலை செய்துவிட்டான். அதே மேமீ 15வ டெக்ஸாஸ் மாகாணத்தில் வாகோ நகரிலுள்ள நியாய சபையில் அவ்வாலிபன் விசாரிக்கப்பட்டு அதே மாலை தூக்கிற் போடப்படும்படி தண்டனை விதிக்கப்பட்டான். அங்கு கூடியிருந்த ஜனங்கள் நகர அதிகாரியாகிய பிளெமிங் என்ற ஷெரிப்பின் சம்மதிபெற்று மரண தண்டனை விதிக்கப்பட்ட அவ்வாலிபனை ஷெரிப் வீட்டின் சாளரத்தெதிரிலிருக்கும் மைதானத்திற்கு இழுத்துச் சென்று அவன் உயிர்நிலையைக் கொய்து, விரல்கள், மூக்கு, செவிகளை யறுத்துவிட்டுப் பிறகு உயிரோடு தீயிலெரித்து, தீய்ந்த அத்தேகத்தை நகரவீதிகளின் வழியாக இழுத்துச் சென்றார்கள். மரணதண்டனை விதித்த மன்ரோ என்ற நியாயாதிபதி ஜனங்களின் கோரச்செயலைத் தடுக்க முயலவில்லை."

இந்த இரண்டு செய்கைகளும் புகைப்படத்தில் பிடிக்கப்பட்டு, 1922ளு மார்ச்சுமீ வெளியான "மாடர்ன்ரிவியூ" என்ற (கல்கத்தாவில் பிரசுரமாகும்) சஞ்சிகையில் வெளிபிடப்பட்டிருக்கின்றன. இன்னும் இதே வருடம் இரண்டொரு மாதங்களுக்கு முன்கூட இத்தகைய கோரச் செயல்கள் நடந்திருக்கின்றன. முதல்தர நாகரீக மடைந்தவர்கள் என்று தங்களைக் கூறிக்கொள்ளும் ஜனங்கள் வாழும்நாடு, உலகிலுள்ள மற்ற எல்லாமதத்தி

னரும் அஞ்ஞானிகள், நாங்கள் மட்டுமே ஞானிகள், என்று வாய்ப்பறை யறையும் பாதிரிகள் மலிந்தநாடு, "உன் எதிரி யுன் ஒரு கன்னத்தி லடித்தால் அவனுக்கு இன்னொரு கன்னத்தையும் காட்டு," "கொலைசெய்யாதே" என்று போதித்த மகான் கொள்கைகளைக் கடைபிடித் தொழு கிறவர்கள்—எங்கள் மதமே யுலகில் நாகரீகமும் ஜீவகாருண்யமும் உடையமதம் என்று கூறிக்கொள்கிறவர்கள்—இவர்கள் செய்கையால் தங்கள் மதத்திற்கும் மத ஸ்தாபகர்க்கும் இவர்கள் எத்தகைய மரியாதை வைத்திருக்கிறார்கள் என்று நாம் கருதுவது? உலகிலுள்ள எல்லா மதங்களும் மனிதர் கடவுளின் அருளைப் பெற்று மேலான பதவியை யடைவதற்காகவே ஏற்பட்டுள்ளன என்பது யாவரு மறிந்த விஷயமே. கொள்கைகளில் பேதமிருப்பினும் எல்லா மதங்களின் முடிவான கருத்தும் ஒன்றே. ஆயினும் மதஸ்தாபகர்களாகிய மகான்களின் போதனைகளின்படி நடவாவிடின் மதத்தால் ஒரு பயனு மின்றாம்.

"உனக்குத் தீங்குசெய்பவர்களைத் தடுக்காதே,"
"உன்விரோதியையும் நேசி,"
"தீமைசெய்பவனுக்கு நன்மைசெய்"

"உன் இடது கன்னத்தில் ஒருவன் அடித்தால் அவனுக்கு வலது கன்னத்தையும் காட்டு" என்று ஏசுநாதர் கூறிய போதனையை யிவர்கள் எவ்வளவாய் மதித்து அனுபவத்தில் நடக்கிறார்கள். பட்டினத்தடிகள் எங்கும் பரந்தசோதியை, "கட்டிச் சுருட்டித் தம் கக்கத்தில் வைப்பர் கருத்தில் வையார், பட்டப்பகலை யிரவென்றிடும் பாதகரே" என்றதுபோல், இவர்கள் ஏசுநாதர் கட்டளைகளைப் பொன் எழுத்துகள் பதிக்கப்பட்ட நேர்த்தியான பதனிட்டதோலால் கட்டப்பட்டிருக்கும் புத்தகத்தில் பத்திரமாக வைத்திருக்கிறார்களே யன்றி மனதிலும் செய்கையிலும் அந்தமகானது உபதேச இரத்தினங்களின் மணங்கூட இல்லை. நிறபேதங் காரணமாக தங்களைப் போன்ற மனிதரில் ஒரு வகுப்பாரையே யிவ்வாறு நடத்தும் இவர்களுக்கு ஏசுநாதர் உபதேசம் எவ்வளவு தூரத்தி லிருக்கிறது. வெள்ளையரை மட்டுமே கடவுள் படைத்தார். மற்ற நிறமுடைய மனிதரைச் சாத்தான் படைத்தான் என்பது இவர்கள் ஞானம் போலும்.

பண ஆசை, உலகபோக ஆசை இவைகளை விட்டொழியாதவனுக்குப் பரலோக ராச்சியம் கிட்டாதென்று ஏசுநாதர் தெளிவாய்க் கூறியிருக்க, இவர்களோ பூமியும் செல்வமும் அதிகாரமும் நமக்கே வேண்டும் என்று அளவுகடந்த ஆசைகொண்டு அதற்காகப் பூலோக முழுமையும் கொலைக் களமாகச்செய்ய ஆவல்கொண் டிருக்கிறார்கள். குறைந்தகாலத்தில் பெருந் தொகையான மனிதரைக்கொல்லப் புதுபுது கருவிகளைக் கண்டுபிடிப்பதில் தங்கள் புத்தி முழுமையும், கல்வி முழுமையும் செலுத்துகிறார்கள். கருணையே வுருவாகக்கொண்ட ஆண்டவன் இதற்காகவோ மனிதற்கு அறிவை நல்கினன்?

இவர்கள் மதக் கொள்கையும், மதக்கட்டளையும் எல்லாமனிதர்களும் சகோதரர்களே என்பதாம். இவர்கள் பாதிரிமார்கள், அன்னிய மதஸ்தர் முன்னின்று "எல்லாரும் ஆண்டவனுடைய மக்களே, ஆண்டவன் முன்னிலையில் எல்லாரும் சமமானவர்களே, ஜாதியில் உயர்வு தாழ்வென்பதில்லை, எல்லாரும் ஒருஜாதியே" என்று வாய்ப்பறை யறைகிருர்கள். ஆனல் அனுபவத்திலோ கறுப்பு மனிதர் தங்களுக்குக் கீழ்ப்படிந் திருக்க வேண்டு மென்றும், தங்களோடு சம அந்தஸ்தும் உரிமைகளும் பெறலாகாதென்றும், தாங்கள் வசிக்கிறவிடத்தில் கூட அவர்கள் கலந்து வசிக்கலாகாதென்றும் பிடிவாதங்கொண்டு நடக்கிருர்கள். இன்றைக்கும் ஆப்ரிகா, அமெரிகா முதலிய விடங்களிலுள்ள கறுப்பு மனிதர்கள் இவர்களால் கேவலம் மிருகங்களைப்போல் நடத்தப்படுகிருர்கள்.

அந்தோ மதஸ்தாபகரும் மதமும் என்செய்வார்கள். மதஸ்தாபகர் அக்காலத்தி லிருந்த ஜனசமூகத்தின் நிலைமைக்குத்தக்க போதனைகளைச் செய்தார். அக்காலத்தி லிருந்த அந்நாட்டு ஜனங்கள் மிக்க அநாகரீகமும் இராக்ஷசத் தன்மையுமான நிலைமையி லிருந்தார்க ளென்பதும் இவர்களது தற்கால நாகரீக மென்பது அந்தநிலைமையி லிருந்துண்டான சீர்திருத்தமே யென்றும், இவர்கள் தங்கள் மதஸ்தாபகர் கூறிய உபதேசங்களின்படி நடப்பதில்லை யென்பதும் தெள்ளிதின் புலப்படும்.

அந்தோ நமது சகோதர சகோதரிகளே! தங்களவர்களிட மிருக்கும் இப்பெரிய அஞ்ஞானத்தை நீக்கமுயலாமல் இப்பாதிரிமார்கள் நமக்குவந்து ஞானம் போதிக்க முயல்வது விந்தையினும் விந்தையே. இப்பாதிரிமார்கள் தங்கள் நாட்டில் தங்கள் மதக்கொள்கைகள் அசட்டை செய்வதைச் சீர்படுத்த முயலாமலும், அங்கு தெய்வசிந்தனை குறைந்து பணப்பேயும் உலக போகப் பேயும் தலைவிரித்தாடுவதை யோட்டமுயலாமலும், அஞ்ஞானமாகிய கரியமேகம் கவர்வதை விலக்கக் கருதாமலும், கொல்லத் தெருவில் ஊசி விற்க வருவதுபோல், நமது நாட்டார்க்கு மதபோதனை செய்ய வருவது கலிகால அதிசயங்களில் ஒன்ருகும்.

தங்களுக்கிருக்கும் செல்வாக்காலும் பலத்தாலும், நெடுநாட்களாய்ப் பற்றியிருக்கும் அபிமானத்தாலும், ஆன்மார்த்த விஷயங்களை நிர்துக்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற உண்மையை யேற்றுக்கொண்டு நடக்க இவர்கள் மனம் பின்னிடைகிறது.

இப்போது நாம் உங்களை முடிவாய் வேண்டிக்கொள்வ தென்னவெனில்.—

நமது மக்களுக்கு முதலில் நமது மதக்கல்வியைப் போதியுங்கள்—அந்நியமத போதனைக்குச் செவிகொடாது பூரணத்வ முடைய நமது மதத்தை முன்னே ஆராய்ச்சிசெய்து இதிலுள்ள உண்மையை யறிந்துகொள்

வச் செய்யுங்கள், பிறகு வேறு எத்தனை யன்னிய மதங்களை யாராய்ச்சிசெய் பினும் கெடுதியில்லை. ஏனெனில் நமது மதத்தைப் பாரபட்சமாவது துவேஷ புத்தியாவது இன்றி ஆராய்ச்சிசெய்த எவனும் மற்ற எல்லாமதங் களிலும் அடங்கியிருக்கும் உண்மைகள் யாவும் இதில் இருக்கின்றன வென் றும், இதுவே மற்ற எல்லா மதங்களுக்கும் தாயகமாயுள்ள தென்றும் அங்கை நெல்லிபோலுணர்வான். கடலைக் கண்டவன் உலகிலுள்ள எல்லா ஆறுகளும் இதில் வந்து சேர்கின்றன வென்றும், இதனினும் பெரியதோர் நீர்நிலை உலகில் வேறில்லை யென்றும் ஐயமற வுணர்வானன்றோ.

ஹிந்து.

---

## மாதர் நீதி.

சகோதரிகளே! "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்ப தாகக் கொன்றைவேந்தனில் வாசித்திருப்பீர்கள். ஆதலால் நம்மைச் சிறு குழந்தை முதல் தங்கள் நேத்திரம்போல் பாதுகாத்து ஈ எறும்பு முதலியன தீண்டாமல் பலவித கஷ்டங்களடைந்து காப்பாற்றினவர்கள் யார்? நம் மாதா பிதாவுமே. ஆதலின் நாம் முதலில் அவர்களுக்கடங்கி அவர்களுக்குப் பிரியமுண்டாகும்படி நடந்து வரவேண்டும். (இது ஆண் பெண் இருவருக் கும் குறிப்பிட்டது) சகோதரிகளே! பிறகு உங்கள் யௌவன பிராயத்தில் மாதா பிதாவினால் ஓர் ஆண்மகனுக்கு மணமுடித்துக் கொடுக்கப் பெற்றுக் கணவன் வீடு சென்றீர்களாமாகில் அவ்விடத்தில் மாமன் மாமி நாத்தினி மார் கொழுனன்மார் முதலிய யாவருக்கும் கீழ்ப்படிந்து அவர்கள் சொன்ன வாக்கியத்தை வேத வாக்கியமாகக் கொண்டு, அவர்களுக்கு உங்கள்மீது பிரிய முண்டாகும்படியாய் நடந்து கொள்ளவேண்டும். சகோதரிகளே! உங்களை மணமுடித்த நாயகன் ஏழையா யிருந்தபோதிலும் செல்வந்தனாய் இருந்தபோதிலும் மூர்க்க குணமுள்ளவனாகிலும், துஷ்டனா யிருந்தாலும், வேசிலோலனா யிருந்தாலும், உங்கள்மீது அன்பில்லாதவனா யிருந்தாலும், கோபமுள்ளவனா யிருந்தாலும், உங்களைக் குற்றமின்றி அடித்துத் திட்டி ஏசுபவனாயினும், இதையெல்லாம் கவனியாமல் உங்கள் கணவனுக்குக் கீழ்ப் படிந்து அவனையே தெய்வமாகக் கொண்டாடி நடக்கவேண்டும். இதைப் பற்றியே நாயனார்:—

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை" என்றார். (குறள்)

அவ்வாக்கின்படி தினமும் அதிகாலையில் எழுந்து உங்கள் நாயகன் முகத்தில் விழித்து அவரது பாதாரவிந்தத்திற்கு நமஸ்காரம் செய்துவிட் டுப் பிறகுதான் நீங்கள் வேறு வேலைகளைக் கவனிக்கவேண்டும். உங்கள் நாயகன் சுபாவத்தில் கெட்டவனாகவே யிருந்து ஒரு குற்றமும் செய்யா திருந்த உங்களை அடித்து வைது தொந்தரவு செய்தாலும் அதை மிக்க பொறுமையுடன் சகித்துக்கொண்டு கணவன்மீது வருத்தப்படாமல்

நாம் முன் ஜன்மத்தில் செய்த பூஜாபலன் என்பதாக நினைத்து உங்கள் நாயகன்மீது எப்போதும் பிரியமுள்ளவர்களா யிருந்து, நாளடைவில் கண வனை நல்வழியில் கொண்டுவா தன் சாமர்த்தியத்தால் முயலவேண்டும். "தாய்க்குப்பின் தாரம்" என்ற பெரியோர் வாக்கியத்தின்படி உங்கள் நாயகனுக்கு மாமிக்குப் பிறகு நீங்களே தாய்போலிருந்து காப்பாற்றக் கட மைப்பட்டவர்களாதலால், எப்பொழுதும் நாயகன்மீது உள்ளன்பாயிருந்து உபசரித்து வரவேண்டும். தவிர எப்பொழுதும் உங்கள் முகத்தைச் சந் தோஷமாகவும் மலர்ந்த முகத்துடனும் வைத்திருக்கவேண்டு மென்பதை மறக்கக்கூடாது. கோபமும் சிடுசிடுப்பும் உள்ள முகத்தைக் கனவிலும் நினையாதீர்கள். "பெண்டிற்கழகு எதிர் பேசாதிருத்தல்" என்றபடி உங் கள் நாயகனுயினும் மற்ற யாவர்களாயினும் வைதாலும் அச்சமயத்தில் சாந்த முள்ள முகத்துடனிருந்து இனிய வார்த்தை பேசி "இன்சொல்லா லன்றி யிருநீர் வியனுலகம் வன்சொல்லா லென்றும் மகிழாதே" என்றபடி இனிய மொழியினால் அவர்கள் கோபத்தைத் தணிக்கவேண்டும். கோபமென்பதை உங்கள் முகத்தில் காட்டலாகாது. கோபமானது எத்தகைய காரியத்தை யுஞ் செய்ய அஞ்சாது.

மா. மலையப்பன், மலாக்கா.

குறிப்பு.—ஆண் பெண் மக்களின் தத்துவ உணர்ச்சியும் மனோ தத் துவ சாஸ்திர ஆராய்ச்சியுமில்லாத நம் மலையப்பன் கருத்துக்கள் அறிவிற் பெரியோராற் கொள்ளப்படா. இத்தகைய கருத்துக்கள் ஒரு பக்ஷமுடை யன.

த. ப.

---

குறிப்பு:—மேற்கண்ட விஷயம் கடந்த ஆனிமீ 27உ வெளியான "தமிழகம்" என்ற (கோலாலம்பூர்) பத்திரிகையிலிருந் தெடுத்து நமது சஞ்சிகையில் பிரசுரிக்கப்பட் டிருக்கிறது. இதில் "மா. மலையப்பன் மலாக்கா" என்பவர் வரைந்துள்ள விஷயத்திற்குத் தமிழகத்தின் பத்திரி காசிரியர் வரைந்துள்ள குறிப்பைப்பற்றி இரண்டொரு வார்த்தைகள் கூறவே இதை நாம் வெளியிட்டோம்.

மலையப்பன் தமது வியாசத்தில் வரைந்துள்ள விஷயங்கள், பெற் றோரை மக்கள் தெய்வமாகப் பாவிக்கவேண்டும் என்பதும் மனைவி தன் கணவனைக் கடவுளாகப் பாவித் தொழுகவேண்டு மென்பதுமாகிய இரண்டே யுள்ளன.

பத்திரிகாசிரியர் குறிப்பு, அதை வாசிப்போர்க்கு மேற்கண்ட இரண்டு விஷயங்களும் தவறுனவை யாதலின் அவற்றில் கூறியுள்ளபடி நடக்க லாகாது என்ற புத்தியைப் புகட்டுவதா யிருக்கிறது. இது நமது ஹிந்து மதக் கொள்கைக்கு முற்றும் மாறுனதும் வாசிப்போரை நமது நன்னெறியி னின்று பிறழச் செய்வதுமாக விருப்பதால் இக்குறிப்பிலடங்கிய விஷயத்தை நாம் கண்டிக்கவேண்டியது அவசியமாகிறது.

“ மலையப்பனுக்கு ஆண் பெண் மக்களின் தத்துவ உணர்ச்சியும் மனோ தத்துவ சாஸ்திர ஆராய்ச்சியுமில்லை யாதலின் அவர் கருத்துக்கள் அறிவிற் பெரியோரால் கொள்ளப்படா ” என்று ஆசிரியர் கூறுகிறார். மேற்படி தத்துவ ஆராய்ச்சிக்கும் மேல்கண்ட விஷயங்களுக்கும் சம்பந்த மென்ன வென்பதைச் சற்றேனும் விளக்கினாரில்லை. அந்த ஆராய்ச்சியால் மனைவி புருடனைக் கடவுளாகக் கருதலாகாது என்று ஏற்படுகிறதுபோலும். இவர் அறிவிற் பெரியார் என்பது யாரை? “தெய்வந் தொழாள்......மழை” என்று பொய்யாமொழியார் கூறியருளிய வாக்கை நிராகரித்து நடக்க வேண்டுமென்று கூறுவோரை நாம் அறிவிற் பெரியோரென்று ஒருபோதும் மதியேம். அது அத் தேவரையே தூஷிப்பதாகும்.

ஒருசமயம் மலையப்பன் “கணவன் எத்தகைய துஷ்டனாயினும், அடித்தாலும் வைதாலும்,...கூட அவனைக் கடவுளாய்க்கருதி அவன் சொல்லுக்கு மாறு கூறாமல் நடக்கவேண்டும்” என்று கூறுவதைக்(இப்போது பரவிவரும் மேல்நாட்டு நாகரிகச் சீர்த்திருத்தக்காரர் கூறுகிறபடி, ஆசிரியரும்) குற்றமாகக் கருதுகிறாரோ? உண்மையில் அத்தகைய கணவனிடம் அவ்வாறொழுகுபவள்தான் பதிவிரதை யாவாள். குஷ்டரோகியாகிய கணவனைக் கூடைமேல் தூக்கித் தலைமேல் சுமந்துகொண்டு தாசி வீட்டிற் கொண்டு போய்ச் சேர்த்த நளாயினியன்றோ சூரியன் உதிக்காதிருக்கச் செய்யும் வல்லமை பெற்றாள்.

இத்தகைய கருத்துக்கள் ஒரு பக்ஷமுடையன என்று ஆசிரியர் கூறுவது நன்கு விளங்கவில்லை. “மனைவி கணவனைக் கடவுளாய்க் கருதவேண்டும்” என்பதை யொரு பட்சமென்கிறாரா? அப்படியாயின், கணவனும் மனைவியைப் பெண் தெய்வம் என்று மேல்நாட்டார் கூறுவதுபோல் கருத வேண்டும் என்கிறாரா? அல்லது மலையப்பன் வெளியிட்ட நம் ஆசார ஒழுக்கங்களைப் பற்றிய கருத்துக்கள் ஜன சமூகத்தில் ஒரு சாரார் மட்டும் ஏற்றுக் கொள்வது என்று கருதுகிறாரா? அப்படியாயின் ஹிந்துக்களல்லாதார் அக் கருத்துக்களை யேற்றுக்கொள்ள மாட்டார்கள் என்று ஆசிரியர் வெளிப்படையாய்க் கூறிவிட் டிருக்கவேண்டும். அப்போது மேல்கண்ட வியாசத்தை வாசிக்கும் ஹிந்துக்களுக்கு ஆசிரியர் குறிப்பு ஒரு இடையூறும் செய்யாது. முடிவில் ஹிந்து சகோதர சகோதரிகள் ஆசிரியர் குறிப்பால் மலையப்பன் கூறியவற்றில் எதையும் தவறாகக் கருதலாகாதென்று பிரார்த்திக்கிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## இல்லறம்—கன்மம்.

(27-ம் பக்கத்தொடர்ச்சி)

ஏனென்றால், ஆன்மாவுக்குரிய பிரகிருதி யந்திரமாகிய சரீரசுபாவமும், அதைச் சரியான நிலையிலிருத்தும் சிகிச்சா விதியும் வைத்திய சாத்திரத்தில் கூறப்பட்டுள்ளன. வைத்தியநூல் சரீரத்திலுண்டாகும் ரோகமும் அந்த

ரோகத்தை நிவர்த்திக்கும் முறையுங் கூறுகின்றதே யன்றி நல்லறி வுண்டாகும் விதத்தைப் பேசவில்லையே யெனின், இன்னின்ன பொருள்கள் நல்லறிவை விருத்தியாக்கும், இப்பொருள் நல்லறிவைக் கெடுக்கும் என்று பொருள்களின் மேலேற்றிக் கூறியுள்ளது. ஆயினும் மனவியாதியாகிய அஞ்ஞானத்தை நீக்குமார்க்கம் கூறப்படவில்லை. அந்த வைத்திய சாஸ்திரம் கூறிய பதார்த்தகுண வியல்புபற்றி ஸ்மிருதி சாஸ்திரங்களாகிய கன்ம காண்டம் சரீரவியாதி மனோவியாதிக ளிரண்டையும் நீக்கிக்கொள்ளும் மார்க்கங்களைக் கூறுகின்றது ஆதலால், வைத்திய சாஸ்திரங்களுக்கும் தர்மசாஸ்திரங்களுக்கும் நெருங்கின சம்பந்த முண்டாமென்க. நமது ஆரிய வைத்திய நூல்களில் கன்ம சாஸ்திரங்களை யனுசரித்தே ரோகங்களுக்குச் சிகிச்சாக் கிரமங்கள் கூறப்பட்டுள்ளன. ஆதலாற்றான் முற்பிறப்பில் செய்துள்ள பாவங்களே ரோகங்களாக மாறுகின்றன வென்றும், கன்மகாண்டங்களிற் கூறியவிதிப்படி பிராயச்சித்தங்கள் செய்து கொண்டபின் ஔஷத முண்ணவேண்டு மென்றும் வைத்தியநூல்கள் கூறுகின்றன. தானம், ஜபம், ஔஷதம் இம்மூன்றும் பிராயச்சித்தங்க ளாகுமென்று சில சிகிச்சா நூல்கள் கூறுகின்றன. இதனல் முற்பிறப்பிற் செய்த பாபகன்மத்தாலுண்டான வியாதிகளுக்குப் பஞ்சகௌவியம் முதலிய போன்ற பொருள்களைப் பிராயச்சித்தமாக விதிக்க வெழுந்த நூல்களே ஆரியர்கள் எழுதி வைத்த வைத்திய சாஸ்திரங்களா மென்பது எளிதிலுணரக் கிடந்தது. ஆதலாற் சருமசாஸ்திரத்துக்கு ஒரு அங்கமே வைத்தியசாஸ்திர மென்று கொள்ள வேண்டும். அதனாலேதான் கன்ம சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ள பிராயச்சித்த விதிகளெல்லாம் பதார்த்தகுண வியல்புகூறும் வைத்திய சாஸ்திரங்களால் .விளக்கிக் காட்டும்படி துலங்குகின்றது. ஆதலால் விக்கல் சிரித்தல் புசித்தலாதிகளைப் போன்றனவே இக்கன்ம காண்டங் கூறிய நற்கன்மங்களா மென்பதைப் பிருகிருதி சாஸ்திர இயல்புகொண்டு ஆராய்ச்சி செய்யும் மேதாவிகள் கொள்ளாரென்க.

இதற்கென வோர் சாஸ்திரம் வேண்டுவதே னென்றால் கர்மத்தின் சூட்சுமக்கருத்தை எல்லாரானு மெளிதி லறியக்கூடாது. யாங்ஙனமெனில் காலந்தவறாது ஸ்நானம் செய்வதால் சரீரத்திற்பற்றிய அழுக்கு நீங்குமென்பதே எல்லாருடைய கருத்துமாம். காலையில் குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்வதால் பித்தம் சமப்படும்; வெயர்வை வெளிப்படும், அன்னம் ஜீரணமாகும்; ஐம்புலன்களும் துலங்கும்; இரத்தத்திற்கலந்த குற்றங்கள் அகலும்; சொறிசிரங்கு முதலிய தோலைப்பற்றிய வியாதிகள் நீங்கும்; நரம்புகள் முறுக்கடையும்; முத்தோஷங்களும் தத்தம் நிலைதவறாது நிற்குமென்பனவாதி நுண்ணிய விஷயங்களை வைத்தியநூல் முதலிய கற்றவர்களே யன்றி மற்றவர்கள் கண்டுகொள்ள மாட்டார்கள். அன்றியும் ஆடவர்களுக்குச் சூரியன் உதிக்குமுன் ஸ்நானஞ் செய்வதே நன்மை பயக்கும். ஸ்திரீகளுக்

கும் பிரமசாரிகளுக்கும் உதயமான பிறகு ஸ்நானம் செய்வதே யுசிதம்; சந்நியாசிகளுக்குச் சூரியனிருக்கும் போதே மூன்றுதரம் ஸ்நானம் செய்வது நன்மையா மென்னும் அரியவிதிகளைக் காண்பது எவராலுமாகாது. ஆதலால் சாஸ்திரங்கள் அவசியம் வேண்டு மென்பது நமது பெரியோர் கருத்து. ஆதலால் தர்மசாஸ்திரங்களைப் பெரியோர் எழுதி வைத்தனர். தர்மசாஸ்திரங்களிற் கூறியவிதிகள் எல்லாராலும் அறிதற்கரியன. கற்றுணர்ந்தவரே தமது நூல்வலிகொண்டு உணர்ந்து கொள்ளத் தக்கனவாம். ஆதலாற் கன்மமென்பது சிரித்தலாதிகள் போல்வன வல்லவென்றுணர்க.

ஒருசாரார் கன்மம் இன்றியமையாத தாகாது. ஏனெனில் ஸ்நானத்திலடையும் நன்மைகளைக் கற்சூரஸாயனம் முதலிய ஔஷதங்களாலுமடையலாம். ஆதலாற் கன்மத்தை அநுஷ்டித்தே தீரவேண்டு மென்னும் நிர்ப்பந்தம் அநாவசியமாம். சரீரசுகத்திற்கே கன்மங்கள் ஏற்பட்டன வென்றால் அதற்கென்றே பல வைத்தியர்கள் ஏற்பட்டிருக்கிறார்கள். அவர்கள் தமது சாஸ்திரவாராய்ச்சி வலிமையாலுணர்ந்து சரீரத்திற்குநேரிடும் வியாதிகளை நிவர்த்திப்பார்கள். சரீர சுகத்தைப்பற்றியே கன்மநூல் எழுந்ததாயின் வைத்தியநூல்களோடும் ஒப்பாவதே யன்றி இதற்கேற்றம் யாது? கன்மநூல் விதிப்படி யொழுகின் முத்திப் பெரும்பயன் சித்திக்கு மென்னின், ஞானத்தாலன்றி மோட்சமில்லை. எல்லா நூல்களாலும், எல்லாப் புருடர்களாலுங் கூறப்படுவதால் கன்மம் உங்களாலேயே மறுக்கப்படுகின்றது. ஆதலாற் கன்மத்தாற் பயன் யாதுமில்லை யென்பர். இது பொருத்தமுடையதன்று.

வைத்திய நூல்களை யுணர்ந்து தேர்ந்தவர்கள் மிகச் சிலரே கிடைப்பார்கள். வைத்திய நூல்களோ வாதபித்த சிலேத்துமங்கள் மிகுத் தந்நிலை கடந்ததனால் நேரிடும் ரோகங்களுக்குச் சிகிச்சை கூறுகின்றன. கற்சூரசாயனாதிகளை எல்லாரும் எப்போதும் உபயோகிப்பது கூடாத விஷயம். இயல்பாகவே சரீரத்திலமைந்துள்ள சக்தியைப் போல் செயற்கையால் அமைத்துக் கொள்வது அரிது. அமைப்பினும் பெரு முயற்சியானும் பத்தியம் முதலியவற்றாலும் மிகக் கஷ்டப்பட் டமைக்க வேண்டும். அவ்வாறு கஷ்டப்பட்டு அமைப்பினும் செயற்கையாலாகிய குணம் நீடித்து நில்லாது. அடிக்கடி ஔஷதங்களைக் கையாட வேண்டும். அதனாற் சரீரசுகம் சீர்குலையுமே யன்றி வேறு நன்மையில்லை. அன்றியும் அவ்வௌஷதங்கள் எல்லாருக்கும் எளிதிற் கிடைப்பதரிது. நீர் நிலமாதிகள் எல்லாருக்கும் எளிதிற் கிடைக்கும். அவைகளால் உடலுக்குண்டாகும் குற்றங்களை யுடனுக்குடன் ஒழித்துத் தீர்ப்பது வறியோர், செல்வர் மற்றவர் எல்லாருக்கும் பொதுவானதாம். அது கொண்டே பெரியோர் கன்மகாண்டத்தை வகுத்தருளினார்கள். அன்றியும் காலஞ் சென்ற ஔஷதங்கள் சரீர குற்றங்களை யொழிக்குமாற்ற லற்றுவிடும். உபயோகமற்றுப்போம். அன்றியும் ஔஷதங்

கள் சரீரத்திலுண்டான வியாதியையும் அதன் சுபாவத்தையு மறிந்தே யுபயோகிக்க வேண்டும். அப்படிச் செய்யினும் ஔஷதங்கள் வேறு வகையான வியாதிகளை உற்பத்தியாக்கி விடுவதுமுண்டு. அங்ஙனமாயின் எளியவர்களால் நிர்வகிக்க முடியாது. செல்வர்களுக்கும் சற்றுக் கஷ்டமானதேயாம். கன்மம் மோட்சத்தைத் தாராதென்று எந்த நூலுங் கூறியதில்லை. எவருங் கூறினரில்லை. மோட்சத்துக்கு நேரே காரணமாவதில்லையென்றும், ஞானத்துக்குரிய சித்தசுத்தியைக் கன்மமேயளிக்கும். அதுகாரணமாக ஞானமுண்டாய் மோட்சம் சித்திக்குமென்றும் எல்லா நூல்களும் கூறுகின்றன. எல்லாப் பெரியோரும் கூறுகின்றார்கள். ஆதலால் மோட்சத்துக்குக் கன்மமே * காரணமென்பது தான் எல்லாருடைய துணிபுமாம். ஒருசமயம் மோட்சத்தைக்கொடாவிடினும் அதனிற்றாழ்ந்த சொர்க்காதிபுவன போகங்களை அளிப்பது நிச்சயம்; மறுபிறப்பில் பெரிய சுகந்தருமென்பதும் சத்தியம், இது முன்னரே விரித்துக் கூறப்பட்டது. கன்மம் மோட்சத்துக்கு நேரே காரண மாகாவிடினும் பரம்பரையிற் காரணமாமென்பது பெரியோர் கருத்தாதலால், மோட்சத்திற்குக் கன்மம் ஓரங்கமாமென்பதே யவர்கருத்து. இம்மை மறுமைப் பயன்களை யெளிதிற் பெறும் நீர் முதலியவற்றாற் செய்யப்படும் கன்மமேயாம். மோட்சத்துக்குப் பரம்பரையாற் காரணமாகுமாதலால் கன்மம் எல்லாருக்கும் இன்றியமையாத தென்பதே துணிபாம்.

இனி பெரியோர் கருத்து யாதெனில் கன்மத்தால் சித்தமும் சரீரமும் சுத்தமாகு மென்பது தான். சித்தமும் சரீரமும் சுத்தமானாலன்றி ஆன்மா சுத்தமடைந்து சுய சொரூபத்தை யறிவதில்லை. ஆன்மா தன்னை யறிவதே ஞானமாம். கன்மபந்த மொழிந்தாலன்றி ஆன்மா தன் சொரூபத்தை யறிவதில்லை. கன்மத்தாலேயே பந்தமற வேண்டும். சித்த சுத்தியே கன்மத்தை யளிக்கும், அகங்காரமற்ற தருமங்களே கன்மத்தைத் தரும் என்றதனால் தருமம் சித்த சுத்தியையும், சித்த சுத்தி கன்மத்தையும், கன்மம் ஞானத்தையும், ஞானம் மோட்சத்தையும், தருமென்பது. "கருமத்தான் ஞான முண்டாங் கருமத்தைச் சித்த சுத்தி, தருமத்தாலிகந்த சித்த சுத்தியைத் தருமம் நல்கும்." என்றதனு லுணரலாம். ஸ்நானாதிகருமங்களால் சரீரமும் சித்தமும் சுத்தியாமென்பது முன்னரே விரித்துரைக்கப்பட்டது. ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரிய சுவாமிகளும் ஸோபான பஞ்சகமென்ற நூலில் "வேதத்தை யோதுக; அது கூறிய கர்மத்தை அனுஷ்டிக்க; அதனால் கடவுளை வழிபடுக" † என்று கூறினர்.

---

* ஈண்டு கன்மமென்றால் நிஷ்காம கன்மம் என்பது பொருள்.

† "வேதவித்த மோதவேண்டு மதுவிதித்த கன்மமே
விருப்பமோடு செய்யவேண்டு மதுகொடீசன் பூசனை
தீதிலா தியற்றவேண்டுங் காமியகன்ம புத்தியைத்
தகிக்கவேண்டும் பாவபுஞ்ச முதறவேண்டும் * *"

"சிலர் கன்மத்தை விட்டொழித்தல் வேண்டுமென்கிறார்கள். சிலர் கன்மத்தை எப்போதும் விடக்கூடாது என்கின்றார்கள். இவற்றுள் "கன்மத்தை விடப்படாது" என்பதே எனது அபிப்பிராயமென்று கண்ணபிரானுங் கீதையிற் கூறியருளினார். கன்மத்தை விடவேண்டுமென்பதன் கருத்து யாதோவெனில், ஞானத்தை யடைந்தவன் சதா நிஷ்டையிலிருப்பான். தூங்கினவன் கைப்பொருள் தானே நழுவி விழுவதுபோல் சதா நிஷ்டனைக் கன்மந் தானேவிட்டொழியும். அதாவது அவன் உலகத்தை மறந்து பிரமத்தில் நிலைத்திருப்பான், வேறு ஞாபகம் அவனுக்கில்லாமையால் அவன் கருமத்தைக் கவனியான். தன் உடலையும் தன்னையும் மறந்து இருப்பவனைக் கருமம் பற்றாதென்பதாம். மனப்பூர்வமாக ஞானமில்லாதவர் கன்மத்தை விடக்கூடாது என்பதாம்.

வைத்திய நூலில் ஜாதி தொழில் முதலியவற்றைப் பற்றிச் சிகிச்சை விதிக்கப்படவில்லை. நாலு வருணத்தவர்க்கும் அவரவர் குணம் தொழில் பற்றித் தனித்தனியாகக் கன்மத்தை விதிக்க வெழுநூல் கன்ம நூலாகும். அக்கன்மத்தை விட்டொழித்தவனுக்கு எக்காலத்தும் நல்ல ஞானமுண்டாகாதென்பது ஆன்றோர் கருத்து. கன்மத்தை மட்டில் அனுஷ்டிப்பவனும் சுத்தனே யாவான்.

கன்மத்தை யனுஷ்டிப்பதால் ஒருவனைச் சுத்தனென்று காணலாம். சுத்தனுடனேயே கூடவேண்டும், அசுத்தனுடன் கூடலாகாது. ஸ்நானத்தால் சரீரம் சுத்தமாவது; ஜபதபங்களால் சித்தமும் சுத்தியாகும். இவ்விரண்டு முள்ளவனே சுத்தனுவான். உள்ளத்தின் சுத்தத்தை யெவ்வாற்றானு மறியமுடியாது. கன்மத்தாலேயே யறிய வேண்டும். ஞானிபோல வேடம் பூண்டு கன்மத்தை விட்டிருப்பவருடன் கூடி யுறவாடுதல் தகாது அவன் தொழிலே நமக்கும் படியும். அதனால் நரக துன்பம் நேர்வது நிச்சயம். கன்மத்தை விடாமல் அநுஷ்டிப்பவன் ஞானியாகா திருந்தாலும் அவன் கூட்டுறவு சிறப்புடையதே யாம். அது குற்றமாகாது. ஞானியென்று கூறிக்கொண்டு கன்மத்தை விட்டிருப்பவன் அசுத்தனுவதில் தடையில்லையாதலால் அவன் கூட்டுறவு எக்காலத்தும் தகாது. கன்மத்தின்பயன் இன்னதென்று தெரியாமல் அனுஷ்டிப்பினும் அக்கன்மம் நற்பயனையே தரும். அறிந்து செய்பவன் அதன் சூட்சுமமான பயன்களையும் அறிந்து கொள்வான். கன்மானுஷ்டானம் செய்பவன் இவ்விதமான கன்மங்கள் செய்பவன் தன்னினமென்று கண்டு அவனுடன்கூடி யுறவாடுவது எளிது. இத்தகைய காரணங்களால் கன்மம் எல்லாருக்கும் இன்றியமையாத தென்பது நிச்சயமாம். கன்மங்களைச் செய்து அதைப் பரமார்ப்பணம் செய்பவன் கன்மபந்த மொழிந்தவனுவான். (தொடரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்

(31-வது பக்கத் தொடர்ச்சி)

மேலும் ஏ அர்ச்சுனா! க்ஷத்திரியனுக்குரிய சுதர்மமாகிய இப்போரைத் தொடங்காமற் போவையேல் உன் தருமத்தையும் கீர்த்தியையும் இழப்பதோடு பாபத்திற் காளாவாய். இதுமட்டோ! அகௌரவ மடைந்து பழிக்கப்படுவாய். அந்தோ! இதனினும் இறந்துபோவது மேலல்லவோ? உன் எதிரிகள் நீ யஞ்சியோடினை யென்று வசைமொழிகூறுவர். இதுகாறும் நீ வீர சூரனென்று அடைந்த கீர்த்தியும் வெற்றிகளும் பழிக்கத் தக்கனவாகும், பகைவரிடம் கேட்கத்தகாத ஒரு இழிசொல் கேட்பதைவிட ஒரு சுத்த வீரன் அடையத்தக்க துன்பம் வேறுளதோ ?

ஏ ! அர்ச்சுன ! நீ இத்துரியோதனாதியரோடு போர்புரிந்து ஒரு சமயம் மரணத்தையே யடைந்தாலோ, நிச்சயமாய்த் தேவர்களும் வணங்கத்தக்க தேவபோகத்தை யடைவாய். அப்படிக்கின்றி வெற்றியடைந்தாலோ, முடிமன்ன ரெல்லாம் வணங்க இம் மண்ணுலகை யரசாள்வாய். ஆதலின் நீ யுன் தருமப்படி போர்செய்வதே தகுதியாகும்.

அர்ச்சுனன்:—ஏ பகவான் ! நான் தேவபோகத்தை யடையும் நோக்கத்தோடு யுத்தம் செய்வேனாயின் அது இச்சாரூபமான காமிய கர்மமே யாகும். அதை விட்டு இவ்வுலகை யாட்சி செய்யலாம் என்ற ஆசையோடு யுத்தம் செய்யினும் அதுவும் காமிய கன்மமேயாகும். ஆதலின் போர் புரிவதால் எவ்வகையானும் எனக்குப் பாபமேயன்றோ பிராப்தமாகும்.

பகவான்:—அர்ச்சுனா ! நீ சுகம் துக்கம், இலாபம் நஷ்டம், ஜயம் அபஜெயம், இவற்றில் சமதிருஷ்டி யுடையவனாய், நமது தருமத்தை நாம் செய்யவேண்டுவது நமது கடமை, பலன் எதுவாயினும் சரி அது நமக்கு அவசியமில்லை என்ற எண்ணத்தோடு யுத்தம் செய்வையாகில் ஒருபோதும் பாபம் உண்டாகாது.

(பகவான் முன்பு ஆன்மாவைப்பற்றி கூறியபோது ஆன்மா நித்தியம் என்பதோடு அகர்த்தா அபோக்தா என்று கூறியருளி யிப்போது நீ யுத்தமாகிய கருமத்தைச்செய் என்றதனால் “நான் அகர்த்தாவாயும் அபோக்தனாகவும் இருக்கின்றேன்” என்று எண்ணியிருக்க வேண்டிய என்னிடம் கருத்துருத்துவ புத்தி யெங்ஙனம் உண்டாகலாம் என்று சங்கிக்கும் அர்ச்சுனனுக்கு முன்பு ஞானத்தைப்பற்றி உபதேசித்தோம் இப்போது கருமத்தைப் பற்றி யுபதேசிக்கிறோம் என்று கூறுகிறார்.)

பகவான்:—ஏ அர்ச்சுன! பற்றுக்கள் யாவும் ஒழியப் பரமான்மாவை பற்றும் மார்க்கமாகிய ஞானத்தை முன்பு உனக்குச் சாமான்யமாய் விளங்கும் வண்ணம் உபதேசித்தோம். இப்போது எத்தகைய ஒரு கரு

மத்தால் இருவகையான வினைகளும் ஒழியுமோ எதையனுஷ்டித்தால் முத்தி யடையலாகுமோ அத்தகைய கருமயோகத்தைக் கூறுதும் கேட்பாயாக.

காமிய கர்மாதிகளா லடையும் சுவர்க்காதி பலன்கள் நாசமடைவது போல், அறிவாளிகள் செய்யும் நிஷ்காம கர்மயோகத்தினால் அடையும் பலன் நசியாது. மேலும் நிஷ்காம கர்மயோகம் சித்த சுத்தியைத் தருவதால், அதனால் இடையூறுகளாவது பாவங்களாவது சம்பவியா. அநுஷ்டிக்கும் நிஷ்காமகருமம் சொற்பமே யாயினும் அதனாற் சனனமரண மாகிய பெரிய மாயை யொழிந்துபோம். ஆகையால் விவேகிகள் இவ்வுலகில் தமக்குரியதாகக் கொள்ளத்தக்க பொருள் அதனினும் வேறின்றாம்.

நிஷ்காம கர்மாநுஷ்டானத்தை யனுசரிப்பவர் புத்தி ஒரேவழியில் நிலைத்திருக்கும். காமிய கர்மாநுஷ்டானமுடைய அவிவேகிகள் புத்தியோ தனம், பெண்டு, புத்திரர், சுவர்க்காதி போகங்கள் முதலிய பல வழிகளில் அலைவுண்டிருக்கும். ஏனெனில் அவர்கள் சுவர்க்காதி போகங்களை யடையும் விருப்பத்தோடு கருமங்களை யியற்றப் போதிக்கும் கருமகாண்ட சுருதி வாக்கியங்களையே சிறந்ததெனக் கருதுபவர்கள். அவர்கள் கருமபலத்தினும் உயர்வான பலன் வேறொன்று மில்லையென எண்ணிப் போகங்களிலேயே பற்றுடையரா யிருப்பவர்கள்; அவர்கள் சுவர்க்காதி பயன்களையன்றி யாவற்றினும் உயர்வான ஞான சுகத்தை யறியார்கள். இவர்கள் தாம் செய்யும் கருமத்தின் பயனாகச் சுவர்க்காதி போகங்களை யனுபவித்தபின் மறுபடி மண்ணுலகில் வந்து ஜனிப்பதாகிய மார்க்கத்திலேயே செல்பவர்களாதலால், ஆன்மஞானிகளாகிய அறிவுடையோர் பகிர்முக திருஷ்டியேயுடைய இவர்களுக்கு மேலான ஞானநெறியை யுபதேசியார்கள்.

கருமகாண்டத்தின் வழியொழுகி சுவர்க்க போகங்களை யடையக்கருதுவோர் இரஜோகுண மயமான இச்சையுடையவர்கள். இவர்கள் புண்ணிய கன்மம், பாபகன்மம், மிசிரகன்ம மென்னும் மூவித கன்மங்களின் சம்பந்தமாகிய சுகதுக்கக் கலப்புடைய பலன்களையே யடைவர்.

ஆதலின் ஏ அர்ச்சுனா ! நீ அந்த இரஜோகுண சொரூபமான இச்சையற்றவனாகி, நித்திய சத்துவகுண முடையவனாகி யிருப்பாயாக. அங்ஙனமே யோகக்ஷேம * மற்றவனாகி, ஆன்மசொரூபியாய் இருப்பாயாக.

[ஒருவன் எந்த போகத்தை யிச்சித்து ஒரு கருமத்தைச்செய்கிறானோ அவனுக்கு அக்கருமம் அப்பலத்தை யளிக்கிறது . எந்தப்போகத்தின் இச்சையுமின்றி செய்யும் எந்தக்கருமமும் பலனை யளிக்காது. ஆகையால் கரும

* யோகம்=முன்பு அடையாத ஒருவஸ்துவை யடைதல்
க்ஷேமம்=அடைந்த வஸ்துவைக் காப்பாற்றி வைத்திருத்தல்.

மல்ல போகங்களை யளிப்பது; இச்சையே யளிப்பதாகும். ஆகையால் நீ எதிலும் இச்சை யவற்றவனாயிரு என்பதாம்.]

அர்ச்சுனன் "பகவானே! சீதோஷ்ணாதிகளைச் சகித்துக் கொள்ள உடையையும், பசிப்பிணியை யொழிக்க அன்னபானாதிகளையும் அடைய வேண்டு மென்று இச்சை யுண்டாகுமன்றோ? பின்னும் அவற்றை வைத்துக் காப்பாற்ற வேண்டு மென்று விருப்பமு முண்டாமன்றோ? அப்படியிருக்க இச்சையற்றவனாகவும், யோகக்ஷேமங்க ளற்றவனாகவும் இருப்பது யாங்ஙனம் கூடும்? அப்படி யிருப்பின் எப்படி ஜீவிப்பேன்?" — என்று வினாவினான்.

பகவான்:—"அர்ச்சுனா! நீ எல்லா இச்சைகளையும் விட்டொழி. நான் எவ்வாறு ஜீவிப்பேன் என்பது முதலிய எல்லாக் கவலைகளையும் விட்டொழிதி. எல்லாருடைய யோகக்ஷேமங்களையும் கவனிப்பது பரமாத்மாவைப் பொருந்தியதே யென்ற திட நம்பிக்கையோடு, நிர்ச்சிந்தனாய் ஆன்ம சொரூபியாகவே யிருப்பாயாக" என்றருளினர்.

அர்ச்சுனன்:—ஏ பகவன்! சுவர்க்காதி போகங்களின் இச்சையையொழித்த பின், அவற்றை யளிக்கத்தக்க கருமங்களை நான் செய்தும் அவற்றாலாய சுகபலனை யடையாதவனாவேனன்றோ? அச்சுவர்க் காதிபோகங்களாலுண்டாம் ஆனந்தத்தை யிழந்தவனாவேனன்றோ?

பகவான்:—ஏ அர்ச்சுனா! குளம், குட்டை, கிணறு முதலிய வற்றில் ஸ்நானம் செய்தல், பானம்செய்தல் முதலிய பயன்களைப் பெறுவோர்க்கு சுத்தசலம் நிறைந்த ஒரு கடல்கிடைத்தால், குளம் முதலியவற்றாலடைந்தப் பயன்களை யெல்லாம் அந்தச் சுத்தநீர் சாகரத்தால் பெறுவார்களன்றோ. அதுபோலவே காமிய கன்மங்களால் அடையக் கூடிய ஹிரணியகருப்ப பரியந்தமுள்ள எல்லா ஆனந்தங்களையும் பிரம்ம சாக்ஷாத்கார மடைந்த ஞானி அனுபவிப்பது எளிதேயாகும்.

(மனிதானந்த முதல் ஹிரணிய கருப்பானந்தம் வரையிலுள்ள எல்லா ஆனந்தங்களும் பிரம்மானந்தமாகிய கடலிலுள்ள ஒவ்வொரு துளிக்குச்சமமாகும் என்பதால், பிரம்மானந்தத்தை யடைந்தவன் சகலவித போகங்களாலும் அடையத்தக்க எல்லா ஆனந்தங்களையும் அடைந்தவனாவான் என்று கூறப்பட்டது.

இதனால் "நீ நிட்காம கருமத்தைச் செய்வாயாயின் அதனால் சித்த சுத்தியும், சித்தசுத்தியால் ஆன்மஞானமும் அடைவாய். ஆன்மஞானத்தால் பிரம்மானந்தம் சித்திக்கும். ஆகையால் நீ காமிய கர்மத்தைச் செய்யாது நிட்காம கருமத்தையே செய்" என்றதாம்,)

"ஏ அர்ச்சுனா! நீ கருமத்தைச் செய்யவேண்டுமே யன்றி அதனாலடையத்தக்க பலனைக் கருதவேண்டாம். அந்தக்கரண சுத்தியுடையோரே

ஆன்மஞானத்தைப் பெறத் தகுதியுடையவர்கள். நீ அந்தக்கரண சுத்தியை யளிக்கும் நிட்காமகருமத்தைச் செய்வதாகிய புத்தியோகத்தின்கண் நிலைத் திருப்பியாக. செய்யும் கருமங்களின் பயனை விரும்பாதவனாய், விதித்தகரு மங்களை முட்டின்றிச் செய்து புண்ணியபாபங்களி னின்றும் விடுபட்டவன் பரமான்மாவாகிய என்னை யறியுமார்க்கத்தை யுணர்வான்.

பலனை யிச்சியாது செய்வதாகிய நிட்காம கருமங்களால் பாவங்க ளற்று சித்தசுத்தி யுண்டாகும். அதனால் நித்தியா நித்திய விவேகம் பொரு ந்தும். அது பொருந்தவே புண்யபாபங்களில் விருப்பு வெறுப்பற்று, இலாப நஷ்டங்களில் சமத்வபுத்தி ஜனிக்கும். இதனால் ஆன்ம அநான்ம விவேகம் உண்டாகி யான் எனது என்ற பற்றுக்கள் நசிக்கும். அதன்பின் ஆன்ம ஞானமன்றி ஏனையவைதீக இலௌகிக விஷயங்களில் விராகமுடை யவனாய் ஆன்ம சாக்ஷாத்காரத்தில் நிலைத்து நிற்பான். அவ்வாறு ஐயமின்றி சலியாமல் ஆன்ம சொருபத்தில் நிலைத்து நிற்பவன், பிரம்மான்ம ஐக்கிய ஞானத்தை யடைவான்" என்று பகவான் அருளினார்.

(தொடரும்.)

சீடன்.

---

## நமது சந்தாநேயர்களுக்கு—

நமது சஞ்சிகையில் "திருநீறு" "குரு வணக்கம்" என்ற விஷயங்கள் ம-ா-ா-ஸ்ரீ பஞ்சாபகேசன் என்பவரால் வரையப்பட்டிருந்ததையும், அவை ஸ்ரீமான் கந்தசாமிக் கவிராயர் வெளியிட்டவை யாதலின் அவற்றைப் பஞ் சாபகேசன் என்பவர் தாம் எழுதியதாய் வரைந்தனுப்பியது தவறென்று ம-ா-ா-ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை யெழுதி யனுப்பிய கடிதத்தை நாம் ஆனி மாத சஞ்சிகையில் வெளியிட்டிருந்ததையும் நேயர்கள் வாசித்தே யிருப்பீர் கள்.

நண்பர் நாடிமுத்துப் பிள்ளை யெழுதியதைக் குற்றமாகக்கூறி இரண்டு சந்தாநேயர்கள் கடிதங்கள் வரைந்துள்ளார்கள். அவர்களில் ஒருவர்,

" எத்தனையோ கற்ற வித்துவான் பல நூல்களில் பல விஷயங்களை யெழுதி யிருக்கிறார்கள். அவற்றை யெல்லாம் பணங் கொடுத்து வாங்கி வாசிக்க எல்லாராலும்? முடியுமா. அவற்றைக் கொஞ்சங் கொஞ்சமாய் நமது சஞ்சிகைக்கு யாரேனும் எழுதியனுப்பினால் அதைப் பெரிய குற்றமாகப் பெருமைபாராட்டி எழுதிவிடலாமா * *" என்று எழுதுகிறார்.

மற்றொருவர், " எல்லாரும் நூல்களிலுள்ளவற்றைத்தானே எடுத்து எழுதுகிறார்கள். ஆனந்தனில் வருகிற வியாசங்களெல்லாம் மட்டும் எந்த நூலிலு மில்லாதவைகளா... அப்படி யிருக்க, ஒருவர் எழுதியதை யெழுதி விட்டான் என்று குற்றங் கூறுவதால் வியாசம் எழுதக் கருதுகிறவர்கள் பின்னிடவேண்டி நேர்கிறது. உலகில் எல்லாருமே கௌரவத்திற் காசைப் பட்டுதான் எழுதுகிறார்கள்..." என்கிறார்.

இவர்கள் இருவரும் இதிலுள்ள உண்மையை யறியாமல் இவ்வாறு எழுதியதற்காக நாம் மிக்க விசனிக்கிறோம். உலகில் எல்லாருமே முன் எழுதப்பட்ட சாத்திரங்களிலும் மற்ற நூல்களிலு முள்ளவற்றைத்தான் எழுதுகிறார்கள். தாயுமானவர் எழுதிய விஷயங்களெல்லாங் கூட முன் நூல்களில் கூறப்பட்டவைகளே. இல்லாததொன்றைப் புதிதாய் எழுத வல்லவர் ஒருவருமில்லை. எல்லாம் முன்னமே வெளியாகி யிருக்கின்றன.

அப்படியிருக்க ஒருவர் எழுதிய நூலைச் சிறப்பித்துக் கூறுவானேன்? அதன் அச்சுச் சுதந்தரம் அவருடையதே யென்றும், அதை பின்னொருவர் அச்சிட்டால் தண்டனை விதிக்கப்படுமென்றும் சட்டம் ஏற்பட்டிருப்பானேன்?

ஒருவன் கஷ்டப்பட்டு பல நூல்களை வாசித்து அவற்றிலுள்ள சாரத்தைத் திரட்டிக்கேட்போர்க்கு எளிதில் நன்கு விளங்கும்படி தன் அறிவின் வல்லமையைக்கொண்டு ஒரு ஒழுங்கா யமைத்து வெளியிடுகிறான். விஷயங்கள் பல நூல்களில் இருப்பதாயினும் அவற்றைப் புதுமுறையில் அமைத்தது அவன் அறிவின் சிருட்டி. அவன் புத்தியும் உழைப்பும் அதற்காக செலவிடப்பட் டிருக்கின்றன. அதனாற்றான் அதன் சுதந்தரம் அவனுடையதாகிறது.

இப்போது இன்னொரு நூலிலிருப்பதை யெடுத்து எழுதுவதாவது, அல்லது இன்னொருவர் பிரசங்கித்ததை வரைந்தனுப்புவதாவது குற்றமென்று ஒருவரும் கூறார்கள். அப்படி யனுப்பும்போது அது இன்ன நூலிலிருந்து எடுத்து எழுதப்பட்டது, இன்னவர் பிரசங்கம் செய்த விஷயத்திலிருந்து எழுதப்பட்டது என்று வெளியிடாது, தமது சுய அறிவைக் கொண்டு எழுதியதென்று கருதப்படும்படி, பேசாமல் தமது கையொப்பமிட்டு அனுப்புவதுதான் குற்றம். அதிலும் ஒருவர் அச்சுரிமைபெற்ற நூலிலிருந்து அவ்வாறு எடுத்து எழுதிவிடுவது சட்டப்படி தண்டனை யடைதற்குரிய குற்றமாகிறது. மற்ற நண்பர்களும் இதன் உண்மையை யுணரவேண்டுமென்றே இதை வரையலாயினோம். நண்பர் நாடிமுத்துப் பிள்ளை கடிதம் வரைந்ததால் வியாசம் எழுதியனுப்பக் கருதுவோர் பின்னிடைவார்கள் என்பது தவறான அபிப்பிராயம். இன்னொருவர் எழுதியதைத் தாமே யெழுதியதாகக் காட்டி கௌரவமடைய விரும்புவோர்தான் பின்னிடைவார்களன்றி உண்மையை வெளியிடும் அறிவாளிகள் ஒருகாலும் பின்னிடையார்கள்.

நமது நண்பர் பஞ்சாபகேசன் மேல்கண்ட நண்பர்கள்போல் தவறான கருத்துகொண்டு அவ்வியாசங்களை வரையாததால் "அவை ஸ்ரீமான் கந்தசாமிக் கவிராயர் வரைந்த துண்டுப் பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டன" என்று தாம் வெளியிடாததற்காக மிக்க வருத்தமடைவதாய் நமக்கு வரைந்திருக்கிறார்.

பத்திரிகாசிரியர்.

---

1. வருடத்தின் கடைசிமாத சஞ்சிகையாவர்க்கும் வி-பியில் அனுப்பப் பட்டது. வி-பிக்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட வேண்டும் என்ற புது சட்டத் தால், தபாலாபீசில் தினம் 400 அல்லது 500 வி-பி களுக்குமேல் எடுக்கப் படவில்லை. இதனால் அம்மாதத்தில் வி-பி. சிலருக்கு மிக்க ஆலசியமாகச் சேர்ந்ததோடு, ஆடிமாத சஞ்சிகை, ஆடிமீ 9உ முதலே அனைவர்க்கும் அனுப்ப நேர்ந்தது.

சாதாரணமாக நாம் எப்போதும் தமிழ்மாதம் 1 அல்லது 2-ம்தேதியே சஞ்சிகைகளை யனுப்பிவருவது யாவரும் அறிந்திருந்தும் இந்த இரண்டு மாதங்களில் ஆலசியம் நேர்ந்ததற்கு ஏதோ தக்ககாரண மிருக்கவேண்டு மென்பதை யுத்தேசிக்காமலே சில சந்தாதாரர்கள் மனம்போனபடி கடிதங் களை யெழுதத் தொடங்கி விட்டது மிக்க விசனிக்கத்தக்க காரியம். சாதாரணமாய் இரண்டாயிரத்திற்கும் குறைந்த சந்தாதாரர்களையுடைய சஞ் சிகைகள் எந்தத்தேதிகளில் வெளிவருகின்றனவென்பதை இவர்கள் உணர்ந் திருந்தால், நமது சஞ்சிகையை 1, 2 தேதிகளில் அனுப்ப நாம் எவ்வளவு முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டு மென்பது இவர்களுக்கு நன்கு விள ங்கி யிருக்கும்.

மேற்கண்ட காரணங்களால் வருடக்கடைசி மாதத்திலும், ஆரம்ப மாதத்திலும் நேரிடும் ஆலசியத்தைச் சந்தாநேயர்கள் பொறுத்துக் கொள்ள வேண்டுகிறோம்.

2. சிலர் சந்தேக நிவாரணத்திற்காவது வேறு எந்த விஷயத்திற் காவது பதில் விரும்புகிறார்கள். ஆனால் பதிலுக்கு தபால்பில்லை யனுப்பா மலே வரைந்து விடுகிறார்கள். இப்போது கார்ட் அரையணா, கவர் ஒரு அணா என்பதையும், ஆனந்தன் உழைப்புக்குத்தக்க ஊதியம் பெறுவதில்லை யென்பதையும் நேயர்கள் கவனித்து நடக்குமாறு வேண்டிக்கொள்கிறோம்.

3. முன்பண மனுப்பியவர்க்கு அடுத்தவருட பஞ்சாங்கம் இப்போ தே யேன் அனுப்பவில்லை யென்று சிலர் எழுதுகிறார்கள். அடுத்தவருட பஞ்சாங்கம், அச்சியற்றி முடிந்தபின், மாசி அல்லது பங்குனிமாதம் அனுப் பப்படும் என்று அறிய விரும்புகிறோம்.

4. சிலர் வியாசம் அனுப்பும்போது "இந்த வியாசத்தை வெளியிட் டால் எனது நண்பர்கள் ஐந்தாறுபேர் சந்தாதாரர்களாய்ச் சேர்வார்கள்" என்றும் "இதைப் பிரசுரித்தால் நானும் ஒரு சந்தாதாரனாகச் சேருகி றேன். இன்றேல் சேரமாட்டேன்" என்றும் வரைகிறார்கள்.

நேயர்களே! அனுப்பப்படும் வியாசம் சஞ்சிகைக்குத் தகுதியானதா என்ற ஒன்றைமட்டுமே கவனித்து வியாசத்தை வெளியிடுவ தன்றி, வேறு காரணங்களைக் கவனித்து ஒரு வியாசம் பிரசுரிக்கப் படமாட்டா தென்று அறிய விரும்புகிறோம்.

பத்திரிகாசிரியர்.

## இந்தியாவிற்குத் தற்காலத்தில் வேண்டிய கல்வி

(இது ஸ்ரீமான் கோபால கிருஷ்ண M. A. M. R. A. S. அவர்கள் கடந்த ஜூன்மாதம் வெளியாகிய "இந்தியன் ரிவ்யூ" என்ற சஞ்சிகையில் வரைந்திருந்ததி லிருந்து எடுத்து மொழிபெயர்க்கப்பட்டது)

தாராளமான பலவந்தக் கல்வி நமது நாட்டிற்கு அத்தியாவசியம் வேண்டும். அதுவுமன்றி இப்போதிருக்கும் கல்விமுறை மிக்க ஆக்ஷேபனைக்கு இடமுள்ளதா யிருக்கிறது. அது உடனே சீர்திருத்தப் படவேண்டும். உயர்தரப் பாடசாலை (ஹைஸ்கூல்) களில் போதிக்கப்படும் கல்வி முறையைப்பற்றி ஒரு பெருங்குற்றம் கூறப்படுகிறது. அது நியாயமாகவே கூறப்படுகிறது. அதாவது, அவற்றில் வாசிப்போரில் பெரும்பாலர் தாங்கள் கல்விகற்பதன் முடிவான நோக்கம் (இராஜாங்கத்தில் அல்லது வேறிடங்களில்) ஊழியம் செய்வதே யென்று கருதுகிறார்கள். இந்த நோக்கம் மாற்றப்பட்டாலன்றி, பாடசாலைகளில் போதிக்கப்படும் கல்வி விஸ்தரிக்கப்பட்டாலன்றி, வாழ்நாளில் அனுவத்திற்கு வரக்கூடியதும் பயனளிக்கக் கூடியது மான கல்வி போதிக்கப் பட்டாலன்றி, சீர்திருத்தத்தை யுண்டாக்கச் செய்யும் மற்ற எல்லாப் பிரயத்தனங்களும் பயனற்றவைகளேயாகும். அத்தகைய கல்வியை யளிக்க என்ன செய்யவேண்டு மென்பதே ஜனசமூகத்தின் முக்கியமான கேள்வியாக இருக்கவேண்டும்.

மேல் நாட்டார் கைத்தொழிலிலும் வர்த்தகத்திலும் விற்பத்தி யடைந்து அதனால் முன்னேற்ற மடைந்ததை யிதுவரையில் நமது நாட்டார் அறிந்து அதனால் தூண்டுதல் பெறாதிருந்தால், சமீபகாலத்தில் ஜபான் தன் நாட்டில் கல்வி யபிவிர்த்தியால் வர்த்தகத்தில் மேம்பாடடைந்து அதனால் மேலோங்கி யிருப்பதை யேனும் பார்த்து, இந்திய வாலிபர்கள் ஒரு படிப்பினையைக் கற்றுக்கொண்டு ஜப்பான் சென்றவழியில் செல்லவேண்டும்.

நம் நாட்டில் மெய்யான அபிவிர்த்திக்குப் பெரிய இடையூறாக விருப்பதும், நம் நாட்டார் மிக்க அடிக்கடி குறிப்பிட்டுக் கூறியதுமான பிரமிப்பையுண்டாக்கும் அதி யாச்சரியமான விஷயம் எதுவெனில், அன்னிய பாஷையின் மூலமாகக் கல்வி கற்பிப்பதேயாகும். இதனா லுண்டாகும் குறைகள் குன்றின்மேலிட்ட தீபம்போல் மிக்க வெளிப்படையாகவும் மிக்க நன்றாய் அறிந்தவையாகவு மிருப்பதால், அதை விஸ்தரித்துக் கூறுவது அவசியமின்றாம். இந்தியாவிற்கு இங்கிலீஷ்பாஷை யின்றியமையாத தாய்விட்டிருக்கிறது என்பதில் ஐயமின்றாம். ஆசியா கண்டத்திலுள்ள எந்த நாடேனும் முன்னேற்ற மடைவதற்கும் மேல் நாட்டுப்பாஷைகளில் ஒரு பாஷையை யறிந்திருக்க வேண்டியது அவசியமே. ஆனால் கற்கவேண்டியவற்றில் ஆங்கிலபாஷைப் பாடமட்டும் கட்டாய பாடங்களில் ஒன்றாக விருக்க வேண்டும். அப்பாஷா ஞானமட்டுமே யிருக்கவேண்டு மன்றி அதற்குமேல்

உதவாது (அதாவது மற்ற எல்லாப் பாடங்களும் தாய்ப் பாஷையிலேயே கற்கப்படவேண்டும் என்பதாம்.)

ஆங்கில பாஷையிலேயே கல்வி கற்றால் ஒரு பையன் அப்பாஷையில் தன் எண்ணங்களை யெல்லாம் வெளியிடுவதில் நல்ல தேர்ச்சி யடைவான் என்று சாதாரணமாக நம்பியிருந்தது தவறு என்று அனுபவத்தால் விளங்கி விட்டது. அதற்கு மாறாக, அவன் சில வார்த்தைகளையும் பரிபாஷிகமான சிலவற்றையும் தெரிந்துகொள்வதை யன்றி, வேறொரு பிரயோசனத்தை யும் பெறுவதில்லை. அவன் சரியான ஆங்கில பாஷையில் எதையும் கூறக் கூடிய சக்தியின்றி திண்டாடுகிறான் என்பதே யுண்மை.

தாய்ப் பாஷையில் யாவும் கற்பிக்கப்படாம விருப்பதற்குக் காரணம், உயர்தர வகுப்புகளுக்குத் தாய்ப்பாஷையில் யாவும் கற்பிக்கத்தக்க உபாத்தி யாயர்க ளில்லையென்றும், பாடபுத்தகங்களும் தாய்ப்பாஷையி லில்லை யென்றும் வாதிக்கப் படுகிறது. அது ஒரு காரண மாகமாட்டாது. இது நமக்கு வேண்டியதை நாம் பூர்த்திசெய்து கொள்ள வேண்டிய விஷயமே யன்றி வேறில்லை. மேலும் தக்க உபாத்தியாயர்களை யமைக்கும் விஷயத் தில் நம் நாட்டிலுள்ள ஒரு மாகாணமே நமக்குச் சரியான அத்தாட்சியாக விருக்கிறது. பஞ்சாப் மாகாணக் கல்வியிலாகா ஆங்கில பாஷைபாடம் ஒன்றுதவிர மற்ற எல்லா பாடங்களையும் தேசபாஷையில் போதிக்கும் வண்ணம் தேசபாஷை உபாத்தியாயர்களைப் பயிற்சிசெய்து அவர்களுக்கு யோக்கியதா பத்திரம் அளிக்கிறது.

கல்வி விஷயமாகக் கருதினாலே இந்த ஏற்பாடு அவசியம் வேண்டற் பாலது. அதைவிட்டு தேசீய விஷயமாக நோக்கின், இது பின்னும் அதிக முக்கியமாக விரும்பற்பாலது. ஏனெனில் அன்னிய பாஷை மூலமாகக் கற்பிக்கப்படுங் கல்வி அறிவின் சுதந்தரத்தைக் கட்டுப்படுத்தி விடுகிறது.

உலகில் எந்த நாட்டிலும் அன்னிய தேசபாஷை மூலமாகக் கல்விகற் பிக்கப்படுவதில்லை. இந்தியருடைய செல்வத்தையும், புத்தியையும், ஆண் மையையும் க்ஷீணிக்கச் செய்யும் இந்நவீன சோதனை நீடித்தகாலமாய் என் நடத்தப்படவேண்டு மென்பதற்கு ஒரு காரணமும் இருப்பதாய்த் தோன்ற வில்லை.

## உபாத்தியாயர்கள்.

நூல்கள் பாடத்தைமட்டுமே போதிக்கும். ஆனால் உபாத்தியாயர் மட்டுமே கல்வியறிவை யுண்டாக்குபவர். உபாத்தியாயர் கல்வியை யெந்த முறைமையில் கற்பிக்கிறாரோ அதற்குத் தகுந்ததுபோல் தான் அது நல்ல தாகவோ கெட்டதாகவோ, பயனுடையதாகவோ பசையற்றதாகவோ ஆகி றது. தேச நன்மைக்காக உழைப்பவர்களில் உபாத்தியாயர்கள் மிக முக்கிய மானவர்கள்.

"ஞானசிரியர் தொழிலுக்கு இரண்டாவதாய் உபாத்தியாயர்கள் தொழிலே சிறந்ததும், மேலானதுமாகும். அன்னியருடைய மக்களுக்குக் கல்வி கற்பிப்பது யாவற்றினும் உயர்ந்த புண்ணியச்செயல் என்று கருதுகிறேன்" என்று மார்டின்லூதர் கூறியிருக்கிறார்.

ஆகையால் அத்தொழில் நாட்டிலுள்ள பெருந்தன்மைவாய்ந்த அறிவாளிகளைக் கிரகிக்கத் தக்க நிலைமையி லிருக்கவேண்டும். முதற்றமானவர்கள் கல்விக்காகப் பாடுபடவேண்டும். அப்படிச்செய்விக்க, அத்தொழிலி லிருப்பவர்கள் தங்கள்தொழிலைக் கௌரவமுள்ள தெனக் கருதும் வண்ணமாகவும், அவர்கள் இப்போ திருப்பதுபோல் தக்க வரும்படியின்றி கவலையுடையவர்களாக விராமல், கவலையின்றி சந்தோஷமும் நிம்மதியு முடையவர்களாக விருக்கப் போதுமான சம்பளம் பெறும்படியாகவும் உபாத்தியார்களுடைய அமைப்புகள் சீர்திருத்தப் படவேண்டும். உபாத்தியாயர்களனைவரும் தம் தொழிலில் பயிற்சியடையாத வரையில், அவர்கள் வாழ்க்கை நிலைமையில், கவலையொழிகிறவரையில் கல்விப்பயிற்சி நல்ல நிலைமைக்குவராது.

* * * *

---

## "ஸ்ரீமத் இராமாநுஜ ஆசாரிய சுவாமிகள்."

(33-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஸ்ரீ இராமாநுஜரும் அவருடைய போதகாசிரியரான நம்பியாரும் ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் எல்லையை யடைந்ததும், கௌரவம் மிக்க வயோதிக முனிவராகிய ஆளவந்தார், வைகுண்டம் புகுந்தனரென்றும், ஆனால் அவரது தேகம் இன்னும் தஹிக்கப்படவில்லை யென்றும் கேழ்விப்பட்டார்கள். பிரேதத்தின் மூன்று விரல்கள் மடங்கி யிருப்பதைக் கண்ணுற்ற ஸ்ரீ இராமாநுஜர், அதன் காரணத்தைப்பற்றி பக்கலில் இருந்தவர்களை உசாவினர். அவர்களில் யாருக்கும் மறுமொழி கூற முடியவில்லை. என்றாலும் "காலஞ்சென்ற அம் மஹா புருஷர் இறக்குந் தருவாயில் அவர் தம் மனத்தைப்பற்றிய பெருங்குறை யாதேனு முளதாகத் தெரிவித்துக்கொண்டனரோ?" என்று ஸ்ரீ இராமாநுஜர் கேட்டலும், அவர்கள் ஆம் என்று உத்தரமளித்தனர். அனந்தரம், ஸ்ரீஇராமாநுஜர் அவ்விஷயத்தைக் குறித்து சற்றுநேரம் ஆலோசித்த பிறகு, வேதங்களின் உண்மைப் பொருளைப் பிரகாசிக்கச் செய்வதின் பொருட்டான புராணங்களை யியற்றிய வியாஸர், பராசரர் என்னும் மஹான்களின் நாமங் கொண்ட இரண்டு வைஷ்ணவர்களைத் தாம் தெரிந்தெடுப்பதாக வாக்களித்தார்.

என்ன ஆச்சர்யம்! ஸ்ரீ இராமாநுஜர் இவ்விதம் வாக்களித்த மறுநிமிடம், மடங்கியிருந்த மூன்றுவிரல்களில் ஒன்று நிமிர்ந்துவிட்டது. பிறகு,

ஸ்ரீ வைஷ்ணவ மதத்தைத் தாம் ஸ்தாபிப்பதாயும், வேதங்களின் ஆராய்ச்சியாலும், 'பஞ்சஸம்ஸ்காரம்' மூலமாயும் ஜனங்கள் மோக்ஷபதவியை யடையும் விஷயத்தில் தாம் முன்னின்று உதகரிப்பதாயும் ஸ்ரீ இராமாநுஜர் பிரமாணஞ் செய்யவே, மற்றோர் விரலும் சரியாக நிமிர்ந்துவிட்டது; பின்னர் வேத வியாஸபகவா னருளிச்செய்துள்ள 'ப்ரம்ம சூத்திரங்களு'க்குத் தாம் ஓர் வியாக்யானம் வரைவதாய் உறுதி வாக்களித்ததும் மடங்கியிருந்த மூன்றுவது விரலும் நன்றாய் நிமிர்ந்துவிட்டது.

அதற்குப் பின்னர், ஸ்ரீ இராமாநுஜர் கச்சியம்பதிக்குத் திரும்பிச் சென்று ஓர் உத்தமியை மணந்துகொண்டு இல்லற வாழ்க்கையி லிருந்தார். ஸ்ரீ இராமாநுஜர் தமது புதியவாழ்க்கைத் துணைவியுடன் எந்த வீட்டில் வசித்தனரோ, அவ்வீட்டின் மற்றோர் விடுதியில் அவருடைய போதகாசிரியராகிய நம்பியாரும் அவரது தேவியாரும் வசித்து வந்தனர். ஒருதினம் ஓர் பரதேசிக்கு அன்னமளித்து, அதிதியின் உச்சிட்ட உணவை உட்கொள்ள வேண்டி ஸ்ரீ இராமாநுஜர் ஏற்பாடு செய்திருந்தார். எல்லாம் தயாராக விருந்ததென்றாலும் அழைக்கப்பட்ட அதிதி வரவில்லை. ஆகையால் அதிதியை அழைத்துவரும் பொருட்டாக ஸ்ரீ இராமாநுஜர் வெளியே சென்றார். இதனிடையில், ஸ்ரீ இராமாநுஜர் வீட்டி லில்லாதபோது விருந்தாளிவந்து அமுதுண்டு வெளியே போய்விட்டார். ஸ்ரீ இராமாநுஜருடைய மனைவியாகிய காஞ்சமாம்பாள் என்னும் உத்தமி விருந்தாளிஉண்டு விட்டிருந்த இலையை எடுத்து எறிந்துவிட்டு, அவன் தாழ்குலத்தோனாகையால் எச்சிலைத்தீண்டியதற்காக, மறுபடியும் ஸ்நானஞ்செய்து, தன் கணவனுக்குப் பிரத்யேகமான சமையல் செய்துவைத்தாள். ஸ்ரீ இராமாநுஜர் வீடு திரும்பிவந்ததும் தாம் இல்லாத சமயத்தில் நடந்த விஷயத்தைக் கேட்டு, நெட்டுயிர்ப்புற்று பாகவத சேஷத்தைப் பறிகொடுத்து விட்டோமே யென்று மனங்கலங்கினர். தம்மனையாளுடைய காரியங்கள் யாவும் அவருக்கு மிகுந்த அதிருப்தியை யுண்டாக்கின.

சின்னுட்கள் கழிந்த பிறகு, ஓர்தினம் மிக்க களைப்புற்ற தமது சீடன் ஒருவனுக்குக்கொஞ்சம் அமுது படைக்கும்படி தம்மில்லாளிடம் சொன்னார். அவ்வம்மை 'சாதமேயில்லை' என்று பதிலுரைத்தாள்; ஆனால் ஸ்ரீஇராமாநுஜர் வீட்டிற்குட்சென்று அரங்கில் தேடியபோது வேண்டிய அமுது இருப்பதைக்கண்டார். தனது பத்தினி பொய் கூறியதை யறிந்து கொண்டார்.

மற்றோர் சந்தர்ப்பத்தில், காஞ்சமாம்பாளும் நம்பியார் தேவியும் கொல்லைப்புறத்துக் கிணற்றி லிருந்து நீர் சேந்திக்கொண் டிருக்கும்போது அவர்களின் தபலைகள் ஒன்றோ டொன்று தொடுபட்டன. அவ்விரு மங்கையரும் விப்பிரகுலத்தில் 'ப்ருஹசர்ணம்' என்னும் வர்க்கத்தினைச்சார்ந்தவர்க ளென்றாலும், காஞ்சமாம்பாள் வடமஜாதிஸ்திரீ யாகையாலும், நம்பியார்பத்னி அந்த ஜாதிக்குக் கீழ்ப்பட்ட வர்ணத்தைச் சேர்ந்தவ ளாதலா

லும், நம்பியார் மனைவியின் பாண்டம் பட்டதினாலே தனது பாண்டம் தீட்டாய் விட்டதென காஞ்சமாம்பாள் கருதி அவளுடன் சண்டையிட்டாள். தமது தேவியின் இம்மூர்க்க நடத்தை ஸ்ரீ இராமாநுஜருக்கு மிருந்த மன வருத்தத்தை யுண்டாக்கிய தென்றாலும், அவர் அதை மிகவும் பொறுத்து வந்தார்.

மற்றோர் தினம் ஸ்ரீ இராமாநுஜர் வீதியே செல்லும்போது அகோர மான பசியுடன் வருந்திய ஓர் மனிதனைக் கண்டார். அவனைத் தமதில்லத் திற்கேகி உணவு கொள்ளும்படி ஏவினார். ஆனால் காஞ்சமாம்பாள் 'வீட்டில் சாதங்கிடையாது' என்று கூறி அவ்வெளியோனை வெளியேயனுப்பி விட்டாள். காஞ்சமாம்பாளின் நடத்தை இத்தருணம் ஸ்ரீ இராமாநுஜரின் மனதை முறித்து அவர்தம் பொறுமையை இழக்கும்படிச் செய்துவிட்டது. 'அவளுடைய தமயனுக்குத் திருமணம் நடக்கிறது' என்கிற சாக்குப் போக்கு கூறி தமது மனைவியை அவளுடைய பெற்றோரிடம் அனுப்பி விட்டார்.

மேற் கூறியவிதமாய், தமது முப்பத்திரண்டாம் வயதில் நமது ஆசாரியஸ்வாமிகள் ஸந்யாஸம் பெற்றுக் கோண்டார்கள். குடும்பத் தொல்லைகளி னின்று விடுபட்ட பின்னர், ஸ்ரீ இராமாநுஜர், வைணவ மத சம்பந்தமான கிரந்தங்களை யெழுதுவதிலும், தம் சிஷ்யவர்க்கங்களுக்குத் தமது கொள்கைகளை உபந்யசிப்பதிலும், இதரமதத்தினரைத் தமது மதக் கோட்பாடுகளுக் கிணங்கும்படிச் செய்து மாற்றுவதிலும், பாகவதசிரேஷ்டர்களைப்போல எம்பெருமானை அனவரதமும் தைலதாராவிச்சின்னமான (இடைவிடாது) பக்திப் பிரேமையுடன் அநுசந்திப்பதிலும் காலங்கழித்து வந்தார். மிக்க சீக்கிரத்தில் சுவாமிகளுடைய பிரக்கியாதி எண்டிசைகளி லும் வியாபித்து ஜீவகோடிகளுள் பெரும்பாலரும் அவரைக் கௌரவப்படுத்தி அவரிடம் மிக்க பக்திசெலுத்தி தொண்டு செய்யலானார்கள்.

இது நிற்க, அவ்வமயம் காஞ்சிமாநகரில் 'லிங்கவந்த' வருணத்தைச் சேர்ந்த சோழபூபதி 'கிருமிகாந்தன்' என்பவன் அரசாண்டு வந்தான். அவன் ஸ்ரீ இராமாநுஜருடைய மதக் கோட்பாடுகளையும் உபதேசங்களையும் அங்கீகரிக்கவில்லை. மேலும் அவ்வேந்தன் சிவனைவிட உயர்ந்த கடவுள் கிடையவே கிடையாதென்று, ஸ்ரீ இராமாநுஜரை ஒத்துக்கொள்ளும்படி வற்புறுத்தினான். அதற்கிணங்க, அரசனது ஏவலாட்கள் ஸ்ரீ இராமாநுஜ ரைச் சோழமன்னனிடம் அழைத்துப் போவதற்காக ஸ்ரீரங்கத்திற்கு வந்த போது, ஸ்ரீ இராமநுஜர் புனலாடிக்கொண் டிருந்தார். அவருடைய சீடர்களில் ஒருவன் ஏவலாட்களைக் கண்டதும், அவர்களை ஏமாற்றவெண்ணி, குருவைப்போலவே காவிவஸ்திரம் தரித்தும் திரிதண்டம் பிடித்தும் போலியுருவங்கொண்டு அவர்களுடன் அரசனிடஞ் சென்றான். ஆங்கு மன்

னுடன் எதிர்வாதஞ் செய்யவே மன்னன் அவனுடைய கண்களைப் பிடுங்கிவிடும்படி ஆக்ஞாபித்தான்.

இதற்குள், 'கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டினும், கடும்புலி வாழும் காடு நன்றே' என்றபடி நமது ஆசாரிய ஸ்வாமிகள் அக்கொடிய மன்னனுடைய இராஜதானியி லிருக்க மனமின்றி எல்லையைக் கடந்து தமது சிஷ்யர்களுடன் மைசூர் பிராந்தியத்தை யடைந்தார். தாம் செல்லு மிடங்கடோறும் யாதொருபயமு மின்றித் தமது கோட்பாடுகளைப் பிரசங் கிக்கலானார். (தொடரும்)

C. S. V. பாரதி.

---

## அச்சுச்சுதந்தர விஷயம்.

சிலர் இன்னொருவர் புத்தியும் உழைப்பும் செலவழித்துப் பிரசுரம் செய்யும் நூலில் இரண்டொரு விஷயங்களை மாற்றியும், இரண்டொன்றைச் சேர்த்தும், காண்போர் அதே நூல்தான் இதுவுமென்று மயங்கும் வண் ணம் தந்திரமாகப் பெயரிட்டு அன்னியர் நூலை யச்சடித்து விற்று இலாபம் சம்பாதிக்கின்றனர்.

இச்சென்னையில் சிலர் இதையே கஷ்டமில்லாமல், நூலாசிரியனுக்குக் காசளிப்பது முதலிய செலவின்றி பணம் சம்பாதிக்கும் மார்க்கமெனக்கருதி வாலாயமாகச் செய்து வருகிறார்கள். இவர்களால் நஷ்டமடைவோர், நியாய ஸ்தலத்திற் செல்வதால் நேரிடும் செலவு, தொல்லை முதலியவற்றிற்கஞ்சிப் பேசாமலிருந்து விடுவதாலே இத்தகைய தொழில் தாராளமாய் இங்கு நடக் கத்தொடங்கியது. சமீபகாலத்தில் நமது ஆனந்தபோதினி சுத்த திருக் கணித பஞ்சாகத்தில் நம்மால் நவீனமாய்ச் சேர்க்கப்பட்ட சில அம்சங்களை யெடுத்து இன்னொருவர் தமது பஞ்சாங்கத்தில் சேர்த்துக்கொண்டதோடு நமது பஞ்சாகத்தைக்கணித்த ம-ா-ா-ஸ்ரீ ராஜன் என்ற பெயரையும் தந் திரமாய் அதன் முன் பக்கம் குறிப்பிட்டுப் பிரசுரம் செய்தார். அது விஷயமாக நாம் செய்து கொண்ட பிராதில் மாஜிஸ்டிரேட் அளித்த தீர்ப் பின் நகலை யடியிற் பிரசுரம் செய்கிறோம். சாதாரணமாய் எல்லா பதிப்பா சிரியர்களும், நூலாசியர்களும் இவ்விஷயத்தில் எச்சரிக்கையா யிருப்பதை யும், இனி யொருவரும் இத்தகைய அகௌரவச்செயலை செய்யாதிருப்பதை யும் கோரியே இதை வெளியிடலானோம்.

---

## சென்னை ஜியார்ஜ்டவுன் பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் கோர்ட்டில்

2 - வது பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட்

ம - ா - ா - ஸ்ரீ ஜே. நாராயண ரெட்டிகாரு பி. ஏ.

அவர்கள் முன்பாக.

1922-ம் வருட காலெண்டர் நெ. 6655_1922௵ ஜூலை௴ 25௳

நாகவேடு, முனிசாமி முதலியார்
வயது 36 - வர்த்தக ஜீவனம்
நெ. 1/6 வெங்கடேச மேஸ்திரி வீதி
ஜியார்ஜ் டவுன், சென்னை.
} பிராதி

P. T. மாசிலாமணி முதலியார், சுந்தரவிலாசம் அச்சுக்கூட முதலாளி நெ. 3/25 வல்லம் பங்காரு செட்டி வீதி வேப்பேரி, சென்னை. } குற்றவாளி

குற்றம்.—பஞ்சாங்கத்தின் அச்சுரிமையை அதிக்கிரமித்தது.

1914-ம் வருட III வது அச்சுரிமை சட்டத்தின் 7-வது பிரிவின்படி.

குற்றவாளியின் வாதம்——நான் குற்றவாளியல்ல.

தீர்ப்பு.

இது 1914-ம் வருட இந்திய அச்சுச் சுதந்தரச் சட்டத்தின் 7 - வது பிரிவில் சம்பந்தப்பட்ட வியாஜ்ஜியம்.

பிராதி (பிராஸிகூஷன் 1 - வது சாக்ஷி) நா. முனிசாமி முதலியார் என்பவர். இவர் தாம் ஆனந்தபோதினி அச்சுக்கூடத்தின் முதலாளி யென்றும், தாம் துன்மதி வருடத்திய "ஆனந்தபோதினி சுத்த திருக்கணித" பஞ்சாங்கத்தைப் ( A குறிப்பிட்ட ருசு ) பிரசுரம் செய்ததாகவும், இப்பஞ்சாங்கத்தின் அச்சுச்சுதந்தரம் தமக்கு உரியதென்றும், குற்றவாளியும் துந்துபி வருட பஞ்சாங்கம் (B குறிப்பிட்ட ருசு) பிரசுரித்திருக்கிறா ரென்றும், அப்பஞ்சாங்கம் பின் குறிக்கப்படும் அம்சங்களில் தமது பஞ்சாங்கத்தின் (A குறிப்பிட்ட ருசு) அச்சுரிமையை அதிக்கிரமித்திருக்கிறதென்றும் பிராது கொடுத்திருக்கிறார்.

அந்த அம்சங்கள்:—

பிராதியின் பஞ்சாங்கத்தில் 12, 13 - ம் பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டுள்ள ஜாப்தா (A 1 குறிப்பிட்ட ருசு) பல விடங்களில் சூரியனது உதயாஸ்தமன காலங்களைக் காட்டுகிறது. இதைக் குற்றவாளி தன் பஞ்சாங்கத்தின் 14, 15-ம் பக்கங்களில் நகலெடுத்து வெளியிட்டிருக்கிறார் (B I ருசு). A I குறிப்பிட்ட (பிராதியின் பஞ்சாங்கத்திலுள்ள) ஜாப்தாவில் இருக்கும் தவறுகள் கூட அப்படியே B 1 குறிப்பிட்ட (குற்றவாளியின் பஞ்சாங்கத்திலுள்ள) ஜாப்தாவில் நகல் எடுக்கப்பட் டிருக்கின்றன.

மறுபடி, பிராதியின் பஞ்சாங்கத்தில் 11 வது பக்கத்தில் (A 2 குறிப்பிட்ட ருசு) பிராதி சுதேச அக்ஷராம்ஸமும் இராசிமான சங்கியையும் பிரசுரம் செய்திருக்கிறார். இவைகளையும் குற்றவாளி தனது பஞ்சாங்கத்தின் 48 பக்கத்தில் (B 2 ருசு) நகல் எடுத்து பதிப்பித்திருக்கிறார்; A 1, A 2 குறிப்பிட்ட ருசுவுகளிலுள்ள ஜாப்தாக்கள் பிராஸிகூஷன் 2-வது சாக்ஷியால் தயாரிக்கப்பட்டன.—அவைகளுக்காகப் பிராதி அவருக்கு ரூபா 250, கொடுத்திருக்கிறார். மறுபடி பிராதியின் பஞ்சாங்கத்திலுள்ள (A 3 முதல் A 8 வரை குறிப்பிட்ட ருசுவுகளாகிய) சில அம்சங்களிலிருக்கும் அமைப்பு, பாஷை, தலைப்புக் குறிப்பு இவைகளைக் குற்றவாளி தன் பஞ்சாங்கத்தில் (B 3 முதல் B 8 வரைக் குறிப்பிட்ட ருசுக்களில்) பதிப்பித்துக் கொண்டார் என்று நிரூபிக்கப் படுகிறது.

2. குற்றவாளி முதலில் தான் குற்றம் செய்யவில்லை யென்று வாதித்தார். பிறகு ஒரு ஸ்டேட்மென்ட கொடுத்தார். அதில், பிராதியின் பஞ்

சாங்கத்தில் (A 1) 18-ம் பக்கமுதல் 41 ம் பக்கம் வரைக்குமே பஞ்சாங்க விஷயத்தைச் சேர்த்ததென்றும், பஞ்சாங்கங்களிலுள்ள மற்ற விஷயங்களைச் சனங்கள் முக்கியமானவைகளாய்க் கருதுவதில்லையென்றும், அமைப்புகள் என்ற விஷயத்தில் பிராதியின் அமைப்புகளைப் பார்த்து தான் பதிப்பிக்கவில்லை யென்றும், வெறுங்கோடுகள் விஷயத்தில் அச்சுச்சுதந்தரம் இருக்க முடியாதென்றும், பஞ்சாங்க அம்சங்கள் என்றவரையில் தன் பஞ்சாங்கம், பிராதியின் பஞ்சாங்கத்திற்குச் சம்பந்த மில்லாமல், சுயமானதென்றும், A 1, A 2 குறிப்பிட்ட ஜாப்தாக்கள் முழுமையும் தவறென்றும் பிரயோசனமற்றவை யென்றும், அவை யப்போதைக் கப்போது மாறத்தக்கவை யென்றும், அவை தற்செயலாக நேர்ந்த ஏதோ தவறுதலால் தமது பஞ்சாங்கத்தில் தோன்றி விட்டனவென்றும் கூறுகிறார்.

ஆனால் வாதம் நடந்தபோது குற்றவாளியின் வக்கில், A 1, A 2 குறிப்பிட்ட ஜாப்தாக்கள் (பிராதியின் பஞ்சாங்கத்தி லிருந்து) குற்றவாளியால் நகல் எடுத்துப் பதிப்பிக்கப்பட்டனவென்று ஒப்புக்கொண்டார். டிபென்ஸ் தரப்பில் இரண்டு சாக்ஷிகள் விசாரிக்கப்பட்டன.

3. பிராதிக்கு அவருடைய பஞ்சாங்கத்தின் அச்சுச் சுதர்தாம் இருப்பதைப்பற்றி ஒரு விவாதமுமில்லை. பிராஸிகூஷன் வக்கீல் A 1, A2 குறிப்பிட்ட ருசுக்களின் அச்சுரிமையில் அதிக்கிரமித் திருப்பதையே முக்கியமானதாக நம்பி யிருக்கிறார். இந்த ஜாப்தாக்கள் பிராஸிகூஷன் 2 வது சாட்சியால் தயாரிக்கப்பட்டன. இவற்றிற்காக உபயோகிக்கப்பட்ட புத்தி சாமார்த்தியத்திற் காகவும், உழைப்பிற்காகவும் ரூபா 250 அவருக்குக் கொடுக்கப்பட் டிருக்கிறது. ஆகையால் பிராதி யவற்றின் அச்சுரிமையைப் பெற்றிருக்கிறார். அவருடைய அனுமதியைப்பெறாமல் அவைகளைத் தான் உபயோகப்படுத்திக்கொள்ளக் குற்றவாளிக்குச் சுதந்தரம் இல்லை.

நியாயம் என்னவெனில், தகவல்களை யறியும் சாதாரண மார்க்கங்களை உபயோகப் படுத்திக்கொள்ள எல்லாருக்கும் உரிமையிருக்கிறது. ஆனால் தங்கள் உழைப்பையும், பணச்செலவையும் மீத்திக்கொண்டு, தாங்கள் இலாபமட்டு மடைவதற்காக அச்சுரிமை சட்டத்தின்படி (18 C. W. N. 1079.) இன்னொருவர் அச்சுரிமை பெற்றிருக்கும் புத்தகத்தி லிருப்பவைகளை யெடுத்துக் கொள்ள ஒருவருக்கும் உரிமையில்லை.

குற்றவாளி சென்னையிலும் ஸ்ரீரங்கத்திலும் தனது பஞ்சாங்கத்தை விற்றிருக்கிறார் என்பதற்குக்கூட ருசுவிருக்கிறது. குற்றவாளி அதை மறுத்துக் கூறவில்லை. குற்றவாளியின் வக்கீல் பம்பாய் ஹைகோர்ட்டில் நடந்த ஒரு வியாஜ்ஜியத்தை (இந்திய வியாஜ்ஜியங்கள் LXV வது வாலியம் — 187-ம் பக்கம் பம்பாய்ஹைகோர்ட் 1921ஹு த்திய 59 வது வியாஜ்ஜியம்) ஆதாரமாக நம்புகிறார். இந்த வியாஜ்ஜியததில் சம்பந்தப்பட்ட புத்தகம் அச்சுரிமை பெறப்படாத புத்தகம். அது இந்த வியாஜ்ஜியத்தில் குற்றவாளிக்கு எவ்வாறு அனுகூல முண்டாக்கும் என்பது நமக்குப் புலப்படவில்லை. மறுபடி குற்றவாளி A 1, B 1 குறிப்பிட்ட ஜாப்தாக்களை நியாயவிரோதமானவழியில் உபயோகிக்கவில்லை யென்று அவருடைய வக்கீல் வாதிக்கிறார். இந்த வாதத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. பிராதியுடைய பஞ்சாங்கத்தின் (A1) அச்சுரிமையை யதிக்கிரமித்து குற்றவாளி தன் பஞ்

சாங்கத்தை வெளியிட்டிருக்கிறார் என்பதிலும், குற்றவாளி அறிந்திருந்தே தான் இலாபமடையவும், பிராதிக்குப் பாதக முண்டாக்கவுமே தமது பஞ்சாங்கத்தைப் பிரசுரம்செய்து விற்பனை செய்தா ரென்பதிலும் நமக்குச் சந்தேகமே யில்லை.

4. மேற்கண்ட காரணங்களால், 1914-ம் வருட அச்சுரிமை சட்டத்தின் 7-வது பிரிவின்படி எதிரி குற்றவாளியே யென்று தீர்மானிக்கிறோம். தண்டனை விஷயத்தைக் கவனிக்கும் போது, குற்றத்தில் சம்பந்தப்பட்ட பஞ்சாங்கங்களில் ஒன்றுமட்டுமே நம்முன் கொண்டு வரப்பட்டிருக்கிறது. குற்றவாளி இப்பஞ்சாங்கங்களின் எத்தனை பிரதிகளை யச்சிட்டுவிற்றார் என்பதைத் திட்டமாய்க் காட்டத்தக்க ருசுவில்லை. சென்னையிலும் ஸ்ரீரங்கத்திலும் பஞ்சாங்கப் பிரதிகள் விற்கப்பட்டன வென்று பொதுவாய்க் கூறப்பட்டிருக்கிறது. இது போதுமான ருசுவல்ல. ஆகையால் குற்றவாளி ரூபா 20 அபராதம் செலுத்தவேண்டு மென்றும், செலுத்தத்தவறினால் 3 நாட்கள் வெறுங்காவல் தண்டனை யனுபவிக்க வேண்டு மென்றும் தீர்ப்புசெய்கிறோம். ஷை சட்டத்தின் 10 (1) வது பிரிவின்படி குற்றவாளியின் வசத்திலிருக்கும் எல்லா பஞ்சாங்கப் பிரதிகளையும் பிராதிக்குக் கொடுத்துவிட வேண்டு மென்று கட்டளை யிடுகிறோம்.

(கையொப்பம்) ஜே. நாராயணரெட்டி,
2 - வது பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட்,

(சரியான நகல்) 26—7—'22.

---

## தபால் கொள்ளைக்காரர்கள்.

(38-ம் பக்கத் தொடர்ச்சி.)

இரண்டு துஷ்டர்கள் உடனே ஆனந்தஸிங்கைக் குடிசைக்குள் இழுத்துச் சென்றார்கள். அங்கிருந்த வெளிச்சத்தில் அவன் முகத்தைப் பார்த்ததே இரங்கநாதன் வீறிட்டுக்கொண்டு பின்னிடைந்து நின்று "இவன்றான் அந்த வேட்டை நாயாகிய தபால் இலாகா துப்பறிபவன். தெய்வ கெதியாய் இவன் நமது கரத்திற் சிக்கிக்கொண்டான்" என்றான்.

மற்றகள்ளர் யாவரும் இதைக்கேட்டுத் திடுக்கிட்டுக் குதித்து "ஆ! இவன் உயிர் இருக்கிறதா போய்விட்டதா பார் பார்" என்றார்கள்.

இரங்நாதன் தட்சணம் முழங்காலிட்டு, உட்கார்ந்து ஆனந்தஸிங்கின் நாடிகளையும் இருதயத்தையும் தொட்டுப் பார்த்தான். ஒரு சலனமும் புலப்படவில்லை. அவன் கபாலத்தைத் தொட்டுப் பார்த்தான் சில்லென்றிருந்தது. பிறகு தன் நண்பரைநோக்கி "இவன் தன் முன்னோர்கள் கூட்டத்திற்போய்ச் சேர்ந்து விட்டான். ஜக்கா! நீ யடித்த அந்தப்பலமான ஒரேயடியால் உன்னைக் காப்பாற்றிக் கொண்டதோடு நம் மனைவரையும் காப்பாற்றினாய். நாங்க ளனைவரும் உனக்கு மிக்க கடமைப்பட் டிருக்கிறோம்" என்றான்.

ஜக்கன் "இவன் யாரென்று தெரியாமலே நான் பலமாய் அடித்தேன்" என்றான்.

இராங்க:—இவன் ஒருவனே நமது இரகசியத்தை யறிந்தவன். இவனே உங்களிற் சிலரை தண்டனை யடையச் செய்தவன். இன்னும் உயிரோடிருந்தால் நம்மனைவரையும் குறைந்தது இருபது இருபது வருடங்களுக்கு நீர்மேலேற்றி விடுவான். இவன் ஆற்றுவழியாகவே நம்மைப் பின் தொடர்ந்து வந்திருக்கிறான். இவன் ஆட்கள் சமீபத்திலேயே யிருக்கவேண்டும். ஆகையால் நாம் இங்கு ஆலசியமா யிருப்பது ஆபத்துக்கிடமாகும். இப்போது சவத்தை யென்செய்வது?" என்றான்.

ஜக்கன்:—"ஆ! கவனம் வந்தது. இங்கே சமீபத்திலேயே ஒரு கிணறு இருக்கிறது, அதில் போட்டுவிடலாம்." என்றான்.

இராங்க:—"அந்தக்கிணறு எப்படி யிருக்கிறது பார்ப்போம்" என்றான்.

உடனே கள்ளர்கள் யாவரும்போய் அக்கிணற்றைப் பார்த்தார்கள். அது நெடுநாளாய் உபயோகத்தி லிராத ஒரு பாழுங்கிணறு. ஆயினும் 15 அடிக்குமேல் ஆழமாயிருந்தது.

இராங்க:—"சரி அவனை யிதில் போட்டுவிடலாம். நண்பர்களே! அவனை யிங்கிழுத்து வாருங்கள். இதில் அடக்கம் செய்து விடுவோம்" என்றான்.

கள்ளர்கள் அவ்வாறே அவனை யிழுத்துவர இராங்காதனும் இன்னும் இருவரும் அவனைப் பிடித்து அக்கிணற்றில் தலை கீழாய்த் தள்ளிவிட்டார்கள். அப்படித் தள்ளும்போது அக்கிணற்றின் பக்கங்களில் பதியவைத்திருந்த பலகைகளில் சில பெயர்ந்து விழுந்தன. அதனால் இராங்காதன் கூட கிணற்றில் விழச் சற்று தப்பினான். பிறகு கள்ளர் பெரிய பெரிய கற்களையும் மண்ணாங் கட்டிகளையும் போட்டுச் சற்றேறக் குறையப் பாதிகிணற்றைத் தூர்த்துவிட்டார்கள். அதன்பிறகு தன் விரோதி மடிந்தானென்று மனதில் நிட்சயமாய்த் தோன்றிய போதிலும் இராங்காதனுடைய நெஞ்சில்மட்டும் பூரணநிம்மதியில்லை. உடனே யவன் தன் நண்பர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு மேலையூரை நோக்கித் துரிதமாய்ச் சென்றான்.

அந்நகரின் ஓரத்தில் வந்ததே இராங்காதன் தன் நண்பர்களை நிற்கச் செய்து அவர்களை நோக்கிக் கீழ்க்கண்டவாறு கூறினான்:—

"நண்பர்களே! நாம் இப்போது பிரிந்துவிட வேண்டும். ஆனால் நாம் இனி நம்முடைய வேலையைத் தாராளமாய்ச் செய்யலாம். நம்மைப் பிடிக்கக்கூடிய ஆனந்தவல்லி மடிந்து போனவரையில் இனி இது எப்படி நடக்கிறதென்று கண்டுபிடிக்கக் கூடிய ஆளேகிடையாது. நீங்கள் எப்போதும்போல் அரசமரச்சாலை வளைவில் பழையவிடத்தில் இருங்கள். மேற்கே செல்லும் ஒவ்வொரு தபால்வண்டிக்கும் தவிறாமல் வந்து காத்திருங்கள். நகரைச் சுற்றிக்கொண்டு ஆற்றின் வழியாய்ச் சென்று எச்சரிக்கையாயிருங்கள்."

தங்கள் தலைவன் கட்டளைகளைக் கேட்டுக்கொண்ட கள்ளர்கள் சென்றபின் இராங்காதன் நேராய்ப் பொழுது விடிந்ததே சாமிநாதன் வீட்டிற்குச் சென்றான். அச்சமயம் சாமிநாதன் குடிவெறி தெளிந்து உட்கார்ந்திருந்தான். உடனே இருவரும் ஒரு இரகசியமான விடத்தில் உட்கார்ந்து சற்று நேரம் சம்பாஷித்தார்கள்,

சாமிநாதன்:—“ சரி அந்தத் துப்பறியும் நாய் செத்தொழிந்தது” என்றான்.

இரங்:—ஆம். அது நம்முடைய அதிர்ஷ்டமே; இனி நாம் அதற்குப் பயப்பட வேண்டியதில்லை.

சாமி:—ஆம் உண்மையே. இனி நாம் நமது வேலையைத் தாராளமாய்ச் செய்யலாம். ஆனால் எனக்கு ஒரு விஷயம் கலவரமாயிருக்கிறது.

இரங்:—என்ன விஷயம்?

சாமி:—அந்தப்பெண் ஓடிவிட்டதே.

இரங்:—முன்னே யவளைக்கண்டு பிடிக்க வேண்டும்.

சாமி:—ஒரு சமயம் அவளுக்கு நமது சங்கதி தெரியுமோ.?

இரங்:—எப்படி தெரியும்?

சாமி:—அந்தத் துப்பறியும் கழுதையை யவள் பார்த்திருக்கிறாளே.

இரங்:—இல்லை யில்லை. என் புத்தியில் படுவது ஒரு சமயம் நமது இரகசியம் ஒரு ஆளுக்குத் தெரிந்தால் தெரிந்திருக்கலாம்.

சாமி:—யாரது?

இரங்:—அந்தத் தபால் இலிகிதன் அம்பலவாணன்.

சாமி:—அந்த நாய்க்கு என்ன தெரியும். அப்படித் தெரிந்திருந்தால் தான் சுயாதீன மடைய அவன் முன்பே யச்சங்கதியை யுபயோகித்திருப்பான்.

இரங்:—“ அவன் முன்னமே சுயாதீன மடைந்து விட்டான்” என்றான்.

இதைக் கேட்டதே சாமிநாதன் “ஆ” என்று குதித்தெழுந்து, விடுதலையடைந்து விட்டானா? அத்தகைய சந்தேக மிருக்கும்போது எந்த ஜூரி அவனை விட்டிருப்பான்?

இரங்:—எந்த ஜூரியும் அவனை விடவில்லை. அவனே இரவு சிறைச்சாலையினின்று எப்படியோ தப்பித்துக் கொண்டு போய்விட்டான்.

இதைக்கேட்டதே அவன் இடிவிழுந்தவன்போல் பிரமித்து “சிறைச்சாலையி லிருந்து தப்பித்துக் கொண்டு போய்விட்டானா? எப்படிப் போய் விட்டான்? “ என்று ஆத்திரத்தோடும் பயத்தோடும் கேட்டான்.

இரங்க:—சாதாரண மாகவே; சாளரக்கம்பிகளை யறுத்துக்கொண்டு கயற்றின் வழியாய்ச் சுவரேறி வந்துவிட்டான். முக்கால் பங்கு ஆனந்தவின் உளவாயிருந்தா னென்று எனக்குப்படுகிறது.

சாமி:—அந்தத் துப்பறியும் நாய் ஒழிந்தது உண்மைதானே?

இரங்க:—அவன் வரையில் பிழைத்தெழுந்து வரப்போகிறதில்லை. ஆயினும் நமது ஆபத்து ஒழியவில்லை.

சாமி:—ஏன்?

இரங்க:—அவன்கூட வந்த போலீஸார் சும்மாயிரார்கள்.

சாமிநாதன் பயத்தால் திடுக்கிட்டான். அவன் முகம் வெளுத்து விட்டது. “ ஆம் ஆம், நீ கூறுவதுண்மையே. நான் அதைப்பற்றி சிந்திக்க வில்லை. அவர்கள் உன்னைப் பார்த்தார்களோ?

இராங்க:—“ இல்லை இல்லை. ஆனால் நாங்க ளனைவரும் இங்கிருந்து வெளி யில் சென்றதை யவர்கள் பார்த்தார்கள். கூடிய சீக்கிரத்தில் இவ் வீட்டைவந்து எப்படியாவது சோதனை செய்வார்கள். ” என்றான்.

இதைக் கேட்டதே சாமிநாதன் வேட்டையில் பயந்து வேடன்கைக் குத் தப்பி ஓடமுடியாத மிருகம்போல் நடுக்கத்தோடு “ அய்யோ! நான் என்செய்வது ? ” என்றான்.

இரங்கநாதன்:—“ சே! இது கெட்டுது. இதற்காகக் கோழையாய் விடாதே இதென்ன சொல்ப இக்கட்டு.. இதிலிருந்து சுலபமாய்த் தப்பித்துக் கொள்ள நான் வழிகாட்டுகிறேன். என் உதவியில்லா விடின் உன் எற்பாடுக ளனைத்தும் பயனில்லாமற் போயிருக்கு மென்றே நினைக் றேன் ” என்றான்.

சாமி:—“ நீ எனக்கு மூத்தவன். அதிக உலக அனுபவ முடையவன். இப் போது என்னை யென்னசெய்யச் சொல்கிறாய் ” என்றான்.

(தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாசாரங்கள்.

### வைரப்பரீட்சை.

வைரங்களைப் பரீக்ஷிக்க இரண்டு சுலபமானமார்க்கங்க ளிருக்கின்றன.

1. ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் சுத்தமான ஜலம் விட்டு அதில் வைரத்தைப் போட்டால், அது அசல் வைரமாயின் அப்போதும் அது கொஞ்சம் ஒளி வீசிக்கொண்டே யிருக்கும். அசல்வைர மல்லாவிடின் ஒளி வீசாது.

2. வைரத்தின்மேல் ஒரு சிறுதுளி ஜலம்விட்டு, ஒரு குண்டுசி அல் லது ஊசி முதலியவற்றின் நுனியால் நீர்த்துளியை அசைத்துக் கலைத்தால் அசல் வைரமாயின் நீர்த்துளி சிதறிக்கலைந்து போகாமல், பாதரசத்துளி போல் அப்படியே திரட்சியாக விருக்கும். அசல்வைர மல்லாவிட்டால் நீர் த்துளி பரவிவிடும்.

இவை யிரண்டும் ஜலப்பரீட்சைகள்.

### இன்னொரு பரீட்சை.

ஒரு வெள்ளைக் கடிதத்தின்மேல் ஒரு சிறுவட்டமான கறுப்புக்குறி வைக்கவேண்டும், வைரத்தை யிடதுகரத்தில் பற்றி அக்குறிக்குச் சற்று தூரத்தில் நேராய்ப் பிடித்துக்கொண்டு, வலது கரத்தில் ஒரு கண்ணாடி வைத்துக்கொண்டு அதை வைரத்தின்மேல் சற்று எட்டப் பிடித்துக்கொ ண்டு அக்குறியை யவற்றின் மூலமாகப் பார்க்கவேண்டும். அக்கறுப்புக்குறி தெளிவாய்த்தோன்றினால் அது அசல்வைரமே; அப்படிக்கின்றி கம்மலாகத் தோன்றினால் அசல் வைரமல்ல, போலிவைரமே (இமிடேஷன்)

---

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## துந்துபிஞு புரட்டாசிமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
## பசலி 1331—கோல்லம் 1097-98—ஹிஜரி 1340—41
## இங்கிலீஷ் 1922ஞு செப்டம்பர்மீ—அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர் (1922ஞ அக்டோபர்மீ) | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | ஞா | ஏகா43-25 | புன-0-58<br>பூச-57-2 | சித்-60 | சர்வ ஏகாதசி |
| 2 | 18 | திங் | துவ36-8 | ஆயி-51-40 | சி51-40 ம | ஆயுதம் பயிற்ற |
| 8 | 19 | செ | திர28-35 | மக-45-15 | சித்-60 | கலியுகாதி. பிரதோஷம் |
| 4 | 20 | புத | சது19-38 | பூர-88-10 | அமி-60 | மாளய அமாவாசை |
| 5 | 21 | வியா | ● அ10 18 | உத்-30-48 | ம30-48 சி | நவராத்திரி ஆரம்பம் |
| 6 | 22 | வெ | பிர1-8<br>துதி52-8 | அஸ்-23-35 | அ23-35சி | ஆஸ்வீய:சுத்தம் |
| 7 | 28 | சனி | திரி44-0 | சித்-16-55 | ம-16-55சி | துலாயனம் நா-49-8 |
| 8 | 24 | ஞா | சது36-58 | சுவா-11-15 | சி 11-55 ம | இரவில் தனியநாள் |
| 9 | 25 | திங் | பஞ்31-20 | விசா-6-53 | மர 6-58சி | பகலில் தனியநாள் |
| 10 | 26 | செ | சஷ்27-33 | அனு-4-10 | சி 4-10மர | பிரயாணம் விலக்க |
| 11 | 27 | புத | சப்25-38 | கேட்-3-15 | சி-3-15மர | மாவொங்க |
| 12 | 28 | வியா | அ25-40 | மூல-4-13 | சித்-60 | துர்க்காஷ்டமி |
| 18 | 29 | வெ | நவ27-80 | பூரா-7-5 | பிர7-5சித் | ஆயுதபூஜை |
| 14 | 80 | சனி | தச31-0 | உத்-11-28 | சித்-60 | விஜயதசமி |
| 15 | 1 | ஞா | ஏக35-50 | திரு-17-20 | சித்-60 | சர்வ ஏகாதசி |
| 16 | 2 | திங் | து41-35 | அவி-24-10 | சித்-60 | கோ துவாதசி, கரிநாள் |
| 17 | 8 | செ | திர48-0 | சதை-31-40 | மர-60 | பிரதோஷம் |
| 18 | 4 | புத | சது54-43 | பூரட்-39-30 | அ39-30 சி | பிரயாணம் விலக்க |
| 19 | 5 | வியா | ○ 60 ... | உத்-47-13 | சித்-60 | கௌமதிஜாகர விரதம் |
| 20 | 6 | வெ | ○ 1-5 | ரேவ-54-43 | சி54-43அ | |
| 21 | 7 | சனி | பிர7-13 | அசு-60 ... | சித்-60 | |
| 22 | 8 | ஞா | து12-45 | அசு-1-40 | சி1-40 பிர | |
| 28 | 9 | திங் | திரி17-30 | பர-7-50 | சி7-50மர | |
| 24 | 10 | செ | சது21-18 | கிரு-13-5 | சித்13-5அ | |
| 25 | 11 | புத | பஞ்23-40 | ரோ-17-8 | சித்-60 | |
| 26 | 12 | வியா | சஷ்24-45 | மிரு-19-55 | மர-60 | |
| 27 | 18 | வெ | சப்24-13 | திரு-21-7 | சித்60 | |
| 28 | 14 | சனி | அஷ்22-5 | புன-20-43 | சித்-60 | |
| 29 | 15 | ஞா | நவ18-25 | பூச-18-50 | சித்60 | |
| 80 | 16 | திங் | தச18-3 | ஆயி-15-25 | சி51-25 ம | ஸ்மார்த்த ஏகாதசி |

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| | 4உ துலா-பு<br>6உ து-குரு<br>15-விரு-சு<br>28உகன்-பு | | |
| செ | | சுக் | சூ-கு<br>பு-ச<br>ராகு |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the
Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry St., Madras

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| | | |
|---|---|---|
| தொகுதி ௮ | துந்துபி ஞு புரட்டாசி மீ க உ<br>1922 ஞு செப்டம்பர் மீ 17 உ | பகுதி 3 |

## கடவுள் வணக்கம்.

ஏக மானவுரு வான நீயருளி
னனேகவுரு வாகியே
எந்த நாளகில கோடி சிருஷ்டிசெய
விசையு நாள்வரையு நாண்முத
லாக நாளது வரைக்கு முன்னடிமை
கூட வேசாக மானதோ
அனந்த முண்டுநல சாக மீதிதனு
னறிய வேண்டுவன வறியலாம்
மோக மாதிதரு பாச மானதை
யறிந்து விட்டுனையு மெனையுமே
முழு துணர்ந்துபர மான வின்பவெள
மூழ்க வேண்டுமிது வின்றியே
தேக மோகமுவி யாலு மோகமுவின்
பின்னை யுய்யும்வகை யுள்ளதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே.

---

இருளில மாதிநாத மீறதா மிவை கடந்த
பெருவில மாயதூய பேரொளிப் பிழம்பாய் நின்றும்
கருதரு மகண்டா னந்தக் கடவுணின் காட்சிகாண
வருகவென் றழைத்தா லன்றி வாழ்வுண்டோ வஞ்சனேற்கே.

வஞ்சனை யழுக்காறுதி வைத்திடும் பாண்ட மான
நெஞ்சனை வலிதின் மென்மேல் நெக்குநெக் குருகப்பண்ணி
அஞ்சலி செய்யுங்கையு மருவிநீர் விழியு மாகத்
தஞ்சமென் றிரங்கிக் காக்கத் தற்பரா பரமுனக்கே.

## அரும் பொருள் விளக்கம்.

1. ஏகமான உரு—இரண்டற்று எங்கும் நிறைந்த ஏகசொரூபம். அருளினால்—(ஆன்மாக்களை யீடேற்றக் கருதி அவைகட்குத் தனுகரண புவன போகங்களை யளிக்கவேண்டுமென்ற)கிருபையால். அனேக உருவாகி—நாம ரூபத்தோற்றமாகிய பல உருவங்களாகி.

பொன்னே பலவிதப் பணிகளாய் இருப்பதுபோல் ஆகாயமுதல் பிருதிவியீருக உள்ள ஐம்பூத சிருட்டியாகிய யாவும் அவனே யன்றி யில்லை யென்ற சுருதிப்படி 'நீயே எல்லாமாய் விளங்குகிறாய்' என்றார். "எல்லா உலகமுமானாய் நீயே" என்றார் அப்பமூர்த்திகளும்.

"உடலா யுயிரா யுலகம தாகிக்
கடலாகிக் கார்முகி னீர்பொழி வானாகி
யிடையா யுலப்பிலி யெங்குந் தானாகி
யிடையார் பெருவிழி யண்ண னின்றானே" (திருமந்திரம்)

"எந்த நாளகில...முன்னடிமை கூடவே சனனமானது"—ஆன்மா பரமான்மாவைப்போல் நித்தியமாதலின் எந்த காலத்தில் நீ சிருஷ்டி செய்யத் தொடங்கினையோ அது முதல் நானும் (உன்னைப் பிரியாமலே) எண்ணிறந்த சனனங்களை யெடுத்து வருகின்றேன் என்றார்.

"நலசனனமீது" — இம்மானிட சனனமே தன்னையும் தலைவனையுமறிந்து, முத்திப்பேற்றை யடைதற்குரிய சனனம் — இதனானே எல்லா மகான்களும் இச்சனனம் மிக்க அரிதானதையால் இதை வீணாக்காது ஈசனருளைப்பெற முயலவேண்டுமென்று வற்புறுத்திக் கூறியிருக்கின்றனர்.

பிரம்மான்மவைக்கியமாகிய பேரின்பநிலையை இத் தேகத்திலிருக்கும் போதே யடையவேண்டுமாதலின் "தேகம் என்னைவிட்டு நழுவி, ஆன்மாவாகிய நானும் தேகத்தைவிட்டு நழுவிவிட்டால், பிறகு அதையடைய முடியாதே" என்றனர். இம்மகானே "தேசோமயானந்தம்" என்றத் தொடக்கத்தின் முதல் பாசுரத்தில்,

"ஒன்றோ டிரண்டெனாச் சமரச சொரூபசுக
முற்றிடவென் மனதின் வண்ணம்
திருவருள் முடிக்கவித் தேகமொடு காண்பனோ
தேடரிய சத்தாகி யென்
* * * * * * " என்று

அருளினார்.

2. "நாதம்" என்பது தத்துவங்களுக் கெல்லாம் முடிவிலுள்ள முப்பத்தாறுவது தத்துவமாகும். "பெருகிலமாயதூய பேரொளிப்பிழம்பு"—இதுவே நாதத்திற்கு அப்புறப்பட்டதும் யாவற்றிற்கும் மூலகாரணமானதுமாகிய ஞானவெளியாம்—இதுவே சோதி சொரூபமாகிய பரம்பொருளின் தரிசனமாம்.

"வருகவென் றழைத்தாலன்றி — நீ அருள் செய்யாவிடின். சூரியகிரணம் எங்கும் நிறைந்திருந்தாலும் குருடன் அதைக் காணமுடியாதவாறு பரம்பொருள் சோதிப்பிழம்பாய் நீக்கமற எங்கும் நிறைந்தொளிரினும் அவனருளால் நமது அஞ்ஞானமாகிய படலம் நீக்கப்பட்டாலன்றி நாம் அவனைத் தரிசித்தல் கூடாதாகும்.

3. வஞ்சனை, யழுக்காறு முதலிய துர்க்குணங்கள் நிறைந்த நெஞ்சுடைய என் மனம் கசிந்துருகி உன்னிடம் அன்பு பெருகுமாறு நீயே அருள் புரியவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன் என்பதாம்.

இந்த இரண்டு பாசுரங்களும் உறுதியான பக்தியின் மார்க்கத்தை வெளியிடுகின்றன.




## வாக்கும் செயலும்.

இப் பூவுலகில், முக்கியமாக இக்கலிகாலத்தில், வாக்கும் செயலும் ஒன்றாகப் பொருந்தி யிருப்பதைக் காண்பது மிக்க அரிது என்பது யாவரு மறிந்த விஷயமே. அதாவது, பேசுகிறபடி நடக்கும் மனிதரைக் காண்பது அரிது. பெரும்பாலும் மனிதற்கு இது இயற்கையாயிருக்கிறது எனலாம். அதற்கு அநுசரணையாகச் "சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாம்—சொல்லிய வண்ணம் செயல்" என்று பொய்யாமொழியாரே யருளினர்.

ஒரு புராணீகர் பகல்முழுதும் "தன்மனையாளைத் தனிமனையிருத்திப் பிறன்மனைக்கேகும் பேதையும் பதரே—அதாவது அக்கினி சாட்சியாகப் பாணிக்கிரகணம் செய்துகொண்ட தன் உத்தம பத்தினியை இரவில் வீட்டில் தனித்திருக்க விட்டுத் தான்மட்டும் இரவுமுழுமையும் பரத்தையர் என்னும் காமக்கிழத்தியிடம் காலத்தைக்கழிக்கும் அறிவிலியாகிய மனிதன் பதருக்குச் சமானம்" என்று பிரசங்கம் செய்கிறார். ஆனால் இரவு பத்துமணிக்குப் பிர

சங்கியார் எங்கிருக்கின்றார் என்றாலோ, தன்னிலும் வயதில் மூத்த விலைமாதிடம் குலவிக்கொண்டிருக்கிறார்.

வேதாந்த சாத்திரம் பாடங்கூறும் ஒருவர் "கோபம் மகா கொடியது. அதுவே அகங்காரம். நான் என்ற அகங்கார மற்றால் கோபம் நசிக்கும். கோபத்தை யடக்கினாலன்றி ஞானம் வராது" என்று விஸ்தாரமாகப் போதிக்கிறார். எதிரிலிருக்கும் சீடன் அதே சமயத்தில் அதே விஷயத்தைச்சேர்ந்த ஒரே சந்தேகத்தைப்பற்றி ஒருமுறைக்கிருமுறை விளங்கவில்லையென்று கேட்டால் குருவுக்கு அபாரமாய்க் கோபம் வந்துவிடுகிறது.

சிலர் "சே! மனமென்ன நம்மை யறியாமல் ஆடுமோ. நாம் வேண்டுமென்றால் வேண்டும். வேண்டாமென்றால் வேண்டாம்" என்று அலட்சியமாய்க் கூறிவிடுகிறார்கள். உண்மையில் இவர்கள் எள்ளளவேனும் மனதை யடக்கக் கூடியவர்களல்ல. இன்னும், இவர்களுக்கு மனம் என்பது என்னவென்று அதை வேறு பிரித்தறியவே தெரியாது. இவர்கள் மனதையடக்க முயன்றிருப்பார்களாயின், தாயுமானவர் "சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற திற மரிது" என்று அருளியதற் கொப்ப, "மனதை யடக்குதலைவிடக் கஷ்டமானவேலை வேறொன்று மில்லை" என்றே கூறுவார்கள்.

இவ்வாறு வாக்கினும் செய்கையினும் வேறுபட்டு நடப்பதில் பலவிதங்க ளிருக்கின்றன. எப்போதும் நல்லதே பகிரங்கமாய் வெளிவருவதையும், தீயது மறைந்திருப்பதையும் உலகில் அனுபவமாய்க் காணலாம். எவனும் தன் ஒழுக்கத்தில் எவ்வளவு தவறுகளும் தீங்குகளு மிருப்பினும், அன்னியர்க்கு நீதிகளையும் நல்ல நடக்கை நற்குணங்களையுமே போதிப்பான். இது உலகில் இயற்கை. "நான் சொல்கிறபடி நட, நான் நடக்கிறபடி நடக்காதே" என்பது ஒரு பழமொழி. இது சாதாரணமாய்த் தாழ்வான அபிப்பிராயத்திலேயே வழங்கப் படுகிறது. இதன் மற்றப் பக்கத்தை நோக்கின் இதில் உயர்வான கருத்திருக்கக் காணலாம். எவ்வாறெனில் உலகில் ஒருவனிடம் ஏதேனும் கெட்ட பழக்க மிருப்பின் அப்பழக்கம் தன்னிட மிருப்பதாலேயே அவன் அது குற்றமுடையதென்று கூறமாட்டான். சாதாரணமான மூக்குத்தூள் பழக்கத்தைத் திருட்டாந்தமாக எடுத்துக்கொள்வோம். மூக்குத்தூளால் பல கெடுதிகளிருப்பது உண்மையே யெனினும்,

பொடிப்போடும் ஒருவனை அதைப்பற்றிக் கேட்டால், " அதி லென்ன கெடுதியிருக்கிறது? பொடி போட்டுக் கொண்டால் சுறு சுறுப்பை யுண்டாக்குகிறது. கவனசுத்தி யளிக்கிறது" என்று தான் கூறுவான்.

ஆனல் அறிவுடைய எவனும் தன் நடக்கையாயினும் குற்ற முள்ளதாயின் " நான்முட்டாள் தனமாய் இப்பழக்கத்தை வைத் துக்கொண்டேன் " என்று அதிலுள்ள குற்றங்களை வெளியிட்டு, " ஆகையால் நீ இப்பழக்கம் வைத்துக்கொள்ள வேண்டாம் " என்று கூறுவான். இதுவே "நான் சொல்கிறபடிநட, நான் நடக் கிறபடி நடவாதே" என்பது. இவன் கூறுவதைக் கேட்கிறவன் சற்று சிந்தித்துப்பார்த்தால், " அடடா! இவன் தன் சுயஅநு பவத்தால் அது கெட்ட பழக்கமென் றுணர்ந்து நமக்குக் கூறு கிருன். ஆதலால் இவன்கூறியபடி நடப்பதுதான் நமக்கு நன்மை பயக்கும் " என் றுணர்வான்.

சொல்கிறபடி நடக்காவிட்டால் கெடுதி சம்பவிக்கக் கூடிய விஷயங்களும் உண்டு. ஒருவன் தன் நோய் தீருவதற்காக வைத்தியன் கூறிய ஔடதத்தை யறிந்து கொண்டபின், "நாம் அந்த மருந்தைச் சாப்பிட வேண்டும்" என்று மட்டும் யாவரிட மும் கூறிக்கொண்டு, மருந்தை யருந்தா திருப்பினும், அல்லது அந்நோயை விர்த்தி செய்யத்தக்க பதார்த்தங்களை யுண்டுகொண் டிருப்பினும் அவன் தீங்கடைவது திண்ணமன்றே. அவ்வாறே ஒரு மனிதன் அல்லது ஒரு ஜனசமூகம் முன்னேற்ற மடைய வேண்டுமாயின் இதைச் செய்யவேண்டு மதைச்செய்ய வேண்டு மென்று மட்டும் கூறிக்கொண்டும், அதற்கு மாருன விவகாரங் களைச் செய்துகொண்டும் இருந்தால் அவர்கள் எப்படி முன்னே ற்ற மடைவார்கள்?

இப்போது நமது நாட்டில் முன்னேற்ற மடையவேண்டு மென்ற கிளர்ச்சி எங்கும் நிகழ்வது யாவரு மறிந்ததே. ஆனல் நம்மவர் இவ்விஷயத்தில் சொல்வதன்படி நடக்கிருர்களாவென்று கவனித்தால் அப்படிக்கில்லை யென்றும் சில விஷயங்களில் நேர் மாருக நடக்கிருர்களென்றும் அறியலாம்.

திருட்டாந்தமாக ஜாதி விஷயத்தை யெடுத்துக்கொள்வோம். நமது நாட்டில் ஜாதி வித்தியாசம் இருப்பதாலேயே ஒற்றுமைக் குறைவு ஏற்பட்டிருக்கிறது என்று அனேகர் கூறுகிருர்கள். நம்

நாட்டு அறிவாளிகளாகிய பெரியோர்கள் முன்னே 'தீண்டாமை' என்பதை யொழித்து ஒரு வகுப்பாரைமட்டும் தாழ்ந்த வகுப்பாரென்று கருதுவதை விட்டுச் சமமாய் நடத்தவேண்டும் என்று அறிவுறுத்துகிறார்கள். அவ்வாறே செய்வதற்காக இப்போது நம் நாட்டில் எங்கும் முயற்சிகள் நடந்துவருகின்றன.

ஆனால் ஒருபுறம் சில வகுப்பார் தங்கள் ஜாதியாரின் முன்னேற்றத்திற்கென்று பத்திரிகைகளைப் பிரசுரிக்கிறார்கள். ஆனால் அவற்றில் தங்கள் ஜாதியின் உயர்வைப்பற்றி நிரூபிப்பதையும், அதை ஸ்திரப்படுத்த முயல்வதையுமே முக்கிய விஷயமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இது இப்படியிருக்க இலங்கையில் பிரசுரமாகும் "ஒடுக்கப்பட்ட இந்திய மக்களின் ஊழியன்" என்ற ஒரு சஞ்சிகையில் அதன் ஆசிரியர், எல்லாப் பிரிவினையும், உயர்வுதாழ்வு என்ற வித்தியாசமும் உடனே அடியோடொழிந்துவிட வேண்டுமென்கிறார். அதற்கு இவர் ஒருவழி காட்டுகிறார். அதாவது "இப்போது யாழ்ப்பாணத்தில் ஜாதிவித்தியாசம் அதிகமாக விருந்தாலும் அங்குள்ள தமிழ்க்கனவான்கள் தங்கள் பெயருக்குப்பின் ஜாதிக்குரிய பட்டப்பெயரைக் குறிக்காமல், நடராசன், செல்லையா, கந்தையா, சபாபதி, அருணாசலம் * * * என்று கைச்சாத்திடுகின்றனர்." என்றும், "உயர்ந்த வகுப்பார் என்று எண்ணப்படுபவரான வெள்ளாளர் முதலியோர் தமது பேருக்குப்பின் பிள்ளை, முதலியார், அவர், இவர் என்று போடப் பின்வாங்குகிறதில்லை" என்றும், "பிள்ளை, முதலியார், நாய்க்கர், செட்டியார், நாட்டார், கிராமணி, ஸா, மூப்பன், உடையார், தேவர், கொத்தனார், கோனார், அய்யர், முதலிய ஜாதிப்பெயர்களை யடியோடு விட்டொழித்து விட்டால் ஜாதி வேற்றுமை யடியோடு வெட்டப்படும்" என்றும் கூறுகிறார். இவர் கொள்கைப்படி ஜாதிமதம் முதலிய எவ்வித பேதமுமின்றி உண்ணல், கொள்ளல், கொடுத்தல் எல்லாவற்றிலும் எல்லாரும் சமமாய் நடந்துகொள்வதுதான் சீர்திருத்தம் என்பதா யிருக்கிறது.

அந்தோ! நம்மவர் நடக்கை "இருந்தால் இராஜாவா யிருப்பேன், இன்றேல் கழுதை மேய்ப்பேன்" என்பதுபோல் இருக்கிறதேயன்றி வேறில்லை. இப்போது சிலர் ஜாதிப்பட்டத்தைக் குறிக்காமல் கந்தசாமி, சின்னையா, செல்லையா, இராஜன் என்று

கைச்சாத் திடுவதற்கும், இன்னும் தங்கள் பெயரையே, அதன் முன்பாகத்தை விழுங்கி அதை ஒரு எழுத்தால் குறித்துவிட்டு சுத்த அவலட்சணப்படுத்தி பின் பாதியைமட்டும், 'இராமசாமி, என்பதற்கு "ஆர்-சாமி" என்றும், "கந்தசாமி" என்பதற்கு "கெ-சாமி" என்றும், " சுப்பிரமணி " என்பதற்கு " யஸ்-மணி " என்றும், "சாரங்கபாணி, சக்கிரபாணி" என்பவைகளுக்கு "யஸ்-பாணி" என்றும், "வேதாசலம் " என்பதற்கு " வி-சலம் " என்றும், "கோபாலன்" என்பதற்கு "ஜி-பாலன்" என்றும் வரைவதற்கும் காரணம் என்ன? அவர்கள் ஜாதிப் பிரிவினையை யொழிக்கக் கருதியே அவ்வாறு வரைகிறார்க ளென்று மேற்கண்ட சஞ்சிகையின் ஆசிரியர் கருதுகிறார்போலும்: இப்போது நம் நாட்டாரைப் பற்றி யிருக்கும் நவீன நாகரீகப் பேயின் மயக்கினாலேயே அவர்கள் அவ்வாறு செய்கிறார்களன்றி வேறில்லை. அவ்வாறு ஜாதிப் பெயரைக்குறிக்காது விட்டுவிட்டால் ஜாதிபேதம் ஒழிந்துபோம் என்று இவ்வாசிரியர் கருதுவது விந்தையே. கடிதத்தில் மட்டு மொழியுமேயன்றி மற்றப்படி யல்ல.

ஜாதிபேதம் இருந்தே தீரவேண்டுமென்று நாம் கூறவில்லை. ஆனால் இவர் கூறுவதுபோல் அவ்வாறு எல்லாம் சங்கரமாவது இப்போது நடக்கிற காரியமுமல்ல, நினைக்கத்தக்க காரியமு மல்ல வென்று மட்டும் கூறுவோம். இவர் சுலபமாய்க் கூறிவிடலாம். அப்படி செய்யவும் விரும்பலாம். நமது மகாராஜாவோடு சம பந்தியில் உட்கார்ந்து புசிக்க நமக்குப் பிரியமே. ஆனால் அரசர் தாம் உயர்ந்த அந்தஸ்திலிருப்பவர் என்பதை மறந்து நம்மோடு புசிக்க உடன்படுவாரா வென்று கருதவேண்டு மன்றோ?

நவீன சீர்திருத்தக் கட்சியைச் சேர்ந்த சீனிவாச அய்யர் என்பவர் தமது நண்பரான கந்தசாமி முதலியாரைக் காண ஒரு ரிக்ஷா வண்டியிலேறிச் சென்றார். அச்சமயம் முதலியார் பலகாரம் அருந்திக்கொண்டிருக்கிறார். அய்யரை யுட்காரச் சொல்லியபின், தம்முடன் பலகாரம் அருந்தும்படி யழைத்தார். அய்யர் மயங்கினர். முதலியார் "போவே, அய்யரே! நீ வீணாய் மேடைமேல் நின்று வாயால்மட்டும் ஜாதிபேதம் உதவாது என்று ஒழுங்காய்ப் பெரிய பிரசங்கம் செய்பவனே யன்றி நடக்கையில் இல்லை. பேசுகிறபடி நடந்து காட்டினாலன்றி நமது பிரசங்கங்கள் என்ன

பயன் காணும்..." என்று அய்யரை வாட்டு வாட்டென்று வாட்டத் தொடங்கினர்.

அய்யர் என்ன செய்வார்? மிக்க மனவருத்தமடைந்தார். கடைசியில் சட்டென்று ஒரு யோசனை வந்ததும், "முதலியாரே! சே! நீ கூறுவது சரியே. அடே கந்தா, இங்கே வாடா" என்று தமது ரிக்ஷாவை யிழுத்துவந்தவனைக் கூப்பிட்டார். முதலியார் "சே! என்ன ஓய்? பார்ப்பானா இருக்கிறாய். நாம் சாப்பிடுகிற இடத்தில் பறையனைக் கூப்பிடுகிறாயே" என்றார். அய்யர் சாந்தமாய் "இல்லை!யில்லை. நாம் பிரசங்கம் செய்கிறபடி ஜாதிவித்தியாசம் பாராமல் மூவருமாய் உண்ணலாம்" என்றார். முதலியார் பாடு காலைவாறித் தரையில் மோதியதுபோ லாயிற்று. அன்று முதல் இருவரும் "நாம் இப்படி ஏககாலத்தில் எல்லாம் ஒன்றாய் விடலாம் என்று கூறிக்கொண்டு திரிவது கடைசியில் மானக் கேடாய்த்தான் முடியும்" என்றுணர்ந்து அத்தலைகீழாக்கும் சீர்திருத்தப் பாடத்தை யன்றோடு விட்டொழிந்தார்கள்.

நமது நாட்டில் ஆதியில் எல்லாம் ஒரே யுயர் ஜாதியாக விருந்து, பிறகு ஆசாரத்தில் தவறியதாலும் தொழிலாலும் பிரிவினை யேற்பட்டதேயன்றி, ஆதியில் ஜாதிப்பிரிவினையில்லை யென்பதும், அப்போது ஆசாரத்தால் உயர்வு தாழ்வேற்பட்டிருப்பினும், ஒருவன் ஆசாரத்தில் உயர்ந்தால் அவன் மேல்இனத்தில் சேர்க்கப்பட்டு வந்தானென்பதும், பிற்காலத்திலேயே வரவர ஜாதி பிறப்புரிமையாகி ஆழ்ந்த பிரிவினை யேற்பட்ட தென்பதும் தெரிந்த விஷயமே. ஆயினும் இப்போதும் ஆசாரமே அதற்கு மூலகாரணமா யிருக்கிறது. இன்றும் நம் நாட்டில் எக் குலத்தானாயினும் ஞானவானாயின் அவனைப் பிராம்மணரும் வணங்கத் தடையில்லை. பிரம்மக்கியானம் அடைந்தவன் பிராமணனே யென்று கூறப்பட்டிக்கிறது.

ஜாதிபேதம் போய்விட்டால் மட்டும் உயர்வுதாழ்வு என்பது போய்விடுமென்று மேற்படி ஆசிரியர் கருதுவதும், ஜாதிபேத மிருப்பதாலேயே ஒற்றுமையில்லை யென்றும், அது ஒழிந்தால் ஒற்றுமை யுண்டாய்விடுமென்றும் சிலர் கருதுவதும் உலக அனுபவத்திற்கு முற்றும் மாறானதாகவே யிருக்கிறது.

நமது நாட்டில்தான் ஜாதிபேத மிருப்பதால் உயர்வுதாழ்வு உண்டாகி யிருக்கிறது என்றால், ஜாதி பேதம் மதபேதம் இரண்டு

மில்லாத மற்ற நாடுகளில் அவை யில்லாமலன்றே இருக்கவேண்டும். உயர்வு தாழ்வு என்ற வகுப்புபேதம் இல்லாத நாடே யில்லை. இங்கு ஜாதி காரணமாக அவை இருந்தால் மற்ற நாடுகளில் செல்வம், அந்தஸ்து, தொழில், இவற்றால் உயர்வு தாழ்வு அனுபவத்தில் இருந்தே தீருகிறது. நாம் ஞானத்தைப் போற்றுகிறோம். அவர்கள் செல்வத்தைப் போற்றுகிறார்கள். பல்லக்கிலேறிச் செல்வோனுக்கும் பல்லக்கைச் சுமந்து செல்வோனுக்கும் மூன்றாவது மனிதன் எவனேனும் சம மரியாதை யளிப்பானோ? அளிப்பவ னொருவனுளனேல் அவனை யுலகம் பித்தனென்றே கூறுமல்லவோ! அப்படியிருக்க ஏறுபவனுக் குள்ளும் சுமப்பவனுக் குள்ளும் எப்படி உயர்வு தாழ்வு தோன்றாது போம்? மனிதனுக்கு 'நான்' என்ற அகங்காரம் உள்ளவரையில் இப்பேதம் ஒழியா தென்பது உண்மை.

பேத மிருப்பினும் அந்த நாடுகளில் ஒற்றுமை யிருக்கிறது. நம் நாட்டில் அப்படியில்லை யென்பதனாலே அந்தப் பேதத்திற்கும் ஒற்றுமைக்கும் சம்பந்தமில்லை யென்று நன்கறியலாம். அபிமானமும் அபிப்பிராயமுமே ஒற்றுமையை யுண்டாக்கும். அபிப்பிராயபேதமே ஒற்றுமையைப் பங்கம் செய்யும். ஒருவன் வீடு பற்றிக்கொண்டால் ஜாதிமதம் அந்தஸ்து ஒரு பேதத்தையும் கவனியாமல் யாவரும் ஒன்றுசேர்ந்து அதை யணைக்கிறார்கள். ஏன்? அப்படிச் செய்யாவிடின் தங்கள் வீடும் அழியும் என்ற பயத்தால். தம் சொத்தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்ற ஒரு நாட்டம் திடமாக இருந்ததால், எல்லா வித்தியாசங்களும் மறைந்து ஒற்றுமை ஏற்பட்டது. இங்கிலாந்தில் ரோமன் காதலிக் மதத்தாருக்கும், புரொடஸ்டான்ட் மதத்தாருக்கும் கொடிய விரோதமாக விருந்தும், ஸ்பெயின் தேசத்தார் இங்கிலாந்தின் மேல் படை யெடுத்தபோது மதம், தொழில், அந்தஸ்து எல்லா பேதமும்விட்டு யாவரும் ஒரு மனதாய்க் கூடி எதிரிகளைத்துறத்தி விட்டார்கள். காரணம்—"நம் தாய்நாட்டை அன்னியர் கைப்பற்றாமல் காப்பாற்றிக்கொள்ளவேண்டும்" என்ற ஒரே அபிமானம் யாவர்க்கும் இருந்தது.

இப்போது அயர்லாந்தில் ஒரே ஜாதி ஒரே மதமாக விருப்பினும் உள்நாட்டில் கொடிய யுத்தம் நடைபெறுகிறது. ஒற்றுமை யெங்கோடிற்று? அவர்களுக்குச் சுயாதீனமளிக்கப்பட்டும், ஒரு கட்சிக்கும் மற்றொரு கட்சிக்கும் எத்தகைய துரைத்தனத்தை

ஸ்தாபிப்பது என்பதிலுண்டான அபிப்பிராயபேதமே இதற்குக் காரணம்.

நண்பர்களே! நம்மவர்களுக்கு தேசாபிமானம் பூரணமாகவும் உருதியாகவு மில்லாததே ஒற்றுமைக் குறைவிற்குக் காரணமன்றி மற்றவை யல்ல. தேசாபிமானம் என்பதற்கு எத்தகை எண்ணங்களும் நடக்கைகளும், குணங்களும் இருக்கவேண்டும் என்பதே நம்மில் அனேகர்க்குத் தெரியாது. அபிமானம் சரியாயிருந்தால் மற்ற வித்தியாசங்களில் மனம் செல்லாது. நாம் சொல்கிறபடி நடக்கமுயன்று, கால அளவிற்குத்தக்கபடி ஜாதி வித்தியாசத்தைப் படிப்படியாய் ஒழிக்க முயலவேண்டும். ஜாதிப் பிரிவினையை யின்னும் அகலப்படுத்தாமல், அதற்கு மெருகு கொடுத்து பிரகாசிக்கச் செய்யாமல், ஆன்றோர் கூறுமாறு முன்னே தீண்டாமையை யொழித்து தாழ்ந்தவகுப்பார்க்கு சதாசாரத்தைப் போதித்துச் சகோதரத்லத்தை விர்த்திசெய்து, தாய்நாட்டின் முன்னேற்றத்தைப்பற்றிய விஷயங்களில் எல்லா வித்தியாசங்களையும் அடியோடொழித்து, ஒரே காரியத்தில் கண்ணோக்கம் வைத்தொழுக வேண்டும். சுயநலம், கௌரவம் இவற்றை மலம்போல் வெறுக்கவேண்டும். ஒவ்வொருவரும் "இலாபமோ கௌரவமோ என் சகோதரனுக்கே கிடைக்கட்டும் எனக்குவேண்டாம்" என்ற எண்ணத்தோடு நடந்துகொள்ள வேண்டும். அதைவிட்டு "அய்யோ! கௌரவம் வந்தால் அவனுக்கு ஒரு சமயம் அது கிடைத்துவிடும். ஆகையால் அது நம் இருவர்க்குமே கிடைக்காமற் செய்வோம்" என்ற அறிவற்ற இழிவான எண்ணம் இருந்தால் நாம் ஒருபோதும் ஈடேற்ற மடையவேமாட்டோம். அத்தகைய எண்ணமுடையோர் முகதரிசனமே ஆகாது.

மதிமயக்கால் மலையின் அடிவாரத்திலிருந்து படிப்படியாய் அபாய இடமான மலையின்] உச்சியில் சென்று நிற்பவன், அபாயத்தை யுணர்ந்தபின் அடியில் வருவதற்கு, படிப்படியாய் இறங்கி வரவேண்டுமே யன்றி, ஒரேபாய்ச்சலில் குதிப்பானயின் மண்டையுடைந்து மடிவது சத்தியம். நமது ஜாதிபேதமும் இந்த மாதிரியேயிருக்கிறது.

ஆண்டவன் நமக்கு நல்லறிவளித்து நேர்வழிகாட்டி நமக்கும் நம் தாய் நாட்டிற்கும் நல்லருள் பாலிப்பாராக.

ஓம் தத் ஸத்.

---

அன்பு.

எமது அன்பார்ந்த சந்தாநேயர்காள்! யான், ஆனந்தன் பிறந்து சில நாட்கள் வரை அவனை அறியாமலிருந்து, பின் 5 ஆம் பிராய முதல் ஈனது வரையும் அவனது இனிய சொற்களைக்கேட்டு ஆனந்த முற்று வந்தும், அதன் பயனாய் எமது சொந்த அனுபவத்திலிருந்து யாதொரு வியாசமேனும் வரைந்து ஆனந்தனுக்குப் பாதகாணிக்கையாக அனுப்பியவனல்லேன். வெகு நாட்களுக்கு முன்பிருந்தே வியாசங்கள் எழுதியனுப்ப எண்ணங் கொண்டேன். எனினும் எனது மனச்சாட்சி என்னைத் தடுத்துக்கொண்டே வந்தது. எப்படியெனில், யான் ஓர் மார்க்கத்தில் கட்டுப்பட்டு "இதிலேயே வீட்டையும் வழியுண்டு; வேறே மார்க்கங்களில் பயனில்லை" யெனப் போதிக்கப்பட்டு, அதையும் சிறிது நம்பிவந்தே னெனினும், எனது உண்மை மனச்சாட்சி அதைக் கண்டித்துக் கொண்டே வந்தது. இப்படிப்பட்ட சமயத்தில் யான் சில வியாசங்களை வரைய எண்ணியபோது எனது மனச்சாட்சி என்னை நோக்கி, "நீ ஓர் மார்க்கத்தில் கட்டுப்பட்டவன்; மற்ற மார்க்கங்களைத் துவேஷிப்பவன். ஆகையால் சர்வமதத்தினருக்கும் ஆனந்தத்தை விளைப்பதும், ஆனந்தனுக்கே ஆனந்தமுண்டாக்குவதுமான வியாசங்கள் வரையத் தகுதியற்றவனாயிருக்கிறாய்." எனச் சொல்லிற்று. அது முதல் எனது கோரிக்கையை விட்டுவிட்டு, சர்வமத ஆராய்ச்சி செய்து வந்தேன். அதன் பயனாய் இப்போது சர்வ சமய சமரச பக்தி கொண்டு, சர்வ சமயங்களிலும் சொல்லப்பட்டிருக்கிற சன்மார்க்க விஷயங்களை அனுஷ்டித்துவரத் தீர்மானித்து, 'சர்வ சமய சன்மார்க்கசாதகன்' என்னும் பெயருடையவனாய் இவ்வியாசத்தை வரையப்புகுந்தேன். ஆகையால் எமது நேயர்களனைவரும் இவ்வியாசத்தைக் கருத்தாய் ஆராய்ச்சிசெய்து ஆனந்த மடைவார்களெனத் திரிகாலங்களிலும் நம்புகிறேன்.

'அன்பு' என்பது மையீற்று விகுதிபெறாத பண்புப்பெயர். இதைப் பற்றிய ஆழ்ந்த கருத்துக்களை யெல்லாம் நமதுசஞ்சிகையின் 7வது வருடம் இரண்டாவது மாத சஞ்சிகையின் 46-வது பக்கத்தில் எழுதியிருக்கப் பார்த்திருக்கிறோமெனினும், சுருதியுக்தியனுபவங்களால் எனது அறிவுக்கெட்டிய சில விஷயங்களையும் நேயர்களறியுமாறு இதை வரையலானேன். அவற்றைச் சில பிரிவுகளுக்குள் அமைத்துள்ளேன். அவை யெவையெனில்:— (1) அன்பின் இலட்சணம்; (2) நம்மால் அன்பு செலுத்தப்பட வேண்டியவர்கள்; (3) நாம் அவர்களிடத்துச் செலுத்தும் அன்பினளவு; (4) அன்பின் இருவகை; (5) அன்பினால் வரும்பயன். என்பனவாம். அவற்றை முறையே கவனிப்பாம்.

I. அன்பின் இலட்சணம்:—"அன்பே சிவம்" என நமது ஆன்றோரும், "கடவுள் அன்பாகவே யிருக்கிறார்; அன்பில்லாதவன் கடவுளை அறியான்" எனக் கிறிஸ்துவ வேதபுத்தகமும் கூறுவதை நாம் ஆராய்ந்தால்

அன்பே கடவுளின் வடிவம் என விளங்கும். ஆகையால் அன்பு கடவுளின் அம்சமென்றும், அதையுடையவன் கடவுளையுடையவன் என்றும் தெரிய வருகிறது.

II. நம்மால் அன்பு செலுத்தப்பட வேண்டியவர்கள்.—கடவுள், பிறர், ஏனைய ஜீவராசிகள் என மூவகையாரிடம் நாம் அன்பு செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். (1) நாம் கடவுளிடத்து அன்பு செலுத்த வேண்டியது அவசியமா? ஆம். ஏனெனில்: நமது உலகப்பற்று நீங்க வேண்டும். உலகப்பற்று நீங்கவேண்டுமானால் கடவுளிடம் பற்றுவைக்க வேண்டும். அதனாலே தெய்வத்தன்மை பொருந்திய திருவள்ளுவ நாயனாரும் "பற்றற்றான் பற்றினைப்பற்றுக, அப்பற்றைப் பற்றுக பற்றுவிடற்கு" என்றார். கடவுளிடம் அன்பு செலுத்துவதும் இருவகைப்படும். அவை, அவரை நிர்க்குண வடிவமாக உபாசித்து பக்திசெலுத்துவது, சகுணவடிவமாக உருவகப்படுத்தி பக்திசெலுத்துவது என்பனவாம். இவற்றுள் 'முந்தியது ஞானமார்க்கம், பிந்தியது பக்தி மார்க்கம்' எனப்படும். (2) நாம் பிறரிடத்து அன்பு செலுத்த வேண்டியது அவசியமா? ஆம். ஏனெனில்: நமது சுயப்பற்று அல்லது தன்னயம் நீங்கவேண்டும். தன்னயம் நீங்கவேண்டுமானால் பிறரிடத்து அன்புசெலுத்த வேண்டும். அப்போதுதான் நமது சுயநலவிருப்பம், காமியக் களங்கம், கர்வக்கட்டி, அகங்காரப் பிரமியம், ஆகாமியப்படை, கோபக்குன்மம், இச்சகப்பச்சவாதம், வஞ்சக க்ஷயம், வாய்மதப்பித்தம் முதலியகொடிய நோய்கள் நிவர்த்தியாகும். பிறரிடத்து அன்பு செலுத்தாவிட்டால் வியாதிகளெல்லாம் நம்மைப் பீடிக்கும். அக்கருத்துக்கொண்டே நாயனார் "அன்பிலாரெல்லாம் தமக்குரியர்" என்றார். ஆகையால் பிறரிடத்துச் செலுத்தும் அன்பு ஒன்றே தன்னயத்தை மறுக்கக் கூடியது. பிறரிடத்து அன்பு செலுத்தி விட்டால் நாம் நிஷ்காமிய கர்மிகளாவோம், கர்மயோகத்தின் பலனையடைவோம். (3) நாம் ஜீவராசிகளிடத்து அன்பு செலுத்துவது அவசியமா? ஆம். ஏனெனில்: நமது பட்சபாதம் ஒழியவேண்டும். கடவுள் ஜீவராசிகளனைத்தையும் ஒரேவித அன்புகொண்டு படைத்திருக்க மனிதர் ஏனைய ஜீவராசிகள் கடவுளால் வெறுக்கப்பட்டதென்றும், அவைகள் மனிதரைவிடத் தாழ்ந்தவைகளென்றும் சொல்லி, அவைகளைக் கொடுமையாய் நடத்தவும், சித்திரவதை செய்யவும் துணிகிறார்கள். "மனிதருக்கு மாத்திரம் என்றும் அழியா ஆத்துமா உண்டு; ஏனையப் பிராணிகளுக்கு அவையில்லையா." எனக்கூறும் மார்க்கத்தார் பலரிருக்கிறார்கள். அப்படிச் சொல்லிக்கொண்டாவது சும்மாவிராமல் பிராணிகளைக் கொல்லவும், சித்திரவதை செய்யவும் தங்களைத் தயார் செய்கிறார்கள். 'கொலை செய்யக் கூடாது' எனப் பல மார்க்கத்தாரும் போதித்தாலும் பிராணிகளைக் கொலை செய்வதில் தங்கள் போதனையை மட்டுப்படுத்திக் கொள்கிறார்கள். அவர்கள் நியாயப்படி, பிராணிகளுக்கு என்றும் அழியா ஆன்மா இல்லாதபடி

யால் அவற்றைக் கொல்வதில் தோஷமில்லை யென்றும், ஆன்மாவுள்ள மனிதனைக் கொல்வதே தோஷமென்றும் விளங்குகிறது. ஆனால் ஆன்மாவைப் பற்றிய சம்பந்தம் கொலையி லில்லை. ஆன்மாவைக் கொல்ல முடியாது. ஆகையால் மனிதனை யானாலும், ஏனைய பிராணிகளை யானாலும் கொல்வது சரீரத்தை மட்டுமே குறிக்கும். ஆனபடியால் ஆன்மாவிருந்தாலும், இல்லாவிட்டாலும் பிராணிகளைக் கொல்வதால் அவற்றிற்கு இம்சையை யுண்டாக்குவதோடு ஆண்டவன் படைப்பில் ஒன்றை நாம் அழிப்பதால் அது கொலை பாதகமேயாகும். இத்தகைய கொடுஞ்செயல் ஜீவகாருண்யம் அற்ற மனத்தினிடமிருந்தே விளையக்கூடியது. இது நீங்கவேண்டுமானால் நாம் ஜீவர்களிடத்து அன்பு செலுத்தவேண்டும்.

III. நாம் அவர்களிடத்துச் செலுத்தும் அன்பினளவு:—இதைப் பற்றிக் கிறிஸ்தவ வேதபுத்தகத்தில் வெகு தெளிவாய்ச் சொல்லியிருக்கிறது. அந்த வேதம் ஜீவகாருண்யத்தைப்பற்றி (ஏனைய ஜீவராசிகள்) அதிகமாய்ச் சொல்லுவதில்லை. அதனால் ஏனைய ஜீவர்களிடத்துச் செலுத்தும் அன்பொழியக் கடவுளிடத்தும், பிறரிடத்தும் செலுத்தும் அன்பிற்கு அளவு சொல்லுகிறது. (ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர் உபதேசமஞ்சரி 6 வது வசனத்தில்: ‘ இரக்க சித்தத்தில் கிறிஸ்தவனாகவும் வெளி பாவனைகளைக் கண்டிப்பாக அனுசரிப்பதில் மகம்மதியனாகவும், எல்லா ஜீவப்பிராணிகளிடத்திலும் அன்பு பூண்டொழுகுவதில் ஹிந்துவாகவு மிருக்கவேண்டும்.’ என்று சொல்லியிருக்கிறது.)

(1) கடவுளிடத்துச் செலுத்தும் அன்பினளவு:—“ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், முழு ஆத்துமாவோடும், முழு பலத்தோடும் அன்பு செலுத்துவாயாக ” (உபா 6: 5.) என்று ஷை வேதம் சொல்லுகிறது. இதில் ‘ மனம், ஆத்மா, தேகம் ’ என்ற மூன்றும் அடங்குகிறது. இங்கே முழுமனம், முழு ஆத்மா, முழுதேகம் என்பன அவ்வவற்றின் பூரணத்தைக் குறிக்கிறது. அவ்வவற்றில் எவ்வெவ்வளவு அன்பு உண்டாகிறதோ அவ்வன்பு முழுவதையும் கடவுளுக்கே செலுத்திவிடவேண்டும் என்பது பொருள். இதைப்பற்றி ஸ்ரீராமகிருஷ்ணபரமஹம்சர் உபதேசமஞ்சரி 60,315 ஆம் வாக்கியங்களில் தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் நமக்குள்ள அன்பு முழுவதையும் கடவுளிடத்தே செலுத்த வேண்டும். அவரிடத்திற் செலுத்தும் அன்பிற்கு உவமையல்லது அளவு கிடையாது.

(2) பிறரிடத்துச் செலுத்தும் அன்பினளவு:—“ நீ உன்னிடத்தில் அன்பு கூர்ந்து கொள்வதுபோல பிறரிடத்திலும் அன்பு செலுத்துவாயாக ” (லேவி 19: 18.) என ஷை வேதம் சொல்லுகிறது. இங்கே ‘ போல ’ என்பது உவமையுருபாய் பிறரிடத்துச் செலுத்தும் அன்பிற்கு அளவாயிருக்கி

றது." தன்னிடத்தில் எவ்வளவு அன்பு செலுத்தக் கூடுமோ, அதேயளவு தான் பிறரிடத்துச் செலுத்தவேண்டும். இதன் விளக்க உரை:—" முன்பு 'உனக்குள்ள அன்பு முழுவதையும் கடவுளிடத்தில் செலுத்திவிடு' என்று சொல்லி யிருக்க, அதைச் சரியாய் அனுசரியாமல் உனது அன்பில் கொஞ்சப்பாகத்தை மிதி வைத்துக்கொண்டு அதை உலகத்தில் செலுத்த எண்ணங் கொண்டாய்; ஆகிலும் அதையாவது அத்வைத எண்ணத்துடன் செலுத்தாமல் தான்வேறு, பிறர் வேறு என்ற துவைத எண்ணங்கொண்டு, உன்னிடத்தில் செலுத்த வேறுவகையான (அன்பு) அளவும், பிறரிடத்தில் செலுத்த வேறுவகையான அளவும் உபயோகிக்கப்பார்க்கிறாய்; அது கூடவே கூடாது. உன்னிடத்தில் அன்பு கூர்ந்து கொள்ள எந்த அளவை உபயோகிக்கிறாயோ அதையே பிறரிடத்துச் செலுத்தும் அன்புக்கும் அளவு கருவியாக உபயோகிக்க வேண்டும். அப்படியானால்தான் உனது துவைதத் தடிப்பு நீங்கும். அது நீங்கவே தன்னய மறப்புண்டாகும். அது உண்டாக உலகப்பற்று நீங்கும்." என்பதே. இதை நமது வேதாந்தங்களில் அத்வைதம் என்று கூறியிருக்கிறது.

IV. அன்பின் இருவகை:—' உடன்பாட்டன்பு; எதிர் மறையன்பு' என இருவகைப்படும். உடன் பாடு செய்தலும், எதிர் மறைசெய்யாதிருத்தலுமான இருவினைகளென நமது இலக்கண நூல்கள் கூறுகின்றன. அப்படியே உடன்பாட்டன்பு செய்தலும், எதிர் மறையன்பு செய்யாதிருத்தலுமான காரியங்களைச் செய்யக்கூடியது. (1) கடவுளிடம் செலுத்தும் இருவகை யன்பு யெவையெனின்:—கடவுளுக்குச் செய்யவேண்டிய கடமைகளை வேதம் சொல்லுகிறபடி செய்தல் உடன் பாட்டன்பு; கடவுளைத் துவேஷித்தல், கடவுளைத் துதியாம லிருத்தல் முதலிய துர்க்கிருத்தியங்களைச் செய்யாமலிருத்தல் எதிர்மறையன்பு.இவ்விரண்டும்கொண்டதேபூரணவன்பு (2) பிறரிடத்துச் செலுத்தும் இருவகையன்பு யெவை யெனனின்:—பிறர் துன்பப்படும்போது அவர்களது துன்பத்தை விலக்கலும்; அன்னம், ஆடை முதலியன வில்லாமல் தரித்திர மடைவோர்க்கு அவைகளை யளித்துக் காப்பாற்றுதலும் உடன்பாட்டன்பாகும். கொலை, களவு, விபசாரம், பிறர் பொருட்களை இச்சித்தல் முதலிய துர்க்கிருத்தியங்களைச் செய்யாதிருத்தல் எதிர் மறையன்பாகும். (3) ஜீவராசிகளிடத்துச் செலுத்தும் இருவகை யன்பு. ஜீவப்பிராணிகளுக்கு ஆகாரமளித்தல், அவைகளுக்கு வருந்துன்பத்தை விலக்கல் முதலியன செய்தல் உடன் பாட்டன்பு; பிராணிகளைக் கொடுமையாய் நடத்தல் அவைகளைப் புசிக்கவேனும், வீண் வேடிக்கைக்காகவேனும் கொல்லுதல் முதலியன செய்யாதிருத்தல் எதிர்மறை யன்பாகும். இவ்விரண்டுங் கொண்டதே பூரணவன்பு.

V. அன்பினால் வரும்பயன்:—அன்பு தேவ அம்சமாயிருப்பதால், அதை யடைந்தவர் கடவுளையுடையவராயிருக்கிறார். கடவுளைப் போன்று

ஆகவேண்டுமானல் அன்பு வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு அன்பு உண்டாகிறதோ அவ்வளவுக் கவ்வளவு தேவாம்சம் வளர்கிறது. தேவாம்சம் வளரவே மனுஷாம்சங் குறைந்து சாயுச்சிய பதவியடையக்கூடும். நாமெல்லோரும் இத்தகைய குணமடைந்து வளர்வோமாக. சுபம், சுபம்.

இங்ஙனம்,
சர்வசமய சன்மார்க்கசாதகனுன,
சா. வேதமுத்து உபாத்தியாயர்,
போர்டு பிரதமப்பாடசாலை, பள்ளபட்டி.

---

## பொருமை.

'பொருமை' என்பது மை விகுதிபெற்ற தொழிற்பெயர். பொறு—பகுதி; ஆ—எதிர்மறை விகுதி;-மை-தொழிற்பெயர் விகுதி. 'உயிர் வரினுக் குறள் மெய்விட்டோடும்' என்னும் விதியையேற்று 'பொறு+ஆ' பொரு என்ருயிற்று. இவ்விரண்டும் ஒரு பகுதியாகி 'மை' என்னும் தொழிற் பெயர் விகுதி கொள்ளவே எதிர் மறைத்தொழிற் பெயராயிற்று. பொருதல்' என்பது விளக்க உரை. இது உடன்பாட்டைக் கொள்ளின் 'பொறுத்தல்' என்ரும்.

இத்தொழிற் பெயர் மனிதருடைய மனதின் ஓர் விதமான எண்ணத்தைக் குறிக்கும். இப்பொருதல், அல்லது பொருமை என்பது பிறரால் நேரிடும் துன்பத்தை, அல்லது தனக்கு தெய்வச் செயலால் நேரிட்ட விபத்து, நோய் நொடி முதலியவைகளைப் பொரு திருத்தலைக் குறிப்பது நியாயம். இதுதான் 'பொருமை' என்ற தொழிற்பெயரின் உண்மைப் பொருள்.

ஆனல், பெரும்பாலும் தற்காலத்தில் வழங்குவது: பிறருடைய வாழ்வு முதலான க்ஷேமாபி விர்த்தியைப் பொருதிருத்தல் என்னும் பொருளிலேயே. இது நமது நாட்டின் கொடுமைச் செயல்களி லொன்ருகும். பிறர் நம்மைத் துன்புறுத்தினுலும் நாம் அதைப் பொறுத்துக் கொண்டு, அவர்களுக்கு நம்மால் செய்யக்கூடிய நன்மைகளுண்டானல் அதையும் செய்வதே பெரியோருடைய வேண்டுகோள். நாம் அவர்களுக்கு நன்மை செய்து, அவர்களால் நமக்கு விளைந்த துன்பத்தையும் பொறுத்துக் கொள்வது உத்தமதுணம். அவர்களுக்கு நாம் நன்மைசெய்யா விட்டாலும் அவர் செய்த பிழைகளையாவது பொறுத்துக் கொள்வது மத்திமதுணம். அவர்கள் செய்த பிழைகளையும் பொருதல் அதமதுணம். ஆனல்; நமக்கு யாதொரு தீங்கும் செய்யாத மாந்தர்கள் நல்ல ஐசுவரியங்கள் பெற்று சுகமாய் வாழ்வதைப் பார்த்துப் பொருதிருத்தல் அதமாதம துணமாகும்.

தற்காலம், எமது அனுபவத்திற் குட்பட்ட பதமானது, கற்றவருக்குள்ளும், கல்லாதவருக்குள்ளும், பெரியோருக் குள்ளும், சிறியோருக்குள்

னும் பிறரின் க்ஷேமாபி விர்த்தியைப் பொருதல் என்னும் கருத்திலேயே வழங்குவதை அறிந்திருக்கிறேன். காரணம், பிறர் துன்பம் விளைத்தலைப் பொறுத்தல் கிடையாது; ஆனதால் அதன் எதிர் மறைவான பொருதலும் அப்பொருளுக்கு வழங்கப்படவில்லை.

ஆகையால் இனிமேலாவது 'பொருமை' என்பதைப் பிறரின் துன்பத்தைப் பொருதல் என்னும் கருத்தில் வழங்க வேண்டுகிறேன். பிறரின் க்ஷேமாபி விர்த்தியைப் பார்த்துப் பொருதல் ஒழிந்து, பின்பு பிறரால் நேரிடும் துன்பத்தைப் பொருதலும் ஒழிந்து, பொறுமை யேற்பட்டு, அத்துடன் பிறருக்கு நன்மை செய்வதும் உண்டாகி நம் தேசத்தினர் நற்குண சாலிகளாய் விளங்குவார்களாக. இங்ஙனம்,

சா. வேதமுத்து உபாத்தியாயர்.

---

## கடிதங்கள்.

"ஆனந்தபோதினி" பத்திராதிபருக்கு,

கல்வி செய்யாததோர் நலனுமில்லை, அக்கல்வியை நும் ஆனந்தன் நம் மக்களுக்கு இலவசமாகக் கொடுப்பதன் பெருமைக்கு நிகருமில்லை. தங்கள் ஊழியம் பயனடைந்து வருவதை நீங்கள் கீழேகாணலாம்.

சிவன் ராத்திரியாகிய புண்ணியதினத் தன்று அங்காளம்மனுக்கு திருவிழா எல்லா கிராமங்களிலும் நடப்பது உலகறிந்த விஷயம். அத்தேவிக்கு மிருகபலி கொடுப்பதான துக்ககரமான கோரமும் உலகறிந்ததே. ஆனல் நம் நாட்டில் தோன்றியுள்ள புத்துயிருக்கிணங்க இக்கிராமத்தில் இவ்வருட விழாவில் ஷை தேவிக்கு இம்மிருகபலி வழக்கம் நிறுத்தப்பட்டதைக் குறித்து மகிழ்வுறுதார் இல்லை. இது நிறுத்தப்பட மூன்று வருஷங்களாக இவ்வூர் ஸ்ரீமான் கன்னிகேஸ்வரையர் மிகப் பிரயத்தனப்பட்டுவந்து அன்னார் நன்முயற்சி இவ்வருஷம் பயன்பெற்றதற்கு அவரை நாம் போற்றுகிறோம். அன்னார் வேண்டு கோளுக்குச் செவிசாய்த்து இவ்வருடம் நன்மதியுடன் அக்கொடிய வழக்கத்தை நிறுத்திவிட்ட இவ்வூர் கிராமவாசிகளை நாம் போற்றுகிறோம். இவர்கள் கொல்லா விரதம் குவலயமெல்லாம் ஓங்குக. ஓம் தத் ஸத்.

திருகி - சுந்தரேசையர்.

திருவண்ணமலை.

குறிப்பு:—இது பெரிய ஜீவகாருண்யச் செயலாகும். நம்மவர்களில் ஜீவகாருண்ய முடையோர், மற்ற விடங்களிலும் இத்தகைய உயிர்வதைச் செயல்கள் நடைபெருவண்ணம் பாமரர்களுக்குப் புத்திபுகட்டி இச்செயல்கள் எங்கணும் நடவாவண்ணம் செய்ய முயல்வது பெரும்புண்ணியமாகும்.

பத்திரிகாசிரியர்.

## இல்லறம்—கன்மம்.

(61-வது பக்கத்தொடர்ச்சி)

மனு முதலியவர்கள் அவ்வக்காலத்திலுள்ள ஜனங்களுக்குத் தக்கவாறு தர்மானுஷ்டான விதிகளை யெழுதினார்கள். அது அவர்களுடைய சுகவாழ்க்கைக்கேற்றதே. உலகத்தில் ஜனங்கள் எக்காலத்திலும் ஒரே நடையுடைகளைக்கொண் டிருப்பதில்லை. ஆகையால் அக்காலத்தவர் எழுதிய ஸ்மிருதி அக்காலத் தவர்க்கே யுபயோகமாம். மற்றக்காலத் தவர்க்கு எலாது. அவர்கள் எழுதிய ஸ்மிருதி வருங்காலத் தவரையுங்கூடக் கட்டுப்படுத்தும் ஆற்றலுடையதாகாது. ஏனென்றால், மனிதர்கள் எல்லாரும் ஸர்வக்ஞராகிய கடவுளைப்போல வருங்கால சம்பவங்கள் எல்லாவற்றையும் அறியும் சக்தியுடையவர்க ளாகமாட்டார்கள்; அதனாலேயே மனு முதலாயினோர் தாங்கள் பிறந்த யுகதர்மங்களையே எழுதினார்கள். ஆகையாற்றான் கிருத யுகத்துக்கு மனுதர்மசாஸ்திரம் சிறந்தது; கலியுகத்திற்குப் பாராசரதர்மம் சிறந்தது என்னும் வியவஸ்தை கூறப்பட்டுள்ளது. கிருதயுகத்தில் மனிதர்கள் அதிக பலமும் நீடித்த ஆயுளும் உடையவர்கள். இயற்கையிற் பற்றற்றவர்கள். ஆகையால் அவர்களுக்குத் தக்கபடி மனு தர்மசாஸ்திரம் எழுதினார். பிறகு காலவசத்தால், ஆயுளும் ஆற்றலுங்குறைய அதையுணர்ந்த சங்கரர் முதலானவர்கள் வேறு ஸ்மிருதிகளை யெழுதினார்கள். கலியுகத்தில் பராசரர் எழுதினார். கால வேறுபாடு கருதியே பலபேரால் பலஸ்மிருதிக ளெழுதப்பட்டன. இவைகள் எல்லாம் ஒன்றிற் கூறிய விதிகளை மற்றொன்று மறுக்கின்றது. இப்படியே ஒவ்வொன்றும் மறுத்துக் கூறுமானால் ஒவ்வொரு ஸ்மிருதி கர்த்தர்களுக்கும் குறைவு நேர்கின்றது. ஆதலால் அவர்கள் சர்வக்ஞத்துவம் உடையவராகா ரென்பது திண்ணம். ஸ்மிருதிகள் வேதத்தையே மூலமாக் கொண்டன வென்பதும் பொருந்தாது. ஏனெனில் ஸ்மிருதிகளில் வேதவிரோதமான பாகங்களு முளவென்றும், அவ்வித விரோதம் உண்டானவிடத்து வேதமே பிரமாணமாகக்கொள்ளப் படுமென்றும், ஸ்மிருதிகளைப் பிரமாணமாகக் கொள்ளக் கூடாதென்றும் ஜைமினிமுனிவர் மீமாஞ்சையில் வரையறுத் தோதினார். தர்மமூல மின்னதென்று ஸ்மிருதிகள் துணிந்து கூறவில்லை. பலவகையாகவே கூறுகின்றன. இவற்றை யுற்று நோக்குங்கால் காலதேசங்களுக் கேற்றவாறு தர்மமும் மாறுபடுதலியல்பு என்பது புலப்படும். அங்ஙனமாயின் தர்மங்கள் எல்லாம் மனிதர் கட்டுப்பாடே யன்றிக் கடவுளால் விதிக்கப்பட்டன வல்லவென்று காணலாம்.. ஆதலால் முன்னோர் சென்றவழிபற்றி நடக்கவேண்டியது அவசியமாகாது. காலத்துக் கொத்தபடி மாற்றிக்கொள்ளலாம். கடவுளால் விதிக்கப்பட்ட தல்லாமையால் அவ்விதி கடந்து நடப்பதால் தோஷமில்லை யென்று சிலர் வாதிப்பதுண்டு.

ஸ்நானத்தாலும், போஜன நியமத்தாலும் உண்டாகும் பலன் இன்னதென்று பிரத்தியட்சமா யறியக்கூடுமாயினும் அவற்றை எல்லாரும் அநு

ஷ்டிக்கவேண்டு மென்று கட்டுப்படுத்த ஆற்றலுள்ளவன் ஒருவனுமில்லை. அங்ஙனமிருக்க அப்பிரத்தியட்சமான கன்மங்களில் பலனுண்டென்று கருதி ஒருவன் நடக்க அதனை மற்றவன் பின்பற்றுவா னென்பது பொருந்தாதவிஷயம். ஒரே கட்டுப்பாடாக எல்லாரையும் கன்மத்தில் கட்டுப்படுத்த எவனுக்கும் சாத்தியமாகாது. ஸ்மிருதிகளெல்லாம் ஒரேகாலத்தில் எழுதப்படாமையால் அவற்றிற்குத் தோஷமுண்டாகு மென்பது எதனுல்? அது கொண்டு ஸ்மிருதி கர்த்தர்களில் சிலர் அறிவில்லாதவர்க ளென்றும், சிலர் கர்மத்தில் பற்றில்லாதவர்க ளென்றும் புலப்படுவதா லென்னின், அது பொருந்தாது. எவ்வாறென்னில் எல்லா ஸ்மிருதிகளும் ஒவ்வொரு கற்பத்திலும் மனு தர்மங்களை ஸ்மரிக்கின்று ரென்று கூறுவதால் மனு ஒருவரே சகல தருமங்களையும் அறிந்து எழுதினுர் என்பது புலப்படும். அன்றியும் மனுகூறிய தர்மத்தோடு மாறுபட்ட விதிகள் பிரமாணமல்ல வென்றும் கூறுகின்றன. அதனுல் மனுஸ்மிருதி ஒன்றே சகலதருமங்களுக்கும் மூலம். அதில் அர்த்தாபத்தியாதிய உத்தி முதலியவற்ருல் உரைத்தவற்றையும், அரிதிலுணரக் கூடியவைகளையும் ஏனையர் எடுத்துக் கூறினர் என்று உணரலாம். இதனுல் முக்காலத்துக்கும் ஒத்த விஷயங்களையே அவர்க ளெழுதிவைத் திருக்கின்ருர்கள். கடவுளைப்போல முடிவற்ற காலவளவை முற்றும் அவர்கள் அறிந்தவர்கள் என்று நாம் கூறவில்லை; நம்மவர்கள் போல அறியாதவர்க ளென்று கூறவு மில்லை. அவர்கள் சுய அனுபவத்தாலேயே எழுதிவைத்தார்கள்.

கணிதர்கள் வருகிற வருஷத்தின் பலனையும் கிரக நிலைமைகளையும் இப்பொழுதே யெழுதிவைப்பது பிரத்தியட்சம். அதுவேயன்றிப் பின்வரும் பல வருஷங்களின் நிலைமையைக் கிரக நிர்ணயத்தால் இப்பொழுதே அறிந்து எழுதுவதும் பிரத்தியட்சம். அதுபோல அநேக வருஷங்களின் தர்மங்களை மனுமுதலியவர்கள் முன்னே யறிந்து எழுதிவைத்தார்கள். ஆதலால் இத்தருமவிதிகள் அநாதி நித்தியங்களா மென்க. அடிக்கடி காலசக்கரம் சுழன்று வருகின்றது. அதுகொண்டு கிரகசஞ்சாரங்களை யுணர்ந்து ஜோதிடர்கள் வருங்கால சம்பவங்களைக் கூறுவதுபோலவே முன்னேர்களும் காலசக்கர பேதங்களையுணர்ந்து நான்குயுக தருமங்களையும் முன்னரே எழுதிவைத்தார்கள். சென்றகால அனுபவத்தால் பின்வருங்கால நிலைமையை எளிதி லுணரக்கூடும். அதனுல் வருங்காலத்தை நான்கு யுகங்களாகப் பிரித்து, அவற்றுள் அவ்வக்காலத்து நிலைமையை அறிந்து அவ்வக்காலத்து ஜனங்களுக்கேற்ப எழுதிவைத்ததே இக்காலத்திய தர்மசாஸ்திரங்களாம். உலகத்தி னியற்கையில் உண்டாகும் எவ்விதமான சம்பவங்களும் மறுபடி தோன்றுமலிரா வென்பது கணிதர்களுடைய துணிபாம். இதனுல் முற்காலத்தில் நிகழ்ந்ததை யனுபவ முதிர்ச்சியுடையார் பின்னல் இன்னின்ன காலத்தில் இன்னின்ன படியாகும் என்று கண்டுகொள்வதே பேரறிவாம்.

ஆதலால் அப்பெரியோர் வருங்கால சம்பவங்களைக் கணித முதலிய நூலுணர்ச்சியால் அறிந்து அக்காலத்தவர்க்கேற்ப எழுதிவைத்ததே சாஸ்திரமாம். ஒரேகாலத்திற் பலபேர் பல சாத்திரங்களை யெழுதியதும் பலவிதமா யிருப்பதும் புத்திகுறைவினு லென்பது பொருந்தாது. அவர்கள் வேதங்களை நன்குணர்ந்து தங்களுக்குத் தோன்றிய வரியனவற்றை யெடுத்தெழுதிவைத்தனர். இதனால் அவர்கள் ஒருவரோ டொருவர் மாறுபட்டெழுதினதில்லை யென்க. பற்பல விடங்களிலுள்ள பலரிஷிகள் ஒரேகாலத்தில் ஒரேவித தருமத்தை யெழுதியதே தருமங்கள் அநாதி சித்தமென்பதை விளக்குமென்க. மனு முதலியோர் தத்தம் புத்திபோன வழியே எழுதினதில்லை. நான்கு வருணங்கள், மூன்று உலகங்கள், முக்காலங்கள், நான்காச்சிரமங்கள், இவைகளெல்லாம் வேதத்தாற்றான் வெளிப்படும் என்றும் ரிஷிகள் வேதத்தை யுணர்ந்தே ஸ்மிருதிகள் யெழுதினார்கள் என்றும், தருமத்துக்கு வேதம் மூலமென்றும் பல பிரமாண வசனங்கள் கூறுவதாலென்க. நமக்குத்தெரிந்த வேதவசனங்கட்கு விரோதமான வசனங்கள் ஸ்மிருதிகளிற் காணப்பட்டால் அவற்றை யாமனுஷ்டிக்க வேண்டியதில்லை. அதற்கு மூலம் எவ்வேதத்தி லிருக்கிறதோ யாமறியோமென்று கருதுவதே புத்தியாம். அவர் படித்த பிரமாணங்களில் முன்பின் பிரமாணங்களுள் பின்காணப்பட்ட பிரமாணம் துர்ப்பலமென்பதும் அது முன் பிரமாணத்துடன் முரணுவிடத்துப் பிரமாண மென்பதும் அவர்கள் கொண்ட கருத்து. ஆதலால் கன்மம் காலத்துக் கேற்றபடி மாற்றிக்கொள்ளக் கூடியதல்ல; இது கற்பிதமானதும் அல்ல.

இனி, அது ஒவ்வோர் தேசங்களில் ஒவ்வோர் விதமாய் நிற்பது யாது காரணம் பற்றி? காலத்தினால் மாறாத கன்மங்கள் இடத்தினால் மாறுவது யாங்ஙனம்? வடநாட்டார் குடி முதலியவற்றைத் தருமமாகக் கொள்கின்றனர். அதனைத் தென்னாட்டார் இகழ்கின்றனர். தென்னாட்டார் பழைய அமுதுபுசிப்பது தருமமென்று கொண்டனர். வடநாட்டார் இதனை யதருமமென்று இகழ்கின்றனர். கன்மம் தேச வேற்றுமையால் மாறுபடுகின்றது: இடவேற்றுமையால் மாறுபடக்கூடிய கன்மம் காலத்தாலும் மாறுபடுவது சகஜமேயாம். ஆதலால் தேசத்தாலும் காலத்தாலும் கன்மம் மாறுபடக் கூடியதே யென்று வாதிப்பார் சிலர். இன்னும்வரும்.

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## "ஸ்ரீமத் இராமாநுஜ ஆசாரிய சுவாமிகள்."

(73-ம் பக்கத் தொடர்ச்சி.)

'பெத்த தேவர்' என்னும் ஜைனர் கோவலன் மைசூருக்கு மேற்கே 'தொண்டனூர்' என்னும் பதியில் அரசாட்சி செய்து வந்தான். அவன் மகளை யோர் பிசாசு பிடித்துக் கொண்டது. அவன் வேண்டுகோளின்படி நமது ஆசாரியர் அப்பேயைத் துறத்தி இராஜகுமாரியைக் குணப்படுத்தி

ளூர். மன்னன் மிகவும் மகிழ்ந்து ஸ்ரீ இராமாநுஜரைக் கௌரவப்படுத்தி 'விஷ்ணுவர்த்தனன்' என்னும் பேருடன் அவர்தம் சீடனாயினன். இது ஜைனர்களுக்கு சம்மதமில்லாமற் போகவே அவர்கள், ஆசாரிய ஸ்வாமிகளைப் பகைக்கலாயினர். பிறகு அவர்களுடன் தமது மதக்கோட்பாடுகளைப் பற்றி வாதிக்கலானார். ஜைனர்களுக்கும், ஸ்ரீ இராமாநுஜ ஆசாரியஸ்வாமிகளுக்கும் இடையே ஓர் திரையிடப்பட்டது. உடனே ஆசார்யஸ்வாமிகள் அனந்தாழ்வானது (ஆதிசேடனது) ஆயிரம் நாக்களுடன் உண்மையான சொரூபங்கொண்டு தர்க்கித்து அவர்களை வாதத்தில் வென்றார். இவ்விதமாய் அவர்களுடைய மதத்தினும் தமதே உயர்ந்ததென ஜைனர்களுக்கு விசிதமாக்கினார்.

அந்நாளிரவு "அருகாமையில் 'மேல் கோட்டை' யிலுள்ள சிலமான சந்நிதியை ஜீர்ணோத்தாரணஞ் செய்யவேண்டும் என்ற கைங்கரியம் தான் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று சொப்பனங் கண்டார். அவ்வாறே, விஷ்ணுவர்த்தனனுடைய சகாயத்தால் நமது ஆசாரிய ஸ்வாமிகள் மேற்கூறிய மேலக்கோட்டை யென்னும் பதியையும் கோயிலையும் புதுப்பித்து, பகவானுக்கும் அவர் பக்தர்களுக்கும் தகுந்த வசதியாகும்படிச் செய்தார்.

ஆனால் ஒருசமயம் மேலக்கோட்டைத் திருக்கோயிலில் எழுந்தருளியிருந்த உற்சவராகிய 'செல்லப்பிள்ளை' என்னும் விக்ரஹத்தை மொகலாயர்கள் டில்லிக்கு அபகரித்துக் கொண்டுபோய் விட்டார்கள். அதைத் திருப்பிக் கொணர்வான் பொருட்டு ஸ்ரீ இராமாநுஜர் தமது பரிவாரங்களுடன் டில்லிக்குச் சென்றார். ஆனால் மொகலாய சக்ரவர்த்தியின் உக்ராண அறை (Store house) யில் அவர் அதைக்கண்டு பிடிக்க முடியவில்லை. இதையறிந்த சக்ரவர்த்தி, "அது உம்முடையதா யிருப்பின் கூப்பிடுமே. அது உம்மிடம் வருகின்றதா வென்று பார்ப்போம்!" என்று அலக்ஷியமாய்க்கூறினன். அப்போது மிக்க பக்தி பிரேமையுடன் தழுதழுத்த குரலில் 'ஸம்பத்குமாரரே!' (செல்லப்பிள்ளை) என்று ஸ்வாமிகள் கூப்பிட்டார். உடனே சக்ரவர்த்தியும் மற்றோர்களும் வியப்புறும்படி, சக்ரவர்த்தியின் மகளின் சயனக்ரஹ (bed room) த்தில் விளையாட்டுக் கருவியாய் உபயோகப்படுத்திவந்த அந்த விக்கிரஹம் ஆசாரியருக்கு பதிலுரைப்பதுபோல் எதிர் வரலாயிற்று; சிறு குழந்தைபோல் ஓடிவந்து ஸ்வாமிகளின் மடியிலுட்கார்ந்து விட்டது. ஆசாரிய சுவாமிகள் அளவற்ற ஆனந்தத்துடன் அதை யெடுத்துக்கொண்டு, மேலக்கோட்டைக்குச் சென்று, வேண்டிய ஸம்ப்ரோக்ஷணைகள் செய்து முடித்தார். இது அவருடைய எண்பதாம் பருவத்தில் நடந்தவிஷயம். அவர் தமது நூறாவது பிராயம் வரையில் மேலக்கோட்டையிலே வசித்தார். பிறகு கொடுங்கோளுகிய கிருமிகாந்தன் இறந்துவிட்டசெய்தி யறிந்து, ஸ்ரீ இரங்கநாதனைச் சேவிக்கும் பொருட்டு ஸ்ரீரங்கம் போய்ச் சேர்ந்தார். கீர்த்திபெற்ற ஆசாரியர் பிறகு இருபதாண்

டுகள் பகவத் கைங்கர்யத்தி லீடுபட்டிருந்தார். அவருடைய 120-ம் பருவத்தில், இம் மண்ணுலகில் தமக்கென்று நியமிக்கப்பட்ட காரியம் சம்பூர்த்தியாய் விட்டதென்று நினைத்து. விண்ணுலகடைய பகவானுடைய ஆக்ஞையை வேண்டினர். ஆனாலவர் இன்னுஞ் சில வருடங்கள் இப்பூலோகத்தில் வதியும்படி ஸ்ரீமந்நாராயணமூர்த்தி விரும்பினர். என்றாலும் ஸ்ரீ இராமாநுஜர் தாம் உடனே மோக்ஷமடைய விரும்பினர். ஆகவே, அவருக்கு வேறு விருப்பம் ஏதாவதுண்டோ வெனப் பகவான் வினவலும், ஸ்ரீ இராமாநுஜர் தமது தாஸ்யவர்க்கங்கள் எல்லோரும் முக்தி யடையுமாறு அநுக்கிரஹிக்கும்படி பிரார்த்தித்தார். பகவான் அவ்வாறே அநுக்கிரஹித்தது மல்லாமல் இம்மண்ணுலகத்தை விடுவதற்கும் ஆசாரிய ஸ்வாமிகளுக்கு அனுமதி யளித்தார்.

மேற்கண்ட விஷயங்களை ஸ்வாமிகள் தமது சிஷ்யர்களுக்குத் தெரிவிக்கவே, அவர்களனைவரும் அவரை அடிபணிந்து வணங்கி, அந்தியகாலத்தில் ஞாபகார்த்தமாக புத்திமதிகளை உபதேசிக்கும்படி பிரார்த்தித்தார்கள். அதற்கிணங்க, அவர்களுக்கு ஆசாரிய ஸ்வாமிகள் பின்வருமாறு உபதேசித்தனர்:—" புறங்கூறுதலை ஒழிமின். ஏனெனில் 'யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்—சோகாப்பர் சொல்லிழுக்கப் பட்டு' 'தீயினாற்சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே - நாவினாற் சுட்ட வடு.' அயலார்மாட்டு கோட்சொல்லலாகாது. புறங்கூறுதலை யொழித்தால் மட்டுமே உங்களுடைய வசனக்கிரமம் பரிசுத்த மடையும். நமது ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை நன்றாய்க் கற்றுவந்து, மனத்தூய்மை யடையுங்கள். நமது 'ஸ்ரீ பாஷ்யத்தை வாசித் தறியுங்கள். அல்லது அது முடியா விட்டால், திராவிட வேதமாகிய 'திவ்ய ப்ரபந்தங்களை' யாவது தெரிந்துகொள்ள முயலுங்கள். இது கடினமாயிருப்பின், எம்பெருமானுக்கு கைங்கரியஞ் செய்யுங்கள்; அல்லது மேலக்கோட்டை சென்று, ஆசிரமங்கள் அமைத்துக்கொண்டு சந்நியாச ஆசிரமத்தைக் கைக்கொள்ளுங்கள். இதுவும் உங்களால் இயலாமற் போனால், 'த்வயம்' என்னும் மந்திரத்தி னுட்பொருளை ஆய்ந்தறியுங்கள். மேற் கூறியவைகளில் ஏதுவும் உங்களுக்குச் சாத்திய மாகாமற்போனால், ஒரு பாகவதரைத்தேடி அவரை ஆசிரயுங்கள்.

இவ்விதங் கூறியதும், ஸ்ரீ இராமாநுஜர் ஒரு சீடனது துடையில் தமது தலையைவைத்தும் மற்றோர் சீடனது மடியில் பாதங்களை நீட்டியும் பள்ளிகொண்டனர். ஏனையோர் திவ்ய ப்ரபந்தங்களையும் வேதங்களையும் பாராயணஞ் செய்யும்போது, நமது ஆசாரியராகிய நம்பியாரின் மரவடிகளை (Wooden Sandals) க் கண்ணுற்றார். அத்தருணம் ஸ்ரீ ஆளவந்தார் சுவாமிகளைத் தம்மனத்தகத்தில் வைத்து, ஆசாரிய ஸ்வாமிகள் இம் மண்ணுலகை விட்டகன்று, வைகுந்தம்புக்கு, தமது அனந்தாழ்வான் உருவத்தைக் கொண்டனர்.

ஸ்ரீ இராமாநுஜர் யௌவனதசையி லிருந்தபோது, அவர்தம் ஆசாரியராகிய திருக்கோட்டியூர் நம்பியார் அவருக்கு ஓர் மந்திரம் உபதேசித்திருந்தார். ஆனால் அதை உபதேசிப்பதற்கு முன்பு, ஸ்ரீ இராமாநுஜர் அதையாருக்கும் வெளியிடக் கூடாதென்று பிரமாணஞ்செய்ய வேண்டினார். அவ்விதமே பிரமாணஞ் செய்துவிட்டு அம்மந்திரத்தை யறிந்து கொண்டார். பிறகு, ஸ்ரீ ரங்கநாதர் கோயில் கோபுரத்தின்மீது உட்கார்ந்து கொண்டு, உள்ளே யிருப்பவர்களும் வெளியே யிருப்பவர்களும் அறிந்துகொள்ளுமாறு ஸர்வஜனங்களுக்கும் அம்மந்திரத்தைப் பகிரங்கப்படுத்தினார். இதையறிந்த நம்பியார் சினந்து, 'குருவாக்கை மீறிநடந்தவனுக்கு யாது தண்டனை?' என்று கேட்டார். அதற்கு ஸ்ரீ இராமாநுஜர், "அத்தகைய கீழ்ப்படிதலில்லாத சீடன் நரகஞ்சேரவேண்டும்." என்றார். 'அந்தத் தண்டனையை அறிந்திருந்தும் என் குருவாக்கை மீறி நடந்தாய்' என்று நம்பியார் மீளவுங்கேட்டார். அதற்கவர் கூறிய மறுமொழியாவது:—

"சுவாமி! அடியேன் தேவரீர்வாக்குக்கு மீறி நடந்தேனாதலால், அடியேன் மட்டும் நரகப்ராப்தி யடைவேன்; ஆனால், அடியேன் மூலமாய் இம் மஹா இரஹஸியத்தை யறிந்துகொண்ட சகல ஜீவர்களும் மோக்ஷமடைவார்களன்றோ? அவர்கள் முக்தியடைய விரும்பினதால், தேவரீருடைய வாக்கை மீறி நடக்கவேண்டிய தாயிற்று."

எட்டுணையும் சுயநலம் பாராட்டாது, பொதுஜன நன்மையை நாடும்படியான வளவு தீர்க்கவைராக்யமும் கருணையுங்கொண்டவர் நமது ஆசார்யஸ்வாமிகள். மேற்கூறிய மறுமொழியைக் கேட்டதும், நம்பியார் தமது சீடரின் அரிய ஜீவகாருண்யத்தை யுணர்ந்து மிக்க வியப்புற்றார். யாவரும் நித்தியமாகிய பேரின்பப் பதவியடைவதற்குச் சுலபமான மார்க்கத்தை யுபதேசித்த ஸத்குருவாகிய ஸ்ரீமத் இராமாநுஜ ஆசார்யஸ்வாமிகளின் கீர்த்தியானது மார்த்தாண்ட தேவனுடைய கிரணங்கள் போன்று பாரெங்கும் ப்ரகாசித்து நிற்கின்றது.

C. S. V. பாரதி.

குறிப்பு:—சகோதர சகோதரிகளே! இத்தகைய தெய்வீகத் தன்மை பொருந்திய மகான்களின் வழி வந்த நாம் இவர்கள் அரிய குணங்களையும் செயல்களையும் மறவாமல் நம்மால் கூடியவரையில் அவர்களுடைய மார்க்கத்தைப் பின்பற்றி நடக்க நமக்கு நல்லறிவையும் ஊக்கத்தையும் தந்தருளும்படி கருணை சொரூபியாகிய பரம்பொருளைப் பிரார்த்திப் போமாக.

ஓம் தத் ஸத்.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(65-வது பக்கத் தொடர்ச்சி)

(மேலே கூறப்பட்ட ஞானநிலையி லிருப்பவனுடைய இலட்சணங்களை யறிய விரும்பிய விஜயன் பகவானை வினவுகிறான்.)

அர்ச்சுனன்:—ஏ! பகவன்! முன்னே தாம் அருளியவாறு சமாதிநிலையின் கண் நிலைத்திருக்கும் புருஷனுடைய இலட்சணமென்ன? அவன் அச் சமாதியி னின்றும் பகிர்முகப்பட் டெழுந்தபோது எவ்வாறு நடந்து கொள்வான்? அவன் எவ்வாறு பாகிய இந்திரியங்களை நிக்கிரகம் செய்வான்? எவ்வாறு விஷயங்களை யடைவன்? எவ்வாறு உலாவுவன்? இவற்றை உள்ளபடியே யருள்செய்யப் பிரார்த்திக்கின்றேன்.

[பிரம்ம ஞானத்தை யடைந்தவன் இரண்டு நிலைகளை யுடையவன். ஒன்று உண்முகத்தில் சமாதியின்கண் நிலைத்திருப்பதாம். மற்றொன்று சமாதியினின்றும் எழுந்து பகிர்முகப்பட்ட நிலையாம். முன்னையதில் உலகத்தோற்றம் அடியோடில்லை. பிரம்மசாக்ஷாத்காரம் ஒன்றேயுளது. பின்னையதில் சமாதியின் கண்ணுள்ள வாசனையோடு கூடிய சித்தத்தின் கண் கானல் நீர் போன்ற பிரபஞ்சத்தோற்ற முண்டு.

ஆரோபவாத லக்ஷணப்படி அதிஷ்டானமான கயிற்றைக் கண்டதே ஆரோபமான பாம்பு அடியோடு மறைகிறது; பிறகு தோன்றுவதில்லை. அப்படி யிருக்க தாஷ்டாந்தத்தில் மட்டும் அதிட்டானமாகிய பிரம்மத்தின் ஞானம் உதயமான பின்னும் ஆரோபமான பிரபஞ்சம் தோன்றுவானேன் என்று ஒருகேள்வி யெண்டுதிக்கலாகும். இந்த சந்தர்ப்பத்தில்தான் கானல் நீர் திருட்டாந்தம் கூறப்பட் டிருக்கிறது. கானல் நீர் பொய்த்தோற்றம் என்று அனுபவமாய்க் கண்டபின்னும் அது தோன்றிக்கொண்டே யிருப்பதுபோல், ஞானோதயத்திற்குப் பின்னும் உலகம் தோன்றிக்கொண்டே யிருக்கும்.

அரவிலை பழுதை யுணர்ந்தவர்க் கதுபோ
லகிலமெய்ப் பொருளினை யுணர்ந்தோர்க்
கொருவுரு திருத்த லெனையெனிற் கான
லூறுசல மிலையென வுணர்ந்தும்
மருவலி னுறு விகாரமே தென்னின்
மலிகன வினிலுறு மென்றுள்
திருதுசெய் மறையோர் பாவிய விருத்த
கிரியமர் பெரியகா யகியே" (குமாரதேவர்)

கானல் நீர் பொய்த்தோற்ற மென்றறிந்தவன் மறுபடி அதை நீர் என்று நம்பிச்செல்லான். அது போன்றே ஞானிக்கு உலகம் தோற்றரவாயினும்

அது அநர்த சடதுக்கமென் றுணர்ந்து அதில் மனநாட்டம் வைக்க மாட்டான்.

"சமாதியில் நிலைத்திருப்பவனை என்ன இலட்சணங்களால் அறியலாம்? அவன் பகிர்முகப்பட்டபின் உலகில் எப்படி நடந்து கொள்வான்? எவ்வாறு இந்திரியங்களை நிக்கிரகம் செய்வான்? சுகதுக்கக் கலப்பான உலகவிவகாரங்களில் எப்படி நடந்துகொள்வான் எவ்வாறு பேசுவான்?" என்பது முதலிய விஷயங்களைக் கூறும்படி அர்ச்சுனன் வினவினுன்.

இந்த ஞானி துறவியாயிருப்பின் சமாதி நிலை விட்டுப் பகிர்ப்பட்ட போது சகச சமாதியிலே யிருப்பன் அவனுக் குலகத்தோற்றாவு கனவுபோலாகும். இல்லறத்தி லிருக்கும் ஞானி தாமரையிலை நீர்போல் ஜகத்தோடு கூடி மற்ற அஞ்ஞானிகளைப் போலவே விவகாரங்களைச் செய்பவனுகத் தோற்றப்படுவான். அவனுடைய நடக்கை யாதிகளுக்கும் அஞ்ஞானியினுடைய நடக்கை யாதிகளுக்கும் உள்ள தாரதம்மியத்தை யெவ்வாறுணர்வது என்று அறிய விரும்பினுன் தனஞ்செயன்.]

(அர்ச்சுனன் கேட்ட கேள்விகளுக்கு, ஆகாயத்தை முதலாகவுடைய பஞ்சபூதங்களால் தநுவண்டபுவன போகங்களாகிய யாவற்றையும் சிருட்டித் தருளிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பின்வருமாறு விடை யருள்கிருர்.)

பகவான்:—ஏ! பார்த்த முன்கூறிய வண்ணம் சமாதியின்கண் நிலைத்து நிற்பவன், ஆன்ம சாட்சாத்காரத்தில் நிலைத்து அந்த ஆன்மானந்தத்தையே அனுபவித்துக்கொண் டிருப்பனுகையால், காமம், குரோதம், கோபம், மயக்கம் முதலியவை யற்றவனுய், இன்ப துன்பங்களில் மகிழ்ச்சி வாட்டமற்றவனுய், புகழிலும் நிந்தையிலும் விருப்பு வெறுப் பற்றவனுய், ஆமை தன் உறுப்புகளை யெல்லாம் தன் தேகத்தினுள் அடக்கிக்கொள்வதுபோல் சுரோத்திராதி இந்திரியங்களைத் தனக்குள் ஒடுக்கிக்கொண்டு ஆன்ம சொரூபத்தில் நிலைத்து, பிரம்மானந்த பரவசனுக விளங்குவான்.

[ஆன்மாவின்கண் இராகத்துவேஷாதி குணங்கள் ஒன்றுமில்லை. அவை ஆன்மாவின் சுபாவமாயின் அவற்றை நீக்கமுடியாது. அக்னியினிடம் உஷ்ணகுணம் பொருந்தி யிருக்கிறது. அதை நீக்கியபின் அக்னி என்ற ஒரு பொருள் இராது. அதுபோல் இராகத்துவேஷாதிகள் மனத்தினிடமே பொருந்தி யிருக்கின்றன. மனம் ஒழியின் அவை யொழியும் ஆதலின் மனம் ஒழிந்த ஆன்ம சொருப நிலையில் அக்குணங்கள் இல்லை. இச்சை யொழிந்தபின் எதனிடத்தும் மகிழ்ச்சி வாட்டமில்லை.]

அத்தகைய புருடனுக்கு எதிலும் விருப்பாவது வெறுப்பாவது இல்லையாதலின் அவன் யாவற்றையுமே உதாசீனமாய்ப் பேசுவான். ஆன்ம சாட்சாத்காரமடையாவிடின் வேறெவ்விதத்தானும் சர்வத்திலும் விரக்தி இயற்

கையாய் உண்டாகாது. ஞானமடையு முன் இந்திரியாதிகளைப் பழக்கத்தால் அடக்கிக்கொண் டிருந்தாலும், சித்தத்தின்கண் ணுள்ள இச்சை நிவர்த்தியாகாது.

அர்ச்சுனன்:—மனம் அடங்காமல் இந்திரிய நிக்கிரகம் எங்ஙனம் கூடும்?

பகவான்:—என்னிடம் அனன்னிய பக்தியுள்ள புருடனுக்கு இந்திரியங்களை யடக்கும் சக்தியுண்டாகா நிற்கும்.

அர்ச்சுனன்:—"ஏ பகவானே! அப்படியாயின் மனோ நிக்ரகம் பயனற்றது தானே" என்று வினவினன்.

பகவான்:—ஏ பார்த்தா! சர்வ இந்திரியங்களையும் நிக்கிரகம் செய்யும் புருடனுக்கும் மனோ நிக்ரகம் கிட்டாதாயின் சர்வ அனர்த்தங்களு முண்டாகும். அவன் இந்திரியங்களை யடக்கிக்கொண் டிருந்தாலும் முன் கூறியபடி இச்சையொழிந்ததல்ல.

ஆகையால் பாகியேந்திரிய நிக்ரகமும், மனோநிக்ரகமும் நிலைத்திரா. சாத்திர ஆராய்ச்சிசெய்து மனத்தை யடக்கப் பிரயத்தனம் செய்வோருடைய மனதைக்கூட இச்சையானது இந்திரிய வாயிலாக விழுத்து விஷயங்களில் புகுத்திவிடும்.

இதனால் ஆத்மஞானமின்றி இந்திரியங்களை வசம்பண்ணிப் பழக்குவது கடினம் என்று நன்கு அறியலாம். அவையடங்கியும் மனம் அடங்காவிடின் அம்மனம் இந்திரியவழியாய் விஷயாதிகளிற் செல்லும். ஆன்மஞானமில்லாதவரையில் விஷயாதிகளில் தோஷபுத்தி யுண்டாவதில்லையாதலால் மனம் அவற்றை விரும்பிச்செல்லும். மனம்விரும்பும் விஷயம் சித்திக்காவிடின் குரோதம் தீப்போல் கிளம்பும். இக்குரோதத்தால் விவேகம் மங்கும், அந்த மயக்கம் நேர்ந்தால் குரு சாத்திரங்களால் உணர்ந்த அறிவுகெடும். அந்த வுணர்வு கெட்டொழிந்தால் ஞானமார்க்கத்திற் குரிய எல்லாம் கெடும்.

[ஆன்ம சாட்சாத்கார மடையாமல் சாத்திர விசாரணைசெய்து ஞானப்பியாசத்தில் முயல்வோன் பாகிய இந்திரியங்களை யடக்கமுயன்றால் அவை யடங்குவது கஷ்டம். ஒருசமயம் அடங்கினும் மூலகாரணமான இச்சாரூபமனம் அடங்காவிடின் பயனில்லை. ஏனெனில் இச்சை மனதை இந்திரிய வாயில்களின் வழியாய் இழுத்துச்சென்று விஷயாதிகளில் புகுத்துவிக்கும். அதன்பின் வாஞ்சித வஸ்துவையடைய அவாவும்; அதை அடையாவிடின் குரோதாதி குணங்கள் ஒன்றின்மே லொன்றாய்க் கிளம்பிப் பூரணமாய் மாயையில் அழுத்திவிடும் என்பதாம்]

சமாதியினின்றும் பகிர்முகப்பட்டவன், ஆமை தன் அவயவங்களைத் தனக்குள் அடக்கிக்கொள்வதுபோல் இந்திரியங்கள் சத்தாதி விஷயங்களில் செல்லவொட்டாது அடக்கிக்கொள்வான்.

[சமாதியி லிருப்பவனைப் பிராரப்தம் பகிர்முகப்படச் செய்யும்—ஆனால் இச்சையை யுண்டாக்க அதற்குச் சக்தியில்லை. இச்சா சொரூப மனம்

அடங்கிவிட்டபடியால் அது விஷய இச்சைகொண்டு இந்திரியத்துவாரா புறஞ் செல்லாது. அவ்வாறு செல்லாதிருத்தல் ஞானிக்குக் கஷ்டமின்றி இயற்கையாகவே தோன்றும்.]

(இதுகாறும் பாகிய இந்திரியங்களை நிக்கிரகம் செய்யினும் மனோ நிக்கிரகம் செய்யாவிடின், மனம் இந்திரிய வாயிலாய் விஷயாதிகளிற் சென்று அனர்த்தத்தை யுறும் என்று கூறினர். இனி பாகிய இந்திரிய நிக்ரகம் செய்யாவிடினும், மனோ நிக்ரகம் மட்டும் செய்திருப்பின் மேல்கூறப்பட்ட எவ்வகை யனர்த்தங்களும் உண்டாகமாட்டாவென்று அருளிச்செய்கின்றார். அதாவது, அர்ச்சுனன் கேட்ட கேள்விகளில் முன் கேள்விகளுக்கு விடை கூறி, சமாதியினின்றும் வெளிவந்த ஞானி எவ்வாறு சஞ்சரிப்பன் என்பதற்கு விடை யருள்கிறார்.)

ஏ அர்ச்சுன! சமாதியினின்றும் வெளிவந்த ஞானி விருப்பு வெறுப்பின்றி இந்திரிய வாயிலாய் விஷயங்களில் பிரவேசித்தாலும், அவன் மனம் சற்றும் சலனமடையாது. போகங்களாலும் கலங்காது. பின்னையோ சமாதியின்கண் அனுபவித்த பிரம்மான்ம சாட்சாத்காரமான நிர்மல நிலையிலேயே நிற்கும். அஞ்ஞானம் நீங்கும். அதனால் அதன் காரியமாகிய சகல துக்கங்களும் நிவர்த்தியாம்.

இந்திரியங்களை நிக்கிரகம் செய்யாத புருடனுக்கு ஆன்மஞான அறிவு உண்டாகாது. அதில்லையாகவே ஆன்மதரிசனம் உளதாவதில்லை. ஆன்மதரிசன மில்லாவிடின் சித்த சாந்தி தோன்றாது. அதில்லையேல் மோட்சானந்தம் ஜனிப்பதில்லை. அகன்ற சமுத்திரத்தில் செல்லும் கப்பலை யதனோடு கூட அதற்கு உதவியாய்ச் செல்லும் காற்றே பிரதிகூலமாய் மாறி முழுகடித்து அழித்து விடுவதுபோல், அடக்கப்படாத இந்திரியங்களின் பின்னே விஷய இச்சையோடு அவை சென்ற வழியே செல்லும் மனமே ஆன்ம விஷயமான புத்தியைக் கலக்கி நாசம்செய்து விக்ஷேபத்தில் அழுத்திவிடும்.

இராக்காலம் யாவர்க்கும் இருள்மயமாகத் தோன்றினும் கூகைக்கு மட்டும் எங்கும் பிரகாசமாய் எல்லாவஸ்துக்களும் நன்கு புலப்படுவதுபோல், எந்த வஸ்து யாவர்க்கும் புலப்படாமல் அஞ்ஞானமாகிய இருள் மயமாய் இருக்குமோ அந்த வஸ்து ஞானிக்கு அங்கை நெல்லிபோன்ற ஆன்ம சாட்சாத்காரமாய்த் தோன்றும்.

பகலில் சூரியப் பிரகாசத்தால் சகல பொருள்களும் யாவர்க்கும் நன்கு விளங்கி அவரவர்கள் உண்ணல் தொழில் செய்தல் முதலிய பல புல விவகாரங்களைச் செய்யினும், கூகைக்கு ஒன்றுமே தோன்றாமல் எல்லாம் ஒரே காரிருள்மயமாய்த் தோன்றுவதுபோல், யாவர்க்கும் நானாபேதமாகிய நாமரூப உலகம் பிரத்தியட்சமாகத் தோன்றி பல பல விவகாரங்கட்கு இடமாக விருப்பினும், இச்சையற்ற ஞானிக்குச் சர்வம் பிரம்மமயமாகத் தோன்றுவதால், உலகவிவகாரமே அவன் புத்தியிற்றோன்றக் காணான்.

[ஞானி பிராரப்தத்தால் சமாதியினின்றும் வெளிக்குக் கொண்டுவரப் படுகிறான். பிராரப்தம் ஒழியுமட்டும் அவன் தேகபோஷணையின் நிமித்தம் சஞ்சாரம் செய்யவேண்டியதாகிறது. பிராரப்த போகத்தைப் புசித்தே தீர வேண்டும். அப்படிப் புசித்தாலும் அவன் மனம் உருவ நாசமடைந்திருப் பதால், அதாவது இரஜோதமோ குணங்கள் நசித்து சூக்குமமான சத்துவ குணமட்டுமாய் இருப்பதால் போகத்தைப் புசிப்பதாய், அவனுக்குள் உணர்ச்சி யில்லை. அவன் நாட்டம் பகிர்முகப்பட்டிருப்பதாய் நமக்குத் தோன்றினும், தான் சமாதியில் அனுபவித்த ஆன்ம சாக்ஷாத்கார மாகிய உண்முக நாட்டத்தை அவன் விட்டவனல்ல. மனதின் இச்சை யாகிய சொரூபம் ஒழிந்ததால் விருப்பு வெறுப்பு இராகத்துவேஷ முதலிய எவ்வித குணங்களுமின்றி இலாபலோபங்களிலும் சுகதுக்கங்களிலும் மகிழ்ச்சி வாட்டம் இல்லை. பிராரப்தப்படி கிடைத்த போகத்தை யுண்டுவ னாகமட்டு மிருக்கிறான். இறந்த காலம் எதிர்காலமென்பது அவனிடமில்லை. பிராரப்தத்தால் தோற்றவாகும் உலகவிவகாரமே அவனுக்குக் கனவுபோல் நடக்கும். கன்மம் அவனைப் பற்றாது. ஏனெனில் இச்சாரூபமான மனம் நசித்தபின் கன்மத்தைத் தாக்க இச்சையை யுண்டாக்கப் பிராரப்தத்திற் குச் சக்தியில்லை. ஞானி விவகாரங்களில் பிரவேசித்தாலும் அவன் விவ காரங்களனைத்தும் உலகோபகாரமாகவே யிருக்கும். ஞானி அப்படி விவ காரங்களைச் செய்யினும் அவன் செய்கைகள் மனநாட்டமாவது, அக்கறை யாவது, பிரதி பல நாட்டமாவது இன்றி மூன்றாவது மனிதருடைய திரு மணத்தில் பலவந்தத்தால் வேலை செய்பவன் செயல்போ லிருக்கும். அல் லது வேடதாரியின் செயல்போ லிருக்கும். கந்தன் என்பவன் அரிச்சந்திரன் வேடம் போட்டுக்கொண்டு தேசவிசாரணை செய்யும்போது, அவனுக்குள் சந்தோஷமில்லை. பிறகு மயானத்தில் அடிமை வேலை செய்யும்போதும், உலோகிதாசன் மடிந்து சந்திரமதி பிரலாபிப்பதைத் தான்பார்க்கும்போதும் துக்கமுமில்லை. எப்படி நடிக்கும்போதும் தான் கந்தன் என்பது அவனுக் குள் நிச்சயமாய்த் தெரியும். மறந்தும் தான் அரிச்சந்திரன் என்று அவன் மனதிற் கருதமாட்டான். அதுபோலவே ஞானி உலக விவகாரங்களைச் செய்யினும் எப்போதும் தான் ஆன்ம சொரூபமே என்ற திடப்பிரக்ஞை யுடையவன், அதனால் அவன் யாதொரு பிரதிபலனையும் கருதுவதில்லை. பலனை யிச்சியாத நிஷ்காமகர்மம் நன்மையைச் செய்யுமே யன்றி பிறவிக் கேதுவான வினையை விளைவிக்காது.

அஞ்ஞானி இச்சையோடு விஷயபோகங்களை யனுபவிக்கிறான். இரா கத் துவேஷாதிகளோடு பொருந்திய மனதினால் கர்மங்களைப் பலா பேட்சையோடு செய்கிறான். ஆதலால் அவனுக்கு ஆகாமியம் சேர்ந்து பிறப்பிறப்பாகிய காலசக்கரத்தில் சுழலச் செய்கிறது. (தொடரும்.)

---

சீடன்.

## வீடின்றிப் படுங்கஷ்டம்.

" பண்ணைப்புரம் பஞ்சமர்கள் வீடின்றிப் படுங்கஷ்டம் " என்ற தலையங்கத்தின் கீழ் 28—8—22-ல் வெளியான சுதேசமித்திரனில் பிரசுரித்திருந்த விஷயத்தின் பின்பாகத்தைக் கீழே பிரசுரித்திருக்கிறோம் சகோதர சகோதரிகள் கவனிக்க வேண்டுகிறோம் :—

" * * * * *

சிலர் அடுத்த திருவாங்கூர் சமஸ்தானத்திலுள்ள ஏலம், தேயிலை முதலிய தோட்டக்கார்ர்க ளிடத்தில் வருஷக் கூலிக்கு ரூபாய் வாங்கி தங்கள் வீடுகளை மேய்கிறார்கள். (வருஷக்கூலி யென்பது தினக்கூலி 6 அணா வென்றால் வருஷக் கூலியில் தினம் ஒன்றுக்கு 3, 3½, 4 அணா விழுக்காடு வரும். முதலில் அட்வான்ஸாக கொஞ்சம் பணம் கொடுப்பார்கள். ஒன்றுக்கும் வகையில்லாதவர்கள்தான் இப்படி அமருவார்கள். நிற்க இந்த சமயத்தில் " வேகின்ற வீட்டில் அள்ளிக்கொண்டது ஆதாயம் " என்ற நாட்டுப் பழமொழிக் கிணங்க கிறிஸ்தவப் பாதிரிகள் தினம் ஒவ்வொருவராய் வந்து கிறிஸ்துவ மார்க்கத்தில் சேர்ந்தால், சேர்ந்த ஒவ்வொரு குடும்பத்தாருக்கும் ஐந்தைந்து ரூபாய் கொடுப்பதாக் அடிக்கடி சொல்லிக்கொண்டிருந்ததால், அவசியத்திலும் அவசரத்திலும் உதவி கிடைக்காத நிலைமையிலிருந்த பறையர்கள் கிறிஸ்தவப் பாதிரிகள் காட்டிய அற்பப் பணத்தின் ஆசையை முன்னிட்டு கிறிஸ்துவ மார்க்கத்தில் சேர ஆரம்பித்து விட்டார்கள். இதுவரை 6 குடும்பத்தார்வரை சேர்ந்திருக்கிறார்கள். இவர்கள் ஐந்தைந்து ரூபாய் வாங்கி சில பேர் கொஞ்சம் மேய்ந்தும் சில பேர் மேயாமலும் இருக்கிறார்கள். சிலர் அன்னிய ஊர்களிலுள்ள தம் பந்துக்கள் வீட்டிற்குப்போய் உதவிபெறப் போயிருக்கிறார்கள். சிலர் மேய்ந்த அன்னியர் வீடுகளில் ஒண்டிக் குடித்தனம் செய்கிறார்கள். இவ்விதமாக இப்போது 40 வீடுகள்வரை மேய்ந்தும் 30 வீடுகள்வரை காலியாகவும் இருந்து வருகின்றன. இனிக் கூடிய சீக்கிரத்தில் யாராவது உதவாமற்போனால் பாக்கியிருக்கும் 30 குடும்பத்தாரும் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்து விடுவார்கள்போலிருக்கிறது. தம் தம் கொள்கைக்கு ஒத்ததாக ஏற்பட்டிருக்கும் மார்க்கங்களில் சேர்ந்து மோக்ஷ சாதனத்தை அடையும்படி பகவான் உலகத்தில் பலமார்க்கங்களை ஏற்படுத்தி யிருந்தபோதிலும், அதனுடைய உண்மை வழியைக் காட்டாமல் கேவலம் படைக்கு ஆள்கள் திரட்டுவதுபோல, பணத்தைக் கொடுத்து ஏமாற்றி ஒரு மார்க்கத்தில் சேரும்படிசெய்து தெரியாத பாமரர்களைக் கெடுப்பதைக் காட்டிலும் வேறென்ன கெடுதல் செய்ய வேண்டியிருக்கிறது ? ஆகையால் கவர்ன்மெண்டார் இதைக்கூடிய சீக்கிரம் கவனித்து கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்தவர்களை விலக்கியும் தீப்பிடித்த வீடுகளுக்கு இவ்வளவு செல்லு மென்பதை இந்த கிராமத்தாரின் உத்தேசப்படி பணவுதவிசெய்து அவர்கள் பண்ணைக் கிருந்தும் கடன்பட்டும் அன்

னிய மதத்தார் வசம் வாங்கப்பட்டு மிருக்கும் ரூபாய்கள் திரும்பக் கொடுக்கும்படி செய்தும் கொடுப்பதுடன், தம்மதத்தில் சேர்த்துக் கொள்ளுகிறவர்கள் பணவுதவியை யிட்டாகிலும், இலவசமாக கல்வி போதிக்கப்படும் விஷயத்திலாவது பாமரர் என்ற காரணத்தை யிட்டாகிலும் மற்றெவ்விதமான ஆட்சேபிக்கத் தக்க காரணங்களைக்கொண்டு சேர்த்துக் கொள்ளக் கூடாதென்று பிரசித்தப் படுத்துவதுடன் தம் மதத்தைவிட்டு வேறு மதத்தில் சேருகிறவர்கள் தம் உண்மைக் காரணங்களை இந்து மடாதிபதிகளுக்குத் தெரிவித்து மாறுகிறவர் உண்மையில் தாமிருக்கும் மதம் தம் கொள்கைக்கு ஒத்ததாயிருக்க வில்லையென்று ருஜுப்பித்த பிறகுதான் தாம் வேறொரு மதத்தில் சேர லாயக்குள்ளவராவா ரென்பதாக சட்டம் செய்யும் படியும் கவர்ன்மெண்டாரையும் ஜனப்பிரதிநிதி மெம்பர்களையும் கேட்டுக் கொள்ளுகிறேன் என்று காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் எழுதுகிறார்.''

குறிப்பு:—நமது மதத்தைத் துவேஷ புத்தியின்றி ஆராய்ச்சி செய்பவன் எவனும் இதனினும் உயர்வான மார்க்கம் வேறொன்றுண்டெனக் கருத முடியாது. ஆகையால் ஆதிமுதல் பாதிரிமார் பணம், இலௌகிக சௌகரியங்கள் முதலியவற்றை யளித்தும், அளிப்பதாகக் கூறியுமே நம்மவரில் மத ஆராய்ச்சியேனும் கல்வியேனும் சிறிதுமில்லாத பாமரரைத் தங்கள் மதத்தில் சேர்த்துக்கொண்டார்கள். இன்னமும் அவ்வாறேதான் நடக்கிறது. கற்றவர்களில் எங்கோ ஒவ்வொருவர் கூடச் சேர்ந்திருக்கிறார்கள். அவர்களும் உயர்ந்த பதவி முதலியவை கிடைக்குமென்ற ஆசையால் சென்றவர்களே. ஆனால் அத்தகையோர் பெரும்பாலும் பிறகு மனத்தாபப்பட்டு திரும்பிவிட் டிருக்கிறார்கள். உண்மை யிதுவே யன்றி நமது மதத்தில் உண்மையில்லையென்றும் அன்னிய மதத்தில் உண்மை யிருக்கிறதென்றும் அறிந்து சென்றோர் ஒருவருமில்லை. ஏனெனில் பாதிரிமார்களிடம் அனுபவமாய்க் காட்டக்கூடிய ஆன்மார்த்த விஷயம் ஒன்றுமில்லை. பணம், செல்வாக்கு முதலியவைகளே அவர்கள் தங்கள் மதத்தைப் பரவச் செய்வதற்கு கருவிகளாக விருக்கின்றன வென்பதற்கு மேலே கூறப்பட்ட விஷயமும் ஓர் நிகழ்கால அத்தாட்சியாகும்.

இவர்கள் இவ்விதமாய்த் தங்கள் மதத்தைப் பரவச் செய்கிறார்கள். நாமோ நமது மதத்தில் வந்து சேரும்படி யன்னியரை வலிய அழைப்பதில்லை. ஆனால் நமது மதத்தவர் வீண் மயக்கால் அன்னிய மதத்தில் போய்ச் சேராவணம் அறிவுருத்த வேண்டியது நமது கடமை. அன்னிய மதத்தில் சேர்ந்துவிட்ட நம்மவரில் பெரும்பாலார் பிறகு மன வருத்தமடைந்து திரும்பிவிட ஆவல் கொள்கிறார்கள். அவர்களை நாம் சேர்த்துக் கொள்ளாமல் விட்டுவிடுவதால் அவர்கள் பரிதபிக்கிறார்கள். ஆகையால் சுலபமான பிராயச்சித்தம்செய்து திரும்பிவருபவர்களைச் சேர்த்துக்கொள்ள

ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் நாம் நம்மவர்க்குக் கூறவேண்டியது அவசியமா யிருக்கிறது.

அன்னியரை நமது மதத்தில் சேர்க்க நம்மவர் முயலாவிடினும், நமது மதத்தவர் பிறமதம் புகாவண்ணம் பாதுகாக்க நாம் முயற்சி யெடுத்துக் கொள்வதால் இரண்டொரு கிருஸ்தவப் பத்திரிகைகளுக்கு மனவெரிச்சல் கிளம்பி மனம் போனவாறு குழறுகின்றன. இவை தம் பொறாமையையும், ("உள்ளதைச் சொன்னால் நொள்ளைக்கண்ணனுக்குண்டாகும்") கோப்பாளத்தையும் மறைக்க "ஆனந்தபோதினி" மததூஷணை செய்கிறது என்று முயற்கொம்புபோன்ற இல்லாத காரணத்தைக் கூறி குளறுபடை செய்கின்றன. திருட்டாந்தமாக 26—8—22 இல் வெளியான "பாரத கிருஸ்தவ வர்த்தமானி" என்றவாரப் பத்திரிகையில் "ஆனந்தபோதினியின் அந்தோ" என்ற தலைப்பின்கீழ் "S. V. J. D." என்ற கையொப்பமிட்டு வெளிவந்திருக்கும் வியாசத்தைப் பார்த்தால் நாம் கூறுவதன் உண்மை விளங்கும். அதை வாசிப்போர்க்கு அதன் இழிந்த தன்மை தானே நன்கு விளங்கும்.

இத்தகைய ஆபாச மொழிகளைப் பொருட்படுத்தி பதில் வரைவது நமது சஞ்சிகையை யசுத்தப் படுத்துவதாகும். ஆகையால் அதை விட்டு, நமது மதத்தவர்க்கு நாம் பின் காணுமாறு கூறுகிறோம்:—மத விஷயத்தில் ஆசாரியராக இருப்போர் மட்டுமே அதைப்பற்றி கவனிக்கவேண்டு மென்பதில்லை. ஆன்மார்த்த விஷயம் ஒவ்வொருவரையும் பொருத்ததாகும். நம்மவர் ஒவ்வொருவரும் மதக்கல்வியில் சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டும். அன்னிய மதத்தில் புகக் கருதுவோர்க்கு நம் மதத்தின் விசேஷத் தன்மையைக்கூறி அறிவுருத்தித் தடுக்கவேண்டும். நம்மவர் ஒவ்வொருவரும் இதைத் தமது கடமையாகக் கருதிச் செய்யவேண்டுமெனப் பிரார்த்திக்கிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## இலக்கம்.

(19-ம் பக்கத் தொடர்ச்சி.)

இலக்கமென்றால் எண்; அதாவது கணிதம். நட்சத்திரங்கள், கிரகங்கள் என்பவற்றின் கதி முதலியவைகளை விளங்கச் செய்வதனால் இலக்கமென்றாயிற்று. இலங்கு—இலக்கம். இலங்கல்=விளங்கல். மேட முதலிய இராசிகளின் கதி முதலியவைகளை விளங்கச் செய்வதெனலும் பொருந்தும். இல்=இராசி.

என் என்பது எண்ணெனத் திரிந்தது. சூரியன் முதலிய ஏழ் கிரகங்களினா லுண்டாயதென்பது பொருள். என்—எண். னகாரம் ணகாரமாயிற்று. இராகுவும் கேதுவும் பிறகுண்டாய கிரகங்களாம். சூரியன் முதலிய கிரகங்களினாலே கணிதங்களுண்டாயின என்பதும், கிரகங்களுக்கே கணிதங்கள்

ஆவசியக மென்பதும், கிரகங்களினாலேயே கணிதங்கள் விர்த்தியாயின என்பதும், கொள்ளவேண்டும்.

கணிதம்=கணித்தல். அதாவது எண்ணல்.

பாயிரம்.

பாயிரம் என்பது நூன் முகம். நூலுக்கு முன்னே இருப்பதினால் பாயிரமாயிற்று. பா+ய்+இரம்=பாயிரம். பா=நூல். இரம்=இருப்பது. யகரமெய் பழந் தமிழ்ச் சந்தி. நூலின் பெருமை முதலியவைகளை யெல்லாம் பாயிரத்தினால்தான் அறியவேண்டும்.

நூல்.

நூலென்றால் சாஸ்திரம். நுட்பமான விஷயங்களைத் திரட்டி விளங்கச் செய்வதனால் நூலாயிற்று. நூல்=நுட்பம்.

எற்றுநூலானது மரத்தின் கோணலை நீக்குவதுபோல மனத்தின் கோணலை நீக்குவதனால் நூலாயிற்றெனலும் பொருந்தும். நூல்=எற்று நூல். சாஸ்திர மென்பது வடமொழி; சபையிலே சொல்லப்படுவதென்பது பொருள்.

கல்வி.

கல்வி யென்றால் கற்பு, கற்றல், வித்தை, படிப்பு. காலென்பது வேர். வேரானது சிறிது சிறிதாக மெல்ல மெல்லக் கல்லையும் கல்லி நீரின் பயனை அடைவதுபோல, ஆழமாயும் நுட்பமாயுமுள்ள விஷயங்களைச் சிறிது சிறிதாக, மெல்ல மெல்ல ஆராய்ந்து ஆராய்ந்து நூலின் பயனை அடைவதென் பதே கல்வி யென்பதற்குப் பொருளாகின்றது. கால்—கல்லல்=கிளறல், தோண்டல்.

கல்—கல்வி=ஆராய்வது. இப்படி ஆராய்ந்துகொண்டு போவதுதான் கற்றலென்பது. நூலின் பயனாவது அறம் பொருள் இன்பம் வீடு" "பாரைக்கு நெக்குவிடாப் பாறைப் பசுமரத்தின் வேருக்கு நெக்குவிடும்" என்பதனால் வேரினது திட்பம் விளங்குகின்றது.

வேரானது மண்ணையும் கல்லும்; கல்லையுங் கல்லும்; அதிக ஆழத்திலும் செல்லும்; நான்கு பக்கங்களிலும் பரவும்; காற்றடிப்பதனால் வேர் தளர்ச்சி பெறும்; மழை பெய்வதனால் அவ்வேர் மற்றும் பலம் பெறும்; இவ்வுப மானத்தினால் ஆராய்ச்சி செய்வதன் இலக்கணம் இப்படிப்பட்ட தென்பதை அறிந்துகொள்ளலாம்.

கான்மர மென்பது ஆலமரம். கால்+மரம். எனப் பிரிக்கவேண்டும். காலென்பது வேர்; அதாவது விழுதுவிடுகின்ற மரமென்பது பொருள். விதையிலிருந்து கீழ் நோக்குவது வேர்; மேல் நோக்குவது முளை. வேர் முன்னும், முளை பின்னும் உண்டாகும். இதனால் காலென்பதற்கு வேரொன் னும் பொரு ளுண்டென்பதை அறிந்துகொள்க.

## கற்பு.

கற்பென்றாலும், கற்றலென்றாலும் ஒன்றே. கல்+பு=கற்பு. கால்—கல். கற்பாயிற்று. கால்=வேர். வேர்போல் விஷயங்களைக் கிளறுவது. அதாவது ஆராய்வதென்பது. இப்பெண் கற்புடையவளென்றால் கணவன் முதலியோரிடத்தில் தான் நடந்துகொள்ள வேண்டிய முறைமைகளை ஆராய்ந்தவளென்பதே பொருள். வித்தை யென்பது வடமொழி; அறிந்து கொள்வ தென்பது பொருள்.

## ஓதல்.

ஓதலென்பதற்கு வைதீக நூல்களை வாசிப்பதென்றே பொருள் கொள்ளவேண்டும். வேதம் ஓதினான் எனல் வேண்டும், வேதம் வாசித்தான் எனல் கூடாது. ஓதுவார்=வைதீக நூல்களை ஓதினவர். ஓதிக்கொடுத்தல்=ஆசீர்வாதம் செய்துகொடுத்தல்.

ஓதம், ஓதலாயிற்று. ஓதம்=கடல். கடல்போலிரைந்து வாசிக்கவேண்டு மென்பது பொருள். இப்படி உரத்து வாசிப்பதனால் குரலுடைந்து சபைகளில் பேசுந் திறமை யுண்டாகும்.

திருக்குறள் முதலிய நூல்களை நாள்தோறும் விடியற் காலத்தில் உரத்து ஒருவன் வாசித்துக்கொண்டு வருவானாயின் அந்தப் பாஷை நடையும் சித்தியாகும்.

"கடலொலிய தான மறை தமிழ்க ளோது
கதலிவன மேவு பெருமாளே" (297 திருப்புகழ்.)

என்பதனால் கடலை யுணர்த்தும் ஓதமென்னும் சொல்லிலிருந்தே ஓதலென்னும் வாசித்தற் றொழிலுண்டாய தென்பது விளங்குகின்றது. இதனால் முதல் முதல் மக்களுக்கு உரத்துப்படிக்க வேண்டுமென்னும் அறிவு கடற் கரையி லிருந்துதான் உண்டாயதெனக் கொள்ளவேண்டும்.

## ஆராய்ச்சி.

விஷயங்களை நெடிதுகாலமாகத் தெளிவுபடத் தெரிந்துகொண்டு போதலே ஆராய்ச்சி யென்பதாம். ஆய மென்பது நிகளம். அதிலிருந்து ஆய்தலென்னும் சொல்லுண்டாகி நெடிது காலம் செய்யும் ஆராய்ச்சியை யுணர்த்தியது. ஆய்தலென்னும் சொல்லிலிருந்துதான் ஆராய்தலென்னும் சொல் லுண்டாயது.

கற்றலென்பதும் ஓர்வகை ஆராய்ச்சியே. பிரத்தியட்சமான பொருளைப் பற்றித்தான் முதல் முதல் ஆராய்ச்சிசெய்யத் தொடங்கவேண்டும். இதுவே புலவர்களுடைய அறிவையும் திடப்படுத்தக் கூடியது. பிரத்தியட்சம்=கண்ணாற் காண்பது. கண்ணாற் காணப்படும் பொருள்களே மிகுதியாகவு மிருக்கின்றன.

பழைய நூல்களை ஆழ்ந்தும் நுணுகியும் தெரிவதுதான் கற்றலாகும். அந்நூல்களிலுள்ள விஷயங்களின் அருமை பெருமை முதலியவைகளையும், முன் பின் உள்ள சம்பந்தங்களையும் தெரிவதே ஆராய்ச்சியாகும்.

அறிவு.

கற்பதாலும் ஆராய்ச்சி செய்வதாலும் உண்டாவது அறிவு. இவ்வறிவு ஆராய்ச்சி வேறுபாட்டால் பலவகைப்படும். எவ்வளவு கல்வி, எவ்வளவு ஆராய்ச்சி மிகுகின்றதோ, அவ்வளவு அறிவும் மிகுவதாகும். கண்ணாற் காணப்படும் பொருள்களைப்பற்றி ஆராய்ச்சி செய்வதாலுண்டாகும் அறிவு தான் சிறந்தது. காட்சி யென்பது முதல் கண்ணால் காணுதலையும், பிறகு கண்ணாற் கண்ட பொருள்களை ஆராய்ச்சி செய்வதாலுண்டாகும் அறிவை யும், அதன்பிறகு மெய்யறிவையும் உணர்த்தும்.

காட்சி=பார்வை, அறிவு, மெய்யறிவு.

"இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு" என்ற குறளால் அறிந்துகொள்க.

இக்காட்சி யறிவே காணப்படாத பொருள்களை அறிவதற்கும் துணைப் படுகின்றது. குஞ்சரமென்றால் யானை, யானை யென்றால் என்ன? எனில் அவன் யானையை அறியாதவனாகின்றான். அவனுக்கு யானையின் உருவத்தை எழுதிக் காட்டினால் யானை யிப்படிப்பட்ட தென்பதை அறிந்து கொள்கின் றான். யானையையே நேரிற் காட்டி அதன் உருவ முதலியவற்றைக் குறித் துக் கற்பித்தால் அவன் மற்றவர்களுக்கு ஐயமறக் கற்பிக்கும் ஆசிரிய னாவான்.

இதனால் காட்சியால் உண்டாகும் அறிவே சிறந்ததென்று அறியலாம்.

கேள்வி.

ஆராய்ச்சிகளால் அறிவுண்டாயினும் அறிந்த ஒவ்வோர் விஷயங்களைப் பற்றி ஒவ்வோர் வகையில் ஐயமுண்டாகும். ஐயமாவது இதுவோ? அதுவோ? எதுவோ? என ஒன்றில் துணிவு பிறவாம லிருப்பது. இந்த ஐயம் பல ஆசிரியர்களை அடுத்துக் கேள்வி கேட்பதால்தான் நீங்குவதாகும். பிறகு அறிவு திடப்பட்டுப் பெருமை யடையும்.

(தொடரும்.)

மாகறல். பொன்னுசாமி முதலியார்,
கெண்டி.

---

## வர்ணாசிரம தர்மமும், இராஜாங்க விஷயமும்.

காலம் சென்ற பம்பாய் ஹைகோர்ட் ஜட்ஜ் கனம் காசிநாத டிலங் என்பவர் செய்த ஒரு பிரசங்கத்தில் மதசம்பந்த சீர் திருத்தங்களுக்கும் இராஜாங்க சீர் திருத்தங்களுக்கும் சம்பந்த மில்லை யென்றும், மத சீர்திருத் தங்கள் இராஜாங்க சீர் திருத்தங்களுக்கு முன் ஏற்படவேண்டுவது அவசிய மில்லை யென்றும் உறுதியாய் அபிப்பிராயப்பட் டிருக்கிறார். ஏனென்றால் இராஜாங்கவிஷயம் எல்லாமதங்களுக்கும் எல்லாஜாதிகளுக்கும் பொதுவான விஷய மாகையால் அதுதான் முந்தி சீர்திருத்தப்படவேண்டு மென்றும் சொன்னார். மேலும் இங்கிலாந்து தேசசரித்திரத்தைப் பார்த்தாலும் அப்படி

தான் ஏற்படுகிறது என்றும் சொன்னார். அதேமாதிரிதான் நம் இந்தியாவிலும் (Political) காங்கிரஸ் ஏற்பட்டபிறகுதான் (Social) கான்பரன்ஸ் ஏற்பட்டது. உலகம் முழுதும் ஒரே இராஜாங்கம் அல்லது ஒரேமதம் எப்படி ஸ்தாபிக்க முடியாதோ, அம்மாதிரியே ஒரு தேசத்திலும் ஜாதிவித்தியாசங்களை அடியோடு போக்கடிக்க முடியாது. அதை யொழித்தபிறகுதான் அந்தந்ததேசத்தில் இராஜாங்க சீர்திருத்தங்கள் செய்யவேண்டு மென்று சொல்வது சமுத்திரத்தில் அலைகள் ஓய்ந்த பிறகுதான் ஸ்நானம் செய்வோமென்று காத்திருப்பதை ஒக்கும்! ஜாதிபேதத்தைக் கூடுமானவரையில் குறைத்து சமத்துவத்தை அதிகப்படுத்தக் கூடிய கட்டாய இலவசப்படிப்பு நாம் கேட்டுக்கொண்டே இருந்தும் இன்னம் துரைத்தனத்தார் அதைமனப்பூர்வமாகச் செய்யாமல், ஏதோ ஒருமாதிரி மொழிகிக்கொண்டு வருகிறார்கள்.(அதாவது படிப்பைக்காட்டிலும் சுகாதாரத்திற்கு அதிகம் செலவிடவேண்டு மென்று சொல்லி வழிவிட்டுக்கொண் டிருந்தார்கள்) கிறிஸ்துவமதத்திலும் குடியரசு நாடுகளிலும் ஜாதிபேதங்களும் ஜாதிமதச் சண்டையும் இல்லையா? அமெரிக்காவில் ஏன் நீக்ரோஜாதியரை அழப்படுத்துகிறார்கள்? ஆசியா கண்டத்தார்கள் வரக்கூடா தென்று ஏன் சட்டங்கள் ஏற்படுத்துகிறார்கள்? நம் பிரிடிஷ் இராஜாங்கத்திலேயே தென் ஆப்ரிகாவில் இந்தியர்கள் படும்பாடு எவ்வளவு! அயர்லாந்துக்குச் சுய ஆட்சி கொடுக்காததற்கு முக்கிய காரணம் மதவித்தியாசம்தானே! ஆகையால் மேற்சொல்லிய தேசங்களில் ஜாதிமத வித்தியாசங்கள் இருப்பதால் இராஜாங்கச் சீர்திருத்தங்கள் செய்யாம லிருக்கிறார்களா? அதாவது படிப்பு, கைத்தொழில், வியாபாரம், விவசாயம், சுகாதாரம், இவ்விஷயங்களை விருத்திசெய்யாம லிருக்கிறார்களா? இவைகள் தாமே இராஜாங்கச் சீர்திருத்தங்கள்! இவைகள் ஒரு தேசத்திலுள்ள எல்லா ஜாதி மதங்களுக்கும் பொதுவான விஷயங்களல்லவா? ஆகையால் ஆசார சீர்திருத்தக்காரர்கள் ("ஸோஷியல் ரிபார்மர்கள்") ஜாதிமதம் இந்தியாவில் அடியோடு ஒழிந்தாலொழிய நமக்குச் சீர்திருத்தமும் சுதந்திரமும் வரா தென்று சொல்வது நியாயவிரோதமான பேச்சேயாகும்.

## சமூக ஊழல்கள்.

சமூக ஊழல்கள் (Social defects) நமக்கும் இருக்கின்றன; மேல் நாட்டாருக்கும் இருக்கின்றன. அதாவது, இவ்விடம் படிப்பற்ற ஸ்திரீயும், பால்யவிதவையும் இருந்தால் அவ்விடம் விருத்தாப்பிய கன்னிகைகளும் (Old maids) பர்தரு விஸர்ஜனமும் (Divorce) அதிகமாம். இவ்விடம் தாசிகள் இருப்பதுபோல் அவ்விடம் (White Slave Traffic) வெள்ளைக்கார வேசி வியாபாரம் பலமாகத்தான் நடக்கிறது. ஸ்திரீசுதந்தரத்தில் நாம் தான் நடுநிலைமையி லிருக்கிறோம். வெள்ளைக் காரர்களைப்போல் மாதரைத் தலையில் தூக்கிவைத்துக் கொள்ளாமலும், மஹம்மதியரைப்போல் கோஷா சாம்பிரதாயம் இல்லாமலும் இருக்கிறோம். மேல்நாட்டார் நம்மிடமிருக்கும் அனேக சதாசாரங்களைக் கற்றுக்கொண்டு அனுசரித்து வருகிறார்கள். மாம்ஸம் புசிக்கக்கூடாதென்றும் (Vegetarian), சாராயம் சுருட்டு உபயோகிக்கக் கூடாதென்றும், ஜந்துக்களை ஹிம்ஸிக்கக் கூடாதென்றும் (Humanitarian), சமகுலவிவாஹம் (Eugenics) செய்யவேண்டுமென்றும், பிணங்களைப் புதைக்காமல் கொளுத்தவேண்டு மென்றும் (Cremation) அனேக சங்கங்கள் ஒவ்வொன்றுக்கும் ஏற்பட்டிருக்கின்றன. ஆதைவிட்டு நாம் அவர்

களிடமிருக்கும் துராசாரங்களைக் கற்றுக்கொண்டு கெட்டுப் போகிறோம். அமெரிகா, இரஷியாவில் சாராயம் தள்ளிவிட்டார்கள். நம் இந்தியாவில் மது பானம் விலக்கென்றால் காராகிரஹப் பிரவேசம்தான். வருஷாவருஷம் கோரக்ஷணைக் கூட்டம்கூடி கல்கத்தா ஹைகோர்ட் ஜட்ஜ் ஸர்ஜான் உட்ராப் போன் அவர்களுக்கும் பசும்பால் சிசுக்களுக்குவேண்டுமென்றும், எருதுகள் விவசாயத்திற்கு வேண்டுமென்றும், ஆகையால் கோவதை அல்லது ஏற்றுமதி கூடாதென்று துரைத்தனத்தாருக்கும் தெரிவித்தும் அனுகூலம் ஒன்றும் காணோம்; நம்முடைய சட்டசபை அவயவிகளும் ஊக்கம் பாராட்டக் காணோம். இவையெல்லாம் நமக்குச் சுய ஆட்சி இல்லாததின் பயனேயாகும்.

## சாதுர் வர்ணம்.

கடைசியாக நம்முடைய வர்ணாசிரம தர்மத்தைப்பற்றிக் கொஞ்சம் ஆராய்ச்சிசெய்வோம். ஆதியில் நான்குவருணம் ஏற்பட்டதுபோல் இப்போது நாலாயிரம் ஆனதற்கு நாம் என்னசெய்வது? பூர்வத்தில் முதல் மூன்று ஜாதிகளுக்கு "த்விஜாள்" என்று பேர்கொடுத்து நாலாம் ஜாதியை, "சூத்திரர்கள்" என்று கீழ்மைப்படுத்தியதோடு நிற்காமல், பிற்பாடு "பஞ்சமர்கள்" என்று ஐந்தாவது வகுப்பு ஒன்றை ஏற்படுத்தி அவர்கள் "தீண்டாதவர்கள்" (Untouchables) என்பதுடன் விடாமல் கிட்டவே வரக்கூடாதென்று (Unapproachables) தள்ளிவைத்தோம். பரிதாபம்! அவர்களுடன் சமபோஜனமும் சம விவாஹமும் செய்யலாமென்று நாம் சொல்லவில்லை. ஆனால் அவர்களுக்கு நாம் சமமரியாதைசெய்ய அவசியம் கட்டுப்பட்டிருக்கிறோம். ஏனென்றால் பஞ்சமர்கள் கிரீஸ்துவ மஹம்மதீய ஜாதிகளில் சேர்ந்து விட்டால் அவர்களுக்கு செல்வாக்கு ஏற்பட்டு விடுகிறது. அப்போது மட்டும் அவர்களுக்குச் சமமரியாதை செய்கிறோமன்றோ. ஆகையால் பஞ்சமர்களுக்குப் படிப்பும் நாகரீகமும் வருவதற்கு நம்மால் கூடுமான வரையில் பொருள் உதவியும் சரீரசகாயமும் நாம் செய்யவேண்டும். முற்காலத்தில் இந்தப் பஞ்சமஜாதியில் பிறந்த வஸிஷ்டர், வால்மீகர், வியாசர் முதலியோர் பிரதமஜாதியாரைக் காட்டிலும் அதிக ஞானமுடைய பிரம்ஹநிஷ்டர்களானார்கள்; இந்த யுகத்திலும் நந்தனார், திருவள்ளுவர், திருப்பணாழ்வார், பட்டணத்துப்பிள்ளையின் குருவாகிய பாணபத்திரர் போன்றவர்களும் அம்மாதிரி ஆத்மஞானிகள் தான்! அடுப்புக்கரிக்கும் வைரக்கல்லுக்கும் (Carbon & Diamond) வெளித்தோற்றத்தில் எவ்வளவு வித்தியாசம் இருந்தாலும் கடைசி ஆராய்ச்சியில் (Analysis) இரண்டும் ஒரேவஸ்து வாகத்தான் ஏற்படுகிறது. அத்துவித உண்மை அதுதான். ஆச்சர்யம்! சிலர் இந்தக்கலியுகம் முற்றிவிட்டதென்றும் சகல ஆசாரங்களும் முழுகிப் போகுமென்று சொல்லுகிறார்கள். நம்முடைய சாஸ்திரப் பிரகாரம கலியுகம காலம் 4, 32, 000 வருஷங்கள். அதில் இப்போது சுமார் 5000 வருஷங்கள் ஆயிருக்கிறது. இதை ஒரு புருஷ ஆயுளுக்கு (அதாவது 100ஷ) ஒப்பிட்டால் கலியுகமானது இப்போது 14 மாதசிசுவாயத் தானிருக்கிறது! முற்றிப்போகவில்லை. இம்மாதிரியான வீண விபரீத துக்கங்களை நீக்கி மனுவின் குழந்தை மனிதர்கள் என்கிறமாதிரி எல்லாஜனங்களையும் நம் சஹோதரர்களாகப் பாவித்து சமத்துவம் பாராட்ட வேண்டும். வேதாந்தத்தின் துணிவும் அதுவேதான். ஆத்மாவுக்குக் காலதேச வித்யாசங்களும் ஆண் பெண் ஜாதிபேதங்களும் உயர்வு தாழ்வு மதம் ("மதம்" அல்லது கர்வமும்)

முதலிய ஒன்றும் இல்லையென்றும் நமது உபநிஷத்துகள் உறுதிமொழி கூறுகின்றன. அதற்குத் தாயுமானவரும் ஒரு சாக்ஷிதான். மேலும் நம்முடைய பரதகண்டத்தில் ஜாதிமத வித்தியாசங்கள் இமோத்கிரி பர்வதம் போல் அடியில் விசாலமாக இருந்தாலும், மேலே போகப்போக குறைந்தும் கடைசியாக மாயைக்குச் சமானமான மேக மண்டலத்தைக் கடந்து, சுயேச்சை அடைந்து, தனக்கு இவ்வுலகத்தில் சமமில்லை யென்று ஆகாசத்தைத் தீண்டுவதுபோலும் இருக்கும் கௌரீசங்கர சிகரத்திற்கு (Mount Everest) ஒப்பாக நமது அத்வைதமதம் உயர்ந்த ஏகபாவத்தை விளங்கச்செய்கிறது. ஆகையால் நாம் எல்லோரும் கலக்கமின்றி நம் புராதன நாகரீக முடைய தாய்நாட்டுக்கு ஒற்றுமையோடு உண்மையாக உழைத்து வந்தால் நமக்குச் சுய ஆட்சி என்கிடைக்காது. சக்ரவர்த்திகளுக் கெல்லாம் மகாசக்ரவர்த்தியாகிய சர்வேசனே நமது இராஜாங்கத்தாருக்கு நற்புத்தி யருள்வாராக!

W. துரைசாமி அய்யர்,
வாலாஜா.

---

## தபால் கொள்ளைக்காரர்கள்

(79-ம் பக்கத் தொடர்ச்சி.)

இரங்க:—"நீ சற்று யோசனை யோடும், ஜாக்கிரதையோடும், தந்திரமாய் நடந்துகொள்ள வேண்டும், நான் கூறுகிறபடி நடந்து கொண்டால் சுலபமாய்த் தப்பித்துக் கொள்வாய். போலீஸார் வந்தால் நீ சற்றேனும் சந்தேகத்திற் கிடந்தராமல் அவர்கள் தாராளமாய் எங்கேனும் சோதனை செய்யும்படி விட்டுவிடு. அவர்களிடம் மரியாதையோடும் அன்போடும் பேசவேண்டும். வீட்டிலிருந்து ஓடியவர்களைப் பற்றி, 'அந்தோ! தற்செயலாய் இரவு போலீஸார் இங்குவரா திருந்தால் என்வீடு கொள்ளைபோ யிருக்கும். இரவு நான் ஒரு நண்பர் வீட்டிற்கு விருந்திற்குச் சென்றிருந்தேன். அங்கு தொந்தரவுசெய்து எதையும் அதிகமா யருந்தச்செய்து விட்டார்கள். அதனால் நான் சுமார் பதினோருமணிக்கு வந்து படுத்ததுதான்தெரியும்; காலையில் எழுந்தபோது தெருக்கதவு திறக்கப்பட் டிருந்ததாய் வேலைக்காரர் கூறினார்கள். நற்காலமாய் ஒன்றும் களவுபோகவில்லை. போலீஸார் அச்சமயம் தெய்வ சங்கல்பமாய் இங்குவந்ததே யதற்குக் காரணம். அதற்காக உங்களுக்கு மிக்க வந்தனமளிக்கிறேன்' என்று கூறு. உன்மேல் எள்ளளவு சந்தேகமு முண்டாகாது." என்றான்.

பிறகு சற்றுநேரங் கழித்து இரங்கநாதன் வெளிச் சென்றான். சாமிநாதன் சிந்தனையி லிருந்தான். அரைமணி நேரங் கழித்து போலீஸ் தலைமை யதிகாரியும் சில உத்தியோகஸ்தரும் வீட்டிற்குச் சோதனை செய்ய வந்து விட்டார்கள்.

சாமிநாதன் தன் நண்பன் கூறியதைவிட நேர்த்தியாய் நடந்துகொண்டான். வீட்டில் சந்தேகத்திற்குக் காரணமானது ஒன்றும் அகப்படவில்லை. மறுநாள் தினசரிப் பத்திரிகையில் அடியிற் கண்டபடி பிரசுரம் செய்யப் பட் டிருந்தது:—

"இப்போது சாமிநாதப் பிள்ளைக்காவது அவ்வீட்டிலிருந்த மற்ற யாருக்காவது ஒரு சங்கதியும் தெரியாதென்றும் அவர்கள் யாவரும் நித்திரை

செய்துகொண் டிருந்தார்களென்றும் தெரியவந்தது. பொழுது விடிந்த பிறகே தெருக்கதவு திறந்திருந்தபடியால் தோட்டத்தில் இரவு யாரோ வந்திருந்தார்களென்று தெரிந்தது. அதோடு தபால் இலாகா துப்பறிபவனுகிய சாமிநாதன் என்று அபிநயம் செய்து சாமிநாதப் பிள்ளையின் வீட்டை சோதனை செய்யவென்று சில போலீஸாரைக் கூட்டிக்கொண்டு சென்ற மனிதன் சிறைச்சாலையைவிட் டோடிவிட்ட தபாலாபீஸ் இலிகிதன் அம்பலவாணனுக்கு உடந்தையா யிருந்தானென்று சந்தேகிக்கப்படுகிறது. அவன் தந்திரமாய்ப் போலீஸாரைக் காட்டிற் கொண்டுபோய் கை விட்டு விட்டு எங்கோ போய்விட்டான். அவனைக் கண்டு பிடிப்பவர்களுக்குப் பரிசளிக்கப்படும்."

---

## 14-வது அத்தியாயம்.

---

கோமளவல்லி தன் சரித்திரத்தை யொருவாறு சுருக்கமாய்க் கூறிய போது குடியானவன் ஒன்றுவிடாமல் மிக்க கவனத்தோடு கேட்டான். யாவும் கேட்டதே யவனுக்கு மிக்க வியப்புண்டாய்விட்டது. குருநாதன் என்ற அக்குடியானவன் சாதாரணமாய் நாகரிக மில்லாதவனுயினும் மிக்க இரக்கமான மனமுடையவன். அவன் உடனே யொன்றும் கூருமல் சற்று நேரம் சிந்தனையிலிருந்து "அம்மா உண்மையாகவே நீ கூறியது எனக்கு விளங்கவில்லை. நீ உபாத்தினி யென்றே நான் எண்ணினேன். நீ மிக்க துன்பங்களை யனுபவித்து ஆபத்தில் சிக்கியிருக்கிருய் என்றும் உனக்குத் தக்க உதவி வேண்டுமென்றும் தெரிகிறது. நான் உனக்கு உன் சந்தர்ப்பத்திற்குத் தக்க உதவி செய்யக்கூடியதா யிருந்தால் எனக்கு மிக்க சந்தோஷம்" என்ருன்.

அதன்மேல் அக்கன்னிகை தன் சரித்திரம் முழுமையும் ஒன்றுவிடாமல் கூறினள். உடனே அவள் விஷயத்தில் அவனுக்குச் சிரத்தையுண்டாய் விட்டது. இவளுக்கு உதவி செய்வதே சரி யென்று தீர்மானம் செய்துக்கொண்டு, சாமிநாதன் இரங்கநாதன் இருவர்மேலும் மிக்க கோபமடைந்தவனுய்,

" துஷ்ட நாய்கள்—போக்கிரிப் பயல்கள். அவர்களுக்காக நீ என்னளவும் அஞ்சவேண்டாம். முடிவு வரையில் உன் சகோதரன்போல் நான் உனக்குத் துணை நிற்கிறேன். என் ஆதாரணையில் இருக்கிற வரையில் எவன் உனக்குத் தீங்குசெய்யத் துணிகிறவன் பார்க்கிறேன்" என்ருன்.

இம்மொழிகளைக் கேட்ட அக்கன்னிகை மிக்க சந்தோஷமடைந்து பல இனிய மொழிகளால் தன் நன்றியை வெளியிட்டாள்.

குருநாதன்:—"நான் உன்னைக் கண்டபோது நீ என்ன செய்ய யோசித்துக் கொண்டிருந்தாய்?" என்ருன்.

கோமளவல்லி:—தொழிற்சாலைக ளிருக்கும் ஒரு நகரத்திற்குச் செல்லவென் றிருந்தேன்.

குரு:—என், நாட்டிலிருக்கப் பிரியமில்லையோ?

கோம:—அந்தோ எனக்கு நாட்டில் வசிக்க எவ்வளவோ சந்தோஷம்.

குரு:—"சரி நீ யென்கூட என் வீட்டிற்கு வா, யோசிப்போம். ஆ அதோ தெரிகிறதே என்வீடு. வெளி வாசற்படியில் நிற்கிறவள் என் மனைவி" என்ருன்.

அதற்குள் அவர்கள் குடியானவன் வீடு வந்து சேர்ந்துவிட்டார்கள். பாதையை விட்டுச் சற்றுதூரத்தில் மேடான விடத்தில் சுத்தமான ஒரு சிறுவீடும், பக்கத்தில் சற்று விசாலமான கட்டிடங்களும் இருந்தன; வண்டி அதன் எதிரிற்சென்றதும் குடியானவன் இறங்கித் தனக்கு நல்வரவுகூறும் தன் மனைவியின் செவியில் ஏதோ சில வார்த்தைகளைக் கூறிவிட்டுப் பிறகு வண்டியருகில் வந்து கோமளவல்லியை யிறக்கிவிட்டான். அவன் மனைவி யுடனே கோமளவல்லியை இருகரங்களாலும் தழுவிக்கொண்டு "குழந்தாய்! இப்போ தொன்றும் பேசவேண்டாம். முன்னே பசியாறி யுன்தேக சிரமம் நீங்கியபின் யாவும் பேசிக்கொள்ளலாம்" என்று கூறி வீட்டிற்குள் அழைத்துச் சென்றாள். குருசாமி வண்டி குதிரைகளைக் கவனிக்கச் சென்றான்.

பிறகு மூவரும் கலந்துபேசியபின் குடியானவர்கள் காட்டிய அன்பால் கோமளவல்லி அவர்கள் புத்திரிபோல் அங்கேயே வசித்திருக்கச் சந்தோஷத்தோடு ஒப்புக்கொண்டாள்.

* * * * * *

* * * * * *

நாம் நமது ஆனந்தவிங்கை மிக்க ஆபத்தான நிலைமையில் விட்டுவிட்டோமல்லவா. அத்துஷ்டர்கள் அவனை யடியோடு முடித்துவிட்டு அவன் சவத்தையும் அடக்கம்செய்து விட்டதாய்க் கருதி மிக்க சந்தோஷத்தோடு சென்றார்கள். ஆனால் கடவுள் எங்கும் பார்த்துக் கொண்டே யிருப்பவராதலால் துஷ்டர்களாகிய அப்பரம சண்டாளர்களுடைய நோக்கம் ஈடேறும்படி யெங்கேனும் பார்த்திருப்பாரோ? ஒருபோது மில்லை.

ஆனந்தவிங்கை யவர்கள் கிணற்றில் போட்டுவிட்டுக் கண்ணுக்கு மறைந்த மறுநிமிஷம் சமீபத்திலிருந்த மரங்களின் இருளிலிருந்து கறுப்புடை யணிந்த ஒருவுருவம் வெளிவந்து அக்கிணற்றின் அருகில் வந்து நின்றதும்,

"ஆ! தபாலாபீஸ் துப்பறிபவன் என்றல்லவா கூறினார்கள். ஆம், அவனேதானே! அடகடவுளே! இப்படியும் நடக்குமா. ஆண்டவனே அப்பட்டிப்பட்ட அடிவிழுந்த பின் அவன் இறந்துபோயே யிருப்பான், தடையில்லை." என்று தனக்குத்தானே கூறிக்கொண்டு நின்றவன், திடீலெனத் திடுக்கிட்டு இரண்டடி பின்னிடைந்து மறுபடி கிணற்றருகிற் சென்று குனிந்து பார்த்தான்.

அவன் அவ்வாறு பார்த்ததற்குக் காரணம் என்னெனின், கிணற்றுக்குள்ளிருந்து மிக்க ஆயாசத்தோடு உண்டாகும் மனித அரவம் கேட்டது. அவன் ஒரு வினாடிகூட ஆலசியம் செய்யாது உடனே தன் மேல்சட்டையைக் கழற்றிவிட்டுக் கிணற்றில் இறங்கி கற்கள் முதலியவற்றைக் கஷ்டப்பட்டு ஒவ்வொன்றாயெடுத்து வெளியி லெறிந்தான். முன்பு கள்ளர் ஆனந்தவிங்கை யதிற்போட்டபோது கிணற்றில் பதியப்பட்டிருந்த சில பலகைகளும் உள்ளே விழுந்து விட்டனவென்று கூறினோமல்லவா! நமது நண்பர்களுக்கு, அதிலும் தென்னாட்டார்க்குக் கிணற்றில் பலகையேதென்று வியப்பாக விருக்கும்.

மேல் நாடுகளில் கிணறு இங்கிருப்பது போலவே வட்டமாயிருப்பினும் மேல்பாகம் சுமார் ஐந்தாறடி உயரம் வரையில் சதுரமாய்க் கட்டப்பட்டு உள்பக்கம் கனமான பலகைகள் பதியப்பட்டிருக்கும் ஆனந்தஸிங் கைக் கிணற்றில் போட்டதே மேலிருந்தவர்கள் பாரந்தாங்காது இரண்டு பலகைகள் விழுந்தன, தெய்வ சங்கல்பத்தால் அவை செங்குத்தாய் விழாமல் ஆனந்தசிங் தேகத்திற்கு இரண்டடிகள்மேலேயே குறுக்காய்த்திரும்பி சரிவாய் நின்றுவிட்டன. இப்பலகைகளே அவன் தேகத்திற்குப் பலமான பாதுகாப்பாய் விட்டன. அவன்மேல் தள்ளப்பட்ட கற்கள் முதலிய யாவற்றையும் அப்பலகைகள் தாங்கிக்கொள்ள அவற்றின் கீழ் ஆனந்தஸிங் ஒரு விதக்காயமும் படாமல் காப்பாற்றப் பட்டான். (தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

பொது சமாசாரங்கள்.

## 81-வயதுள்ள வயோதிகனை 200-பெண்கள் வரித்தல்.

மிஸ்டர் ஸான். ஆர். ரோசர்ஸ் என்பவருக்கு வயது 81 ஆகின்றது. அவர் ஆல்டர்ஷாட் என்ற ஊரில் தங்கியிருக்கின்றார். அவர் "வீக்லி டெஸ்பாட்ச்" என்ற பத்திரிகையில் பிரசுரித்த விளம்பரத்தின் பயனாக 200 மாதர்கள் அவரை மணக்கத் தயாராக இருப்பதாக அறிவித் திருக்கின்றனர். அவர்களெல்லோருக்கும் சராசரி 30-வயதிருக்கும். மிஸ்டர்ரோகர்ஸ் அவர்களெல்லோரும் மிகவுஞ் சிறியவர்களென்றும் தாம் 60-வயதிற்கு மேற்பட்டவளாயும் இதுகாறும் கன்னிகையாக யிருக்கின்றவளையுமே மணக்கப்போவதாகக் கூறுகின்றார். அவர் 94-வயதுள்ள பிரிஸ்டல் நகரத்துக் கன்னிகையொருத்தியைத் தன்னை மணக்கும்படி கேட்டிருக்கிறார். இவள் பதிலளித்த பின்பே மற்றவர்களுக்குப் பதிலளிக்கப் போகின்றாராம். ஒரு விதவை தன்னை மணந்தால் தனக்கும் அவருக்கும் வாழப்போதுமான பணம் தன்னிடமிருப்பதாக எழுதியுள்ளாள். 27-வயதுடைய மற்றொருத்தி தனக்கு பல வீடுகளும் ஆஸ்தியும் இருப்பதாக எழுதியிருக்கிறாள். "எமிலி" என்றவள், அவர் முன்னரே மற்றொருத்தியை மணப்பதாக நிச்சயம் செய்துகொண்டு விட்டால் மற்றொரு ஆடவனுக்குத் தன்னை அறிமுகஞ் செய்விக்கும்படி கேட்டுக் கொள்ளுகின்றாள். அந்தோ மேல் நாட்டு நாகரீகமே!

டெலிபோன்கள்.

இங்கிலாந்தில் மொத்தம் 975, 000 டெலிபோன்களிருக்கின்றன. இதற்காக 150 இலட்சம் பவுன் செலவாகிறது.—இங்கிலாந்திலுள்ள செப்பனிட்ட பாட்டையின் மொத்த நீளம். 150, 692 மைல்கள்.

மோட்டார் இரதங்கள்.

அமெரிகா ஐக்ய மாகாணங்களில் சவாரிசெய்யும் மோடார் இரதங்கள் 90 இலட்சமும், சாமான் ஏற்றும் மோட்டார் வண்டிகள் 19 இலட்சம் இருக்கின்றன.

உலகிலுள்ள மோட்டார் வண்டிகளில் 100 இல் 85 அமெரிகாவி லிருக்கின்றன.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## துந்துபிஞு ஐப்பசிமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
## பசலி 1331—கோல்லம் 1097-98—ஹிஜரி 1340—41
## இங்கிலீஷ் 1922ஞு அக்டோபர்மீ—நவம்பர்மீ

| ஐப்பசிமீ | அக்டோபர் (1922ஞு நவம்பர்மீ) | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | செ | ஏகா6-38 துவ 59-0 | மக-10-43 | சித்-60 | விஷு புண்யகாலம் |
| 2 | 18 | புத | திர50-38 | பூர-4-52 உத்-58-17 | அமி-60 | இராத்திரி நரகசதுர்த்தி [ஸ்நானம் |
| 3 | 19 | வியா | சது41-48 | அஸ்-51-18 | சித்-60 | தீபாவளி பண்டிகை |
| 4 | 20 | வெ | ● அ32 48 | சித்-44-18 | சித்-60 | அமாவாசை, கேதாரிவிர |
| 5 | 21 | சனி | பிர24-15 | சுவா-37-43 | சித்-60 | கார்த்திய சுத்தம் [தம் |
| 6 | 22 | ஞா | துதி16-25 | விசா-32 ... | மர-60 | கரிநாள் [தம் |
| 7 | 23 | திங் | திரி9-43 | அனு-27-35 | சித்-60 | ஆலோசன கௌரி விர |
| 8 | 24 | செ | சது4-50 | கேட்-24-52 | ம24-52அ | விருச்சிகாயனம் நா10-52 |
| 9 | 25 | புத | பஞ்1-30 | மூல-21-5 | ம24-5 அ | சஷ்டி, கந்தர் சஷ்டி |
| 10 | 26 | வியா | சஷ்0-15 | பூரா-25-15 | சித்-60 | ஆயுதம்பயிற்ற, மாடுவாங் |
| 11 | 27 | வெ | சப்1-10 | உத்-28-30 | சி28-30 ம | இரவில் தனியநாள் [க |
| 12 | 28 | சனி | அஷ்3-58 | திரு-33-37 | சித்-60 | பகலில் தனியநாள் |
| 13 | 29 | ஞா | நவ8-38 | அவி-40-13 | ம40-13 சி | சிருதாயுகாதி |
| 14 | 30 | திங் | தச14-25 | சதை-47-35 | சித்-60 | விவாகம், வித்தியாரம்பம் |
| 15 | 31 | செ | ஏகா21-0 | பூரட்-55-28 | ம55-28அ | சர்வ ஏகாதசி |
| 16 | 1 | புத | து27-45 | உத்-60 | சித்60 | பிரதோஷம் |
| 17 | 2 | வியா | திர34-15 | உத்-3-15 | சித்60 | சீமந்தம் செய்ய |
| 18 | 3 | வெ | சது39-58 | ரேவ-10-33 | சி10-33 அ | |
| 19 | 4 | சனி | ○ 44-53 | அசு-17-5 | சித்-60 | |
| 20 | 5 | ஞா | பிர48-48 | பர-22-48 | பி22-48சி | |
| 21 | 6 | திங் | து51-33 | கிரு-27-17 | ம 27-17அ | |
| 22 | 7 | செ | திரி53-25 | ரோ-30-55 | அ30-55 சி | |
| 23 | 8 | புத | சது54-5 | மிரு-33-27 | சித்-60 | |
| 24 | 9 | வியா | பஞ்53-40 | திரு-34-52 | ம34-52 அ | |
| 25 | 10 | வெ | சஷ்52-18 | புன-35-20 | சி35-20 ம | |
| 26 | 11 | சனி | சப்49-35 | பூச-34-40 | சி34-40ம | |
| 27 | 12 | ஞா | அ 45-50 | ஆயி-32-58 | சி-32-58ம | |
| 28 | 13 | திங் | நவ41-20 | மக 30-8 | ம30-8சித் | இரவில் தனியநாள் |
| 29 | 14 | செவ் | தச35-23 | பூர-26-13 | சி26-13அ | பகலில் தனியநாள் |
| 30 | 15 | புதன் | ஏக28-45 | உத்-21-30 | அ21-30ம | சர்வ ஏகாதசி விருச்சிகரவி 43-35 |

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| | 3உ மக-செ<br>18,,துலா-பு | | |
| செ | சு | சூ குரு | பு-சு ராகு |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Power Press, 15 Venkatesa Maistry St., Madras.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 8 | துந்துபிஸு ஐப்பசிமீ கஉ
1922ஸு அக்டோபர்மீ 17உ | பகுதி 4

## கடவுள் வணக்கம்.

எவ்வு யிர்த்திரளு முலகி லென்னுயி
 ரெனக்கு ழைந்துருகி நன்மையாய்
இதமு ரைப்பவென தென்ற யாவையு
 மெடுத்தெ றிந்துமத யானைபோல்
கவ்வை யற்றநடை பயில வன்பரடி
 கண்ட தேயருளின் வடிவமாக்
கண்ட யாவையு மகண்ட மென்னவிரு
 கைகு வித்துமலர் தூவியே
பவ்வ வெண்டிரை கொடுத்த தண்டரளம்
 விழியு திர்ப்பமொழி குளறியே
பாடி யாடியு ளுடைந்து டைந்தெழுது
 பாவை யொத்தசைத லின்றியே
திவ்ய வன்புருவ மாகி யன்பரொடு
 மின்ப வீட்டினி லிருப்பனே
தெரிவ தற்கரிய பிரம மேயமல
 சிற்சு கோதய விலாசமே.

அருள்வடி வேழு மூர்த்த மவைகள்சோ பான மென்றே
சுருதிசொல் லியவாற் றாலே தொழுந்தெய்வ மெல்லா மொன்றே
மருளெனக் கில்லை முன்பின் வருநெறிக் கிவ்வ ழக்குத்
தெருளின்முன் னில்லையா முன்னைச் சேர்ந்தியான் றெளிகின்றேனே.

வாத னைப்பழக் கத்தினன் மனமந்த மனத்தால்
ஓத வந்திடு முரையுரைப் படிதொழி லுளவாம்
ஏத மம்மனம் மாயையென் றிடிற்கண்ட வெல்லாம்
ஆத ரம்செயாப் பொய்யதற் கையமுண் டாமோ.

## அரும் பொருள் விளக்கம்

துழைந்துருகி:—(பிற உயிர் துன்புறும் போது அதைச் சகியாது) மனங் கசிந்து இரங்கி

எனதென்ற யாவையும் மதயானைபோல் எடுத்தெறிந்து = மதம் பிடித்த யானை தனக்கு எதிர்ப்படும் எதையும், நல்லது, கெட்டது, நமக்கு அனுகூலமானது, பிரதி கூலமானது என்ற வித்தியாசம் பாராமல் அலட்சியமாய் எடுத்தெறிவதுபோல், எனது என்று கருதும் புறப்பற்ருகிய எல்லாவற்றிலும் பற்றெழிந்து

அன்பரடிகண்டதே அருளின்வடிவமா = (உன்) அன்பர்களைக் கண்டால் (உன்) அருள் வடிவமாகவே பாவித்து

கண்டயா...கைதுவித்து=காணும் எல்லாவஸ்துக்களும் நினது அகண்டாகார சொரூபமே யென்று நிச்சயித்து வணங்கி

இம்மகானே "திருவருள் விலாசப் பரசிவவணக்கம்" முதல் பாசுரத்தினிறுதியில் "கண்டன வெலாமோன வுருவெளியதாகவே கருதியஞ் சலிசெய்குவாம்" என்றருளினர்

பவ்வவெண்டிரை...திவ்யவன்புருவமாகி= பக்திப்பெருக்கால் கண்களில் முத்துப்போன்ற நீர் துளிப்ப, உரோமம் சிலிர்ப்ப மொழிகுழற மனம் அனலிலிட்ட மெழுகுபோலுருகி மெய்ம்மறந்து நிவாததீபம் போலும் சித்திரப் பாவைபோலும் அசைவற்று அன்பே யுருவாகி—இது ஞாதருஞேயங்கள் என்ற தன்மை முன்னிலையற்று அருள்வயப்பட்டு அன்புருவாய், ஆனந்தமயமாய் விளங்கும் நிலையாகும்

இம்மகானே இந்த இன்பநிலையைப் பலவமயங்களில் பலவாறுவிளக்கி யிருக்கிறார்; இது பக்திப்பெருக்கால் அனுபவித் தறியத்தக்கது

மனதையடக்கி ஒரேயிடத்தில் நிலைக்கச் செய்வதற்கு பக்தி சிறந்த மார்க்கமாகும். ஈசுவரனிடத்தில் அனன்னிய பக்தியுடையோர்க்கு மனம் எளிதில் வயப்பட்டு ஒடுங்கும். மனம் அசைவற்று நிற்கும் நிலைக்கு, அலையிலாத சாகரம், காற்றிலாவிடத்து அசையாது நிற்கும் (நிவாத) தீபம், அல்லது சித்திரதீபம், சுவரில் எழுதப்பட்ட பதுமை முதலியவை திருட்டாந்தங்களாகும்.

2. 'அருள்வடி வேழுமூர்த்தம்'—என்றது, சுத்தவித்தை, ஈச்சுரம், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம் ஆகிய எழும் ஈசுவரனுடைய அருள் உருவங்களேயாகும் என்பதாம்

சோபானம்—படிகள்

மருள் எனக்கில்லை = இவ்விஷயத்தில் எனக்குச் சற்றும் மயக்கமில்லை

எச்சமயத்தார் பாவனைசெய்யும் கடவுள் சொரூபமும் மேற்கூறப்பட்ட எழில் அடங்குமாதலால் எல்லாச் சமயத்தார்களாலும் தொழப்படுகின்ற கடவுள் ஒருவரே யென்பது வேதசம்மதம். ஒவ்வொரு சமயமும் கடவுளை யடைய ஏற்பட்ட ஒவ்வொரு மார்க்கமேயாகும். எல்லாச் சமயங்களாலும் பிரதிபாதிக்கப்பட்ட கடவுள் ஒருவரேயாதலின் மதாதீதரான அவருக்கு எல்லாச் சமயங்களும் ஒன்றே. அவருக்கு விருப்பு வெறுப்பு இரண்டு மில்லை. ஒரு மனிதனை அவன் மனைவி கணவரே என்றும், புத்திரன் அப்பா என்றும், தம்பி அண்ணா என்றும், மைத்துனன் மாமா என்றும், வேலைக்காரன் எஜமானே என்றும் பலபேர் பலமாதிரி யழைத்தாலும் எல்லாருக்கும் அவன் "ஏன்" என்கிருனேயன்றி, ஒருவர் கூப்பிடுவதில் விருப்பும் இன்னொருவர் கூப்பிடுவதில் வெறுப்பும் அவனுக்கில்லை—இவ்வாறே கடவுளும். அவர் ஆன்மாவின் பரிபக்குவத்தைக்கண்டு தம்மில் சேர்த்துக் கொள்வதாகிய முத்திப்பேற்றை யளிப்பவரே யன்றி, மதத்தையும் ஜாதியையும் கருதி யளிப்பவரல்ல—அப்படிச் செய்பவராயின் அவர் கடவுள் பதவிக்கு அருகராகார். ஏனெனில் தமக்கு விருப்பமில்லாத ஒரு மதத்தை நிலைத்திருக்கச்செய்து அதில் மானிடரை ஜனிக்கச்செய்து பிறகு அவர்களுக்கு முத்தியளிக்கே னென்பாராயின் அவரையும் கருணாநிதி, ஞானசொரூபன், சர்வசக்தன் என்று யாரே நம்புவர் ?

3. "வாதனைப் பழக்கத்தால் மனம்" —என்றது, பூர்வ ஜன்மத்தில் செய்த வினைகளாகிய பிராரப்தத்தை யிச்சன்மத்தில் அனுபவிக்க வேண்டுமாதலின், அவ்வினைகளில் சம்பந்தப்பட்ட உலக விஷயங்களின் பிராரத்வ வாதனைப் பழக்கமே மனம் என்பதாம்

மனத்தால் ஓதவந்திடும் உரை:—மனதின் சிந்தனையை வாக்கால் வெளியிடுவதே உரை என்பதாம்

உரைப்படி தொழிலுளவாம் — வெளிவந்த உரைப்படி தொழில் ஏற்படுகிறது

"நாம் மனம்வாக்குக் காயங்களாலேயே கர்மங்களைச் செய்கின்றோம். மேலேகூறியபடி பிராரத்வ வாதனைப் பழக்கமே மனமாகவும் அம்மனதின் சிந்தனையை வெளியிடலால் வாக்கு என்ற உரையும், அவ்வுரைப்படி காயத்தால் தொழிலும் நிகழ்கின்றன. இதனால் மனமே கன்மத்திற்கு ஆதிகாரணமென விளங்கும். அத்தகைய மனமே மாயையெனின், பிரத்தியட்சமாய் உலகில் காணப்படும் நாமரூபப் பொருள்கள் யாவும் உண்மையறிந்தோர் விரும்பத்தகாத மித்தையே என்பதில் சந்தேகமேயில்லை" என்பதாம்.

---

# ஆனந்தபோதினி

துந்துபிஸு ஐப்பசிமீ கஉ

## கடவுளுக்கு மனைவி யுண்டோ?

அநாதி நித்தியமானதும் சத்தியத்தையே யஸ்திவாரமாக வுடையதும், மதாதீதமானதுமாகிய நமது வேதத்தில் கடவுள் இலக்ஷணத்தைக் கூறும்போது, கடவுள் ஏகம், நித்தியம், நிட்களம், சச்சிதானந்தம் என்பது முதலிய பல இலக்ஷணங்கள் கூறப்பட்டிருப்பதோடு, அவர் ஆதியந்த மற்றவர், நாமம் ரூபம் இல்லாதவர், குறி குணங்களற்றவர், எங்கும் நிறைந்தவர், அவர், ரூபம் அரூபம், ரூபாரூபம், ஆண், பெண், அலி ஆகிய இவற்றில் எதுவுமல்லவென்றும், அவரை இன்ன குறியுடையவர், இன்ன நிறமுடையவர், இப்படிப்பட்டவர் என்று ஒருவராலும் கூறமுடியாதென்றும் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கிறது. அவர் அருளைப்பெற்ற மகான்களும், அவரை யொருவரும் கண்டதில்லை யென்றும், அதுவானல் அதுவாவர் அதுவே சொல்லும் என்றும், இவ்வண்ணன் இவ்வுருவன் இப்படித்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணுதே யென்றும் கூறிப் போந்தனர்.

அப்படி யிருக்க நமது புராண இதிகாசாதிகளில் சிவனுக்குப் பார்வதி யென்றும், விஷ்ணுவுக்கு இலக்குமி யென்றும், பிரம்மாவுக்கு சரஸ்வதி யென்றும், இவ்வாறே சுப்பிரமணியராதி யேனைய கடவுட் சொரூபங்களுக்கும் மனைவியருண்டென்றும் கூறப்பட்டிருக்கிறது.

இதை யொரு காரணமாகக்கொண்டு நமது மதத்தினரை வஞ்சித்துத் தம் மதத்திற்கு இழுக்க முயலும் அன்னிய மதத்தவர்கள் இதன் உண்மையையறியாமலும், சிலர் அறிந்திருந்தும் நம்மவரிற் பாமரரை வஞ்சிக்க வெண்ணி அதை மறைத்தும், "உங்கள் சிவன் விஷ்ணு முதலிய தெய்வங்கள் சாதாரண மனிதரைப் போலவே

மனைவியரை வைத்துக்கொண் டிருக்கிறார்களே. அப்படிப்பட்டவர்க ளெல்லாம் தெய்வமாவார்களா! கடவுள் பரிசுத்தமானவரல்லவா..." என்று கூறி நம்மவர் மனதைக் கலங்கச் செய்கிறார்கள். மதசாத்திர ஆராய்ச்சி யில்லாத நம்மவரில் பாமரர்கள் "ஆமாண்டா—இவர் கூறுவது சரிதான்—தெய்வத்துக்குக்கூட நம்மாட்டமே பொண்டாட்டி யிருந்தா அதின்ன தெய்வம்" என்று மிரண்டு விடுகிறார்கள்.

இவ்வாற்றால் தம் மதத்தின் பெருமையை யறியாத இவர்களுக்குத் தங்கள் மதத்தில் குற்றமும், வெறுப்பும் உண்டாகச் செய்து பிறகு வேறுவித ஆசைகளைக் காட்டிச் சுலபமாய் மயக்கித் தம் மதத்தில் சேர்த்துக் கொள்கிறார்கள். நமது மதத்தைச் சேர்ந்த சந்தாநேயரில் ஒருவர் "பெண்ணாசையை யொழித்தாலன்றி மோக்ஷம் கிட்டாதென்று கூறுகிறார்களே, சிவன் விஷ்ணு முதலியவர்களுக்கே மனைவிக ளிருக்கிறார்களே, அவர்களுக்கு அதனால் பாபமில்லையா? இச்சந்தேகத்தைத் தய்வுசெய்து நிவர்த்திக்க வேண்டும்" என்று எழுதுகிறார். அதனாலே நாம் இதை வரைய நேர்ந்தது.

சாதாரணமாகவே சற்று அறிவை யூன்றி யாராயப்புகின் இதன் உண்மை ஒருவாறு விளங்கும். எவ்வாறெனின், சிவத்தின் மனைவியாகிய பார்வதி அவர் தேகத்திலேயே பாதிபாகமாக விருக்கிறாள் என்று கூறப்பட் டிருக்கிறது. இதனால் புருடன் மனைவி யென்பது சொன் மாத்திரமே யன்றி உண்மையில் உருவம் ஒன்றே யென்பது எளிதில் புலப்படும். இவ்வாறே விஷ்ணுவும் தமது மனைவியாகிய இலக்குமியை மார்பிலேயே வைத்துக்கொண் டிருக்கிறார் என்று கூறப்பட்டிருக்கிறது. அதிலும் பிரம்மாவோ சரஸ்வதியை நாக்கில் வைத்துக்கொண் டிருக்கிறார் என்று கூறப்படுகிறது. பாபம்அவர் சாப்பிடும்போது மிக்க ஜாக்கிரதையாக விருக்கவேண்டும். இன்றேல் தமது மனைவியையும் பதார்த்தத்தோடு சேர்த்து மென்று விழுங்கிவிட நேரிடும். இவர்களெல்லாம் ஒரு பக்க மிருக்கட்டும். மனைவி யில்லாதவரென்று பிரசித்தி பெற்ற விநாயகருக்கும் சித்தி புத்தி என்று இரண்டு மனைவிகளைக் கட்டி வைத்திருக்கிறார்கள்.

அந்தோ இவற்றை யெல்லாம் அறிவைக்கொண்டு சிந்திக்கின் வெளிப்படையாகத்தோன்றும் அர்த்தமே உண்மையான அர்த்த

மல்ல வென்றும், இவற்றில் ஏதோ ஆழ்ந்த பொருள் மறைப்பட்டிருக்கிற தென்றும், ஏதோ சில சூக்குமப்பொருள்கள் இவ்வாறு ஸ்தூலமாக உருவகப்படுத்தப்பட் டிருக்கின்றன வென்றும் நன்கு உணரலாம். "அப்படிச் செய்வதற்கு ஏதேனும் அவசியமும் ஆதாரமுமிருக்கின்றனவா? இதனல் நன்மையேதேனுமுண்டா?" எனின், அவ்வாறின்றி நம் முன்னோராகிய மகான்கள் இவற்றை யங்கீகரித்திரார்கள்.

ஸ்தூலமான காரியத்தைக் கொண்டே சூக்குமமான காரியத்தை யறியவேண்டி யிருக்கிறது. கடவுள், ஆன்மா இவற்றின் சம்பந்தம் முதலிய ஆன்மார்த்த விஷயங்க ளெல்லாம் சூக்குமமானவை. இவற்றை விளங்கச்செய்ய வேண்டுமாயின் ஸ்தூல திருட்டாந்தங்களைக் கொண்டே தெளிவுறச் செய்யவேண்டும். இனி யிவற்றிலடங்கியுள்ள உண்மை யென்ன? இவை யெந்தச் சூக்கும விஷயங்களை விளங்கச் செய்கின்றன என்று பார்ப்போம்.

உலகில் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட மனிதர்களில் ஒரு பேதமும் இல்லை. அவ்வாறே ஊர்வன, பறப்பன, விலங்குகள் முதலிய யாவற்றிலும் ஒவ்வொரு இனத்திலும் சிருட்டியில் பேதமின்றி ஒரேமாதிரி யிருக்கக் காணலாம். எல்லா மனிதருடைய அங்கங்களும் ஒரே மாதிரிதான்—அப்படியே எல்லாவற்றிலும். ஆனல் சிருட்டியில் ஆண் பெண் என்ற இரண்டு பேதம் மட்டும் ஒவ்வொரு ஜீவராசியிலும் இருக்கக் காணலாம். இது தவிர கடவுள் சிருட்டியில் வேறு பேதமில்லை. மற்றபடி இடபேதத்தால் நிறபேதமும், மனிதனல் ஜாதிபேதம் முதலியவைகளும் உண்டாயின. இந்த ஆண்பால் பெண்பால் பேதம் மட்டும் எல்லாச் சீவ ராசிகளிலும் உண்டு. தாவரங்களில்கூட சிலவற்றிற்கு அப்பேதம் இருப்பதாகவே தெரிகிறது. திருட்டாந்தமாய் பனைமரத்தில் ஆண்பனை பெண்பனை யுண்டு.

இவற்றில் விர்த்தியுண்டாவது பெண்பாலிடத்திலேயே. தாவரங்களுக்கெல்லாம் வித்து ஆண்பாலுக்குச் சமதையாக விருந்தாலும் பூமி பெண்பாலாக விருக்கிறது. இதனல் சிருஷ்டிக்கு ஆண் சக்தி யொன்றும், பெண் சக்தி யொன்றுமாகிய இரண்டு சக்திகள் வேண்டும் எனத்தெரிகிறது. ஆண் சக்தி வித்துப் போன்றது; பெண் சக்தி பூமியைப் போன்றது. ஒரு சிறு விதையில் வேர் முதல் கிளை இலை பூ பிஞ்சு முதலிய யாவும் சூக்குமமாய்

அடங்கியிருந்தாலும், பூமியின் சேர்க்கையின்றி அது வெளிவராது. இதில் * இன்னொரு விசேடமிருக்கிறது. விதை தனியாய் வியாபகமாய்த் தோன்றிக்கொண் டிருக்கும் வரையில் அதிலிருந்து உற்பத்தி காணப்படுவதில்லை. அது பூமியில் (வியாப்பியமாய்) விடவேண்டும்; அதாவது மறைக்கப்பட வேண்டும்; பிறகே அதினின்றும் உற்பத்தி தோன்றுகிறது.

இப்போது ஆண்பால் பெண்பாலாகிய இருவிதச் சக்திகளே சிருஷ்டிக்குக் காரணம் என்றறிகிறோம். இவ்வாறே தோற்றிக்கொண் டிருக்கும் இப்பிரபஞ்ச சிருஷ்டிக்கும் இரண்டுவித சக்திகள் காரணமாக விருக்கின்றன. ஒன்று பிரம்மம், மற்றொன்று அதனிடம் அக்கினியிற் சூடுபோல் பிரிபடாதிருக்கும் அபின்ன சத்தி. இதற்குப் பரையென்றும் பெயர். இந்த இரண்டையுமே சிவமும் சத்தியும் என்பது. பிரம்மம் அச்சத்தியைத் தனக்குள் அடக்கிக்கொண்டு தான் மாத்திரம் வியாபகமா யிருக்கும்போது ஜகத் சிருஷ்டியில்லை. அச்சத்தி விசிரிம்பித்து பிரம்மம் அப்பராசத்தியின் வியாபகத்தில் (வியாப்பியமாக) இருக்கும்போதுதான் சிருட்டி யுண்டாகிறது. இச்சக்தியையே யருட் சக்தியென்றும் கூறப்படுகிறது. ஈசுவரனுடைய சிருட்டித் தொழிலுக்குக் கருணையே காரணம். ஜீவர்களிடத்துள்ள கருணையால் அவர்கள் மோக்ஷ மடைவதற்காகத் தனுகரண புவனபோகங்களைப் படைத்தளிக்கிறார். பிரம்மம் கிரியை யற்றது. சலன மற்றது. சத்தியின் அம்சத்திலேயே பஞ்ச கிருத்தியங்களும் நடை பெறுகின்றன. இச்சத்தியையே பெண்பாலாக உருவகப்படுத்தி யிருக்கிறது. மோக்ஷமடைதற்கு ஈசுவரன் அருளே காரணம். மாணிக்க வாசகரும் "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்று கூறினார். இக்காரணத்தாலேயே ஈசுவரனைத் துதிக்கும் மகான்கள் (சமயாசாரியர் ஆழ்வாராதியர் முதல்) அனைவரும் அம்மையாரையும் சேர்த்தே துதித்திருக்கிறார்கள். இக்காரணம் பற்றியே சாத்தேயர் (சக்தியை யுபாசிப்போர்) மோக்ஷமடையச்சத்தியே பிரதானம் என்கிறார்கள். எல்லா தேவதா சொரூபங்களும் சக்தியின்

---

* வியாபக வியாப்பியம்—பொடியும் டப்பியும் போல் ஒன்றுக்குள் ஒன்று அடங்கி யிருக்கும் பொருள்களுக்கு வியாபக வியாப்பிய சம்பந்தமுண்டு. டப்பி வியாபகம்—பொடி வியாப்பியம்—குடசலத்தில் குடம் வியாபகம் ஜலம் வியாப்பியம்.

அம்சமே யாகும். நம் தேகத்திலுள்ள எலும்பு முதலிய கடின பதார்த்தங்கள் சிவத்தின் அம்சமும், உதிரம் மாமிசம் முதலியவை சத்தியின் அம்சமும் ஆகும்.

மனதை யடக்கி வயப்படுத்தவும், பக்தி பெருகி ஈசுவர னுடைய அருளைப் பெறவும் சொரூப உபாசனை அவசியமான தாக விருக்கிறது. அந்தந்த சொரூபங்களுக்குரிய சக்திகளையே மனைவியர் என்று உருவகப்படுத்தி யிருக்கிறது. இன்னும் அந் தந்தக் கடவுளருக்குரிய வாகனங்கள் ஆயுதங்கள் நிறம் முதலிய யாவும் அவர்கள் சத்திகளையும் இலக்ஷணங்களையுமே குறிக் கின்றன.

உலகில் மாந்தர்களில் எல்லாருமே தீவிரதர அதிகாரிகளல்ல. மந்த அதிகாரிகளும் படிப்படியாய்ச் சாதனங்களை யடைந்து ஞான மடையும் பக்குவிகளாவதற்கு இவ்வித சரியை கிரியை முதலிய மார்க்கங்கள் அத்தியாவசியம் வேண்டியவைகளே. சிறு பால ருக்குத் தின்பண்டங்களில் ஔடதத்தை மறைத்துவைத் தளித்து அவர்கள் பிணிகளைப் போக்கும் கருணையாந் தாய்போல், மந்த அதிகாரிகளும் ஞான மடையுமாறு சரித்திரரூபமான புரான அர்த்தங்களில் உயர்வான தத்துவக் கருத்துகள் அடக்கி வைக்கப் பட்டிருக்கின்றன. இவற்றை யாராய்ச்சி செய்வதால் அவரவர் களின் பக்குவத்திற்குத் தக்கபடி, சிலர் பக்தியோடு செய்யும் புரான படனத்தால் சித்த சுத்தி பெற்று பக்திமான்களாகிறார் கள்; சிலர் சரியை கிரியைகளில் முயன்று பக்தி ஜனித்து மேல் படிக்குச் செல்கிறார்கள். தீவிர, தீவிரதரபக்குவ முடைய அதிகாரி கள் உட்கருத்துகளை யுணர்ந்து தத்துவ ஆராய்ச்சிசெய்து ஞான மடைகிறார்கள்.

இக்காரணங்களால் சிவன் விஷ்ணு முதலியவர்களுக்கு மனைவியர் என்று கூறியிருப்பது அவர்கள் சத்திகளையே யன்றி வேறில்லை யென்றும், ஆகையால் அவர்கள் மனைவியரை வைத்துக் கொண்டு சிற்றின்பத்தை யனுபவிக்கிறார்கள் என்று கருதுவது அறிவின்மை யென்று உணரவேண்டும். நமது மதத்தைப்பற்றிய இத்தகைய உண்மைகளை நம்மவரில் பாமரரா யிருப்பவர்களுக் கெல்லாம் போதித்து அவர்கள் பிறமதத்தினருடைய சொற்களு க்கு மயங்கா வண்ணம் செய்ய வேண்டியது அறிவாளிகளின் கட மையாகும்.

இவ்வாறே நம்மவரைத் தம்மதத்திற்கு இழுக்க முயலும் கிருஸ்துவர்கள் இன்னொரு பொய்க்கூற்று கூறி நமது பாமரர்களை யேமாற்றுகிறார்கள்.

அதாவது "ஹிந்துக்களுக்குப் பல தெய்வங்கள் இருக்கின்றன" என்பதே. உண்மையில் கடவுள் ஏகம்-ஒருவரே - என்ற விஷயம் வேதத்தில் பூரணமாய்த் தெளிவாய்க் கூறப்பட் டிருக்கிறது. நாம் எல்லா சொரூபங்களையும் ஒரே கடவுளின் பல சொரூபங்களாகக் கருதுகிறோமே யன்றிக் கடவுள் ஒன்றுக்குமேலிருப்பதாகக் கருதுவதில்லை. எல்லாம் அவருடைய சொரூபங்களே. உள்ளும் புறம்புமாய் யாவற்றிலும் எங்கணும் அவரே நிறைந்திருக்கிறார் என்ற உண்மையை அனுபவமாகக் காட்டக்கூடியது நமது மார்க்கம். ஒரே கடவுளே தொழில் பேதத்தால் மும்மூர்த்திகளாக விவகரிக்கப்படுகிறார் என்றும், மூவுருவங்களும் ஒருருவே என்றும் தெளிவாய்க் கூறப்பட்டிருக்கிறது.

நம்மவர் இவ்வுண்மைகளை யுணர்ந்து வீணே பிறமதத்தவர் போதனையால் மயங்கி இடர்ப்படாவண்ணம் எச்சரிக்கை யடையப் பிரார்த்திக்கிறோம். நமக்கு யாவற்றிலும் ஆன்மார்த்தமே பிரதானமானதென்ற உண்மையை யுணர்ந்த அறிவாளிகள் இவ்விஷயத்தில் சிரத்தை யெடுத்துக்கொண்டு ஆங்காங்கு இத்தகைய விஷயங்களை நம்மவர்க்குத் தெளிவாயெடுத்துரைக்க வேண்டிக் கொள்கிறோம். ஓம் தத் ஸத்.

---

## தமிழ் நாடகம்.

தமிழ்நாட்டில் முத்தமிழ் என்று மொழிவது வழக்காயினும் நாடகத் தமிழ் காண்பது அரிது. இயற்றமிழ் நூல்கள் பல மலிந்துள்ளன: நாடோறும் வெளிவருவன (செய்யுளும் வசனமும்) இயலே; இசையும் சிறுபான்மை யாங்காங்கு வெளிவருகின்றது. பண்டைய நூல்களுள்ளும் ஆங்காங்குக் காணப் பெறுகின்றது. ஆனால் நாடகம்மட்டும் பெயரளவாய் நின்றதே யன்றி மேலொன்றுமின்று.

ஆனால் நாடகநூல் தமிழில் கிடையாது என்று கூறுதல் கூடாது. தொல்காப்பியர் தமது இலக்கணம் வகுக்குங் காலத்துக்கு முன்னரே பல நாடகங்கள் உண்மை புலப்படும். அவர், மெய்ப்பாட்டியலும் சிறுபான்மை உவமவியலும் பொருளதிகாரத்துள் வகுத்தது, அரங்கினடாத்து முறைமையினைத் தழுவியே. நாடகத்துக்கு முதற்கருவியாகிய பாவனையே மெய்யில் அவ்வப்பொழுது தோன்றும் விகற்பமாக அவர் விவரித்தனர். தொல்காப்பியத்துக்கு முதனூலாகிய அகத்தியம் என்னு மிலக்கணம், இயல் இசை நாடகமென்ற மூவகைப் பிரிவினை நுதலியதென்று கூறுப. ஆயின் அகத்தியம் ஒரு சிறிதும் கிடைப்பதரிது; ஆகலின்யாம் ஒன்றுந் துணிதலியலாது

பண்டைய் நூற்களுள் நமக்குக் கிடைத்தவற்றில் சிலப்பதிகாரம் * ஒன்றுமே நாடகப்போக்கைத் தழுவியது. அதன்கண் அக்காலத்தார் நாடகத்தின் தன்மை ஒருவாறு விளங்கும். ஆசிரியர் இளங்கோவடிகள் காலத்தில் பலவகைக் கூத்துக்கள் வழக்காற்றில் இருந்ததும் புலனும். ஆய்ச்சியர் குரவையில், அவர் "மண்ணின் மாதர்க்கணியாகிய கண்ணகியுந் தான் காண ஆயர்பாடியி லெருமன்றத்து மாயவனுடன் தன்முனுடிய வாலசரிதை நாடகங்களில் "வேனெடுங்கண் பிஞ்ஞையோடாடிய குரவையாடுதும்" என்றதும், பிறண்டும் பற்பலவாறு கூறுவதும் கவனிக்கற்பாலது.

அவருக்குப் பின் நாடகநூல் வழக்காறற்றுப் போயிற்றுகும். சிந்தாமணி, சூளாமணி, உதையணன் கதை, இராமாயணம் முதலிய காவியங்கள் தோன்றினவேயன்றி நாடகநூல் ஒன்றேனுந் தோன்றிலது; அன்றியும் பண்டைய நாடக இலக்கணங்கள் (முறுவல், சயந்தம், மதிவாணர் நாடகத் தமிழ்நூல் முதலாயின) மறைவதாயின.

உத்தாகாண்ட முடையார்க்குப் பின்பட்ட ஆசிரியர் அடியார்க்கு நல்லாரும் "இசைத் தமிழ்நூல் பல இறந்தன" என்றுர். "இனி, இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை பெருங் குருகும் பிறவும், தேவஇருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலாவுள்ள தொன்னூல்களுமிறந்தன. நாடகத்தமிழ் நூலாகிய பாதம் அகத்திய முதலாவுள்ள தொன்னூல்களு மிறந்தன. பின்னும் முறுவல் சயந்தம் குணநூல் செயிற்றிய மென்பனவற்றுள்ளும் ஒருசார் சூத்திரங்கள் நடக்கின்ற அத்துணையல்லது முதல் நடு இறுதி காணுமையின் அவையு மிறந்தனபோலும்; இனி, இறக்கவே வரும், பெருங்கல முதலிய பிறவுமாம்" † என்பது காணவும் வருந்துகிறது.

நாடகத்துக்குடன்பட்ட நாட்டியமும் தாழ்வடைந்து நிற்கின்றது. மேல் இறந்து பட்டவாறு கூறியவற்றுள் பரதசாஸ்திரத்தை முறைப்படுத்துவன சில. தற்காலத்தில் பரதநாட்டியம் பெரும்பாலும் இழிந்த நிலைமையில் இரண்டோரிடங்களில் நடாத்துவது காணலாம். அதனைக் குறித்த இரண்டொரு நூலுந் தவிர வேறொன்றுங் காண்பதரிதாயிற்று.

சுமார் இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் இயற்றிய இராம நாடகமே, அத்திமலரெனக் காணப்பெறுகின்றது ; தற்போது வழங்கும் நாடகங்களில் மேம்பட்டது. அதன்கண் ஆசிரியர் கல்விவளனும், இயற்கை

---

* சிலப்பதிகாரம் ஐம்பெருங் காவியங்களுள் ஒன்று 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' இளங்கோவடிகள் என்பவரியற்றியது. இதற்குப் பண்டைய அரும்பதவுரை யொன்றும், அடியார்க்கு நல்லாரெழுதிய விரிவுரை யொன்றும் உள.

† சிலப் பதிகாரம் அடியார்க்கு நல்லாருரைப்பாயிரம்.

வனப்பும் பக்திரசமும் ஒன்றுபடக் கனிந்தருளினர். அஃதொன்றே சந்தி வீதிகளில் நடாத்துதற்கும், அரங்குகளில் நிறுவுதற்கும் வாய்த்தது. எனினும், நாடகவியலுக்கு அந்நூலும் இழுக்குற்றதென்றே எமது துணிபு. அது நாடகவியலின்றன்மை யாயும்பொழுது நன்கு புலப்படும் என்று கருதுகிறோம்.

'இராம நாடகத்தின் பிற்பட்ட நாடகங்கள் பெரும்பாலும் உதர நிமித்தம் எழுந்தன என்னலாம். இரண்டொன்று சான்றோர்க் கொவ்வாததும், உண்மைக்கு மாறுயதுமாக உள. அரிச்சந்திரவிலாசம், கோவலன் நாடகம், நல்லதங்காள் நாடகம், லலிதாங்கி, சதாரம், டம்பாச்சாரி நாடகம், மற்றும் பல்வகை யிழிந்த சரித்திரங்களும் வெளிவருகின்றன. இவற்றுள் நல்ல நீதிகள் புகல்வன பலவாயினும், அவற்றை யுணராது, மனதிற்கொவ்வாத இரண்டொரு காட்சிகளையும், சம்பாஷணைகளையுமே பெரும்பாலும் விழைகின்றனர். அதன் நிமித்தம், பல்லிடத்தில், முதனூலில் கருத்தைப் பலவாறு திரித்து நாடகங் காண்போர் கண்ணுஞ் செவியுங் களிக்க நடிக்கின்றனர். அந்தோ! இவ்விதஞ் செய்தலின் அன்றோ நாடகங்காண்பது குற்றமென்று கூறலாயிற்று. முற்காலத்தில் நாடகம் பொது அரங்கத்தினும் வேந்தர் சபையினும் நடத்தப்பெற்றுச் சிறப்புடன் விளங்கிற்று. இப்போழ்தோ..........! இத்தகைய நாடகங்கள் வெளிவருவதினும் ஒன்றேனுமில்லா திருத்தல் மேன்மையெனத் தோன்றுகின்றது.

ஆனல் இடை யிடையே விற்பன்னர் சிலர் அருமையான நாடகங்கள் வெளியிடுகின்றனர். அவற்றுட் பெரும்பாலும் வடமொழி யாங்கில தத்துவங்களையும் நாடகங்களையும் தழுவியன. எனினும், சிற்சில மிகவும் பாராட்டத்தக்கவையாதலின், இன்னுஞ் சில ஆண்டுகட்குள் தமிழ்க்கே யுரிய நூல்கள் வெளிப்போந்து தமிழ்மக்கள் மனதைக்கவரும் என்று விழைகின்றனம். நாடகத்துறையிலேயே மிகவும் பயின்றோர், நாடகவியலும் தத்துவமும் நன்கறிந்து பண்புடனியற்றினராயின், தமிழகத்துக்குக் கழிபேருதவி புரிந்தனராவர். (தொடரும்)

து. தீனதயாளு B. A.

---

# கையெழுத்து

சூத்திரம்.

கட்புல னில்லாக் கடவுளைக் காட்டும்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
யுட்கொளற் காமுரு பாம்வடி வெழுத்தே.

என்றுமேலோர் கூறியுள்ளார் எனினும்,

பிற பாஷாபிமானம் மேலிட்டுத் தாய்ப்பாஷாபிமானம் கிழிட்டுப் படிப்படியாய்த் தேய்ந்து வருமிக் காலத்தில் தமிழ்ப் பாஷாபிமானம் கட்டோடு விட்டவர்போக மற்றவர்களாவது அபிமானம் வைத்துச் சித்திரம் கையெழுத்து விஷயமாய் நமது முன்னோர் தேடி வைத்திருக்கும் மகத்துவமும் பெருமையும் நிலைக்கச் செய்வார்க ளென்று புல்லறிஞன் பேசுவதற்குப் பத்திராசிரியரவர்கள் இடங்கொடுக்க வேண்டுகிறேன்.

அன்பர்களே ! நம்பாரதமாதாவின் "அகத்தியன் பயந்த செஞ்சொலாரணங்கு" என்னும் தமிழ்ப்பாஷையின் எழுத்துக்களில் பின்சொல்ல உயிர்மெய் எழுத்துக்களை விட்டு உயிர் 12, மெய் 18, ஆய்தம் 1, இவற்றைப் பற்றிச் சொல்கிறேன்.

நந்தமிழ் எழுத்துக்களை மேனோக்காக நோக்கினும் சுழி, பிறை, கோடு புள்ளி முதலிய சிலபல உருவங்களால் அமைந்திருக்கின்றன என்று மேலோர் யூகித்திருக்கிறார்கள். எனெனில் மேற்சொன்ன உருவங்கள் இந்து மத விஷயத்திலும் சம்பந்த முண்டு.

மேற்சொல்லியபடி

| | |
|---|---|
| 1. ஒரு சுழிகலந்தவை, ஞ், ல், வ், ள். ஈ தவிரமற்ற 11. உயிர்களும் | 8. இருகோடு அ-ஆ-எ-ஞ்-ட்-ண்-ம் வ்-ழ்-ள்-ன் |
| 2. இரு சுழி கலந்தது ன் | 9. முக்கோடு ஈ. த். ங். ப். |
| 3. முச்சுழி ,, ண் | 10. நாற்கோடு ச். ர். |
| 4. ஒரு பிறை ,, ஆ. இ. ல் | 11. ஐங்கோடு ய. |
| 5. இரு பிறை ,, ஐ. ஒ | 12. ஒருபுள்ளி. க் முதலியமெய் 18 |
| 6. முப்பிறை ,, ஓ | 13. இருபுள்ளி. ஈ. |
| 7. ஒருகோடு ,, உ | 14. முப்புள்ளி ஃ. |

ஆனதுபற்றி வற்புறுத்திய முன்னோர் வெண்பா.

கொம்புசுழி கோணாமல் கொண்டை வண்டி சாயாமல்
அம்புபோல் கால்வாங்கி அசையாமல்—தம்பிநீ
எழுதினல் நலமுண்டு இறுமாந்தே எக்களித்தால்
கழுதையினும் நாயிலும் கடை.

என்பது போன்றே பின்னோராகிய நமக்கென்று நம் முன்னோர் கஷ்டப்பட்டு எழுதிவைத் திருக்கும் மந்திரம், சாஸ்திரம், வைத்தியம் இதிகாசமுதலிய பனை ஓலைக்கிரந்தங்களை, இன்னும் நாளையும் பார்த்தால் எழுத்துக்களின் சர்வாவயவங்களும் அவர்கள் திட்டம் செய்திருக்குமாறே பிரகாசிக்கின்றன.

இக்காலத்திலும் எழுத்துக்களின் உருவங்களைச் சரியாய் எழுதக்கற்றவர்கள் எவ்வளவுதொடர்ச்சியா யெழுதினும் வாசிப்பவர்க்கு வருத்தமிராது.

அச்சுப் பிரதிகளா யிருப்பினும் ஆழ்ந்த கருத்துடன் வாசிக்கும் பாகங்களில் ஒருவரி அல்லது பதம் எழுத்து எழுத்துக்களின் குறி முதலிய இல்லாவிடினும் தெரியாவிடினும் எவ்வளவோ சங்கடப்பட நேரிடுகின்றது.

சிறு பிள்ளைகள் முதல் யாவரும் இலக்ஷணமா யிருக்கும் பொருள்களைப் பார்க்கப் பிரியப்படுகிறார்களே யன்றி இலக்ஷணம் கெட்டவைகளைப் பார்க்கப் பிரியப் படுகிறார்களில்லை.

சிலர் எழுதும் தபால் கடிதம் முதலிய வற்றை வாசிக்கும் போதும் கிறுக்கெழுத்து முதலிய வற்றால் விஷயபங்கம் நேருமாயின் கையிலிருப்பதையும் எறிய வருகிறது. நமது முன்னோர் சர்வ சத்விஷயங்களிலும் புகழ்பெற்றவர்களா யிருந்திருக்க, அவர்கள் புகழ்ச்சிகளி லொன்றாகிய கையெழுத்தின் புகழை நாம் ஏன் போக்கவேண்டும். கையெழுத்துக்களின் ரூபலாவண்ணியங்களைச் சரியாய்க் கற்பிக்கச் சகல கல்வியாசிரியர்களும் கடமைப்பட்டிருக்க ஆரம்பக்கல்வி ஆசிரியர்களே முக்கிய குருக்களாக மதிக்கப் படுகிறார்கள். பிரதமத்தில் இவர்கள் கவனியா விட்டால் "முதற் கோணல் முற்றுங்கோணல்" "தொட்டில் பழக்கம் சுடுகாடுமட்டும்" என்னும் பழமையாய் முடிகிறதென்பது யாவருமறிந்த விஷயமே யாதலால், அன்பார்ந்த ஆரம்பக்கல்வி ஆசிரியர்களே நேர்க்கோட் டெழுத்துக்களை வளைகோட் டெழுத்துக்க ளாகவும், வளைகோட்டெழுத்துக்களைக் கோணற் கோட் டெழுத்துக்களாகவும் மூலாதார சுழியுள்ளவைகளைச் சுழியின்றியும் எழுதும் மாணவர்கள் மனம்போனபடியும் கைபோனபடியும் விடாமல் எழுத்துக்களின் சொரூபலக்ஷணங்கள் குறைவின்றிப் பூரணசொரூபமாயும் "என் எழுத்து எனக்குத்தான் தெரியும்" என்றபடி கிறுக்கில்லாமல் எழுத்துக்கள் நெருங்கியும் சொற்கள் நெருங்காமலும் எழுதக் கற்பிப்பீர்களாயின் "போனதுபோக" இனியாகிலும் நம் பாரதநாட்டின் கையெழுத்துச் சிறப்பு முன்னுக்கு வரலாமென்று எண்ணுகிறேன்.

"சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
எழுத்தும் சித்திரம் எனப்பெயர் பெறுமே"

நார்த்தம்பட்டி — இலக்ஷ்மண வாத்தியார்,
தலைமை உபாத்தியாயர், குமரசாமிபட்டி பாடசாலை,
P. O. தருமபுரி, சேலம் ஜில்லா.

---

## அப்பர் சுவாமிகள்.

(ஸ்ரீமான் K. S. ஸ்ரீநிவாசபிள்ளை எழுதியது)

இவர்க்குத் திருநாவுக்கரசு, வாகீசர் என்னும் மறுபெயர்களு முண்டு. கி. பி. ஆறாம் நூற்றாண்டின் பிற்பாதியில் நடுநாட்டின் ஒரு பகுதியாகிய திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் அவதரித்தனர். மருள் நீக்கியார் என்பது அவரது பிள்ளைத் திருநாமம். உலக நிலையாமையை உணர்ந்த இவர் அறத்துறந்து ஆருகதமே உண்மை நெறி எனக்கருதி அம்மதத்தைத் தழுவி ஒழுகலாயினர். சமண்பள்ளியி லிருக்கும் பாடலி புத்திர மென்னும்

நகரத்தைச்சார்ந்து சமணநூல்களை நன்கு கற்றும், சமணர் பலருக்குக் கற்பித்தும் அவர்களால் மதிக்கப்பெற்று அவர்கள் அளித்த தருமசேனர் என்னும் சிறப்புப் பெயரோடும் வதிந்தனர். பிறகு சூலைநோய் இவரையடைந்து வருத்தியதும், இவர் ஆருகதத்தை விட்டுச் சைவத்தைக் கடைப்பிடித்ததும் யாவருமறிந்தனவே. இவர் சைவமதத்தைத் தழுவிய பின்னர் வதிந்தது திருவதிகை என்னுந் தலத்தில். அக்காலத்தில் திருவதிகை, பாடலிபுத்திரம் முதலிய இடங்கள் காஞ்சியை ராஜதானியாகக் கொண்டிருந்த பல்லவ அரசன் ஆட்சியில் இருந்தன. அவ்வரசன் பெயர் மகேந்திரவர்மன். அவன் ஜைன மதத்தைச் சார்ந்தவன். சமண அடிகள் வேண்டுகோளுக் கிணங்கி அப்பரை நீற்றறையி லிருத்தியவனும், அவர்தலையைக் காலால் இடற யானையை ஏவியவனும், கல்லில் கட்டிக் கடலில் போட்டவனும் இம்மகேந்திரனே. பிறகு தான்செய்தன அனைத்தும் பெருந்தவறென அறிந்து இரங்கித் திருவதிகை சென்று அப்பர் சுவாமிகள் சரணங்களைப் புணையாகக்கொண்டு அவர் திருவருளால் சைவனாயினன். பிந்தி பாடலிபுத்திரத்தி லிருந்த ஜைனப் பள்ளிகளை இடித்துத் திருவதிகையில் சிவபெருமானுக்குத் தன் பெயரால் குணபரேச்சுரம் என்னும் ஆலயமமைத்தான். குணபரன் என்பது மகேந்திரனது சிறப்புப் பெயர்களில் ஒன்று. இப்பொழுது வழங்கும் பெரிய புராணப் பிரதிகளில் அவ்வாலயம் குணதரேச்சுரம் என்று காணப்படுகிறது. மகேந்திரன் கி. பி. 600 முதல்கொண்டு 625—30 வரை ஆட்சி புரிந்தவன். இவனாட்சி முற்பாதியில் இவன் சைவனாயிருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. சைவனான பிறகே திருவதிகை, வல்லம், தளவனூர், சீயமங்கலம், பல்லாவரம், திரிசிராப்பள்ளி முதலிய இடங்களில் சிவன் கோயிலும், மகேந்திரவர மென்னும் இடத்தில் விஷ்ணுகோயிலும் இவனால் அமைக்கப்பட்டன. திரிசிராப்பள்ளியில் இவன்காலத்து ஏற்பட்ட கல்வெட்டில் அடியில் கண்ட வரிகள் காணப் படுகின்றன:—அவற்றின் பொருள் "இலிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் பெயரோடு கூடிய அரசன் இந்த இலிங்கத்தினால்(பெற்ற) விபட்சவிருத்தியிலிருந்து திரும்பிய ஞானம் உலகத்தில் நீண்டகாலம் நிலைநிற்பதாக" என்பது. விபட்சவிருத்தி என்பது ஜைனமதம்.

இதில் அவ்வரசன் அந்நியமதத்தைப் பற்றியிருந்ததை விட்டுச் சைவனானது சொல்லப்பட் டிருக்கிறது. மேற்கண்ட கோயில்களைக் கட்டுவதற்குப் பல ஆண்டுகள் சென்றிருக்க வேண்டு மாதலால், இவன் ஆட்சி முற்பாதியில் இவன் சைவனாகி யிருக்கலாமென்று சொன்னேன். அஃதாவது கி. பி. 613, 614-ஆம் ஆண்டுகளுக்கு முன்னிருக்கலாம். அப்பர் சுவாமிகள் ஜைன மதத்தைவிட்டுச் சைவமதத்தைப்பற்றியது கி. பி. 610-ம் ஆண்டையொட்டி யிருக்கலாம். பிறகு சுவாமிகள் திருவதிகையில் சிவபெருமானுக்குத் தொண்டு செய்துகொண்டு பல ஆண்டுகள் இருந்து விட்டனர். மகேந்

திரவர்மனுக்குப் பிறகு அவன் மகன் நரசிம்மவர்மன் பல்லவர் ஆட்சியை அடைந்தனன். அவன் ஆட்சி கி-பி 630-ஆம் ஆண்டுக்குப் பின்னருமிருந்த தென்பர் புரோபசர் துப்ரில். கி. பி. 640-ஆம் ஆண்டில் யுவான் சுவாங் எனப் பெயரிய சீனதேச யாத்திரிகர் நரசிம்மவர்மன் தலைநகராகிய காஞ்சிக்கு வந்து அங்குச் சிலகாலம் தங்கியிருந்தனர். அவர் பௌத்தர். அக்காலத்தில் காஞ்சி நகரத்தில் புத்தப் பள்ளிகள் நூற்றுக்குமேல் இருந்தனவென்றும், பௌத்த சந்நியாசிகள் பதினாயிரம்பேர் இருந்தனரென்றும், ஜைன ஆலயங்கள் பல இருந்தனவென்றும் அவர் தாமெழுதிய புத்தகத்தில் சொல்லி யிருக்கின்றனர். இவர் காஞ்சிவருதற்கு முன் கன்னேஜ் நகரத்தரசன் ஹர்ஷ வர்த்தனிடத்தில் சிலகாலம் தங்கியிருந்தனர். ஹர்ஷ சரித்திரம் முதலிய எழுதிய பட்டபாணர் என்னும் பிரசித்திபெற்ற வடமொழிப் புலவர் அக்காலத்தில் இருந்தவர். இந்தக் காலமெல்லாம் அப்பர் சுவாமியும் திருவதிகையில் வசித்தகாலம்.

சைவநெறியைத் தழுவிய காலத்து அப்பர் சுவாமிகளுக்கு வயது என்ன என்பதை விசாரிப்போம். சிலரைப்போல் மனைவி, மக்கள் அல்லது மாதா பிதா முதலியவர்களிடத்து உதித்த மனவருத்தத்தினாலாவது, வறுமை, பெண்ணாசைபோன்ற பிற ஹேதுக்களினாலாவது பிற மதத்தையும், சந்நியாசத்தையும் அப்பர் சுவாமிகள் ஏற்றவரன்று. உலகவாழ்வும், ஐம்பொறியின் வாயிலாய் வரும் இன்பமும் நிலையாவென உணர்ந்து உண்மை நெறியையாராய்ந்து கடைப்பிடிக்க வேண்டினவர். அவர் ஜைன நெறியைப் பற்றுவதற்கு முன்செய்த காரியங்கள் இன்னவென்பதைப் பின்கண்ட செய்யுட்கள் காட்டும். அவை:—

“ மாசின்மனத் துயரொழிய மருணீக்கி யார்நிரம்பித்
தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்க்
காசினிமேற் புகழ்விளக்க நிதியளித்துக் கருணையினால்
ஆசிலறச் சாலைகளுந் தண்ணீர்ப்பந் தருமமைப்பார். ”

“ காவளர்த்துங் குளந்தொட்டுங் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியுநா னிலத்துள்ளோர்
யாவருக்குந் தவிராத வீகைவினைத் துறைநின்றார். ”

“ நில்லாத வுலகியல்பு கண்டுநிலை யாவாழ்க்கை
அல்லேனென் றறத்துறந்து சமயங்க ளானவற்றி
னல்லாறு தெரிந்துணர்ந்து நம்பரரு ளாமையினால்
கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங் குறுகுவார். ”

(திருநா—புராணம்) என்பன. இப்பாட்டுக்களிற் கண்டவைற்றைச் செய்யக்காலமும் ஆற்றலும் வேண்டும். எல்லாவற்றையும் யோசிக்க இவர் ஜைனராயின காலத்து இவருக்கு 25 வயதிருந் திருக்கலா மென்று கொள்

வது தவருகா தென்னலாம். இவர் ஜைனரான பின்னர்ச் செய்தன இன்ன வென்பதைப் பின்வரும் செய்யுட்கள் காட்டும். அவை,

" அங்கவரு மமண்சமயத் தருங்கலைநூ லானவெலாம்
பொங்குமுணர் வுறப்பயின்றே யந்நெறியிற் புலன் சிறப்பத்
துங்கமுழு வுடற்சமணர் சூழ்ந்துமகிழ் வாரவர்க்குத்
தங்களின்மே லாந்தரும சேனரெனும் பெயர் கொடுத்தார். "

" அத்துறையின் மீக்கூறு மமைதியினு லகவிடத்திற்
சித்தநெறி யறியாத தேரரையும் வாதின்கண்
உய்த்தவுணர் வினில்வென்றே யுலகின்க ணொளியுடைய
வித்தகரா யமண்சமயத் தலைமையினின் மேம்பட்டார். "

(திருநா—புராணம்.) என்பன.

சமயநூல்களை எல்லாம் நன்காராய்ந்தனர். பிற சமயிகளோடு வாது புரிந்து ஜைனத்தை ஊன்றச் செய்தனர். ஜைனமதத்திற்கே பேரிலக்காய் விளங்கினர். இவர் சைவநெறியைத் தழுவியகாலத்து ஜைனர் தங்கள் சமயம் அத்தோடு ஒழிந்துபோய் விடுமோ என்று பயந்தனர். பின்கண்ட செய்யுட்பகுதிகள் இதை விளக்கும். அவை,

" மருவு நம்பெருஞ் சமயம்வீழ்ந் ததுவென மருள்வார். "

" மலையும் பல்சமயங்களும் வென்றுமற் றவரால்
நிலையும் பெற்றவிந் நெறியினி யழிந்ததென் றழுங்கி. "

" இவ்வ கைப்பல வமணர்கள் துயருட னீண்டி
மெய்வ கைத்திற மறிந்திடில் வேந்தனும் வெகுண்டு
சைவனுகிநம் விருத்தியுந் தவிர்க்குமற் றினிநாஞ்செய்வதென். "

(திருநா—புராணம்.) என்பன.

சைவர்களோ அப்பர் சைவரானதால் தங்கள்மதம் பெரிய வெற்றியை அடைந்ததாகக் கருதி உத்ஸவம் கொண்டாடினர். அது,

" பாசுங்கரு ணைப்பெரி யோனருளப்
பறிபுன்றலை யோர்நெறி பாழ்படவந்
தரசிங்கருள் பெற்றுல குய்ந்ததெனு
மொடியார்புடை சூழதி கைப்பதிதான்
முரசம்பட கந்துடி தண்ணுமையாழ்
முழவங்கிளை தூர்துபி கண்டையுடன்
நிரைசங்கொலி யெங்கு முழங்குதலா
னிடுங்கட லென்னநி றைந்துளதே. "

(திருநா—புராணம்.) என்ற செய்யுளால் விளங்கும். மேற் கண்டவற்றை யெல்லாம் பரியாலோசித்துப் பார்த்தால் அப்பர் ஜைன மதத்தில் இந்நிலைமையை அடைய 15 ஆண்டுகளாவது சென்றிருத்தல் வேண்டும். இவர் சைவத்தை மீட்டும் தழுவியகாலத்து இவருக்கு வயது நாற்பதை ஒட்டி இருந்ததென்று கொள்ளலாம்.

அப்பர் சுவாமிகள் திருவதிகையி லிருந்து தலயாத்திரை செய்யப் புறப்பட்டுத் திருவெண்ணெய் நல்லூர், திருக்கோவலூர், பெண்ணாடகம் முதலிய தலங்களில் சிவபிரானை வணங்கிச் சிதம்பரம் வந்தனர். அங்குச் சில நாள் தங்கியிருக்கும் காலத்து ஞான சம்பந்த மூர்த்திகளுக்குத் திரு முலைப்பால் ஊட்டிய விருத்தாந்தத்தை அடியார்கள் சொல்லக்கேட்டு அவரை வணங்குதற்குச் சீகாழி வந்தனர். அடிகள் காழிக்கு வந்தகாலத்துத் திருஞான சம்பந்தமூர்த்திகள் திருமுலைப் பாலூட்டப்பெற்று நான்கு ஆண்டுகள் ஆயின. அக்காலத்து அப்பர் சுவாமிகள் தேகத்தில் வயது முதிர்ச்சியால் நடுக்கமிருந்த தென்று சொன்னேன். சிலர் " திருமேனி தனிலசைவும் " என்றது ' ஆனந்தப் பரவசத்தாலாய தளர் நடையை யுணர்த்தும் ' என்பர்; அவர் கூற்றுப் பொருத்த முடையதென்று தோன்றவில்லை. அப்பர் சுவாமிகளுக்கு எழுப தாண்டுகளுக்குமேல் இருக்கவேண்டும். இதனால் சுவாமிகள் திருவதிகையில் சற்றேறக்குறைய முப்பதாண்டுகள் வதிந்தனரென்று கொள்ளலாம். சீகாழியில் திருஞானசம்பந்த அடிகளோடு சில நாள் உடனுறைந்து பின்னர்த் தலயாத்திரை செய்யப் புறப்பட்டனர். மறுபடியும் திருப்புகலூரில் ஞானசம்பந்த மூர்த்திகளைச் சந்தித்தனர். சந்தித்தது, சம்பந்தமூர்த்தி அடிகள் திருச்சங்காட்டங் குடியில் சிறுத்தொண்ட அடிகளைச் சந்தித்ததற்குப் பின்னர். சீகாழியில் உடனுறைந்ததற்கும் திருப்புகலூரில் சந்தித்ததற்கும் இடையில் நான் காண்டுகள் சென்றிருக்கலாம். திருப்புகலூரில் சிறுத்தொண்டர், நீலநக்கர் முதலிய அடிகளும்வர, யாவரும் முருகனார் மடத்தில், அவர் குறைவறுக்க உடனுறைந்தனர்.

(சுதந்திரன்.)

---

## காந்தியடிகள் திருத்தசாங்கம்.

### 1. பேர்

ஏரா ரிளங்கிளியே எஃதேச பக்தர்கோன்
சீரார் திருநாமஞ் செப்பாயால்—ஊரார்
அருமையாய்க் கொண்டாடு மன்பர்மோ கன்தாஸ்
கரிம்சந்தாங் காந்தியென்பேன் காண்.

### 2. நாடு

பூக்கள் நிறைந்தபொழில் புக்குறையும் பொற்கிள்ளாய்
மாக்கே ழுடையான் வளநாடென்—ஆக்கமுளான்
அந்தமிலா வானந்தன் அன்பினா லாள்வதுவும்
இந்தியநன் னாடே யினி.

### 3. ஊர்

தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமக்காக
வாதாடும் வாயுடையான் வாழ்பதியென்—மாதார்

சகத்திலம ராபுரிக்குச் சாலங்க ராகும்
அகமதா பாத்தரென் ற்றி.

## 4. ஆறு

செந்துவர்வாய்ப் பைஞ்சிறகிற் செந்தேன் மொழிக்கிள்ளாய்
அந்தமிலா அன்புடையான் ஆறுரையாய்—பைந்தொடி
ஆன்முதகி லேறும் அரன்சடையி னின்றிழிந்த
வான்வந்த கங்கையென வாழ்த்து.

## 5. மலே

அறமுரைக்கும் வாயென் னருமைமொழிக் கிள்ளாய்
துறவோன் திருமலைநீ சொல்லாய்—மறந்திரும்
ஆண்டகையான் காந்தி யலர்மதிபோ லோங்கியே
சேண்டீண் டிமயமெனத் தேர்.

## 6. ஊர்தி

மதுர மொழிக்கிள்ளாய் மாற்றுரும் போற்றுஞ்
சதுரனவ னூர்புரவி சாற்றுங்—கதிரவனே
தானூர் புரவிகளும் தாமொவ்வாச் சீருடைத்தாங்
கோனூ ரறப்புரவி கூறு.

## 7. படை

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதிலாத் தேசபக்தன்
போற்றுரை வெல்லும் படைபுகலாய்—எற்றூர்கள்
எங்குற்றூர் எத்தனைபேர் எத்தகைய ராயிடினும்
அங்கவரை வெல்லுவதாம் அன்பு.

## 8. முரசு

இன்ப மொழிக்கிளியே எம்பெருமான் எந்தந்தை
தன்பெருமை சாற்றுந் தனிமுரசே—தன்புடையாய்
திண்டோள் மறமன்னர் சீற்றங் கடந்தொலிசெய்
உண்மைப் பறையென் றுரை.

## 9. தார்

பழந்தேர் பசுங்கிளியே பாஞ்சாலர் மானம்
இழந்தாற் பரிந்திடுவோன் இன்றூர்—உழவார்க்கும்
மாநிலத்தா ரியாரு மனமகிழ்ந்து சூட்டுகின்ற
வான்கிரா மன்னுபுகழ்த் தார்.

## 10. கொடி

நல்ல பசுங்கிளியே நந்தவத்தால் வந்தோன்நம்
அல்ல லகற்றும் அருங்கொடிசொல்—இல்லாமை
இன்னே யகற்றி இசல்கடியு நூற்சக்ர
மன்னுங் கொடியா மதி.

ச. கந்தசாமிமுதலியார்,
திருவள்ளூர்.

---

## இல்லறம்—கன்மம்.

(99-ம் பக்கத்தொடர்ச்சி)

ஆயினும் இடத்தால் கன்மம் வேறுபடும். தேசங்கடோறும் சீதோஷ்ண நிலைமை வேறுபடுதலாலென்க. ஆதலால் அவ்வத் தேச சீதோஷ்ண நிலைமையின் வேறுபாட்டை யுணர்ந்தே அவ்வவ் விடங்கட்குரிய கர்மங்களையும் வேறுபடுத்தி அவர்களே யெழுதிவைத்தனர். காலத்தாலுந் தேசத்தாலும் சாதிக்கக்கூடிய அளவுக்கேற்ற வேறுபாடுகளே யிவற்றில் காணப்படும். இதனாலேயே யாக்ஞவல்கிய முனிவர் தேசத்தாலும், காலத்தாலும், உபாயத்தாலும் என்று கர்மங்களை வேறுபடுத்தி யுரைத்தனர். ஆயினும் தேசமும் காலமும் ஒன்றை யொன்றுபற்றியே நிற்கும். இவ்வாறு கால தேசங்களால் வேறுபடினும் கன்மம் அநித்திய மென்பதில்லை. அது நித்திய மான பலனை யளிக்கும்.

இனி இக்கர்மங்களை யிந்தப் பரதகண்டத்தினுள் செய்யவேண்டு மென்பது யாதுபற்றி? என்பதோர் கேள்வி. இதன் கருத்து யாதெனில், கர்மம் கடவுளால் விதிக்கப்பட்டதானால் அவர் அந்தக் கன்மத்தை ஒரே தேசத்துக்காகவா விதிப்பார். ஏனென்றால் இக்கன்மம் இத்தேசத்திலேயே யனுஷ்டிக்கப் படுகின்றது. இப்பரத கண்டத்தில் உத்தேசம் முப்பது கோடி ஜனங்களிருக்கிறார்கள். அவர்களுள் இக்கன்மத்தை யனுஷ்டிப்பவர் 17 கோடிபே ரிருக்கலாம். இந்தச் சனங்களுக்கே கடவுள் இக்கன்மத்தை விதித்தாரெனில் இவர்களை மட்டுந்தானா கடவுள் படைத்தார்? அது பொருந்தாமையால் இக்கன்மம் நித்தியமெனல் கூடாது. ஆகையால் வடதிசையிலிருந்து இங்கேவந்து குடிபுகுந்த ஆரியர் என்னும் ஒரு வகுப்பினர் தம்மினத்தவர்க் கென்று ஏற்பாடு செய்துகொண்ட ஒரு கட்டுப்பாடென்பதே யுசிதம். அநாதி கன்மபந்தத்தினால் மறுபிறப் புண்டென்றும், அக் கன்மம் பரதகண்டத்தவர்க்கே யுரியதென்றும் நீ கூறுதலால் ஏனையோர் கன்மபந்த மில்லாதவர்க ளென்றே கருதவேண்டும். அவர்கள் மரித்தால் மோட்சத்தை யடைவார்கள். பரதகண்டத்தவர்கள் பந்தமுடையவர்களாதலால் அவர்கள் பிறந்து பிறந்து மரிப்பார்கள். ஆதலால் ஆரியரைவிட மிலேச்சர் என்று நீங்கள் இகழ்ந்து கூறும் அந்நிய தேசத்தார் பாசமற்ற புண்ணியாத்மாக்களாவா ரென்பதாம்.

இவ்வாறு கேட்பது தகாது. ஆதியில் இமாசல பர்வதத்திலேயே சிருஷ்டிதொடங்கியது. அப்பொழுது சொற்பஜனங்களே யிருந்தார்கள். அவர்கள் மோட்சத்தையடைய விரும்பியே கடவுள் அவர்களுக்கு மனு முதலியோர் மூலமாக சன்மார்க்க நெறிகளை அருளினார். ஜனத்தொகை பெருகினபோது சிஷ்டாசார சிலர்கள் தென்திசை நோக்கிவந்து பிரம வர்த்தம், ஆரியவர்த்தம் என்ற இடங்களிற் குடியேறினார்கள். இவ்விடங்களிற்

கர்மானுஷ்டானத்துக் குரிய சௌகரியங்க ளெல்லாம் நிறைந்திருந் தமை யால் இங்கே குடியேறினவர்கள் கர்மங்களை விடாமலும் தவறாமலும் முறைப்படி யனுஷ்டித்து வந்தார்கள். அவர்களுடைய சந்ததியாரே யிப் பொழுது கர்மானுஷ்டானத்தை விரும்பிச் செய்துகொண்டு இப்பாரதகண் டத்தில் வசிக்கிறார்கள். வேறு சிலர் கூட்டங் கூட்டமாகப் பிரிந்து வெவ் வேறிடங்களிற் சென்று குடியேறினார்கள். அவர்கள் தாங்கள் குடியேறிய இடங்களுக்குத் தக்கபடி நடையுடை பாவனைகளை யுடையவர்களாய் இப் பாரதகண்ட வாசிகளோடு வேறு பட்டனர். அதனால் தாங்கள் ஆரியர்க ளோடு கலந்து வாழ்ந்த காலத்தில் அனுஷ்டித்த கன்மங்களில் தவறி, அக் கன்மச் சாயலான வேறுகன்மங்களை யனுஷ்டிக்கலானார்கள். ஆரியரோ தம் முன்னோர் நடந்தவழியைப் பின்பற்றித் தவறாமல் நடந்து வருகிறார்கள். வேறிடங்களிற் குடியேறினவர்களுக்குப் பாஷையும் வேறுபடவே யாரிய பாஷையின் பயிற்சி யில்லாமற் போயிற்று. ஆதலால் ஆரியபாஷையி லெழுதப்பட் டிருக்கிற ஸ்மிருதியாதி நூல்களைப் படித்து அவ்வழிபற்றி நடக்க அவகாசமில்லாமற் போயிற்று. ஆயினும் அவர்களுக்குக் கர்மானு ஷ்டான புத்தி ஒழியாமையால் தங்கள் புத்திக்குத் தோன்றியவாறு சில கர்மாசாரங்களை ஏற்படுத்திக் கொண்டார்கள். இதனால் ஆதியில் கர்மானு ஷ்டானம் எல்லாருக்குமே கடவுளால் ஏற்படுத்தப்பட்டது என்பது புலப் படுதலால் இப்பாரத கண்டத்தவர்க்கு மாத்திரமே கடவுளால் விதிக்கப்பட்ட தல்ல வென்று கொள்க. எல்லாருமே கன்மபந்த முடையவர்க ளாவார் களே யன்றிப் பாரதகண்டத்தவர் மாத்திரமல்ல. பாரதகண்டத்தார்க்கு ஆரிய பாஷை சிதையாமல் நடைபெற்று வருதலால் ஆதியிற் கூறிய கர்மங்களை யனுஷ்டிக் கின்றார்கள் என்றும், மற்றவர்களுக்குப் பாஷை வேறுபாட்டி னால் கர்மசொரூபம் சிதைந்து போயிற்றென்றும், அவர்கள் தமது புத்திக் குத் தோன்றியவாறு சில கன்மங்களை யேற்படுத்திக் கொண்டு அனுஷ்டிக் கிறார்களென்றும் கூறுவதே யுசிதமாவ தன்றிக் கடவுள் பட்சபாதக முடை யவராவா ரென்பது நியாயமாகாது.

ஆயின் ஆதியில் மனிதர்கள் இவ்விடத்திலேயே வசித்தா ரென்பது எவ்வாறெனில், இக்காலத்தில் வழங்கும் பூமி சாஸ்திரங்களா லுணரலாம். எவ்வாறெனில் உலகத்திலுள்ள ஜனங்களின் பற்பல ஆசாரங்களும் அநேக சொற்களும் ஒத்திருத்தலால் இவர்கள் எல்லாரும் ஒரு காலத்தில் ஒரே கூட்டத்தாரா யிருந்திருக்க வேண்டு மென்று தோன்றும். அவ்வாறாயினும் அவர்கள் எல்லாரும் ஆதியில் இந்தப் பாரதகண்டத்திலேயே ஒருங்கு கூடி வசித்தார்கள் என்பது எவ்வாறெனில், அது சோதனையால் விளங்குகின் றது. பூமியைச் சோதித்துப் பார்த்தால் நெடுங்காலத்துக்கு முன்னமே ஜனங்கள் இவ்விடத்தில் குடியிருந்த அடையாளங்கள் காணப்படுகின்றன. ஆரியர் பிரமாண நூல்களும் அவ்வாறே கூறுகின்றன. மகமதியர் கிறிஸ்து

வர்களும் ஆதியில் ஆசியா கண்டத்திலேயே மனித சிருஷ்டியுண்டாயிற்று என்று நிச்சயமாய்க் கூறுகிறார்கள். ஆரியர்கள் ஆசியா கண்டத்திலுள்ள இமாலய பர்வதத்தையே யாதி சிருஷ்டி ஸ்தானமாய்க் கூறுகின்றார்கள். எல்லாரும் சிறிது வேறுபட்டாலும் இவ்வாசிய கண்டமே மனித சிருஷ்டி யுண்டான விடமென்று கூறுகின்றார்கள். எல்லாத் தேசங்களுக்கும் முன்னாலேயே பரதகண்டம் நாகரீகத்திலும் கல்வி கேள்விகளிலும் சிறந்திருந்ததென்று தேசசரித்திரங்களும் கூறுகின்றன. ஆங்கிலேய பண்டிதர்களால் எழுதப்பட்ட இந்துதேச சரித்திரங்களும் இதனை ஒப்புக்கொண்டே பேசுகின்றன. அந்த நாகரீகம் தோன்றிய விடம் பரதகண்டமே யென்பது சரித்திரங்களால் தெற்றெனப் புலப்படுதலால் ஆதியில் ஜனங்கள் இவ்வாரிய தேசத்திலிருந்தே வெளியேறினார்கள் என்பதும் பொருந்தும். வைத்தியம், ஜோதிடம், சிற்பம் முதலிய எல்லாச் சாஸ்திரங்களும் இந்தியாவிலேயே சீர்பெற்றிருந்தன வென்று அந்நிய தேசஸ்தர்களாலும் ஆங்கிலேய சோதகர்களாலும் விளக்கப்பட் டிருக்கின்றது. இதனால் வெகுகாலத்துக்கு முன்னால் இப்பரதகண்டத்திலேயே எல்லாரும் ஒருங்கேகூடி வசித்தார்களென்று தடையின்றி ஒப்புக்கொள்ளலாம். இங்கிலாந்து தேசசரித்திரத்திலும் ஜாதிவேறுபாடு கூறுமிடத்து ஆசியாவினின்றே ஜனங்கள் அந்நிய தேசங்களிற் சென்று குடியேறினார்கள் என்று கூறப்பட் டிருக்கின்றது. இதனால் ஆதியில் மனிதர்கள் பரதகண்டத்தில் ஒருங்குகூடி வசித்தார்களென்றும், அவர்களுக்கு அப்போது பாஷையும் ஒன்றாகவே யிருந்ததென்றும், அந்தப்பாஷையில் எழுதப்பட்ட கன்மநூல் எல்லாருக்கும் பொதுவானதேயன்றி ஆரியர்களுக்குமாத்திரம் கூறப்பட்ட தல்லவென்றும் புலப்படும். காலதேச பாஷை வேறுபாட்டால் அக்கன்மங்கள் அந்நிய தேசங்களில் சிதைந்தன வென்றும் உணரலாம். ஆரியர்களுக்கு அந்த வேறுபாடு உண்டாகாமையால் ஆதியில் விதிக்கப்பட்ட கன்மநூல் விதிவழுவாமல் அனுஷ்டிக்கப்பட்டு வருகிறதென்று காணலாம். இதனால் உலகத்தில் எல்லா ஜனங்களும் கன்மபந்த முடையவர்களே யென்றும், அது காரணமாக அவர்களும் பிறந்திறக்க வேண்டியவர்களேயா மென்பதும் புலப்படும். இவ்வாறு ஊகித்துணராமல் ஆரியர்கள் மாத்திரமே கன்மபந்தப்பட்டவர்களென்றும் அவர்களே பிறந்து பிறந்து இறப்பார்களாதலால் அவர்களுக்கே கர்மானுஷ்டானம் வேண்டப்படும், மற்றவர்கள் கர்மபந்த மில்லாதவர்களாதலால் அவர்கள் மோட்சமடைவார்க ளென்றுங் கூறியது சீர்பெறுதென்க.

(இன்னும்வரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## ஒழுங்கான கல்வி.

(திருவல்லிக்கேணி அரசினர் பெண்பாடசாலையில்
நாகை நீலாம்பிகை அம்மை செய்த விரிவுரை.)

கல்வி என்னும் சொல்லுக்குப் பொருள் நம் மனத்தின் கண்ணிருக்கின்ற அறியாமையிருளைக் கல்வி நீக்கி விளக்குவது என்பதாம். கல்வியானது நூற்கல்வி தொழிற்கல்வி யென இருவகைப்படும். மேன்மேலும் தம் அறிவை விளங்கச் செய்யவேண்டுமென்னும் எண்ண முறுவார்க்கும், உலகறி இயற்கைப் பொருள்களைப்பற்றி ஆராய்வோர்க்கும் நூற்கல்வி இன்றியமையாத தொன்றாம். நூற் கல்வியால் நாமெய்தும் பயன்கள் அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு. அவைகளைக் குமரகுருபர அடிகள்,

" அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை" என்று

நீதிநெறி விளக்கத்திற் கூறியுள்ளார்.

இவற்றுள், அறத்தைப்பற்றிச் சிறிதாராய்வாம். அறத்தைக் கல்லாதாரும் செய்யக் காண்கின்றோமே யெனின், அவர்கள் நூல்களிற் கூறிய அறப்பயன்களை உணராராதலின், அவர் செய்யும் அறம் பிழைபாடுடைத்தென்று பிறர் கூறின் அதைச் செய்தலை விடினும் விடுவர். ஆனால், கற்றவரோ நூல்களிற் கூறிய அறப்பயன்களை நன்கு உணர்ந்திருப்பராகலின், தாம் செய்யும் அறம் முறையன்றென்று பிறர் கூறினும் அதனைச் செய்தலினின்றுந் தவறார். கல்லாதார் பெரும் பொருளைக்கொண்டு அறஞ் செய்யப் புகினும், நூல்களிற் கூறிய முறைப்படி தக்க வழியில் அதனைச் சிறக்கச் செய்ய ஆற்றலற்றவர்களா யிருக்கின்றனர். கற்றோர் சிறு பொருளைக் கொண்டும் அறத்தைப் பெரிதாகத் தக்க வழியில் சிறக்கச் செய்வார்களாகலின், இதனைக் குறித்தே

" உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங்—கறப்பயனும்
தான்சிறிதே யாயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்" என்று

நாலடியாரில் கூறப்பட்டுளது.

பொருளைப்பற்றிச் சிறிதாராய்வாம். கல்லாதார் எக்காலத்தும் செல்வமுடையரா யிருத்த லரிது. ஏனெனின், கல்லாதார் பொருள் பிறராற் கவரப்படினும் வேறு வழிகளிற் கேடுறினும் அவர் அப்பொருளை மீண்டும் பெறலரிது. கற்றோர் செல்வத்தை யிழப்பின் மீண்டும் கல்வியினுதவியால் அச் செல்வத்தை எளிதாகப் பெறுவர்.

இன்பத்தைப் பற்றிச் சிறிதாராய்வாம். கல்லாதாரிடத்துப் பெரும் பொருளிருப்பினும் அதனைத் தக்க நாகரிக வழியிற் செலவழித்து இன்ப நுகரா அறியாதவர்களா யிருக்கின்றனர். இதனைச் சில நாட்டுப்புறங்களி லுள்ள பெரும் பணக்காரர்களிடத்து இன்றுங் கண்கூடாகக் காணலாம். அவர்கள் கற்றல், உண்ணல், உடுத்தல், கொடுத்தல் முதலியவைகளால் உண்டாகின்ற இன்பங்களை முறையாக அடையக் கல்வியறிவின் விளக்கமின்றித் தம் பொருள்களைப் பொய்யான இன்பங்களிற் செலவு செய்து தம் வாழ் நாளைக் கொன்னே கழிக்கின்றனர். இதனைக் குறித்தே

"உண்ணு னொளிநிறா னோங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும்" என்று

நாலடியார் கூறு நிற்கின்றது.

வீட்டைப்பற்றிச் சிறிதாராய்வோம்.

"ஈதற்குச் செய்க பொருளை யறநெறி
சேர்தற்குச் செய்க பெருநூலை — யாது
மருள்புரிந்து சொல்லுக சொல்லை யிம்மூன்று
மருளுலகஞ் சேராத வாறு" என்னும்

திரிகடுகச் செய்யுட் கிசைய வீட்டைதற் கேதுவாகிய அறம், பொருள் இன்பம் என்னுமிவற்றை இம்மையில் முறையாகச் செய்தால் அதுவே மறுமையில் வீடுபேற்றைத் தருவதாம். மேற்கூறிய இருவகைக் கல்வியுள், நூற்கல்வியானது தன் மொழிக் கல்வி யெனவும் பிறமொழிக் கல்வியெனவும் இருவகைப்படும். தன்மொழிக் கல்வியென்பது தான் கட்டாயமாகக் கற்கவேண்டிய தாய்மொழிக் கல்வியாம். பிறமொழிக் கல்வி யென்பது அயல் நாட்டுக் கல்வி யென்பதாம். நாம் நம் தாய்மொழியை இயன்றவாறு கற்றுத் தேர்ச்சி யடைந்த பின்புதான் பிறமொழிகளைக் கற்கவேண்டும். இன்றேல், எம்மறிவு இரண்டிலும் நிரம்பப் பெறாமல் குறைபாடுடையதா யிருக்கும். தாய்மொழி கல்லா அறிவு வலிவற்றதாகவே யிருக்கும். எங்ஙனமெனின், ஒரு வலுவற்ற தூணின்மேல் வலிய சுமைகளை யேற்றினால் அத்தூண் தாங்காது முறியும்; அதுபோல, நாம் நம் தாய்மொழியில் நம் மறிவை வலுப்படுத்துதற்கு முன்னரே அயல் நாட்டுக் கல்வியைக் கற்போமாயின், அதன்கண்ணும் உயர்ந்த அறிவை யடையப் பெறாது நம் தாய்மொழியிலும் அறிவுவிளங்கப் பெறாது அறியாமையிற் கிடந்து உழல்வோம். நம் தாய்மொழியுள்ளும் பிறமொழியுள்ளும் சொற்களையும் சொற்றொடர்களையும் திருத்தமாகப் பேசவும் எழுதவும் கற்றாலன்றி அவற்றின்கண்ணுள்ள மெய்ப்பொருள் விளங்காது. பிழையின்றி எழுதுதற்கும் படித்தற்கும் கருவியாயிருப்பது இலக்கணக் கல்வியேயாகும். இலக்கணம் என்னும்

சொற்குப் பொருளென்னையெனின், இலக்கியத்திலுள்ள அமைப்புகளைச் செவ்விதின் விளக்கிக் காட்டுவது என்பதாம். ஒரு தச்சன் ஓரழகிய பாவையைச் செய்யவேண்டின் அதனை யமைத்தற்குரிய கருவிகளை முதலிற் செம்மையாகத் தெரிந்து வைத்துக்கொள்வதுபோல, நாமும் இலக்கியநூல்களைப் பிழையறப் படித்தற்கு இலக்கணம் கட்டாயம் வேண்டும். இலக்கணத்தின் முதன்மையைக் குறித்தே,

> "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டும்
> கண்ணென்ப வாழு முயிர்க்கு" என்று

திருவள்ளுவ நாயனார் கூறியிருக்கின்றார்.

இத்திருப்பாட்டிலுள்ள எண் என்னுஞ் சொல்லுக்குச் சிலர் கணக்கு என்று பொருள் கூறுகின்றார்கள். ஆனால், "எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல் என நான்களவையும் உம்மிலதத் தொகை" என்னும் நன்னூற்சூத்திரப்படி எண் என்பது எண்ணலளவை, எடுத்தலளவை, முகத்தலளவை, நீட்டலளவை என நால்வகைப்படும். ஈண்டு எண்ணலளவையென்பது கருத்தா லளக்கப்படும் அளவை நூலாகும். வடமொழியிலிதனைத் தருக்க நூலென்பர். மற்ற எடுத்தல் முகத்தல் நீட்டல் என்பனவோ புறப்பொருளாராய்ச்சியாகும். மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளாலும் உணரப்படும் பொருள்களையும் அப்பொருள்களின் தன்மைகளையும் அறிவதே புறப்பொருளாராய்ச்சி. அவ்வைம்புலன்களாலும் ஆராய்தவற்றையும் புறப்பொருளுக்கு மேம்பட்ட கடவுள் நிலையையும், துறக்க நிலையையும், மெய்யறிவையும், உயிரின் நிலையையும் ஆராய்வது அகப்பொருளாராய்ச்சி. ஒன்று இரண்டு மூன்றென எண்ணியறிதலே எண்ணலளவை. பலம், வீசை, மணங்கு என நிறுத்தறிதலே எடுத்தலளவை. விரல், அடி, முழம் என நீட்டியறிதலே நீட்டலளவை. ஆழாக்கு, உழக்கு, படி என முகந்தறிதலே முகத்தலளவை. இந்நான்களவைகளும் நாம் மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் புறக்கருவிகளைக் கொண்டு வெளியேயுள்ள பொருள்களை ஆராய்தலால் கணக்கு நூலாராய்ச்சியைப் புறப் பொருளாராய்ச்சி யென்று வழங்குவர். இப்புறப்பொருளாராய்ச்சியாலளக்க முடியாத கடவுள் நிலை துறக்கநிலை முதலியவற்றை நுட்பமாக ஆராயும் ஆராய்ச்சியே அகப்பொருளாராய்ச்சி யென்று வழங்கப்படும். கண்டதைக்கொண்டு காணாததை யறிவதே தர்க்கமாகும். எதுபோலெனின், நாம் அடுக்களையில் தீயையும் புகையையும் பலகாலுங் கண்டு அப்புகை தீயினின்றும் வருகின்றதென்பதை உணர்ந்தபின் நாம் ஒரு மலைப் பக்கத்தே செல்லும்போது அம்மலைமேலிருந்து புகையெழ, முன் தீயினின்றும் புகைவருதலைக் கண்டிருக்கின்றோமாகலின், அப்புகை வருதற்கு அவ்விடத்துத் தீயிருக்கின்றதென்று உணர்கின்றோம்.

(தொடரும்)

து. தீனதயாளு. B. A.

## பகவத்கீதை வசனம்.

(107-ம் பக்கத் தொடர்ச்சி)

ஏ! அர்ச்சுன! எவனொருவன் நான் என்ற அகங்காரமற்றவனாய், தேகம் முதலாக உலகிலுள்ள எல்லாப் பொருள்களிடத்தும் எனது என்ற அபிமானமற்றவனாய், யாவற்றையும் பரித்தியாகம் செய்து, சச்சிதானந்த சொரூபமாகிய நாமே இரண்டற்று விளங்குகின்றோம் என்ற திடப்பிரக்ஞையாகிய உண்முக நாட்டமுடையவனாய், எஞ்சிய பிராரப்தபோகத்தைக் கனவுபோல் புசித்துக்கொண்டு, காலதேசவஸ்து பரிச்சேத மற்றவனாய்ச் சஞ்சரிக்கின்றானோ, அவனே சர்வதுக்க நிவர்த்திரூபமான மோக்ஷமாகிய சாந்தி யடையாநிற்கும். இந்த நிலைமையை யடைந்தோர் சம்சார மோகத்தோடு கூடிய இழிவான நிலையையடையார். இறக்கும் தருவாயிலேனும் இத்தகைய நிலைமையை யடைவோர் என்னை யடைவார்கள். பிறவி யெய்தார்.

[தேகாதிப் பிரபஞ்சங்களில் நான் எனது என்கிற பற்றொழிந்து ஆன்ம சாக்ஷாத்காரமாகிய சமாதி நிலையடைந்த பிரம்மநிஷ்டன் பிராரப்த போகத்தை யனுபவிக்கும்போதும் அவற்றின் உயர்வு தாழ்வு சுகாசுகம் முதலியவொன்றையும் கவனியாது, காட்டுத்தீ சந்தன விருக்ஷமென்றும் எட்டி விருக்ஷமென்றும் கவனியாது எட்டிய எவற்றையும் தகிப்பதுபோல், கிடைத்த போகத்தைப் புசித்துக் கவலையற்று, இரண்டற்ற அகண்டாகார நிலை பொருந்திய உண்முக நாட்டத்திலே சஞ்சரிப்பான். அத்தகைய நிலையிலிருப்பவன் தேகாந்தத்தில் பிறப்பிறப்பற்ற முத்தியடைவான்.

இந்த இரண்டாவது அத்தியாயத்தில் ஆன்ம ஞானமும் அதற்குச் சாதனமாகிய நிஷ்காமகர்மம், சித்த சுத்தி, ஞான நிஷ்டை முதலியவைகளும் கூறப்பட்டன.]

## 3-வது கர்மயோக அத்தியாயம்.

அலைகளையுடைய திருப்பாற்கடலின்கண் அறிதுயில் அமர்ந்தோனும், அரிய வேதங்களின் சிரோரத்தினமாய்ப் பிரகாசிப்பவனுமாகிய பகவான் குருக்ஷேத்திரத்தில் பார்த்தனுடைய இரதத்தில் எழுந்தருளியிருந்து வேதங்களிலுள்ள அரிய பொருள்களைத் திரட்டியறிவித்தும், காண்டீபனாகிய விஜயன் உண்மைப் பொருளை யுணராதவனாய்ப் பகவானை நோக்கிப் பின்வருமாறு கூறலுற்றான்.

"ஏ! ஜனார்த்தன! * முதலில் நிட்காமகருமத்தைக் காட்டிலும் ஞானமே சிரேஷ்டமானது என்று அருளிச்செய்தீர். பிறகு ஆன்மதத்துவ ஞானத்தினும் கர்மமே சிறந்தது என்று அருளினீர். இந்த இரண்டில் எது மேலானது என வெண்ணி நான் கைக்கொள்வேன்? தங்களையே சரணடைந்துள்ள அடியேன் சோகத்தை யொழிக்க ஒரே மார்க்கத்தை நிச்சயித்தருளல்வேண்டும்."

---

* தாந்தாம் இச்சித்த பொருள்களை யடையும்பொருட்டு எல்லா ஜனங்களும் யாரைப் பிரார்த்திக்கிறார்களோ அவரே ஜனார்த்தனர். அல்லது ஜன்மத்தையும் அதன் காரணமாகிய அஞ்ஞானத்தையும் ஒழிப்பவர் ஜனார்த்தனர்.

[ஞானநிஷ்டை, கருமநிஷ்டை என்ற இரண்டில் ஞான நிஷ்டையே சிறந்ததெனக்கூறினீர். அதுவே வேதங்களின் கருத்தாயின், அடியேனை இக் கோர கருமமாகிய யுத்தத்தைச் செய்யும்படி என் ஏவுகிறீர்? மறுபடி நிஷ்காமகருமமே சிறந்தது என்று அருளினீர். இவ்வாறு இரண்டையும் கலந்து கூறினால் அடியேன் மயக்கமடைகின்றேன். ஆகையால் என் சோகம் நீங்கி நான் முத்தியைப் பெறுதற்குரிய நிச்சயமான ஒரே மார்க்கத்தைக் கூறும் என்ற கருத்தால் அர்ச்சுனன் அவ்வாறு வினவினான்.

இருளை நீக்குதற்கு ஒளிமாத்திரமே காரணமாக இருத்தல்போல் மோக்ஷத்திற்குக் கேவலம் ஆன்ம சாக்ஷாத்கார ஞானமே காரணம் என்றும் அதின்றி மோக்ஷம் கிட்டாதென்றும் முன்னே கூறினார். பிறகு கரும நிஷ்டையே சிறந்தது என்றார். இரண்டும் ஒரே அதிகாரிக்கு எவ்வாறு பொருந்தும்? ஆகையால் அர்ச்சுனன் கலக்கமடைந்து மேலே கண்டவாறு வினவினன்.]

பகவான்:— ஏ பார்த்த! நாம் உபதேசித்த ஞான நிஷ்டை கர்ம நிஷ்டை என்ற இரண்டும் உண்மைதான். கருமங்களை நிஷ்காம சித்தத்துடன் செய்யாதவனுக்கு ஆசை யொழியாது. கருமங்களை யடியோடு விட்டுவிட்டதால் மட்டும் ஒருவன் மோக்ஷத்தை யடையமாட்டான். பாபம் புண்ணியம் என்கிற இருவினைகளைச் செய்யாதவர்கள் ஒருவருமே யில்லை. ஆசையை யொழிக்காமல் கருமத்தைச் செய்யாதொழித்தவன் பொய்ப் பாவனை செய்பவனாவான்.

[உலகில் சித்த சுத்தியுடையவர்கள், அதாவது ஆசை யொழிந்தவர்கள் என்றும் சித்தசுத்தி யில்லாதவர்கள், அதாவது ஆசை யொழியாதார் என்றும் இருவகை யதிகாரிகளுளர் — இவர்களில் சித்தசுத்தி யுடையவர்களுக்கு ஞானயோகம் கூறப்பட்டது. சித்த சுத்தியில்லாது கர்மங்களில் உழன்றுகொண் டிருப்பவர்களுக்கு நிஷ்காம கருமத்தைச் செய்வதாகிய கர்மயோகம் கூறப்பட்டது.

நிஷ்காம கர்மத்தால் சித்த சுத்தியும், அதனால் ஞானமு முண்டாகும். ஆசையை யொழிக்காமல் புறக்கரணங்களை மட்டும் அடக்குவதால் ஞான முண்டாகாது. இதனால் ஆசையை யொழிக்காமல் கர்மங்களைச் செய்யாது விடும் சந்நியாசத்தால் ஒருபயனுமில்லை யென்பதும், அது பொய்ப்பாவனையாகிய வெளிவேடமே யென்றும் கூறப்பட்டது. ஏனெனில் ஆசை யொழியாது இச்சாசொரூபமான மனமடங்காது. அதனால் அவன் வெளி யிந்திரியங்களைமட்டும் அடக்கிக்கொண் டிருந்தாலும், உள் முகத்தில் இராகத் துவேஷாதிகள் பொருந்திய மனத்தால் சத்தாதி விஷயங்களைச் சிந்தித்துக்கொண்டிருப்பானே யன்றி ஆன்ம தத்துவத்தைச் சிந்திக்கமாட்டான். நிஷ்காம கருமத்தால் (மேல் கூறப்பட்ட வழியாக) ஞானமுண்டாகும்— ஆனால் சாதாரணமான தான யாக யெக்யாதி கர்மங்களால் மோக்ஷ முண்டாகாது.]

"அதிகாரி பேதத்தால் ஞானநிஷ்டை கர்ம நிஷ்டையென்று இரண்டு விதமாகக் கூறினதாகையால் அக்காரணமாக நீ மயக்கமடைய வேண்டாம். நீ நிஷ்காம சிந்தையோடு உனக்குரிய கர்மங்களைச் செய்" என்று பகவான் அருளிச்செய்கிறார்:—

"ஏ அர்ச்சுனா! எவன் சுரோத்திராதி ஞானேந்திரியங்களின் வழியாய் மனதை விஷயங்களில் செல்லவொட்டாது தடுத்து, இச்சையற்றவனாய்க் கருமேந்திரியங்களால் நிட்காம கருமத்தைச் செய்கிறானோ, அவன் ஆசையோடு பொருந்தியமனதை யுடைய சந்நியாசியினும் மிகச் சிறந்தவனாகும். ஆகையால் நீ யவ்வாறே கருமபலன்களில் சற்றும் ஆசையற்றவனாய்ச் சுருதியில் கூறப்பட்ட கருமங்களைச் செய்வாயாக. அக்கருமங்கள் காமியகர்மங்களைப்போல் அழியாமல், நிலைத்து நின்று ஞானத்தை யளித்துப் பிறவியை யொழிக்கும்.

(முமூக்ஷுக்கள் கர்மத்தைச் செய்வதால் பந்த மடைய மாட்டார்களோ என்று கிரீடி சங்கைசெய்ததற்கு, பகவான் காமிய கர்மமே பந்தத்தை யுண்டாக்கு மென்றும் ஈசுரார்ப்பணமாய்ச் செய்யப்பட்ட கர்மங்களால் பந்தம் உண்டாகா தென்றும் அருளிச் செய்கின்றார்)

"ஏ அர்ச்சுனா! இவ்வுலகோர் பலனை யிச்சித்தே கருமங்களைச் செய்வதால் பந்தத்திற் குள்ளாகிறார்கள். ஆதலின் நீ பல இச்சை யற்றவனாய் அப்பரமேஸ்வர ஆராதனையின் பொருட்டுக் கருமத்தைச் செய்வாயாக.

கர்ப்ப ஆதியின் கண்ணே பிரஜாபதி பிரஜைகளை நோக்கி "ஏ பிரஜைகளே! நீங்கள் எக்ஞத்தைச்செய்து விர்த்தி யடையுங்கள். தேவர்களைச் சந்தோஷிப்பிக்கும் தேவாராதனமாகிய இந்த எக்ஞங்கள் நீங்கள் விரும்பும் சகல பலன்களையும் அளிக்கும்" என்று அருளினார்.

அர்ச்சுனன்:— "பகவானே! தேவர்களை மகிழ்விக்கும் எக்ஞாதிகளால் மனத்தில் கோரிய பலன்கள் எவ்வாறு கிடைக்கும்?" எனச்சங்கிக்கப் பகவான் அருள்கிறார்:—

ஜனங்கள் எக்ஞாதிகளால் தேவர்களைத் திருப்தி செய்வித்தால் அவர்கள் மேகத்தின் வருஷஜல முதலியவற்றால் ஜனங்களைப் போஷிப்பார்கள்.

அவ்வாறு எக்ஞத்தால் அளிக்கப்பட்ட (ஆகாரம், பசு, பொன்முதலிய) நானா போகங்களைக்கொண்டு மீண்டும் அத்தேவர்களைப் பூசியாமல் தங்கள் சரீரேந்திரியங்களின் போஷணையை மட்டும் கருதிப் புசிப்பவர்கள் கள்வர்களும் செய்ந்நன்றி கொன்றவர்களு மாவார்கள். மேலும் தேவர்கள் அளித்த அந்நாதிகளைக்கொண்டு அவர்களைப் பூஜித்து அந்த அந்நசேஷத்தை யுண்ணாமல் தன் தேகம்பருக்கும் பொருட்டு உண்பவன் பாவங்களையே புசிக்கிறவனாவான். யாவன் தேவர்களுக்குப் படைத்து மிச்சமாகிய சேஷ அந்நத்தை யுண்பானோ அவன் பஞ்சசூனையாதிய சர்வபாவங்களையும் போக்கிக் கொள்வான்.

[யக்ஞம் ஐவகைப்படும். அவற்றிற்குப் பஞ்சயக்ஞங்கள் என்று பெயர். அவை (1) ரிஷியக்ஞம், (2) தேவயக்ஞம், (3) பூதயக்ஞம், (4) மனுஷியயக்ஞம், (5) பிதுர் யக்ஞம்.

இவற்றில் வேதத்தைக் கற்றல் கற்பித்தல், சந்தியோபாசனம் இவை ரிஷியக்ஞம்-அக்னிஹோத்திரம் முதலியவை செய்தல் தேவயக்ஞம்-பலி வைசுவதேவங்களைச் செய்தல் பூதயக்ஞகம்-அதிதியை அந்நாதிகளால் உபசரித்தல் மநுஷியயக்ஞம் — சிரார்த்த தர்ப்பணாதிகளைச் செய்தல் பிதிர்யக்ஞம்.

யக்ஞங்களைச் செய்யாது தன் போஷணையை மட்டும் கருதிப் புசிப்பவன் பஞ்சசூனை முதலிய பாபங்களைப் புசிப்பவனாவான் என்று கூறப்பட்டது. பஞ்சசூனை பாபங்கள் என்பது, தேகபோஷணையி னிமித்தம் அந்நாதிகளை யாயத்தம் செய்யும்போது, நெற்குத்தல், எந்திரத்தில் அல்லது உரலில் மாமுதலிய அரைத்தல், அலகிடுதல், தீமூட்டுதல், ஜலம் காய்ச்சுதல் ஆகிய ஐந்து காரியங்களைச் செய்வதால் நேரிடும் ஜீவ இம்சையா லுண்டாகும் பாபம்.]

(எக்ஞ முதலிய கர்மங்கள் செய்வதன் விசேஷத்தை யின்னும் கூறுகிறார்)

ஏ அர்ச்சுனா! அந்நத்தால் சரீரங்கள் உண்டாகின்றன. அந்நம் மழை பெய்தலால் உண்டாகிறது. மழை தேவதைகளின் சந்தோஷத்தாலுளதாம். தேவதைகளின் சந்தோஷம் அக்கினிஹோத்திர முதலிய கர்மங்களினால் உண்டாவதாம்—இந்த அக்னிஹோத்திர முதலிய கர்மங்கள் வேதத்தினின்றும் உற்பன்னமாயின-ஆதலின் பரமாத்மாவி னின்றுமுண்டான நாசமற்ற அவ்வேதமானது அத்தருமரூப எக்ஞத்தின் கண் உளதாமென்றறிதி.

மேலே கூறியபடி பரமேசுவரரிடத்தி லிருந்து வேதம் உண்டாயிற்று. வேதத்தில் அக்கினி ஹோத்திராதி கர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அக்கர்மங்களைச் செய்வதால் தேவர்கள் சந்தோஷமடைந்து மாரியளிக்கிறார்கள். மழையால் (தானியங்கள் என்ற) அந்நம் உண்டாகின்றது. (உண்பொருளாய் புருடஸ்திரீகளின் தேகத்தில் நுழைந்து சுக்கில சுரோணிதமாகமாறும்) அந்நத்தால் மனுஷ்யாதி சரீரங்கள் உண்டாம். அம்மனுஷ்யர் மீண்டும் கருமங்களைச் செய்கின்றனர். ஜகம் நிலைபெற்றிருக்க ஈசுவரனால் நியமிக்கப்பட்ட நிலையான இச்சக்கரத்தின் வழி யொழுகாதவர்கள் வீணாக ஜீவிப்பவர்க ளாவார்கள். (அதாவது அத்தகையோர் உயிர்வாழ்க்கையால் ஒருபயனு மடையார்கள் என்பதாம்.)

(ஞானிக்கு எத்தகைய கருமானுஷ்டானமும் அவசியமின்று என்று பகவான் அருள்செய்கின்றார்.)

ஏ அர்ச்சுனா! எப்புருஷன் ஆன்மசாக்ஷாத்கார ஞானத்தை யடைந்து அந்த பிரம்மாத்ம ஐக்கிய நிலையிலேயே நிலைத்து நின்று அந்த ஆன்மானந்தத்திலேயே திருப்தியடைந் துள்ளானோ அவனுக்கு எத்தகைய கருமமும் அவசியமின்றாம்—அவன் கருமத்தைச் செய்து அதனாலடையத்தக்க பயன் ஒன்றுமில்லை. அதைச் செய்யாததால் ஓர் பழியுமில்லை. ஒருவரும் அவன் கர்மங்களைச் செய்திலனே யென் றெண்ணவு மாட்டார்கள். அவனைச் செய்யும்படி கூறவு மாட்டார்கள். அவன் கிருதகிருத்தியனாவான். அவன் செய்யவேண்டுவன யாவும்செய்து முடித்தவன். இனிச் செய்யவேண்டுவ தொன்றுமே யில்லை. (தொடரும்)

சீடன்.

## (உறுதியான தேசபக்தியுள்ள ஓர் உத்தமி)
## "சுதேசி உடையுடன் பார்க்கமாட்டேன்"

சென்னை சர்வகலாசாலையில் படித்து உயர்தரப் பட்டம்பெற்ற மிஸ் லாஸரஸ் என்ற ஒரு கிறிஸ்துவப் பெண்மணி மேனாடுகளில் சுற்றுப்பிரயாணம் செய்துகொண்டிருந்த காலை உரோமாபுரிக்குச் சென்றாள். சென்று போப் மதாசாரியாரைக் காண விரும்பினாள். தன் விருப்பத்தை அப்பெரியாருக்குத் தெரிவித்தலும், அவர், சுதேச உடையுடன் இந்தமாது இருக்கின்றமையால் தரிசனம்தர முடியாதென்றும் ஐரோப்பிய உடையுடன் வந்தால் தரிசனம் தர முடியுமென்றும் பதில் கூறிவிட்டார். இந்த மாது தன் உடையை மாற்றிக்கொள்ள முடியாதென்றும் போப்பின் தரிசன பாக்கியத்தை இழந்துவிடச் சித்தமா யிருப்பதாகவும் தெரிவித்துவிட்டாள். கடைசியாகப் போப் மதாசாரியார், சுதேச உடையுடன் தம்மை வந்து காணலாமென்று தெரிவித்தார். இந்தச் செய்தி தமிழ்நாட்டிலுள்ள கிறிஸ்துவர்களுக்கு எவ்வித உணர்ச்சியைக் கொடுக்குமோ அறியோம். ஆனால் தன் உடையின் கௌரவத்தைக் காப்பாற்றிய ஸ்ரீமதி லாஸரஸைப் போற்றுகிறோம். நமது நாட்டிலேயே அந்நிய உடைகளுடன் உலாவும் பெரிய மனிதர்கள் இந்தச் செய்தியைக் கவனிப்பார்களா?

குறிப்பு:—சகோதர சகோதரிகளே! இப்போது மேற்கண்ட விஷயத்தில் கிருஸ்து சமயத்தவர்க்கு ஜகத்குருபோன்ற போப் அவர்கள் நமது இந்திய சகோதரிக்கு உடையின் காரணமாக தரிசனமளிக்க மறுத்ததிலும் அச்சகோதரியின் நடக்கையிலும் உள்ள விசேஷங்களைப்பற்றி நம்மவர் சிந்திக்கவேண்டுமென்பதுபற்றியே 23-9-22. வெளியான "நவசக்தி" பத்திரிகையில் இருந்த இவ்விஷயத்தை நமது சஞ்சிகையில் பிரசுரிக்க நேர்ந்தது.

போப் அவர்கள் அந்த அம்மையார் இந்திய உடை யணிந்திருந்ததால் அவருக்குத் தரிசனமளிக்க மறுத்தது தகுதியா அல்லவா என்பதைப் பற்றி நாம் ஆராய்ச்சி செய்யவேண்டுவதில்லை. மற்றபடி நாம் அறியவேண்டுவது என்னை யெனின்; போப் அவர்கள் சந்நியாசி ஆசிரமத்தைச் சேர்ந்தவர். அவர் உலகப் பற்றற்றவராகவும் தம்மை யண்டிவந்தவர்களுடைய ஜாதி மதாசாரம் முதலியவற்றைக் கவனிக்காமல் தரிசனமளிப்பவராகவும் இருக்கவேண்டியவர் என்று யாவரும் எதிர்பார்ப்பார்கள். அத்தகையோர் தம் நாட்டிற்கு வந்தவர்கள் தமது நாட்டு ஆசாரப்படி உடை யணியவேண்டுமென்று விரும்புகிறார். அத்தகைய சந்நியாசிக்கே தம் தேசாசாரத்தில் எத்தகைய பற்றும் அபிமானமும் இருக்கிறதென்பது நன்கு விளங்குகிறதன்றோ.

அந்தோ மேல் நாட்டாரைப்போல் வேடமணிய விரும்பும் நம்மவர்களில் எத்தனைபேருக்கு அத்தகைய அபிமானமிருக்கும்? அது போகட்டும்.

தமது மதத்தைச் சேர்ந்த குருமார்கள் எல்லாரிலும் உயர்ந்த ஜகத்குருவாகிய போப் அவர்களின் தரிசனத்தை இழக்க நேர்வதாயினுங்கூட தமது தேசாசாரத்தைக் கைவிட்டு மேல் நாட்டாரைப்போல் உடையணியமறுத்துவிட்ட அவ்வுத்தமியின் தேசபக்தி எத்தகைய புகழ்ச்சிக் குரியது என்பதைத் தயவுசெய்து கவனியுங்கள். இத்தகைய வீரமாதரன்றோ தாய் நாட்டின் க்ஷேமத்தைக் கருதுவோர். அந்தோ நம் நாட்டு ஆடவரில் எத்தனை பேர் இம்மாது சிரோமணியின் உத்தம நடக்கையைக் கேட்டுத் தலைநாண வேண்டியவர்களா யிருக்கிறார்கள்! தம் பெண்மக்களுக்கு மேல்நாட்டாரைப்போல் உடையணிவித்து முகத்திற்கு வெள்ளைபூசிப் பாடசாலைக் கனுப்பும் நம் நாட்டுத்தாய்மார்கள் மேற்கண்ட தங்கள் சகோதரியின் வீரச் செயலை யறிந்த பிறகேனும் தங்கள் துர்ப்பழக்கத்தை யுடனே நிறுத்துவார்களென்று வேண்டிக்கொள்கிறோம்.

மேல் நாட்டாரை வெளிவேடமாகிய விஷயங்களில் மட்டும் பின்பற்ற ஆவல்கொள்ளும் நம்மவர், மேல்நாட்டாரிடமுள்ள இத்தகைய உத்தமகுணங்களைமட்டும் புறக்கணித்துவிடுதல் பன்றுடையின் செய்கையன்றோ. மேல்நாட்டார் எங்கு சென்றாலும் தங்கள் தேசாசாரத்தை விட்டு அன்னியரைப்போல் உடையணிகிறார்களா? தங்கள் தாய்நாட்டின் க்ஷேமத்திற்கு இடையூறான காரியங்களைச் செய்கிறார்களா? அந்தோ! நம்மவர் இவ்விஷயங்களில் ஏன் அவர்களைப் பின்பற்றலாகாது. இது நமக்கே மானக்கேடாய்த் தோன்றியிருப்பது யார் செய்த தீவினையோ அறியோம். சகோதர சகோதரிகளே! நம்மை யன்னியர் மதிக்கவேண்டுமென்ற எண்ணம் உங்களுக்கிருக்குமாயின், நம் நாடு க்ஷேமமடையவேண்டுமாயின், பாரதமாதாவின் கோபத்திற்கு ஆளாகதிருக்கவேண்டுமாயின், நம்முன்னோர்களுடைய நல்லாசியை நீங்கள் பெற்று உங்கள் சந்ததியார் மேலோங்கி வரவேண்டுமாயின், இத்திய செய்கைகளை யுடனே யொழித்து நமது ஸ்ரீமதி லாஸரஸ் சகோதரியின் மேற்கண்ட புகழ்ச்சிக்குரிய நடக்கையைப் பின்பற்றி யொழுகுங்கள். பரம்பொருள் நல்லருள் புரிவாராக. பத்திரிகாசிரியர்

---

## பெண்களும் மேல் நாட்டுக் கல்வியும்.

கழிந்த சில வருடங்களாக நமது இந்தியாவில் பெண்கல்வி அபிவிர்த்தியின் பொருட்டு ஆழ்ந்த பரிதாபத்துடனும், மிகுந்த ஊக்கத்துடனும், பெண் கல்வியைப் பற்றிக் கூறும், பல பத்திரிகைகளும், சில சிறு வியாசங்களும் ஆடவரும் மகளிரும் கண்ணுறாததும், அறியாததுமான ஓர் விஷயமன்று. இதைப் பரவச்செய்தற்கு முயற்சி செய்யும் பெரியோர்கள் பலருளர் என்பதும் ஒருவரும் அறியாததன்று. பெண்கள் அறிவற்ற கல்லா மூடர்களாயிருந்து வருந்தாது, ஆடவரைப்போல் கல்விகற்று, நல்லொழுக்

கம், நல்லூக்கம், கல்லறிவு, நற்பிரதாபம் முதலிய நற்குணங்கள் நன்கமை யப்பெற்ற நற்குணவதிகளாயும், நாட்டிற்குத் திலகமாயும், சமுதாயங்களுக் கும் அணிகலனாயும் விளங்கவேண்டுமென்ற பெரியோர்களின் நோக்கம் மெச்சத்தகுந்ததே. இந்நோக்கம் நிறைவேறுமிடத்து அது நம் நாட்டுக்கு ஒரு பாக்கியமே. பெண் கல்வியின் பயனைப் பெண்கள் அடையின் அது அவர்கள் வாழ்வுக்குச் சிலாக்கியமே.

தற்காலத்துப் பெண் கல்வியின் பயன் யாதெனச் சிறிது ஆராய்வோம். எவ்விதம் ஆடவர்கள் பலகருத்துடன் அரசாங்கத்தில் உத்தியோகம் பெற வேண்டாமென்ற கருத்தின்றி, மேனாட்டுக் கல்வியைக் கைப்பற்றுகிறார் களோ, அவ்விதமே ஸ்திரீகளும் அதே கருத்தின்றி மேனாட்டுக் கல்வியைக் கைப்பற்றுவதில்லை. ஆடவரைப்போல் பெண்களும் பட்டதாரிகளாய் பல தொழில் துறைகளிற் பிரவேசிக்கப் பின்னிடுவதில்லை. மேல்நாட்டு நாக ரீகத்தைத் தழுவ அஞ்சுவதில்லை. மேனாட்டுப் பெண்களைப்போல் நடிக்க வும், பெண் சுதந்தரத்திற்காக வாதிப்பதற்கும், புருஷரைச் சமமாய் நடத் துவதற்கும் பிரியமற்றிருக்கவில்லை. கீர்த்தி, பிரதாபம், பேர், புகழ், முத லியவற்றை நிலைநாட்டுதற்குரிய சாமர்த்தியம் பெண்களிடத்துக் குறை வில்லை. இவ்வாறு எல்லா அம்சங்களிலும், புருஷரைப்போலும், புருஷரை விடவும், பரிபக்குவமடையும் பெண்கள், அரசாங்க உத்தியோகத்துக்கும், ஸ்திரீ சுதந்தரத்திற்கும் வாதிக்கும்போது, அதைச் செவிக்கேற்காமலும் கவனியாமலுமிருப்பது நடுவுநிலை தவறு ஓர் நல்ல அரசாட்சிக்கு நியாய மில்லை. ஆகையால் ஓர் நல் அரசாட்சி இவர்கள் வேண்டுகோளைப் பூர்த்தி செய்யும் என்று கூறத்தடையில்லை.

மேல் நாட்டுப் பெண்கல்வி மேல் நாட்டுக்கு எந்தப் பயனை அளிக்கின் றதோ அதே பயனை அது இந்த நாட்டுக்கும் அளிக்கவில்லை என்று கூறின் அது சுத்தப் பொய்யாகும். அக்கல்வி அதன் பயனைப் பாவச்செய்யா திருப்பின் அது அதன் கடமையைச் செய்யாத குற்றத்திற்காளாகும். பெண்கள் கல்வியின் பயனை யடையாதிருந்தால் அவர்கள் முயற்சி பயன் படாததாகும். அக்கல்வி நம் பெண்மணிகளின் வாழ்வை மாற்றுவிட்டால் அக்கல்வியின் ஊக்கம் வீணாகும். நம் பெண்மணிகள் அக்கல்வியின் பய னாய் மேனாட்டுப் பெண்மணிகளைப்போல் நடியாதிருப்பின் அது நன்றி மறத்தலாகும். கல்வியின் பயனை யடைந்தால் மாத்திரமே அக்கல்வி பூரணமாகும். (இந்த நியாயங்களால் மேல்நாட்டுக் கல்வியால் நமது பெண் மக்களின் ஆசாரம் முதலியவற்றில் மாறுதல் ஏற்படும் என்று தெளிவாய் விளங்குகிறது. இனி இதனால் நன்மை விளையுமா தீமைவிளையுமா வென்ப தைக் கவனிப்போம்.)

ஒரு சாதனத்தை அடையுமுன் அது நமக்கு அவசியமா அவசிய மில்லையா என்பதைச் சிந்தியாது, சேது நதிக்கரையில் ஒருவர் மண்ணில்

சிவலிங்க உருச் செய்வதைப்பார்த்த இதர ஜனங்கள் எல்லாரும் அவர் செய்ததின் நோக்கம் அறியாது, அதே மாதிரி தாங்களும் சிவலிங்க உருச் செய்த மாதிரி, இங்கிலாந்து, பிரான்ஸ், ஜப்பான்முதலிய தேசத்துப் பெண்கள் கற்கிறார்கள், ஆடவர் கற்கிறார்கள் என்று நமது பெண்கள் தமது நிலைமை இன்னதென்றும், அது பல் நூற்றாண்டுகளுக்குமுன் இருந்த ஸ்திதியாதென்றும் அறியாமல் இவர்களும் மேல்நாட்டுக்கல்வி பயில்வது நம் இந்தியப்பெண்களுக்கு, உசிதமற்றதும், அடாததும்,சிறிதும் பொருந்தாததுமாயிருக்கிறது. ஒருவனுக்கு அமுதாயிருப்பது மற்றொருவனுக்கு நஞ்சாயிருக்கிறது என்ற ஆங்கிலேயப் பழமொழிபோல், ஒரு தேசத்துக் குலாசாரம், பழக்க வழக்கம், ஒழுக்கம், கல்வி, நாகரீகம் முதலியவை மற்றொரு தேசத்துக்குப் பொருத்தமுள்ளதாயும் நன்மை தரத்தக்கதாயு மிருக்குமென்று சொல்லமுடியாது. ஒரு தேசத்து உடை, உணவு, ஆசாரம் முதலிய அந்த தேசத்துச் சீதோஷ்ண ஸ்திதியைத் தழுவி யிருப்பதுபோல், ஒரு தேசத்துக் கல்வியும் நாகரீகமும் அந்த தேசத்துக் குலாசாரம் பழக்க வழக்கங்களை ஒட்டினதாகவே இருக்கவேண்டுமென்பது ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஓர் விஷயமே.

பெண்களுக்கு எது அவசியமோ அதைப் புகட்டாத மேல்நாட்டுக் கல்வியைப் பெண்கள் கைப்பற்றவானேன்? பெண்களாய்ப் பிறந்தவர்களை நற்குணவதிகளாயும், குடும்பமாகிய அரசாங்கத்தை நன்கு பரிபாலிக்கத் தக்க சாதுரியமும் சாமர்த்தியமு முள்ளவர்களாயும், குழந்தைகளைப்போற்றி வளர்ப்பதற் கின்றியமையாத அன்பும் பொறுமையும் வாய்ந்தவர்களாயும் மாற்றுவதற்குரிய சக்தியற்ற மேல்நாட்டுக் கல்வி வற்புறுத்தப்படுவானேன்? மதாபிமானம், குலாபிமானம், தேசாபிமானம், உறவபிமானம் முதலியவற்றை ஒழித்து உடலபிமானம் உணவபிமானம், மதுவபிமானம், உடையபிமானம் முதலியவற்றை நம் மனத்தில் வேரூன்றித் தழைத்தோங்கச் செய்யும் இந்த மேல்நாட்டுக் கல்வியை நம் பெண்மணிகள் கைப்பற்றலாமா? "கற்றதனா லாயபயனென்கொல் வாலறிவ-நற்றா டொழா ரெனின்" என்னும் மெய்ம்மொழியை மறந்து, மேல்நாட்டு நாகரீகத்தை அனுஷ்டிக்கும்படி கட்டாயப்படுத்தும் இக்கல்வியை, வித்தியாசாலை, பெரியோர்கூடுமிடம், ஆலயம், முதலிய உயிர்க்குறுதியைச் செய்யக்கூடிய இடங்களுக்கு மனதைச் செல்லவொட்டாது தடுத்து, நாடகசாலை, சங்கீதசாலை, நடனசாலை, முதலிய விநோதசாலைகளுக்கு மனதைத் திருப்பும் இக்கல்வியை, புண்யவதிகளும், புனிதவதிகளும் சத்தியவதிகளும், பதிவிரதா சிரோன்மணிகளும், ஸமஸ்தலோகத்தாரும் புகழத்தகுந்த அருமையான அரிய குணக்குன்றாய் விளங்கும் பெண்மணிகளான, சாவித்திரி, நளாயினி, தமயந்தி, அருந்ததி, சீதை, துரௌபதி முதலிய பெண் பூஷணங்களைப்பற்றியும், இதிஹாஸம், புராணம் முதலிய திவ்ய பிரபந்தங்களைப்பற்றியும்,

சரியை, கிரியை, யோகம் என்ற மூன்றினுள் மூன்ருவதைக் கைப்பற்றிய யோகிகளைப்பற்றியும், லோகோபகாரத்திற்காக உடல் பொருள் ஆவி ஆகிய மூன்றினையும் அந்தக்கரண சுத்தியுடன் தியாகம்செய்த அவதார புருஷரத்தினங்களைப்பற்றியும், இந்தியாவிலேயே நமக்குத் தெரியாத பல நூதன விஷயங்களைப்பற்றியும், அறிவிக்காமலிருப்பதுடன் நாமாகவே அறியும் அவாவை யடையின், அவ்வவாவை அறவே ஒழிக்கும் இக்கல்வியை நம்மாதர் கைப்பற்றின் அவர்கள் கதி என்னுகும் ?

பெண் கல்வியின் நோக்கம் பெண்களிடத்து நற்குணம், நாணம், மடமை, அச்சம், பயிர்ப்பு என்னும் மாதர்களுக்கு இன்றியமையா நாற்குணங்கள், பதிபக்தி, கடவுள்பக்தி, எவரிடத்தும் வாத்ஸல்யம் ஆகிய இவற்றை விருத்திசெய்யக் கூடியதா யிருந்தால் மாத்திரமே, பெண்கல்வி பெண்களுக்கு நலம் விளைவிப்பதாய்க் கூறலாம் என்பதை ஒவ்வொரு ஸ்திரீயும் அறியவேண்டும். இதிற்குறித்த கல்வியை மாத்திரமே மாதர் நேசிக்கவேண்டும். அல்லாத (பயனளிக்காத) கல்வி மாட்டுள்ள ஆசையை அகற்றவேண்டும். நமதுபூர்வீக அவதாரப்பெண்மணிகள் கைப்பற்றின மார்க்கத்தையே எல்லா இந்தியமாதரும் கைப்பற்றவேண்டும். அதுவே இந்திய மாதின் கடமை யென்பதை ஒவ்வொருமாதும் உணரவேண்டும். மேல்நாட்டு ஆசாரம், ஒழுக்கம், கல்வி, நாகரீகம் முதலியவை நம் ஆரியவர்க்கத்துக்குப் பொருந்தாதனவும், அடாதனவும், இன்னல் விளைவிக்கக்கூடியனவுமா மென்பதை ஒவ்வொருமாதும் அறியவேண்டும். இவ்வுண்மையைத் தெரிந்து ஆரியப் பெண்களைப்போல் ஒழுகல்வேண்டும். யோகிகளும், ஞானிகளும், பக்தர்களும், நடுவு நிலைதவருத கணக்கற்ற மன்னர்களும் இந்நாட்டில் உற்பத்தியானது இந்நாட்டு மாதர்களின் நல்லொழுக்கத்தாலேயே என்பதை ஒவ்வொருவரும் அறியவேண்டும். அறிந்து அவ்வரிய குணங்களை மனதில் பயிர் செய்ய முயலவேண்டும். அதற்கேற்ற கல்வியைக் கற்கவேண்டும். அவ்விஷயங்களைப் போதிக்கும் 'ஆனந்தபோதினி' போன்ற பத்திரிகைகளை ஆனந்தமாய்ப் பார்வையிடவேண்டும். அவ்விதம் வாழ்வதே பெண்களுக்குச் சிலாக்கியம். அதுவே அவர்களுக்குப் பெரியதோர் பாக்கியம். இல்லாவிட்டால் இப்பெண் வாழ்வால் யாது யோக்கியம் ?

N. சுப்பிரமணிய அய்யர்,
கிழக்கு ரதவீதி, நாகர்கோவில்.

---

## மாணவர்களுக்கு ஓர் நற்புத்தி.

மாணவ நண்பர்களே ! நமது சஞ்சிகையில் அடிக்கடி உங்களுக்கு அவசியமான பல விஷயங்களை நமது ஆனந்தன் மூலமாக வெளியிடுகிருேம். ஆனல் நமது நாட்டில் பெரும்பாலார் இன்னும் பத்திரிகைகளை வாசிப்பது காலப்போக்குக்காக வென்றும், வாசித்து விஷயத்தை மறந்து

விட்டுப் பத்திரிகையை எறிந்து விடவேண்டியதே நாம் செய்யவேண்டிய வேலையென்றும் கருதுகிறார்களே யன்றி, அவற்றிலுள்ள நல்ல விஷயங்களை மனதில் வைத்து அதன்படி நடக்க வேண்டியது அவசியமென்றும், அப்போதுதான் பத்திரிகைகளா லாயபயனை யடைந்து முன்னேற்ற மடைவோ மென்றும் உணர்கிறார்க ளில்லை. அதனால்தான் சிலர் ''பத்திரிகைகளை வாசிக்க அவகாசமில்லை'' என்கிறார்கள்.

மாணவர்களாகிய நீங்கள் அவ்வாறு நடக்கமாட்டீர்க ளென்றே நம்புகிறோம். நம் தாய்நாட்டின் எதிர் காலக்ஷேமத்திற்குப் பொறுப்பாளிகளாகிய நீங்கள் அவ்வாறு தெளிவிலார்போல் ஒழுகுவீர்களாயின் அந்தோ நம் தாய்நாடு ஒருகாலும் முன்னேற்ற மடையாது.

இப்போது நீங்கள் கற்கும் கல்வி பிற்காலத்தில் நீங்கள் றுரைத்தனத்தாரிடம் ஊழியம்செய்து ஊதியம் பெறமட்டுமே யுதவியாகிறதே யன்றி உங்களைக் கல்விமான்க ளாக்குவதுமில்லை உங்கள் ஆன்மா ஈடேறும் மார்க்கத்தைக் காட்டுவதுமில்லை. ஏனெனில் இக்காலத்தில் உங்களுக்குக் கல்வி போதிக்கப்படும் முறைமையும், நீங்கள் வாசிக்கும் பாடபுத்தகங்களும் அவ்வாறிருக்கின்றன. முற்காலத்தில் நம் நாட்டில் கல்வி போதிக்கப்பட்ட முறைமைக்கும் இக்காலத்து முறைமைக்கும் முக்கியமான விஷயங்களில் நேர்மாறான வித்தியாச மிருக்கிறது. எவ்வா றெனின்;—

1. முற்காலத்தில் உபாத்தியாயர் கல்வி யறிவோடு உலக அனுபவமும் தக்க யோக்கியதைகளும் உடையவராக விருப்பார் (நன்னூலில் ஆசிரியரிலக்கணம் பார்க்க.)

இக்காலத்தில் மேல்நாட்டு முறைப்படி, எவ்வாறு அவர்கள் மதநூலாகிய பைபிலை வாசித்துவிட்டமட்டில் குருபதவி யடைகிறார்களோ, அவ்வாறே, வயது, உலக அனுபவம், தக்க நடக்கை இவைகள் ஒன்றையும் கவனியாமலே, குறித்த அளவு நூற்கல்விமட்டு மிருப்பவர்கள் உபாத்தியாயர்களாக வந்துவிடுகிறார்கள். இதன் பிரதிகூலங்களை விரிக்கிற்பெருகும்.

2. முற்காலத்தில் உபாத்தியாயர் ஒவ்வொரு மாணவனுடைய புத்தியின் அளவை யறிந்து அவனவனுக்குத் தக்கபடி போதிப்பதோடு தக்க கல்வியைப் போதிப்பார். இதனால் மாணவனுக்கு உபாத்தியாயரின் போதனை சுலபத்தில் நன்றாக மனதில் பதிகிறது.

ஒரே வயித்தியன் எல்லாருக்கும் ஒரே ஔடதத்தைப் பிரயோகித்தால் சிலருக்குப் பயனுண்டாகும் சிலருக்குண்டாகாது. ஆகையால் அவரவர் தேகக்கூறையறிந்து அவரவர்க்குத் தக்க ஔடதத்தையே சரியான வைத்தியன் கொடுப்பான். அதுபோன்றே மாணவர் புத்தியிலும் பேதங்கள் உண்டு. அதாவது நாம் முன் ஒரு சஞ்சிகையில் கூறியுள்ளபடி 1. சிலாபுத்தி, 2. தாருபுத்தி, 3. வேணுபுத்தி, 4. தைலபுத்தி என புத்தியில் நால் வகையுண்டு.

இவற்றில்,

1. சிலாபுத்தி.—சிலை என்றால் கல்—கல்லில் ஒரு உருவத்தைச் செதுக்குவது மிக்க கஷ்டம். ஆனால் செதுக்கிவிட்டாலோ அது கொஞ்சத்தில் அழியாது. அதைப்போல் சிலாபுத்தி யுடையோன் மனதில் ஒன்றைப்பதியச் செய்வது மிகக்கஷ்டம். பதிந்து விட்டால் அது எப்போதும் மனதில் நிலைத்து நின்றுவிடும்.

2. தாருபுத்தி — தாரு என்பது மரம். மரத்தில் ஒரு உருவத்தைச் செதுக்குவது சுலபம். ஆனால் அது சுலபமாய்த் தேய்ந்துபோம்.

3. வேணுபுத்தி — வேணு என்பது மூங்கில். மூங்கிலின் ஒருபக்கக் கணுவில் உளிவைத்தடித்தால் மறுபக்கங்கூட பிளந்து கொள்ளும் — அவ்வாறே வேணுபுத்தி யுடையோனுக்கு ஒரு விஷயத்தைப்பற்றி திருட்டாந்தத்தைமட்டும் கூறினால் தாஷ்டாந்தத்தை யவனே யுணர்ந்து கொள்வான்.

4. தைலபுத்தி — தைலம் என்பது எண்ணெய்—எண்ணெய் ஒரு நூலின் ஒரு நுனியில் பிடித்தால் அங்கிருந்து முழுமையும் ஊறிவிடுகிறது. அவ்வாறே தைலபுத்தி யுடையோன் ஒரு விஷயத்தை யுணர்ந்தால் அதைப் பற்றிய முன்பின் விஷயங்களைக் கிரகித்துக்கொள்வான்.

இவ்வாறு புத்தியில் வித்தியாசம் இருப்பதால் உபாத்தியாயர் எல்லா மாணவர்களுக்கும் ஒரே மாதிரி போதனை செய்வதால் எவ்வளவு பிரதிகூலமிருக்கிறதென்பதை நீங்களே யுணரலாம்.

5. முற்காலத்தில் ஒருவன் பெரும்பாலும் ஒரு உபாத்தியாயரிடமே தன் கல்விமுழுமையும் கற்பான். அதனால் உபாத்தியாயருக்கு அவன் மனோ நிலைமை நன்றாகத் தெரிந்திருப்பதால் அவர் போதனை யவனைச் சீக்கிரத்தில் பயிற்சி யடையச் செய்கிறது.

6. முற்காலத்தில் ஒரு மாணவனுக்கு ஏககாலத்தில் ஒன்று இரண்டு பாடங்களே கற்பிக்கப்படும். அந்த நூல்கள்முடிந்த பிறகே வேறு தொடங்குவான். பையன் என்ன வாசிக்கிறான் என்றால் "நிகண்டு வாசிக்கிறான்". "நைடதம் வாசிக்கிறான்", "இராமாயணம் வாசிக்கிறான்" "குறள் நாலடியார் வாசிக்கிறான்" என்றுதான் கூறுவார்கள். அவ்வாறு வாசிப்பதால் வாசித்ததைப் பூரணமாய் வாசித்தவர்களாகிறார்கள்.

இக்காலத்தில் மாணவர்கள் ஒரேவிஷயத்தில் தங்கள் மனதை நிறுத்தும்படி செய்தால் களைப்படைவார்கள் என்று கூறி அவர்கள் மனம் குரங்குபோல் அடிக்கடி யொரு விஷயத்தை விட்டு ஒரு விஷயத்தில் தாண்டிக் கொண்டிருக்கும்படிச் செய்கிறார்கள். அந்தோ இது நம்முன்னோர் மார்க்கத்திற்கும் நோக்கத்திற்கும் நேர்மாறானது.

நண்பர்களே! மேலே நாம் கூறிய அநுகூலங்களை யெல்லாம் நீங்கள், இக்காலத்தில் கல்வி முறை யிருக்கும் நிலைமையில், அடைய முடியாதெனி

னும், ஒன்றை - மிக்க முக்கியமான ஒன்றைமட்டும் அடையக்கூடும். அதை நீங்கள் உங்கள் சுயமுயற்சியா லடையலாம் - அதனால் இம்மையிலும் மறுமையிலும் பயன்பெறலாம் - அதை வற்புறுத்திக் கூறவே மேற் கண்டவற்றை யெல்லாம் நாம் கூறநேர்ந்தது. அதுதான் மனப்பயிற்சி என்பது.

முற்காலத்தில் இதுவே முக்கியமாக மாணவர்களுக்குப் போதிக்கப் பட்டது. இது யோக சாதனத்தின் ஆரம்பப்பயிற்சியுமாகும். மேல் நாட்டார் மனதின் தன்மையையும் பெருமையையும் அறியார்கள். மனதிற்கு மேற்பட்ட நிலை யொன்றுண்டென்பதை யவர்க ளறியார்கள். ஆகையால் அவர்கள் மனதை ஒரு இடத்தில் நிலைக்கச்செய்வதன் நன்மையை யுணராது அதை யடிக்கடி மாறச்செய்யும் முறைமையைப் போதிக்கிறார்கள். மாணவர்மனம் ஒரேவிஷயத்தில் நிலைத்திருந்தால் களைப்படையும் என்று கருதுவது முற்றுந்தவறு. அது அனுபவத்திற்கு மாறான கருத்தாகும்.

ஒரு சிறுவன் ஒரு வேடிக்கையைப் பார்க்கிறான், அல்லது கோலியோ பந்தோ ஆடுகிறான் என்று வைத்துக்கொள்வோம். அக்காலங்களில் அவன் மனநாட்டம் நெடுநேரம் ஒரேவிஷயத்தி லிருக்கிறது. களைப்படைவது மில்லை, ஆயாசமடைவது மில்லை. ஏன் ? அவ்விஷயத்தில் அவனுக்கு உற்சாகமும் ருசியும் தோன்றுகின்றன. ஆகையால் மாணவர்களுக்கு ஒரு கல்வியில் விருப்பமும் உற்சாகமு முண்டாகும்படி செய்துவிட்டால் ஒரே விஷயத்தில் மனம் நிலைத்திருக்கச் செய்வதால் ஒரு கெடுதியுமில்லை.

முற்காலத்தில் அவ்வாறு பயிற்சிசெய்து வந்தார்கள். அதில் தேர்ச்சி யடைந்தோர் சிலர் ஒன்றை யொருமுறை வாசிப்பதாலேயே அது மனதில் நிலைத்திருக்கச் செய்துகொள்ளக் கூடிய சக்தி பெற்றிருந்தார்கள். ஒரு நூல் முழுமையும் ஒரேமுறை வாசித்தால்,பூரணமாய் அது மனதில் பதிந்துவிடும். அவர்கள்தான் ஏகசந்தக்கிராகிகள் என்போர். அவ்வாறே இருமுறையே வாசிப்பதால் மனதில் பதியச்செய்து கொள்வோர்க்கு துவிசந்தக்கிராகிகள் என்று பெயர்.

நண்பர்களே ! நீங்கள் மனப்பயிற்சி செய்யுங்கள். அதனால் பெரும் பயனடைவீர்கள். உங்கள் பாடங்களைச் சுலபமாய் மனதில் பதியச்செய்து கொள்வதோடு இவ்வுலக விவகாரங்களிலேயே எவ்வளவோ காரியங்களில் அபூர்வ உதவி பெறுவீர்கள். உங்கள் பாரமார்த்திகத்திற்கோ இது இன்றியமையாப் பேருதவியாகும். மனதை யொரு இடத்தில் நிலை நிறுத்தப்பழகும் அப்பியாச வாயிலாகவே ஞானாருளைப் பெறலாகும். இப்பழக்கத்தைத் தினந்தோறும் இடைவிடாமல் செய்யவேண்டும். இதனால் உங்கள் இலௌகிக விஷயங்கள் ஒன்றுமே தடைப்பட வேண்டிய அவசியமில்லை. இப்போதனையை யலட்சியம் செய்யமாட்டீர்க ளென்று நம்புகிறோம். சச்சிதானந்தப் பரம்பொருள் உங்கட்கு நல்லருள் புரியப் பிரார்த்திக்கின்றோம்.

ஓம் தத் ஸத்.

சீடன்.

———

## தபால் கொள்ளைக்காரர்கள்.

(119-ம் பக்கத் தொடர்ச்சி.)

இதனால் அந்த ஆள் கற்களை யெடுக்க வெடுக்க உள்ளிருந்து வரும் வேதனைச்சத்தம் கனறுய் அவன் செவிகளில் விழுந்தன. அவன் மிக்க உற்சாகத்தோடு கஷ்டப்பட்டு யாவற்றையும் எடுத்து வெளியிலெறிந்துவிட்டுக் கடைசியில் கஷ்டத்தோடு அப்பலகைகளை யெடுத்து விட்டுப் பிறகு சொல்லொணுக் கஷ்டத்தோடு ஆனந்தஸிங்கை வெளியிற் கொண்டுவந்தான். ஆனந்தஸிங் இன்னும் ஸ்மரணை யில்லாமலே யிருக்கிறுன்.

வெளியிலிருந்த காற்று தாராளமாய் வீசவே ஆனந்தஸிங் சற்றுநேரத்திற்குள் ஸ்மரணை யடைந்தான். ஒரு பெருமூச்சுவிட்டு மெதுவாய் எழுந்து உட்கார்ந்தான். நாற்புறங்களிலும் விழித்துப் பார்த்தான். எதிரிலிருக்கும். ஆளைப்பார்த்தான்.

“ நான் எங்கே யிருக்கிறேன் ?...ஆ ! குடிசையண்டை உள்ளே யெட்டிப் பார்த்துக்கொண் டிருந்தேன். ஆம். ஆ! என் தலைமேல் யாரோ அடித்தார்கள்—யார் அடித்தது ? ” என்றுன்.

அந்த ஆள்:—“ அக்கள்ளரில் ஒருவன் அடித்தான் ” என்றுன்.

ஆனந்த:—அப்புறம் என்ன நடந்தது ?

அந்த ஆள்:—“அப்புறம் அவர்கள் உன்னை யிக்கிணற்றில் போட்டு மேலே கல் முதலியவைகளைப் போட்டுப் பேர்பாதி மூடிவிட்டார்கள்: அவர்கள் சென்றபின் நான் உன்னை வெளியி லெடுத்தேன் ” என்றுன்.

ஆனந்தஸிங்.—“ஆ நீயா என்னைக் காப்பாற்றினுய். நீ யார்?” என்றுன்.

அம்மனிதன்.—“ஆனந்தஸிங் ! நான் உனக்குத் தெரிந்தமனிதனே. நான் அம்பலவாணன் ” என்றுன்.

இதைக் கேட்டதே யானந்தஸிங் மிக்க வியப்பும் சந்தோஷமுமடைந்து, “ அம்பலவாணு! நீ யெப்படி இங்குவந்தாய் ? நான் கிணற்றில் போடப்பட் டிருந்தது உனக்கெப்படித் தெரிந்தது ?” என்றுன்.

அம்பலவாணன்:—நான் இங்குவந்த போது ஆட்கள் சந்தடிகேட்டது—யாரென்றும் தெரியாமல் அதோ அந்த மரங்களின் நிழலில் மறைந்து கொண் டிருந்தேன். சிலர் இக்குடிசைக்குள் நுழைந்து நெகிடித்தீ யெரித்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் யாரென்று எனக்கு விளங்கவில்லை. பேசாமல் பார்த்துக்கொண் டிருந்தேன்—சுமார் அரைமணி நேரங்கழிந்து ஒருவன் குடிசையி லிருந்து வெளியில் வந்தான்; பிறகு ஒருவன்வந்து பலகைகளின் சந்தில் எட்டிப் பார்த்தான். திடீலென்று ஒருவன் அவன் பின்னுல் மறைந்து வந்து அவன் மண்டைமே லடிக்க அவன் கீழே விழுந்து விட்டான்.

அடிபட்டவன் யாரென்ருவது அடித்தவன் யாரென்ருவது எனக்கு ஒன்றும் விளங்கவே யில்லை. பிறகு அக்கள்ளர் உன்னை யிக்கிணற்றில் தள்ளியபோது அவர்கள் பேசிக்கொண்டதால் நீ தபால் இலாகா துப்பறிபவன் என்று தெரிந்தது. அப்போது நான் என்செய்வது. உன்னைக்கொன்று புதைத்து விடுகிருர்களென்று நினைத்துக் கொண்டேன். அப்போது நான் வெளிவந்திருந்தால் ஒருவர் இருவரையேனும் கொன்று விட்டே யிருப்பேன். ஆனல் உடனே யென்பிராணன் போவது நிச்சயம். அதைவிடப் பின்னல் இதைசுருசுப்படுத்தி யுன் மரணத்திற்குப் பதிலாய் பூரணமான வஞ்சம் தீர்த்துக்கொள்வதே நலமென்று பேசாம லிருந்தேன்.

அக்கள்ளர்கள் சென்றதே வந்து கிணற்றைப் பார்த்தபோது நீ மரண மடையவில்லை யென்று தெரிந்தது. பிறகு உன்னை வெளியிலெடுத்தேன்" என்ருன்.

ஜக்கன் தான் மிக்க பலமாயடித்ததாய் எண்ணிக்கொண்டான். ஆனல் இருட்டில் அவன் அடித்த அடி மண்டைமேல் நேராய்ப்படாமல் சரிவாய்ப் பட்டதை யவன் கவனிக்கவில்லை. ஆனந்தஸிங் எப்போதும் தன் உட்சட்டைக்குள் மிக்க நாணயமான கவசமணிந்திருப்பது வழக்கம். இரங்கநாதன் அதன்மேலிருக்கும் சட்டைமேல் கைவைத்துப் பார்த்ததால் ஆனந்தஸிங்கின் இருதயம் துடிப்பதை யுணரவில்லை.

ஆனந்தஸிங் அம்பலவாணனை நோக்கி "அம்பலவாண! கடவுளே உன்னைக்கொண்டு என்னைக் காப்பாற்றினர். என்னுயிருள்ளவரையில் இந்த வுதவியை நான் மறக்கமாட்டேன். கள்ளர் எத்திக்கில் சென்ருர்கள்?" என்ருன்.

அம்பல:—எப்படிப்போனர்களோ நான் பார்க்கவில்லை. உன்னை இக்கிணற்றில் போட்டதே போய்விட்டார்கள்.

ஆனந்த:—"அட்டா! எல்லாம் நேர்மாருகப் போய்விட்டன. இவ்வாறு முடியுமென்று நான் கனவிலும் நினைக்கவில்லை. ஆயினும் கடவுள் கூடிய சீக்கிரத்தில் என்னைப் பழைபமனிதனக்கி விடுவார். அப்புறம் — சாமிநாதா! இரங்கநாதா...பத்திரம் பத்திரம்" என்று கூறிவிட்டு அம்பலவாணனை நோக்கி "நண்பனே! நாம் இந்த ஈரபூமியில் நெடுநே மிருக்கலாகாது. என் தேகஸ்திதிக்குக் கெடுதியாய் முடியும். அப்பா! என் தலை யின்னும் நோகிறது. சற்றுநேரத்திற்குள் எழுந்து நடப்பேன். சீக்கிரம் எங்காவது தங்க வசதியான விடம் தேடிக் கொள்ளலாம்" என்ருன்.

அம்பல:—ஏன்! என் தாய் தந்தையர் இருக்குமிடம் சமீபத்திலேயே யிருக்கிறது. அங்கு போய்விட்டால் எனக்கும் இப்போ பயமில்லை. ஏனெனில் நான் இப்போது அங்கு இருப்பேனென்று நினைக்கமாட்டார்கள்.

சற்றுநேரங்கழித்து இருவரும் அவ்வாறே சென்ருர்கள். ஆனல் ஆனந்தஸிங்குக்குப் பட்ட உட்காயங்கள் சாமான்ய மானவையல்ல. அதனல் அவனுக்குக் கொடிய சுரங்கண்டு பிராணுபத்தான நிலைமை யடைந்து,

சுமார் ஒருமாதம் படுக்கையில் கிடக்க நேர்ந்தது. கடைசியில் மிக்க ஜாக்கிரதையான பார்வையாலும் சிகிச்சை யுபசாரத்தாலும் சுகமடைந்து ஒரு நாள் எப்போதும்போல் புதுமனிதனுகி வெளியிற் புறப்பட்டான்.

* * * * *

* * * *

இதற்கிடையில் சாமிநாதன் மெயில் ஏஜெண்ட் வேலையிலேயே யிருந்துகொண்டிருக்கிறான். இரங்கநாதன் கலவரமானமனதோடு அங்குமிங்கு மலைந்துகொண்டு கோமளவல்லியை யெங்குங்காணுது மிக்க வியாகுலப்பட்டுக்கொண் டிருக்கிறான். அவனுடைய முக்கிய விரோதி மடிந்துபோய்விட்டதாய் அவன் நம்பிக்கொண்டிருந்தாலும் அக்கன்னிகை யகப்படாதது அவன் மனதிற்குப் பெருந்திகிலை யுண்டாக்கிக்கொண் டிருந்தது. தன் வாழ்நாளின் முடிவிற்கும் அவளுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருப்பது போல் அவன் மனதில் தோன்றி யிருந்தது. ஒருநாள் அவன் சாமிநாதனை நோக்கி, “ நண்பனே ! நாம் ஒரு பெரிய அஜாக்கிரதை செய்துவிட்டோம். இப்போது நமது வழிகளையெல்லாம் ஒழுங்குபடுத்திக்கொண்டோம். நமது முக்கிய விரோதியை யடியோடொழித்துவிட்டோம்; அதெல்லாம் சரிதான். நம்மேல் இருந்த சந்தேகத்தையும் இப்போதொழித்துவிட்டோம். ஆயினும் அந்தப்பெண்ணைக்கண்டுபிடித்து நம் வசத்தில் கொண்டுவராமலிருப்பது பெருங்குறை” யென்றான். (தொடரும்)

—— ஆரணி-குப்புசாமி முதலியார்.

## முக்கிய அறிவிப்பு.

1. ஆனந்த போதினி பழையவருடச் சஞ்சிகை ஒன்றிரண்டு வேண்டுவோர் சஞ்சிகை 1க்கு 3 அணு வீதம் அனுப்பிப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

2. ஐந்துபேர்—பத்துப்பேர் புதுசந்தாதாரர்களைச் சேர்ப்பவர்களுக்குப் பரிசளிப்பதென்று நாம் விளம்பரம் செய்திருப்பது நண்பர்கள் அறிந்த விஷயமே. ஏககாலத்தில் அத்தனை சந்தாதாரர்களைச் சேர்ப்போர்க்கே பரிசளிக்கப்படு மென்றறிய வேண்டும்.

3. சந்தாதாரர்களுக்குக் குறிப்பிட்டபடி குறைந்தவிலையில் புத்தகம் அனுப்பும்படி எழுதுவோர் சந்தாநம்பரைக் குறிக்கவேண்டும். அப்படிக்கின்றி “நான் சந்தாதாரன்” என்றுமட்டும் எழுதிவிட்டால், குறைந்த விலைக்கு அனுப்பப்படமாட்டாது.

## பொது சமாசாரங்கள்.

1. இங்கிலாந்தில் சராசரி ஒரு மனிதன் வரும்படி ரூ. 801. இந்தியாவிலோ ரூ. 2 | 8—0.

மேல்நாட்டார் நாகரீகஆசாரங்களைப் பின்பற்ற விரும்பும் புத்திசாலிகள் தயவுசெய்து இதைக் கவனிக்க விரும்புகிறோம்.

---

## பிழை திருத்தம்.

144-ம் பக்கத்தின் முடிவில் உள்ள “தீன தயாளு” என்ற பெயர் தவருய் அங்கு விழுந்திருப்பதால் அதை எடுத்துவிடக் கோருகிறோம்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

துந்துபிஞு கார்த்திகைமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
பசலி 1331—கோல்லம் 1097-98—ஹிஜரி 1340—41
இங்கிலீஷ் 1922ஞு நவம்பர்மீ—டிசம்பர்மீ

| கார்த்திகை | நவம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வியா | த்வ21-23 | அஸ்-16-3 | சித்-60 | கரிநாள் |
| 2 | 17 | வெ | திர13-40 | சித்-10-13 | சித்-60 | பிரயாணம் விலக்கல் |
| 3 | 18 | சனி | சது5-58 | சுவா-4-18 | சித்-60 | சர்வத்திர அமாவாசை |
| | | | ● 58-28 | விசா-58-40 | | |
| 4 | 19 | ஞா | பிர51-58 | அனு-53-50 | மர-60 | மார்க்கசிரசுத்தம் |
| 5 | 20 | திங் | துதி46-25 | கேட்-50-5 | சித்-60 | கரிநாள் |
| 6 | 21 | செ | திரி42-28 | மூல-48-0 | அ48-0சித் | மாடு, தானியம் வாங்க |
| 7 | 22 | புத | சது40-5 | பூரா-47-35 | அமி-60 | கணிதாரம்பம் |
| 8 | 23 | வியா | பஞ்40-13 | உத்-49-23 | சித்-60 | தனுசாயனம் நா-2-55 |
| 9 | 24 | வெ | சஷ்43-30 | திரு-53-3 | ம-53-3சி | சஷ்டி, சம்பாசஷ்டி |
| 10 | 25 | சனி | சப்46-15 | அவி-58-33 | சி58-33அ | மித்ரசப்தமி, கரிநாள் |
| 11 | 26 | ஞா | அஷ்51 43 | சதை-60-0 | சித்-60 | பிரயாணம் விலக்கல் |
| 12 | 27 | திங் | நவ58-10 | சதை-5-25 | சித்-60 | மந்திரம் ஜெபிக்க, மாடு முதலானவை வாங்க |
| 13 | 28 | செ | தச60 | பூரட்-13-8 | ம13-8 அ | |
| 14 | 29 | புத | தச4-55 | உத்-21-0 | சி21-0மர | இரவில் தனியநாள் |
| 15 | 30 | வியா | ஏகா11 23 | ரேவ-28-23 | சி28-23அ | சர்வஏகாதசி, மத்வஏகா |
| 16 | 1 | வெ | து17-2 | அசு-34-52 | அ34-52சி | பிரதோஷம் |
| 17 | 2 | சனி | திர21-30 | பர-40-8 | சி40-8அ | கரிநாள் |
| 18 | 3 | ஞா | சது24-38 | கிரு-44-8 | சித்60 | கார்த்திகை தீபம் |
| 19 | 4 | திங் | ○ 26-23 | ரோ-46-53 | அ46-53 சி | சீமந்தம், விவாகம் |
| 20 | 5 | செ | பிர26-48 | மிரு-48-20 | சி48-20 ம | மார்க்கசிரபகுளம் |
| 21 | 6 | புத | து26-10 | திரு-48-53 | சித்60 | |
| 22 | 7 | வியா | திரி24-35 | புன-48-33 | அ48-33 சி | |
| 23 | 8 | வெ | சது22-13 | பூச-47-35 | மர60 | |
| 24 | 9 | சனி | பஞ்19-18 | ஆயி-45-55 | ம 45-55அ | |
| 25 | 10 | ஞா | சஷ்15-43 | மக-43-48 | ம43-48சி | |
| 26 | 11 | திங் | சப்11-35 | பூர-41-3 | சித்-60 | |
| 27 | 12 | செவ் | அ 6-58 | உத்-37-53 | அ37-53சி | |
| 28 | 13 | புத | நவ1-50 | அஸ்-34-10 | ம-34-10சி | |
| | | | தச56-18 | | | |
| 29 | 14 | வியா | ஏக50-28 | சித்-30-10 | சி30-10அ | ஸ்மார்த்த ஏகாதசி |
| 30 | 15 | வெ | து44-28 | சுவா-25-55 | சித்60 | வைஷ்ணவ ஏகாதசி |
| | | | | | | தனுர்ரவி19-20 |

1922ஞு டிசம்பர்மீ

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| | 8உ விரு-பு<br>16,,கும்-செ<br>27,,தனு-பு | | |
| செ | | | |
| | சூரி சுக் | குரு புத | ராகு சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15 VENKATESA MAISTRY ST., MADRAS.

உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 8 } துந்துபி௵ கார்த்திகைமீ ௧உ { பகுதி 5
1922௵ நவம்பர்மீ 16உ

## கடவுள் வணக்கம்.

1. கல்லாத வறிவுமேற் கேளாத கேள்வியுங்
கருணைசிறி தேது மில்லாக்
காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாய்க்
காதலித் திடுநெஞ் சமும்
பொல்லாத பொய்ம்மொழியு மல்லாது நன்மைகள்
பொருந்துகுண மேது மறியேன்
புருஷர்வடி வானதே யல்லாது கனவிலும்
புருஷார்த்த மேது மில்லேன்
எல்லா மறிந்தநீ யறியாத தன்றெனக்
கெவ்வண்ண முய்வண் ணமோ
இருளையிரு ளென்றவர்க் கொளிதா ரகம்பெறு
மெனக்குநின் னருடா ரகம்
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தேயிந்த
வஞ்சகனை யாள நினையாய்
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே.

2. குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம்
புலமி லான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்து
மிலமி லான்மைந்தர் மனைவியில் லானெவ னவன்சஞ்
சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே.

3. கடத்தை மண்ணென வுடைந்தபோ தோவிந்தக் கருமச்
சடத்தைப் பொய்யென விறந்தபோ தோசொலத் தருமம்
விடத்தை நல்லமிர் தாவுண்டு பொற்பொது வெளிக்கே
நடத்தைக் காட்டியெவ் வுயிரையு நடப்பிக்கு நலத்தோய்.

## அரும்பொருள் விளக்கம்

1. புருஷார்த்தம்=புருடன் அடையவேண்டியது. அறம், பொருள், இன்பம், வீடு என்று புருடார்த்தங்கள் நான்கெனப்படும்

எல்லாமறிந்த நீ=சர்வக்ஞனாகிய நீ

நின் அருள் தாரகம்=(உன்னைச் சரணாகதியாக அடைந்த எனக்கு) உன் திருவருளே ஆதாரமாகும்

வல்லா னேனும் பெய...யாள நினையாய்=நீ சர்வவல்லமையுடையவனாக இருக்கிறாய். வஞ்சகனாகிய அடியேனை யாண்டருள நினைக்க வேண்டும்.

2. குலமிலான்=இன்ன குலம் இன்ன ஜாதி யென்ற பேதமற்றவன்

குணமிலான்=குணவேறுபாடில்லாதவன். அதாவது காமம், குரோதம், பொய், சூது, பொறாமை முதலிய ஒரு குணவேறுபாடுமின்றி சதா ஒரே சாந்த சொரூபமாய் விளங்குபவன். அவனை யின்ன குணமுடையவன் என்று பகுத்துரைக்க முடியாது

குறியிலான்=பெயர் முதலிய அடையாள மொன்று மில்லாதவன்

குறைவிலான்=இன்னது வேண்டு மென்ற இச்சை யில்லாதவன்—நிராசை யுடையவன்

கொடிதாம் புலமிலான்=கொடிதாகிய புலன்களின்வழியே மனதோடுசென்று விஷயங்களைப் பற்றாதவன். சதா சாக்ஷிமாத்திரமாயிருப்பவன்

தனக்கென்ன ஓர் பற்றிலான்=என்வீடு, என்பிள்ளை, என்பொருள், என்தேகம் என்றவை போன்ற எவ்விதப் பற்றுமில்லாதவன்—புறப்பற்றை யடியோடொழித்தவன்

பொருந்தும் இலம் இலான்=இன்ன இடத்தில்தான் வசிப்பது, தங்குவது என்ற நியதியற்றவன்—அதாவது தேசபரிச்சேதமற்றவன்

மைந்தர் மனைவி யில்லான்=குடும்பப் பற்றில்லாதவன் (இவ்வாறுளவன் உளனோ அவன்)

சஞ்சலமிலான்=மனச்சலன மற்றவன்

(மேற்கூறப்பட்ட இலட்சணங்கள் பரமசிவத்தினிடத்திலும், பிரம்மான்ம ஐக்கிய நிலையாகிய சமாதி நிலையிலேயே சதா இருக்கும் முற்றத் துறந்த ஞானியினிடத்திலுமேயுள—மமதை, அகந்தை யிவைகளின் காரியங்களினின்றும் விடுபட்டு சச்சிதானந்த சொரூபமாய் விளங்குவதில் பிரம்மஞானி பிரம்மமே என்று சுருதிகூறுவதாலும், பிரம்மஞானியைத் தரிசித்தோர் திரிமூர்த்திகளையும் தரிசித்தோராவர் என்று கூறப்பட்டிருப்பதா

லும் அத்தகைய இலக்ஷணங்களை யுடையவன் சலனமற்றவ னுவதோடு அவனைப் பரமசிவன் எனத்தகும் என்றார்.

3. போற்போது வெளி=பொன்னம்பலமாகிய சிதாகாசவெளி
நடத்தைக்காட்டி=நடனம் செய்து காட்டி

பொன்னம்பலத்தில் பரமசிவம் செய்யும் தாண்டவம் பஞ்சகிருத்தியத் தாண்டவமாகும்:—

(1) உடுக்கை=சிருட்டி, (2) அணைத்தகரம்=திதி, (3) மழு=சங்காரம், (4) மிதிக்கும் பதம்=திரோபவம், (5) தூக்கியபதம்=அநுக்கிரகம்.

"நடத்தைக்காட்டி எவ்வுயிரையும் நடப்பிக்கும் நலத்தோய்"— ஆண்டவன் செய்யும் பஞ்சகிருத்தியத் தாண்டவமே உலகில் பஞ்சகிருத்தியங்களும் இடைவிடாது நடந்துகொண் டிருப்பதற்குக் காரணமாதலின் அவ்வாறு கூறினர். ஆண்டவன் அவரவர்கள் உள்ளமாகிய சிதாகாசத்தில் நடனம் புரிந்துகொண்டே அவரவர்களை அவரவர் வினைவழியே உலகமாகிய மேடைமேல் ஆட்டிவைக்கிறான்.

(நாமறியாதபடி நமது உள்ளமாகிய சிதாகாயத்தில் நர்த்தனம் புரியும் பரம்பொருளை யுள்ளத்தில் தரிசிக்கவேண்டும் என்பதை யறிவிப்பதற்கே பொன்னம்பல மென்னும் சிற்சபையில் பரமசிவம் நடனம் புரிகிறார் என்றறியவேண்டும்).

---

# ஆனந்தபோதினி

துந்துபிஹ கார்த்திகைமீ கஉ

## உயர்ந்த நாகரீகம்

இப்போது உலகில் தற்சமயம் எதை யுயர்ந்த—மேலான— சீர் திருத்தமடைந்த நாகரீகம் என்று கூறுகிறார்கள்? அவ்வாறு கூறப்பட்ட நாகரீகத்தின் உண்மை நிலைமை யெப்படி யிருக்கிறது என்பதைச் சற்று கவனித்துப் பார்ப்போம். கொஞ்சக்காலத்திற்கு முன்வரையில் ஆசியாகண்டமே நாகரீகமற்ற கண்டமாகக் கருதப்பட்டது. இந்தியராகிய நாம் அநாகரீகமான ஜனங்களென்று கருதப்பட்டு வந்தோம்.

இப்போது ஆதி முதல் நம்நாடே நாகரீகத்தில் சிறப்புற்று விளங்கியிருந்த தென்று யாவரும் அறிந்துகொண்டு அவ்வாறே ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் இப்போது நாம் நாகரீகத்தின் உயர்படியி னின்றும் இறங்கிவிட்டோ மென்றும், இனி நாம் நாக ரீகத்தில் சீர்திருத்த மடையவேண்டு மென்றும் கூறுகிறார்கள். அதோடு உலகத்தில் இப்போதுள்ள நாகரீகத்தில் மேல்நாட்டு நாகரீகமே முதல் தரமான தென்கிறார்கள். நம்மவரிலேயே சிலர் மேல் நாட்டு நாகரீகத்தையே நாம் கைப்பற்ற வேண்டு மென்கிறார்கள். மேல் நாட்டு மதஸ்தரில் சிலர் கிருஸ்துமதமே நாகரீகத்திற்கும் செல்வத்திற்கும் காரணம் என்கிறார்கள். ஆலோசித்துப்பார்த்தால் இவற்றில் உண்மையில்லை யென்பது நன்கு விளங்கும்.

நாகரீகம் என்பது எது என்ற உண்மையை நோக்கும் பட்சத்தில் நமது பூர்வீக நாகரீகம் ஓடிப்போய் விடவில்லை யென்றும், இப்போது நாம் அநாகரீகராய் விடவில்லை யென்றும் நன றாய் விளங்கும்.

அவ்வாறே நமது நாகரீகம் இப்போது பிரகாசிக்காததற்குக் காரணம், நாம் செல்வத்தில் குறைந்து தரித்திர சிகாமணிகளாய் விட் டிருப்பதோடு தேசபக்தியும் ஒற்றுமையும் குன்றி சுயமதிப் பை யிழந்திருப்பதே என்று விளங்கும். மேல்நாட்டு நாகரீகம் உயர்ந்ததென்று கொண்டாடப்படுவதற்கும் செல்வமே காரணம். அப்படிக்கொண்டாடும் நம்மவர்கள், அவ்வாறு கொண்டாடுவதும் அந்த நாகரீகத்தைப் பின்பற்றுவதுமே கௌரவம் என்றும், அப் படிச் செய்தால் மேல்நாட்டாரிடம் நமக்குச் செல்வாக்குண்டாகு மென்றும் கருதுகிறார்கள். ஆசார ஈனர்களாய் தமோகுண சுபா வத்தால் மதுமாமிசாதிகளைப் புசிக்க ஆசைப்பட்டு எத்தனையோ பேர் தாங்கள் விசாலமான மனதோடு நாகரீகத்தைச் சீர்திருத்து வதற்காக ஜாதிக் கட்டுப்பாட்டை யொழித்துவிட்டதாகக் கூறு கிறார்கள்.

மதத்தால் நாகரீகமும் செல்வமும் உண்டாயிற்றென்பது பெருந்தவறே யாகும். மதத்திற்கும் செல்வத்திற்கும் ஒரு சம்பந் தமுமில்லை. மதம் கடவுளை யடையும் மார்க்கத்தைக் காட்டுவதாத லின், அதற்கு மார்க்கம் என்றே பெயர். மதம் "கடவுளையடைய நீ விரும்பினால் உலகபோகங்களிலும் செல்வத்திலும் உள்ள ஆசையை யறவே யொழிக்கவேண்டும். இன்றேல் ஆண்டவன் அருள்கிட்டாது" என்று போதிக்கிறது. ஆனால் இக்கலிகாலத் தில் செல்வத்தாலும் செல்வாக்காலும் மதம் பிரகாசிக்கிறது என லாம். மேல்நாட்டாருக்குச் செல்வம் மதத்தால் வரவில்லை. வர்த் தகத்தாலும் தந்திர சாமார்த்தியங்களாலும் வல்லமையாலுமே

செல்வம் வந்தது என்பது வெளிப்படையா யாவருமறிந்த விஷய மாகும்.

கலிகாலத்தில் யாவும் தலைகீழ் பாடமாக விருப்பது சுபாவமே யாதலின்—மனிதர் உள் விஷயத்தை யறியாமல் வெளித் தோற் றத்தையே கண்டு நாகரீகமென மகிழ்ச்சி யடைகிறார்கள். மேல் நாட்டார் மேஜைமேல் சீலைவிரித்து அதன்மேல் பாத்திரங்களில் ஆகாரத்தை வைத்து முள் கரண்டிகளால் எடுத்துப் புசிக்கிறார்கள் என்றும் அதுவே நாகரீகமென்றும் நாம் தரையில் உட்கார்ந்து கையால் அள்ளிப் புசிப்பது அநாகரீகமென்றும் சிலர் கூறுகிறார் கள். சில அறிவாளிகள் அதோடு நிற்காமல் உடற்சட்டை கால் சட்டை பாதரட்சையோடு வீட்டிலிருந்தும் பாத்திரத்தில் வரும் ஆகாரத்தை மேஜைமேல் அப்படியே வைத்துக்கொண்டு புசிக்கி றார்கள். மறுபடி அவர்கள் "நாங்கள் உயர்குல ஆரிய சிகாமணி கள், பறையன் எங்கள் கிட்ட வரலாகாது" என்கிறார்கள்.

மேல்நாட்டார் கரண்டிமுள்ளால் சாப்பிடுவது நாகரீகத்தா லல்ல. அவர்கள் தேசாசாரமே யதற்குக் காரணம். ஆதியில், அதாவது இரண்டாயிர மூவாயிர வருடங்களுக்குமுன் மேல்நாட் டார் மாமிசம் மச்சம் கிழங்கு முதலியவைகளை மட்டும் அவித்தும் சுட்டும் பச்சையாகவுங்கூட அருந்திவந்தார்கள். நமது நாட்டாரில் மாமிச மச்ச பட்சணிகள் அவற்றைச் சிறு துண்டுகளாக்கிப் பல வித மசாலாக்கள் சேர்த்து நன்றாய் வேகச்சமைத்தே யுண்கிறார் கள். மேல்நாட்டாரோ ஒவ்வொரு துடையை யப்படியே அனலில் வாட்டி பாதிவேக்காட்டில்(Half Roast)நாளைக்கும் உண்கிறார்கள். இக்காரணத்தால் அவர்களுக்குக் கத்தியும் முள்ளும் வேண்டியது அவசியமாயிற்று. கிராமாந்தரங்களில் நாளைக்கும் பெரு விருந்து களில் ஆடு மாடு பன்றி முதலிய மிருகங்களை இரண்டு மூன்றே துண்டுகளாக்கித் தீயில் வாட்டி (சில இடங்களில் உப்பில்லாமலே கூட) உண்கிறார்கள்.

காய்களை யப்படியே முழுசாக அவித்து உப்பு, ஒரு சமயம் கொஞ்சம் மிளகுத்தூளும், தூவி உண்கிறார்கள். இன்றேல் மாமிசத் துண்டுகளோடு போட்டு அவித்து உப்புத்தூள் சேர்த்து (Soup) அருந்துகிறார்கள். வேறு விதமில்லை.

இதைப்பற்றி யதிகமாய்க் கூறுவது அனாவசியம். இப்போது இந்த இரண்டில் மேல் நாட்டார் உண்பது நாகரீகமா நமது நாட் டார் உண்பது நாகரீகமா என்பதை யறிவாளிகளே சிந்திக்க லாகும். மேல் நாட்டு நாகரீகத்தால் நம் நாட்டில் உண்டா யிருக் கிற வித்தியாசங்களைக் கவனித்துப் பார்த்தால் அதனால் நன் மையா தீமையா வென்பது நன்கு விளங்கும். மேல் நாட்டு ரீதி

யாகிய கல்வியால்கூட பல கெடுதிகள் உண்டாகிறதெனின் மற்ற விஷயங்களைப்பற்றிக் கூறவேண்டிய தின்றும்.

இதற்குக் காரணம் என்னவெனில், மேல் நாட்டார் மத விஷயங்களை மிகச் சுருக்கிவிட்டு உலக போகங்களை யனுபவிப்பதையே பிரதானமாகக் கொண்டிருக்கிறார்கள். ஏசுக்கிருஸ்துவின் போதனைகளைப் புத்தகத்திலேயே கட்டி வைத்துவிட்டார்கள். அம்மகான் கொலை செய்யாதே என்றால், அவர்கள் மனிதன் தவிர மற்ற ஜீவன்களைக் கொல்வது பாபமல்ல, மனிதனைக் கொல்வது மட்டுமே பாபம் என்று வியாக்கியானம் செய்துகொண்டார்கள். இப்போது அதையும் தள்ளிவிட்டு, "உன் விரோதிக்கும் நன்மையே செய்," "அவன் கெடுதி செய்தாலும் நீ பதிலுக்குச் செய்யாதே" என்று அம்மகான் கட்டளையிட்டுப் போயிருக்க, அவர்கள் குறைந்த காலத்தில் பல்லாயிரக் கணக்கான மனிதரைக் கொல்வதற்குத் தங்கள் சாத்திர ஆராய்ச்சியையும் புத்தியையும் உபயோகித்து விஷக்காற்றுகளை யுண்டாக்கி நாடு நாடாய் அப்படியே அழித்துவிட வழி கண்டுபிடிக்கிறார்கள். ஜனங்கள் பாபங்களைச் செய்யாதபடி அவர்களைப் பாதுகாக்கவேண்டியது அரசன் கடமை. கிருஸ்துமத இராஜாங்கங்களே யிப்போது மேல் கண்ட மாதிரி ஏககாலத்தில் இலக்ஷக் கணக்கான மனிதரைக் கொல்ல வழி கண்டு பிடித்துக்கொண்டிருக்கின்றன.

அமெரிக்காவிலுள்ள சுதேசிகள் விஷம் வைத்த அம்பால் தங்கள் எதிரிகளைக் கொல்வதால் அவர்கள் சுத்த அநாகரீகமான காட்டு மிராண்டிகள் என்றும், போயர் சண்டையில் சில போயர்கள், தேகத்தில் நுழைந்ததும் வெடிக்கும் ஒருவித குண்டுடைய தோட்டாக்களை யுபயோகித்தார்கள் என்றும் அவர்கள் கிருஸ்து மதத்திற்கு மாறாக நடக்கும் கொலைபாதகர்களென்று தூஷித்த இந்த மேல் நாட்டு இராஜாங்கங்கள் இப்போது விஷப் புகையாலும், விஷ நீராலும் ஜனங்களை இலட்சக்கணக்காய் மாய்க்கத் துணிந்திருக்கின்றன.

அவர்களுடைய குருமார்களோ தங்கள் ஜனங்கள் தமது மதக் கோட்பாடுகளுக்கு முழுதும் மாறாக நடந்து, பூமி பொன் அதிகாரம் இவற்றிலுண்டான பேராசையால் உலகிற்கே யழிவைத் தேடிப் பெரும் பாபத்திற் காளாகிறார்களே யென்பதைச் சிந்தித்து, அவர்களை நல்வழிப் படுத்துவதை விட்டு, கொல்லர் தெருவில் ஊசிவிற்க முயல்வதுபோல் ஜீவகாருண்யமே அஸ்திவாரமாகவுடையதும் பூரண மானதுமாகிய மதத்தை யனுசரிப்போர்க்கு மத போதனை செய்ய வருகிறார்கள். கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லா ஜீவர்களிடத்திலும் அன்பு காட்டி யொழுகுவது நாகரீகமா? அழிந்துபோகும் மண், பொன் முதலியவற்றிற்காக

ஜன சமூகத்தைக் கொன்றழிப்பது நாகரீகமா? மானிட வர்க்கத்தைச் சேர்ந்த யாவரும் ஒரே கடவுளின் மக்கள் என்பதையுணர்ந்து எல்லோரையும் சகோதரராய்ப் பாவித்து, பிறர் க்ஷேமத்தைக் கருதி, யார்க்கும் நன்மையே புரிந்து வாழ்வது நாகரீகமா? அல்லது "நம் ஜாதியே மேலோங்கி வாழவேண்டும். நம் ஜாதியே செல்வம் பெறவேண்டும், அதிகாரம் செய்ய வேண்டும்; மற்ற ஜாதியை நம்மினும் தாழ்ந்ததாய்க்கருதி நடத்தவேண்டும்'' என்று கருதித் தம்மவரையெல்லா விஷயங்களிலும் மேன்மையாகவும், பிறரைத் தாழ்மையாகவும் நடத்துவது நாகரீகமா?

கிடைத்த வரையில் திருப்தி யடைந்து நம்மால் பிறருக்கு எவ்வித வருத்தமும் நேராது நடந்து கொள்வது நாகரீகமா? பேராசை கொண்டு அதைத் திருப்தி செய்ய நம்மிலும் வலி குறைந்தவர்களை யழித்து நாம் மேலேறக் கருதுவது நாகரீகமா?

தண்டிக்க வல்லமை யிருக்கும் போதே நமக்கு ஒருவர் தீங்கு செய்தாலும் பொறுமையோடு அதினின்று விலகிக்கொள்ளும் சாந்த குணம் நாகரீகமா? அல்லது நெல்லாலடித்தவனைக் கல்லாலடிக்கும் மிருகத் தன்மையான கொலைக்கஞ்சாத தமோ குணம் நாகரீகமா?

மது மாமிசாதிகள் சுருட்டு முதலிய தமோகுண வஸ்துக்களையுபயோகிப்பது நாகரீகமா? அல்லது காய்கனி கிழங்கு தானியம் முதலிய சத்துவ பதார்த்தங்களை யருந்தல் நாகரீகமா?

கடவுளிடத்தில் பக்தி செலுத்தி நித்திய பதவியாகிய பேரின்பத்தை யடைய முயல்வதையே நாம் இந்த ஜன்மத்தில் செய்ய வேண்டிய முக்கிய வேலையாகக் கருதுவது நாகரீகமா? அதை யலட்சியம் செய்துவிட்டு, அநித்தியமாகிய உலக சிற்றின்ப போகங்களை யனுபவிப்பதையே நாம் ஜன்மமெடுத்ததன் பயனாகக் கருதி நடப்பது நாகரீகமா?

உலக வாழ்க்கைக்கு முக்கியமான உணவுப் பொருள்களும் உடையும் தாராளமாய் இருக்கும் வண்ணம் செய்துகொண்டு மனதிற்கு அதிக அலைச்சலும் ஆவலும் உண்டாகா வண்ணம் நிம்மதியோடு காலத்தை ஈசுர சிந்தனையில் கழிப்பது நாகரீகமா? அளவு கடந்த செல்வத்தையே கோரி, உணவுக்கும் ஆடைக்கும் கஷ்டப்பட்டுக்கொண்டு மனதிற்கு முடிவில்லா அலைச்சலையும், மேலும் மேலும் அவாக்களையும் உண்டாக்கிக்கொண்டு ஒரு விநாடிகூட மனதிற்கு ஓய்வளிக்காமல், வாழ்நாளைக் குறைத்துக் கொண்டு அந்தகனுக் காளாவது நாகரீகமா? அறிவாளிகள் இவற்றைச் சிந்தித்தால் உண்மை விளங்கும்.

மேல்நாட்டு நாகரீகத்தால் நமக்குண்டா யிருக்கும் பயன்களில் சிலவற்றை மட்டும் கூறுகிறோம் :—

1. நமது சிறுவர் நமது ஆசாரங் குன்றி துராசாரங்களில் பழகுகிறார்கள். நமக்குரிய ஈசுரபக்தி, தெய்வ வழிபாடு முதலிய சற்கிரியைகள் குன்றி, உலகபோகங்கள் ஒன்றிலேயே நாட்ட முடைய உலகாயத நடையில் திரும்புகிறார்கள். மிக்கசிறு வய துடையவர்களும் பகிரங்கமாய் பீடி—ஸிகாரெட் பிடிப்பதும், பெரியோரிடம் மரியாதையின்றி நடப்பதும் சாதாரணமாய் விட் டது. அதிலும், மேல்நாட்டு முறையில் கல்விகற்கும் சிறுவர்களி டமே அவை பெரும்பாலும் காணப்படுகின்றன. சுதேச வர்த்த கர்களிடம் வேலைசெய்யும் சிறுவர்களிடமும், சுதேசபாஷை கற் பிக்கப்படும் பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் சிறுவர்களிடமும் இத் தகைய துர்ப்பழக்கங்களைக் காண்பதரிது. அப்பழக்கத்தாலுண் டாகும் கெடுதியை நாம் கூறவேண்டியதில்லை. அவை யாவரு மறிந்தவையே.

2. உலக அநுபவமும், நாமும் நமது தாய்நாடும் முன்னி ருந்த நிலைமையும், இப்போதிருக்கும் நிலைமையும், நாம் எவ்வாறு முன்னேற்ற மடையலாமென்ற மார்க்கமும் ஒன்றுமறியாத நிலை மையிலிருக்கும் சிறுவர்களுக்கு வெளித்தோற்றத்தால் நாகரீக மயக்கம் ஏறுவதால், சுதேசவஸ்துக்களிலும், நம்நாட்டில் செய்யப் பட்ட சாமான்களிலும் பிரியங்குன்றி அன்னியநாட்டுப் பொருள் களிலேயே விருப்பம் அதிகமாகிறது. இதனால் மிகக் குறைந்த வருமானமுடைய நமக்குச் செலவதிகமாவதோடு நாம்செலவழிக் கும் பணமும் அன்னியநாடுகளுக்கே செல்ல, நமதுநாட்டு விவ சாயம் கைத்தொழில் முதலியவை குன்றித் தரித்திரம் மேலிடுகி றது. இவ்வாறு சென்றுகொண்டேயிருந்தால் முடிவில் நமதுகதி அதோகதியே.

மற்ற நாட்டாரெல்லாம் தங்கள் நாட்டின் க்ஷேமத்தில் கண் ணும் கருத்தும் வைத்துத் தங்கள் நாட்டுப்பொருள் எவ்வளவு தாழ்ந்தநிலைமையி லிருந்தாலும் அதையே சிலாக்கியமாகக் கொள் கிறார்கள். நமது நாட்டார்க்கோ முக்கியமாய் நமதுநாட்டில் உற்பத்தியான ஆடையை அணிவதே எட்டிப்பழம் புசிப்பது போலிருக்கிறது. அந்தோ இது எவரிட்ட சாபமோ? எப்போ துதான் இந்த வெட்கக்கேடான குணமும் நடக்கையும் நம்மவரை விட்டொழியுமோ! கடவுளே! கடவுளே!

மேல்நாட்டு நாகரீகத்தில் மயக்கங்கொண் டிருக்கும் நண்பர் கள் இனியேனும் கண்விழித்து, தாய்நாட்டின் க்ஷேமத்தைக் கருத்தில் வைத்து நடப்பார்கள் என்று நம்புகிறோம். பரம்பொ ருள் அருள் புரியப் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.

---

## தாயை மறப்பது தர்மமா.

சைவசமயமே சமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவக் திடவே மன்றுள்வெளி காட்டு மிந்தக் கருத்தை விட்டுப்
பொய்வக் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே.

இந்து சகோதர சகோதரிகாள்,

எந்நாட்டிற்கும் நன்னாடென விளங்கும் புண்ணிய பூமியாகிய பரத கண்டத்திலும் ஈழநாட்டிலும் வாசம் செய்யா நின்ற நமது குலத்தினரின் சைவச் சிறுவர் சிறுமிகளை மிலேச்ச மதகண்டத்தின் சங்கங்களால் ஸ்தாபிக்கப் பட்டிராநின்ற வித்தியாலயங்களுக்கு ஆங்கிலம், திராவிடம் முதலான பாஷைகளைக் கற்குமாறு அனுப்பிவைப்பது என்னமதியோ? அறிகிலேன். அந்தோ! இவர்களின் கூற்றை என்னென்றுரைப்பேன். கையில் வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கலைகின்றவன் றன்மைபோ லிருக்கின்றதன்றோ.

நமது யாழ்ப்பாணநாட்டின்கண் "யாழ்ப்பாண இந்துக் கல்லூரியும்" இன்னும் எங்கள் கல்வித்தடங்கடலாகிய கன்னய விற்பன்னரும் ஔதாரிய புருஷரும் ஆண்டொழில் மன்னரும் அஞ்சாநெஞ்சரும் ஆகியகலியுக இராம னென எவராலும் புகழ்ந்தோதப்படும் கௌரவம்சேர் இராமநாதன்துரை அவர்களால் திருநெல்வேலியில் "பரமேஸ்வர கல்லூரியும்" மருதனுமடத் தடியில் பெண்களுக்காக "இராமநாதன் கல்லூரியும்" இன்னும் பல சைவாபிமானிகளால் மானியம்பதியில் "மானிப்பாய் இந்துகல்லூரியும்" சுளிபுரத்தில் "விக்டோரியா கல்லூரியும்" இன்னும் ஆங்காங்கு சைவ பாடசாலைகளும் விளங்காநிற்க அவைகள் எல்லாவற்றையும் அலட்சியம் செய்து நமது மதத்தையும் மாந்தரையும் கவர்ந்து கொள்ள வழிபார்த்துக் கண்ணுங் கருத்துமாய் நிற்கும் பெரும் பூதங்களாகிய விஷநரிமார்களின் மோசத்திற்கு அகப்படும் வண்ணமாக"யானை தன்னைக்கட்ட சங்கிலி தானே எடுத்துக்கொடுத்த வாறதுபோலும்" "சன்னப்பன் வீட்டுக்கோழி தானே விலங்குமாட்டிக் கொண்ட சீலம்போலும்" தங்கள் உதிரக்கனிகளாகிய புத்திரர்களைப் பறிகொடுத்து விட்டுப் பின்பு தயங்கி மயங்கிப் புலம்பி நிலை குலைந்து கலங்கி நிற்கும் மதியீனம் என்னவோ? அம்மம்ம! இம்மட்டோ? நமது பிள்ளைகள் ஆசார முறைப்படி சிவ சின்னங்களாகிய விபூதி, உருத்திராக்ஷம் முதலியவைகளை அணிந்து சென்றால் அப்பாடசாலைகளிலுள்ள, கிறீஸ்தவ உபாத்திமார்கள் ஏ, பிள்ளாயே, உன் நெற்றியில் மாட்டின் சாணத்தா லுண்டாகிய சாம்பலை என் வீணாகப் பூசிக்களிக்கிறாய் என்றும், விக்கிரக ஆராதனையினால் யாதுபயன் என்றும் வீண்பேரவி பயங்க ளெடுத்துக்காட்டி மருட்டி வெருட்டி எங்கள் கிறீஸ்துவை நம்பினால் இரட்சிப்படையலா மென்றும் பூரண அறிவில்லாச் சிறுவர் சிறுமிகட்குச் சிற்

சில மதபோதனைகளைப் புகட்டித் தீராத துன்பவலையில் மாட்டி மயக்கி மந்திரோபதேசம் செய்யப் புகுந்த பரமாசாரியார்களின் கள்ளத்தனங்களைப் பல்லாயிரமுறை பார்த்தும் கேட்டும் இன்னும் மூடமதிகொண்டிருப்பது பெரும் சஞ்சலத்திற் கிடமே. அந்தோ! இம்மட்டோ சைவப்பிள்ளைகளை உபாயமா யிழுத்துப் பள்ளிக்கூட விகிதமின்றியும் புத்தகங்கள் இனாமாயீந்தும் அவர்களுக்குரிய சொந்தப் பெயர்களை மாற்றியும் மேலத்தேசத்து நாமங்களைச் சூட்டியும் தங்கள் மதத்தின் ஸ்தூல சூக்ஷ்ம தாற்பரியங்கள் இன்னதெனத் தெரிந்திராத இப்பிள்ளைகளின் பெற்றோருக்குச் சொற்பப் பொருளுதவி புரிந்தும் உத்தியோகம் கொடுத்தும் இடையிடையே அன்னவரின் வீடுகடோறும் சென்று தொப்பியைக் கழற்றிக் கக்கத்திலிடுக்கிக்கொண்டு புன்னகையுடன் காலை வந்தனம் (Good morning) ஐயா காலைவந்தனம் (Good morning) அம்மா என்ற உபசார வார்த்தைகள் மொழிந்தும் "கிறீஸ்துவை நம்பினுலென்ன" என்னும் சிற்சில பசப்புவார்த்தைகளைப் பாஷித்தும், எங்கள் ஆலயத்திற்கு ஆதிவாரங்கடோறும் வாருங்கள் என்றன்புட னழைத்தும், அரும்பெரும் ஆசனங்கள் அளித்தும் கைலாகு கொடுத்தும், ஒருவர்க்கொருவரை பரிச்சியம் செய்வித்தும் இன்னும் இவைகளைப் போன்ற பல்லோரையும் பாழுங்குழிக் கிழுத்துவிட்டாழ்த்தப் பன்னலம் கொழிக்கும் பாதிரிமார்களின் பாங்கை இப்பாருலகில் அறியாதார் உளரோ?

சகோதர சகோதரிகளே! கூலிக்கு மாரடிக்கும் போலி விவிலிய போதகர்களை நம்பாதேயுங்கள்! நம்பாதேயுங்கள்!! நம்பாதேயுங்கள்!!! ஓ இப்பூமண்டலத்தில் வாழும் சிங்கங்காள்! உங்களைப் போலி ஆட்டுக்குட்டிகளெனத் தாழ்த்தி விடாதேயுங்கள்!!

காகமுறவு கலந்துண்ணக் கண்டீ ரகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமா
யேகவுருவாய்க் கிடக்கு தையோ வின்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேர வாருஞ் சகத்தீரே.

(என்றார் தாயுமானவர்)

ஆகவின் சைவாபிமானிகளே "எழுமின் விழிமின்" இவ்விஷயத்தைப்பற்றி இன்னும் எழுதப்புகின் இதில் இடம் பெறாதன்றோ. இன்னும் ஒரேவார்த்தை; இனியாகுதல் எங்கள்மதாசாரியர்களாகிய அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருஞான சம்பந்தர் முதலான பெரிய மகான்களும், மங்கையர்க் கரசியாகிய பெண்கள் நாயகமும் எடுத்துக்கொண்ட முயற்சியும் அபார கருணாநிதியாகிய ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளும் நமது பரிசுத்த வேதமாகிய இந்து மதத்தை பல்லாயிரம் மைலுக்கப்பால் சென்று பரவுதல் செய்யும் பொருட்டாய் எடுத்துக்கொண்ட அரும்பெரும் கைங்கரியங்களும் நாம் அறிந்த விஷயங்கள் தாமே. ஆகவே இன்னும் நாம் கண்களை

மூடிக்கொண்டு சும்மா இருப்பது அழகாமோ? எங்கள் பிள்ளைகளை சைவ பாடசாலைகளுக் கனுப்பி மத ஆசாரங்களைப் படிக்கவும் அவைகளை அனுஷ்டானத்திற்கு இடையறாது கொண்டுவரவும் பாமரஜனங்களுக்கு எங்கள் இந்து சமயத்தின் பெருமையைப் புகட்டவும் முயற்சி யெடுப்பது எங்கள் இன்றியமையாத கடனன்றோ. சுபம்

சு. செல்வநாயகம்
"தேவாலய தர்ஸனம்," கண்டி.

---

## சுயபாஷைக் கல்வியின் மஹிமை

தாய்ப் பாஷையின் கௌரவம் தெரிந்துதான் காந்திமஹான் அவர்கள் 6½ கோடி ஜனங்கள் பேசும் ஹிந்திபாஷையை நம்முடைய இந்தியாவுக்குப் பொதுப்பாஷையாய் (lingua franca) வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், எழுதுவதற்கு தேவநாகர எழுத்துகளும், உருது எழுத்துகளும் முறையே நாமும் மஹம்மதியர்களும் உபயோகப் படுத்தலாமென்றும் கூறி யிருக்கிறார். (ஹிந்திக்கு உரோமன் எழுத்துகள் உபயோகிக்கலாமென்று சிலர் சொன்னாலும் அது தேசாபி மானத்திற்கு விரோதமாகும்) நம் இந்தியாவில் சுமார் 15½ கோடி ஜனங்கள் ஹிந்திக்கு சம்பந்தப்பட்ட பல பாஷைகளைப் பேசுகிறார்க ளென்றும், நம் தென் இந்தியா திராவிட பாஷைகள் பேசுகிறவர்களுக்குத் தான் ஹிந்தி புதியபாஷை யென்றும் காந்தி அடிகள் சொல்லி இருக்கிறார். ஆனால் தென் இந்தியாவிலுள்ள மஹம்மதியர்களும் பின்னும் ஆஸியா, ஆப்ரிகா, ஐரோபா கண்டங்களில் உள்ள மஹம்மதியர்களும் ஹிந்தியைப் போன்ற பாஷையொன்று தான் பேசுகிறார்கள். ஆகையால் ஹிந்திக்குப் பல கண்டங்களில் (International) கௌரவமிருக்கிறது. மஹாத்மா காந்திக்குத் தாய்ப்பாஷை குஜராதி. அந்த பாஷைபேசும் ஒருகோடி ஜனங்களும் அவருடைய வார்த்தைக்குக் கட்டுப் படுவார்கள். அம்மாதிரியே இரண்டு கோடி மகாராட்டிரர்களும் லோக மான்ய திலகருக்கு ஐக்கியப்பட்டார்கள். பங்காளிபேசும் ஐந்து கோடி ஜனங்களும், இரவீந்திரகவி இழுத்தமாதிரிதான் போவார்கள். இவர்களுக்கு இவ்வளவு சாய்கால் இருப்பது ஆச்சரியமல்ல. இங்கிலாந்தில் லாயட் ஜார்ஜும், கனடாவில் பார்டனும், ஆஸ்ட்ரேலியாவில் ஹ்யூஸ் என்பவரும், தென் ஆப்ரிகாவில் ஸ்மட்ஸ்துரையும், அமெரிக்காவில் வில்ஸன் போன்றவர்களும் எப்படிஜனங்களைத் தங்களுடைய தேசபாஷையாகிய இங்கிலீஷில் பேசி திருப்பிக் கொள்ளுகிறார்களோ அம்மாதிரிதான் இவ்விடமும் ஏற்படுகிறது. பிரான்சில் க்ளிமென்சு துரையும் ஜர்மனியில் ஹார்ட்லிங் என்பவரும் அதேமாதிரிதான் அவர்களுடைய பாஷைகளாகிய—ப்ரென்ச்—ஜர்மனும் பேசி அவர்களுடைய ஜனங்களை வசப்படுத்திக்கொண் டிருந்தார்கள்.

இரண்டுகோடி ஜனமுள்ள தமிழர்களுக்கு டாக்டர் வரதராஜுலுநாயுடு காரும் ஸ்ரீமான் கல்யாணசுந்தர முதலியார் போன்றவர்களும் எவ்வளவு ஊக்கமும் தேசாபிமானமும் உண்டாக்கி இருக்கிறார்கள். அதே ஜனத் தொகையுள்ள தெலுங்கர்களையும் ஹரி ஸர்வோத்தமராவ் போன்றவர்கள் தேச ஊழிய உற்சாகத்தில் கிளப்பி யிருக்கிறார்கள். நம்முடைய இந்தியா வில் 1000 க்கு 5 பேர்தான் படிக்கத் தெரிந்தவர்கள். அதிலும் 1000 க்கு 5 பேர்களுக்குத் தான் இங்கிலீஷ்பாஷை தெரியும். ஆகையால் அந்தப் பாஷையில் பேசுவது செவிடன்காதில் சங்கூதினது போலும், குருடனுக் குக் கண்ணாடி காட்டியது போலும் ஆகும். நம் தேசபாஷையில் பேசி னால் நிரக்ஷரகுக்ஷியானாலும், குருடனானாலும் தெரிந்து கொள்ளுவான். சுதேசபாஷைப் பத்திரிகைகளை யாராவது ஒருவன் வாசித்தால் கைநாட்டு ஆசாமிகளாக விருந்தாலும் அதைக்கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் !! நாம் இங்கிலீஷ் பாஷையில் பிரஸங்கம், நம்முடைய ஜனங்களுக்கோ அல்லது வெள்ளைக் காரர்களுக்கோ செய்யும்போது நமக்கு ஒரு மாதிரி தலைத் திருப் பம் வந்துவிடுகிறது. அதேமாதிரி தான் வெள்ளைக்காரர்கள் நம்மிடம் பேசும் போதும் அவர்களுக்கு ஒருமாதிரி அலட்சியம் ஏற்பட்டு விடுகிறது. அதாவது ஊமையோ, குருடனோ படிப்பது பரிதாபத்துடன் கூடிய ஆச் சரியம்போல் நாம் இங்கிலீஷ் பாஷை சுமாராய்ப் பேசுவது புதிதான சங் கதியாய் நமக்கும் அவர்களுக்கும் இருக்கிறது! ஆனால் நாம் நம் தாய்பாஷை யில் பேச ஆரம்பித்தால் எல்லா ஜனங்களுக்கும் தெரியுமாகையால் நமக்கு ஒருமாதிரி கூச்சம் உண்டாகிறது. ஒழுங்கான வார்த்தைகளும் விசேஷ மான விஷயங்களும் இல்லாவிட்டால் நம்முடைய தேசபாஷை பிரசங்கத் தைச் சனங்கள் சுலபமாய் அலக்ஷியம் செய்து விடுவார்களென்று நமக்குத் தெரியுமாகையால்தான் நமக்கு அருவருப்பு உண்டாகிறது. ஆனால் இங் கிலீஷ்பாஷையில் தேர்ச்சியடைவதால் இப்போ திருக்கும் சட்டசபைக ளில் பேசி சர்க்கார் மெம்பர்களைச் சந்தோஷப் படுத்தலாம் ! (ஆனால் சுய ஆட்சிவந்தால் சட்டசபைகள் கட்டாயம் தேசபாஷைகளிலேயே தான் நடத்தப்படும்) அல்லது இங்கிலாந்துக்குப்போய் அந்த வெள்ளைக்காரர்களு க்கு நம்முடை குறைகளை பிரஸங்கம் செய்யலாம் !! (அதுவும் இலேசில் போக உத்திரவு "சாஸ்திரி" ப்போன்றவர்களுக்குத் தவிர, மற்றவர்களுக் குக் கொடுப்பதில்லை) நாம் ஒவ்வொருவரும் குறைந்தது இரண்டு பாஷைகள் பேசவும் படிக்கவும் தெரிந்து கொள்ளவேண்டும். அதாவது நம் பாஷை முதலும் இரண்டாவது நமதுதேச பொதுபாஷையான ஹிந்தியும் கற்றுக் கொள்ள வேண்டும். நமது தற்கால இராஜாங்க பாஷையும், உலகபொது பாஷையும், (International) ஆன இங்கிலீஷும் தெரிந்தாலும் நலம் தான். திராவிடபாஷைகளுக்கு இருப்பதுபோல் மற்றஹிந்தி முதலிய தேச பாஷைகளுக்கும் (ஏற்கனவே இல்லா விட்டால்) Typewriting அச்சும், Shorthand சுருக்கலிபியும் ஏற்படுத்த வேண்டும். தந்தி அடிக்கக்கூட

நமது பாஷைகளில் சின்னங்கள் கண்டு பிடிக்கவேண்டும். பிரக்ருதிசாஸ்திர (Science) புஸ்தகங்களும் பண்டித சிகாமணிகள் சேர்ந்து நமது பாஷைகளில் மொழிபெயர்த்துப் பிரசுரிக்க வேண்டும். சுதேசியக் கல்வியைப்பற்றி இப்போது விசேஷகிளர்ச்சி யிருப்பதால் அதைக்கைவிடாமல் முடிக்கவேண்டும். ஹரித்வாரத்தில் குருகுலவாஸ கலாசாலை எல்லாவிதத்திலும் சுதேசக் கல்வியைப் புகட்டுவதில் சிரேஷ்டமானது. இரண்டாவது ஸ்ரீகாசியிலும் ஒன்று (Hindu University) ஏற்பட்டிருக்கிறது. இவை இரண்டும் ஹிந்திய பாஷையே தான் (Medium of instruction) உபயோகிக்கிறது. உருது பாஷைக்கு அதாவது மஹம்மதியர்களுக்கு அலிகர் நகரிலும் ஹைதிராபாத் சம்ஸ்தானத்திலும் கலாசாலைகள் ஏற்படுத்தி இருக்கிறார்கள். வங்காள பாஷைக்கு "சாந்திநிகேதனமும்" தெலுங்கருக்கு "ஆந்திரஜாதிய கலாசாலை" என்பதும் கன்னடத்திற்கு மைசூர் ஸமஸ்தானத்தில் கலாசாலைகளும் ஏற்பட்டுள்ளன. குஜாராதி பாஷைக்கு பூனாநகரத்திலும், மாராதிக்கு பரோடா சமஸ்தானத்திலும், மலையாளத்திற்கு திருவாங்கூரிலும் அம்மாதிரி கலாசாலைகள் வெகுசீக்கிரத்தில் தாபிக்கப்படும். ஆனால் மேல் சொல்லிய கலாசாலைகள் 30 கோடி ஜனங்களுக்கு எந்தமூலை? இப்போது படிக்கத் தெரிந்த 1½ கோடிஜனங்கள் ஆளுக்கு ஒரு ரூபாய் கொடுத்தாலும் ஆகும் 1½ கோடி ரூபாயும் சுதேசகல்விக்கு முதலாக வைத்துக்கொண்டு வருஷா வருஷம் அல்லது மாதமாதம் வசூல்செய்தும் விருத்தி செய்யலாம். சுதேச கல்வியில் ஸ்திரீகளுக்கு பிரத்தியேகமாய் அவர்களுக்கு தேவையான விஷயங்கள் புகட்ட தனிக் கல்விச்சாலைகள் ஏற்படுத்தவேண்டும். தொழில் கல்விச்சாலைகளும் வேண்டும். அதாவது அன்னவஸ்திரங்களுக்கு அன்னிய தேசங்களை எதிர் பாராமல், விவசாயம், நெசவுத் தொழில்களை முக்கியமாய் கற்பிக்கவேண்டும். பிரக்ருதிசாஸ்திர ஆராய்ச்சி சாலைகளும்(Research Laboratories) அவசியம் வேண்டும். வைத்திய சாஸ்திரமும் சுகாதார விருத்தியும் கற்பிக்கும் கலாசாலைகளும் தாபிக்க வேண்டும். கடைசியில், நமது இந்தியாவிலுள்ள ஒரு இலக்ஷக் கணக்குக்கு மேற்பட்ட, ஊமை, குருடர்கள் இவர்களுக்கும் பாடசாலைகள் (Blind and Dumb Schools) ஏற்பாடு செய்ய வேண்டும் என்பது நம்முடைய பெருங்கடமை. "சரக்குமுடுக்கா? செட்டியார் முடுக்கா?" என்னும் பழமொழிபோல் இப்போது பாடசாலைகளுக்குக் கட்டிடமும் தளவாடமும் பெரிதா யிருக்கிறதே யொழிய, மாணவர்களுடைய படிப்பாவது, சங்கியையாவது, அல்லது உபாத்தியாயர்கள் சம்பளமாவது அதிகமாக இல்லை. இதற்கு முக்கியகாரணம் பரதேசநாகரீகத்தைப் புகட்டியதுதான். சுதேசகல்விச் சாலைகள் இந்தியர்களே தலைமையாக இருந்து நடத்தினால் நம் தேச நாகரீகமும், மதமும், ஆசாரமும், நோக்கங்களும் மாறாமல் நேராகவரும். சீக்கிரத்திலும் கல்விபரவும். ஒருசங்கதி பாருங்கள். இங்கிலாந்தில் "Daily Mail" என்னும் இங்கிலீஷ் தினசரிபத்திரிகைக்குச் சுமார் 20 இலக்ஷம்பேர்கள் சந்தாதாரர்களாம்! அதா

வது இங்கிலாந்தில் 4½ கோடி ஜனங்களுக்கு அவ்வளவுபேர் ஒரு பத்திரிகையைப் படித்தால் நம்முடைய இரண்டு கோடியுள்ள தமிழர்களில் "சுதேசமித்திரன்" போன்ற தினசரி தமிழ்ப் பத்திரிகைக்குச் சுமார் 9 இலக்ஷம்பேர்கள் படிக்கவேண்டும். அந்தோ, பரிதாபம்; 9 ஆயிரம்கூட இருக்காது என்று நம்புகிறேன் (இல்லையென்றே விசனிக்கிறோம்) மாதாந்திர பத்திரிகையாய் இருந்தாலும் ஆனந்த போதினிக்குச் சுமார் 20, 000 சந்தாதாரர்கள் இருப்பது சந்தோஷிக்கத்தக்கதே. மகாராட்டிர பாஷையிலுள்ள "கேஸரீ" பத்திரிகைக்குச் சுமார் 20, 000 சந்தாதார்கள் இருக்கலாமென்று சொல்லுகிறார்கள். இங்கிலீஷ் பத்திரிகை "Young Inda" இதற்கு முந்தி 40, 000 பேர்கள் வரவழைத்துக்கொண் டிருந்தார்களாம். "ஹிந்து" என்னும் தினசரி இங்கிலீஷ் பத்திரிகைக்கு 10 ஆயிரத்துக்கு உள்ளாகவே யிருக்கும் என்று சொல்லுகிறார்கள்.

இந்தப்பத்திரிகைகள் விஷயம் என்சொல்ல வந்தேனென்றால் ஜனங்களுக்கு எவ்வளவுக் கெவ்வளவு எழுதப்படிக்கத் தெரியுமோ அவ்வளவுக் கவ்வளவு, இங்கிலாந்து, அமெரிக்கா, ஜர்மனி, ஜப்பான் தேசங்களில் போல் பத்திரிகைகள் ஏராளமாகப் படிக்கப்படும், தேசவிஷயங்களும், இக்காலத்து சங்கதிகளும் கேவலம் சாமான்ய ஜனங்களுக்குக்கூடத் தாமிருக்கும் இடத்திலேயே வெகுசொல்ப செலவினாலேயே, பிரதிதினமும், அல்லது வாரம், மாதத்திலோ, பத்திரிகைகள் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம், ஆண்பெண்களுக்குக் கட்டாய இலவசபடிப்பும், எல்லாத் தேசபாஷைகளிலும் நயமான பத்திரிக்கைகள் விருத்தி செய்வதும் இந்த இரண்டு காரியங்களினால் நமதுதேசம் அதிக சீக்கிரத்தில் சுய ஆட்சியும் பிரதேசங்களில் மரியாதையும் அடையும். கடவுள் கிருபை செய்வாராக.

ய. துரைசாமி ஐயர்,
வாலாஜா.

---

## சொற் பொருள் விளக்கம்.

(113-ம் பக்கத் தொடர்ச்சி)

### பள்ளிக்கூடம்.

பள்ளிக்கூடம், பாடசாலை, வித்தியாசாலை என்பவை ஒன்றே. கல்லூரி, கழகம், கலாசாலை, யென்பவை உயர்ந்தகல்வியைப் புகட்டுதற் குரிய இடமாம். பள்ளி—பள் என்பது இசை, இசையோடு கற்பிக்கும் இடமென்பது பொருள். பாடசாலை யென்பதற்கு அப்பொருளுமாம். சிறுவர்களுக்குப் பள்ளிக்கூடத்துக்கு வரவேண்டு மென்னும் விருப்ப முண்டாகும்படி இசையோடு கற்பிக்கவேண்டு மாதலால் அந்த இடத்துக்குப் பள்ளிக்கூடமென்று பெயர் வைத்தனர்.

இசையானது எல்லாவுயிர்களையும் வசப்படுத்தும் தன்மையுடையது. அழுகின்ற குழந்தைகளையும் மகிழும்படி செய்யும். துன்பப்படுகின்ற நோயாளிகளையும் இன்புறச் செய்யும். அலைகின்ற மனத்தையும் உருக்கி ஒருக்கிப் பேரின்பத்தையும் தரவல்லது. அதன் பெருமைகள் அளவில்லன.

கல்லூரி கழகமென்பவை இமய முதலிய மலைகளில் தத்துவநூல்களைக் கற்பிக்கும் பொருட்டு ஏற்படுத்திய கலாசாலைகளாகும். கல்+உரி= கல்லூரியாயிற்று. கல்=மலை. உரி=மூளை. மலையில் வளர்க்கப்பட்டதென்பது பொருள். கல்லகம், களகம், கழகமாயிற்று. கல்லகம்=மலை. கற்பவர்களுக்குக் காற்றும், வெளிச்சமும், தூய்மையும் ஆவசியகமாதலால் உயர்ந்த மலைகளில் கல்லூரிகள் ஏற்படுத்தப்பட்டன.

## குரு.

குரு, ஆசான், ஆசிரியன், உபாத்தியாயன், இறைவன், போதகன் என்பவை ஒரு பொருட்சொற்கள்.

உபாத்தியாயர், வாத்தியார், வாத்தி எனவரும். குரு என்னுஞ் சொல்லுக்கு அறிவின்மையை நீக்குவோ னென்பது பொருள். குரு என்பது மூளையாதலால் மாணுக்கர் மனத்தில் மூளைக்கச் செய்வோ னெனலும் பொருந்தும்.

நன்ருக, குருவாழ்க, குருவேதுணை என்னும் வழக்கால் குருவின் பெருமை விளங்குகின்றது. நன்ருக = மங்களமுண்டாக. ஆசானென்பதற்கு மாணுக்கரிடத்தில் அன்புள்ளவ னென்பது பொருள். ஆதனென்பது ஆசானுயிற்று. ஆதன்=அன்பன். ஆசிரியன்=நூல்களை விரித்துக்கற்பிப்பவன். ஆசாரியன் என்பது ஆசிரியனுயிற் றெனலும் பொருந்தும். நூலாசிரியன், உரையாசிரியன், போதகாசிரியன் என ஆசிரியர் முத்திறப்படுவர்.

உபாத்தியன னென்பது உபாத்தியாயனென ஆயிற்று. உபாத்தியனன்= உதவியாக உடனிருந்து வைதிக நூல்களை ஓதுவிப்பவன். உப+ அத்தியயனன்=உபாத்தியயனன்.

இறைவன் = உயர்ந்த ஆசனத்தி லிருந்து கற்பிப்பவன். இறை+ வ்+அன். இறை = உயர்ச்சி.

போதகன்=அறிவைக் கொடுப்பவன். போதம் = அறிவு.

## மாணவன்.

மாணவ னெனினும் மாணுக்க னெனினும் வித்தியார்த்தி யெனினும் பொருந்தும். மாணவ னெனின் இசையோடு கற்பவனென்பது பொருள். மண் = இசை. அதாவது இராகம். மாணுக்க னென்பதற்கும் அப்பொருளே. கற்கின்றபடியால் பெருமை பொருந்திய நாக்கையுடையோ னெனலும் பொருந்தும், மாண்+நாக்கன். மாண்=பெருமை. வித்தியார்த்தி=

வித்தையை நாடுவோன். சிஷனென்பதும் மாணாக்கனைக் குறிக்கும். மாணவன் மனனஞ்செய்பவன் என்னும் பொருளிலும் வரும்.

## சட்டாம் பிள்ளை.

சட்டாம்பிள்ளை =உபாத்தியாயருக்கு உதவியாக இருப்பவன், மாணாக்கர்களை ஒழுங்காக நடத்துவோ னென்பது பொருள். சட்டமென்பது கலை ஞானங்களையும் அவற்றால் ஏற்பட்ட ஒழுங்கையும் குறிக்கும். சாடு என்பது சட்டமாயிற்று. சாடு = அறிவு, சாடுவர் = அறிஞர்.

சட்டமெனின் ஒழுங்குபடுத்துவது, திருத்துவது எனப்பொருள் கூறல் வேண்டும். மேல்வரிச் சட்டமென்பதனால் அறிந்து கொள்ளலாம். சட்டக்கல்வி என்றால் தருக்கம், சோதிடம், வைத்தியம், இராஜ தந்திரம் முதலிய எல்லாக் கலைகளையும் ஆழ்ந்து நுணுகி அறிந்து பேசுவதெனப் பொருள் கூறல்வேண்டும்.

## குரு விசுவாசம்.

குருவினிடத்தில் மாணாக்கர் வைக்கும் விசுவாசமெனப் பொருள் கொள்ள வேண்டும். குருவிசுவாசம் மாணாக்கர்களுக்கு ஆவசியகமானது. ஏகலைவனென்போன் குரு விசுவாசத்தினால்தான் தனுர்வித்தையில் தேர்ச்சி பெற்றான். குரு நிந்தை பஞ்சமாபாதகங்களுள் ஒன்று.

## தண்டனை.

மாணாக்கரது குற்றத்தி னளவையும். அவர் சரீரத்தின் அளவையும், வயதினளவையும், அறிவினளவையும்,பெருமையினளவையும் அறிந்து தண்டிப்பதென்பது பொருள். "அடிபடாதமாடு படியாது" "அடித்துவளர்க்காத பிள்ளையும்" "முறுக்கிவளர்க்காத மீசையும் செவ்வையாகா" "ஆணை அடித்து வளர்க்க வேண்டும் பெண்ணைப் போற்றிவளர்க்க வேண்டும்" "பிள்ளைக்கு வாத்தியாரும் பெண்ணுக்கு மாமியாரும் வேண்டும்" "அடிக்கும் ஒருகை அணைக்கு மொருகை" "பரிந்தவிடம் பாழ்" என்னும் பழமொழிகளால் தண்டனை ஆவசியக மாகின்றது. தண்டனை யென்பது கையில் பிரம்பாலடிப்பது எனப்பொருள் பட்டாலும் நல்லறிவுபுகட்டுதலும், தள்ளிவைத்தலும், நிற்கச் செய்தல் முதலியனவும் ஓர்வகை தண்டனையேயாம். இவ்வகைப்பட்ட தண்டனையைக் கோதண்ட மென்பர்.

குதண்டம் என்பது கோதண்ட மாயிற்று.

குதண்டம் = சிறுதண்டனை. கு = சிறுமை. (தொடரும்)

மாகறல். பொன்னுசாமி முதலியார்,

கெண்டி.

---

## இல்லறம்—கன்மம்.

(141-ம் பக்கத் தொடர்ச்சி)

இனி இந்தக் கன்மவிஷயத்தில் அநேக ஆக்ஷேபனைகள் எழுதப்பட்டிருக்கின்றன. அவற்றை யெல்லாம் முறையாக எடுத்துக்காட்டி அவற்றுக்கு முன்னோர் கூறிய சமாதானங்களைக் கூறுவதென்றால் இச்சிறு நூல் மிக விரியும் ஆதலால் அவற்றை யெல்லாம் விலக்கிப் பிரதான இரண்டு ஒன்றுக்கு மாத்திரம் சமாதானங் கூறிவிட்டு மேலே செல்வோம். ஏனெனில் அவற்றுக்கெல்லாம் வசிஷ்டர் பராசரர் வியாசர் முதலான ரிஷிகளும், சுகர், சௌடபாதர், ஸ்ரீசங்கராசாரியர், இராமாநுஜாசாரியார், வேதாந்ததேசிகர், விஜயிந்திரர், ஆனந்ததீர்த்தர், வல்லபர், இரேவணர், சோமநாதர், முதலிய பல மதாசாரியர்களும் செவ்வனே சமாதானங் கூறியிருக்கின்றார்கள். பிறகு அகோர சிவாசாரியார், திரிலோசனசிவாசாரியார் முதலியவர்களும் விடையளித்து இருக்கின்றார்கள். இவற்றை அவ்வவர் எழுதி வைத்திருக்கும் பத்ததிகளிற் காணலாம். இவ்வளவு பேராசாரியர்களால் புகழப்பட்ட கன்மம் பிறரது ஆக்ஷேபனைகளால் பாதிக்கப்படமாட்டா தென்பதே சித்தாந்தம்.

இனி யெடுத்துக் காட்டவேண்டியதாவது, பாபத்தால் புண்ணியம் ஒழியும் புண்ணியத்தால் பாபம் ஒழியும் என்கிறார்களே, அப்படியானால் ஒருவன் புண்ணியத்தைச் செய்து ஒரு மஹா பாதகத்தைச் செய்துவிட்டால் அப்புண்ணியம் ஒழிந்து போகின்றது. மஹா பாபங்களைச் செய்த ஒருவன் ஒரு பெரும் புண்ணிய கன்மத்தைச் செய்தால் அப்பாப கன்மமும் ஒழிகின்றது என்று காணப்படுகிறது. அங்ஙனமாயின் புண்ணிய கன்மத்தைச் செய்வதனாற் பயன் யாது? உண்டேல் அது அதிக சூட்சுமமாக இருக்கவேண்டும். அதை விளக்கிக்காட்டவேண்டு மென்பதாம்.

இனி புண்ணியத்தாற் பாபகன்மம் ஒழியுமென்றுவது பாபத்தாற் புண்ணியம் ஒழியுமென்றுவது கூறவில்லை. சில பாபகன்மங்களை பிராயச்சித்தத்தால் ஒழித்துக்கொள்ளலாமென்றும் சில பாபகன்மங்கள் புண்ணியத்தை யொழிக்குமென்றும் ஸ்மிருதிகள் கூறுகின்றன. பாபபுண்ணிய கன்மங்களின் பயன் ஒழியுமென்பதேயன்றி யக்கன்மங்களெல்லா மொழியுமென்பதில்லை. இதற்கு மாறாகப் புண்ணியபலத்தால் சொர்க்கலோகத்தை யடைந்த ஒருவன் அவன் முன்செய்துள்ள பாப பலனை யனுபவிப்பதற்குப் பூமியிற் பிறப்பான் என்றும், பாபகன்ம பலனை யனுபவிக்க நரகத்தை யடைந்த ஒருவன் மீண்டும் பூமியிற் பிறந்து அவன் செய்த புண்ணிய பலனை யனுபவிக்கிறானென்றும் புராணங்கள் கூறுகின்றன. ஸ்மிருதிகளும் கூறுகின்றன. பாபபுண்ணிய கன்மங்களிரண்டும் இருப்புத்தளையையும் பொற்றளையையும் நிகர்க்குமாதலால் இருவகைக் கன்மங்களும் பந்தமே

ய்ாமென்றும் எல்லா நூல்களும் கூறுகின்றன. ஆதலால் ஏதோ சில கன்மங்கள் ஒன்றை யொன்று ஒழிக்குமென்பதே யன்றி எல்லாக் கன்மங்களும் ஒன்றால் ஒன்று அழியு மென்பது நூல்களின் கருத்தல்ல. அவை யெவை யென்பதை ஸ்மிருதிகளில் ரிஷிகள் விளக்கி யிருக்கின்றார்கள். ஆண்டு கண்டுணர்ந்து கொள்ளலாம். சிவபூஜாதி கன்மங்களினாலுண்டாகும் பலன்களை யெவ்வகைப் பாவகர்மமும் ஒழிக்கமாட்டாவாம். ஏனென்றால், பஞ்சேந்திரியங்களையும் அடக்கி மனதை ஒருவழிப்படுத்தி ஆன்மா பரமான்மாவோடு சம்பந்தித்து நிற்க எல்லாவற்றையும் மறந்து பக்தியோக நிலையில் நின்று செய்யப்படும் சிவ பூஜாதி மஹா புண்ணியங்களை யெந்தப் பாபமும் ஒழிக்கும் சக்திபெறமாட்டாது. இப்படியே சில மஹா பாபங்களை எவ்விதப் புண்ணியமும் ஒழிக்கும் ஆற்றல்பெறாது. தேசகால வேற்றுமையால் வேறுபட்டு வாக்கு மனம் காயம் முதலியவற்றின் தொழில்களாக நின்ற அவை யொன்றை யொன்று ஒழிக்காது. இனி யோசித்தால் பாபத்தால் புண்ணியம் ஒழியப் புண்ணியத்தால் பாபமொழியாது. எவ்விடத்தும் பாபப்பலன் பெரிது. நம்மை யறியாமல் சில பாபங்கள் நேரிட்டால் அதைப் பிராயச் சித்தங்களால் ஒழிக்கலாம். சுசியாயுள்ள ஒருவன் துர்நாற்றத்தைச் சுவாசத்தால் உட்கொள்ள நேர்ந்தால், உடனே நற்காற்று வீசுமிடம் நாடிச் சென்று அந்தத் துர்க்காற்றின் சம்பந்தத்தை ஒழித்துக்கொள்வதுபோல அற்பபாபங்களை யுடனே பிராயச்சித்தத்தால் ஒழித்துவிட வேண்டும். இல்லாவிட்டால் அந்தப் பாபமலங்கள் சரீரத்தில் தங்கிக் காலாந்தரத்தில் சரீரத்தைக் கெடுக்கும். இன்னின்ன வியாதிக்கு இன்னின்ன ஔஷதம் உண்ண வேண்டுமென்று வியாதியின் கூறுபாடுணர்ந்த வைத்தியன் கூறுவான். அவன் வாக்கே அதற்குப் பிரமாணம். அதுபோல இன்ன பாவத்துக்கு இது பிராயச்சித்தமென்று ரிஷிகள் எழுதிவைத்திருக்கிறார்கள். அதற்கு அதுவே பிரமாணமாம். இதனால் கன்மங்கள் பலன் கொடாமற் போவதில்லை. இருமையிலும் பலனளிக்கும் கன்மங்கள் பலனைக் கொடுத்தே தீரும்.

இனி கன்மத்தின் பயன் அதிக சூக்குமமா யிருக்குமாதலால் அதனை விளக்கவேண்டு மென்பதைக் கவனிப்பாம். இவ்விஷயத்தில் ஒரே ஒரு விஷயத்தை யெடுத்துக் காட்டுவோம். இது முன்னர் கூறப்பட்டதாயினும் சமயம் நேர்ந்தமையால் மீண்டும் சிறிது கூறுவாம். உதயத்துக்கு இரண்டு நாழிகைக்கு முன்னுள்ளகாலம் சந்தியாகாலமென்னப்படும். அந்தச் சந்தியாகாலத்துக்கு முன் இரண்டு நாழிகை ஸ்நானகாலமாம். கிரகஸ்தர்கள் அக்காலத்தில் ஸ்நானம் செய்யவேண்டும். சந்நியாசிகளும் பெண்களும் உதயத்துக்குப்பின் ஸ்நானம் செய்யவேண்டும். நீராடினால் உடம்பிலுள்ள அழுக்கு ஒழியுமென்பது யாவரும் உணர்ந்த விஷயமாம். அது எந்த இடத்தில் எக்காலத்தில் நீராடினும் அடையக்கூடும். ஆனால் இதே காலத்

தில் ஸ்நானம் செய்வதனால் வேறு பயன் யாது என்பது கூறுவாம். சூரிய னுதித்தகாலம் முதல் சூரியகிரணத்தால் நீரெல்லாம் உஷ்ணம் அடைந்து ஆவிகிளம்பி மேனோக்கியே நிற்கும். சூரியன் மறையும் வரையில் உஷ்ணம் கொண்ட நீரெல்லாம் இரவு வரவரச் சிறிது சிறிதாக உஷ்ணம் குறையப் பெறும். எத்தனை காலம் உஷ்ணம் படிந்ததோ அதே கால அளவை உஷ் ணம் நீங்கவும் வேண்டும். ஆதலால் பகற்காலத்தில் குளிர்ச்சியுள்ள நீர் கிடைப்பதரிது. இரவில் உஷ்ணம் காணப்படுவதில்லையாயினும் உஷ்ண மெல்லா மொழிந்து தண்ணீர் தன் இயற்கை நிலைமையையடைய அக் காலம் வரைக்கும்பிடிக்கும். தண்ணீரின் இயற்கை நிலைமையாவது அமிர்தத் தன்மையாம். அவ்வமிர்தத்தன்மை நெடுநேரம் நிலைத்து நில்லாது, ஒரு நாழிகைக்கெல்லாம் மறுபடியும் உஷ்ணம் பரவ வாரம்பிக்கு மாதலா லென்க.

அதற்குமுன் எழுந்திருந்து கடவுள் தியானத்தால் மனதைச் சுத்தி செய்துகொண்டு நிர்மல சித்தமுடையவனாய் நிர்மலமான நீரில் ஸ்நானம் செய்வதனால் உள்ளங்கால் முதல் உச்சி வரையிற்படிந்த மலமொழிந்து சரீ ரம் நிர்மலப்படும். கண்குளிரும். பித்தம் சமப்படும். அன்ன சேஷங்கள் ஜீர ணிக்கும். வாதம் கிளம்பும். சுறுசுறுப்பும் பலமுமுண்டாகும். குளிர்ச்சி மிகுதியால் சரீரசந்திகளில் கபம் உறைந்து அவை பலப்படும். முத்தோ ஷங்களும் சமப்படும். அதனாற் சரீராரோக்கியமுண்டாகும். முத்தோ ஷங்களும் ஏற்றத் தாழ்வாயிருப்பதே நோயென்றும், அவை சமப்பட்டு நிற்பதே ஆரோக்கியமென்றும் வைத்திய நூல்கள் கூறுகின்றன. சரீர அழுக்கு நீங்கி வேர்வை வெளிப்படுமாதலால் தேகம் மினுமினுப்படையும். இரத்தம் சுத்தியாம். இரவில் வெளிப்பட்ட மலங்கள் புலன்களில் தங்கி யிருக்கும். அம்மலம் சூரிய கிரணம்பட்டால் உலர்ந்துபோம். உலர்வதற்கு முன் சுத்த ஜலத்திற் கழுவிவிட்டால் அவைகள் நிர்மலமாய் நல்ல வேலை களைச்செய்ய உபயோகமாகும். காலையில் ஸ்நானம் தவறாமல் செய்பவர்க் குக் கண்ணொளி சீக்கிரம் மழுங்காமலிருப்பதும் பிரத்தியட்சமாகும். தேக பலமும் குறைவதில்லை. இரவில் தண்ணீரைச் சுத்தமான பாண்டத்தில் வைத்து கண்ணைக் கழுவினால் பலவகையான நேத்திர ரோகங்கள் தீரு மென்பது வைத்தியநூல் விதியாம். பல்தேய்த்து முகம் கழுவுவதும் இதை யனுசரித்ததே யாம். பிராதக்காலத்தில் ஸ்நானம் செய்கிறவர்களுக்கு இவை யெல்லாம் அநாவசியமாம்.

இத்தகைய நோய்கள் சில ஔஷதங்களாலும் நீங்கக்கூடுமே யெனில் இயற்கையாகச் செய்யவேண்டிய ஸ்நானத்தினால் ஒழியக்கூடிய இதனைச் செய்யாமல் பிறகு ஔஷதம் தேடி யலைவது உசிதமாகுமா? ஔஷதத்தி னால் நீங்குவதுமுண்டு, நீங்காததுமுண்டு. இந்த ஸ்நானத்தினால் ஒழிவது நிச்சயம். இக்கன்மத்தின் பயன் இது என்று வெளிப்பட்டது. இனி காலை

ஸ்நானத்தினால் புற அவயவங்கள் சுத்தியாவதுபோலவே நீரின் அமிர்த குணம் மயிர்க்கால் வழியாகப் பிரவேசித்து உள்ளுறுப்புகளையும் சுத்தியாக்கும். இதனால் நிர்மல சித்தமுண்டாகும். பாபத்தில் மனம் செல்லாது கடவுளைச் சிந்திக்கத்தக்க நிலைமையை யடையும். அதனால் ஞானமும் உண்டாகும். இவற்றால் அடையும் பயன் அளவற்றன. இது சூக்குமப்பயன். இதுகாரணம் பற்றியே ரிஷிகள் எல்லாரும் தீர்த்தயாத்திரை செய்தார்கள். தர்மபுத்திரர் பாபத்தினின்றும் விடுபடுவதற்காகவே அவரைத் தீர்த்தயாத்திரை செய்ய ஏவினான் மஹேந்திரனென்று பாரதம் கூறுகின்றது. ரிஷிகளெல்லாரும் பிராதஸ்நானம் தவறாமல் செய்து வந்ததினாலேயே இஷ்டார்த்த சித்திகளை யடைந்து சிறப்புற்றார்களென்று எல்லா நூல்களும் கூறுகின்றன.

(இன்னும் வரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்

(148-ம் பக்கத் தொடர்ச்சி)

அர்ச்சுனன்:—அந்தப் பிரம்ம வித்தாகிய ஞானியும் மோக்ஷப் பிரயத்தனம் செய்யும்போது இந்திராதி தேவதைகள் பல இடையூறுகளைச் செய்வார்களன்றோ. அவற்றை நீக்கும் பொருட்டு அத்தேவதைகளுக்கு ஆராதனை முதலிய கருமங்களைச் செய்ய வேண்டாமோ?

பகவான்:—ஏ அர்ச்சுன! ஆன்மஞான மடையும் முன்னர்தான் அத்தேவதைகள் விக்கினம் செய்யக்கூடும். ஆன்மஞான மடைந்த பின்னர் மோக்ஷமடைவதில் அவர்கள் விக்கினம் செய்யக்கூடியவர்களாகார்கள்.

[மோக்ஷப் பிரயத்தனத்தில் ஏழுபடிகளுண்டு. அவைகளுக்கு ஞான சத்த பூமிகள் என்றுபெயர். அவை:—1. சுபேச்சை, 2. விசாரணை, 3. தநுமானசி, 4. சத்துவாபத்தி, 5. அசம்சத்தி, 6. பதார்த்தபாவனை, 7. துரியம் என்ற ஏழுபூமிகளாம்.

"புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சை விசா ரணையிரண்டாம் பூமியாகும்
நலதநுமா னசிமூன்றும் பூதிசத்து வாபத்தி நாலாம் பூமி
சொலுமசம்சத் திப்பேரும் பதார்த்தபா வனைப்பேரும் துரியப் பேரும்
மலினமறு மகனேயைந் தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர்."

(கைவல்லியம்)

இவற்றுள்,

1. சுபேச்சை—நித்தியா நித்திய வஸ்து விவேகம், இகலோக பரலோக போகங்களில் விராகம், சமாதி சட்சம்பதியாகிய இச்சாதன வாயிலாய் மோக்ஷமடைய வேண்டும், அதாவது ஞானத்தை யடையவேண்டும் என்ற திட இச்சையுண்டாதல் சுபேச்சை.

2. விசாரணை—குரு முகத்தில் சாத்திரங்களைச் சிரவணம் செய்வதும் அவற்றின் அர்த்தங்களை மனனம் செய்தலும் விசாரணையாம்.

3. தநுமானசி—முன் இரண்டு பூமிகளின் அப்பியாசத்தால் மனம் ஒருமைப்பட்டுச் சாதனையால் ஆன்மாவைச் சூக்குமமா யறியும் சவிகற்ப சமாதி நிலையடைந்து முன்னுள்ள மலினவாசனை யொழிதல் தநுமானசியாம்.

4. சத்துவாபத்தி—மூன்று பூமிகளின் அப்பியாசத்தால் புறவிடையங்களின் நாட்டமொழிந்த சத்துவமனத்தின் கண் ஆன்ம சாக்ஷாத்காரம் உதித்தல்—(அதாவது ஆன்மதரிசனம் பெறுதல்) சத்துவாபத்தியாம்.

அசம்சத்தி—மேல் கண்ட நான்கு பூமிகளின் அப்பியாச வலியால் பிரமமான்ம ஐக்கிய நிலையடைந்து அஞ்ஞானமும் அதன் காரியங்களும் தோன்று தொழிதல் அசம்சத்தி.

6. பதார்த்தபாவனை—திரிபுடி நீங்கி அத்துவிதமான ஆனந்தமுண்டாகும் நிர்விகற்ப சமாதி நிலையே பதார்த்த பாவனையாம்.

7. துரியம்—அந்தப் பிரம்ம சாக்ஷாத்கார நிலையாகிய மோன நிஷ்டையில் இருந்தபடி நிலைத்திருத்தல் துரியமாம்.

இந்த எழுபூமிகளில் முதல்மூன்று பூமிகளிலு முள்ளோர் அப்பியாசிகளாகும், முத்தரல்லர். இந்த மூன்று பூமிகளிலும் பல பேதமாகிய உலகம் தோன்றிக்கொண்டே யிருக்கும். ஆதலின் இது சாக்கிரம் என்று கூறப்பட்டது. நான்காவது பூமியடைந்தவனே ஞானமடைந்தோன். இந்த நான்காவது பூமியில் உலகம் கனவுபோல் பொய்யாய்த் தோற்றும். ஆதலின் சத்துவாபத்தி சொப்பனவஸ்தை யெனப்படும். 4, 5, 6, 7 இந்த நான்குபூமிகளும் ஜீவன் முத்தரின் நான்கு பேதங்கள் அதாவது படிகளாம்.

நான்காவது பூமியை யடைந்தவன் பிரம்மவித் என்றும், ஐந்தாவது பூமியை யடைந்தோன் பிரம்மவரன் என்றும், ஆறுவது பூமியையடைந்தோன் பிரம்மவரியா னென்றும், ஏழாம்பூமி யடைந்த ஜீவன் முத்தன் பிரம்மவரிட்ட னென்றும் கூறப்படுவார்கள்.

ஐந்தாவது பூமியில் அஞ்ஞானத்தின் காரியங்கள் தோன்றுவாதலின் ஐந்தாவது ஆறுவது ஏழாவது பூமிகளில் உலகத் தோற்றமில்லை—ஐந்தாவது பூமியைச் சுழுத்தியென்றும் ஆறுவது பூமியைப் பெருஞ்சுழுத்தியென்றும், ஏழாவது பூமியைத் துரியமென்றும் கூறப்பட் டிருக்கிறது. ஐந்தாவது பூமியிலுள்ள பிரம்மவரன் சமாதி நிலையினின்றும் தானே பிராரப்த வலியால் வெளிக் கிளம்புவான். ஆறுவது பூமியிலுள்ள பிரம்மவரியான் பிறர் தூண்டுதலால் பகிர்முகத்திற்கு வருவான்—ஏழாவது பூமியிலுள்ள வரிட்டன் தானாகவும் பகிர்முகப் படான், பிறர் தூண்டினாலும் பகிர்முகத்திற்கு வரான். ஆறுவது ஏழாவது பூமிகளில் நிலைத்து நிற்பது பிராரப்த

வலியின் அளவைப் பொருந்தியதாகும். மிகக்குறைவான பிராரப்த போக முடையோரே அவற்றில் நீடித்திருக்கக் கூடும்.

இவர்களில் முதல் மூன்று பூமியிலுள்ளவர்கள் கருமத்தைச் செய்ய வேண்டியவர்கள். நான்காவது பூமிக்கு வந்த பிரம்மவித்தே கர்மத்தைச் செய்யவேண்டிய அவசியமில்லை யென்றால் அதற்கு மேற்பட்ட ஐந்து ஆறு ஏழுபூமிகளி லுள்ளவர்களைப்பற்றிக் கூறவேண்டியது அவசியமின்றாம்.]

பகவான் பின்னும் கூறுகிறார்:—"இக்காரணங்களால் ஏ அர்ச்சுனா! நீயும் கர்மபலத்தில் இச்சையற்றவனாய்ச் செய்யத் தக்கனவாகிய யுத்தாதிகருமங்களைச்செய். உனக்கு முன்னிருந்த க்ஷத்திரிய அரசர்களும் இவ்வாறே நிஷ்காமகர்மாநுஷ்டானத்தால் சித்த சுத்தியடைந்து அத்துவாரா ஞானநிஷ்டையை யடைந்தனரே யன்றிக் கர்மத்தைத் தியாகம் செய்துவிட்டு ஞானத்தை யடையவில்லை. அத்தகைய அரசர்கள் யாரெனின் சனகன், அஜாதசத்துரு, அசுவபதி, பாகீரதன் முதலிய மன்னர்களேயாகும். ஆதலின் உலக சங்கிரக நிமித்தம், அதாவது உலகில் தருமத்தை நிலைநிறுத்தி அதருமத்தை யொழிப்பதன் காரணமாக நீ நித்தியகருமங்களைச் செய்தே தீர வேண்டும்.

நான் அக்கருமங்களைச் செய்வதால் உலகோரும் எப்படிச் செய்வார்கள் என்று சங்கிப்பையாயின் கூறுகிறோம் கேட்பாயாக. அரசன் முதலிய மேலோர் எக்கருமத்தைச் செய்கிறார்களோ அதையே அவர்கள் ஆணைவழி யொழுகும் கீழோரும் செய்வார்கள். மேலோர் பிரமாணமாகக் கொண்டதையே மற்றையரும் கொள்வார்கள். மற்றையர் சத்கருமங்களைச் செய்யும் பொருட்டு அரசர் முதலியமேலோர் அவற்றைச் செய்யவேண்டும்.

ஏ பார்த்த! அதற்கு நானே திருட்டாந்தமாக விருக்கிறேன். இத்திரி லோகங்களிலும் செய்யவேண்டிய காரியம் எனக்கு ஒன்றுமேயில்லை, நான் அடையவேண்டியவைகளாவது அடையத்தகாதவைகளாவது ஒன்றுமேயில்லை. இப்பூவுலகத்தோர் சத்கருமங்களைச் செய்து க்ஷேமமடையும் பொருட்டே கருமங்களைச் செய்துகொண்டிருக்கும் என்னைப்பார். நான் கருமங்களைச் செய்யா திருப்பனேல் நான் செய்யாத சத்கருமங்களை கர்மத்திற் கதிகாரிகளான சகலரும் செய்யாது விடுவார்கள். அதனால் வருணாசிரம தர்மங்கெட்டு யாவரும் அழிவார்கள்.

ஆகையால் நீ ஞானியாயினுங் கூட, அஞ்ஞானிபோல் போக இச்சையோடுங் கூடிக் கருமங்களைச் செய்யாமல் உலக நன்மையின் பொருட்டாக நிஷ்காம சிந்தை யுடையவனாய் உனது கருமங்களைச் செய்வாயாக" என்று கூறினார்.

ஞானியும் அஞ்ஞானியைப் போன்றே கர்மங்களைச் செய்யின் இருவர்க்கும் பேதமென்னையோ என்னும் அர்ச்சுனனது சங்கைக்குப் பகவான் பின்வருமாறு அருள்கிறார்:—

ஏ பார்த்த! அஞ்ஞானி, நான் இன்ன கருமத்தைச் செய்கிறேன் இன்ன போகத்தைப் புசிக்கிறேன் என்ற உணர்ச்சியோடு கருமங்களால் அடையும் பலனில் இச்சைவைத்தவனாய்க் கருமங்களைச்செய்கிறான். உலக சங்கிரகத்தி னிமித்தம் கருமங்களைச் செய்யும் ஞானியோ இந்திரியங்கள் மனம் முதலியவற்றிற்கும் தனக்கும் சம்பந்தமில்லை யென்று தன்னைவேறு பிரித்து ஆன்மாவே தானென்றறிந்தவ னாதலின், தான் அகர்த்தா அபோக்தா (ஒரு கருமத்தையும் தனக்காக வென்று செய்பவனல்ல, ஒரு போகத்தையும் புசிப்பவனல்ல) என்றுணர்ந்து சாட்சிமாத்திரமாக விருந்து எவ்விதப்பயனிலும் ஆசையில்லாதவனாய்க் கருமங்களைச் செய்கிறான்.

இப்படிச் செய்யும் இவன் இச்சையோடு கருமங்களைச் செய்துகொண்டிருக்கும் அஞ்ஞானிக்கு "நீயகர்த்தா—கர்மங்களைச் செய்யவேண்டியவனல்ல" என்ற உபதேசத்தைச் செய்யாதொழிக.

[ஏனெனில், ஆசையொழிந்து அந்தக்கரண சுத்தத்தை யடைந்த அதிகாரியே ஆன்மஞான உபதேசம் பெறற்கு உரியவன்—இச்சையோடு கூடிய அசுத்த அந்தக்கரண முடையவன் நிஷ்காம கர்மம்செய்து சித்தசுத்தி யடைந்து அத்துவாரா ஞானமடைய வேண்டியவன். அத்தகைய கர்ம அதிகாரிக்கு நீ அகர்த்தா, கர்மத்தைச் செய்ய வேண்டியவனல்ல, என்று உபதேசித்தால் அவன் சத்கருமங்களில் சிரத்தை யற்றவனாய்க் கருமங்களை யடியோடு விட்டு அவற்றா லடையத்தக்க சுவர்க்காதி போகங்களை யிழப்பன்—சித்தசுத்தி யில்லாததால் அவனுக்கு ஞானமும் கிட்டாது. இதனால் அவன் இரண்டையு மிழந்து அழியும் வண்ணம் செய்ததாய் முடியும் என்பதாம்.

பட்டினத்தடிகள், சமயாசாரியர்கள் முதலிய முற்றத்துறந்த முழு ஞானிகளுக்குச் சொரூபவணக்கம் அவசியமே யில்லை. அப்படி யிருந்தும் நம்போன்றவர்க ளுய்யும்பொருட்டே அவர்கள் திவ்யஸ்தலதரிசனாதிகளைச் செய்துகொண் டிருந்தார்கள். சிலர் யாரேனும் கோயிலுக்குப் போவதைக் கண்டால் "கோயிலில், அங்கேயென்ன இருக்கிறது? எல்லாம் நமக்குள்ளே யிருக்கிறது" என்று கூறுகிறார்கள். இத்தகையோர் வெளிக்குத் தாங்கள் ஞானிகள் என்று நடிக்கும் கள்ளத்துரோகிகளே யாவர். உண்மையான ஞானியவ்வாறு கூறவேமாட்டான். ஏனெனில் தனக்குள் பரம்பொருளைக் காண்பது எத்தகைய அரியகாரிய மென்றும், அதற்கு எல்லாரும் அதிகாரிக ளாகார்கள் என்றும், சொரூபாராதனை முதலிய கருமங்களை நாம் அனாவசியமென்று கூறினால் ஞானத்திற்கு அதிகாரிக ளல்லாத பிறர் அநியாயமாய் சரியை கிரியையாதிபடிகளையும் விட்டு அழிந்து போவார்கள் என்றும் அவன் நன்கறிவான். உண்மைஞானி மற்றையர் நன்மையின் பொருட்டுத் தன் ஆசிரமத்திற்குரிய கிரியைகளைச் செய்தே தீருவான்.]

பகவான் பின்னும் அருளிச் செய்கின்றார்:—

ஏ! அர்ச்சுன! எவன் அசூயையற்றவனாய்ச் சிரத்தாபக்தியோடு என் அபிப்பிராயமாகிய இக்கருமத்தை நியமப்படி செய்கின்றானோ அவன் புண்ணியம் பாபம் ஆகிய இரண்டு கருமங்களினின்றும் விடுபட்டவனாவான்.

[ஞானியின் புண்ணிய கர்ம பலன் அவனைப்போற்றி வழிபடுவோர்க்கும் பாபகர்ம பலன் அவனை நிந்தித்து இகழ்வோர்க்கும் சேரும்.

"பொறுமையாற் பிராரத் தத்தைப் புசிக்குநாட் செய்யுங் கன்மம்
மறுமையிற் றொடர்ந் திடாமல் மாண்டுபோம் வகையே தென்றால்
சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வார்
அறிவுளோ ரறிந்து பூசித் தறமெலாங் கைக்கொள் வாரே"

கைவல்யம்.

எவன் என்னிடத்து அசூயையினால் நான் கூறிய இதில் தோடங்கற்பித்து இதை யங்கீகரிக்காது அலட்சியம் செய்கிறானோ அவன் யாவரும் நிந்திக்கத்தக்க துஷ்ட குணத்தை யுடையவனாவன். அத்தகையோன் சர்வ புருஷார்த்தங்களினின்றும் பிரஷ்டனாகி சர்வ ஞானங்களையும் இழந்தவனாவான் என்றறிதி.

அர்ச்சுனன் "ஈசுரனாகிய தங்கள் வாக்கை யலட்சியம் செய்வதில் ஜனங்களுக்குப் பீதிஇல்லாமல் போவதேன்!" என்று வினவிய சங்கைக்குப் பகவான் அருளிச் செய்கிறார்:—

அர்ச்சுனா! அவரவர்கள் பூர்வஜன்மங்களிற் செய்த தர்மம் அதர்மம், ஞானம், இச்சை முதலியவற்றின் சமஸ்காரம் இச்சன்மத்திலும் தொடர்ந்து வருவதால் அப்பிரகிருதியின் வயப்பட்டே யாவரும் நடக்கிறார்கள். விசேஷ பாபகர்மத்தின் வயப்பட்டுள்ளோர் துர்வாசனையின் பலத்தால் பாபத்துக்காவது நரகத்துக்காவது அஞ்சாமல் மேலும் மேலும் பாபகர்மங்களிலேயே பிரவர்த்திக்கிறார்கள். அவர்கள் என் ஆக்ஞையை யலட்சியம் செய்ய அஞ்சமாட்டார்கள்.

பஞ்சேந்திரியங்களும் தொடர்ந்து செல்லும் விஷயங்களில், பிராணிகள், ஞானமார்க்கத்தை யடையாவண்ணம் கெடுக்கத்தக்க விரோதிகள் உள. அவை இராகத்துவேஷங்களாகும் (இச்சையும் வெறுப்பும்). பிராணிகள் இவற்றின் வயப்படலாகாது. இவை பிராணிகளின் சத்துருவாதலால் ஏ! அர்ச்சுனா! நீ இவற்றை யிகழ்வாயாக.

[சுரோத்திரம், துவக்கு, சக்ஷுசு, சிங்குவை, ஆக்ராணம் இவை ஐந்தும் ஞானேந்திரியங்கள். வாக்கு, பாணி, பாதம், உபஸ்தம், பாயு, இவை ஐந்தும் கருமேந்திரியங்களாம். ஞானேந்திரியங்களுக்கு சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம் என்பவையும், கர்மேந்திரியங்களுக்கு வசனம், தானம், கமனம், ஆனந்தம், மல விசர்ச்சனம் என்பவையும் விஷயங்களாம். சிவ

னுக்கு எந்த விஷயங்கள் எச்சமயத்தில் அனுகூலமாய்த் தோன்றுகின்றனவோ அந்த விஷயங்களில் அச்சமயத்தில் இராகமும், எந்த விஷயங்கள் எச்சமயத்தில் பிரதிகூலமாகத் தோன்றுகின்றனவோ அவ்விஷயங்களில் அச்சமயத்தில் துவேஷமும் உண்டாகின்றன. ஒரே விஷயத்தில் சமயத்திற்குத்தக்கபடி இந்த இராகத்துவேஷாதிகள் மாறிமாறித் தோன்றுவது உணரத்தக்கது. இதனால் ஆனந்தமென்பது விஷயங்களில் இல்லையென்று நன்கு விளங்கும்.] (தொடரும்)

சீடன்.

---

## அப்பர் சுவாமிகள் சரித்திரத்தில் ஓர் ஆராய்ச்சி.

எனது நண்பர் ஸ்ரீமான் K. S. சீனிவாசப் பிள்ளை அவர்கள் எழுதிய தமிழ் வரலாறு பிற்பாகம் புத்தகத்தின் 54-பக்கமுதல் 62-பக்கம்வரை அப்பமூர்த்திகள் சரித்திர ஆராய்ச்சி எழுதப்பட் டிருக்கின்றது. அச்சரித்திரத்தின் முதல் பாதிபாகத்தை நிகழும் ஐப்பசி மாதத்திய ஆனந்தபோதினி சஞ்சிகையின் 132-ம் பக்கம் முதல் 137-ம் பக்கம்வரை சுதந்தரன் என்ற பத்திரிகைல் வெளியிடப்பட் டிருக்கிறது. சைவசமயாசாரிய சுவாமிகள் நால்வரும் பூலோகத்திலிருந்த வயதின் காலஅளவைக் குறிப்பிடும் பண்டைய செய்யுளில் "அப்பருக்கு எண்பத் தொன்று" எனக் கூறியிருப்பது சைவசமயிகள் பல்லோரும் அறிந்த விஷயமே. இந்த 81-வயதுக்குள் இன்னின்ன வயதின் கால அளவில், இன்னின்ன நிகழ்ச்சிகளை அப்பமூர்த்திகள் அடைந்திருந்தனர் என அப்புத்தகத்தில் எழுதப்பட் டிருக்கின்றது. இவ் விஷயம் ஆராய்ச்சிக் குரியது. அப்பமூர்த்திகள் சைவசமயத்தை விட்டு ஆருகமதத்தில் பிரவேசித்தபோது அவர்களுக்கு 25-வயதாம். ஜைன மதத்தில் 15-ஆண்டுக ளிருந்தனராம். பிறகு சைவமதத்திற் புகுந்தபோது 40-வயதாம். இவ்வாறு யூகித்துக்கொண்டு, பிறகு 40 வயதுக்குமேல் 30 வருடகாலம் தொடர்ச்சியாக அதாவது 70 வயதுவரை அப்பமூர்த்திகள் திருவதிகையிலேயே தொண்டு செய்துகொண் டிருந்ததாயும், சம்பந்தமூர்த்திகளோடு முதற்றடவையாக கண்புற்றபோது அப்பமூர்த்திகளுக்கு எழுபதாண்டுகளுக்கு மேலிருக்க வேண்டுமென்றும், இந்த வயோதிக காலதேக நடுக்கத்தைத்தான் "திருமேனிதன்னில் அசைவும்?" எனப் பெரிய புராணம் திருநாவுக்கரசு புராணச் செய்யுட்களில் ஒன்றில் கூறிற்றென்றும் எழுதப்பட்டிருக்கின்றது. அப்பமூர்த்திகள் தொடர்ச்சியாகத் திருவதிகையில் 30 ஆண்டுகள் வசித்திருந்தனர் என்பதற்குப் பெரிய புராணத்தில் ஆதாரம் காணப்படவில்லை. சைவசமயத்தில் அப்பமூர்த்திகள் புகுந்தபின்னர் திருவதிகையில் உழவாரப் பணிவிடை முதலிய செய்துகொண்டிருந்த நாளில் ஜைநமதத்திலிருந்த பல்லவ அரசன் அப்பமூர்த்திகளிடம் உபதேசம் பெற்றுச் சைவனாகித் திருவதிகையில் திருப்பணி செய்தானென்றும் அக்காலத்

தில் அப்பமூர்த்திகள் தலயாத்திரை செய்யப் புகுந்தனர் என்றும் பெரிய புராணங் கூறும்—அது விஷயமான அடியிற்கண்ட பெரியபுராணச் செய்யுளைக் கவனிக்கவேண்டும்.

" இன்னளிற் றிருப்பணிகள் செய்கின்ற வின்றமிழ்க்கு
மன்னனை வாகீசத் திருமுனியு மதிச்சடைமேற்
பன்னகம ணிந்தவர்தம் பதிபலவுஞ் சென்றிறைஞ்சிச்
சொன்னமத் தமிழ்புனைந்து தொண்டு செய்வான் றொடர்ந்தெழுவார்"

[அப்பர்மூர்த்திகள் புராணம்—147 - செய்யுள்]

இச்செய்யுள் நான்காமடியின் ஈற்றில் 'தொடர்ந்து எழுவார்', என அருளப் பட் டிருப்பதினல்—30—ஆண்டுகளாகிய நீடித்த காலம் திருவதிகையி லேயே அப்பமூர்த்திகள் வசித்திருந்தனர் எனக்கொள்ள இடமில்லை. பல் லவ அரசன் திருப்பணி செய்துகொண்டிருந்த காலத்திலேயே, அப்பமூர்த் திகள் தலயாத்திரைக்கு எழுந்தருளினதாகவே கொள்ள வேண்டியிருக் கிறது. மேலும் சிவபிரான் திருவருளைப் பெற்ற உடன்காலி லேயே மற்ற தலங்களையும் தரிசித்துத் தேவாரப் பாக்கள் பாடித் தொண்டு செய்ய ஆரம் பித்தார்கவ எனக்கொள்வதே சிறப்புடையதா யிருக்கிறது. " திருமேனி தன்னில் அசைவும் " என்னுஞ் சொற்றொடருக்கு 70-ஆண்டுகளுக்கு மேற் பட்ட வயது முதிர்ச்சியால் உண்டான தேகத்தின் நடுக்கம் எனப் பொருள் கொள்ளும் பொருட்டே வயதுக்கிரமங்களை ஆதிமுதற் கற்பித்துக்கொண்டு வந்து, 40-ம் வயதுக்குமேல்; 30-ஆண்டுகள் திருவதிகையில் அப்பமூர்த்தி கள் வசித்திருந்தார்களெனக் கற்பனையாகக் கூறியதென்றே கருதற்பாலதா யிருக்கின்றது. இதற்குச் சம்பந்தப்பட்ட பெரியபுராணச் செய்யுள் வரு மாறு:—

" சிந்தையிடை யறாவன்புந் திருமேனி தனிலசைவும்
கந்தமிசை யாங்கருத்துங் கையுழவா ரப்படையும்
வந்திழிகண் ணீர்மழையும் வடிவிற்பொலி திருநீறும்
அந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய " என்பதே.

[சம்பந்தமூர்த்திகள் புராணம் 270-ம் செய்யுள்]

சம்பந்தமூர்த்திகள் தம்மை தரிசிக்க அப்பமூர்த்திகள் வருவதைக்கேட்டு எதிர்கொள்ளச் செல்லுகையில் அப்பமூர்த்திகள் கொண்டிருந்த திருமேனி யின் வேடத்தை இச்செய்யுள் கூறுகின்றது. இச்செய்யுளில் அன்பு, அசைவு, கருத்து, உழவாரப்படை, கண்ணீர், திருநீறு, இவ்வறுவகைச்சிறப் போடு கூடிய திருவேடத்தை அப்பமூர்த்திகள் தாங்கிவந்ததாகக் கூறப் பட்டுளது. அடுத்த செய்யுளிலும் " கருத்திற் பரவு மெய்க்காதற், றொண் டர்திருவேட நேரே தோன்றிய தென்று தொழுதே " என மேற்குறித்த அறுவகைச் சிறப்போடு கூடிய திருவேடத்தைச் சம்பந்தமூர்த்திகள் தொ

மூதநாக அருளப்பட் டிருக்கின்றது. தேகத்தில் முதிர்ந்தவயதால் உண் டாகும் நடுக்கம் சிறப்பாய் எடுத்துப் புகழ்ந்து வணங்கும் திருவேடம் என் பதின் பகுதியல்ல. அஃது குறைபாடே; திருவேடப் பொலிவைப் புகழ எழுந்த செய்யுள் இது...அதனால் "அசைவு" என்ற பதத்திற்கு விருத் தாப்பியத்தா லுண்டான நடுக்கம் எனப்பொருள் கூறுவது பொருந்தாது. ஏனெனில் விருத்தாப்பியத்தின் நடுக்கத்துக்குத் திருவேடமெனப் பெய ரிடுவது எலாது.

முதலாவது யாத்திரையே, 70—வயசுக்குமேல் தேகநடுக்கம் உண் டான பின்பு ஆரம்பித்திருந்தால், பின்னர் அளவில்லாத தலங்களைத் தரி சித்து, எண்ணிறந்த தேவாரப்பதிகங்களைப் பாடியதும், கைலாச யாத்திரை பாதசாரியாகச் சென்றதும் எலாதவையே யாகும். அப்பமூர்த்திகள் நம் போல் வயதுக்கடுத்த பாகுபாட்டின்படி யௌவனம், வார்த்திகம் இப்பரு வங்களின் குறைகுணங்களால் பீடிக்கப்பட்ட மூர்த்தியல்லர். விஷத்தை அமிர்தமாக உட்கொண்ட வச்சிரதேக முடையவர்; எழுநாள் நீற்றறையி லிருந்தும் சிறிதும் ஊறுபாடடையாது விளங்கியவர்; கல்லைத் தெப்பமாகக் கொண்டு கருங்கடலைக் கடந்த யோகீஸ்வரர்—பெரியபுராணத்தில் இம் மூர்த்திகள் சரித்திரத்தில் எங்காவது இம்மூர்த்திகளுக்கு வயோதிக தசை யின் குறைபாடு கூறியிருப்பதாகவும் காணோம். ஆனாலோ இதற்கு எதிரி டையாகச் சுவாமிகள் சிவத்தோடு கலப்பதற்கு முந்தி அதாவது, 81—வது வயசில்தெய்வலோக அரம்பாஸ்திரீகள் பூலோகமடைந்து சுவாமிகளைவிஷய இச்சையில் காமுறமயக்கினார்க ளென்றும் சுவாமிகளோ மயக்கமடைய் வில்லை யென்றுங் கூறுகின்றது.—இத்தியாதி காரணங்களினால், திருவதி கையில், தொடர்ச்சியாக 30 ஆண்டுகள் சுவாமிகள் வசித்ததாகச் சொல் வது பொருத்த மிலாததெனவும், ஆன்றோர் பொருள் கண்டபடி ஆனந்த பரவசத்தாலாய தளர்நடை யென்றே மேற்காட்டிய "திருமேனி தனில சைவும்" என்ற சொற் றொடருக்குப் பொருள் கொள்வதே பலவகையி லும் பொருத்த முடைய தெனவுங் காணப்படுகின்றது—இன்னமும் கல்வி வாணர்கள் ஆராய்ந்து விளக்கச் செய்வார்களென வேண்டுகிறேன்.

திரு-மா-சாம்பசிவம்பிள்ளை,
Retired Sub-Magistrate,
திருச்சிராப்பள்ளி.

---

குறிப்பு:—அப்பர் சுவாமிகளுக்குச் சூலைநோய் தீர்ந்த இடம் திரு வதிகை. அதுவே யவர் பரமசிவத்தால் ஆட்கொள்ளப்பட்ட இடம். அங்கு பரமசிவத்தினருளால் தமது சூலைநோய் நீங்கப்பெற்றவமய முண்டான பக்தி மேலீட்டால் எம்பெருமான் எழுந்தருளி யிருக்கும் க்ஷேத்திரங்களுக் கெல்லாம் சென்று தரிசிக்க அப்போதே புறப்பட்டார் என்பதே பொருத்த மாகுமன்றி முப்பது வருடகாலங்கள் அதே ஸ்தலத்தில் இருந்தார் என்பது

அவருடைய அருமைத் திருத்தொண்டின் பெருமைக்குப் பொருத்தமான தாகச் சற்றும் புலப்படவில்லை.

இதன்றி நமது நண்பர் கூறியவாறு வாகீசப்பெருமான் சாதாரண மனிதரைப்போல் தேகத்தின் ஷட்பாவவிகாரங்களுள் ஒன்றாகிய முதுமை யின் இடையூறுகளால் பிடிக்கப்பட்டார் என்று கருதுவதற்கு இடமில்லை. சாதாரணமான மனிதர்க்கே மனக்கலக்கம், துயரம், குறை இவைகளில்லாது சந்தோடமே யிருப்பின் தேகம் சுகமாகவும் திடமாகவுமிருப்பது அனுபவம். அவ்வாறிருக்கச் சாதா சிவானந்தமாகிய பிரம்மானந்த அமிர்தத்தையே யருந்திக்கொண்டிருந்தவரும், அதனால் கொடிய விஷமும், நீற்றறையில் வாசமும் சற்றேனும் இடையூறு செய்ய முடியாத தேகமுடையவரும், பிறகு சிவத்தோடு கலந்த எண்பத்தோராவது வயதிற்குச் சில (பெரும் பாலும் இரண்டொரு) வருடங்களுக்கு முன கைலாயதத்திற்குக் காலால் நடந்து செல்லும் தேகபலத்தோ டிருந்தவரும், பரமசிவத்தின் அருள் பெற்ற மகானுமாகிய அவர் தேகம் வயோதிகத்தால் தளர்ந்ததென்று கருது வது பக்தியின் மகிமைக்கும் அருள் மகிமைக்கும் பொருத்தமாக இருக்க வில்லை.

சாதாரணமாக உலகில் கிழவரின் தேகத்தளர்ச்சியா லுண்டான தளர் நடையையும் தலை நடுக்கத்தையும் அழகென்று யாருங் கூறக்கண்டிலோம் கேட்டு மிலோம்.

நமது நண்பர் கூறியபடி "இன்னுளிற் றிருப்பணிகள் செய்கின்ற வின் தமிழ்க்கு......" என்றகவியின் இறுதியில் உள்ள, "தொடர்ந்தெழுவார்" என்ற வார்த்தைகளால, பல்லவ அரசன் சைவசமயம் புக்கு குணதரீச்சரம் என்ற ஆலயத்தை யமைக்கத்தொடங்கியபோதே நம் வாகீசப் பெருந்தகை யார் பதிபலவுஞ் சென்றிறைஞ்சப் புறப்பட்டார் என்றே பொருள் கொள் ளக்கிடக்கிறது. இவையாவு மொருபாலிருக்க, சுவாமிகளின் திருவேடப் பொலிவைப் போற்றவெழுந்த செய்யுளில், "இடையறுவன்பும்" என்ற தற் கடுத்தாற்போல் "திருமேனி தனிலசைவும்" என்று கூறப்பட்டிருப் பதானே, பக்திப்பெருக்கா லுண்டாகும் ஆனந்த பாவசத்தின் காரியமான தளர் நடையென்று பொருள் கொள்வதே பொருந்தும். அதன் தொடர்ச்சி யாய் கருத்தும், உழவாரப்படையும், ஆனந்த பாஷ்பமும், திருநீறும் கூறப் பட்டிருக்கின்றன. அந்த பாசுரத்தில் சம்பந்த மூர்த்திசுவாமிகள் அவ்வே டத்தைத் தொண்டர் திருவேடம் நேரேதோன்றிய தென்று தொழுததாகக் கூறப்பட்டிருக்கிறது.

"கண்டகவு ணிபக்கன்றுங் கருத்திற்பாவு மெய்க்காதற்
றொண்டர்திரு வேடநேரே தோன்றியதென் றுதொழுதே
* * * * * "

(சம்பந்தமூர்த்திகள் சரித்திரம் 271-வது செய்யுள்)

இவற்றால் அப்பாசுரத்தில் அப்பர் சுவாமிகள் சிவவேடப் பொலிவைக் கூறவந்த சேக்கிழார் சுவாமிகள், அதில் அவருடைய வயோதிகத்தின் குறைபாட்டைச் சேர்த்துக் கூறியிருப்பார் என்று கருதுவது சேக்கிழாரின் அருள்வாக்குக்குள்ள மகிமையைக் குன்றச் செய்வதாகும் என்பதே நமது கருத்து. பத்திரிகாசிரியர்.

---

## மாதர் நீதி.

சகோதர சகோதரிகளே! கடந்த ஆவணிமாத சஞ்சிகையில் 55-வது பக்கத்தில், மலாக்காவிலுள்ள நமது சந்தாநேயர் ம-ா-ா-ஸ்ரீ மா. மலையப்பன் என்பவர் தமிழகம் என்ற (கோலாலம்பூரில வெளியாகும்) பத்திரிகையில் வெளியிட்டிருந்த 'மாதர்நீதி' என்ற விஷயத்தையும் அதற்குத் தமிழகம் பத்திரிகையின் ஆசிரியர் வரைந்துள்ள குறிப்பையும் பிரசுரம்செய்து நமது குறிப்பையும் வரைந்திருந்தோம். அதிலுள்ள நமது குறிப்பைப்பற்றி "ஓர் பெண்பால்" என்ற கையெப்பத்தோடு சில விஷயங்கள் அத்தமிழகம் பத்திரிகையில் வெளியிடப்பட்டது.

அதில் அம்மாது நம்மைப்பற்றித் தாழ்வாய்க் கூறிய விஷயங்கள் நாம் கவனிக்கத்தக்கவை யல்லவென ஒதுக்கித்தள்ளி, அதிலுள்ள விஷமத்தனத்தைமட்டும் கண்டித்து தெறியவேண்டியது அவசியமாகிறது. ஏனெனில் அம்மாதின் போதனை கற்பிலக்கணத்திற்கு நேர்மாறாக விருத்தலின் என்க.

நாம், மனைவி கணவனைத் தெய்வமாகக் கருதவேண்டு மென்று கூறியது அச்சகோதரிக்குச் செவியில் நாராசங்காய்ச்சி விட்டதுபோல் இருப்பதாகத் தெரிகிறது. அச்சகோதரி "மனைவி கணவனைத் தெய்வமாகக் கருதுவதாயின் கணவனும் மனைவியைத் தெய்வமாகக் கருதவேண்டும்" என்று கூறுவதோடு அதற்குத் திருட்டாந்தமாகப் "பரமசிவன் பார்வதியைக் கருதுவதுபோல்" என்று கூறுவது நமக்குச் சொல்லொணு வியப்பையும், நகைப்பையும் உண்டாககுகிறது.

இச்சகோதரி எச்சமயத்தவ ரென்று நமக்கு விளங்கவில்லை. ஓர் இந்துமத மாதின் வாயில் "கணவன் மனைவியைத் தெய்வமென்று கருதவேண்டும்" என்றவார்த்தை கனவிலும் வராது. மேல்நாட்டு ஆடவர் தாம் மணம் புரிய விரும்பும் மாதை "என் பெண்தெய்வமே" (My Goddess) என்று கூறுவதும், அவர்கள் முன் முழங்கால் படியிட்டு வணங்குவதும வழக்கம், ஆயினும் அவர்களும் வாழ்க்கையில மனைவியைத் தெய்வமாக மதிப்பதாய் விளங்கவில்லை. பெண்சுகமே உலகில சிறந்தசுகம் என்பது உலகாயதர் கொள்கை. இதனால் நமது சகோதரி அமமதத்தைச் சேர்ந்தவரோ என்று சந்தேகிக்கிறோம. அப்படியாயின அவ் வம்மையாரைப்பற்றி நாம் ஒன்றும கூறவேண்டிய அவசியமில்லை. ஆனால் அப்படி யிருந்தால் அவ்வம்மையார் இதில் தலையிட வேண்டிய அவசியமில்லை. அவர் தமது மதத்தையேனும்

வெளியிட்டிருந்தால் ஹிந்துமாதர் அவர் போதனையைக் கவனியார்கள். இது அவர்களுக்குத் துர்ப்புத்தி கற்பிப்பதேயாகும்.

இச்சகோதரி 'சிவம் சத்தி'யை யிழுத்து வைத்துக் கொண்டதால் ஹிந்துதானோ என்ற ஐயம் உண்டாகிறது. ஆனால் இத்தகைய விபரீதக் கொள்கையுடைய ஒருமாது ஹிந்து என்று கூறிக்கொள்ள அருகராகார். பார்வதியைப் பரமசிவம் பெண் தெய்வமாகக் கருதியிருக்கிறாரென்று இவருக்கு யார்கூறியது? அப்பொய்யைத் திருட்டாந்தங் காட்டிக் கூறியது, (இச்சகோதரி கிருஸ்தவராயின்) நம்மதத்தையும் ஆசாரத்தையும் இகழ்ந்து கேலிசெய்ததேயாகும்.

அந்தோ கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்ப மேன்? சிவத்துக்கும் சத்திக்குமுள்ள சம்பந்தத்தைப்பற்றி இச்சகோதரிக்கு என்ன தெரியும்? அவ்வம்மையாருக்குத் தமது கணவன் தம்மைத் தெய்வமாய்க் கருதி அர்ச்சனை செய்யவேண்டு மென்று பிரியமிருந்தால் அப்படிச் செய்து கொள்ளட்டும். ஆனால் இருவரும் ஒருவரையொருவர் தெய்வமாகக்கருதிவிட்டால் வணங்கி உபசரிப்பது யார்? அதை யேற்றுக்கொள்வது யார்? என்பதே நமக்கு விளங்கவில்லை. பிறகு இந்த இரண்டு தெய்வங்கட்கும் உற்பத்தியாகும் குட்டித் தெய்வங்களுக்கு யார் தெய்வம்? அந்தோ பெண்மதியே! பரிதாபம்! பரிதாபம்!

நமது மதத்தில் கற்பைப்பற்றி அவ்வளவு சிறப்பித்துக் கூறியிருப்பதும், மாதர் கணவரைத் தெய்வமாய்க் கருதவேண்டு மென்பதும், நமது பெண் மக்களின் நன்மையைக் கோரியேயாகும். தெய்வவல்லமை பெற்று அழியாப் புகழும் பெற்ற கற்பரசிகளின் சரிதைகளே அதற்குப் போதிய சான்றாம். ஒருவன் தன் மனோபாவனையில் எவ்வாறு நம்பி நடக்கிறானோ அவ்வாறே பலனடைகிறான். கணவனும் மனைவியைத் தன் உயிர்போல் கருதி அன்போடு ஆதரித்து வரவேண்டுமென்பதே நமது மதக்கட்டளை; அவனும் அவளை யலட்சியமாகவாவது குரூரமாகவாவது மரியாதைத் தாழ்வாயாவது நடத்தலாகாது. சாதாரணமாய் நமது நாட்டில் கல்வியில்லாப் பாமரன்கூட தன்மனைவி குழந்தையோடு எங்கேனும் நடந்து செல்லும் போது பளுவான மூட்டையையும் குழந்தையையும் அவன் சுமந்து செல்வதையும், மனைவி பின் செல்வதையும் காணலாம். ஆனால் கணவன் காட்டுவது அன்பு; மனைவி காட்டுவது பக்தி; அதாவது வணக்கத்தோடு கூடிய அன்பு.

ஹிந்து சகோதரிகளே! இச்சகோதரி கூறியதுபோன்ற ஆபாசக் கூற்றுகளுக்குச் செவி கொடாதேயுங்கள். மணலைச் சாதமாய்ச் சமைத்தளித்தவரும், "கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா" என்றவரும், கற்பரசியென யாவராலும் வணங்கப்பட்டவருமாகிய வாசுகி யம்மையாரின் கணவரும், தெய்வீகப் புலமை வாய்ந்த பொய்யாமொழியாருமாகிய நாயனார் கூறிய வேதவாக்காகிய,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை"

என்ற அமுதமொழியைக் கடைப்பிடித் தொழுகிக் கற்பரசிகள் என்ற கீர்த்தியை யென்றும் நிலைக்கச் செய்யுங்கள்.

பத்திரிகாசிரியர்.

## விதி வலிது.

ஆம், விதிவலிதுதான். நாம் ஒவ்வொருவரும் அதன்படி நடந்தே தீருகிறோம். அதை வெல்லுவதென்பது நம்மாலாகாத காரியம். அதை விலக்குவதற்காக நாமொரு காரியத்தைச் செய்யின், அவ்வழியிலேயே அது வந்துசம்பவிக்கிறது. அதை ஒருவரும் வெல்லமுடியாது. ஏனெனில் 'விதி' யென்பது நாம் முற்பிறப்பிற்செய்த, பாப புண்ணிய கர்மங்களுக்குத் தக்கபடி "இவ்விதமாக அனுபவிக்க வேண்டும்" என்று ஈசனால் விதிக்கப்பட்டது. 'மதி' யென்பது நம்முடைய அறிவு; புத்தி யென்று கூறலாம். நாம் பூர்வத்திற் செய்த கர்மங்களுக்குத்தக்க பலனை யனுபவிக்கவே இப்பிறப்பில் நமக்கு புத்தியும் ஏற்படுகிறது. இதையறிந்தே பெரியோர்கள் 'விதி யெவ்வழி மதியவ்வழி' யென்றும், 'விநாசகாலே விபரீத புத்தி' யென்றும், 'புத்தி கன்மாநுசாரணி' யென்றும் கூறியதோடு, பின் வரும் நூல்களிலும் 'விதிவலிது' என்பதை வற்புறுத்திக் கூறியிருக்கிறார்கள்.

" முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினு
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்" (கந்தபுராணம்)

" அதிசய மொருவரா லமைக்க லாகுமோ
துதியறு பிறவியி னின்ப துன்பந்தான்
விதிவச மென்பதை மேற்கொ ளாவிடின்
மதிவலி யால்விதி வெல்ல வல்லமோ " (இராமாயணம்)

" மதியினை மலரச் சூழ்ந்து வருந்தித்தாம் படைக்கப் பட்ட
நிதியினை நுகர்து மென்று நினைத்தினி திருந்த போழ்திற்
பதியினைக் கலக்கிச் சென்று பறித்துத்தாம் பிறர்க்கு நீட்டும்
விதியினை விலக்க மாட்டா மெலிபவால் வெளிய நீரார் " (சூளாமணி)

" ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர்
நாழி முகவாது நானாழி—தோழி
நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம்
விதியின் பயனே பயன் "

" எழுதியவா றேகா ணிரங்குமட நெஞ்சே
கருதியவா றாமோ கருமங்—கருதிப்போய்க்
கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்ததென்
முற்பவத்திற் செய்த வினை " (மூதுரை)

" தாந்தாமுற் செய்தவினை தாமே யனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
யொறுத்தாரை யென்செயலா மூரெல்லா மொன்றா
வெறுத்தாலும் போமோ விதி " (நல்வழி)

" ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். " (திருக்குறள்)

இன்னும் பலவுள. ஆயினும், விரிவஞ்சி இத்தோடு நிறுத்துகின்றோம். மேற்கண்ட முதுமொழிகளின் ஆழ்ந்த கருத்துகள் நமக்குப் புலப்படும்படி தயவுசெய்து மற்றொரு முறையும் வாசித்து கருத்தில் வைக்கக்கோருகிறோம். ஆ! விதியின் வலிமையே வலிமை!

மார்க்கண்டேயர் தமது மரணத்திலிருந்து விடுபட்டதினால் 'மதியே வலிமையுடையது' என்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். அதைப் பற்றி ஆராயுமிடத்து, அதுகூட இன்ன காலத்தில் 'இன்னபடி நடைபெறவேண்டும்' என்று விதி யிருந்ததாகவே தெரிகிறது. சுருதி யவ்விதமில்லையாயினும், யுக்திக்குப் பொருந்தத்தக்க ஆதார மொன்றிருக்கிறது. என்னவெனில், "தன்னுடைய ஜீவியகாலத்திலேயே நேர்ந்திராததும், தன்னுடைய உயிருக்கே கேட்டை விளைவிக்கக் கூடியது மான ஒரு மகத்தான விபத்தை, எமன் விதியில்லாமல் அனுபவித்திருப்பானா?" வென்பதே. மார்க்கண்டேயரைக் காரணமாகக்கொண்டு எமனுடையவிதி நிறைவேற வேண்டுமென்று, ஏற்கனவே ஈசன் விதித்திருந்து, நடத்தியதாகவே கொள்ளவேண்டி யிருக்கிறது. ஆம், 'அவனன்றி யோரணுவும் அசையாது' அல்லவா? "மார்க்கண்டேயரே தம்முடைய மதியினால், தெய்வசித்தத்தை அல்லது தெய்வ கட்டளையைத் தடுத்துவிட்டார்" என்று நாம் எப்படிக் கூறுவது?

இதைக்கூட "சாஸ்திரத்திலில்லாத ஒரு விஷயத்தை நாம் எவ்விதம் நம்புவது" என்று சிலர் ஆக்ஷேபிக்கலாம். ஆனால், மார்க்கண்டேயரைப் போல், "ஈசன் வேறு, தான்வேறு" என்றெண்ணாமல், "நானே அவன், அவனே நான்" என்ற அனன்னிய நிலைமையில் பக்தியைச் செலுத்தும் பாக்கியம் பிராப்தமின்றி லபிக்காது.

சகோதர சகோதரிகளே! இதுவரை நாம் அறிந்துகொண்ட தென்னவெனில், 'விதி வலிமையுடையது' என்பதே. ஆயின், இனி நாம் செய்ய வேண்டியதென்ன! நல்வினை யிருந்தால், நல்லவை வரட்டும், தீவினையிருந்தால் தியவை வரட்டுமென்று அவற்றை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதல்ல.

" அழுதாற் பயனென்ன நொந்தாற் பயனென்ன வாவதில்லை
தொழுதாற் பயனென்ன நின்னை யொருவர் சுடவுரைத்த
பழுதாற் பயனென்ன நன்மையுந் தீமையும் பங்கயத்தோ
னெழுதாப்படி வருமோ சலியாதிரேன் னேழை நெஞ்சே "

என்பதும், 'வருவது வந்தால் படுவது படு' என்பதும், 'எவை வரினும் வருக சலியாது சகிப்போம்' என்பதும் பட்டினத்தடிகளைப்போல நாமும் மண், பெண், பொன், கீர்த்தி முதலிய பற்றற்று, பரிபக்குவமடைந்த நிலைமையில், நம்மை நோக்கி நாமே கூறிக்கொள்ளத்தக்கது. நமது மனதிற்கு இப்பொழுது அத்தகைய சத்துவ குணங்கள் சிற்சில சந்தர்ப்பங்களில் மட்டுமே தோன்றி, மறைந்து பெரும்பாகம் பிரவிர்த்தியையே நாடிக்கொண்டிருப்பதால், நாம் அவ்விதமிருக்க முடியாதன்றோ? ஆகவே நாம் இப்பொழுது விதிவலிது எனினும் முயற்சியைக் கைவிடாது, ஊக்கத்துடனுழைத்து, நற்பயன்களை யடையப் பிரயாசைப்படவேண்டியதே சிறந்தவழி. மதியால் முயன்று விதியை யடியோடு தடுக்க முடியாதெனினும் விதியின் கடுமையைச் சகிப்பதிலுள்ள கஷ்டத்தையேனும் குறைத்துக்கொள்ளலாம். திருக்குறளில் இவற்றைப்பற்றிய அதிகாரத்தில்,

" தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய் வருத்தக் கூலிதரும் " என்றும்

" ஊழையு முப்பக்கங் காண்ப ருலேவின்றித்
தாழா துஞற்று பவர் " என்றும்

நாயனுர் கூறியுள்ளார். இவற்றின் முக்கிய கருத்து 'விதியில்லை யாயினும் முயற்சியைக் கைவிடத்தக்கதல்ல' வென்பதே.

ஆகவே, சகோதரர்காள்! நாம் விதிப்பயனைக் கருதாமல், முயற்சியோடு கூடி உழைக்க வேண்டும். அவ்விதம் செய்தால், நமக்கு ஊழில்லாவிடினும் முயற்சிக்குத் தகுந்த கூலியாகவாவது ஈசன் சிறிது கருணை பாலிப்பான். அவற்றை, நாம் இப்பிறவியிலேயே அனுபவிக்க முடியாவிடினும், 'மறு பிறப்பிலேனும் அனுபவிப்போம்' என்பது சத்தியம்.

அவ்வளவேயன்றி, "விதிபெரிதா? மதிபெரிதா?" என்றால் எவற்றைப் புளியங் கொட்டை யளவென்றும், பூசனிக்காயளவென்றும் கூறுவது? "உருவத்திலல்ல, சக்தியில்" என்று வினவினாலோ அதற்கும் வழியில்லை. ஏனெனில் "இருள்பெரிதா? ஒளி பெரிதா?" வென்றால், எவற்றைப் பெரிதென்று கூறமுடியும்? ஆனால், "நல்லது எது?" என்று வினவினால் "ஒளி நல்லது" என்று கூறலாம். அதைக்கூட காமுகரும் கள்வரும் ஒப்புக் கொள்வதில்லை. நாம் என்ன செய்யலாம்! இவற்றிற்கே 'பொழுது போக்கும் வீண் குதர்க்கங்கள்' என்று பெரியோர் பெயர் கொடுத்தனர்.

ஆகையால், எம்போன்ற மாணவ சகோதரர்களே! நாம் நம்முடைய வாழ்நாட்களை, வீண்நாட்களாகச் செய்யாமல் 'விவகாரம் பேசுதல்' என்ற நிலைமையைவிட்டு, 'சந்தேகந் தெளிதல்' என்ற நிலைமையில் நின்று, நம் பெரியோர்களை யடுத்து, உண்மையை அறிந்து, அறிந்தபடி யொழுகி, நல்வழியைச் சார விடையேறும் பசுபதியாகிய அருட் பெருஞ்சோதி யருள் புரிய வேண்டுமாய்ப் பிரார்த்திப்போமாக!

குற்றங்களைந்து குணத்தைக் கொள்ளுதல் கற்றவர்க்குற்ற கடன்.

கி. ஆ. பெ. விஸ்வநாத பிள்ளை,
திருச்சிராப்பள்ளி.

குறிப்பு:—நமது நண்பர் கூறியது யாவரும் அறிந்து கைக்கொண்டொழுக வேண்டிய ஒரு சிறந்த நற்போதனையே யாகும். ஆனால் இதில் ஒருவிஷயத்தை மட்டும் நாம் மறுக்கவேண்டியது அவசியமா யிருக்கிறது. ஏனெனில் அது மோக்ஷ இச்சைகொண்டு ஞான அப்பியாசத்தில் முயல்வோர்களுடைய சிரத்தையைக் குறைத்து விடும். அதை வெளியிடாது விட்டுவிடலாமே, என் வெளியிட்டு மறுப்பெழுத வேண்டு மென்று சிலர் கருதலாம். இதனால் வியாசமனுப்பியவர் மனம் வேதனைப்படுமே என்றும் நினைக்கலாம். ஆயினும் இன்னும் அனேகர் அந்தத்தவறான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்களாதலால் யாவர்க்கும் அதை யறிவிக்கவேண்டியே இவ்வாறு செய்யவேண்டியதாயிற்று. அதோடு இந்த வியாசம் அனுப்பிய நண்பர் நமது செய்கையால் மனவருத்தமடையாமல் நமது வாக்கை குருவுபதேசமாய் ஏற்றுக் கொள்பவர் என்று நாமறிவோம்.

அந்த விஷயம் எது வெனில்,

" 'ஈசன்வேறு நான்வேறு' என்றெண்ணாமல் 'நானே அவன், அவனே நான்' என்ற......பாக்கியம் பிராப்தமின்றி லபிக்காது" என்ற விஷயமே.

ஞானம் ஒருபோதும் பிராரப்த அமைப்பின்படி வருவதல்ல. அது ஒன்று மட்டும் நாம் முயற்சி செய்தே யடையவேண்டும். பிராரப்தம் என்பது கர்மத்தின் பலன். ஞானம் கர்மத்தால் வருவதல்ல. இச்சையோடு செய்யும் ஆகாமிய கர்மங்களே சஞ்சிதமாகின்றன. போன ஜன்மத்தில் செய்த சஞ்சிதமாகிய மூட்டையை இப்போது பிராரப்தம் என்ற பெயரால் அனுபவிக்கிறோம். கருமத்திலிருந்து விடுபடுவதே முத்தி — பிராரப்த பலன் நமது முயற்சியில்லாமல் தானே வரும். தடுத்தாலும் போகாது. விருப்போடேயோ விருப்பு வெறுப்பின்றியோ யதை யனுபவித்தே தீர வேண்டும்.

ஞானத்தை மட்டும் நமது முயற்சியால்தான் (முயற்சியின் அளவிற்குத் தக்கபடி ஒரு ஜன்மத்திலோ பல ஜன்மங்களிலோ) அடையவேண்டும்.

ஆனால் பிராரப்தத்திற்கு பலம் அதிக மாதலால் கெட்ட பிராரப்தம் அதிக மிருந்தால், அதாவது பல ஜன்மங்களை யளிக்கும் வன்மையுடையதாயின், கடைசிஜன்மம்வரை ஞானம் கிட்ட ஒட்டாது தடுக்கும். நிருவிகற்ப நிட்டையி லிருந்தாலும் வெளிக்கிளப்ப அதற்குச் சக்தியுண்டு—அவ்வளவே யன்றிப் பிராரப்தத்தால் ஞானம் வராது. இன்னும் விரிக்கின் பெருகுமென அஞ்சுகிறோம். மார்க்கண்டேயர் விஷயம் பொது விதியாய் எடுத்துக் கொள்ளத்தக்கதல்ல. எல்லாரும் மார்க்கண்டரல்ல — எல்லா விதிகளுக்கும் எங்கேனும் ஒரு விலக்குண்டு — விதி முடிந்தே யாவரும் மடிகிறார்களென்பது பொதுவான நியதி. தேகத்தைவிட்டு நீங்கிய உயிர் மறுபடி யத்தேகத்திற்குள் வராது என்பது நியதி. அப்படியிருக்க அப்பர், சம்பந்தர், சுந்தரர், பட்டினத்தடிகள் இவர்கள் இறந்தவர்களை எழுப்பி யிருக்கிறார்கள். ஆகையால் மார்க்கண்டேயர் திருஷ்டாந்தம் இதற்குப் பொருந்தாது.

பத்திரிகாசிரியர்.

---

## "கோடாலிக் காம்பு குலத்துக் கீனம்"

மரத்தைப் பிளக்கும் கோடரி இரும்பாற் செய்யப்பட்டது. அதுவே மரத்தைப் பிளக்கிறது; அழிக்கிறது. ஆனால் அதன் காம்பாகிய மரமே அதில் நுழைந்து கொண்டு தன் இனமாகிய மரங்களையழிக்க உதவிசெய்கிறது.

அதைப்போலவே மனிதரிலும் கோடரிக்காம்புகள் உண்டு. மனிதரில் சிலர் தங்கள் ஜாதிக்கோ நாட்டிற்கோ பிரதிகூலம் செய்கிறவர்களோடு சேர்ந்து கொண்டு, தங்கள் சுயலாபத்தை மட்டுமே கருதி, தங்கள் ஜாதிக்கும் நாட்டிற்கும் தீங்கிழைக்கிறார்கள். இத்தகைய மாபாதகர்க்கே கோடாலிக்காம்புகள் என்று பெயர். இவர்கள் தங்கள் குலத்திற்கே தீங்கு செய்வதால் "கோடாலிக்காம்பு குலத்துக்கீனம்" என்ற பழமொழி உண்டாயிற்று. அந்தோ காலவித்தியாசத்தால் — கலிகாலக் கொடுமையால் — நம் புண்ணிய பூமியில் இப்போது இச்சாக்கு மிக்க மலிவாய்விட் டிருக்கிறது.

தாய் நாட்டின் நன்மைக்கு இவர்கள் ஒரு உதவியும் செய்யாவிட்டாலும், அதற்காக உழைப்பவர்களோடு சேர்ந்து வேலை செய்யாவிட்டாலும் சும்மாவாவது இருக்கலாமல்லவா? அதை விட்டுத் தாய் நாட்டின் க்ஷேமத்தைக் கருதி அவ்வழியில் நடப்போரைத் தடுப்பானேன் என்பதே நமக்கு

விளங்கவில்லை. அப்படிச் செய்து தேச நன்மைக்கே பாடுபடும் பெரியோரின் சாபத்துக்காளாகிருர்களே யென்று ஒரு புறம் இவர்களுக்காக இரக்கங்கொள்ள வேண்டியதாகவு மிருக்கிறது.

அந்தோ! இப்போது உலகிலுள்ள நாடுகளில் நம் ஒரு நாடுதவிர மற்ற யாவையும், முக்கியமாகிய மேல்நாடுகளும், ஜபான் முதலியவையும் கூடிய வரையில் க்ஷேம நிலைமையிலேயே யிருக்கின்றன. ஏனெனில் அந்நாட்டார்கள் தங்கள் தாய்நாட்டின் மேல் அபிமானமும் அதன் முன்னேற்றத்திலேயே கருத்தும், நாட்டமும், ஊக்கமும் வைததிருந்து நடந்துகொள்கிருர்கள். ஒரு இங்கிலீஷ்காரன் அன்னிய நாடு சென்றிருந்தால் அங்கு தனக்கு வேண்டிய ஒரு சாமானை வாங்குவதாயின் தன் நாட்டிற்செய்தது கிடைக்காவிட்டால்தான் அன்னிய நாட்டுச் சாமானை வாங்குவான். அது இருக்கும்போது அதைப் புறக்கணித்துவிட்டு அன்னிய நாட்டுச் சாமானை வாங்க ஒருபோதும் அவன் மனம் இடந்தராது. அப்படிச் செய்வதைத் தேசத் துரோகமாய் அவன் கருதுவான். அதுதான் தேசபக்தி.

இப்போது நம் நாடு இத்தகைய தரித்திர நிலைமையி லிருப்பதற்குக் காரணம், நம் நாட்டில் கைத்தொழில் (பல காரணங்களால்) குன்றிப்போனதும் அதனுல் நாம் செலவிடும் பணத்தில் பெரும்பாகம் அன்னிய நாடுகளுக்குச் செல்வதுமே யாகும். இப்போது தான் நமது நாட்டார் கொஞ்சம் கண்விழித்து முன் உன்னத நிலையில் இருந்த நம் நாட்டுக் கைத்தொழில்களை உயிர்ப்பிக்க முயல்கிருர்கள். மனித வாழ்க்கைககு இன்றியமையாத முக்கியப் பொருள்கள் உணவும் ஆடையுமாகும். மற்றவை பெரும்பாலும் விசேஷ போகங்களைச் சேர்ந்தவைகளே யெனலாம். எந்த நாடு தனக்கு வேண்டிய உணவையும் ஆடையையும் உற்பத்திசெய்துகொள்ளாமல் அவைகளுக்காக அன்னிய நாட்டை யெதிர்பார்த்துக்கொண்டிருக்கிறதோ அந்த நாடு யாவற்றினும் கீழானதேயாகும். அதற்கெவ்வித கௌரவமும் மதிப்பும் கிடைக்காது. அது அன்னியரால் மிக்க கேவலமாய்க் கருதப்படும். ஒரு மனிதன் தனக்கு வேண்டிய உணவையும் உடையையும் சம்பாதித்துக்கொள்ளாமல் அன்னியர் ஆதரவில் அவற்றைப் பெறுவானுயின் அவன் எவ்வாறு அவமதிப்படைவானே, எப்படி யாவராலும் கேவலமாய் மதிக்கப்படுவானே அவ்வாறேதான் மேற்கண்ட நாட்டின் கதியும்.

அந்தோ! இத்தகைய அவமானமான நிலைமை நமது நாட்டாரில் அனேகருக்கு மனதில் உறுத்தாமலே யிருப்பது என்ன பரிதாபம். ஒருவனை அவன் சொந்தச்சுற்றத்தானே "அடே அனுதை! பசியை யடக்கச் சோற்றுக்கும் மானத்தை மறைக்கக் கந்தைக்குங்கூடக் கையேந்தி நிற்பவனே!" என்ருல் அவன் எவ்வளவோ உரோஷம் வந்து சொன்னவனை யடிக்கப்போவான்-உடனே அறிவு உதித்துத் தன் உணவையும் ஆடையையும் கூலிவேலை செய்தாவது சம்பாதித்துக்கொள்வான். அந்தோ! இப்போது நாம் அந்த நிலைமையில்தான் இருக்கிறேம் என்பதை யுணர வேண்டாமோ.

இப்போது எங்கும் நம் ஆடைகளை நாமே உற்பத்தி செய்துகொள்ள வேண்டும் என்ற நல்லுணர்ச்சி பிறந்திருக்கிறது. இது நம் நன்மைக்காக நாம் செய்துகொள்கிறதே யன்றி இன்னொருவருடைய கெடுதியை நாம் கோரவில்லை. நம் தாய் நாட்டின் க்ஷேமத்திற்கு இக்கைத்தொழிலை விர்த்தி

செய்யவேண்டியது நமது கடமை. அதற்காகவே நம் நாட்டிலுற்பத்தியான ஆடையையே நாம் அணியவேண்டியதும் நமது பிறப்பின் கடமை. அவ்வாறே நம் நாட்டாரையும் செய்யும்படி வேண்டிக்கொள்ளவும் தூண்டவும் நமக்குச் சுதந்தரமும் கடமையும் இருக்கின்றன.

அப்படியிருக்கச் சில எஜமான்மார் தங்களிடம் வேலை செய்வோரை நம் நாட்டுத் துணியைக் கட்டவேண்டாமென்று திட்டம் செய்கிறார்களென்றும், நம்மவர்களில் உயர்ந்த உத்தியோகத்திலிருக்கும் சிலரும் அவ்வாறே தங்களிடம் வேலை செய்வோரை நாட்டுத்துணி யணிந்து வேலைக்கு வரக்கூடாதென்று கட்டளை யிடுவதாகவும் கேள்விப்படுகிறோம். அந்தோ! இவர்களை யென்னென்று கூறுவது? இவர்களுக்குத் தாய் நாட்டின் க்ஷேமத்தைப் பற்றிய உணர்ச்சி யில்லையேனும் அதன் க்ஷேமத்திற்கே சிறைவாசம் புரியும் அவதார புருடராகிய மகாத்மா காந்தியவர்களின் கட்டளைப்படி நடக்க வேண்டு மென்ற உணர்ச்சியேனு மிருக்கவேண்டாமோ? அதுவுமின்றேல் அவர் கட்டளைக்கு மாறாக நடத்தல் பெரும் பாதக மென்றதையேனுங் கருதவேண்டாமோ.

இவர்கள் யாருடைய தயவிற்கும் கடாட்சத்திற்கும் எதிர்பார்த்து இவ்வாறு பெற்ற தாய்க்குத் துரோகம் செய்யும் பெரும் பாதகத்திற் குள்ளாகிறார்களோ தெரியவில்லை. "எங்கும் நிறைந்துள்ள மகா சத்தியாகிய பாரதமாதா நம் குலத்தை யழித்து நம்மைக் கொடுநரகிற் குடியேற்றுவாள்" என்ற உண்மை யிவர்களுக்குப் புலப்பட்டால் இவ்வாறு செய்யார்கள். அந்தோ! கருணாநிதியாகிய பரம்பொருள் இவர்களுக்கு நல்லறிவளிக்கப் பிரார்த்திக்கிறோம்.

———

பத்திரிகாசிரியர்.

## தபால் கொள்ளைக்காரர்கள்

(159-ம் பக்கத் தொடர்ச்சி)

சாமி:—"ஏன்? அதைப்பற்றி யென்ன அவ்வளவு அக்கரை?" என்றான்.

இரங்கநாதன் "அச்சங்கதி யுனக்குத் தெரிந்தால் நீ யிப்படி அசிரத்தையா யிருக்கமாட்டாய். இப்படிவா உன் செவியில் கூறுகிறேன்" என்றழைத்து இரகசியமாய் ஏதோ கூறினான்.

அதைச் செவியேற்றதே சாமிநாதன் பேரிடிவிழுந்த நாகம்போல் முகம் வெளுத்து ஏக்கங்கொண்டு "அடகடவுளே! அப்படியானால் அவளைப் பிடிக்காதவரையில் என்றைக்கிருந்தாலும் நம்மிருவர் பிராணன்களுக்கும் ஆபத்தே" என்றான்.

இரங்:—தடையேயில்லை. அவளை யெவ்விதமேனும் கண்டு பிடித்தே தீரவேண்டும்.

சாமிநாதன் "ஆம் ஆம்; அவள் எனக்கு மனைவியாகியே தீரவேண்டும்" என்றான்.

* * * * * *

சுமார் இருபதுநாட்கள் கழித்துச் சாமிநாதன் ஒருநாள் காலை குதிரையேறிக்கொண்டு நகரத்தின் ஓரத்திலுள்ள ஒரு கிராமத்தின் வழியாய்ச் சென்றுகொண்டிருக்கையில் ஓர் அழகிய கன்னிகை கையில் ஒரு கூடை நிறைய இலந்தைக் கனிகளை யெடுத்துக்கொண்டு ஒரு வீட்டை நோக்கி வந்துகொண்டிருப்பதைக் கண்டதும் திடுக்கிட்டுக் குதிரையை நிறுத்தி

அவளை யுற்று நோக்கினான். அதற்குள் அக்கன்னிகை யிவனைப்பார்த்ததும் நடுக்கங்கொண்டு சற்றுநேரம் அசைவற்று நின்று பிறகு பேயால் துரத்தப்பட்டவள்போல் அருகிலிருந்த வீட்டிற்குள் ஓடினாள்.

சாமிநாதன் அவள் கோமளவல்லியே யென்று அறிந்துகொண்டதே மிக்க அதிசயமும் ஆனந்தமுங்கொண்டு தட்சணம் குதிரையைத்திருப்பி வேகமாய்த் தன் வீட்டிற்குச் சென்றதும் சந்தோஷத்தோடும் மிக்க ஆத்திரத்தோடும் தன் தோழனாகிய துஷ்டனை நோக்கி நடந்த சம்பவத்தைக் கூறினான். அதைக்கேட்ட இரங்கநாதன் சந்தோஷத்தால் துள்ளியெழுந்து "நாம் இன்றே சென்று அவளைக் கொண்டுவந்துவிடவேண்டும். ஆலசியமே கூடாது" என்று கூறினான்.

கோமளவல்லிக்குச் சாமிநாதனைக் கண்டதால் உண்டான நடுக்கமும் பயமும் வீட்டிற்குள் சென்றபின்பும் அடங்கவில்லை; அவள் குருநாதன் மனைவியிடம் அலறிச்சென்று அவளைக் கட்டிக்கொண்டு "அம்மா! அத்துஷ்டன் என்னை மணம்புரிய வெண்ணி யிருக்கிறானே யவனைப் பார்த்தேன். அவனிடம் என்னைக் கொடுத்து விடாதீர்கள்" என்று அழுதாள். அருகிலிருந்த குருநாதன் கோபத்தோ டெழுந்து,

"குழந்தாய்! நீயந்தப்போக்கிரி நாய்களுக்குச் சற்றும் அஞ்சாதே. நான் இருக்கிறவரை உன் கிட்டவருகிறவன் எவன் பார்க்கிறேன்" என்று தன் முரடான கரத்தை யோங்கிப்பலமாய் அங்கிருந்தப் பலகைமே லடித்தான். அவன் மனைவி அன்பான மொழிகளால் அவள் பயத்தை நீங்கச்செய்து தேறுதல் உண்டாக்கினாள்.

---

## 15-வது அத்தியாயம்.

---

அன்று பிற்பகல் சுமார் மூன்றுமணிக்கு ஒரு வண்டிவந்து குடியானவன் வீட்டெதிரில் நின்றதும் துஷ்டர்கள் இருவரும் அதினின்றிறங்கினார்கள். உடனே குருநாதன் மனைவி வாயிற்படியில் வந்து நின்று நீங்கள் யாரென்று வினவினாள். இருவரும் பெயர்களைக் கூறியதே யவள் தெரிந்துகொண்டு இங்கே நீங்கள் வரவேண்டிய காரண மொன்றுமில்லை யென்று கதவை மூடிவிட நினைத்தாள். ஆனால் அது மரியாதை யல்லவென்பதோடு இவர்கள் எண்ணங்களை யறியவேண்டு மென்று நினைத்து "வாருங்கள்" என்று அழைத்துப்போய்த் தாழ்வாரத்தில் உட்காரவைத்து விட்டு "என்ன அலுவலாய் வந்தீர்கள்?" என்று கேட்டாள். இரங்கநாதன் நாங்கள் ஒரு முக்கிய விஷயமாய் உங்களிடமும் உங்கள் கணவரிடமும் பேசவந்தோம்" என்றான்.

அம்மாது அப்படியானால் என்கணவரை யழைக்கிறேன் என்று கூறி யுள்ளே சென்று குருநாதனை யழைத்து வந்தாள். இருவரும் வந்தவர்களெதிரில் உட்கார்ந்த பின், சங்கதியென்ன கூறுங்கள் என்றார்கள்.

அதன்மேல் இரங்கநாதன் மிக்க தந்திரமாய்ப் பேசவாரம்பித்து, தன் சுற்றத்தாரெல்லாம் மடிந்துவிட்ட தாகவும், கடைசியில் மனைவியும் போய்விடத் தான் துயரம் பொறுக்காது சிறு பெண்ணாயிருந்த புத்திரியைத் தன்

நண்பர் வீட்டில் விட்டுவிட்டுச் சென்றதாகவும் பிறகு இப்போது திரும்பி வந்தபோது அப்பெண் தான் தந்தை யென்பதை மறந்துபோய் மனச் சலனமடைந்து தன்னோடு வசிக்கமாட்டே னென்று முரட்டுப் பிடிவாதம் செய்வதாகவும் அதை யெவ்வளவோ செல்வாக்காகவும் மேன்மையாகவும் வளர்க்கவேண்டு மென்று எண்ணினால் அப்பெண் இம்மாதிரி விரோத மாய்த் திரும்பிவிட் டிருக்கிறதென்றும், அதனால் தன்மனம் பெரும் வேத னைப்படுகிற தென்றும் கூறி "அம்மா! இப்படி ஒருபெண் பெற்று இம்மா திரி துயரம் எனக்குப் பகவான்......" என்று கண்களில் ஜலம் மெய் யாகவே வந்து விட்டவன்போல் கைக்குட்டையை யெடுத்துக் கண்களைச் சற்று ஒத்திக் கொண்டான்.

குடியானவன் மனைவி "அந்தோபாபம், இது மிக்க பரிதாபமானதே. பெற்ற தகப்பனுக்கே மகள் இப்படித் துரோகம்செய்தது மிக்க விசனமா னதே. அய்யா! அந்தப் பெண்ணை வைத்திய சாலையில் கொஞ்சநாள் வைத் திருப்பது நலமென்று எனக்குத் தோன்றுகிறது" என்றான்.

இம்மொழிகளைக் கேட்டதே இரங்கநாதன் உள்ளத்தில் மிக்க சந் தோஷமடைந்து விட்டான். குடியானவர்கள் தன் வார்த்தைகளை முழுமை யும் நம்பிக்கொண்டு தனக்காகப் பரிதாபமடைகிறார்கள்! ஆனால் நம் முடைய கருத்தறியாது வைத்திய சாலைக்கனுப்பச் சொல்லுகிறார்களென்று கருதிக்கொண்டு,

"அந்தோ! அம்மா! இன்னும் சரியாய் ஒருமாதம்கூட ஆகவில்லை யப் பெண் இருந்த வீட்டை விட்டு எங்கோ ஓடிப்போய் எங்கெங்கும் தேடி என் மனமும் புண்ணாகி விட்டது. சுமார் ஒருமாத காலமாய் உங்கள் வீட் டில் கோமளவல்லி யென்ற ஒரு பெண் வந்திருக்கிறதல்லவா? என்றான்.

அம்மாது மறைப்பது சரியல்லவென் றெண்ணி ஆம் ஆம் என்றாள்.

இரங்கநாதன் சந்தோஷமடைந்து "ஆ ஆ தெரியும் தெரியும். அந்தப் பெண்தான் அம்மா என் ஏகபுத்திரி. அவளை யழைத்துச் செல்லவே நாங்கள் இப்போது உங்களிடம் வந்தோம்" என்றான்.

அச்சமயம், வீட்டிற்குள் நின்று யாவும் கேட்டுக்கொண்டிருந்த கோமள வல்லி வெளிவந்து வாசற்படியருகில் நின்று,

"ஓ துஷ்டனே! நீ கூறுகிற சங்கதி யாவும் அடியோடு பொய் யென் றும் நான் உன் புத்திரியல்ல வென்றும் உனக்கே நன்றாய்த் தெரியும்" என்றாள்.

இதைக் கேட்டதே இரங்கநாதனுக்கு இடிவிழுந்த மாதிரியாயிற்று. துயரமும் கலவரமும் கோபமும் அடக்கமுடியவில்லை. கடைசியில் கன்னி கையை நோக்கி,

கோமளம்:—"நீ சுபாவத்திற்கே விரோதமாய் நடக்கிறாய்"

கன்னி:—"உன்வரையில் அப்படித்தான் தோன்றும்" என்றாள்.

இரங்:—"உனக்குக் கூடிய சீக்கிரத்தில் நல்ல தண்டனை செய்து கற்பிக் கிறேன். நீ யேன் வீட்டிற்கு வரமாட்டே னென்கிறாய்?" என்றான்.

(தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

ஜீவிய சந்தாதாரர்கள்.

F. 729. R Kalingappan Chettyar,
Palavangudi. (Ramnad.)

F. 993. Sona Sockalingam Chettyar,
No. 77, Belfield Street, Ipoh. (F.M.S.)

18260. P. Appakannu Mudaliar,
C/o. P. Arumuga Mudaliar,
No. 44, Thiyagaraja Pillai Street, G. T. (Madras.)

பூமியின் விஸ்தீரணம் 197 இலக்ஷம் சதுரமைல். அதில் மகா சமுத்திரம் முதலிய நீர்ப்பரப்பின் விஸ்தீரணம் 140 இலக்ஷம் சதுர மைல்.

ஒரு மனிதன் சராசரி வருட வருமானம்.

| | பவுன்-ஷிலிங் | | பவுன்-ஷிலிங் |
|---|---|---|---|
| கிரேட் பிரிடன் | ... 40 — 0 | ஸ்வீடன் | ... 20 — 0 |
| ஆஸ்ட்ரேலியா | ... 40 — 0 | ஸ்விட்ஸர்லாந்து | ... 19 — 0 |
| அமெரிகா | ... 40 — 0 | ஸ்பெயின் | ... 16 — 0 |
| டென்மார்க் | ... 32 — 5 | ஆஸ்டிரியா | ... 15 — 0 |
| ஜர்மெனி | ... 31 — 0 | இடலி | ... 14 — 0 |
| பிரான்ஸ் | ... 27 — 8 | ருஷியா | ... 14 — 0 |
| அர்ஜண்டைன் | ... 24 — 0 | இந்தியா | ... 2 — 5 |

(1 பவுன் 15 ரூபா விகிதம்)

சுதேச தேகப்பயிற்சி.

பெங்களூரிலுள்ள மெகானிகல் இன்ஜினீரிங் கல்லூரியில் வாசிக்கும் N. வரதராஜுலுநாயுடு என்பவர் (22-வயது) இரண்டு வருடங்களில் 15 வெள்ளி மெடல்களும், 2 தங்க மெடல்களும், 8 கிண்ணங்களும் பரிசு பெற்றிருக்கிறார். அவர் கண்டிப்பான சாகபக்ஷணி (அன்னிய பதார்த்தம் பொசிப்பவரல்ல). அவர் ஏழுவருடங்களாய் நமது நாட்டு முறைமைப்படி தேகப்பயிற்சி செய்துவந்திருக்கிறார்; தினந்தோறும் சுவாசப்பயிற்சி செய்கிறார். அவர் ஓடுவதில் பரிசுகள் பெற்றிருப்பதோடு,நீந்துவது, தாண்டுவது, பாரம் தூக்குவது, எறிவது (ஆகிய இவற்றிலும்,) சாமார்த்திய மடைந்திருக்கிறார். அவற்றில் சிலவற்றைமட்டும் ஈண்டு குறிப்பிடுகிறோம்.

1. ஒரு மைல் ஓடும் பந்தயம் 4 நிமிடம் — 20 விநாடியில்; யுவராஜரின் கிண்ணம் — முதல் பரிசு.

2. ஐந்து மைல் பந்தயம் 20 நிமி — திவான் கிண்ணம் முதல் பரிசு.

3. இருபத்திரண்டு மைல் பந்தயம் — 1-மணி 52 நிமிடம். முன்ஸபன்னப்பாவின் பந்தயக்கிண்ணம் — முதல் பரிசு. இந்த மூன்றாவது ஓட்டத்தில் அவர் யாவராலும் புகழப்பட்டார். இதில் ஓடும்போது கூட துவிசக்கிரத்தில் வந்த சிலரைக் கடந்து முன் சென்றார். நேரில் கண்ட யுவராஜா அவர்களும் மற்றையரும் இதைக்கண்டு மிக்க வியப்படைந்தார்கள். ஐரோபாவில் நடக்கும் அடுத்த மாரதன் ஓட்டப்பந்தயத்திற்கு இவரை யனுப்பக் கருதுகிறார்கள். (இந்தியன் ரிவியூ)

நமது மாணவ நண்பர்களும் மற்ற வாலிப நண்பர்களும் நமது சுதேச முறைப்படி தேகப்பயிற்சி செய்வதன் நன்மையை யினியேனு முணர்ந்து அதைக் கைப்பற்றி யொழுகுவார்களோ ?

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

துந்துபிஞூ மார்கழிமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
பசலி 1332—கோல்லம் 1097-98—ஹிஜரி 1340—41
இங்கிலீஷ் 1922ஞூ டிசம்பர்மீ—1923ஞூ ஜனவரிமீ

| மார்கழிமீ | டிசம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | சனி | திர38-30 | விசா-21-40 | சித்-60 | சனிப்பிரதோஷம் |
| 2 | 17 | ஞா | சது33-8 | அனு-17-48 | மர-60 | போதாயன அமாவாசை |
| 3 | 18 | திங் | ●28-23 | கேட்-14-35 | சித்-60 | அமாவாசை |
| 4 | 19 | செ | பிர24-58 | மூல-12-25 | அ11-40 சி | |
| 5 | 20 | புத | துதி22-50 | பூரா-11-35 | அமி-60 | |
| 6 | 21 | வியா | திரி22-30 | உத்-12-23 | சித்-60 | |
| 7 | 22 | வெ | சது24-7 | திரு-15... | ம-15-0சி | |
| 8 | 23 | சனி | பஞ்27-23 | அவி-19-28 | சி19-28அ | |
| 9 | 24 | ஞா | சஷ்32-35 | சதை-25-28 | சித்-60 | |
| 10 | 25 | திங் | சப்38-40 | பூரட்-32-40 | சித்-60 | |
| 11 | 26 | செ | அஷ்45 30 | உத்-40-25 | அ40-25 சி | |
| 12 | 27 | புத | நவ52-3 | ரேவ-48-5 | மர60 | |
| 13 | 28 | வியா | தச57-48 | அசு-55-0 | அ55-0சித் | வாகனமேற, ஆபரணம் பூண |
| 14 | 29 | வெ | ஏகா60... | பர-60... | சித்60 | திருதினஸ்பிருக் |
| 15 | 30 | சனி | ஏகா2-15 | பர-0-40 | சித்0-40அ | வைகுண்ட ஏகாதசி, சர்வ ஏகாதசி, ஸ்மார்த்த ஏகாதசி, கிருத்திகை |
| 16 | 31 | ஞா | துவ4-55 | கிரு-4-43 | சித்60 | பிரதோஷம் |
| 17 | 1923ஞூ ஜனவரிமீ 1 | திங் | திர6-3 | ரோ-7-13 | அ7-13 சி | கிணறு வெட்ட |
| 18 | 2 | செ | சது5-25 | மிரு-8-5 | சித்8-5ம | நடராஜர் அபிஷேகம் |
| 19 | 3 | புத | ○ 3-38 | திரு-7-33 | சித்-60 | ஆருத்ரா தெரிசனம் |
| 20 | 4 | வியா | பிர0-23 துவ56-25 | புன-5-58 | அ5-58சி | பௌஷ பகுளம் |
| 21 | 5 | வெ | திரி53-58 | பூச-4... | மர-60 | பிரயாணம் விலக்க |
| 22 | 6 | சனி | சது47-3 | ஆயி-0-38 மக-57-23 | ம0-38 அ | நவக்கிரகசாந்தி செய்ய |
| 23 | 7 | ஞா | பஞ்42-0 | பூர-54-3 | சித்54-3அ | இரவில் தனிய நாள் |
| 24 | 8 | திங் | சஷ்37-15 | உத்-50-38 | சித்60 | பகலில் தனிய நாள் |
| 25 | 9 | செவ் | சப்31-55 | அஸ்-47-23 | சித்-60 | திஷ்ரோஷ்டகம் |
| 26 | 10 | புத | அ 27-5 | சித்-44-8 | சித்-60 | பிரயாணம் விலக்கல் |
| 27 | 11 | வியா | நவ22-18 | சுவா-41-15 | அ41-15சி | மாடு முதலிய கொள்ள |
| 28 | 12 | வெ | தச17-48 | விசா-38-30 | சித்-60 | தானியம் வாங்க |
| 29 | 13 | சனி | ஏக13-40 | அனு-36-8 | சித்-50 | மகாரவி 45—30 போகிபண்டிகை |

| | | | |
|---|---|---|---|
| கே | | | |
| செ | 16வ மக- புத 27 ,, மீன-செ | | |
| சூரி புத | சுக் | குரு | ராகு சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



| தொகுதி ௮ | துந்துபிஸு மார்கழிமீ ௧உ<br>1922ஸு டிசம்பர்மீ 16உ | பகுதி 6 |
| --- | --- | --- |

## கடவுள் வணக்கம்.

ஆக்கையெனு மிடிகரையை மெய்யென்ற பாவிகா
　　னத்துவித வாஞ்சை யாத
லரியகொம் பிற்றேனை முடவனிச் சித்தபடி
　　யாகுமறி வவிழ வின்பம்
தாக்கும்வகை யேநிராட் சரியைகிரி யாயோக
　　சாதனம் விடுத்த தெல்லாம்
சன்மார்க்க மல்லவிவை நிற்கவென் மார்க்கங்கள்
　　சாராத பேரறி வதாய்
வாக்குமன மணுகாத பூரணப் பொருள்வந்து
　　வாய்க்கும் படிக்கு பாயம்
வருவித்து வட்டாத பேரின்ப மான்சுக
　　வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
　　சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
　　சின்மயா னந்த குருவே.

---

உடல்பொய் யுறவாயி னுண்மையுற வாகக்
கடவாரார் தண்ணருளே கண்டாய்—திடமுடனே
யுற்றுப்பார் மோன னொருசொல்லே யுண்மைநன்றுப்
பற்றிப்பார் மற்றவெல்லாம் பாழ்.

பாராதி பூதமெல்லாம் பார்க்குங்கா லப்பரத்தின்
சீராக நிற்குந் திறங்கண்டாய்—நேராக
நிற்குந் திருவருளி னெஞ்சேயா நிற்பதல்லால்
கற்குநெறி யாதினிமேற் காண்.

## அரும்பொருள் விளக்கம்.

1. இடிகரை=வெள்ளத்தாலடி யற்று விழுந் தறுவாயிலிருக்கும் மண் கரை—தேகம் எந்த சமயத்திலோ வீழ்ந்தழியும் தன்மையதாதலின் அம் மண்கரைக்கு ஒப்பிடப்பட்டது.

"பொத்தை யூன் சுவர் புழுப்பொதிந்துழுத் தசும் பொழுகிய பொய்க்கூரை * *" என்றார் மணிவாசகப் பெருமான்.

ஆக்கையெனு........முடவனிச் சித்தப்படியாகும்=அழியும் தேகமே மெய் யென்று நம்பிய பாவியாகிய நான் அத்துவித ஞானம்பெற அவாக் கொள்ளுதல், முடவன் உயரமான மரத்தின் கிளையிலுள்ள தேனை யிச்சிப்பதை யொக்கும்.

தேகம் முதல் நாதம் ஈறுகவுள்ள தத்துவங்கள் அனைத்தும் அநித் தியம் துக்கம் சடம் என்றுணர்ந்து அவற்றிற்கு மேனின்ற ஆன்மசொரூபமே தானென்றறிவதே ஞானம். தேகம் தான் என்றும் நித்தியம் என்றும் நம்பு வது சுத்த அஞ்ஞானம். இத்தகைய அஞ்ஞானம் என்னிடமிருக்க நான் ஞானமடைய விரும்புவது தகுதியோ என்றார்.

அறிவவிழ=அறிவு விகசிக்கும்படி

இன்பம் தாக்தும் வகையேது=பேரின்பம் உண்டாகும் வழி யேது (உண் டாகாது என்றபடி).

என் மார்க்கங்கள் சாராத=எந்த மார்க்கங்களும் அணுகாத.

போறிவதாய்=அகண்டாகார ஞானமாய்.

வாக்கு மனமணுகாத=மனோ வாக்குக் கதீதமான.

ஒருவன் ஞானமடைய விரும்பின் நித்தியா நித்திய வஸ்து விவேகம் முதலிய சாதனங்களை யடைந்து சரியை கிரியை யோகம் என்னும் சோபானங்களை யனுசரித்து ஞானமடைய வேண்டுமே யன்றி யவற்றை யலட்சியம் செய்துவிட்டால் ஞானம் கிட்டாது என்று அறிவுறுத்துகிறார்.

2. உடல் போய் உறவு=தேகத்தின் உறவு பொய்; அதாவது அநித்தியம்.

(தேகம் சதா நம்மோடு கூடவே யிருக்கிறது. நம் தேகம் என்று எவ்வளவோ சொந்தம் பாராட்டி அதைப்போற்றிப் போஷித்துப் பாதுகாக்கிறோம். ஆனால் எந்த விநாடியிலோ அது சவமாகக் கீழே விழ நாம் அதை விட்டுப்பிரிந்து விட நேர்கிறது. இவ்வாற்றால் இத்தகைய தேகத்தின் உறவே பொய்யாயிருப்பதாயின், வேறு எந்தச் சுற்றத்தைத் தான் உண்மையென என்னுவது !)

மோனன் ஒரு சொல்லே=மௌனதேசிகர் அருளிய ஒரு மொழியே.

(மௌன தேசிகர் தாயுமான சுவாமிகளின் ஞான குரு). குரு உப தேசிக்கும் ஒரு மொழியே நமக்கு உண்மையான சுற்றமன்றி மற்றையாவும் அநித்தியம் என்றார்.

" ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கு மந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்குமென மொழிந்த
குருமொழியே மலையிலக்கு மற்றமொழி யெல்லாங்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்
* * * * * "

என்று இந்தச் சுவாமிகளே அருளியுள்ளது காண்க.

3. பாராதி பூதம்=பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் ஆகிய பஞ்ச பூதங்கள்.

பார்த்துங்கால்=(தத்துவ ஆராய்ச்சிசெய்து தன்னால் காணப்பட்ட வனைத்தும் தானல்ல வென்று நியதிசெய்து முடிவிலுள்ள உண்மைப்பொருளை) உணருமிடத்து.

அப்பரத்தின் சீராக நிற்கும்=யாவும் அப்பரம் பொருளின் வடிவமாகவே காணப்படும்.

" எல்லாம் தானாகவே இரண்டற்று நிற்கும் அகண்டாகார சொரூபமாகிய அந்தத் திருவருளில் நானென்பதற்று நாம் கிலேத்து நின்றுவிட வேண்டியதே நாம் செய்யவேண்டிய காரியமன்றி, அதாவது அருட்கடலில் நம்மை விழர்துவிட வேண்டிய தன்றி, இனிக்கற்க வேண்டிய தொன்றுமில்லை" என்றார்.

---

# ஆனந்தபோதினி

துந்துபி௵ மார்கழி௴ க௳

## ஹிந்து மதம்.

நேயர்களே! இப்போது நாம் நமது மதத்தைப்பற்றிப்பிரத்தியேகமாக வரைய வேண்டுவது ஏனோ வென்று சிலர் ஐயுறலாகும். ஆகையால் அதற்குக் காரணம் கூறுதும்.

இக்காலத்தில் பிறமதஸ்தர், தந்திரமாக நம்மவரிற் பாமரரை மயக்கித் தங்கள் மதத்திற்கு இழுத்துக்கொள்ள அதிகமாக முயல்கிறார்கள். நமது மதத்தைப் பாதுகாக்கும் வேந்தரில்லை. அதற்கென்று ஏற்படுத்தப்பட்ட மடங்களோ அந்த விஷயத்தில் கண்ணும் தெரியவில்லை காதும் கேட்கவில்லை யென்று இருக்கின்றன.

இது யாரிட்ட சாபமோ தெரியவில்லை. மத சம்பந்தமான தொழில் செய்வோர்தான் மதத்திற்காகப் பாடுபட வேண்டு மென்ற விதியில்லை. மதம் ஒவ்வொருவருக்கும் சொந்தமானது. ஒவ்வொருவனும் தன் மதத்தைப் பாதுகாக்க வேண்டிய கடமை யுடையவனே. தேச பக்தியும் இத்தகையதே. நேராக மதத்தைப் பற்றி வாதித்து நமது மதத்தில் சரியான மோக்ஷ மார்க்கமில்லை யென்றும் தங்கள் மதத்தில் இருக்கிற தென்றும் நிரூபித்துத் தம் மதத்தில் சேர்த்துக் கொள்வதாயின் அத்தகைய எதிரியை நம்ப லாகும். அது நீதியுமாகும். அப்படிக்கின்றி சுயமத ஆராய்ச்சி யில்லாத பாமரருக்கு, நியாயமில்லாத வெளித்தோற்றமான சில குற்றங்களைக் கூறி, நயப்பான வார்த்தைகளால் உலக சம்பந்த மான பலவித ஆசைகளைக் காட்டி மயக்கித் தம் மதத்தில் சேர்த்துக்கொள்ள முயல்வோர் விஷயத்தில் நாம் சாக்கிரதையாக இருக்க வேண்டியது அவசியமாகிறது.

நமது மதத்தவர் அத்தகைய புறச் சமயபோதகர்களால் மயக்கப்படா வண்ணம் தடுக்க வேண்டியது நமது கடமை.

நமது மதம் அநாதியா யுள்ளதும் அழிவற்றதுமான சத்தி யத்தை யஸ்திவாரமாக வுடையது. அந்நிய நாட்டார் சிலர் சரித் திரங்களில் நமது வேதம் ரிஷிகளால் எழுதப்பட்டதென்று வரைந்திருக்கிறார்கள். வேதம் 'எழுதாக்கிளவி'. ரிஷிகள் அவற் றைப் பிரித்தெழுதினார்களே யன்றி அவர்களே உண்டாக்கிய தல்ல. அவர்களுக்கு முன்பே அது உண்டு. நமது வேதத்தில் கூறியுள்ள முடிவான முத்தி நிலை கடவுளோடு ஆன்மா கலந்து விடுதலேயாகும். இதினும் மேலான நிலையில்லை. இருக்கவும் முடியாது.

நாமரூபமாகத் தோற்றும் யாவும் அழியுந் தன்மையன; அவையாவும் அநித்தியம்; கடவுள் ஒருவரே நித்தியம் என்பதைப் பற்றியும், கடவுள் இலக்ஷணம் ஆன்மலக்ஷணம், மோக்ஷலக்ஷணம், கடவுள் செய்யும் பஞ்ச கிருத்தியங்களின் இரகஸியங்கள் முதலிய யாவும் நமது மதத்தில் தெளிவாகவும் பூரணமாகவும் கூறப்பட் டிருக்கின்றன. எல்லா மதக் கோட்பாடுகளும் இதில் அடங்கி யிருக்கின்றன. கடவுள் எங்குமாய்ப் பலவுமாய் நிறைந்து நிற்கின் றார் என்ற உண்மையை அநுபவமாக இத்தேகத்திலிருக்கும் போதே காணக்கூடிய மார்க்கத்தைப் போதிப்பது நமது மதம்.

நம் நாட்டினுதித்த மகான்கள் அவ்வாறு அனுபவித்தே அதை வெளியிட்டு மிருக்கிறார்கள். இதுவே ஞானம் என்பது. இதை யடையும் அடுத்த கீழ்ப்படியான மார்க்கத்திற்கு யோகம் என்று பெயர். ஆனால் எல்லா மனிதர்களும் இம்மார்க்கங்களைக் கிரகித்துக்கொள்ளத் தக்க அறிவு வல்லமையுடையவர்களல்ல. கடவுளை அருவமாக உபாசிக்கத் தக்கவர்களே இம்மார்க்கத்தை யனுஷ்டிக்கத் தகுந்தவர்கள். இவர்கள் இதற்கு முன் செய்த முயற்சிகளால் கடவுளிடம் பக்தி முதிர்ந்து சுத்தமடைந்த மனமுடையவர்கள். மனதை யொருவழி நிற்கச் செய்வோர், அதாவது மனதைத் தம் வயப்படுத்தச் சக்தி வாய்ந்தோரே இந்த யோக ஞானங்கட்கு அதிகாரிகள்.

அத்தகையோர் மிகச் சிலரே. அப்படியாயின் கீழ்த்தர அறிவுடையோர் கதியென்ன? அவர்களும் அந்த அதிகாரத்தைப் பெறவே சரியை கிரியை என்ற மார்க்கங்கள் கூறப்பட் டிருக்கின்றன. இன்னும் புராணங்களும் மந்த அதிகாரிகள் பக்தியடைந்து சித்த சுத்தி பெற்று மேல்நிலைக்கு வருவதற்கே ஏற்படுத்தப்பட்டன. ஜனங்களில் அனேகர்க்கு ஆன்மார்த்த விஷயத்தில் மனம் செல்வதேயில்லை. அவர்களுக்கு இலௌகிக விஷயங்களிலேயே வாஞ்சை. குழந்தைகளுக்குத் தின்பண்டங்களில் ஔஷதம் மறைத்துவைத்துக் கொடுப்பதுபோல், அத்தகையோர்க்கு இலௌகிக சரித்திரங்கள் போலுள்ள புராணங்களில் ஆங்காங்கு ஞானமார்க்கங்கள் யோகமார்க்கங்கள் குறிப்பாய்க் கூறப்பட்டுள்ளன.

மனம் ஒருவழியில் நிலைக்கச் செய்யவும் பக்தி யுண்டாகவும் சகுண உபாசனை—கடவுளை உருவமாகப் பாவிப்பது—அவசியம் வேண்டியதாக விருக்கிறது. மேல்நிலையில் இது தள்ளப்படுகிறது. ஆரம்பத்தில் ஒருவர்க்கும் மனம் அருவத்தில் நிலைக்காது, பக்தி யுண்டாகாது. கிருஸ்தவர்களும் மகம்மதியரும் விக்கிரகாராதனையை யங்கீகரிக்கவில்லை. அதற்குத் தக்க காரணமிருக்கிறது. அக்காரணம் பதுமையாராதனை மலிந்திருந்த அத்தேசங்களில் அம்மதங்கள் தாபிக்கப்பட்ட காலங்களுக்குத் தக்கவைகளாக விருந்தன. நமது நாட்டில் பதுமை யாராதனை யிருந்ததுமில்லை. அக்காரணங்கள் நமக்குப் பொருந்தியவையுமல்ல—பதுமை யாராதனைக்கும் விக்கிரகாராதனைக்கும் மிக்க பேதம் உண்டு. கடையில் விற்கும் பதுமையைக் கொணர்ந்து பூசிப்பது பதுமை யாராதனை,

சாத்திரப்படி செய்யப்பட்ட விக்கிரகத்தில் மந்திரசக்தியால் கடவுளின் அருள் விலாசம் தோன்றச்செய்து அதை எங்கும் நிறைந்த கடவுளாகப் பாவித்துப் பூஜிப்பது விக்கிரகாராதனை. மேல்நாட்டார் சொல்பகாலத்திற்கு முன்பே சத்தத்திற்கு (ஒலி) வல்லமையுண்டென்றறிந்தார்கள். மந்திரம் பலவிதமான ஒலியே. ஒலியையறிவிப்பது வரி வடிவம். அதாவது எழுத்து. நம்மவர் ஆதிகாலத்திலேயே அந்த உண்மையை யறிந்து மந்திர சக்தியால் விக்கிரகத்தில் ஈசுவரன் அருள் பிரகாசிக்கும்படி செய்தார்கள். இதை விரிக்கிற் பெருகும். இதைப்பற்றி விரிவாக நமது சஞ்சிகைகளில் பிரம்ம ஸ்ரீ சிவானந்த சாகர யோகீஸ்வரரவர்கள் கூறியுள்ளதைக் கண்டு கொள்க.

கிருஸ்துவர்களும் மகம்மதியரும் கடவுளை உருவமாகப் பாவிக்கா விட்டாலும்; அவர்கள் சிந்தனையில் உருவ பாவனையில்லாமல் பக்தி ஜனிக்காது. அவர்கள் முறையே கிருஸ்துவையும், மகம்மத் ரசூலையும் கடவுளுக்கு இரண்டாவதாகவும் பரமாசாரியர்களாகவும் தியானித்தே பக்தியைப் பெருக்க வேண்டும். நமது விக்கிரகாராதனை பாபமானதுமல்ல, கடவுளுக்கு விரோதமானது மல்ல என்பதற்கு அனேக நியாயங்களுள. விரிக்கிற் பெருகும்.

புராணங்களில் மேல் போக்காய்ப் பார்ப்பவர்களுக்குக் கேவலம் இலௌகிகத்தன்மையாகத் தோன்றத் தக்கவை பலவுள. சில தகாதவைகளாகவும் வெளிக்குத் தோற்றும். ஆனால் அதன் உட்கருத்து மிக்க பரிசுத்தமான ஞானார்த்தத்தை விளக்குவதாகவிருக்கும். ஊன்றி யாராய்வார்க்கே யது விளங்கும். திருட்டாந்தமாக கிருஷ்ணர் அனேகம் கோபிகா ஸ்திரீகளோடு விளையாடினார், பரமசிவன் தாருகாவன ரிஷி பத்தினிகளின் கற்பை யழித்தார் முதலியவை. பாமரராயுள்ளோர் இவற்றைக் கடவுளர் திருவிளையாட்டாகவே நம்பி பக்தி செலுத்துகிறார்கள். எல்லாம் அவரவர் மனோபாவப்படி பலன் அளிக்கின்றன. எங்கோ சிலர் வெளித் தோற்றத்தால் தவறுகக் கருதிக் கொள்ளலா மாயினும் பெரும் பாலார் நன்மையே யடைகிறார்கள்.

முற்காலத்தவர் பெரியோர் வாக்கென்று எதையும் நம்பி நற்பயனையே யடைந்தார்கள். இக்காலத்தில் குயுக்தியும் குதர்க்கமும் மலிந்து விட்டன. இது கலியின் வன்மை. ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் தெய்வீகம் பொருந்திய கவிவாணராஸ்

வரையப்பட்ட நூல்களுக்குப் பரிமேலழகர், இளம்பூரணர், நச்சினார்க்கினியர் இத்தகைய தெய்வப் புலமை வாய்ந்தோர் கூறிய உரைகளுள. இக்காலத்தில் அத்தகைய உரைகளை மறுத்துக் கூறும் வித்துவான்களும் தோன்றி யிருக்கிறார்கள்.

அன்னிய மதத்தவர்கள் நம்மதத்திலுள்ள பாமரர்களிடம் இப்புராணக் கதைகளையும் சரியை கிரியைகளையும் பற்றியே குற்றங்கூறி நம்மவர்க்கு வெறுப்புண்டாகும் வண்ணம் செய்கிறார்கள். மத ஆராய்ச்சியில்லாத பாமரரிடம் நயமான வார்த்தைகளால் "இப்படி மனைவியை வைத்துக்கொண்டு அன்னிய மனைவியரோடு சோரம் செய்வதும், பல பெண்களை வைத்துக்கொண்டிருப்பதுமாகிய இவைகள் தெய்வமாகுமா..." என்று கூறினால் அவர்கள் மயங்குகிறார்கள். அதற்குமேல் உலகசம்பந்தமான ஆசைகளைக் காட்டினால் தூண்டில் இரைக்கு ஆசைப்படும் மச்சங்கள்போல் சிக்கிக்கொள்கிறார்கள். பிறகு அவர்களுக்கு உண்மை தெரிந்து தாங்கள் ஏமாந்துபோனதாக அறிந்து திரும்பி விடலாமென்றால் நாம் சேர்ப்பதில்லை. அந்தோ! என்ன கோரம்.

இப்புராணச் சங்கதிகளை விட்டு யோகம் ஞானம் இவற்றைப் பற்றிப்பேச அந்த அன்னியமத போதகர்களுக்குத் தெரியாது. ஆகையால் இக்காலத்தில் நமது மதத்தைச் சேர்ந்த பாமர ஜனங்களுக்கு இத்தகைய விஷயங்களைப்பற்றிப் போதித்து அவர்கள் பிறமத போதகர்களின் வஞ்ச வார்த்தைகளால் மயங்காம லிருக்கச் செய்யவேண்டும். கிருஸ்தவர்களுக்கு இது ஜீவனத்தொழிலா யிருக்கிறது. சம்பளம் கிடைக்கிறது. இதனால் அவர்கள் இதே வேலையாக விருந்து நம்மவரை மயக்கி இழுத்துக் கொள்கிறார்கள். தருமமும் காலத்திற்குத் தக்க வழியில் செய்யப்படவேண்டும். செல்வம் பொருந்திய மடாதிபதிகள் இச்சமயத்தில் தக்க முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டியது அவர்கள் கடமையாக விருக்கிறது. உண்மையான மதாபிமானமுடைய எம்மடாதிபதியேனும் முன்வந்து இன்னும் மற்ற மடாதிபதிகளையும் கலந்து ஏற்பாடு செய்து இதைத் தடுத்து நம்மவரையும் நம் மதத்தையும் பாதுகாக்க ஒரு சங்கத்தைத் தாபிப்பார்களாயின் அது பெரும் புண்ணியச் செயலாகும். பசுபதியாகிய பரம்பொருளே இதற்கு அருள் புரியவேண்டும்.

ஞான லின்புக மேமிக வேண்டுந்தென்
னலை வாயி லுறையுமெம் மாதியே.

ஓம் தத் ஸத்.

---

## கம்பராமாயண நீதிச் செய்யுள்.

'அறம் பொருளின்பம் வீடடைதல் நூற்பயன்' என்பவாகலின், சதுர்வித புருஷார்த்தங்களாகிய தர்மார்த்த காமமோக்ஷங்களை யடைதற்கேற்ற சாதனமாயிருப்பது கல்வியே யாம். அறியாமையை யகற்றி அறநெறிக்கண் உய்த்தற்கேதுவா யிருப்பவைகளே நூல்களென்றும், அவற்றைக் கற்றலே கல்வி யென்றும் கூறப்படும். அத்தகைய நூல்கள் எண்ணிறந்தன நந்தாய் மொழியிலுளவாயினும் அவற்றைக் கற்று இன்புறுவோர் மிகச் சிலரினும் சிலரே யாவர்.

பதினெண் கீழ்க்கணக்கினு ளடங்கிய "நாலடி நானூறு நானூற்பது" முதலாகிய தனிப்பட்ட நீதி நூல்களைக் கற்போர் அரியோராக, இராமாயணம், பாரத முதலிய இதிகாச புராணங்களைக் கற்போர் பலராவர். அஃதும் கதையை வாசிப்பதினளவிலேயே நிற்கின்றது. தின்பண்டங்காட்டி மருந்தூட்டுவதுபோல், கதைகளின் மூலமாகப் பல நீதிகளை யறிவித்தல் என்னும் முறைப்படி, கதையை யொட்டியும் உவமை, எடுத்துக் காட்டு வமை, வேற்றுப்பொருள் வைப்பு முதலிய அணிகளின் முகமாகவும் ஆசிரியர்கள் அப்புராணேதிகாசங்களினும் நன்னெறிகளைக் கூறிப்போந்தனராயினமையின் அம்மூல பாடங்களிலுள்ள நீதிச் செய்யுள்களையும் ஆராய்ந்தறியவேண்டுவதும் அத்தியாவசியமா மென்க. ஆகவே ஒவ்வொரு நூலையும் ஆசிரியர் மாட்டுக் கிரமமாகப் பாடங் கேட்டாலன்றி அஃதமையாது. ஆகலின் அவ்வாறறிய அவகாச மற்றோர் எளிதி னுணருமாறு அவற்றை யெடுத்துக் காட்டல் பொருத்த முடையதேயாம். அதினும் அவை பலவாயும் ஆழ்ந்த பொருள்கொண்டவையாயு மிருத்தலால் முக்கியமான சிலவற்றைக்காட்டி அவற்றின் நீதிகளையும் சுருங்கக் கூறலே யமையும்.

முதன் முதலாக, கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பநாட்டார் அருளிச்செய்த ராமாயணத்தில் பொலிவுறும் நீதிப்பாக்களை யாராயத் தொடங்குவாம்.

1. பண்கள்வாய் மிழற்று மின்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகால் முகம்வா யொக்குங் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்
பெண்கள்பால் வைத்தநேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றல்

(நாட்டுப்படலம்.. செய்யுள் 10.)

(இ-ள்.) "கோசல நாட்டில் உழவர் வயல்களிற் களைபறிக்கச் சென்று அவ்வயல்களில் நீலோற்பலம், தாமரை, குமுதம் முதலிய மலர்களே களையாயிருப்பதன்றி வேறு களையில்லாமையால், தங்கள் மாதர்களின் கண் கால் முகம் வாய் இவற்றை ஒத்திருக்கும் அம்மலர்களைப் பறிக்க மனமில்லாது திரிந்துகொண்டிருப்பர் (எ-று) இதனால், பெண்கள்பால் கொண்டுள்ள அன்பின் மிகுதியால் நன்மைதரும் முக்கிய கடமையைச் செய்யாதிருத்தலால், இவர் அறிவிற் சிறியோராவர். ஆகவே, சிறியோர் பெண்களின் நேசத்

தைப்பெற்றால் மற்றைய நற்காரியங்களைச் செய்யாது — களைகள் போன்ற தங்கள்மாட் டுள்ள குற்றங்களைக் களையாது அப்பாசக் கடற்குளே வீழ்ந்து கரைகாணாதமிழ்ந்தி வருந்துவர். பெரியோர் அவ்வாறாகார் என்னும் நீதி யாய் "பெண்கள்பால் வைத்த நேயம் பிழைப்பரோ சிறியோர் பெற்றால்" என்னும் வாக்கியம் உணர்த்துகின்றது.

2. தாவரு மிருவினை செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே. (தாடகை வதை-15.)

கோசிக முனிவரும் தசரத குமாரரும் கானெறிப் படர்கையில் காணப் பட்ட பாலைவனமொன்று, 'மேன்மேல் தொடர்ந்துவரும் இருவினைகளை நீக்கி, தொலைத்தற்கரிய காம, வெகுளி, மயக்கங்களாகிய முப்பகைகளை யுஞ் செயித்து, முத்தியை யடைய விரும்புவோரது மனமும், விலை மாதர் களின் மனமும்போல் பசையற்றிருந்தது' என்பதாம். இதனால் வஞ்ச மாயப் பிறப்பொழித்து நிரதிசயானந்தப் பேரின்ப வீட்டை விழைவோர், வினையற்ற நிலையினை யெய்தல்வேண்டும். தீவினையைப்போலவே நல் வினையும் நுகர்ச்சியின் பொருட்டுப் பிறவியைத் தருவதாம். "இருள்சே ரிரு வினை" யென்றார் நாயனாரும். அதற்கு அந்தக்காரணத் துண்டாகும் மும் மலப் பகையைக் கடிதல்வேண்டும். அங்ஙனம் கடிந்தோரே மாசற்ற பரி சுத்த நிலையாகிய பற்றற்ற நிலையடைவர். அதுவே வீடு. "விட்டதே பேரின்பவீடு," 'அற்றது பற்றெனில் உற்றதுவீடு.' 'பற்றுக பற்றுவிடற்கு' 'நிராசை யுண்டேல் தெய்வமுண்டு' என்றார் பிறரும்.

'காசாசை வேசையர்' என்றபடி விலைமாதர் மனம் காசை நாடுமேயன்றி, அதை யீந்தார் மாட்டுச் சிறிதும் விருப்பமடையாது. ஆகலின் அவரிடம் ஆசை கொள்ளலாகாது. ஆசை யற்றோரிடம் ஆசையுய்த்தல் அவலமே. பொருந்தாப் புணர்ச்சியுமாம்'' என்பவை வெளியாகின்றன.

3. உளப்பரும் பிணிப்புறு உலோப மொன்றுமே
அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப் பழித்து மாற்றினன். (தாடகை வதை 43.)

'ஸ்ரீராமா! மிகக் கொடிய அரக்கியாகிய தாடகை, அளவில்லாத வளப்ப மிகுந்த நகரங்களை யெல்லாம், உள்ளத்திற் பருமையாகிய பிணிப்படையாத உலோப குணமொன்றே அநேக நற்குணங்களை யழிப்பதுபோல, அழித்த னள்' எனத் தாடகையின் வரலாற்றைக் கோசிகர் கூறினார். இதில் உலோப குணமானது (உலோபம் = பொருளாசை, ஈயாமை) இரக்கம், அன்பு, இன்சொல், நடுநிலைமை முதலிய எல்லா நற்குணங்களையும் போக்கும். ஆகையால் அக்குணத்தை வெறுத்து நீக்க முயலல்வேண்டும் என்றும் போதனை யிருத்தல் காண்க.

4. அய்ய னங்கது கேட்டற னல்லவும்
எய்தி னுலது செய்கவென் றேவினல்
மெய்ய நின்னுரை வேதமெனக் கொடு
செய்கை யன்றோ வறம்செய்யு மாறென்றான் (தாடகை வதை 67.)

தாடகையைக் கொல்லவேண்டு மென்றுகோசிகர்கூறக் கோசலை குமாரன் செவியுற்று "சுவாமி! பெண்கொலை பெரும்பாவம். ஆயினும், தருமமல்லாத காரியமேனும் காலம் நேர்ந்துழி ஏவப்பட்டால், பெரியீர்! உமது வாக்கியத்தை வேதமாகக் கருதிச் செய்வதல்லவோ அறமாகும் என்றனர்" என்பதாம். இதினின்றும், குருவாதிய பெரியோரின் கட்டளை நியாயமற்றதாக வெளிக்குத் தோன்றினும் உண்மை யுணர்ந்த பரோபகார சிந்தை யுடையவர்களாகலின் நன்மையாகவே கொண்டு செய்தல் கடமையாம் என்பது விளங்குகின்றது. 'இனியவரென் சொலினும் இன்சொல்லே' யன்றோ?

5. சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி னுள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சில் தங்கா தப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே.
(தாடகை வதை 72)

'இராமபிரான் தாடகையைக் கொல்லப் பாணத்தையேவ, சொல்லை யொத்த வேகத்தையுடைய அவ்வஸ்திரமானது, கல்வியறிவில்லாத மூடர்க்கு நல்லோர் கூறிய உறுதிமொழி நெஞ்சிற்றங்கா தெங்ஙனம் அகலுமோ அது போல், தாடகையின் மார்பிற்பட்டுப் பின்புறமுருவிச் சென்றது' என்பது இதன் பொருளாம். இதில் இரு பொருளுள. (1) 'சொல்லொக்கும் சுடுசரம்!' எனச் சரத்தைச் சொல்லுக்கு ஒப்பிட்டமையால், புலவர் சினந்து கூறும் வாய்ச் சொற்கள் தவறாது துன்பம் பயக்கும், அதை நீக்க வியலாது. 'வில்லம்பினும் சொல்லம்பே மேலதிகம்' 'குணமென்றுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேனும் காத்த லரிது' ஆதலின் பெரியோர் மாட்டு அபசாரப்பட்டு அவர்தம் கோபத்திற்குப் பாத்திரராகாமல் பணிவுடனொழுகி ஆசிபெற்றுய்தல் வேண்டும். இக்கருத்து இவ்விராமாயணத்தில் பிறவிடங்களிலும் காணப்படும். அவை பின்வருவன 'வைதவைவின் மாமரம் ஏழ் தொளை யெய்த எய்தவன்' "சுடுசரமனையசொல்லால்" 'வைதாலன்ன வாளிகள்'. நாயனாரும் 'வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க-சொல்லே ருழவர் பகை' எனக் கூறியிருத்தல் காண்க.

(2) புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்று' என்பது, கல்வியறிவில்லாத மூடருக்கு நல்லோர்கள் நீதிமொழிகளைக் கூறின் அவர் தம்மனத்திற் கொள்ளாது புறக்கணிப்பாராகலின் சிறிதும் பயன் படாது, என்பவை அறியத்தக்கவையாம். (இன்னும் வரும்)

பூ. ஸ்ரீநிவாசன்,
தமிழ்ப்பண்டிதர், இராணிப்பேட்டை.

## இந்திய சுதேச கிருஸ்தவர்களும் ஜாதியொற்றுமையும்

இத்தலைப்பெயரிட்டுக் கீழ்க்கண்ட விஷயத்தை ஸ்ரீமான் ரெவரெண்ட் K. R. கோபால ஐயர் என்பவர் கடந்த அக்டோபர் மாதம் வெளிவந்த "இந்தியன்ரிவியூ" (Indian Review) என்றசஞ்சிகையில் வெளியிட்டுள்ளார்:

இந்திய சுதேச கிருஸ்தவர்களை மூன்று வகுப்புகளாகப் பிரிக்கலாம். ரோமன் காதலிக் கிருஸ்தவர், ஸீரிய கிருஸ்தவர்கள், புரொடஸ்டான்ட் கிருஸ்தவர்கள். ரோமன்காதலிக் கிருஸ்தவர்களே பெரும்பாலோர். ஸீரிய கிருஸ்தவர்கள் திருவாங்கூர் கொச்சி சமஸ்தானங்களிலுள்ளோர். ஆயினும் அவர்களிற் சிலர் ஜீவியார்த்தமாகத் தங்கள் நாட்டைவிட்டு வெளிசென்றிருக்கிறார்கள். புரொடஸ்டான்ட் கிருஸ்தவர்கள் கொஞ்சமே யாயினும், அனேகம் வகுப்புகளாகவும் ஒன்றுக் கொன்று விரோதமுடையவர்க ளாகவு மிருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலர் பாதிரிமார்களிடம் பிரசங்கிகளாகவும், உபதேசிகள், உபாத்திமார்கள், பைபிள் உமன் முதலியதொழில்களி லமர்ந்து அவர்கள் ஆதரணையின்கீ ழிருக்கிறார்கள்.

இந்நாட்டுக் கிருஸ்தவரில் எல்லாச் சாதிகளையும் வகுப்புகளையும் சேர்ந்த ஆண் பெண் குழந்தைகளைக் காணலாம். இவர்களில் அனேகரிடம் ஜாதிக்கட்டுப்பாடு பலமாக விருக்கிறது. சிலர் ஒருவர் வீட்டில் ஒருவர் பொசிப்பதுகூட இல்லை. ஆயிரத்தில் ஒருவர்கூட உயர்ந்த ஜாதியாரல்ல.

ஹிந்து மதத்திலிருந்து கிருஸ்துமதத்திற்குச் சென்றவர்கள், அவ்வாறு மதத்தில் மாறுதலடையும் முன், தங்கள் சொந்த தேசாசார ஒழுக்கங்களைக் கைவிடா திருந்தார்கள்—நித்தியஸ்நானம், சுத்தி, வீடுகளையும் குழந்தைகளையும் சுத்தியாக வைத்திருத்தல், தினம் வீடுகளைக் கோமயத்தால் மெழுகல், வாழையிலையில் போஜன மருந்தல், காலில் பாதரக்ஷையின்றிச் சாதாரணமான தங்கள் தேச உடையணிந்து தினம் கடவுள் சந்நிதிக்குச் செல்லல், ஆழ்ந்த பத்தியோடு கடவுளைப் பூசித்தல், உயர்ந்த ஜாதியாராயின் சாகபக்ஷணிகளா யிருத்தல், முக்கியமாய் மதுபானத்தை நீக்கியிருத்தல் முதலிய காரியங்களை யனுசரித்துக்கொண் டிருந்தார்கள்.

ஆனால் அவர்கள் கிருஸ்துமதத்தில் சேர்ந்ததே அனேக சந்தர்ப்பங்களில் அம்மாறுதல் அவர்களை வேறு நிலைமைகளில் கொண்டுபோய்ச்சேர்த்துவிடுகிறது. முக்கியமாகச் சென்னை, பம்பாய், கல்கத்தா முதலிய பெரிய நகரங்களில் இதை அதிகம் காணலாம். அவர்களுடைய நித்திய ஸ்நானம், சுத்தி, சுகாதாரம், நித்தியபூஜை யாவும் அவர்களை விட்டு நீங்கிவிடுகின்றன. தாங்கள் கிருஸ்தவர்க ளாகிவிட்ட வரையில் தாங்கள் சுற்றத்தார் ஜாதியார் சினேகர் மற்ற இந்தியர் யாவர்களையும் விட்டு நீங்கிய ஒரு விசேஷ வகுப்பாரென்று எண்ணிக் கொள்கிறார்கள். இவ்வாறு அவர்கள் தேசாபிமானத்தை யிழந்தவர்க ளாகிறார்கள். சீக்கிரத்தில் தங்கள் தேசியசன்மார்க்

களையும், தேசிய தர்மங்களையும் அசட்டைசெய்து விடுகிறார்கள். பிறகு மெதுவாய் ஐரோப்பிய நீதியாய் வாழவும், ஐரோப்பியரைப்போல் உடுத்தவும் நடத்தவும் ஆரம்பிக்கிறார்கள். மதுபானம் செய்யத்தொடங்கி விடுகிறார்கள். அவர்கள் நித்தியஸ்நானம் போய்விடுகிறது. வாரமொரு முறை சனிவாரம் ஸ்நானம் செய்தால் போதும் என்று கருதிவிடுகிறார்கள்.

ஹிந்துக்கள் பிறந்தது முதல் மரணபரியந்தம் மதப்பற்றும் தெய்வ பக்தியு முடையவர்கள். அவர்களுடைய நித்தியவாழ்க்கையில் மதம் பிணைக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் மதக்கருத்தை யுள்ளடக்கிக்கொண் டிருக்கிறது. ஆனால் அவர்கள் கிருஸ்தவர்களாகி விட்டால் மதவிஷயம் சௌகரியத்தையும் சுகத்தையும் பொறுத்ததாக ஆய்விடுகிறது. ஒரு கறுப்புச் சட்டையும், காற்சட்டையும், கால்களில் பாதரட்சையும் அணிந்து கொண்டு வாரத்தில் ஒருமணிநேரம், சில நாட்களில் இரண்டுமணிநேரம், கோயிலில் இருந்து விட்டால் மோக்ஷத்திற்குப் பிரயாணச்சீட்டுக் கிடைத்து விட்டதாய் எண்ணி விடுகிறார்கள்.

அவர்களுக்கு இந்தியாவின் க்ஷேமத்தைப்பற்றிய ஆசையேயில்லை. மிகச் சிலர்தவிர மற்றபேர் தாய்நாட்டின் க்ஷேமத்தைப் பற்றிய தேசியமகாசங்கம் (காங்க்ரஸ்), மஹாஜன சபை, சுயராஜ்ய சங்கம் (ஹோம்ரூல்லீக்),......... முதலிய வற்றில் சேர்வது மன்னிக்கக் கூடாத பாதகங்கள் என்று கருதுகிறார்கள். அவர்களுடைய பாதிரிமார்கள் அவற்றை விரும்பமாட்டார்கள். புரொடஸ்டான்ட் மிஷனில் வேலைசெய்வோர் இத்தகைய தேசியசம்பந்தமான அல்லது இராஜாங்க சம்பந்தமான விஷயங்களில் சம்பந்தப்பட்டால் (இரண்டொரு சந்தர்ப்பங்களில் தவிர) வேலையினின்றும் நீக்கிவிடப்படுவார்கள். பாபம் மயக்கத்தில் சிக்கியிருக்கும் இச்சனங்கள் மனதில் இது பீதியை யுண்டாக்கி விடுகிறது. அவர்கள் தேசிய நூல்களை வாசிப்பதில்லை. தங்கள் தாய்நாட்டைப்பற்றி அவர்களுக் கொன்றும் தெரியாது; தங்கள் சொந்தநாட்டு வீரர்களாகிய இராமர், கிருஷ்ணர், இராவணன் முதலியவர்களைப் பற்றியும், கவிவாணர், இரிஷிகள், மகான்கள் முதலியவர்களைப் பற்றியும் ஒன்றும் தெரியாது.

அவற்றையறிய அவர்கள் விரும்புவதில்லை. ஏனெனில் அவையாவும் கிருஸ்துமதத்திற்கு விரோதமானவையென்று அவர்கள் எண்ணுகிறார்கள். ஆகவே தாங்கள் ஐரோபாவைச் சேர்ந்தவர்க ளென்றே யவர்கள் கருதுகிறார்கள். தங்கள் குழந்தைகளுக்குத் தமிழ் தெலுங்கு முதலிய தேசபாஷைகளைப் பேசவேண்டா மென்றும், இங்கிலீஷ் பேசவேண்டு மென்றும் கற்பித்து அவர்களுக்குத் தேசாபிமான மில்லாமலொழியும்படி செய்கிறார்கள். அனேகர் தங்கள் தேசப்பெயர்களையே யடியோடு மாற்றி ஆங்கிலப்பெயர் வைத்துக் கொண்டு தாங்கள் இந்தியரல்ல வென்று, யூரேஷிய வகுப்பில் சேர்ந்து கொள்கிறார்கள்.

தேசாபிமான மென்பதே அவர்களிட மிருந்து அடியோடு துடைக்கப் பட்டுவிட்டது. தங்கள் நாட்டிலுள்ள ஜனங்களோடு அவர்களுக்கு எதிலும் சம்பந்தமில்லை. கிருஸ்து தமது சிடர்களில் யாருடைய பெயரையும் மாற்றவில்லை. தன் அடியார்கள் இன்னது பொசிக்கவேண்டும் இவ்வாறு ஜீவனம் செய்யவேண்டுமென்று கட்டளை யிடவில்லை. அவர் தாமே தேசாபிமான முடையவராக விருந்து எல்லா விஷயங்களிலும் வழிகாட்டி யாக விருந்தார்.

இந்தியர் கைக்கொண்டது ஐரோப்பிய வர்ணம் பூசிய கிருஸ்துமதம். இது சுதேச கிருஸ்துமதமே யல்ல. மேல்நாட்டுப் போர்வையோடும், மேல் நாட்டுத் தியானரீதியோடும், மேல்நாட்டு ஞானசாத்திரத்தோடும், மேல் நாட்டுப் பெயர்களோடும், இறக்குமதி செய்யப்பட்டது. பாபு கேஷப் சந்திரஸென் என்பவர் " கிருஸ்து தமது பூட்ஸையும் தொப்பியையும் கழற்றி விடுகிற வரையில் அவருக்கு இந்தியாவில் நல்வரவு கூறமாட்டோம் " என்று கூறினர்.

இந்தியா இந்தியர்களே! நமது தேசாபிமானத்தை நாமேன் இழந்து விடவேண்டும் என்பதற்கு ஒரு காரணமுமில்லை. சுதேச கிருஸ்தவர்கள் ஐரோபியர்போல் நடிப்பதை விட்டுவிட்டுத் தங்கள் சுதேச சகோதரச் சோதரிகளோடு ஒத்து நடந்துகொண்டால் இதுவரையி லிருந்துகொண் டிருக்கும் பிரிவினை மாயமாய் மறைந்துவிடும். இந்திய கிருஸ்தவர்கள் இந்திய வீரரைக் கனப்படுத்த வேண்டும். தாய் நாட்டின் க்ஷேமத்தில் ஆவலுள்ளவர்களாய் தேசிய சம்பந்தமான விஷயங்களில் சேர்ந்துகொண்டு பொது நலத்திற்கு உழைக்க வேண்டும். கிருஸ்துமதம் அன்பும், இரக்கமும், சமாதானமும் யாவரிடத்தும் நல்ல எண்ணமும் உடையது. இந்திய கிருஸ்தவர்கள் தங்கள் சொந்த இரத்தம், தங்கள் சொந்தத் தசையைச் சேர்ந்த ஹிந்து மஹம்மதியர்களோடு ஒன்று சேர்ந்து ஒற்றுமையாய் நடந்துகொள்ளா விட்டால் கிருஸ்து நாதரின் கொள்கைகளைத் தழுவி நடப்பவர்களாக எப்படி யாவார்கள்?"

குறிப்பு:—இந்த வியாசத்தால் நமது கிருஸ்துவ சகோதரர்களின் நிலைமை தெளிவாய் விளங்குகிற தன்றோ. இவர்கள் அன்னிய மதம்புகுந்ததால் தாய் நாடென்ற உணர்ச்சியற்றவர்க ளாகிறுர்கள். விடுதலையடைவற்குப் பதிலாக இவர்கள் மனம் பாதிரிகளால் விலங்கிடப்பட்டிருக்கிறது. அந்தோ! பாதிரிகள் நமது மதத்தாரைத் தங்கள் மதத்திற்குத் தந்திரமாய் இழுப்பது அவர்களுக்குத் தாய் நாட்டின் உணர்ச்சியற்றுப் போகச்செய்யவேயென்று நன்கு விளங்குகிறது.

தாய்நாட்டின் க்ஷேமத்திற்காகச் செய்யப்படும் முயற்சிகளில் உங்களைத் தலையிட வேண்டாமென்று தடுக்கும் மேல்நாட்டுப் பாதிரிமார்களின் எண்ணமென்ன வென்பதைச் சற்று சிந்தியுங்கள். தங்கள் தாய்நாட்டு விஷ

யத்தில் அவர்கள் தலையிடா திருக்கிறார்களா? தங்களுக் கிருக்கும் சுதந்தரம் மற்றவர்களுக் கிருக்கலாகா தென்ற எண்ணமுடைய இவர்கள் எவ்வாறு பரலோகத்திற்கு வழிகாட்டும் தகுதியுடையவர்க ளாவார்களோ நமக்கு விளங்கவில்லை. கிருஸ்தவ சகோதரர்கள் தங்கள் மனதின் சுயாதீனத்தை யுணர்ந்து தாய் நாட்டின்மேல் அன்பு செலுத்திக் கிருஸ்துவின் அன்பிற்குப் பாத்திரர்களாக முயல்வார்களென நம்புகிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## அரங்கமேடைகளும் முக்கிய சீர்திருத்தங்களும்

ஒரு தேசத்தாருடைய ஜீவிய சரித்திரத்தில், நாடகமானது மிகவும் முக்கியமான ஒரு பகுதியாயிருக்கவேண்டுவது அத்தியாவசியம். இவ்வத்தியாவசியத்தை நமது தமிழ்நாட்டு முன்னோர்கள் மறந்து கைதுறந்து விட்டதாகத் தெரியவில்லை. ஏனெனில் நமது புராதன தமிழ்க் காவியங்களில் இயல், இசை, நாடகம் ஆகிய இம்மூன்றும் மிகவும் பாராட்டப்பட்டு வந்ததாக நாம் படித்தும் கேள்விப்பட்டு மிருக்கிறோம். (ஆனால் நமது தமிழ்க்காவியங்களில் நாடகத்தைக் குறித்துப் பழைய காவியங்க ளிருப்பதாகப் புலப்படவில்லை) தமிழ் இலக்கியங்களில் நாடகத்தைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறதே யொழியப் பற்பல நாடகங்கள் அக்காலத்தில் நடிக்கப்பட்டு வந்ததற்கு அத்தாக்ஷியாகத் தற்சமயம் பழைய காவியங்கள் ஒன்றும் இருப்பதாகத் தென்படவில்லை. இதனால் நம்மவர்களுக்கு நாடக ப்ரீதி குறைவாயிருந்ததாக எண்ணுவது தப்பாகும். நாடக முறையினால் ஜனங்களுக்கு நல்லெண்ணத்தையும் நற்புத்தியையும் புதியபுதிய விஷயங்களையும் நாடகமேடையினின்றே நன்கு போதிக்கலாம். ஆசாரசீர்திருத்தக்காரர்கள் தம் ஆயுள் முழுவதும் செய்யக்கூடிய ஜனசமூக ஆசார சீர்திருத்தங்களை நாடகமேடை மூலமாக அதினும் குறைந்த காலத்திற்குள்ளாகவே போதித்து ஜனங்களையும் ஜனசமூகத்தையும் நல்வழிப்படுத்தலாம்.

அம்மாதிரி உன்னதமான எண்ணங்களைக் கொண்ட நாடகச் சபைகள் நம் நாட்டில் தற்காலமிருப்பதாக நமக்குத் தோன்றவில்லை. நாடகமே தொழிலாகவும் ஜீவனமாகவும் கைக்கொண்ட பல ஆண்பாலர்களும், பெண்பாலர்களும் நல்ல படிப்பாளிகளா யின்றி அரைகுறையாய்ப் படித்தவர்களாகவே யிருக்கிறார்களென்பது நமதெண்ணம். அவர்களுக்கு ப்ரதானம் பணமே யொழிய உண்மையான சிறப்பு முக்கியமன்று. அதனால்தான் நாடகத்தின் கௌரவமும் நடிப்பவர்களுடைய அந்தஸ்தும் தற்காலம் மிகவும் கேவலமா யிருக்கின்றன. அவன் என்ன கூத்தாடிதானே என், தற்போது ஜனங்கள் ஏளனமாகப் பேசுவதற்குக் காரணம் நடிப்போர்களது தூர் நடையுடை பாவனையே யொழிய வேறொன்று மின்றும். நாடகச் சபையின் அல்லது கொட்டகையின் சொந்தக்காரர்கள் ஒரு இரவு ஒரு நாடகம் நடிக்கின், வரும்படி எவ்வளவு வருமென யோசனை செய்கிறார்களே யன்றி, பொது

ஜனங்களுக்கு நீதியைப்போதித்து சன்மார்க்க வழிக்குக் கொண்டுவரலா மென உத்தேசிக்க முயல்வதாகப் புலப்படவில்லே. இவ் விஷயத்தில் நாடகம் பார்ப்போரும், நாடகவிஷயத்தில் உயர்ந்த எண்ணம் கொண்டிருப்ப தாகக் கூறமுடியாது. உபயோகமற்ற நாடகங்களை ஜனங்கள் பார்க்கப் போவதே இதற்குப் போதிய சான்றாம். தற்காலம் நம் இந்திய நாடகத்தின் ஸ்திதியைச் சற்று ஆழ்ந்து யோசிக்குங்கால் சுமார் 50 வருஷந் தொட்டு நாடகம் நடிப்போரும், பார்ப்போரும் நாடகத்தின் உன்னதப் பெருமையைக் கெடுத்துத் தேசத்திற்கு ஒரு கெடுதி விளைவிப்பதாகவே எண்ணவேண்டி யிருக்கின்றது. இத்தகைய நாடகச் சிறப்பை மென்மேலும் போற்றிச் சீர்திருத்தி அபிவிருத்திக்குக் கொண்டுவரப் புதிய வழிகளைத் தேடவேண்டியது, இந்தியர்களுடைய கடமையாகும்.

நமது முன்னோர்கள் நாடக சாஸ்திரத்தில் குறிப்பிட்டுள்ள சட்டதிட்டங்களை எவ்வளவுவரை தற்சமயம் நாம் பின்பற்றினோமென்பதை நாம் கவனித்தல்வேண்டும். புதிய சட்டதிட்டங்களை உட்படுத்தி நாடகத்தையும், நடிப்பதையும் சீர்திருத்தின் பொது ஜனங்கள் குற்றங் கண்டுபிடிப்பார்களே யென நாம் வாளாவிருத்தல் நீதியன்று. "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்பதை நாம் மனதில் பதித்துக்கொண்டு எவைகளைக் கழித்து எவைகளைக் கைக்கொள்ள வேண்டுமென்பதை அனுசரித்தல் வேண்டும். நம்மவர்கள் நாடக பாத்திரங்களைப்பற்றிக் கொண்டுள்ள இழிவான எண்ணத்தை ஒழிக்கத் தக்க முயற்சி செய்யவேண்டும்.

சென்ற சில வருஷங்களாக வித்யாபட்டம் பெற்றவர்களும், ஆங்கிலம் படித்தவர்களும் சிலர் நமது இந்திய நாடக விஷயத்தில் சிற்சில சீர் திருத்தங்கள் செய்ய முயன்று வருகின்றனர். ஆனால் அவர்கள் தம் முயற்சியில் எவ்வளவு ஜயமடைந்தார்களென நிச்சயமாகக் கூறுவதற்கில்லே. அதற்கு மாறாக நாடகத்திலும், நடிப்பவர்களிடத்திலும் ஒருவாறாகப் பொது ஜனங்கள் அலக்ஷியம் பாராட்டும்படி நேரிட்டதைக் குறித்து விசனப்படவேண்டியதா யிருக்கின்றது.

அத்தவறுதலுக்குக் காரணம் என்னவெனில்:—நாடகத்தைச் சீர்திருத்தி உன்னத ஸ்திதிக்குக் கொண்டுவரவேண்டு மென்பதுதான் ஆரம்பத்தில் அவர்களது எண்ணம். இரண்டுமூன்று நாடகங்கள்வரை ஆரம்பத்தில் கொண்ட எண்ணங்களைப் பின்பற்றியே நடத்துகின்றனர். பிறகு மெதுவாய் நாடகமே ஜீவனமாகக் கொண்டுள்ளவர்களது காற்று இவர்கள் பாலும் வீசி இவர்களுக்குள் அனாவசியமான மனஸ்தாபங்களும் வீண் சச்சரவுகளு முண்டாகி, பூர்வ எண்ணங்களெல்லாம் மாறுபட்டுச் சீர்குலேந்து போகின்றன. நாடகம் நடிப்பவர்கள் முக்கியமாக நன்னடக்கை யுடையவர்களாகவும் பரிசுத்த மனதுடையவர்களாகவு மிருத்தல் வேண்டும். அப்போதுதான் நாடகத்தைக் கண்ணுறுகின்றவர்களும் இவர்களைப் பின்பற்றி நல்வழியில் நட

ந்து பரிசுத்த முள்ளவர்களா யிருக்க எத்தனிப்பர். நல்லொழுக்கம், நன்னடை இவைகள் நடிப்பவர்கட்கு அத்யாவசியம். நாடகமானது ஒருவனுடைய அல்லது ஒருத்தியுடைய கற்பையும் இதர நல்லகுணங்களையும் மென்மேலும் அபிவிர்த்தி செய்யவேண்டும்; கெடுக்கக்கூடாது. நடிப்பவர்கள் சற்குண சம்பன்னர்களா யிருந்தால்தான் நாடகத்தின் பெருமைவெளிப்படும். தற்கால நாடகமானது பார்ப்பதற்கு மிக்க வருத்தத்தைக் கொடுக்கக் கூடியதாயிருக்கின்றது. பண்டைக்காலத்தி லனுசரித்த நாடகசட்டதிட்டங்களை முழுதும் தற்சமயம் கவனிக்காவிடினும் பாதகமில்லை. நமது தேசிய நடையுடைபாவனைகளைச் சாராத நூதன அன்னிய பழக்கவழக்கங்களை நமது இந்திய நாடகத்தில் அனுசரிக்க ஆரம்பிப்பது நன்கன்று. இம்மாதிரி நாம் கூறுவதால் நாடகாபிமானிகளுக்கு வருத்தத்தை உண்டுபண்ணினும் பண்ணலாம். ஆயினும் பாதகமில்லை. இதனால் கெட்டதைக் கெட்டதென்று கூறாமலும் சீர்திருத்தம் செய்யாமலு மிருக்கக்கூடாது. நடிப்பவர்களின் நடையுடை பாவனைகளிலும், நாடகமேடையின்மீதுள்ள திரைமுதலியவைகளிலும், நாடகத்திற்குத் தேவையான சங்கீத சாஹித்யங்களிலும் சீர்திருத்தம் இதுவரை உண்டானதாகப் புலப்படவில்லை. நன்றாக வரையப்படாத நாடகங்கள் பல நடிக்கப்பட்டு வருகின்றன. இவைகளை நிறுத்த யாதொரு முயற்சியும் செய்யப்படவில்லை. நாடகங்களைச் சீர்திருத்த எண்ணமுள்ளவர்கள் கூடச் சாதாரண ஜனங்களின் வேண்டுகோட் கிணங்கி உபயயோகமற்ற நாடகங்களை நடிக்க ஆரம்பிக்கின்றனர். இவ்விஷயம் மிகவும் கண்டிக்கத்தக்கதே. விசனிக்கத்தக்கதே. "அந்த நாடகம் நன்றாயிருக்கிறதே, ஜனங்களுக்கு நல்லறிவைப் புகட்டுமே? என் உமது சபையார் நடிக்கக்கூடாது" என்று ஒரு நாடக முதலாளியைக்கேட்கின், அவர் "அது ஜனங்களுக்குப் பிடிக்காது, அதனால் வரும்படியிராது" என்று பதிலளித்ததைக் கேட்டு மன வருத்தப்படாமலிருக்க முடியவில்லை. நாம் நமது இச்சையில் எத்தகைய கேவலமான நிலைமைக்குள்ளாகி விட்டோமென்பதைத் தீர்க்காலோசனைசெய்து தற்சமயமுள்ள கெடுதிகளைப் போக்கி நன்மைகளை உண்டுபண்ண முயலவேண்டும். தமிழில் தற்காலம் நடிக்கும் நாடகங்களிலுள்ள சில ஆபாசங்களைச் சற்று கவனிப்போம். கதை பாரிஜாத புஷ்பஹரணம்; மணி அடித்துத் திரையைத் தூக்கியதும் நாடகத்தில் முதல் வரும் மனுஷனோ, மனுஷியோ ஒரு ஹிந்துஸ்தானி பாட்டோ அல்லது ஆங்கில வர்ணமெட்டோ ஒன்று பாடினால்தான் நாடகம் பார்ப்போர் சந்தடி செய்யாமலிருப்பார்கள். கதைக்கும் இப்பாட்டுக்கும் சம்பந்தம் என்னவோ புரியவில்லை. மறுபடியும் சத்தியபாமா வேஷத்தைச் சற்று கவனிப்போம்.

இப்பெண்வேஷம் போடுபவன் ஒரு ஆண்பிள்ளை; உடையோ இருபதாம் நூற்றாண்டில் வழங்கிவரும் உன்னத உடை; நகையும் அப்படியே. பேச்சோ சத்தியபாமா அந்தஸ்துக்குரிய பேச்சன்று. இதே மாதிரிதான்

ஏறக்குறைய ஒவ்வொரு வேஷதாரியின் நடையுடைபாவனை. மற்றொரு உதாரணத்தைக் காட்டுவாம். இராமாயணம்—இராமர் இலக்ஷ்மணர் வேஷம் தரிப்பவர்கள் உயர்ந்த வெல்வெட்டினல் தைத்த சொக்காய், நிஜார்கள் போட்டுக்கொண்டு விஸ்வாமித்ர மஹரிஷியுடன் காட்டுக்குப் போவது ஒன்று. தசரதர் கைகேயிகேட்ட கொடுமை வரத்திற் குட்பட்டு இராமரைக் காட்டுக்கனுப்புவித்ததின் பலனுக இவர் மனம் பிளந்து இரண்டு வில் வைத்த சோபாவில் படுத்துப் பாடிக்கொண்டே மரணமடைவதும், அப் பாட்டைக்கேட்டு ஆனந்தித்த ஜனங்கள் இன்னும் ஒரு தடவை என்று கேட்க, மரணமடைந்த தசரதர் எழுந்து ஜனங்களது வேண்டுகோட் கிணங்கி மறுதடவை பாடுவதும் என்ன வழக்கமோ கிஞ்சித்தும் புரியவில்லை. (இது அறிவாளிகள் நகைக்கத்தக்க அசம்பாவிதம்.)

கடைசியாகச் சதாரம் சரித்திரத்தை எடுத்துக்கொள்வோம். இந்நாடகத்தில் திருடனுக நடிப்பவன் காலில் சலங்கைகட்டிக்கொண்டு, டப்பா முதலிய பாட்டுக்களைப் பாடிக்கொண்டு கூத்தாடவேண்டுமென எச் சாத்திரம் முறை யிடுகின்றதோ நாமறியோம். இத்தகைய ஆர்ப்பாட்டம் செய்துகொண்டு திருட்டுவேலை செய்பவன் இந்த உலகத்திலில்லாத திருடனுகவே யிருக்கவேண்டும். இம்மாதிரி உதாரணங்களை விரிக்கின் பெருகும்.

குறிப்பு:—இத்தகைய முக்கியமாகிய அரிய பெரிய விஷயத்தைப் பரோபகாரமாக மித்திரன் வார அனுபந்தத்தில் வெளியிட்ட ம-ள-ள-ஸ்ரீ, நெய்வேலி கிருஷ்ணமாச்சாரியர் அவர்களுக்கு நம்மனமார்ந்த வந்தனத்தை அன்புடன் செலுத்துகின்றோம். ஷை அய்யரவர்கள் வரைந்த விஷயத்தையே நம் நண்பர்களுக்காக நமதானந்தனுக்கு வரைந்தனுப்ப லாயினேன்.

ஏ. வ. குப்புசாமி முதலியார்,
எழூர், ராசிபுரம் தாலூகா.

குறிப்பு:—தற்கால நாடகங்களில் நாடக இலக்ஷணம் கவனிக்கப்படுவது அரிதே. நாடகத்தில் அபிநயம் முக்கியமானது. சமயத்திற்கும் சந்தர்ப்பத்திற்கும் தக்க மனே உணர்ச்சிகளை இயற்கைப்படி வெளியிடவேண்டும். உடைகள் கூடியவரையில் நாடக பாத்திரங்கள் சரித்திரம் நிகழ்ந்த அக்காலத்தில் எந்தரீதியாக உடையணிந் திருந்தார்களோ அவ்வாறேயணிய வேண்டும். உடைவிஷயத்தில் மேல்நாட்டார் நாடகங்களில் அந்தந்தக்கால ரீதியாகவே உடுத்துகிறார்கள். வனவாசத்தி லிருக்கும் இராமர் கலிகதுரா வைத்த தொப்பியும், போலிச்சரிகை தைத்த உடைகளும் அணிவதும், மயானங்காக்கும் தோட்டி விலையுயர்ந்த சால்வையும், சரிகையுடையுமணிவதும் அசம்பாவிதமே யாகும். நாடகங்களிலுள்ள ஆடவர், மாதர் இவர்களில் பலர் துர்நடக்கையே பொதுவாய் நாடகக்காரர்களுக்கு இழிவான பெயரை யுண்டாக்கியது. நாடகத்தில் சம்பந்தப்பட்ட சில அயோக்கியர் குடும்பமாதரைச் சோரமாய் அழைத்துச் சென்றதும், பிறகு அவர்களையும் நாடகத்தில் நடிக்கச்செய்ததுமாகிய இத்தகைய காரியங்கள் இழிவையதிகப் படுத்தின. காலஞ்சென்ற ஸ்ரீமான் அப்பாவுப்பிள்ளை முதலியவர்களைப்போல் நாடக முதலாளிகள் நாடகத்தில் சம்பந்தப்பட்ட ஆட்களின் நடக்கையில் தவறுநேராவண்ணம் கண்டிப்பாய்க் கவனித்து வந்தால் இழிவானபெயர் வாராதென்பது நிச்சயம்.

பத்திரிகாசிரியர்.

## ஒழுங்கான கல்வி.

### (திருவல்லிக்கேணி அரசினர் பெண் பாடசாலையில் நாகை நீலாம்பிகை அம்மை செய்த விரிவுரை.)

(144-ம் பக்கத் தொடர்ச்சி)

அங்ஙனம் காணப்படும் புகையைக்கொண்டு காணப்படாத தீயை உணர்வதுதான் தருக்கமெனப்படும். இன்னும், நாம் குழந்தைகளாய்ப் பிறந்து பால் பருகத்துவங்கிய நாள்முதல் நம்மோடு தர்க்க உணர்வும் வளர்ந்து கொண்டு வருகின்றது. எவ்வாறெனின், ஒரு குழந்தை பால் பருகும் போது தாயையும் பாலையும் அறிந்து பிறகு பசித்து அழும்போது தாயைக் கண்டபின், முன் அவள் பலமுறை பால் கொடுத்திருக்கின்றுளாகலின், இவள் இப்போதும் எனக்குப் பால் கொடுப்பாள் என்று உணர்ந்து அழுகையை நிறுத்தி விடுகின்றதன்றோ ! இவ்வாறு நடக்கப் போகும் செயல்களை நடந்ததைக் கொண்டு ஆராயும்போது தர்க்க உணர்வு உண்டாகின்றது. புறப்பொருளை யளக்கும் கணக்குக்கும் அகப் பொருளாகிய கடவுணிலை துறக்கநிலை முதலியவற்றை விளக்கும் அகப் பொருள் ஆராய்ச்சிக்கும் தர்க்கம் இன்றியமையாது வேண்டப்படுகின்றது. புறப்பொருளை யாராய்தற்குக் கருவியாகிய கணக்கை ஆராய்ந்த பின்னரன்றோ அகப்பொருளை ஆராய வல்லவர்களாகின்றோமென்று நினைக்கலாம். ஆனால், புறப்பொருளாகிய கணக்கை யாராய்கின்றபோதும் தருக்க உணர்ச்சியே முன்னின்று அக்கணக்கறிவையும் உண்டாக்குகின்றது. அதற்கெடுத்துக் காட்டாக, ஒன்று ஒன்றாகப் பத்து மாம்பழங்களைக் கூட்டினால் அத்தொகையைப் பத்தென்று சொல்லுகின்றோம். அப்பத்தில் நான்கு போய் விட்டால் ஆறு என்று எண்ணிப் பார்க்காவிட்டாலும், ஆறு இருக்கவேண்டுமென்று பார்த்ததைக் கொண்டு பாராததை யுறுதியாகச் சொல்லுகின்றோமல்லவா! இவ்வாறு ஆராய்வதும் தருக்கமே; அதாவது அளவை யுணர்வேயாகும். புறப்பொருளையாராயும் கணக்கை நாம் கற்கவேண்டுவது உலக வாழ்க்கைக்கு இன்றியமையாததாயினும் அகப்பொருளாகிய கடவுள் நிலை உயிரின் நிலை முதலியன புறப்பொருளினும் மேன்மை யுடையனவாகலின், அதனை ஆராய்ந்து கற்றற்கே கண்ணுங்கருத்துமாக இருக்கவேண்டும். புறப்பொருளை யளக்கும் கணக்குக்கும் அகப்பொருளாகிய கடவுள் நிலை உயிர்நிலை முதலியவற்றை யளக்கும் ஆராய்ச்சிக்கும் தர்க்கம் பொது. புறப்பொருளாராய்ச்சியில் நிற்கும் தர்க்க வுணர்வால் எண்ணியறிதற்குரிய புறப்பொருள்களை யாராய்ந்து படிக்க முடியுமேயல்லாமல், பிழையின்றி எழுதவும் படிக்கவும் அது உதவிசெய்யாது. இலக்கணத்திற்கே தருக்கம் சிறப்பாக வேண்டப்படும். ஆதலினால், திருவள்ளுவநாயனர் எண் என்னுஞ் சொல்லுக்குத் தருக்கமென்னும் பொருளைத் தந்து அத்தருக்கத்திற்குக் கருவியாகிய எழுத்தென்னும் இலக்கணத்தைப் பின்னுமாக வைத்து "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" என்று கூறினாராகலின், எண் என்னும் சொல்லுக்குக் கணக்கு என்று பொருள் கூறலாகாது. நாம் நூல்களியற்றுதற்கும் விரிவுரைகளைச் செய்தற்கும் செய்யுளியற்றுதற்கும் அகப்பொருளாராய்ச்சியாய் நிற்கும் தர்க்கமும் அத்தருக்க நூலுணர்ச்சிக்குக் கருவியாகிய இலக்கணமும் இன்றியமையாதனவாம். யான் மேல்விளக்கிக் காட்டிய

பொருள்களைக் கொண்டு யான் கணக்கைக் குறைவாகப் பேசுகின்றே னென்று நினைக்கலாகாது.

இக்காலத்தில் நம்மவர்களில் பெருந்தொகையினரான பெண்பாலர் கள் கல்விகற்கின்றார்கள். ஆனாற் பள்ளிக் கூடங்கள் புறப்பொருளாராய்ச்சி யாகிய கணக்கைக் கட்டாயக்கல்வியாக ஏற்படுத்தி, அதனினும் சிறந்த இலக்கணக் கல்வியைக் கட்டாயமல்லாத கல்வியாக ஏற்படுத்தி யிருக்கின் றார்கள். பள்ளிக்கூடங்களில் நமக்கு ஆங்கிலமொழியினையும் தமிழ்க் கல்வி யினையும் போதுமான இலக்கணக் கல்வியின்றிக் கற்பிக்கின்றாராகலின், நாம் பள்ளிக் கூடத்தில் பல ஆண்டுகள் முயன்று இருமொழியினையும் கற் றாலும், நாம் ஒரு மொழியிலேனும் பிழையின்றி ஒரு நூலேனும் ஒரு செய்யுளேனும் ஒரு விரிவுரையேனும் இயற்ற ஆற்றலற்றவர்களா யிருக் கின்றோம். இவ்வாறு போதுமான இலக்கணக் கல்வியின்றிப் பெருந் தொகையான நம் பெண்மக்கள் கல்விகற்றாலும் நாம் உலக நன்மைக்கும் நமது பெயர் உலகில் நிலை பெறுதற்கும் தக்கபடி நூல்களையும் செய்யுட் களையும் இயற்ற வலுவற்றவர்களாய் இவ்வுலகை விட்டு நீங்குவோமாயின், நம் பேரும் புகழும் நம்மோடே நீங்குமல்லவோ! நம்மவர்களில் பெண்பாலர் பள்ளிக்கூடப் படிப்பை முடித்த பின்னரேனும், தாம் பள்ளிக்கூடங்களில் சிறிதளவாகக் கற்ற இலக்கண உணர்வைப்பெருக்கி நூல்களெழுத முயல் கின்றார்களாவென்றால், அதுவுமில்லை. ஆங்கில மக்களில் பெண்பாலாரிற் சிலர் பள்ளிக்கூடப் படிப்பை முடித்த பிறகு தாம் சிறிதளவாகக் கற்ற இலக்கண வுணர்வைப் பெருக்கித் தங்கள் காலத்தை வீணாக்காது உலக நன்மைக்காகப் பல நூல்களையும் எழுதுகின்றனர். பலவிரிவுரைகளையும் செய்கின்றனர். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன்னே யிருந்த நூற்றுக் கணக்கான தமிழ்ப் பெண்கள் தம் தாய்மொழியாகிய செந்தமிழை யிலக் கணக் கல்வியோடு பிழையறக் கற்றுக் "கலித்தொகை" "புறநானூறு" "ஐங்குறுநூறு" முதலிய நூல்களில் தீஞ்சுவையினையுடைய செய்யுட்களை யியற்றி யிருக்கின்றார்கள். அவர்களில் இருவரை ஈண்டுக் குறிப்பிடுகின் றேன். நச்செள்ளையாரென்னும் அருந்தமிழ்ப் புலமை வாய்ந்த பெண்மணி சேரலாதனென்னும் சேரமன்னனைப் புகழ்ந்துபாட, அவன் அவள் அங்ஙனம் சொற்சுவை, பொருட்சுவை முதலியன விளங்கப்பாடிய செய்யுட்களைக் கண்டு அவள் நுட்ப அறிவின் வன்மையைப் பெரிதும் புகழ்ந்து அவள் அணிகலனுக் கென்று ஒன்பது துலாம் பொன்னும் ஆயிரம் பொற்காசும் இனாமாகக் கொடுத்தனன். அதுவுமன்றி, அவள் அவ்வரசன் பக்கத்தே வீற்றிருக்கும் பெருஞ் சிறப்பையும் பெற்றாள். இன்னும், இவள் காக்கை கரைதலைபற்றி மிகவும் அருமையாகப் பாடினமையால், அறிவுடையோர் பலரால் தரப்பட்ட காக்கை பாடினி என்னும் பெயரையும் பெற்றாள். இவள் இயற்றிய செய்யுளிலக்கணத்தினின்றும் பலபாடல்கள் "யாப்பருங் கலக் காரிகை" என்னும் செய்யுளிலக்கண நூலிற் காணப்படுகின்றன; அவற்றுட் சிலவற்றை யீண்டுக் கூறுகின்றேன்.

"நீர்த்திரை போல நிரலே முறைமுறை
யாக்கஞ் சுருங்கி யசையடி தாழிசை
விட்டிசை விரியத் தொடுத்துச் சுரிதகந்
தாக்கித் தொடுத்த தாவின்றேனு எனவும்

யாப்புற்றமைந்த அம்போ தரங்கம்"
"அளவடி யந்தமும் ஆதியுமாகிக்
குறளடி சிந்தடி யென்று விரண்டு
மிடைவர நிற்ப திணைக் குறளாகும்"

இனி ஆதிமந்தி என்னும் பெண்மணியும் கல்வியில் வல்லவள். இவள் திருமாவளவனெனச் சிறந்த கரிகாற்சோழன் அருமை மகளாவள். இவள் சோணாட்டுமன்னன் ஒருவனை மணந்தவள். இவள் தன் கணவனுடன் தன் தந்தை கரிகாற் சோழனால் ஓர் ஊரில் கொண்டாடப்பட்ட புதப்புனல் திருவிழாவுக்குச் சென்றபோது, இவளறியாதபடி இவள் கணவன் காவிரி யாற்றில் விளையாடிக்கொண் டிருக்கும்போது அவனைக் காவிரிநீர் அடித்துக் கொண்டு போய்விட்டது. அப்போது அவள் தன் கணவன் நீரில் மறைந்த தறியாமல்,

"மன்னர் குழீஇய விழவி னானு
மகளிர் தழீஇய துணங்கை யானும்
யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோர் ஆடுகள மகளே யென்கைக்
கோடீரிலங் குவளை நெகிழ்த்த
நாடுகெழு குரிசிலு மாடுகளமகனே" என்னும்

அரிய பாடலைப் பாடினார். இவ்வாறு இலக்கணச்சுவை, பொருட் சுவை முதலியன விளங்கப் பாடிய அப்பெண்மணிகளின் பாட்டுக்களைப் போல் இக்காலத்து ஆண்மக்களுங்கூடப் பாட இயலாதவர்களா யிருப்பது போதுமான இலக்கணக் கல்வி யின்மையினாலே யாம். அன்றோ! நாம் பல ஆண்டுகளாகப் பள்ளிக்கூடத்தில் போதுமான இலக்கணக் கல்வி யின்றிக் கற்றும் நாம் அடைந்த பயனென்னை? இனிமேலாயினும், பெண் மக்களாகிய நாம் கண்விழித் தெழுந்து பள்ளிக்கூடத்திற் கற்பிக்கும் சிறி தளவான இலக்கணத்தையும் கருத்தூன்றிப் படித்துப் பள்ளிக்கூடத்துப் படிப்பை முடித்தபின்னர் அவ்விலக்கணக் கல்வியை மேன்மேலும் பெருக்கி நம்மறிவை அறியாமையினின்றும் நீக்கி உலக நன்மைக்காகப் பலசெய்யுட் களையும், நூல்களையும், விரிவுரைகளையும் இயற்றி நன்மையடைய முயலு வோமாக!

---

## இல்லறம்—கன்மம்.

(180-ம் பக்கத் தொடர்ச்சி)

இதனால் ஸ்நானத்துக்குப் பிரத்தியட்ச பலனும் சூட்சும பலனும் கூறப்பட்டது. இக்காலை ஸ்நானத்தினால் பெறக்கூடிய நற்பயன் மற்றெ வற்றாலும் அடைய முடியாது. இனி சந்நியாசிகளும் பெண்களும் விடிந்த பிறகே முழுகவேண்டுமென்றது அவரது சரீரநிலைமையை நோக்கியேயாம். அஃதெங்ஙனமெனிற் கூறுதும். பெண்களுக்குச்சரீரம் முற்றும் சோணிதம் நிறைந்திருக்குமென்றும் அதனால் அவர்களுக்குக் காமம் மிகுதியாயிருக்கு மென்பதும் அவர்களதுசரீர இலக்கணமாம். அச்சோணிதம்சரீரத்தில் உறை ந்து நின்றுற் பற்பலநோய்களை யுண்டாக்கும் என்பதுவைத்தியநூற் கொள் கையாம். ஆதலால் அச்சோணித முருகி வெளியிற் செல்லவேண்டும். சந்நி

யாசிகளுக்கு உஷ்ணம் மிகுந்து சுக்கிலம் சுண்டவேண்டும். இதனுல் அவர்களுக்கு அநேக குணங்களுண்டாகும். ஆதலாற்ருன் அவர்கள் சூரியகிரணங்கண்டே ஸ்நானம்செய்ய வேண்டுமென்ற விதி யேற்பட்டது. இந்த ஸ்நானமும் காலவேறுபாட்டால் சிறிது பேதப்படும். எங்ஙனமென்னில் மாகமாசத்தில் முன்பனி யதிகமாதலால் அக்காலத்தில் சிறிது சூரியகிரணம் புலப்பட்ட பின்னரே ஸ்நானம் செய்யவேண்டு மென்றும், வைசாக மாதத்தில் உஷ்ணம் தோன்றுவதற்கு முன்னரே ஸ்நானம் செய்யவேண்டு மென்றும் புராணங்கள் கூறுகின்றன. உஷ்ணமிகுதியான காலத்தில் குளிர்ந்திருக்கும்போதும் குளிர்ச்சி மிகுதியான காலத்தில் சிறிது உஷ்ணம்தோன்றிய பிறகும் ஸ்நானம்செய்வது நன்மையென்பதும் புராணங்களின் கருத்து. அதுபோலவே சரீர வேறுபாட்டாலும் சிறிது பேதப்படும். சடை தரித்தவன், கபரோக முள்ளவன், தலைநோயுள்ளவன், சுமங்கலியான பெண் இவர்கள் கழுத்தளவு குளித்தாற் போதுமென கௌதமாதி மஹரிஷிகள் கூறியிருக்கின்ருர்கள். இவையெல்லாம் சரீர சௌகரியத்தை உத்தேசித்தே யெழுதிவைத் திருப்பதினுல் ஒழுக்கந்தவருது நடப்பவர்களுக்கு ஔஷதப்பிரயோகம் அடிக்கடி வேண்டப்படுவது அவசியமன்றெனப் புலப்படும்.

அகமருஷணம் முதலிய மந்திரஜபத்தாலும் பரமேசுவர தியானத்தினுலும் மறுமைப்பயனும் விதிக்கப்பட்டது. காலையிலன்றி மற்றையகாலங்களில் ஸ்நானம்செய்து செய்யவேண்டிய கிரியைகளைச் செய்துவந்தாலும் மறுமைப்பயன் குறைவுபடாது. கால ஸ்நானந்தவறினுல் சரீரசுகமாகிய இம்மைப்பயன் கெடுவது நிச்சயமாதலாற்ருன் அதேகாலத்தில் ஸ்நானம் செய்யவேண்டு மென்ற கட்டாயவிதி யேற்படுத்தப்பட்டது. பெரிய நீர்நிலையத்திலேயே ஸ்நானம் செய்யவேண்டும். "அதிக நீருள்ள இடம் கிடைக்குமானுல் சிறிய தண்ணீரில் முழுகக்கூடாது" என்று ஸ்மிருதி கூறுகின்றது. ஓடுகிற தண்ணீர் கிடைக்குமானுல் நிற்குந்தண்ணீரில் முழுகக்கூடாது. ஓடுகிற தண்ணீரிலேயே முழுகவேண்டும். நீர்வரும் முகத்திற் கெதிராய் நின்று முழுகவேண்டு மென்பது நித்தியவிதி கூறுமிடத்துரைத்தாம். ஆண்டுக்காண்க. நிற்குந் தண்ணீராகிய குளம் முதலியவற்றில் குளிக்கநேர்ந்தால் சூரியனுக் கெதிர்முகமாக நின்று குளிக்கவேண்டும். அங்ஙனம் செய்வதால் சூரியனை நோக்கியெழும் ஆவி சரீரத்துட் செல்லு மென்பது கருத்து. அதினும் சமுத்திரத்திற் சென்று கலக்கும் நதியில் ஸ்நானம் செய்தால் அதிக நன்மை. அதுவும் நித்தியவிதியில் விளக்கப்பட்டது. ஆதலாற்ருன் சாந்திராயண விருதம், மூன்று கிருச்சிரம், முப்பதினுயிரம் காயத்திரி ஜபம் சமுத்திர காமினியாகிய நதியி னீராடல் இவைகள் சமபலனு மென்று ஸ்மிருதிகள் கூறின. சரீரம் உள்ளும் புறமும் சுத்தியாவதற் குரிய அம்சங்களெல்லாம் சமுத்திர காமினியாகிய நதியிற் கலந்திருக்கின்றன வென்பது மஹரிஷிகளின் கருத்து. தாமிரபாணி முதலிய சிலநதிகளில் தாமிரம் ஈயம் முதலிய அணுக்களும், காவேரியில் சொர்ண அணுக்களும், துங்காநதி முதலியவற்றில் அப்பிரக அணுக்களும், கங்கையில் பல தாதுக்களின் அம்சங்களுமுண்டு. அதனுலேயே தாமிரபாணியில் தவமும் காவேரியில் ஊக்க உற்சாகமும், கங்கையில் நல்லஞானமும், சமுத்திரத்தில் எல்லாமும் சித்திக்குமென்று புராணங்கள் கூறுகின்றன. ஆயினும் சமுத்திரத்தில் எக்காலமும் ஸ்நானம் செய்

வது கூடாது. சூரிய சந்திரகிரணம் முதலாகிய அமாவாசை பௌர்ணமி களிலேயே ஸ்நானம் விதிக்கப்பட்டது. அக்காலத்தில் சூரியசந்திரகிரணங் களால் சமுத்திரத்தின் சத்தி சிறிது குறைவுபடும். ஆதலால் அதேகாலத்தில் விதிக்கப்பட்டது. சூரிய சந்திரகிரகண காலங்களிலும் சமுத்திரஸ்நானம் நற்பயனளிக்கு மென்பது நூல்களின் கருத்து. இது எல்லாராலு முணர்ந்து கொள்வது அருமையாதல் பற்றி நமது பெரியோர் தாம் கண்டறிந்த விஷயங்களில் எழுதிக் கட்டாய விதியாக ஏற்படுத்தியுள்ளார். இதனால் கர்மமெல்லாம் பயனுள்ளனவே யென்று கண்டுகொள்ளலாம். நித்தியவிதி கூறுமிடத்து இவற்றைச் சிறிது விளக்கினும், ஈண்டு சமையம் நேர்ந்தமை யால் ஈண்டுக்கூறப்படாத சிலவற்றை விரித்தோம்.

இனி மறுமைப் பயனைக் கொடாத சிலகன்மங்களும் உண்டு எனினும் இம்மையில் எல்லாக் கன்மங்களுக்கும் பலனுண்டென்று கொள்க. இம்மை மறுமைப் பயன்களைத்தரும் கன்மம் நித்திய மெனப்படும். இம்மைப்பயனை மட்டிலளிப்பது காமியம் எனப்படும். இம்மைப் பயனைத்தரும் கருமத்தை விட்டால் அதன் பயனை வேறெவ்வகையிலாவது பெறுவது கூடும். இரு மைப் பயனுள்ள ஓர் கன்மத்தை விட்டொழித்தால் மறுமைப்பயன் மற்றெவ் வகையிலும் பெறக்கூடாது. ஆதலால் அதை விட்டவனை ஆரியனென்று நமது முன்னோர் கொண்டதில்லை. ஆதலாற்றான் மஹரிஷிகள் அதனை நிர்ப் பந்தித்துச் செய்யத்தூண்டினர். இதனால் கன்மம் என்பது நமது ஆரியப் பெரியாராற் கண்டு அடையப்பட்ட ஒரு கற்பகதருவென்பதும் இப்பாரதத் திலேயே முளைத்துச் செழித்துத் தழைத்து நற்பயன் அளிக்கின்றதென் பதும் கொள்ளக் கிடந்தது.

இனி கன்மம் அநாதியாயின் அதற்கு அந்தமுமில்லை யாதலால் அது பிரமஞானத்தால் ஒழியுமென்பது பொருந்துவதில்லை. எதற்கு ஆதியில்லை யோ அதற்கு அந்தமுமில்லை. ஆதலால் அநாதியாகிய கன்மம் பிரமஞானத் தால் எப்படி யொழிவது கூடுமென்று ஒரு சாரார் கூறுவர்.

அநாதியாயுள்ள சில பொருள்களும் நசித்தல் உலகத்தில் பிரத்தியட் சம். வித்தினின்றே முளைகள் தோன்றி யதினின்றும் வித்துத் தோன்றி ஒன்றுக்கொன்று காரணகாரியமாய் நிற்பது பிரத்தியட்சம். அவ்வித்தை வறுத்தால் அது முளைக்கும் சக்தியற்றுப் போகின்ற தென்பது பிரத்தி யட்சமல்லவா? அதுபோலப் பிரமஞானமாகிய பெருந்தீயால் தகிக்கப்பட்ட கன்மம் பிறப்பை யுண்டாக்கும் சக்தியற்றுப்போ மென்பதே திண்ணம். வறுத்த விதையை நல்ல நிலத்திலிட்டு நல்ல தண்ணீருற்றி வளர்த்தாலும் அது முளைப்பதில்லை. முளைப்பதற்குக் காரணங்களாயுள்ள நீரும் நிலமு மிருந்தும் அது முளையாததுபோல பிரமஞானத்தால் தகிக்கப்பட்ட ஆன்மா மீண்டும் சரீரத்தைப் பெறாது. பிரமஞானத்தால் கன்மம் முற்றுந் தகிக்கப் பட்ட ஜீவனுக்கு முக்தியே கதியாகும். கன்மம் முற்றுமொழிவதே மோட்ச மென்பதே நூல்களின் றுணிபு. பிரமத்தைப் பற்றிய ஞானமே யன்றி மற்றைய எவ்வகைப் பொருள்களைப்பற்றிய ஞானமும் பிறப்பை ஒழிக்கு மாற்றலுடையதல்ல.

பிரமஞானம் ஒன்றனாலேயே முக்திபெறுவது நிச்சயமாயின் கன்மத் தாற் பயன்யாது எனின் முக்திக்குப் பிரமஞானமே முதற் காரணமென்பது

திண்ணமே. ஆயினும் உடலும் உள்ளமும் சுத்திபெறுவிடில் உண்மை யறிவு தோன்றாது. அவ்விதமான சுத்திக்குக் கன்மத்தை யன்றி வேறு காரணம் கிடைப்பதில்லை. ஆதலாற்றான் "கன்மத்தான் ஞானமுண்டாம்" என்று நூல்கள் கூறின. அந்த ஞானத்தைப் பெற்ற மெய்ஞ்ஞானிகளும் அவ்வறிவு நிலை பெறுதற் பொருட்டும், அதை யனுஷ்டித்து உலகத்தார் நன்மை பெறுதற் பொருட்டும் கன்மத்தை முயன்று செய்வார்கள். முமுக்ஷுக்களும் பிரமஞானம் நிலைபெறற் பொருட்டுக் கன்மத்தை யனுஷ்டிப்பார்களானால் பத்தர்களாகிய ஏனையருக்குச் சொல்லவேண்டுவதில்லை. பத்தர்களுக்கும் இக்கன்மத்தால் ஒரு காலத்தில் நல்லறிவு உதிக்கும் ஆதலால் எல்லாரும் கன்மத்தை யனுஷ்டிப்பதே நலமா மென்க.

[illegible] இக்கன்மத்தைப்பற்றிய இரண்டொரு கேள்விகளை யெடுத்துக் காட்டி அவற்றிற்கு நாம் கூறியிருக்கும் சமாதானங்களைச் சிறிது விளக்கிக்காட்டாவிடிற் "கன்மம்" என்று நாமெடுத்துக்கொண்ட விஷயம் முற்றும் பூரணமாகாதாகையால் அவற்றை யடுத்த மாதச் சஞ்சிகையில் முடிப்போம். நமது பத்திரிகா நண்பர்களை அதுவரைச் சற்றுப் பொறுமையுட னிருக்கும்படி பிரார்த்திக்கின்றோம். ஏனெனில் இது நமது ஆரியகுலக் கற்பக தருவாதலால்.

(இன்னும் வரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## வேலூர் வாசிகளுக்கு:—

கடந்த அக்டோபர்மீ 30௳ வெளிவந்த சுதேசமித்திரன் பத்திரிகையில் வேலுருக்கடுத்த சதுப்பேரியில் 27 ஹிந்துக்கள் கிருஸ்து மதத்தில் சேர்க்கப்பட்டார்கள் என்ற சங்கதியைக் கண்டோம். மேலும் நமது சந்தாதேயர்களிற் சிலரும் அதைப்பற்றி வரைந்துளார்கள்.

ஓ வேலூர் வாசிகளே! இவர்கள் ஹிந்துமதத்தில் கடவுளையடையச் சரியான மார்க்கமில்லை யென்று அறிந்தார்களா? அதினும் கிருஸ்து மார்க்கத்தில் தான் உண்மையிருக்கிறதென்று தெரிந்து கொண்டா அதிற்போய்ச் சேர்ந்தார்கள்? ஒருகாலுமில்லை யென்பது நிச்சயம். ஏனெனில் அப்படியிருக்கமுடியாது. அவ்வாறு, உண்மையாகவே சரியானசுயமத ஆராய்ச்சியிலாததால், நமது மதத்திலுள்ள புராணவிஷயங்கள், சரியை கிரியைகள், இவற்றின் வெளி விஷயங்களில் கிருஸ்துமத போதகர்கள் குற்றங் கூறுவதைக்கேட்டு மயங்கி அம்மதத்தில் சேர்ந்த கல்வியுடைய இரண்டொருவர் மறுபடி நமதுமதத்திற்கே திரும்பி விட்டிருப்பதேயதற்குப் போதியசான்றாகும். பாமரஜனங்கள் ஆராய்ச்சியில்லாததால் சரியையாதிகளின் உண்மையையறியாது மயங்கக்கூடு மெனினும், அன்னிய மதத்தை யாராய்ந்தறியும் ஆற்றலும் அவர்களுக்கில்லை யாதலின் எவரும் மதத்திற்காகச் செல்வதில்லை. உலகபோக நாட்டமே யவர்களை மயக்கி யிழுத்துக் கொள்கிறது.

கிருஸ்துமத போதகர்கள் "எங்கள் மதத்தில்தான் மோக்ஷமுண்டு; மற்றமதத்தில் இல்லை. எங்கள் மதத்தில் சேராதவர்களுக்கு நரகமே கிடைக்கும். ஏசுகிருஸ்து நம்மனைவர் பாபத்தையும் ஏற்றுக்கொண்டார்" என்று இத்தகைய போதனைகளைக் கூறுவார்களேயன்றி வேறு அனுபவமாக அறியத்தக்க உண்மை யேதேனும் தங்கள் மதநூலி லிருக்கிற தென்று காட்ட அவர்களிடம் ஒன்றுமில்லை.

நேயர்களே! மதத்தைப் பாதுகாப்பது ஒவ்வொருவர்க்கும் கடமையன்றோ. சத்தியமும் பூரணமுமான மதத்தைவிட்டு வீண்மயக்கால் புறச்சமயம்புகும் நம்மவரைத் தடுத்து அவ்வாறு மயங்காதிருக்கச் செய்வது ஒவ்வொருவருக்கும் கடமையன்றோ. நமது மதம் பணத்தாலும் செல்வாக்காலும் பாதுகாக்கப்படுவதல்ல. என்று மழியாச் சத்தியமே யதற்குப்பாதுகாவலன். தோப்பாசாமி, நரசிங்கசாமிமுதலிய மகான்கள் உள்ள பூமியில்பிறந்த நீங்கள் மதவிஷயத்தில் இப்படி யலட்சியமாக நடந்து கொள்ளலாமோ.

இவ்வாறு வெளிமயக்கில் சிக்கிப் புறமதத்தில் இழுக்கப்பட்டவர்களை யுடனே நமது மதத்தில் சுலபமான பிராயச்சித்தம் செய்து மறுபடி நம் மதத்தில் சேர்த்துக்கொள்ள முயல்வது உங்கள் கடமையாகும். இவ்வாறு செய்வதைத் தடுப்போர் நமது மதத்திற்குத் துரோகம் செய்வோராவர். இக்காலத்தில் அவ்வாறு செய்யவேண்டியது அத்தியாவசியமாக விருக்கிறது. வேலூர்வாசிகளே எழுமின்! இத்தகைய மானக்கேட்டிற்கு இன்னமும் இடங்கொடுப்பீர்களாயின் மிக்க அவகேடாய் முடியும். அன்னிய மத போதகராகிய ஆடவர் மாதர் இவர்களின் நயப்பான சம்பாஷணை, பசப்பு வார்த்தைகள், அபிநயங்கள், இலவசமாய் வீட்டிற்கு வந்து பெண்களுக்குக் கல்வி கற்பிக்கிறோம் என்று நடிப்பது இவைகளால் மயங்கிவிடலாகாதென்று நம்மவர்க்குப் போதியுங்கள். இன்றேல் பின்னல் உங்கள் மக்களைப் பறிகொடுத்துப் பரிதவிக்க நேரிடும். நமது ஆனந்தன் பன்முறை இவ்விஷயத்தில் நமக்கு அறிவுறுத்தியும் நாம் கவனிக்காதிருத்தல் பெருங்குற்றமன்றோ. இது விஷயமாக வேலூரில் உடனே ஒரு சங்கத்தை ஸ்தாபித்து இவ்வாறு நமது மதத்தைச் சேர்ந்தவர்களைப் பறி கொடுக்கா திருக்க வேலை செய்யுங்கள்.

அப்பர் சுவாமிகள் மடம், தோப்பா சாமி மடம் முதலியவற்றிலுள்ள பக்திமான்களே! இது உங்கள் கடமையன்றோ? இன்றேல் மகா ஞானிகளின் திருநாமங்களால் தாபிக்கப்பட்ட மடங்களினல் என்ன பயன்? இதனினும் வேறு புண்ணியச்செயல் என்ன இருக்கிறது? சைவசமையத்தை நிலைநிறுத்த அப்பர் சுவாமிகள் பட்டபாடு எவ்வளவு? அதைக் கவனித்து அம்மடத்தைச் சேர்ந்த நீங்கள் அதில் இம்மியளவேனும் செய்யுங்கள். சீக்கிரம் நீங்கள் செய்யும் முயற்சியைப்பற்றி ஆனந்தன் மூலமாயறிய மிக்க ஆவலுள்ள,

உங்கள் அடிமை

சிவநேசன்.

குறிப்பு:—வேலூரில் மதப்பற்றுடைய பக்தர்கள் பலர் இருப்பதால் கட்டாயம் இதைப்பற்றித்தக்கமுயற்சி யெடுத்துக்கொண்டு ஒரு சங்கத்தைத் தாபிப்பார்க ளென்று நம்புகிறோம். வேலூரில் மடங்கள் தவிர அனேகம் பஜனைச் சங்கங்களிருக்கின்றன. இவர்களெல்லாம் இக்காலத்தில் இத்தகைய தொண்டு செய்யவேண்டியதவசியம் — அன்னிய மதத்தவர்கள் நம்மவரை பலவிதத் தந்திரங்களால் மயக்கித் தங்கள் மதத்திற்கு இழுப்பதையே பெரிய வேலையாய்ச் செய்யும்போது, நாம் அதைத் தடுத்து நம்மவர் அவர்கள் வலையில் சிக்காதிருக்கும்படி செய்யாமல் இருப்பது பெரிய துரோகமாக முடியுமன்றோ — நாம் செய்யும் மற்ற கைங்கரியங்களால் சிவனும் விஷ்ணுவும் ஒருபோதும் திருப்தி யடையார்கள். பத்திரிகாசிரியர்.

## பகவத்கீதை வசனம்.

(185-ம் பக்கத்தொடர்ச்சி)

(காமக்குரோதாதிகளை ஒழித்துவிடு என்றருளிய பகவான் பின்னும் கூறுகின்றார்.)

"ஏ அர்ச்சுன! ஒருவன் தன் ஆசிரம தருமத்திற்குத் தகாததென நிஷேதிக்கப்பட்ட கருமத்தைச் செய்யலாகாது. தன் ஆசிரமத்திற் குரிய கருமத்தைச்செய்து மரணமடைவா னாயினும் சிரேஷ்டமாம். உன்போன்ற அரசர் முதலியோர் விலக்கப்பட்ட கருமங்களை விசேஷமாகவும் பூரணமாகவும் செய்வதைக் காட்டிலும், விதித்த கருமங்களைக் கொஞ்சமாகவும் குறைபாடாகவும் அனுஷ்டித்தல் மேலானதாம்" என்றருளினர்.

இவ்வாறு ஸ்ரீபகவா னருளியதைக் கேட்ட விஜயன் பகவானைநோக்கி "சுவாமி! ஒருவன் தனக்குச்செய்யப் பிரியமில்லாத காரியத்தை யன்னியர் பலவத்காரத்தால் செய்வதுபோல், நிஷேதித்த பாபகருமங்களைச் செய்யப் பிரியமில்லாத புருஷன் எதனால் தூண்டப்பட்டு அக்கருமங்களைச் செய்கிறான்?" என்று வினவினன்.

அர்ச்சுனனது இக்கேள்விக்குத் திருப்பாற்கடலில் யோகநித்திரை செய்யும் பகவான் பின்வருமாறு கூறியருளினர்:—

ஏ பார்த்த! அவ்வாறு பாபகருமங்களைச் செய்யத் தூண்டுவது இராஜோகுண சம்பந்தமான இக்காமமேயாகும். இது மகாகொடிது.

அர்ச்சுனன்:—பகவான்! குரோதகுணமே கொடிய அனர்த்தங்களைச் செய்யும்படி புருஷனைத் தூண்டுகிறதாதலின், காமத்தால் தூண்டுதல் சம்பவியாதன்றோ?

பகவான்:—அர்ச்சுன! இக்காமத்தின் கோரிக்கை பூரணமடைவதை ஒருவன் தடுக்கும்போது இக்காமமே மிக்க வெறுப்பாகப் பரிணமித்துக் கொழுந்து விட்டெரியும் அக்கினிச் சுவாலைபோல் வளர்ந்து வெகுளியென்ற பெயரடைகின்றது. ஆதலின் இக்காமமே குரோதமாக மாறுகின்றது. இது செய்யுங்கெடுதியை யின்னுங் கூறுதுங் கேட்பாயாக.

இக்காமம் எவ்வகைப்பட்ட போகங்களாலும் சாந்தி யடையாதது. அக்கினி, காஷ்டத்தையும் நெய்யையும் பெறப்பெற எவ்வாறு தணியாமல் மென்மேலும் விருத்தி யடையுமோ அவ்வாறே இக்காமமும் எவ்வகைப் போகங்களை யனுபவித்தாலும் தணிவடையாது விர்த்தியடைந்து கொண்டேயிருக்கும். இதனால், இக்காமத்தால் ஏவப்பட்டவன் பாபகருமங்களைச் செய்வதால் எவ்வளவோ துக்கரூபமான பலன்களை யனுபவிப்பதை யறிந்தும் பின்னும் பின்னும் பாபகர்மத்தையே செய்துகொண் டிருப்பான். ஆதலின் ஏ அர்ச்சுன! இச்சம்சாரத்தில் இக்காமமே கொடிய பகைவன் என்று நீ கருதுவாயாக.

(இன்னும் இக்காமத்தினாலுண்டாகும் பெருங் கெடுதியை யருளிச் செய்கிறார்.)

"ஏ அர்ச்சுன! அக்கினியைப் புகை மறைப்பது போலும், கண்ணாடியை மாசு மறைப்பதுபோலும், கர்ப்பத்திலுள்ள சிசுவைச் சர்மம் மறைப்பதுபோலும், இக்காமம் ஞானத்தையே மறைக்கும். இக்காமம் இந்திரியம், மனம், புத்தி இவைகளின் வழியாக உள்ளே புகுந்து ஞானத்தை மறைத்து தேகாபிமானம் முதலிய மோகங்களை யுண்டாக்கி விடுகின்றது" என்றார்.

இத்தகைய காமத்தை யெதனால் அடக்கலாம் என்ற அர்ச்சுனனது சங்கைக்குப் பகவான் அருளிச் செய்கின்றார்:—

ஏ அர்ச்சுன! இக்காமம் இச்சித்த போகத்தை யளிப்பதால் இதை யடக்க முடியாது. ஏனெனில் இச்சித்த போகத்தைப் புசிக்கும்போது அது திருப்தியடைந்ததாகத் தோன்றினும், சட்டாயம் மீண்டும் மீண்டும் எழும். ஆதலின் இது சாமபேத தானாதிகளால் வெல்லத்தக்க சத்துருவன்றாம். ஆதலின் இந்திரியாதிகளைப்பற்றி அவற்றின் மூலமாய் மயக்கத்தை யுண்டாக்கும் இக்காமத்தை இந்திரியாதிகளின் வழியாகவே யடக்கவேண்டும். அதாவது முதலில் இந்திரியங்களை வசம் செய்துகொள்வதால் காமத்தையடக்கலாகும்.

இந்துல தேகத்தைப் பார்க்கிலும் ஞானேந்திரியங்கள் விசேஷமாம்; ஞானேந்திரியங்களைப் பார்க்கிலும் மனம் மேலானதாகும்; மனதைப் பார்க்கிலும் நிச்சயரூபமான புத்தி விசேஷமாம்; இப்புத்தியைப் பார்க்கிலும் தேகம், இந்திரியம், மனம், புத்தி யாவற்றையும் சாக்ஷியாக விருந்தறியும் ஆன்மாவே முதன்மை யானதாம்.

ஆதலின் இந்திரியங்களை வசஞ்செய்தால் பின்னர் மனம் புத்தி யிரண்டையும் வசம் செய்யலாகும். அதன்பின் யாவற்றிற்கும் மேலாயுள்ள ஆன்மாவை அனுபவமாயறிந்து ஜனன மரணாதி யொழியும் வண்ணம் இக்காமத்தை யழிப்பாயாக.

[பகவான் இங்கு காமம் என்றது ஆசை யென்பதே. இந்த ஆசையே மாயையென்று கூறலாகும். ஏனெனில் மனமே மாயையென்று கூறப்பட்டிருக்கிறது. மனமோ இச்சையையே சொரூபமாக வுடையது.

"மனமன மெங்குண்டு மாயையு மங்குண்டு
மனமன மெங்கில்லை மாயையு மங்கில்லை
மனமாயை யன்றி மற்றொன்று மில்லை
பினைமாய வேண்டாம் பிதற்றவும் வேண்டாம்
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே."

மனமடங்கினாலன்றி இச்சை யொழியாது. மனதை யடக்கவேண்டுமாயின் அதன் உற்பத்தி ஸ்தானத்தை யறிந்தாலன்றி அதை யொழிக்க முடியாது.

இதனால் காமத்தை யொழிக்க வேண்டுமாயின் அதன் இருப்பிடத்தை யறிந்தாலன்றி முடியாது. இதனாலே, ஆன்மதரிசனமே காமத்தை யொழிக்க வழியென்று அர்ச்சுனன் உணரும்படி, மேற்கண்ட மனம் இந்திரியங்களின் துவாரா வெளிச்சென்றே விஷயாதிகளைப் பற்றுகிற தாதலின், இந்திரியங்களை முதலில் அடக்கினால் மனமடங்கும் எனப்பட்டது. அப்படி மனம் உள்ளடங்கினாலும் காமம் என்ற இச்சை யொழிந்த தல்ல. மனம் உள்முகத்தி லிருந்தாலும் இச்சையென்ற காற்றால் அலைந்துகொண்டேதா னிருக்கும். அதன் மூலத்தை யறிந்தாலன்றி யது ஒழியாது.

காமம் அல்லது இச்சையென்பதை மேற்கண்ட விதமாகவன்றி வேறு வழியா யொழிக்க முடியாது. அப்படியடக்க முயன்றாலும் அடக்கும் தொழிலை நாம் மறந்ததே அது மறுபடி கிளம்பிவிடும். காமம் உலகபோகங்களாகிய நாமரூப பதார்த்தங்களிலேயே நாட்டமுடையது. நாமரூபம்யாவும் அநித்தியம் என்ற திடஞானம் வந்தாலன்றி இச்சையறாது; ஆன்மசொரூபத்தை அதாவது நம் நிஜவடிவை நாம்காணில், அப்போதுதான் நம்மாலறியப்படும் மற்ற யாவுமே அநித்தியம் என்றும் சடம் என்றும் துக்கமென்றும் பிரத்தியக்ஷமாய்த் தோன்றும். அப்போதே காமம் அல்லது இச்சையென்பது அடியோ டொழியும். "நிராசையின்றேற் றெய்வ முண்டோ" என்றும், "ஆசாபிசாசைத் துரத்தி, ஐயனடியிணைக் கீழென்னை யடக்கிக் கொண்டாண்டி...." என்றும் தாயுமானவர் கூறியருளினார். இதனால் காமம் என்பது ஞானத்தையே மறைக்கும் கொடிய விரோதியென்றும், மனதை யடக்கி ஆன்மசொரூபத்தை யறிவதனாலேயே இதை யழிக்கவேண்டுமென்றும் பகவான் அருளினார். இது ஞானயோகமாகும்]

(இந்த மூன்றாவது அத்தியாயத்தில் ஞானயோகத்திற்கு அனுகூலம் செய்வதாகிய நிஷ்காம கர்மயோகம் விவகரிக்கப்பட்டது. கடைசியில் ஞானயோகம் குறிப்பாய்க் கூறப்பட்டது.)

மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 4-வது * சம்பிரதாயவத்தியாயம்.

(முன் இரண்டத்தியாயங்களில் கூறியருளிய கர்மயோக ஞானயோகங்களையும் விவரமாகக்கூறக் கருதிய பகவான் இவ்வத்தியாயத்தில் ஞானயோகத்தைப்பற்றிக் கூறியருள்கிறார்.)

சக்ராயுதபாணியாகிய ஸ்ரீபகவான் பார்த்தனை நோக்கிக்கூறுகிறார்:—

"ஏ அர்ச்சுனா! அநாதியானதும் நாசமற்றதுமாகிய இந்த ஞானயோகத்தைச் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் நான் சூரியனுக்கு உபதேசித்தேன். சூரியன் தன் புத்திரனாகிய மநுவுக்கு உபதேசித்தான்; மநு இக்ஷுவாகு

---

* ஞானவிபாக யோகம்.

வென்னும் தன் மைந்தனுக் குபதேசித்தான். மற்றும் (சிபி, ஜனகன், அஜாதசத்துரு, கைகேயன்முதலிய தவசிரேஷ்டர்களாகிய) இராஜரிஷிகள் அதைப் பரம்பரையா யறிந்து அநுஷ்டித்து வந்தார்கள்.

இந்த ஞானயோகம், அளவுகடந்தகாலஞ் சென்றதால், ஒருவரும் அடையத்தகாத வண்ணம் மறைந்து விட்டது. இது யாவராலும் உணர்தற் கரிதாகிய இரகசியமாயும், இருவினைகளையு மழித்து அழியா மோக்ஷத்தை யளிக்கத்தக்கதாயு முள்ளது. இத்தகைய அழியாத ஞானநிஷ்டையை யுனக்கு உபதேசிக்கிறேன். ஏனெனில் நீ எனக்கு உகந்தபக்தனும் சிநேகிதனுமாயும் என்னையன்றி வேறு (உலகபோகம்) எதையும் அறியாத பக்தனுமிருப்பதால் உனக்கு இதை யுபதேசிக்கிறேன்" என்றார்.

இவற்றைக் கேட்ட அர்ச்சுனன்,

"பகவானே! இந்த ஞானயோகத்தைச் சிருஷ்டியின் ஆதிகாலத்திலேயே சூரியனுக்கு உபதேசித்ததா யருளினீர். இதில் அடியேனுக்குப் பெரிய சந்தேகம் உண்டாகிறது. சூரியன் ஜன்மமோ சிருஷ்டியின் ஆதிகாலத்திலே யுண்டானது. தமது இத்திருமேனி இத்துவாபரயுகத்தின் அந்தத்தில் உண்டானது. அப்போது வேறு தேகத்தோடு இருந்து உபதேசித்தீர் எனின், என்னைப் போன்ற மானிட ஜன்மமாகிய தங்களுக்கு அந்தத் தேகத்தில் நடந்த அனுபவம் இந்தத் தேகத்தி லிருக்கையில் மனதில் எவ்வாறு உதிக்கும்? என்போன்ற மற்ற மனித ஜன்மங்களுக்கு அத்தகைய அனுபோகம் இல்லையே யாதலின் இச்சந்தேகத்தைப் போக்கி யருளல் வேண்டும்" என்றான்.

(பாமர ஜனங்கள் பகவானது அவதாரத்தைச் சாதாரணமான மனிதனெனக்கருதி அவர் உபதேசங்களை யலட்சியம் செய்து அழியாவண்ணம், அவரது தெய்வத்தன்மையை யாவரு மறியுமாறு நன்கு வெளிப்படுத்தவே பார்த்தன் பகவானை இக் கேள்வி கேட்டான்.)

பகவான்:—ஏ பார்த்த! சிருஷ்டியாதி காலமுதல் இதுவரையில் உனக்கும் நமக்கும் நேர்ந்த ஜன்மங்கள் பல்லாயிரமாகும். ஆயினும் நாம் எல்லா ஜன்மங்களின் அனுபவங்களையும் அறிவோம். நீயோ கடந்த ஜனனங்களின் அனுபவங்களில் சிறிதும் அறியமாட்டாய். இதுவே நம்மிருவர்க்கும் பரஸ்பரமுள்ள பேதமாகும்.

(ஈசுவரன் உலகானுக்கிரகத்தின் பொருட்டு லீலாமாத்திரமாய் அவதரிப்பவர். மனிதன் கர்மவயப்பட்டு ஜனன மரண சக்கரத்தில் சுழன்று கொண் டிருப்பவன். ஈசுவரன் சர்வஞ்ஞத்வ முடையவர்—மனிதன் சிற்றறிவுடையவன்.)

(பகவான் தாம் பலஜன்மங்கள் எடுப்பதன் காரணத்தை விவரித்துக் கூறுகிறார்).

ஏ பார்த்த! ஜனன மரணமற்ற சர்வவியாபியான ஈசுரனுகிய நாம் பக்தர்களின் துயரை நீக்கி, துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்து, உலகில் தருமத்தை நிலைநாட்டும் பொருட்டாக யுகங்கள் தோறும் அவதரிப் போம். நாம் நமது பாரமார்த்திக நிலையில் இருந்தபடியிருந்தே, மாயை யின் வல்லமையால் தேக முடையவன்போல் ஜனிப்போம். ('நமது சரீரம் மாயாசரீரமேயன்றி மற்றையர் சரீரம்போல் கர்மத்தா லுற்பத்தியான பௌதிக சரீரமன்றும்' என்றபடி)

அர்ச்சுனன் "ஏ பகவான்! தங்களுக்கு மாயையே தேகமாயின் பௌதிகசரீர தர்மமாகிய மனுஷ்யத்வாதி தர்மங்கள் தங்களிடம் தோன்று வானேன்?" என்று கேட்ட சங்கைக்குப் பகவான் அருளிச்செய்கின்றார்:—

"ஏ அர்ச்சுன! எம்மிடத்தே தோற்றும் மனுஷ்யத்வம் முதலிய தரு மங்கள் உண்மையில் இல்லை. ஆனால் உலகார்க் கனுக்கிரகம் செய்யும்பொரு ட்டு நமது மாயையாற் புலப்படும். எவ்வெக்காலத்தில் தர்மம் குன்றி அதர் மம் விர்த்தியாகுமோ அவ்வக்காலத்தில் யாம் அவதாரம் செய்வோம்.

இவ்வாறு எனது திவ்ய அவதாரத்தின் தன்மையையும், என் கரும மனைத்தும் லோகானுக் கிரகத்தின் பொருட்டே என்பதையும் உள்ளபடி யறிந்தவன், ஞானமார்க்கத்தில் சென்று பிறப்பிறப்பாகிய சாகரத்தைக் கட ந்து என்னையே யடைவான். இவ்வா றடைந்தோரை அளவிடற் கரிது. மேலும் யாரார் எந்தெந்தத் தெய்வத்தை மெய்யென நம்பி வழிபடுகிறார் களோ, அவரவர்களுக்கு அந்தந்தத் தெய்வமாய் நின்று அவரவர் கோரிய வற்றை யளிப்பவனும் யானே." என்றருளினர். (தொடரும்)

சீடன்.

---

## கவர்ன்மெண்ட் பரீக்ஷைகள்.

1921—22-வது வருடத்தில் நமது இராஜதானியில் நடந்த கவர்ன் மெண்ட் பரீக்ஷைகளைப்பற்றிய ரிபோர்ட்டிலுள்ள முக்கியமான அம்சங்கள் யாவரும் அறியத்தக்கவை. ஒவ்வொருவகுப்பிலும் பல உட்பிரிவுகளையுடைய பனிரண்டுவகுப்புகளில் பரீக்ஷைகள் நடந்தன. மொத்தம் 506 ஸ்தலங்களில் பரீக்ஷைகள் நடந்தன. பரீக்ஷை செய்யப்பட்டவர்கள் தொகை 35,173. கவர்ன் மெண்ட் பரீட்சைகளுக்குக் கமிஷனராக விருப்பவரின் காரியதரிசியாகிய மிஸ்டர் ஹாப்டே என்பவரும் உதவி காரியதரிசியாகிய ஸ்ரீமான் இராவ்சா ஹேப் கிருஷ்ணராவ் போன்ஸ்லே அவர்களுமே இப்பரீக்ஷைகளுக்கு வேண் டிய சகல ஏற்பாடுகளையும் செய்ய வேண்டியவர்கள். இவர்களால சாதாரண மாய் வருடந்தோறும் நடத்தப்படும் பரீட்சைகளோடு, 1921ளு டிசம்பர்மீ இந்திய இம்பீரியல் போலீஸ் பரீக்ஷைகளை நடத்தவேண்டியதைப் பற்றிய ஏற்பாடுகளையும் செய்யவேண்டி யிருந்தது. இப்பரீக்ஷைகள் ஒவ்வொன்றி லும் இவ்வருடம் மாணவர்கள் தொகை அதிகமாயிற்று. அவற்றை ஒழுங் காகவும் திருப்திகரமாகவும் நிறைவேற்றுவதற்கு மிக்க உழைப்பு எடுத்துக் கொண் டிருக்கவேண்டும்.

இச்சந்தர்ப்பத்தில் மானேஜராக விருந்த ஸ்ரீமான் இராவ்சாஹேப் கிருஷ்ணராவ் போன்ஸலே அவர்கள் மிக்க பொறுப்புடன் உழைத்துச் சிரமம்பாராது தமக்கு உதவிசெய்ததைப்பற்றி புகழ்ந்து தாம்செய்த சிபாரிஸின்பேரில் கவர்ன்மெண்டார் அவரை உதவிக்காரியதரிசி பதவிக்கு உயர்த்தியதை யறிந்து தாம் சந்தோஷ மடைவதாகக் கமிஷனர் தமது ரிபோர்ட்டில் குறிப்பிட்டதைப்பற்றியும், கவர்ன்மெண்டார் தங்கள் பதிலில் இராவ்சாஹேப் அவர்கள் விஷயத்தில் தாங்கள் சந்தோஷப் படுவதாகக் கூறியிருப்பதையும் யாவர்க்கும் நாம் சந்தோஷத்தோடு அறிவிக்கிறோம். சற்றும் சுய நலங்கருதாது யார் மாட்டும் நலம்புரிவதையே விரதமாகவுடைய அப்பெருந்தகையாரை யறிந்த ஒவ்வொருவரும் இவ்விஷயத்தை யறிந்து மனமகிழ்வெய்துவார்க ளென்பது திண்ணம்.

## ஓர் ஐய வினா.

கலைதெளிந்த ஐயன்மீர் !

(அ) எம்பெருமானாகிய சிவபிரான் எழுந்தருளி யிருக்கும் ஆலயங்களில், 'வைதிகப்பிரதிஷ்டை' என்னும் ஒரு பிரதிஷ்டை செய்வதுண்டா?

(ஆ) ஆகமப்பிரதிஷ்டை, வைதிகப்பிரதிஷ்டை, இவ்விரண்டு பிரதிஷ்டைகளுள் எது நியாயமானதும் சிரேஷ்டமானது மாகும் ?

(இ) தொன்று தொட்டு ஆகமப்பிரதிஷ்டை செய்து கிரியைகள் நடந்து வரது, ஏதோ அசந்தர்ப்பங்களால் புனருத்தாரணம் செய்து கும்பாபிஷேகம்செய்வதா யிருந்தால், வைதிகப்பிரதிஷ்டை செய்யலாமா ?

(ஈ) அப்படிச் செய்வது நியாய மன்றெனின், அதற்குப் பரிகாரம் ஏதேனுமுளதா ?

மேற்கண்ட ஐயங்களை, ஆகம வல்லுநர்களாகிய பெரியோர்கள் மேற்கோள்களோடு, நமமானந்தன் மூலமாய் நீக்குமாறு அடிபணிந்து வேண்டுகின்றனன்.

இங்ஙனம்,
உமாபதி சாமண்ண குருக்கள்,
மோகனூர்.

---

## எண்ணெய் ஸ்நானம்.

இதைத்தான் ஆரோக்கிய ஸ்நானம் என்று சாற்றவேண்டும். இதை நம் நாட்டார் மிகவும் அதிகமாகக் கொண்டாடுகிறார்கள். ஆனால் அதினாலேற்படும் சரீராரோக்கியத்தை முற்றிலும் அனுபவித்தவர்களாகக்காணவில்லை. முறையோடு ஸ்நானம் செய்தால் முற்றிலும் சுகமடைவார்களென்றால் மிகையாகாது. சிலர், எண்ணெயை (கல்லைசருக்கு எண்ணெய் அபிஷேகம் பூசாரி செய்விக்கிறதுபோல) ஐந்து நிமிடங்களில மடமடவென்று தேய்த்து உடனே அரைப்புப்போட்டு ஸ்நானம் செய்கிறார்கள். சிலர், புஜபல பராக்கிரம சாலிகளைக் கொண்டு தலையில் தாளம்போட்டு, இவருடு அவருக்குத்தாக்க அவருடு இவருக்குத்தாக்க, தடபுட தடபுடவென்று தாக்கி, ஊறட்டும் ஊறட்டுமென்று உலாவிக்கொண்டிருந்து சிறிதுநேரம்

கழித்து அரைப்புப்போட்டு ஸ்நானம் பண்ணுகிறார்கள். இன்னும்சிலர்,நல்ல சாதிப் பலாப்பழத்தில் தேன்வடிந்தாற்போல் சளசள வென்று வடியவடியத் தேய்த்துக் கொண்டு ஸ்நானம் செய்கிறார்கள். இவ்விதம் பலமாதிரியாக எண்ணெய் தேய்க்கிறதில் மட்டும் சம்பிரதாயமாகச் செய்கிறார்களே யொழிய ஸ்நானம் செய்யவேண்டிய முறைகளை அனுசரிக்கிறதில்லை.

முறை.—சாதாரண ஸ்நானத்துக்குத் தயார் செய்யும் வெந்நீரைப்பார்க்கிலும் மூன்று மடங்கு அதிகம் வெந்நீர் பொறுக்கக்கூடிய சூடுள்ளதாகத் தயார் செய்து கொள்ள வேண்டியது. ஸ்நானம் செய்யும் அறை தனிமையாக இருக்க வேண்டும். அந்த அறைக்குக் காற்றோட்டம் போதுமானபடி இருக்கவேண்டும். அவரவர்கள் வழக்கப்படி எண்ணெயோ அல்லது வைத்திய பாகப்படி சரீரரோகத்துக்குத்தக்கவாறு செய்துவைத் திருக்கும் தைலமோ வேண்டுமளவு எடுத்து, எண்ணெயானால் நன்றாய்க் காய்ச்சிச் சூடுள்ளதாகவும், தைலமானால் சூடு ஏற்றிக்கொண்டும் பாத்திரத்தில் வைத்துக் கொண்டு பிறருடைய உதவியின்றி நமக்கு நாமே தேய்த்துக்கொள்ள வேண்டும். உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை படபடப் பன்னியில் மெதுவாகச் சரீரத்தின் ஒவ்வொரு அவயவங்களையும் நன்றாய்அழுந்தத்தேய்க்கிறதும் தவிர,எண்ணெயில் தோய்த் தெடுத்ததுபோல் வெட்டை யன்னியில் சரீர முழுவதும் தேய்க்கவேண்டும். தலையில் தேய்க்கும் போது ஒவ்வொரு உரோமக் கால்களையும் விரல்களினால் கலப்பித்துக் கொடுக்க வேண்டும். ஆனால் அவயவங்களில் கண்களைப் பற்றியும் காதுகளைப் பற்றியும் சிறிது கவனிக்கவேண்டும். "விட்டுக் கெட்டது காது, விடாமற் கெட்டது கண்" என்னும் வாக்கிற் கிணங்கக்காதுகளின் வெளிப்பக்கத்தில் தேய்க்கவேண்டுமேதவிர, உள்பக்கம் அதிகமாக எண்ணெயைப் புகவிடக் கூடாது. கண்களுக்குத் தேய்க்கிறதில் சிறிது சிரமமெடுத்துக் கொள்ள வேண்டியது. முறையே, வலது கண்ணுக்கு, வலதுகைப் பெருவிரல் முதல் மூன்றாவது பெரிய விரலாலும், இடது கண்ணுக்கு இடதுகைப்பெருவிரல் முதல்மூன்றாவது பெரியவிரலாலும் எண்ணெயை நன்றாய்த்தடவி முறையே அந்தந்த விரல்களைக் கொண்டே, கண்களில் பீழைசாடுகிற மூலையிலிருந்து ஆரம்பித்துக் கீழ் இமையைய ஒட்டியே மற்றொரு மூலைக்கு விரல்களை அழுந்த நகர்த்திக்கொண்டுவந்து மேல் இமையை ஒட்டி, முன் ஆரம்பித்த மூலைக்கு, முன்போலவே நகர்த்திக்கொண்டுவந்து, பீழையை எடுக்கிற வழக்கப்படி எடுக்க வேண்டியது. இவ்விதம் கண் கரிப்புத் தாங்கும்வரை, மறுபடியும் மறுபடியும், உருட்டி உருட்டி எடுக்கவேண்டியது. இதினால் கண்களில் நாளாரம்பமாகக் காற்றினால் படிந்திருக்கும் கல் தூசி முதலிய மாசுகள் வெளியாகும். இதற்குள் கண் கரிப்பு அதிகரிக்கும்; கண்கள் சிவந்து கலங்கும்; நாசியினால் நீர் இறைக்கும். அதினால் குற்றமில்லை; உடனே வெந்நீரை ஒரு பாத்திரத்தில் மொண்டு தலைக்கு ஒரு அடி உயரத்திலிருந்து மடமடவென்று விடாமல் ஒரேநிதானமாகச் சிறு அருவி வீழ்ச்சிபோல் விட்டுக்கொண்டேயிருக்கவேண்டும். ஐந்து நிமிடத்துக் கெல்லாம் கண்கரிப்பு மாறிச் சில்லென்று குளிர்ந்து விடும். தண்ணீர் விட்டுக்கொண் டிருக்கும் போது தலையின் மயிர்க்கால்களை விரல்களினால் நன்றாய்க் கிளரிக்கொண்டிருக்க வேண்டியதும்தவிர, அவயவங்களின் தமர்களையும் துலக்கிக்கொண்டிருக்க வேண்டும். இவ்விதம் முக்கால்பங்கு ஜலம் விட்டு முடிந்ததும் சரீரத்தில் எண்ணெய் காண்ப தரிதாகிவிடும். பின்னால் அவரவர்கள்

கொள்கைப்படி சோப்பானாலும் சரி,அரைப்பானாலும் சரி, இலேசாகப்போட்டு, சரீரத்திலுள்ள அழுக்கை மிதிக்கால்பங்குஜலத்தினுல் நன்றாய்க் கழுவிவிடவேண்டும். ஸ்நானம் முடிந்ததும் உலர்ந்த வஸ்திரத்தினுல் நன்றாய்த் தலையைத் துவட்டுகிறதும் தவிரச் சரீரத்திலும் துளித் தண்ணீர்கூடத் தங்கவொட்டாதபடி துடைக்க வேண்டும். துவட்டி முடிந்ததும் சரீரத்துக்குச் சாம்பிராணித்தூபம் காட்ட வேண்டும். உடனே வெளுப்பு வஸ்திரமணியவேண்டும். பகல் நித்திரையை ஒழிக்கவேண்டும்.

தற்கால நாகரீககோலத்தை அனுசரித்துத் தலைமயிரை கிராப்செய்திருக்கும் அநேகர் தலையை வகுப்பெடுத்துச் சீவவேண்டி, மயிர்களில் ஈரமிருந்தால்தான் மயிர்பணியுமென்ற எண்ணத்தை மனதிற்கொண்டு நன்றாகத் துவட்டாமல் ஈரத்தோடு உடனே சீவுகிறார்கள். அது மிகவும் தவறு. தண்ணீர் தலையில் தங்குவதினுல் அநேக வியாதிகள் உண்டாகும். மேலும் எண்ணெய் ஸ்நானம் செய்த அன்று தலை சீவுதலும் கூடாது. சாதாரண ஸ்நானம் செய்தாலும்கூடத் தலையை நன்றாய்த் துவட்டி உலர்ந்தபின்தான் தலை சீவவேண்டும். நன்றாய்க்காய்ந்தபின் வேண்டுமானுல் சிறிது எண்ணெயைத் தடவிச் சீவிக்கொள்ளலாம்; சிலர் எண்ணெய், தண்ணீர் இரண்டும் கலந்து ஒன்றாய்த்தேய்த்துத் தலைசீவுகிறார்கள். அதுவும் தவறே. அது நாளடைவில் வியாதிகளுக்குக் காரணமாகும்.

குணங்கள்.—எண்ணெய் ஸ்நானம் செய்வதினுல் அநேககுணங்கள் உண்டு. இது யாவருமறிந்த விஷயமே. இந்த முறைப்படி ஸ்நானம் செய்வதினுலேற்படும் குணத்தைமட்டும் இங்கு எடுத்துக் காட்டுவது அவசியம். சாதாரணமாக சனி,புதன், ஆக வாரத்துக்கு இரண்டு முறை மாசம் ஒன்றுக்கு எட்டுஸ்நானம் செய்கிறதினுலடையும் பயன்,இம்முறைப்படி மாசம்ஒன்றுக்கு ஒருதடவை ஸ்நானம் செய்கிறதினுலடையும் பயனுக்குச்சமமென்றே சாற்றலாம். ஒருமாதத்துக்கு இடையில் சரீரசம்பந்தப் பட்டு ஏற்படும் எவ்விதமான உஷ்ணமும் ஒரேஸ்நானத்தில் பறந்து போய்விடும். மேகரோகங்களினுல் ஏற்படும், கண்களில் நீர்வடிதல், கண் எரிச்சல், கண்சிவப்பு, கண்வலி, கண்மறைவு முதலிய அநேகவியாதிகள் குணமாகிறதும் தவிர மறுபடியும் வராதென்று உறுதியாய்ச் சொல்லலாம். சரீரத்தில் ஏற்படும் உஷ்ணசம்பந்தமான வியாதிகளையும் தடுக்கும்.

தாதுவிர்த்திக்காக அநேகர் அநேகம் வைத்தியர்களிடம் சென்று அநேகம் பணத்தைச் செலவிட்டும் தங்களுடைய எண்ணம் நிறைவேறாமல் ஏமாந்துபோகிறார்கள். இந்த ஸ்நானம் அடிக்கடி செய்யும் பட்சத்தில் தாதுபல முண்டாகும் என்பதற்குச்சிறிதும் சந்தேகமில்லை. விரிவாகச் சொல்வதில் யாதுபயன்; அவரவர்கள் அனுபோகத்தில் தெரிந்துகொள்வதே மேன்மை. எண்ணெய் ஸ்நானம்செய்த மறுநாட் காலை குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம்செய்ய வேண்டும்.

I. S. சேண்பகம் பிள்ளை,

தமிழ்வைத்தியம், இலஞ்சி, தென்காசித்தாலுகா.

---

## பிழைதிருத்தம்.

207-ம் பக்கத்தில் கடைசிவரிக்கு மேல்வரியில் உள்ள "ஞான" என்பதை "ஞால" என்று திருத்திக் கொள்ளவும்.

---

## முக்கியமான அறிவிப்பு.

1. வெளியிடப்படாத வியாசங்கள் திருப்பியனுப்பப் படமாட்டா ? சிலர் ஏன் வெளியிடவில்லை யென்று காரணங்கேட்கிருர்கள். ஒரு வியாசத்தை வெளியிடாததற்குப் பலவிதக் காரணங்க ளுண்டாதலின் காரணங் கூற அனுகூலமில்லை என்று அறிய விரும்புகிறேம்.

2. வியாசம் அனுப்புவோர் புனைப்பெயர் வைத்துக் கொள்ளினும், தங்கள் முழுவிலாசத்தை நமக்கறிவிக்காவிடின் அது கவனிக்கப்படமாட்டாது. பத்திரிகாசிரியர்.

---

## பிரசங்கமும் சுரோதாக்களும்.

சமீபத்தில் நடந்த ஒரு சத்காலக்ஷேபத்தைக் கேட்டதும் யாவரும் எழுந்து வெளிவந்தபோது சிலருக்குள் நடந்த சம்பாஷணையால் நாம் இவ் விஷயத்தைப் பற்றி வரையநேர்ந்தது.

பிரசங்கங்கள், காலக்ஷேபங்கள் ஆகியவை நடைபெறுவது ஏன் ? சத் விஷயங்கள், நீதிகள், ஆன்மார்த்த விஷயங்கள் இவற்றை கல்வியுணர்ச்சி யில்லாதவர்களும், நூலாராய்ச்சி செய்யப் போதுமான கல்வி யில்லாதவர்களுங்கூட எளிதில் உணர்ந்து ஈடேறுவதற்காகவே பிரசங்கங்கள் நடப்பது. சுரோதாக்கள் என்றால் கேட்போர் என்று பொருள்.

பிரசங்கம் கேட்கச்செல்வோர் பிரசங்கியார் கூறும் விஷயங்களைக் கேட்டு அவற்றினால் நன்மையடையக் கருதி யங்கு செல்வதேயன்றிப் பிரசங்கியாரின் நடக்கைகளைக் கவனித்து நற்சாட்சி கூறுவதற்கல்ல வென்பதை யுணரவேண்டும். பிரசங்கம் கேட்கும் சுரோதாக்கள் அம்சம்போலும், சுகம்போலும் குணமுடையவர்களா யிருக்கவேண்டும். அம்சம் நீரைப்பிரித்துப் பாலைமட்டும் அருந்துவதுபோல் பிரசங்கியார்கூறும் விஷயங்களில் சத்தாக வுள்ளவற்றைக் கிரகித்துக் கொண்டு அசத்தெனத் தோன்று மவற்றை விட்டு விடவேண்டும். சுகம் என்பது கிளி. கிளி, ஒரு விருக்ஷத்திலுள்ள கனியை அது பழுத்திருக்கு மளவு வரையில் தினம் வந்து வந்து அருந்திச்செல்லும். அதுபோல் சத்காலக்ஷேபங்கள் நடக்கும்தோறும் சென்று நல்ல விஷயங்களைக் கிரகித்துக் கொண்டு வரவேண்டும். இதுவே அறிவாளிகளின் செய்கை.

பிரசங்கம் கேட்கச் செல்வோரில் பலர் இதற்கு மாருக நடந்து தாங்கள் சென்று பிரசங்கம் கேட்பதா லடையத்தக்க பயனை யடியோடிழந்து விடுவதோடு, இழிகுணத்தைக் கையாளுகிருர்கள். எவ்வாறெனின், பிரசங்கம் கேட்டு வெளியில் வந்ததே தாங்கள் கேட்ட விஷயங்களில் சத்தானவைகளைப்பற்றி ஒருவருக் கொருவர் சம்பாஷித்து அவற்றை மனனம்செய்வதைவிட்டு "......பிள்ளையவர்கள் பகலில் நித்திரைசெய்வது கெடுதியென்று மேற்கோளோடு பிரசங்கம்செய்துவிட்டார். இவர்தான் தப்பாமல் தினம் சாப்பிட்டானதும் பகல் பனிரண்டு மணிமுதல் மாலை மூன்று மணிவரையில் தூங்குவார்" என்றும், "பிரசங்கியர் "தன்மனையாளைத் தனிமனையிருத்திப் பிறர்மனை யேகும் பேதையும் பதரே" என்று இந்நேரம் பிரசங்கித்து விட்டார். இப்போது கோரய்த் தாசி வீட்டிற்குத்தான் செல்வார்" என்றும்—இவ்வாறு தாங்கள் கண்டதோ கேட்டதோ உத்தேசமோ—பிரசங்கம் செய்தவரைப்பற்றி இழிவாய்ப் பேசிக்கொண்டு செல்கிருர்கள்.

இத்தகையாரின் நன்றியற்ற செயலை யென்னென்று கூறுவாம். இவர்கள் இவ்வாறு மொழிவதால் இவர்கள் கேட்ட சத்விஷயங்களில் அலக்ஷியமுண்டாகி அவை இவர்கள் மனதிற்றரிக்காமல் உடனே நழுவி விடுகின்றன. இதுமட்டுமல்ல; இவர்கள் ஒருவருடைய சத்குணங்களை விட்டுவிட்டு துர்க்குணங்களை மட்டுமே சிந்திப்பதால் அற்பமாகிய பன்றுடைக்கு ஒப்பாகத் தங்களைச் செய்துகொள்கிருர்கள். இத்தகையார் பிரசங்கம் கேட்கச் செல்வதால் புண்ணிய பலனுக்குப் பதிலாகப் பாபத்தையே சம்பாதித்துக் கொள்கிருர்க ளென்பது நிச்சயம்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்ருர் நாயனர்.

கொடிய விடம்பொருந்திய நாகத்தினிடம் கிடைக்கும் மணியும், சேற்றில் உண்டான செங்கமலமலரும், நீச்சுமணம் பொருந்திய இப்பியிலுண்டாகும் முத்தும், பசுவின் வயிற்றிலிருந் துண்டாகும் கோரோஜனமும், உயர்வான பொருள்களாகக் கொள்ளப் படுகின்றன. நல்லவிஷயங்கள் இழிந்தவர்கள் அல்லது பகைவர் வாயினின்று வரினும் அவைகளை யேற்றுக்கொண்டு அவற்ருல் பயனடைவதே அறிவாளிக்கழகாம்.

சீடன்,

---

## நம்நாட்டார் கவனிக்க வேண்டியது.

"நல்ல தேகசுகம்" என்ற பத்திரிகையின் ஆசிரியராகிய டாக்டர் ஜெ. யச். கெல்லாக் (Dr. J. H. Kellogg, Editor of "Good Health") என்பவர் பின்வருமாறு கூறுகிருர்; "எஸ்கிமோ ஜாதியாரை (வடதுருவத்

திற்கருகில் வசிப்போர்) தேயிலை, காபி, புகையிலை மூன்றும் கபடமாய் பலவீனர்களாக்கி விட்டன. அன்னிய நாட்டாரது கூட்டுறவால் அவர்கள் தம் சுதேச நாணயத்தையும், சுதந்தர உணர்ச்சியையும், உயர்வான நடக்கையையும் இழந்துகொண் டிருக்கிறார்கள். * * * * ''

மேல் நாட்டு ஆசாரங்களை யெல்லாம் கண்மூடித் தனமாகப் பின்பற்றும் நம் நாட்டார் இந்த டாக்டர் மொழிகளை நன்றாகச் சிந்தித்து நடப்பார்களோ!

---

## திரும்பவும் ஹிந்துவானார்.

திரிச்சிப் பிரமுகரும், திரிச்சி நகரபரிபாலன சபையின் தலைவருமான ஸ்ரீமான் F. G. நடேசய்யர் பிராயச்சித்தம் செய்து கொண்டு, திரும்பவும் ஹிந்துவாய் விட்டார். தங்கள் சொந்தமதத்தின் பெருமை தெரியாமல் கிறிஸ்தவரான இந்துக்கள் எத்தனையோபேர் இந்த நாட்டில் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் ஸ்ரீமான் நடேசய்யர் வழிகாட்டி யிருக்கிறார்.

(லோகோபகாரி)

குறிப்பு:—கல்வியறிவும் மதஆராய்ச்சிச் செய்யச் சக்தியும் வாய்ந்தோர் மட்டும் ஆரம்பத்தில் ஆராய்ச்சிசெய்யாது நம் மதத்தை விட்டுச் சென்றால் பிறகு உண்மையறிந்து திரும்பி வந்துவிடுகிறார்கள் என்று 223-ம் பக்கத்தில் நாம் வேலூர் வாசிகளுக் கெழுதிய விஷயத்தில் கூறியுள்ளதற்கு மேற்கண்ட விஷயம் ஓர் திருட்டாந்தமாகும்.

இவ்வாறு நம்மவரை மறுபடி நம்மதத்தில் சேர்த்துக்கொள்ள அதிக பணச்செலவில்லாத சுலபமான பிராயச்சித்தவழியை யேற்பாடுசெய்ய நம்மவர்கள் முயலவேண்டியது இக்காலத்தில் ஓர் முக்கியமான கடமையாயிருக்கிறது. ஸ்ரீமான் ஐயரவர்கள் இது விஷயத்தில் சிரத்தை யெடுத்துக் கொண்டால் பெரும் புண்ணியமாகும்.

பத்திரிகாசிரியர்.

---

## தபால் கொள்ளைக்காரர்கள்

(198-ம் பக்கத் தொடர்ச்சி)

கன்னிகை நகைத்துக்கொண்டு "வீடா! எனக்கு வீடேது தாய்தந்தையரேது ஒன்றுமேயில்லை, இந்த வீடுதான் என்வீடு. இவர்களே என் தாய் தந்தையர்" என்றாள்.

இரங்:—நீ மிக்க அதிகப் பிரசங்கியாய் விட்டாய். உடனே சீக்கிரம் என் கூடப் புறப்படு.

கன்னி:—"நான் உன்கூட ஒருபோதும் வரவேமாட்டேன்" என்றாள்.

இரங்காதன் மிக்க கோபமடைந்து வரமாட்டாயா வென்று ஆங்காரத்தோ டெழுந்து போய் அவளைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டிழு

த்தான். அவள் அவன் பிடியிலிருந்து விடுவித்துக் கொள்ளத் தன்னாலான மட்டும் முயற்சிசெய்தாள். முடியவில்லை. அவன் கொடுக்கும் தொந்திரவால் இரங்கநாதன் கோபத்தோடு சாமிநாதனை நோக்கி " சாமிநாதம்! சீக்கிரம் இங்கேவா " வென்றான்.

சாமிநாதன் எழுந்து வருவதற்குள் குருநாதன் ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து இரங்கநாதன் கன்னத்தில் கொடுத்த ஒரேகுத்தால் அவன் சுழன்று கீழே விழுந்துவிட்டான். இதைக்கண்ட சாமிநாதன் பிரமித்து உட்கார்ந்து விட்டான்.

இரங்கநாதன் ஸ்மரணை வந்து எழுந்து பார்த்தான். தன்ஜபம் குடியானவனிடம் ஒய்காதென்று தெரிந்துகொண்டான். சுலபமாய்க் குடியானவர்களை யேமாற்றிவிடலாமென்று நினைத்துப் பிறகு குருநாதனை நோக்கி " அய்யா! நீசெய்வது உனக்குக் குற்றமென்று தெரியவில்லை. தந்தைக்கும் தாய்க்கும் குறுக்கே விகல்பம்செய்வது தண்டிக்கப்படத் தக்க குற்றம்" என்றான்.

குருநாதன்:—" அப்படியா? எனக்குத் தெரியாது. ஆயினும் உன்கைகள் பலமற் றிருக்கின்றன. மறுபடி யென்முன் வரும்போது உன்கைக்குப் பல மேற்றிக்கொண்டு வாங்கள். இனி நீங்கள் துரிதமாய் இதை விட்டுப் போய்விடுவது நலம் " என்றான்.

இரங்:—" அப்பெண்ணை யனுப்பமாட்டாயோ?" என்றான்.

குரு:—" ஒருகாலு மில்லை " என்றான்.

இரங்கநாதன் தன் நண்பனை யழைத்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியில் வந்து " என் பெண்ணுக்கு இன்னும் வயது வரவில்லை. அதை யென்னிஷ்டப்படி நடத்த எனக்குச் சர்வசுதந்தர முண்டு. என்சங்கதியுனக்கு தெரியாது. இன்று எனக்கு விரோதமாய் நடந்ததற்காக நீ பிறகு சரியாய் அனுபவிப்பாய்" என்று கூறிவிட்டு வண்டியிலேறிப் புறப்பட்டான்.

குருநாதன்:—" நீங்களிருவரும் முதல் தரமான முரட்டுக் கள்ளப்பயல்கள் என்று எனக்கு நன்றாய்த் தெரிகிறது. அதோடு கூடிய சீக்கிரத்தில் சிக்கிக் கொள்வீர்க ளென்றும் நான் அறிவேன். எட்டப்போய் உறுமுவது நாய்களின் குணம் என்று எனக்குத் தெரியும்" என்றான்.

அன்று அவ்வளவோடு இரண்டு துஷ்டர்களும் தலைகுனிந்து சென்றார்கள். ஆனால் தங்கள் துஷ்ட எண்ணத்தை மட்டும் விட்டவர்களல்ல.

மறுநாள் பிற்பகல் அவ்வீட்டருகிற் சென்று சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். மாலைப்போது குருநாதன் சுமார் அரைமைல் தூரத்திலுள்ள தன் புலத்திற்குச் சென்றிருக்கிறான். அவன் மனைவி வீட்டில் வேலைசெய்துகொண் டிருக்கிறாள். கோமளவல்லி அச்சமயம் தோட்டத்தின் கோடியில் பசுக்களைப் பால்கறந்துகொண் டிருக்கிறாள். திடீலென்று யாரோ பின்பக்கம் வந்து தன்னைப் பிடித்ததைக் கண்டு அலறித் திரும்பினாள். இரண்டு துஷ்டர்களின் முகங்களையும் கண்டதே வீறிட்டலறி யுடனே மூர்ச்சையடைந்து விட்டாள்.

அத்துஷ்டர்கள் இதுவே நல்ல சமயமென்று அவளைத் தூக்கிக்கொண்டுபோய்த் தங்கள் வண்டியி லேற்றிக்கொண்டு சென்றார்கள். அவள்

மூர்ச்சை தெளிந்து பார்த்தபோது முதலில் ஒன்றும் தோன்றவில்லை. தான் இருக்குமிடம் நன்றாய் அலங்கரிக்கப்பட்ட ஒரு அறையாயிருக்கிறது. ஆனால் சாளரத்தில் பலமான இரும்புக்கம்பிகள் நாட்டப்பட்டிருக்கின்றன. உடனே நடந்த சங்கதியாவும் நினைப்பிற்கு வந்தது. ஓகோ நாம் மறுபடியித் துஷ்டரிடம் சிக்கிக்கொண்டோம் என்று தெரிந்து கொண்டாள.

ஆனால் முன் இருந்த பயம் இப்போதில்லை. நமக்கு யாரோ பலமான உதவி யிருக்கிறார்கள் என்று அவள்மனதிற் பட்டிருந்தது. "எப்படியும் கடவுள் நம்மைக் காப்பாற்றுவார். இத்துஷ்டரிடம் சிக்கவிடார்" என்ற நம்பகம் பூரணமா யிருந்தது.

* * * * *
* * * *

சாமிநாதன் தன் நண்பனை நோக்கி,

"இரங்கநாதம்! நான் இரவு ஒன்பதுமணி வண்டியில்சென்று நாளை மாலை நான்குமணிக்கு வந்து விடுவேன்" என்றான்.

இரங்க:—சரி இன்னும் 20 நிமிடங்களே யிருக்கின்றன. நீ மூன்று மணிக்கு அமலாபுரம் செல்வாய். நமது ஆட்கள் அரசஞ்சாலைத் திருப்பத்தில் அந்த வேளைக்கு ஆயத்தமா யிருப்பதாய்த் தெரிவித் திருக்கிறார்கள்.

சாமி:—நீயும் கூட வருவதுதானே? இருவரும் சந்தோஷமாய்ப் போய் வரலாமே.

இரங்கநாதன் சரி இம்முறை வருகிறேன் என்றதும், இருவரும் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார்கள். இருவரும் ஸ்டேஷனில் செல்லும் போது இரங்கநாதன் கடந்த முறை நாம் சென்றபோது எம்மாதிரிச் சம்பவம் நேர்ந்தது நினைப்பிருக்கிறதா? என்றான். அச்சமயம் பின்னால் உண்டான ஒருவித சத்தத்தைக் கேட்டு இருவரும் திடுக்கிட்டு நின்று திரும்பிப் பார்த்தார்கள்.

அச்சமயம் பின்னால் வந்துகொண்டிருந்த ஒரு மனிதன் கால் இடறி விழுந்து மெதுவாய் எழுந்திருப்பதைக் கண்டார்கள்.

அவன் சற்று வயது முதிர்ந்தவனாகவும் அச்சமயம் கொஞ்சம் அதிகமாய் மதுபானம் செய்தவன் போலும் தோன்றியது. அதையறிந்த பின் இவர்கள் பயம் சற்று தணிந்தது. அம்மனிதன் இவர்களை நோக்கி,

"வந்தனம். ஹும்-எனக்குக்கால் தவறிவிட்டது. ஆ! மன்னியுங்கள்" என்றான். இரங்கநாதன் "ஆம் ஆம் நீவேறுலகத்தி லிருக்கிறாய். வீடுமிக்க தூர மிருக்கிறதுபோல் தோன்றுகிறது" என்று கேலியாய்க் கூறினான்.

அதைக் கேட்ட அம்மனிதன் கோபமடைந்து "என்ன ஐயா என் வீட்டைப்பற்றி யுமக்கென்ன தெரியும். இம்மாதிரி கேலிகளை நான் பொறுத்துக் கொள்கிறவனல்ல" என்றான்.

இரங்கநாதன் "இல்லையில்லை, நான் கேலி செய்யவில்லை. உம்முடையவீடு எங்களுக்குத்தெரியும். நல்லவீடே; நிதானமாய்நடவுங்கள் என்று கூறினேன்" என்றான்.

அம்மனிதன் முணமுணவென்று என்னவோ கூறிக்கொண்டே மேடையின்மேலிருந்த பிரயாணிகள்கூட்டத்தில் நுழைந்துப்போய்விட்டான்.

நமது துஷ்டர்கள் இருவரும் நிம்மதியான மனதோடு சென்றார்கள். அதே நிமிடம் மெயில்வண்டி வந்து விட்டது. சாமிநாதன் வண்டியில் ஏறிக்கொண்டு தன் வேலையில் பிரவேசித்தான். இரங்கநாதன் வண்டியின் கீழ் நின்றுகொண்டு மேடைமேல் பார்த்துக்கொண் டிருந்தான்.

அப்போது ஒரு கம்பத்தின் பக்கத்தில் ஒரு மனிதன் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்தான். உடனே அவன் மனம் திகீல் என்று இடிவிழுந்த மாதிரியாயிற்று. நன்றாய்ப் பார்த்தான். பெருந்திகில் உண்டாயிற்று. ஏனெனில் அந்த ஆள் நடையுடை பாவனை யாவற்றிலும் ஆனந்தவல்லிங்கைப்போலவே யிருந்தான். இதைக்கண்டதே அவன் திப்பிரமை யடைந்து விட்டான். உடனே தன் நண்பனை யழைத்தான். இருவரும் வண்டியின் கதவருகில் நின்று பார்த்தார்கள்.

சாமிநாதன் தன் நண்பனிலும் பிரமையடைந்தான் "இவன் அந்தத் துப்பறியும் நாயே யென்று நான் சத்தியம் செய்வேன்" என்றான். ஒருவரை யொருவர் மிரட்சியோடு சற்றுநேரம் பார்த்தார்கள். அதற்குள் கம்பத்தருகில் நின்றிருந்த மனிதன் மேடைமே லிருந்த ஜனங்களில் கலந்து மறைந்து விட்டான்.

துஷ்டர்க ளிருவரும் அவன் வண்டியிலேறுகிறானா வென்பதைக் கண்டறிய வேண்டுமென்று குதித்தோடிப்போய் எங்கும்தேடிப் பார்த்தார்கள். அவனையெங்கும் காணோம். வண்டி புறப்படும் சமயமாகையால் உடனே போய் ஏறிக்கொண்டார்கள். அவர்களுடைய மனோநிலைமை யிப்போது பெருங்குழப்பமும் திகிலுமாய் விட்டது. தாங்கள் கண்டது ஆனந்தவல்லிங்கே யென்று தெரிகிறது. மறுபடியும் "நாம் அவனைச் சவமாய்க்கண்டு அக்கிணற்றில் எடுத்துப்போட்டுப் புதைத்து விட்டோமே. அதற்குமுன் அவனுக்குப் பிராணன் நீங்காதிருப்பினும் பிறகு நாம் அவன்மேற் றள்ளிய பெரிய கற்களில் ஒன்று அவனைக்கொல்லப் போதுமே. அப்படியிருக்க அவன் எப்படிப் பிழைத்து வந்துவிடுவான். அவனைப்போலவே வேறுயாராவது இருக்கிறார்களோ!" என்றிவ்வாறு பெருங்கலவரத்தி லிருந்தார்கள். பின்னால் இன்னும் நிஜமான நிலைமே லிருப்பதை யின்னும் அறியார்கள்.

(தொடரும்.)

——— ஆரணி-குப்புசாமி முதலியார்.

## பொது சமாசாரங்கள்

உலகத்தில் மிகப்பெரிய கலாசாலை எகிப்திலுள்ள கெயிரோ நகரிலுள்ளது. அதில் 10,000 மாணாக்கர்கள் படிக்கிறார்கள். 310 உபாத்தியாயர்களிருக்கிறார்கள்.

---

உலகில் நீண்ட பாலம், அமெரிக்காவிலுள்ள பெரிய உப்பு ஏரியின்மேல் போடப்பட்டிருக்கிறது. அது 20 மைல் நீளம். முழுமையும் மரத்தினால் கட்டப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் 700 சுதேச சமஸ்தானங்கள் இருக்கின்றன. இவைகளின் ஜனத்தொகை 71,000,000 ஆகும்.

---

## சீனாவின் செல்வம்.

உலகத்திலுள்ள நாடுகளில் இந்தியாவும் சீனாவுமே மிகுந்த செல்வம் வாய்ந்தவை. சீனாவிலுள்ள ஆல்டாய் மலையில் ஏராளமான தங்கச் சுரங்கங்கள் இருக்கின்றன. ஆல்டாய் மலையைச் சிலர் மகாமேருகிரி யென்று கருதுகிறார்கள். சீனாவிலுள்ள நிலக்கரிமட்டும் இந்த உலகத்திலுள்ள நாடுகளுக்கெல்லாம் இன்னும் ஆயிரவருஷத்துக்குப் போதுமானது.

---

## வாடின புஷ்பம் மலர்தல்.

சில ஜனங்கள் வீடுகளில் மேஜைமேல் அலங்காரமாகப் பூக்கொத்துகளை வைப்பதுண்டு. இந்தப் புஷ்பங்கள் வாடிப்போனால் இவைகளை எறிந்துவிடுகிறார்கள். மேலும் வெளியூரிலிருந்து வரும் புஷ்பங்களைக் கட்டியனுப்பும்போது வேண்டிய அளவு ஜலம் தெளிக்காததால் அவைகள் வாடிவிடுவதும் உண்டு. இவைகளை வெகுவாய் உபயோகிப்பதில்லை. வாடின புஷ்பங்களை எறிந்துவிடாமல் சில உபாயங்களால் புதியவைபோல் செய்து மறபடியும் உபயோகிக்கலாம். ஒவ்வொரு புஷ்பம் அல்லது புஷ்பக் கொத்தின் அடிக்காம்பில் சிறிதளவு நறுக்கிவிட்டு, மிகுந்த சூடான (ஆனால்) கொதித்துக் கொண்டிராத ஜலத்தில் புஷ்பங்களின் காம்புகளை வைக்கவும் அரைமணி நேரம் கழித்து ஜலம் நன்றாய்க் குளிர்ந்துபோனவுடன் புஷ்பங்கள் அன்று மலர்ந்தனபோ விருக்கும். இவைகளைக் கொஞ்சம் சுத்த ஜலமுள்ள பாத்திரத்தில் வைத்திருந்தால் வெகுநேரம் கெடாமலிருக்கும். அந்தச் சுத்த ஜலத்தில் ஸோடாமாவு ஒரு சிட்டிகை சேர்த்தால் புஷ்பக் காம்புகள் ஸோடாவின் உதவியால் ஜலத்தை க்ரஹித்துக்கொண்டு புஷ்பத்தை வாடாமல் காப்பாற்றும்.

---

## அதிசயமான ஓர் எருமை.

இது அமராபுரியிலுள்ள ஒரு பர்மியனுக்குச் சொந்தமானது. அங்கே இதை ஒரு கசாப்புக்காரன் வெட்டப் போகவே, அது தன் முன்காலைக் கூப்பி வணங்கி நமஸ்கரித்ததாம். கசாப்புக்காரன் அதற்குக் கருணைகாட்டாமல் அதை வெட்ட யத்தனித்தபோது, அது ஒரு பக்கமாக வளைந்து வெட்டுவதற்குச் சௌகரியமாக விருக்கும் வண்ணம் தனது தலையைச் சாய்த்துக் கொடுத்ததாம். அப்போதும் அவன் இரக்கங் காட்டாமல் அதை வெட்டக் கத்தியை யோங்கவே அக்கசாப்புக்காரன் கீழேவிழுந்து இறந்தானாம். பௌத்தர்க ளெல்லோரும் அதை ஒரு அவதாரப் பிராணியாய் எண்ணிப் பெரிய பையாவிற்குக் கொண்டு வந்து டிக்கெட்டு வைத்துக் காட்டுகிறார்கள். இதனால் வரும் பணத்தைக்கொண்டு ஒரு புத்தாலயம் கட்டப்போகிறார்கள். இது வெகு சாதுவானது. புத்த சந்நியாசிகளைப் பார்த்து நமஸ்கரிக்கும். லேடீஸயா என்னும் கீர்த்திவாய்ந்த பெரிய சந்நியாசியின் பேரைச்சொல்லின் அது நமஸ்காரஞ்செய்யும். இதனைக்கூடிய சீக்கிரத்தில் மார்தலைக்குக் கொண்டு போவார்களாம்.

(இது ஒரு அதிசயமான கர்மசம்பந்த முடைய பிராணியே யாகும்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

துந்துபிஞு தைமீ—சாலிவாகனம் 1845—கலி 5024

பசலி 1332—கோல்லம் 1097-98—ஹிஜரி 1340—41

இங்கிலீஷ் 1923ஞு ஜனவரிமீ—பிப்ரவரிமீ

| தைமீ | ஜனவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | ஞா | து10-0 | கேட்-36-53 | ம36-53அ | உத்ராயண புண்யகாலம் போங்கல் பண்டிகை. |
| 2 | 15 | திங் | திர7-3 | மூல-33-18 | சி33-18 ம | மாட்டுப் போங்கல், கரிநாள் |
| 3 | 16 | செ | சது4-57 | பூரா-33-13 | சி33-13பி | தைஅமாவாசை, கரிநாள் |
| 4 | 17 | புத | ● 3-50 | உத்-34-25 | அ34-25சி | |
| 5 | 18 | வியா | பிர4-13 | திரு-36-53 | சித்-60 | மகா சுத்தம் |
| 6 | 19 | வெ | துதி6-15 | அவி-40-55 | சித்-60 | நாமகரணம்வித்தியாரம்பம் செய்ய |
| 7 | 20 | சனி | திரி9-38 | சதை-45-58 | அ45-58 ம | பகலில் தனியநாள் |
| 8 | 21 | ஞா | சது14-30 | பூரட்-53-3 | சித்53-3அ | கும்பாயனம் |
| 9 | 22 | திங் | பஞ்20-23 | உத்-60... | சித்-60 | சஷ்டி, வசந்த பஞ்சமி, திஷேகம், சீமந்தம் செய்ய. |
| 10 | 23 | செ | சஷ்27-10 | உத்-0-35 | அ0-35சி | |
| 11 | 24 | புத | சப்33-50 | ரேவ-8-25 | மர-60 | ரதசப்தமி, கரிநாள் |
| 12 | 25 | வியா | அஷ்39 53 | அசு-15-53 | அ15-53சி | பிரயாணம் விலக்கல் |
| 13 | 26 | வெ | நவ44-43 | பர-22-23 | சித்-60 | கிருத்திகை |
| 14 | 27 | சனி | தச47-50 | கிரு-29-55 | அ29-55சி | அடுப்பு வைக்க |
| 15 | 28 | ஞா | ஏகா49-8 | ரோ-30-40 | சித்-60 | சர்வ ஏகாதசி |
| 16 | 29 | திங் | து48-28 | மிரு-32-3 | சித்60 | உபநயனம், காதுகுத்த |
| 17 | 30 | செ | திர46... | திரு-31-38 | ம-31-38சி | பிரதோஷம், கரிநாள் |
| 18 | 31 | புத | சது42... | புன-29-33 | சித்-60 | தானியம் வாங்க |
| 19 | 1 | வியா | ○ 36-50 | பூச-26-15 | சித்-60 | தைப்பூசம் |
| 20 | 2 | வெ | பிர30-40 | ஆயி-21-58 | மர60 | மாகபகுளம் |
| 21 | 3 | சனி | து23-58 | மக-17-5 | அ17-5சித் | பிரயாணம் விலக்க |
| 22 | 4 | ஞா | திரி17-8 | பூர-12-0 | சித்12-0அ | |
| 23 | 5 | திங் | சது10-18 | உத்-7-0 | சித்60 | |
| 24 | 6 | செவ் | பஞ்3-28<br>சஷ்58-0 | அஸ்-2-18<br>சித்-58-8 | சித்60 | |
| 25 | 7 | புத | சப்52-45 | சுவா-54-30 | சித்-60 | |
| 26 | 8 | வியா | அ 46-8 | விசா-51-58 | சித்-60 | |
| 27 | 9 | வெ | நவ41-10 | அனு-50-10 | சி50-10 ம | |
| 28 | 10 | சனி | தச42-15 | கேட்-40-18 | சித்-60 | |
| 29 | 11 | ஞா | ஏக40-38 | மூல-49-25 | அ49-25சி | |

1923ஞு பிப்ரவரி

| | | | |
|---|---|---|---|
| கே செ | | | |
| சூ-பு | 17வ த-சு<br>20 ,, சி-ர<br>,, கு-கேது | | |
| | சுக் | குரு | சனி ராகு |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 8 } துந்துபிஸு தைமீ கூ 1923ஸு ஜனவரிமீ 14உ { பகுதி 7

## கடவுள் வணக்கம்.

ஔவிய மிருக்கரா னென்கின்ற வாணவ
மடைந்திட் டிருக்க லோப
மருளின்மை கூடக் கலந்தன் னிருக்கமே
லாசா பிசாசு முதலாம்
வெவ்விய குணம்பல விருக்குமென் னறிவூடு
மெய்யனீ வீற்றிருக்க
விதியில்லை யென்னிலோ பூரண னெனும்பெயர்
விரிக்கிலுரை வேறு முளதோ
கௌவுமல மாகின்ற நாகபா சத்தினாற்
கட்டுண்ட உயிர்கண் மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
கதியான பூமி நடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணாமூர்த்தியே
சின்மயா னந்த குருவே.

மெய்யான தன்மை விளங்கினுல் யார்க்கேனும்
பொய்யான தன்மை பொருந்துமோ—வையாவே
மன்னுகி ராசையின்னும் வந்ததல்ல வுன்னடிமை
யென்னுநிலை யெய்துமா றென்.

அறியாமை மேலிட் டறிவின்றி நிற்குங்
குறியேற் கறிவென்ற கோலம்—வறிதேயா
நீயுணர்த்த நானுணரு நேசத்தா லோவறிவென்
றேயெனக்கோர் நாமமிட்ட தே.

## அரும்பொருள் விளக்கம்.

"என்னிடம் பொருமை, ஆணவம், உலோபம், இரக்க மின்மை பேராசை முதலிய பல தர்க்குணங்க ளிருப்பதால் கடவுளாகிய நீ என் உள்ளத்தில் வீற்றிருக்க நியாயமில்லை யென்று கூறவிடமில்லை. ஏனெனில் நீ பரிபூரணன், அதாவது எங்கும் நிறைந்திருப்பவன் ஆதலின் என் உள்ளத்தில் மட்டும் இல்லை யெனின் நீ பரிபூரணன் என்பது பொய்யாய் விடும்' என்பது பொருள்.

"கௌவுமலமாகின்ற.........ஞான சஞ்சீவியே"

ஆணவமலத்தை நாகபாசமாகவும், ஆண்டவனருளால் ஆணவம் நீங்குவதால் அவரை ஞானமாகிய சஞ்சீவியாகவும் உருவகப்படுத்திக் கூறினர் ஞானோதயமின்றி ஆணவமலம் நீங்காது; ஆண்டவ னருளின்றி ஞானோதய முண்டாகி மலமாயை நீங்காது அல்லது மலமாயை நீங்கி ஞானோதயம் உண்டாகாது. ஏனெனில் ஒன்றின் ஒழிவே மற்றொன்றின் தோற்றமாகும்.

கதியான பூமி நடுவுள்—மோக்ஷத்திற் காதாரமான (ஞானசத்த பூமிகளில்) மத்திய பூமியாகிய சத்துவாபத்தி என்னும் நான்காவது பூமியில்.

அப்படிக்கின்றி 'மோக்ஷமாகிய பூமியில்' என்று பொருள் கூறுவது பொருத்தமாகக் காணப்படவில்லை. என்னையெனின், மோக்ஷமான பூமியில் நடு என்றும் ஆதி அந்தம் என்றும் இல்லை. அங்கு வளர்ந்தோங்கும் காரியமுமில்லை. அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமே 'மோக்ஷ வீடு' ஆதலின் அங்கு ஆதி, நடு, அந்தம் என்பதும் குறைதலும் வளர்தலு மின்றும்.

ஈண்டு 'பூமிநடுவுள்' என்பதை 'நடுபூமியுள்' என்றே மாற்றிப்பொருள்கோடல் பொருத்தமாகும். சத்துவா பத்தி யென்ற நான்காவது பூமியே ஆன்மதரிசனம் உண்டாகும், அதாவது ஞானோதய முண்டாகும் பூமியாகும். இந்த நான்காம் பூமியையடைந்தோரே பிரம்மவித்துக்கள் என்ற ஜீவன் முத்தராவர்.

* * * * *

சொன்ன நடுப் பூமிவந்த ஞானிகளே பிரம்மவித்தார் தூயமுத்தர்

* * * * (கைவல்யம்)

இந்த நிலையில் முதலில் ஆன்மா அணுவுக்கணுவாய் அதிசூக்கும மாகவே தோன்றும். பிறகே தற்போதம் தேய்ந்துதேய்ந்து குறையக்குறைய, அகண்டாகார நிலைதோன்றி முடிவில் தற்போத ஒழிவில் ஞாதுரு ஞேயங்களற்று அகண்டாகார பரிபூரணானந்த நிலை சித்திக்கு மாதலின், அந்த பூமியில் ஞானம் வளர்ந்தோங்குந் தன்மையுண்டு. அதாவது சொருபஞானம் விர்த்திஞான மாகின்றது.

2. மெய்யான தன்மை=நித்தியமாயுள்ளது இன்னது என்ற உண்மை. பொய்யான தன்மை=மாயையின் காரியமான நிலையற்ற பொருள்களை மெய்யென்று கருதும் தன்மை.

சாதாரணமாய் ஆன்மாவும் கடவுளுமே நித்தியமென்றும், மண்பெண் பொன் முதலி உலகபோகங்கள் யாவுமே அநித்திய மென்றும் யாவர்க்கும் வாசாஞானமாய்த் தெரியும். ஆயினும் மாயையின் வயப்பட்டிருப்பதால் அவற்றில் ஆசைவிடாது. மாயையொழிந்து ஆன்மாவை யறிந்த பின்பே இவையாவும் அநித்தியம், சடம் என்று இயற்கையாய்த்தோன்றும். பிறகு எதிலும் ஆசை செல்லாது. அப்போதுதான் மெய்யான தன்மை விளங்கிப் பொய்யான தன்மை யொழிந்ததாகும்.

" நிராசை வராவிட்டால் பொய்யான தன்மை யொழியவில்லை. நிராசைவந்தால் அது வொழிந்து மெய்யான தன்மையை யுணர்ந்தவராவோம். அப்போதுதான் நாம் ஆண்டவனது அடிமையாவோம் " என்பது விளங்கவே " ஐயாவே, மன்னு நிராசையின்னும் வரவில்லையே, நான் உன் அடிமை என்ற நிலையை யெப்படி அடைவேன் " என்றார்.

3. கருத்து—அஞ்ஞானமே மேலிட்டிருக்கும் என்னை அறிவு உள்ளவன் என்று கூறுவது வீணே. ஆனால் பேறறிவினனாகிய நீ என்னுள்ளிருந்து அறிவிக்க நான் அறியும்தன்மை யுடையவனாக விருப்பதால் எனக்கு அறிவு என்று பெயரிடப்பட்டது போலும்.

---

# ஆனந்தபோதினி

துந்துபிஸு தைமீ கூ

## வர்த்தகம்.

உலகில் மனிதருடைய வாழ்க்கைக்கு இன்றி யமையாத தொழில்களில் வர்த்தகம் இரண்டாவதாகும். விவசாயம் முதலாவது. வர்த்தகத்திற்கு அனுசரணையானது கைத்தொழில். எந்த நாட்டிலும் இந்த மூன்றும் எந்த விதத்திலேனும் இருந்தேதீரும். செல்வம் மலிந்துள்ள நாடுகளெல்லாம் வர்த்தகம், கைத்தொழில் இவற்றாலேயே செல்வத்தை யடைந் திருக்கின்றன. விவசாயம் இந்த இரண்டிற்கும் ஆதாரம்; அது பிராணதாரமானது.

வர்த்தகம் என்றால் ஒன்றைக் கொடுத்து வேறொரு பொருளைப்பெறல். ஆதியில் தானியங்களைக் கொடுத்தே எதையும் வாங்கிக்கொண் டிருந்தார்கள். இப்போதும் கீரைதினுசுகள், கரிவேப்பிலை, சிறுபழங்கள் முதலியவற்றிற்குத் தானியத்தைக்கொடுத்தே வாங்குவதைச் சாதாரணமாய்க்காணலாம். பிறகு வரவரப்பொது வாய் வழங்கக் கூடிய உலோக நாணயங்களை யேற்படுத்திக் கொண்டார்கள். ஆப்ரிகாவின் உள் நாட்டில் சுதேச ஜாதியாருக்குள் இப்போதும் பித்தளைக்கம்பி, பலநிறமணிகள், சீலை இவை நாணயத்திற்குப் பதிலாகச் செலாவணியாகின்றன. நிஜாம் இராஜ்ஜியத்தில் இப்போதும் பலகறை யென்ற கவடி நாணயமாகச் செலாவணி யாவதைக் காணலாம். நம் நாட்டிலும் பூர்வீகத்தில் அது செலாவணி யாகிவந்தது. இன்னும் "என்னிடம் ஒரு கவடிக்காசு கூட இல்லை" என்று ஜனங்கள் கூறுவது வழக்கமாக விருக்கிறது,

நம்நாடு எப்போதும் விவசாயத்தில் விசேஷித்தது. பூர்வீகத்தில் வர்த்தகத்திலும் கைத் தொழிலிலும் சிறப்புவாய்ந் திருந்தது. தென்னாட்டில் துறைமுக நகரங்களி லிருந்தவர்களில் அனேகர் தீபாந்தரங்களுக்குச் சென்றும், தூரதேசங்களோடும் கப்பல் வர்த்தகம் செய்துகொண் டிருந்தார்கள். கப்பற்கட்டும் தொழிலும் நம் நாட்டில் நடந்துவந்தது. மகம்மதியர் அரசாண்ட காலத்தில் கூட நூற்றுக் கணக்கான சண்டைக் கப்பல்கள் இங்கு இருந்திருக்கின்றன. அந்தோ! அன்னிய நாட்டார்வந்து இதைக் கைப்பற்றியபின் இத்தகையகைத்தொழில் வர்த்தகம் யாவும் அழிக்கப்பட்டன. நம் நாட்டார் புது மாயையில் சிக்கி மயங்கிப்போய் பின்னால் கேடுவரு மென்பதை யுணராமல் தங்கள் க்ஷேமத்தின் அழிவிற்கு இணங்கி இடம்கொடுத்து விட்டார்கள். போனது போயிற்று. இனி எவ்வாறு நடந்து கொண்டால் சீர் பெறலாம் என்பதைச் சிந்தித்து முதலாவதாக நம்மிடமுள்ள குற்றங்குறைகளை நீக்கிக்கொள்ள முயன்றால் ஆண்டவன் அருளால் க்ஷேமமுறலாம் என்பது திண்ணம்.

1. முதலாவதாக விவசாயம், வர்த்தகம், கைத்தொழில் இத்துறைகளில் ஜீவித்தல் அகௌரவ மென்றும் சேவகா விர்த்தியே கௌரவத் தொழிலென்றும் நம்மவர் எண்ணி யிருக்கிறார்கள். இதுபெரிய மூடத்தனமான தப்பெண்ணம். இதை யொழித்துச் சேவகாவிர்த்தியே அதமமான அடிமைத் தொழிலென்றும் மற்ற

மூன்றுமே சுதந்தரமுடைய கௌரவத் தொழில்களென்றும் செல்வந்தரும் தொழில்களென்றும் உணரவேண்டும்.

2. மேற் கூறப்பட்ட மூன்று தொழில்களையும் செய்யும் நம் நாட்டார் அத்தொழில்களைச் செய்வதற்குக் கல்வி அவசியமில்லை யென்று கருதுகிறார்கள். இதுவும் பெரியதோர் கேடு விளைவிக்கும் தவறான அபிப்பிராயமே. அத்தொழில்களைச் செய்வோர் கல்வி கற்காததால் அத்தொழில்கள் சீர்திருத்த மின்றி, நவீன முறைகள் கண்டு பிடிக்கப்பட்டு விர்த்தி யடையாமல் தலைமுறை தலைமுறையாக ஒரே நிலையில் இருக்கின்றன.

மேல் நாட்டார் அததற்கு அவசியமான சாத்திரங்களைக் கற்றுத்தொழில் செய்வதால் அவர்கள் தொழில் மேம்பாடடைந்து, அவர்கள் மிக்க செல்வம் பெறுகிறார்கள். கல்வி புத்திக்குக் கூர்மை யளிக்கிறது. புத்தி தீட்சண்ணியம் பெற்று ஒருதொழிலை முறைப்படி போதிக்கும் சாத்திரத்தைக் கற்றவன் அத்தொழிலைத் திறமையோடு செய்து நல்லபொருள் சம்பாதிப்பான். புத்திதீக்ஷணிய மில்லாதவனுக்கு யுக்தியோசனைகள் உதிக்கா. ஆதலின் நம் நாட்டு வர்த்தகர்கள் தம்மக்களுக்குப் போதுமானவரை சக்திக்கேற்ற அளவு கல்விகற்பித்துப் பிறகு வர்த்தகத்திற்கு வேண்டிய கல்வியையும் கற்பிக்க வேண்டும்.

3. நம்மவர் பலர் ஒன்று சேர்ந்து திரண்ட முதல் வைத்து வியாபாரம் செய்வதில்லை. ஏனெனில், அப்படி வைத்தால், தக்கபடி கணக்குவைக்கத் தெரியாது. அதனால் ஒருவரை யொருவர் நம்புவதில்லை. ஒருவன் இரண்டு மூன்று சிறுவர்களை வைத்துக்கொண்டு வர்த்தகம் செய்தால் தானே காலையில் வந்து கடை திறக்கிறான்; மாலை பூட்டிக்கொண்டு போகிறான்; இடையில் ஒவ்வொரு சரக்கையும் கொண்ட விலைக்கு அதிகமாகவே விற்கிறே மென்று தெரிகிறது. இவ்வளவே இவர்கள் அறிந்தது. மேல்நாட்டார் நூற்றுக்கணக்கான பங்காளிகள்சேர்ந்து இலக்ஷக்கணக்கான பணம் முதல்வைத்துப் பலஊர்களில் கடைகள்வைத்து வர்த்தகம் நடத்துகிறார்கள். பங்காளிகளில் ஒருவர் இருவர் உழைப்பாளிகளாகவும் சம்பளம்பெற்று ஆங்காங்கு வேலையைப் பார்க்கிறார்கள். சட்டதிட்டத்தோடு கணக்குகளைவைத்து வேலைகளை யொழுங்குப்படி நடத்துவதால் எல்லாம் சீராக நடக்கிறது. வருடா வருடம் கணக்குப் பரிசோதகருக்கு 500, 600 கொடுத்துக் கணக்குகளைப்

பரிசோதித்து, தப்பாமல் எல்லா பங்காளிகளுக்கும் இலாபத்தைப் பகிர்ந்து அனுப்பி விடுகிறார்கள்.

அவர்கள் மட்டும் எப்படி அவ்வாறு செய்கிறார்கள்? அவர்களுக்கிருக்கும் புத்தி நம்மவர்க்கில்லையோ? இருக்கிறது. ஆனால் கல்வி இல்லை. அதனால் தாழ்ந்த நிலையிலேயே இருக்கிறார்கள்.

மேல்நாட்டில் இயற்கை யுற்பத்தி மிகக்குறைவு. அப்படியிருந்தும் அவர்கள் விர்த்தியடைகிறார்கள். நம்நாட்டில் இயற்கை வளமும் அதனால் உற்பத்தியும் ஏராளமாக விருந்தும் கல்வியில்லாததால் நாம் இந்த நிலையிலிருக்கிறோம். காரணம் கல்வியின்மையே.

4. இலாபம்:—நம்மவர்களுக்கு ஆதிமுதல் அளவில் குறைக்கலாகா தென்றும், ஒரு அளவான இலாபமேவைத்து விற்கவேண்டு மென்றும் விதியுண்டு. மேல்நாட்டார் இலாபத்திற்கு ஒரு விதியில்லை. ஒரேயொரு திருட்டாந்தமட்டும் கூறிவிடுகிறோம். இச்சென்னையிலுள்ள ஒரு பிரபலவர்த்தக ஸ்தலத்தில் அமெரிகாவிலிருந்து ஒருவித சிறு கைத்துப்பாக்கிகள். 6 சிறு தோட்டாக்கள் போட்டுச் சுடக்கூடியவை-வந்தன. அதன்விலை, அதற்காக நேரிட்டசெலவு, சுங்கத்தோடு கூடியயாவும் சேர்ந்து—ஒரு துப்பாக்கி ரூ. 7—2—0 ஆயிற்று. அங்குள்ள முக்கிய காரியஸ்தர் அதற்கு எவ்வளவு இலாபம் சேர்க்கவேண்டும் என்று கூறவேண்டும். அவர்தம் காரியஸ்தரை யழைத்து "இம்மாதிரித்துப்பாக்கி இந்நகரில் வேறு யாராருக்கு வந்திருக்கிறது. அவர்கள் என்னவிலைக்கு விற்கிறார்கள் என்பதை யறிந்துவாரும்" என்றுகட்டளையிட்டார். காரியஸ்தர் போய்ப்பார்த்து வந்து "இங்கு ஒருவரும் இத்தகைய துப்பாக்கிகளை வரவழைக்கவில்லை" என்று கூறினார். உடனே முக்கிய காரியஸ்தர் "சரி, 15 ரூபாய் விலைபோடு" என்றார்.

மேல்நாட்டார் இலாபம் சம்பாதிக்கும் மாதிரி இவ்வாறே. நம்மவரோ மநுநீதிப்படி நடக்கவேண்டும் என்று மட்டும் கருதுகிறார்களே யன்றி மற்றவிஷயங்களைக் கவனிப்பதில்லை.

5. இன்னொரு விஷயம் நமது வர்த்தகர்களுக்கு அவமதிப்பையும், நம்பக மின்மையையும், ஏளனத்தையும் உண்டாக்குகிறது. அது எதுவெனில், மேல்நாட்டாரை அவர்கள் வெளிவிஷயங்களில் மட்டும் பின் பற்றுதலேயாகும். இது மிக்க கௌரவம் என்று நம்மவர் எண்ணிக்கொள்கிறார்கள். ஆனால் மேல்நாட்டார்

வர்த்தகம செய்வதிலுள்ள ஒழுங்கையும், நல்ல முறைகளையும் பின்பற்றுவதில்லை. முதலாவது பெயர் வைப்பதில் நம்மவர் மேல் நாட்டு ரீதியாய் வைக்கக்கருதி நமக்குள்ள நல்ல பெயர்களை யெல்லாம் ஆபாசப்படுத்தி அறிவாளிகள் நகைக்கும் வண்ணம் செய்கிறார்கள். சிலர் மேல்நாட்டுப் பெயர்களையே வைத்துக்கொள்கிறார்கள். யாவரும் தமது கடை மேல்நாட்டார் கடையென்று கருதவேண்டு மென்பது இவர்கள் எண்ணம். இது மோச எண்ணமும் இழிவான நடக்கையுமே யல்லவோ! நம்முன்னோர் பெயர்கள் இவர்களுக்கு அகௌரவமாய்த் தோன்றுகின்றன போலும். அந்தோ! நம்நாட்டார் இவ்வாறு தாய் நாட்டிலும் தாய்ப்பாஷையிலும் அபிமானங் குன்றி நம்நாட்டு ஆசார ஒழுக்கங்களை அவமதித்து நடப்பதாலன்றோ நம் தாய்நாடு இத்தகைய சீர்கேடான நிலைமையை யடைந்திருக்க நேர்ந்தது.

1. இவர்கள் கடவுளர் நாமங்களாகிய நல்லபெயர்களை யெல்லாம் சுத்த ஆபாச மொழிகளாக்கிப் பெயர்வைத்துக் கொள்கிறார்கள். இரண்டொரு திருட்டாந்தம் மட்டும் கூறுகிறோம்.

க-லோககாதம் பிள்ளை அல்லது முதலியார் என்பவர் ஒரு வர்த்தகம் செய்யத் தொடங்கின், "கெ-லோதன் அண்டுகோ" என்று வைத்துக் கொள்கிறார். இவ்வாறே "பா-ஸ்ரீனிவாசன்" என்பதற்கு "பி-யஸ் வாசன் அண்டுகோ" என்றும், "மீ-கந்தசாமி" என்பதற்கும் "யம்-கெ. ஸாமி அண்டுகோ" என்றும் "தி. வெங்கடாசலம்" என்பதற்கு "டி-வி-சலம்" என்றும், "விஸ்வநாதன்" என்பதற்கு "வி-நாதன்" என்றும் வைத்துக் கொள்கிறார்கள்.

சிலர் தமதுகடை அல்லது தாம் பொது நலங்கருதி அமைக்கும் ஒரு சத்திரம், குளம், பொதுச் சாவடி, நகரமண்டபம் முதலிய விடங்களுக்கு நம்நாட்டு முன்னோர், மகான்கள், முதலியவர்க ளெல்லாம் இருக்க அவர்கள் பெயர்களைச் சூட்டாமல் பொருள் ச்ம்பாதித்துக் கொண்டு போக நம் நாட்டில் வந்து கொஞ்சநாள் தங்கிவிட்டுத் திரும்பிச் செல்லும் மேல் நாட்டார் நாமதேயத்தைச் சூட்டுகிறார்கள். இத்தகைய செய்கைகளால் தாங்கள் தேசபக்தியில்லாத மூடரென்றும், சுலபத்தில் அடிமைத் தனத்திற்கு உடன்படும் பேதைமதியினர் என்றும் காட்டிக்கொள்கிறார்களேயன்றி இத்தகையோர் எண்ணுகிறபடி அவர்கள் இவர்களைக் கௌவரப்படுத்தி நன்கு மதிக்கப் போகிறதில்லை.

2. மேல் நாட்டார் பலர் ஒன்று சேர்ந்து வர்த்தகம் செய்வதாயின் பிரதான ஆசாமியின் பெயரோடு 'கம்பெனி' என்ற வார்த்தையைச் சேர்ப்பார்கள். சுருக்கத்திற்காக அந்த வார்த்தையின் முதல் இரண்டெழுத்தை மட்டுமே வரைவதுவழக்கம். அந்த

இரண்டு ஆங்கில எழுத்துகள்மட்டில் கோ. (Co.) என்று உச்சரிக்கும்.

பலபேர் சேராமல் ஒருவன் தன் சகோதரரைமட்டும் சேர்த்துக்கொண்டு வர்த்தகம் செய்யின், தன்பெயரோடு சகோதரர்கள் என்று பொருள்படும் 'பிரதர்ஸ்' என்ற வார்த்தையைச் சேர்ப்பான். ஒருவன் தான்மட்டுமே தனியே வர்த்தகம் செய்வதாயின் பிறகு அது தன் சந்ததிக்குச் சொந்தம் என்று விளங்கத் தன் பெயரின் பக்கத்தில் ஸன்ஸ் (புத்திரர்) என்ற வார்த்தையைச் சேர்ப்பான்.

அந்தோ! நம்மவர்களோ ஒருவனே பரபத்திய மின்றியே ஒரு வர்த்தகம்செய்ய ஆரம்பிக்கும் போதே அண்டு கோ என்று போட்டுக் கொள்கிறது சாதாரணமாய் விட்டது. அறிவாளிகள் நகைப்பார்களே என்று நம்மவர் எள்ளளவும் கருதுவதில்லை. இதுவும் கல்வியில்லாத குறையே.

3. இன்னொரு விஷயம் நம் நாட்டு வர்த்தகத்தில் பூர்வீகத்திலிருந்தே இருந்துகொண் டிருக்கிறது. இதனால் வர்த்தகர்க்கும், பேரம் செய்வோர்க்கும் வீண் சிரமமும், வீண்காலப் போக்கும் நேர்வதோடு வர்த்தகர் வார்த்தையில் நம்பிக்கை யென்பது இல்லாமற் போகிறது. அதுதான் பேரம் செய்வது.

மேல்நாட்டார் ஒவ்வொருபொருளுக்கும் காலத்திற்குத்தக்கபடி இவ்வளவு இலாபம் என்று அசல் விலையோடு சேர்த்து விற்கும்விலை யின்னதென்று ஒரு சீட்டில் எழுதி அப்பொருளிலேயே கட்டி விடுகிறார்கள். வாங்கவருபவர் அதைப் பார்த்ததும் பிரியமிருந்தால் அதை யெடுத்துக் கொண்டு கிரயத்தை யளித்துவிட வேண்டும், இன்றேல் பேசாமல் போகவேண்டியதே. இந்தவழக்கத்தால் அவர்களிடம் ஆயிரம் ரூபாய் பேரங்கூடக் கால் மணி அரை மணிக்குள் சந்தடியின்றி நடந்து முடிந்து விடுகிறது. நம்மவரிடமோ வர்த்தகன் ஒரு விலை கூறினால் வாங்கவருபவன் ஒருபோதும் குறைத்துக் கேட்காமல் உடனே சொன்ன விலையை யளிக்கமாட்டான். வர்த்தகனும் ஒரு ரூபாய் அசல் விலையாயின் எடுத்ததே விலை ரூ 1—2—0 அல்லது 1—4—0 என்று கூறுவான். இரண்டு, இரண்டரை யென்பான். அப்படி யொரேவிலை கூறவெண்ணி ஒரு வர்த்தகன் கரார் விலைக்கே விற்கத் தொடங்கினால், இன்னொருவன் தானும் கரார்கடை என்று விளம்பரப் பலகை மாட்டிவிட்டு, உமக்குமட்டுமே குறைத்துக்கொடுக்கிறேன் என்று ஒவ்வொருவர்க்கும் கூறி இரகசியமாய்ப் பேரம்பேசி விற்பான். இத்தகைய அயோக்கியனால் உண்மையாய் நடப்பவன் கரார் என்பதை விட்டுவிட நேர்கிறது.

நண்பர்களே! இக்குற்றங்களெல்லாம் உள்ளவரையில் நம் நாட்டுவர்த்தகம் ஒருபோதும் முன்னேற்ற மடையாது. இவற்றிற்கெல்லாம் காரணம் வர்த்தகர்க்குக் கல்வி யின்மையே. நம் நாட்டில் 100-ல் 98 வர்த்தகர்க்குக் கல்வியிராது. அவ்வளவாயிருந்தால், சொல்பமாக எழுதப்படிக்க மட்டுமே தெரியும். தொழில் முறைக்கல்வி படியோடில்லை. இதனாற்றான் அத்தொழிலுக்குக் கௌரவமான மதிப்பின்றி, உண்மையில் கௌரவமான சுயாதீனத்தொழிலை நம் நாட்டார் தாழ்ந்ததாகக்கருதி அடிமைத் தொழிலிலேயே அல்லற்படுகிறார்கள். விரிக்கிற் பெருகுமென வஞ்சி முடிவைக் கூறிவிடுகிறோம்.

இப்போது நம் தாய்நாட்டின் முன் நிலைமையையும் தற்கால நிலைமையையும் உணர்ந்து இனியேனும் முன்னேற்ற மடையவேண்டுமென்று எங்கும் பெருமுயற்சி நடக்கிறது. இனியேனும் நம் நாட்டார் இதில் கவனம்வைத்துக் குற்றங்களை நீக்கி, வர்த்தகரா யுள்ளோர் தம் மக்களுக்குத் தக்க கல்வியளித்துத் தம்தொழிலிலேயே யவர்களைப் பிரவேசிக்கச் செய்யும் வண்ணம் பிரார்த்திக்கிறோம். ஆண்டவன் அருள்புரிவாராக.

ஓம் தத் ஸத்.

---

## ஜீவவதையும் முகம்மதியரும்.

பொதுவாய் எந்தமதத்திலும், எவ்வகையான மிருகம் அல்லது பட்சிகளைக் கொன்று சாப்பிடலாம் என்று சொல்வது, அம்மதக் கொள்கையில், பாபமல்லவென்று இருக்குமானாலும், அது தவறேயாகும். ஆடு, கோழி சாப்பிடலாம், அவைகொன்று சாப்பிடுவதற்கே ஏற்பட்டன, மற்றவைகளைத் தெய்வமாய் நினைக்கவேண்டுமென்று சிலர் சொல்வதும் ஜீவகாருண்யமாகாது. சகல ஜீவராசிகளையும் ரட்சிப்பதே ஜீவகாருண்ய மாகும். எவ்வகை மதத்திலும், எந்த ஜீவனையும் கொன்று சாப்பிடும்படி சொல்லி யிருக்கவே யிருக்காது. உதாரணமாய், ஆடுகளை வதைசெய்வதில் ஆரியர்கள் கொன்றால் புண்ணியமென்றும், முகம்மதியர் கொன்றால் பாவமென்றும் வைத்துச் சிலர்பேசுகிறார்கள். முகம்மதியர்கள், பசுக்களைக் கொன்றால் புண்ணிய மென்றும், மற்றவர்கள் செய்வது பாவமென்றும் அபிப்பிராயப் படுகிறார்கள். எப்படியெனில், ஆடுகளை யாகம்செய்வதாயும் மந்திரசக்தியால் அதன் ஜீவனை நல்லபதவி யடையச்செய்து விட்டதாயும், அதைப்பற்றி, தாம் செய்த காரியம் புண்ணியச்செயலென்றும் ஆரியர்கள் நினைக்கிறார்கள். முகம்மதியர்களைக் கேட்டால், ஆரியர்கள் வருஷத்திற் கொருதடவை ஒரு ஆட்டின்

ஜீவனை நல்பதவி யடையச்செய்தார்கள், அவர்களுக்கு இரக்கமில்லை. அநேக கோடி ஜீவராசிகள் உலகிலிருக்கும்போது அவற்றை யெல்லாம் நல்ல பதவி யடையச் செய்ய இவர்களுக்கு மனம்வரவில்லை. நாங்களோ ஏராளமான ஆடுகளையும், பசுக்களையும், மந்திரம் சொல்லிக் கழுத்தில் கத்தியாலறுத்து அவைகளின் ஜீவன்களை நல்லபதவி யடையும் பொருட்டு அனுப்புகிறோம் என்று சொல்லுகிறார்கள். இப்படிச் சொல்வது உண்மையா வென்றுபார்ப் போம். யாகம் செய்கிறவர்கள், தாம் கொல்வது புண்ணியம், அன்னியர் கொல்வது பாவமென்கிறார்கள். அப்படியே முகம்மதியர்கள், தாங்கள் கொல்வது புண்ணியம், அன்னியர் கொல்வது பாவமென்று கருதுகிறார் கள். சிலர் கோவிலுக்கு ஆடு, மாடு வெட்டுவது புண்ணியம் சம்பாதிக்க என்கிறார்கள். பலவகையான மதஸ்தர்களில், அவரவர்கள் தாம் செய்வது புண்ணியமென்றும், அன்னியர் செய்வது பாவமென்றும் நினைக்கிறார்களே யொழிய, தாம் செய்யும் துர்க்குணத்தை ஒப்புக்கொண்டு அன்னியர் துர்க் குணத்தை நீக்கப் பெரும்பாலும் முயற்சி எடுக்கிறதில்லை. நிற்க, யாகத்தில் கொல்வது புண்ணிய மென்றால் முகம்மதியர்கள், அதிகம் கொன்று புண் ணியம் செய்கிறோ மென்கிறார்களே. அது சரியாவென்று ஆராய்வோம். "எவ்வகையிலும் எந்த எண்ணத்துடனும் கொல்வது தவறேயாகும்." ஆனால், முகம்மதியர்களின் கொள்கைப்படி அவர்கள் மாமிசம் சாப்பிட லாமா என்ற கொள்கையையும் தற்போது, பசு, ஆடு, கோழி, வகையராக் களைச் சாப்பிடுவது என்னகாரணம் என்பதைப் பற்றியும், இனி விவரிப் போம். இஸ்லாம் என்பதற்குப் பொருள் நன்னடத்தை என்பதாகும். ஒவ் வொருவரும் நன்னடத்தை நடக்கவேண்டிய அவசியம். முகம்மது என்ப வர் காலத்தில், ஜனங்கள் அதிக துர்க்குண முள்ளவர்களாயும், கடினநெஞ்ச முடையவர்களாயு மிருந்துவந் திருக்கிறார்கள். அப்போது, ஜனங்கள், தாம் ஜீவிக்கவேண்டியதுதான் முக்கியம், மற்ற ஜீவராசிகள் ஜீவிக்கவேண்டிய அவசியமில்லையென் றெண்ணித்தமக்கு எதிர்ப்பட்டமிருகம், பறவை இவை களை யெல்லாம் கொன்று சாப்பிடுவதைப் பழக்கத்தில் வைத்துவந்தார்கள். இவ்வித அடாத செயல்களைக் கண்டு, நமது நபிநாயகம் என்னும் முகம் மது அவர்கள், அவர்களை நல் நடத்தைக்குக் கொண்டுவர வேண்டுமென்று அதிக கவலைப்பட்டு, பலவகையான போதனைகள் செய்து, நன்னடத்தை, என்னும் இஸ்லாம் மார்க்கத்தில் அவர்களைச் சேரச்செய்தார். பிறகு, மனி தன் எல்லா ஜீவராசிகளிலும் மேலானவன். சகல ஜீவராசிகளையும் காப் பாற்றுவது மனிதனுடைய முதல் கடைமை யென்றும், மனிதனுக்கு முக் கியம் ஜீவகாருண்யம் வேண்டு மென்றுஞ் சொல்லி வதைத்துச் சாப்பிடு வதை நிறுத்திவிடும்படி பலவாறாகப் போதித்தார். நிற்க அன்பர்களே ! இங்கு கவனிக்கவேண்டும் .நாகரீகம் என்று நினைக்கும், இந்தக் காலத்தில், அநேக சைவமதஸ்தர்கள் பலபோதனை செய்து வரும்பொழுதே "வதை

த்துச் சாப்பிடுவது கூடாது" என்றால் தாம் கொல்வது புண்ணியமென்று அநேகர் தர்க்கிப்பதைப் பார்க்கிறோமே. இப்படியிருக்கச் சகல ஜனங்களும் துஷ்டர்களா யிருந்த அந்தக்காலத்தில், எப்படி அவர்களுக்குத் தாம் செய்கிற காரியம் பாவமென்று தோன்றும்? ஆகையால் அவர்கள் அவ்வாறு போதித்த முகம்மது அவர்களையே கொன்றுவிட யத்தனித்ததுடன், அவர்கள்சொன்ன இஸ்லாம் மார்க்கத்தையும் தள்ளிவிட யத்தனித்தார்கள்.

உடனே முகம்மது என்பவர் ஆலோசித்து, "ஜனங்களுக் கிருக்கும் குணத்திற்குத் தகுந்த புத்தி படிப்படியாய்ச் சொல்ல வேண்டும், தந்திரமாய் வழிக்குக் கொண்டுவர வேண்டும், இப்படித் தந்திரமாய்ப் பேசாமல் அல்லவா, ஜனங்கள் அதிக துஷ்டத்தனமா யில்லாத காலத்திலும், நமக்கு முன் உண்மையுரைக்கவந்த, கிறிஸ்துவைச் சிலுவையில் துஷ்டர்கள் அறைந்து விட்டார்கள். ஆனதினால் நாம் ஜாக்கிரதையா யிருந்து இவர்களை எப்படியும் நன்னடத்தையில் நடக்கச்செய்ய வேண்டும்'' என்ற ஒரே எண்ணத்துடன் பின்வருமாறு தீர்மானிக்கலானார். அதாவது, நாம் இவர்களை உடனே மாமிசத்தைத்தள்ளும்படிபோதித்தால் அது இவர்களின் செவியில் ஏறாது; கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைக்கச் செய்ய வேண்டும். அப்படிக் குறைப்பதில் அவர்களுக்கு சாத்வீகம் உண்டாக வேண்டும் என்றெண்ணி, பொதுவாய், வைத்திய சாஸ்திரப் பிரகாரம், ஒரு ஆட்டின், காலினுடைய மாமிசத்தைப் புசிக்கக்காலுக்கு வலுவென்றும், இடுப்பு மாமிசம் இடுப்புக்கு வலுவென்றும், மூளையைச் சாப்பிட மூளைக்கு வலுவென்றும், இப்படி இன்னின்ன உறுப்பு சாப்பிட, அந்தந்த உறுப்புக்கு வலுவென்றும் சொல்லப்பட் டிருக்கிறதைப் போலவே, மிருகங்களில், துஷ்ட மிருகங்களைச் சாப்பிட துஷ்டகுணம் உண்டாகு மென்றும், சாந்தமான மிருகத்தைப் புசிக்க, சாந்தகுண முண்டாகு மென்றும் எண்ணி, அப்படிச் சிலகாலம் சாந்தமான மிருகத்தைச் சாப்பிட்டு வந்தால், அதிக துஷ்டத்தனம் விட்டுச் சற்றுபொறுமைக்குணம் உண்டானபிறகு, பின்னும் அவர்களுக்கு நற்போதனைகள் சொல்லி, "எந்த ஜீவனையும் கொல்லாமல் செய்துவிடலாம்," என்று தீர்மானித்து, நல்லகுணமும், சாந்தமு முள்ள மிருகங்களான, பசு, ஆடு, மான், அதாவது, பிளவுபட்ட குளம்போடு அசைபோடக் கூடியதெல்லாம் சாந்த மிருகமாதலால், "காலில் பிளவுபட்ட குளம்புள்ள துடன், அசைபோடக்கூடியது, ஹலால்,'' அதாவது சாப்பிடக் கூடியது என்றும், காலில் நாய், பூனைபோல் நகமுள்ளது துஷ்டத்தன முள்ளதுடன், அது வேறு ஜீவனை வேட்டையாடிப் புசிப்பதால், அதனிடத்தில் அதிக துர்க்குணமுண்டாகுமென்று, "காலில் நகமுள்ள மிருகம் ஹறாம்,'' அதாவது சாப்பிடக் கூடாதது என்றும், பட்சிகளில், தான் சாப்பிடும் ஆகாரத்தை காலால் பிடித்துக்கொண்டு வாயால் கொத்திச் சாப்பிடுவது துஷ்டத்தன முள்ளது, அதாவது, கழுகு, பருந்துபோன்ற பல பட்சிகள் ஹறாம் என்றும், காலால்

பிடிக்காமல் தான் சாப்பிடும் ஆகாரத்தை மூக்கால் கொத்திச் சாப்பிடும்படியான கோழி, குயில், புரு, போன்றவை அதிக துஷ்டத்தனமில்லாமலிருக்குமாதலால், காலால் பிடிக்காமல், வாயால் கொத்திச் சாப்பிடும் பக்ஷிகள் ஹலால் என்றும், இப்படி துஷ்டத்தனத்தைக் குறைக்க ஒருசட்டம் ஏற்படுத்தி, பலரைக் கூப்பிட்டு, மேற்படி போதனைகளைப் போதித்தார். அதற்குப்பலர் இணங்கி, இதை ஒருவகையில் கேட்போமென்று தீர்மானித்து, இஸ்லாம் மார்க்கத்தில் புகுந்தனர். முக்கியம், மிருகங்களில் அதிக சாத்வீககுண முடையது பசுவாதலால், பசுவை அதிகம் சாப்பிடும்படி செய்து வந்திருக்கிறார்கள். சகோதரர்களே! சற்று கவனிக்க வேண்டும். பசுவைக் கொல்வது புண்ணியமென்ற அபிப்பிராயத்தில் சொன்னதல்ல. கொலைசெய்வதில், பசுவைக் கொன்றாலும் சரி, ஆடு, நாய், நரிகளை வதைத்தாலும் சரி, எல்லாம் வதையே. இதெல்லாம் ஜீவகாருண்யத்திற்கு நேர் விரோதமே யாகும். பசுவைக் கொன்றாலும் ஆட்டைக் கொன்றாலும் அக்கொலைக்கு நாம் ஆளாகவேண்டியதுதான். நமக்குட்பட்டிருக்கும் எளிய ஜந்துக்களை நாம் கொன்று சாப்பிட்டால், "எளியாரை வலியார் வாட்டினால், வலியாரை தெய்வம்வாட்டும்." என்பதுபோல், நம்மைத் தெய்வம் வாட்டாமல் விடாது; இது நிச்சயம். இதுநிற்க, நமது முகம்மது, என்பவர் மேற்கண்ட துஷ்டமிருகம் சாப்பிடக்கூடாது என்று போதித்து, சாந்த மிருகம் சாப்பிடலாமென்று சொன்னார். அதைப் பலர் ஒப்புக்கொண்டு, அப்படியே நடந்துவந்தார்கள். பிறகு அதைத்திருத்துவதற்குமுன், அவர் பரலோகமடைந்துவிட்டார். ஆதலின் அதுவே அநுஷ்டானத்தில் நின்றுவிட்டது. தற்போது, மிருகவதை கூடாது என்றால், நபிநாயகம் தன் வாக்கால் இன்னின்னமிருகம் ஹலால், அதாவது, சாப்பிடலாமென்று சொல்லியிருக்கிறார். அவர்வாக்கைத் தவறுவது கூடாது என்று, ஒரேபிடிவாதமாய்ச் சொல்லி, வதைப்பதை நிறுத்திவிட இஸ்லாம் மதாசாரியார் ஒருவரும் முயற்சி செய்வதில்லை. முகம்மதியர்கள் மாமிசம் புசிப்பதற்கு இதுதான் காரணம். இது நிற்க, நான் முகம்மதிய குலத்தில் பிறந்தவன். இஸ்லாம் என்னும், மார்க்கசட்டதிட்டங்களை, அதிகநாள் ஆராய்ச்சி செய்ததில், நடையில் பலமாறுதலிருப்பினும், இஸ்லாமிய சட்டங்களும், நற்போதனைகளும், பல மதத்திலுள்ள, நன்னடத்தைகளைப் பலசௌகரியங்களை உத்தேசித்து,பொறுக்கிச்சேர்க்கப்பட்டிருக்கின்றன என்று விளங்கியது. ஆனால், நல்லமரத்தில் போரைவிழுந்ததுபோல், இவ்வளவு சத்தியமான இஸ்லாம் மதம் என்னும் மரத்தில், போரை விழுந்ததற்கொப்ப, கொலைபாதகத் தொழி லிருக்கிறது. ஆதியில் சொன்னவர் எதற்காக என்று ஆராய்ச்சிசெய்து, அதற்குப் பல போதகர்கள் கிளம்பி பிரசாரஞ்செய்து எவ்வகை மிருகவதையுங் கூடாது என்று தடுக்கமுயற்சி யெடுப்பாராகில், நம்மதத்தின்கௌரவம்,நல் நடத்தை ஜீவகாருண்ய சிரத்தை இவைகளுக்கு அளவிட முடியாது. இஸ்லாம் மார்க்

கத்தில், மாமிசம் சாப்பிடத்தான் வேண்டும், அது புண்ணியச்செயலென்று உண்மையா யிருக்குமாகில் அந்தமார்க்கமேதவறு, என்று நான் எண்ணி, பலநாள் ஆராய்ச்சியின்பேரிலும், என்குருவின் போதனையாலும், உண்மை யறிந்து, மேற்கண்ட விஷயங்களைப்பலரும் அறியும்பொருட்டு இதைவெளி யாக்கி யிருக்கிறேன். பின்னும், ஒரு விபசாரியான பெண்ணினுடைய நட த்தையைச் சொந்தப்புருஷன் அறிந்து கண்டித்தால், அதற்கு அவள், "ஐயோ, நான் உண்மையாய்க் கற்புடையவள், என்னைப்பார்த்து அவதூறு சொல்கின்றாயே, உனக்குச் சாபமிடுகிறேன், நீ நல்லபதவி யடையமாட் டாய்" என்று சொல்லுவாள். அது அவளுடைய பாசாங்காகும். அதைப் போல், பல மதாசாரியர்கள் "நான்சொல்வதை மறுத்துச்சொல்பவர், எழு தியதை நம்பாதவர் மதத்தைவிட்டு யிலகினவராவர்" என்று சொன்ன விஷயம், ஆதியில் எதைப்பற்றிச் சொன்னாரென்று, அறியாமல் சிலர்சொல் லுவார்கள். ஆனால் அறிஞர் எவரும் அப்படிச் சொல்லமாட்டார்க ளென் னும் பூரண நம்பிக்கையோடு இதை எழுதியிருக்கிறேன். மேலும் ஒரு மகம் மதியன், ஹிந்துமதத்தினுடைய கொள்கையையும், தன் மதக்கொள்கையையு மறியாமல் தன்மதம் மேலென்றும், ஒருஹிந்து, இஸ்லாமிய கொள்கையை யும் ரகசியமு மறியாமல் தன்மதம் மேலென்றும் சொல்வது வழக்கமாயிருக் கிறது. ஒன்றோடொன்று ஒத்துப்பார்த்து, நடக்க ஆரம்பித்தால், மதப் போராட்டம் ஹிந்து முஸ்லீமுக்குள் நேராமல், அவரவர்களிட மிருக்கும் துர்க்குணத்தை நீக்கி காலதேச வர்த்தமானத்துக்குத் தக்கவாறு நீதிவழு வாமலும், ஜீவகாருண்யமாகவும் நடக்கலாம். அவரவர்கள் மனம்போனவாறு காரியம் செய்து விட்டு, சில முகம்மதியர்கள் தாங்கள் நபிநாயகம்சொல்லிய படி நடக்கிறோ மென்கிறார்கள். ஹிந்துக்கள் கண்ணப்பநாயனார் மாமிச த்தை பூஜைசெய்து மோட்சமடைய வில்லையா? அப்படி நாங்களும்மோட்ச மடைவோமென்று பலர் கிடா, ஆடுவெட்டி பூஜை செய்கிறார்கள். இன்னும், ஈயாபக்தரா யிருந்து, தருமஞ்செய்யாமல் மோட்சமடைய வில் லையா? அப்படி நாமும் தருமஞ்செய்யாம லிருக்கலா மென்று, அவரவர்க ளுக்கு வேண்டிய அத்தாட்சி சொல்லித் தாம் செய்வதை விடாமல் செய்து வருகிறார்கள். ஆனால், ஒவ்வொரு விஷயத்திற்கும், வெளிப்படையான சொல்லுக்கு, இரகசியம் வேறு இல்லாம லிருக்காது. அதை ஆராய்வதே நம் கடமையாகும். அப்படி ஆராயாமல், நம்மனம்போன போக்கெல்லாம், புண்ணியமென்று சொல்வது புண்ணியமாகாது.

குறிப்பு:—ஒவ்வொரு ஹிந்து முஸ்லீம் சகோதரர்களும், மிருகவதை யை நீக்கி, முன்ஸிபாலிடிகளிலும், தாலூகா, ஜில்லா போர்டுகளிலும், பல தீர்மானங்கள் கொண்டு வருவதுடன், பல அரிய பிரசங்கங்களும் செய்து மேற்படி வதையை நீக்க முயற்சி யெடுப்பார்களானால், அதுவே நம் தாய் நாட்டிற்குப் பெரும் பாக்கியமென் றெண்ணுகிறேன்.

ஹக்கீம் ம. அ. ஷம்சுத்தீன் ஸாஹிபு,
தமிழ் சித்தவைத்தியம், பெரிய தைக்கால் தெரு, மாயவரம்.

குறிப்பு:—நண்பர்கள் இந்த வியாசத்தை நன்கு கவனிக்கவேண்டுகி றோம். சாதாரணமாக மகம்மதிய மதம் ஜீவகாருண்ய மில்லாத மதம் என் றும் கொடுமையான தென்றுமே மற்றையர் கருதுகிறார்கள். ஆனால் உண் மை யப்படியில்லை. மகம்மது என்ற நபிநாயகம் அவர்களின் வாக்கை வாசித் தோர் அவ்வுண்மையை யறிவார்கள். அவர் ஆத்மஞானத்தைப் போதித் தவராகிய கருணாசொரூபி யெனலாம். அவர்வாக்கும் நடக்கையும் ஒத்திருக் கும். தம்மைக்கொல்ல வரும் எதிரிக்கும் உதவிசெய்வோர். ஒருகாலத்தில் தாம் தமது ஆட்களில் ஐந்தாறுபெயர்களோடு போய்க்கொண் டிருக்கை யில் எதிரிகள் இவரைப் பிடித்துக் கொல்லவேண்டு மென்று தேடிக்கொ ண்டு வருகிறார்கள். அவருடைய நண்பர்கள் "எதிரிகள் அதிகம்பேர் இருப் பதால் நாம் ஓடிவிடுவோம்" என்றார்கள். நபிநாயகம் அதற்குச் சம்மதிக் காமல் தேடிவருவோரைச் சந்தித்து "நீங்கள் யாரைத் தேடுகிறீர்கள்?" என்று கேட்டார். அவர்கள் இவரை எப்போதும் பார்த்ததில்லை. ஆகையால் மஹம்மது என்பவனைத் தேடுகிறோம் என்றார்கள். அவர் "நான்றான் நீங் கள் தேடும் மஹம்மது என்பவன். என்னை யென்ன செய்யவேண்டுமென்று உங்களுக்குப் பிரியமோ அப்படிச் செய்துகொள்ளுங்கள்" என்றார். அத்த கைய உத்தமர்க்கு இடையூறு செய்ய யாருக்கு மனம்வரும்? உடனே அவர் கள் அவர் அடியார்களாய் விட்டார்கள். அத்தகைய மகான் குரூரச்செயல் களைச் செய்யப் போதிப்பாரோ.

கொலையை யங்கீகரிப்பது கடவுளை யறிய வழிகாட்டும் மதமாகாது. மேலே நமது நண்பர் கூறியபடி அக்காலத்தி லிருந்த ஜனங்களின் நிலை மையை யனுசரித்தே மதபோதகர்கள் எதையும் போதித்திருக்கிறார்கள். மாமிசத்தையே முக்கிய ஆகாரமாய்க்கொண் டிருந்தவர்களை யடியோடு விடச்சொன்னால் விடுவது கஷ்டம். அதோடு அவருடைய நல்லபோதனை களையும் ஏற்றுக்கொண் டிருக்கமாட்டார்கள். ஆகையால் ஆண்டவனுக்குப் பிரீதிசெய்தாவது கொன்று தின்னுங்கள் என்று புத்தி புகட்டினார்.

அந்தோ! ஜீவகாருண்யத்தை அஸ்திவாரமாக வுடைய நம்ஹிந்து மத த்திலுள்ளோரில் பலர் இன்னும் காடன், மாடன், காளி, காட்டேறி என்ற தெய்வங்களின் பெயரால் ஆடு கோழிகளைப் பதைக்கப்பதைக்கக் கொலை செய்கிறார்கள். பசுவை வைத்துக்கொண்டு அது பால்கொடுக்குமட்டும் அதற்கு ஆகாரமளித்து, பிறகு அது கிழத்தன மடைகிறது என்று தெரிந் ததும் கசாப்புக்காரனிடம் மனமறிந்து விற்கும் சண்டாளர்கள் இச்சென் னையில் அனேகரிருக்கிறார்கள். அந்தோ! இக்கொலைபாதக பரமசண்டா ளர்களுக்கு ஆண்டவன் எத்தகைய நரகதண்டனை யளிப்பானோ, இவர்கள் குலங் குட்டிச் சுவராகி இவர்கள் எத்தனை ஜென்மங்கள் ஆடுமாடாய்ப்பிற ந்து கொல்லப் படுவார்களோ அது ஆண்டவனுக்கே தெரியும்.

நமது நண்பரின் சிறந்த நோக்கமும் ஆழ்ந்த அறிவும் நிறைந்த போத னைகளை அறிவாளிகளாகிய மற்ற மஹம்மதியரும் ஏற்றுக் கொள்வார்க ளென்றே நம்புகிறோம்.

பத்திரிகாசிரியர்.

## கம்பராமாயண நீதிச் செய்யுள்.

(210-ம் பக்கத்தொடர்ச்சி)

6. * வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில இன்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால் (வேள்விப்படலம்-29)

7. மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கள் மாயா
தேர்ந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீய்ந்தவ ரென்பவர் வீய்ந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே. (ஷை. 30)

இராமலக்குவரை வேள்விக் கழைத்தேகும் நெறியில், விசுவாமித்திரர் அவர்கட்குப் பல வரலாறுகளைக் கூறுகையில், திருமாலின் வாமனாவதார விருத்தாந்தத்தைக் கூறும் சந்தர்ப்பத்தில் உள்ளவை இச்செய்யுட்கள். (இ—ள்.) 'திருமாலே உன்னையடக்க இவ்வாறு வந்தனாராகலின் நீயவர் கேட்கும் பொருளைத் தானஞ்செய்யற்க' வெனத்தடுத்த தன்னாசிரியராகிய வெள்ளி யென்னப்படும் சுக்கிரரை நோக்கி மகாபலி கூறுவான், (6) 'ஐய! நீ வெள்ளி யென்னும் பெயருடையவ னாகலின், இங்ஙனஞ் சொற்றாய். பெரியோர் தம்மாட்டுவந்து யாசிப்போர் கேட்கும் பொருள் யாதாயினும் கொடுப்பார்களே யன்றி, இவை கொடுக்கத் தகாதவையென விலக்கும் பொருள்களு முண்டோ? இல்லையே. தன் னின்னுயிரையே யாயினும் பிறர்மாட்டு யாசித்துப் பெறல் தீது; தன்னுயிரையே யாயினும் இரப்போர்க்கீவது மிக்க இன்பந்தருவதாம். மேலும் (7) சுவாமி! இவ்வுலகத்தில் இரத்தலி னிறத்தலே மேலெனக்கருதி உயிர்விடாது யாசிப்போரே இறந்தோ ராவரன்றி, உண்மையில் இறந்தோர் இறந்தோராகார். தானதருமங்களைச் செய்தோர் மாண்டாலும் வாஸ்தவத்தில் அவர்கள் மாண்டோரல்லர்; உயிரோடுள்ளோரே யாவார். ஆகையால் யான் கொடுத்தே தீருவேன்" என்றான். என்பதாம்.

இவற்றால் சற்பாத்திரமா யுள்ளோர்க்குத் தம்மாலியல்வதை யில்லையென்னாது தருமம் செய்யவேண்டும். 'தருமமே தலைகாக்கும்.' 'பொன்றுங்கால் பொன்றாத்துணையாவது இஃதே,' 'தன்னொடு செல்வது வேண்டி னறஞ் செய்யவேண்டும்' 'தருமத்துக்குத் தாழ்ச்சியில்லை,' 'ஈயார்தேட்டைத்தீயார் கொள்வர்.' பூதவுடம் பழியினும் புகழுடம் பழியாதாகலின் தருமவான்கள் இறப்பினும் இருப்போரே யாவர். என, ஈதலினேற்றமும், என்னவறுமை யடைந்தாலும் பட்டினிகிடந்தாலும் சாதலேயன்றி, பல்லெ

* வெள்ளியை என்பது வெள்ளியெனும் பெயருடையை எனவும், வெள்ளறிவு அதாவது அறியாமையை யுடையவன் என்றும் இருபொருள்படும்.

லாங்தெரியக் காட்டி, துன்பங்களை யெல்லாம் முகத்திற் கூட்டி, சொல் லெலாஞ் சொல்லி நாட்டி, துணைக்கரம் விரித்து நீட்டி, இல்லெலாஞ் சென்று 'அம்மா! அய்யா! எனக்கீ' யென்றைய மேற்றல், மறுமைக்கண் தனக்குரிய தானம் துடைத்து, தருமத்தை வேர்பறித்து, மானந்துடைப் பதோர் வாளாகுமாதலின், இரத்தலாகாதென, ஏற்பதின் தாழ்வும் நன்கு விளங்குதல் காண்க. 'நல்லாறெனினும் கொளல் தீது மேலுலகம், இல்லெ னினும்ஈதலே நன்று.' என்னும் குறளின் கருத்து முதற்செய்யுளில் அமை ந்துள்ள தறியத்தக்கதாம்.

8. எடுத்தொருவ ருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கிதழ கோதகைவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றிவிடு கின்றாய். (ஷை 33)

(இ-ள்.) மீட்டும் மகாபலி வெள்ளியைப் பார்த்து 'சற்குணமில்லாத ஓ! சுக்கிரரே! ஒருவர் மற்றொருவர்க்குக் கொடுக்கப் போவதைத் தடுப் பது உனக்குச் சரியா! ஈவதுவிலக்கும் ஏழையே! இத்தீய காரியத்தால் உனக்குக்கேடு விளைவித்துக் கொள்வது மல்லாமல், உன் சுற்றத்தாரையும் உண்ணவுணவும் உடுக்கவுடையு மின்றிக் கெடுக்கப் பார்க்கின்றனையே! எனக்கூறினன். ஆகையால் நாம் கொடாவிடினும் கொடுப்போரைத் தடுக்க லாகாது. இத்தகைய குணம் பொறாமைக் காரணமாக வுண்டாவதாகலின் அதை நீக்க முயலவேண்டும். இன்றேல் அன்னார் சுற்றம் உண்பது முடுப் பது மின்றியழியும். 'ஈவது விலக்கேல்' என்றார் ஔவையார். 'கொடுப் பதழுக்கறுப்பான்சுற்றமுடுப்பது உ-முண்பது உ-மின்றிக்கெடும்' என்னும் குறளின் பொருளைக் கொண்டது இச்செய்யுள்.

9. தீயவரோ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தால்
சேயவரு துண்பொடி படிர்துட னெழுந்தொண்
ப்பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே. (வரைக்காட்சி-20)

(இ-ள்.) ஆய்ந்தாய்ந்து பாராது தீயாரோடு நட்புக்கொண்டு பழகிப் பின்னவர்தம் தீக்குணங்களை யறிந்தழி, அவர் நட்பை விரைந்து விலக்கிய விவேகிகள்போல, மிதிலை நெறிப்படரும் தயாதன் சேனையிலுள்ள குதிரை கள் தரையிற் படுத்துப்புரண்டு தம்சரீரத்தி லொட்டிய புழுதியை உடனே எழுந்து உதறிவிட்டு நின்றன. (எ-று.) ஆகையால் ஒருவரோடு சிநேகிக்கு முன்னரே அவரது குணகுணங்களைப் பலமுறையு மாராய்ந்து கொள்ள வேண்டும். நல்லாரெனக்கருதி நட்பாடியபின் அவர் மாட்டுத் தீயகுணங்க ளிருப்பக்காணின், வாசனைப் பொருளிருக்குமென் றெண்ணி ஒரு சிமிழி யைத் திறந்தானொருவன் அதில் பாம்பிருக்கக் கண்டவுடனே எங்ஙனம் அதை வீசியெறிந்து விலகிப்போவானோ அங்ஙனமே உடனே அவர்நட்பை விரைந்து விடல்வேண்டும் என்னும் நீதியை அறியக்கடவேமாக.

10. தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னான் உருவுகண் டாரை யொத்தார்.

(உலாவியற் படலம்-19)

(இ-ள்.) ஸ்ரீராமன் மிதிலாபுரியின் வீதியில் பவனிவரும்போது அவரைக்காணவந்த மாதர்களுள், முதன்முதலாக அக்காகுத்தனுடைய தோளைக் கண்டவர்கள் அதன் அழகிலேயே ஈடுபட்டு அதையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். பதாம்புயங்களைப் பார்த்தோர் அவற்றையேபார்த்துநின்றனர். கரத்தை நோக்கினோர் அதையே நோக்கினரன்றிப் பிறிதொன்றினையும் காண்கிலர். இவ்வாறே எவ்வெவர் எவ்வெவ்வுறுப்பைக்கண்டனரோ அவ்வவ்வுறுப்பையே கண்டனரன்றி அத்தாசரதியின் திருமேனியை முற்றுங்கண்டார் ஒருவருமிலர். ஆதலின இம்மாதர்கள், இந்நிலவுலகத்துள்ள எல்லாச் சமயங்கட்கும் ஒரே கடவுளாயிருக்கும் அப்பிரானை ஒவ்வொரு மதத்தினும் தனித்தனி வெவ்வேறு விதமாயிருப்பதாகக் காணும் மதபேதிகளை யொத்திருந்தனர் என்பதாம்.

"ஈன்றளித்தழிக்கும் செய்கைக்கேதுவா மயனாய் மாலாய், ஆன்ற வீசனுமாய்த் தானேயனந்த மூர்த்தியுமாய் நிற்கும்" என்றபடி, சிருட்டி திதிசங்கார நிமித்தம் பிர்ம விஷ்ணு ருத்திரர்களாகி யிருப்பது மன்றி, தானே யளவிறந்த மூர்த்திகளாயும் நிரகும் முழுமுதற் கடவுளொருவரே யென்பதை யறியாதோரே எந்தெய்வ முந்தெய்வமென்று வழக்காடாநிற்பர். இது அறியாமையே யென்பது இச்செய்யுளினீற்றடியால் பெறப்படும். இது அவ்விராமபிரானது தோளையே கண்டோர் அத்தோளே இராமனென்றும், தாளைக்கண்டோர் அவனது வடிவம் காலின்வடிவே யென்றும் கூறுதல் ஒவ்வாமைபோல, இரண்டாவதற்ற அகண்ட சச்சிதானந்தப் பரம்பொருளைக் கண்டப்படுத்தி, மாயாகாரிய சரீரத்தோ டிருக்குமவனை யச்சிறு வடிவினனாகவே பாவித்தலும் ஒவ்வாதென்பது இச்செய்யுளின் உபமேய முகத்தாலறிக. 'ஆறுசமயங்கள் தொறும் வேறுவேறாகி விளையாடு மூனையாவரறிவார்! 'மூவுருவும் ஓருருவாய் நின்றமூர்த்தி,' என்னும் ஆன்றோர் வாக்கே போதியசான்றும். ஆகையால் எல்லாமதத்தோராலும் வணங்கப்படுபவனும் எல்லா நாமங்களாலும் அழைக்கப் படுபவனும் ஒருகடவுளே யென்பது நன்கு விளங்குகிறது.

சில குருடர்கள் யானையைக் காணச்சென்று கரங்களால் தடவிப்பார்த்த பின்பு அவர்களில் காலைத்தடவிப் பார்த்தவன் யானை தூண்போலிருக்கின்றதென்றும், துதிக்கையைத் தொட்டோன் உலக்கைபோ லிருக்கிறது யானையென்றும், செவியைப் பார்த்தவன் யானை முறம்போ லிருக்கின்றதெனவும், வாலைப்பார்த்தவன் யானையைத் துடைப்பத்திற் கொப்பிடலாமெனவும் கூறியதாகக் கூறப்படும் கதையும் இதனோடு ஒப்பிடத்தக்கது.

(இன்னும் வரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை,

## சர்வம் - சக்திமயம் - ஜகத்!

நாம் உலகத்தில் முன்னுக்கு வரவேண்டுமானல் நமக்கு அவசியம் மூன்று சாதனங்கள் வேண்டும். அதாவது பணம், படிப்பு, பலம். இந்த மூன்றோ, அல்லது இரண்டோ, ஒன்றோ இருந்தா லொழிய நாம் எதையும் சாதிக்க முடியாது. இந்த மூன்றையும்தான் நாம் மூன்று தேவிகளாகக் கொண்டாடுகிறோம். அதாவது பணத்தை இலக்ஷ்மியென்றும், படிப்பை சரஸ்வதியென்றும்,பலத்தை சக்தியல்லது பார்வதியென்றும் பூஜிக்கிறோம். மேல் நாட்டார் (Ladies and Gentlemen) என்று சொல்லுகிற மாதிரி நம்முடைய தேவதைகளையும் விசாலாக்ஷி சமேத விசுவநாதர், இலக்ஷ்மி சமேதநாராயணர் என்றே கூறுகிறோம்! அதாவது சக்தியை முன்வைத்து தான் சுவாமியை வேண்டுகிறோம். இந்த உலக ஜனத்தொகைக் கணக்கைப் (World Census) பார்த்தாலும் அதில் புருஷர்களைக் காட்டிலும் ஸ்திரீகள் கொஞ்சம் அதிக கணக்காகவே இருக்கிறார்கள். இங்கிலீஷ் காரர்களைப் போல் பார்யாளை உயர்ந்த பாதி (Better-half) என்று நாம் சொல்லாவிட்டாலும் அவள் அர்தாங்கி என்று சமத்துவம் அங்கீகரிக்கிறோம்! ஆனல் சூர்யபகவானும் வாயுபகவானும் காணக்கூடாத மஹம்மதிய "கோஷா" சாம்பிரதாய மில்லாமலும், மற்றும் மேல் நாட்டாரைப்போல் (Militant Suffragette)வோட்டு முதலியவைகளுக்குச் சண்டை போடக்கூடிய அநாகரீகமுடையவர்களாக இல்லாமலும், ஹிந்து மதஸ்தர்களாகிய நம் ஸ்திரீகள் சுவதந்திர விஷயத்தில் கிரமமான நடு நிலைமையில் இருக்கிறார்கள். இந்த இந்தியாவில் இப்போதுள்ள ஸ்ரீமதி சரோஜனியாருக்கும் சாரதாதேவியாருக்கும், கல்வியிலும் குணத்திலும் சமம் எந்ததேசத்தி லிருக்கிறார்கள்? அது போகட்டும். நம்முடைய இந்தியாவில் பெரியநகரம் எது? கல்கத்தா அல்லது காளிகட்டம்! அதாவது இந்தக்கலியுகத்தில் காளி அல்லது சக்தி இருக்கும் இடந்தான் நம்முடைய பாரதகண்டத்தில் முதல் நகரமாகவும், பிரிடிஷ் இராஜாங்கத்திலேயே இலண்டன் பட்டணத்திற்கு இரண்டாவதாகவும் இருக்கிறது! அதேமாதிரிதான் தென் இந்தியாவிலும் மதராசுக்கு இரண்டாவது நகரம் மதுரை, அதாவது மீனாக்ஷியம்மை எழுந்தருளிய இடம்; ஆகையால் எப்படிப் பார்த்தாலும் இந்த உலகசம்பத்தும் சுகமும் சக்திஸ்வாதீனமாகவே இருக்கின்றன வென்று நமக்கு நன்குவிளங்குகிறது. ஆகையால் நாம் "வந்தேமாதரம்" என்னும் மந்திரத்தை மறக்கக்கூடாது. மேலும் முக்திக்கும்சக்தி முக்கியமில்லை யென்று சொல்லக்கூடாது, ன்றால் சுருதிகளும் "மாத்ருதேவோபவ" வென்று கோஷி கின்றன!

உ - துரைசாமி ஐயர்,

வாலாஜா.

---

## "இரண்டு படுபொய்கள்" என்ற படுமோசம்.

யாழப்பாணத்திலுள்ள ஸெயின்ட் ஜோஸப் அச்சுக்கூடத்தில் வெளி யான ஒரு துண்டுப்பிரசுரம் நமது சந்தா நண்பர் ம-ள-ள-ஸ்ரீ, பெ. அ. கந்தையாப்பிள்ளை (அம்பலங்கோடா) அவர்களால் நமது பார்வைக்கு (அதன் உண்மையைப்பற்றிச் சஞ்சிகையில் வெளியிடக்கோரி) அனுப்பப் பட்டது.

அதில் "இரண்டு படுபொய்கள்" என்ற தலைப்பின் கீழ் ஒரு விஷயம் வரையப்பட்டிருக்கிறது. அதில் கையொப்பமில்லை யெனினும் ஒரு கிருஸ்தவராலேயே அது எழுதப்பட்டதென்று வெளிப்படையாய் விளங்குகிறது. கீழ்க்கண்ட இரண்டு காரணங்களால் அதிலுள்ள ஆபாசங்களை விளக்கிக்காட்டி அதன் மோச எண்ணத்தை நாம் வெளியிடவேண்டியது அவசியமாயிற்று. அக்காரணங்கள்:—

1. சமய ஆராய்ச்சிசெய்து பார்த்த உள்ளமுடையோரும், கடவுளின் உண்மை நிலையையுணர்ந்தோருமாகிய மகான்களும், எச்சமயப் பெரியாரும் ஒப்புக்கொண்டு நிரப்படுத்தியுள்ள சத்திய மொழிகளையே இரண்டு படுபொய்கள் என்று அப்பிரசுரம் கூறுகிறது. அத்தகைய அஞ்ஞான மனப்போக்கைப் பாமரர் கண்டு மயங்கிக் கெடாவண்ணம் கண்டிக்கவேண்டியது, எல்லோரும் ஆண்டவனருளைப்பெற வேண்டுமென்று கருதும் ஒவ்வொருவர்க்கும் கடமையாயிருக்கிறது.

2. பிற மதஸ்தரை, முக்கியமாய் இந்து மதஸ்தரை மயக்கித் தந்திரமாய்த் தம் மதத்திற்கு இழுக்கவேண்டுமென்ற படுமோச எண்ணங்கொண்டே அது வெளி வந்திருக்கிறது. சைவசமயத்தையும், மகம்மதிய சமயத்தையும் பொய் என்று பகிரங்கமாய்த் தூஷிக்கிறது.

இனி அது எவற்றை "இரண்டு படுபொய்கள்" என்று கூறுகின்றதெனில்,

1-வது—எல்லா மதங்களும் கடவுளுக்குச் சம்மதமே. எல்லா மதங்களிலும் இருந்து பிரகாசிப்பவர் ஒரு கடவுளே.

2-வது—அவனவன் தன் தன் மதத்தைக் கைவிடலாகாது.

நேயர்களே! இந்த உண்மைகளைப் பொய்யென்று கூறும் மனம் எத்தகைய அந்தகார அஞ்ஞானம் நிறைந்ததாக விருக்கவேண்டும் என்பதை அறிவாளிகளே அறிந்து கொள்ளலாம். எங்கும் பெரு வெளியாய், ஏக ஒளியாய், அகண்டாகாரமாய் வாக்கு மனதிற்கெட்டாது, சமயாதீதமாய் விளங்கும் எல்லையற்ற அகண்டாகாரசொரூபத்தை இந்த ஆபாசக்கூற்று ஒரு சிறு புத்தகத்தில் வரையறுத்து அடக்கிவிட்டது.

கப.. வெளிச்சத்தை பிருளென்பதுபோல் பேரறிவாளர் கண்டறிந்த சத்தியென்.. த, மூடர் தவிர வேறெவரும் மறுக்கப்படாத சத்தியத்தைப் படுபொய் ..று வாய் கூசாது மனம் நாணாது கூறிவிட்டு, இன்னும் இது காட்..த ..நியாயமும், கொண்டுள்ள முடிவும் மிக்க விநோதமே. எவ்வாறெனின், இ.. "கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மெய்யான சமயம் எது என்று தேடி ..றியவேண்டியதில்லையா? அப்படியாயின் மகம்மதியரும் தங்கள் வேதம் ..டவுளால் ஏற்படுத்தப்பட்ட தென்கிறார்கள். சைவரும் தங்கள் வேதம் கடவுளால் ஏற்படுத்தப்பட்டதென்கிறார்கள். இப்பல சமயத்தவர் கூறுகிறபடி வெவ்வேறு வேதமிருந்தால் வெவ்வேறு கடவுளும் உண்டு என்ற அபத்தத்தை அங்கீகரிக்கவேண்டி வரும்......" என்று நியாயங்கூறி முடிவில் கிருஸ்து மதம் ஒன்றே கடவுளால் ஏற்படுத்தப்பட்ட மதமென்றும், அதில் கூறப்பட்ட கடவுளே மெய்யாக இருக்கிற கடவுள் என்றும், மற்ற சமயங்களில் கூறப்பட்ட குணங்குறிகளுள்ள கடவுள் எங்கும் இல்லை

யென்றும், கிருஸ்து வேதத்தை யனுசரிக்கும் சமயம்மட்டும் அவர் சமூகத்தில் செல்லும் என்றும், மற்றசமயங்களும் அவற்றில் கூறப்பட்ட கடவுளும் எல்லாம் பொய்யென்றும், மற்ற மதத்தவரெல்லாம் தண்டிக்கப்படுவார்களென்றும் ஒரே தீர்மானமாய்க் கூறிவிட்டு, மற்ற மதஸ்தர்கள் தங்கள் தங்கள் மதததை வெறுத்துவிட்டு கிருஸ்து மதத்திற்கு வந்துவிட்டால்தான் கடவுள் மன்னிப்பார் என்று முடித்திருக்கிறது. கிருஸ்து மதமே ஆதிமதம் என்றும் அதையே இயல் வேதம் என்ற படியில் நமது முன்னோர் அனுசரித்து வந்தார்கள் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

நமது முன்னோர் என்பது யாரை? ஐரோபாவிலுள்ளோரை யென்றால்தான் பொருந்தும். இரண்டாயிர வருடங்களுக்கு முன் எந்தக்கிருஸ்து மதம் இருந்தது. கிருஸ்துவால் உண்டாக்கப்பட்ட மதம் ஒன்றே ஆதியும் உண்மையுமாயின் அதற்குப் பல்லாயிர வருடங்களுக்கு முன்முதல் இருக்கும் வேதமும் மதமும் பொய்யோ? அப்படியாயின் அப்போதெல்லாம் கிருஸ்து மதக் கடவுள் தூங்கிக்கொண்டிருந்தார் போலும். அந்த ஆன்மாக்களெல்லாம் அழிவதைப் பார்த்துக்கொண்டு பேசாமலிருந்தாராக்கும். இப்போதும் அவர்களைப் பொய் மதங்களில் பிறப்பித்துக்கொண்டு விழிக்கிறாராக்கும். அப்படியாயின்அவர் நல்ல கருணையான கடவுளே. அவருக்கும் அவர் வேதத்திற்கும் மிக்க வந்தனம்.

அந்தோ கிணற்றுத் தவளையே! நின் ஆணவமலம் நிறைந்த அந்தகார மதி யிருந்தவாறென்னே? நாம் கூறுவது போலவே ஒவ்வொரு மதஸ்தரும் கூறுவதாயின் எந்த மதத்திலுள்ள கடவுள் வந்து இதற்கு முடிவு கூறுவார் என்பது நினது மதியிற்றோன்றாதவா றென்னையோ!

நண்பர்களே! நமது சஞ்சிகையில் மேற்கண்ட உண்மையைப்பற்றிப் பன்முறை பிரஸ்தாபித்து எச்சமயத்தும் இயற்கையை விட்டிடலாகாது என்ற ஆன்றோர் வாக்கைப்பற்றியும் கூறியுள்ளோம். "மகம்மதிய மதமும், சைவசமயமும் பொய். அவற்றிற் கூறப்பட்ட கடவுளும் பொய்" என்று வெளிப்படையாகப் பிறமதஸ்தர் மனம் புண்படும்படி மொழியும் இவர்களுக்கு, நாம் நமது மதஸ்தரை நோக்கி, "அன்னிய மதம் போதிக்கப்படும் பாடசாலைகளுக்கு நமது பிள்ளைகளை யனுப்பவேண்டாம். நீங்கள் நம் மதத்தைவிட்டுப புறச்சமயம் புகவேண்டாம்" என்று கூறுவது மன எரிச்சலை யுண்டாக்குகிறது. அப்படி நாம் கூறுவதை "உங்கள் சஞ்சிகையில் கிருஸ்துமத தூஷணையிருக்கிறது" என்று அண்டப்புளுகாய்ப் புளுகுகிறார்கள். இவர்கள் இப்படி யெழுதுவது மத தூஷணையல்லவாகும். சத்தியததைப் பொய் யெனபார்க்குப் புளுகுவது சர்க்கரை நக்குவது போல் தானே. தனக்குண்டு எதிர்க்கில்லை யென்பது எத்தகைய மேலான நியாயம்!

நண்பர்களே! இக்கிருந்து பெங்களூருக்குச்செல்ல ஆறு வழிகளுண்டு என்றால் அப்படியாயின் ஆறு பெங்களூர்கள் இருக்கவேண்டும் என்று எந்த அறிவாளியேனும கருதலாகுமோ?

நமது வேதததில உலகில இருக்கக்கூடிய மதக்கொள்கைகள் எல்லாவற்றைப்பறறியும் கூறி அவரவர் கொள்கைப்படி அவரவர் கோரும் வண்ணம் அவரவர் தெய்வமாக நின்று அவரவர் வழிபாட்டையேற்று அருள் புரிபவர்

ஒரே கடவுளே என்ற உண்மை கூறப்பட்டு, நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இதை யெவரும் மறுக்கமுடியாது. இதே உண்மையை விவேகானந்த ஸ்வாமிகள் அமெரிகாவில் கூடிய சர்வமத சங்கத்தின் முன் நிரூபித்தபோது யாவரும் ஒப்புக்கொண்டார்களே யன்றி எவராலும் மறுக்கமுடியவில்லை. கண்ணுள்ளவர்கள் எல்லாம் சூரியன் பிரகாசமாக விருக்கிறதென்றே கூறுவார்கள். குருடனும் அவன் போன்ற மற்ற குருடரு மட்டுமே "இல்லை யில்லை, சூரியனும் இருட்டே" என்பார்கள்.

சகோதர சகோதரிகளே! இனியேனும் இத்தகைய வஞ்சகப் பொய்களை யெல்லாம் கூறித் தந்திரமாய் நம்மவரை மயக்கித் தங்கள் மதத்தில் சேர்க்கக்கூலிக்கு உழைக்கும் அன்னிய மதபோதகர்களின் பிரசங்கங்களுக்குச் செவி கொடாதீர்கள். அவ்வாறு வியர்த்தமாக்கும் காலத்தை நமது மதத்தைப்பற்றிய கல்வியைக் கற்பதில் செலவழியுங்கள். வலிய வந்து மயக்க முயலும் இவர்கள் பசப்பு வார்த்தைகளால் மயங்கி விடலாகாதென்று நம்மவர்க்குப் போதிப்பதை யொவ்வொருவரும் கட்டாயக் கடமையாகக் கைக்கொள்ளுங்கள்.

ஓம் தத்ஸத்.

---

## மாணவர்களுக்கு ஹிதோபதேசம்.

மாணவர்களே! நீங்கள் உங்கள் வாழ்நாளைச் சரிவர நடத்தத் தேவையான சாதனங்களை அமைத்துக்கொள்ள, யாதொரு கவலையுமின்றி உத்ஸாகத்துடன் கல்வி கற்கும் இக்காலம் தான் ஏற்ற தருணம். ஆகையால் இதை வீணில் செலவழிக்காமல் பயனுள்ளதாகச் செய்வது உங்கள் கடமை. அப்படிச் செய்வதைப்பற்றிச் சில விஷயங்கள் கீழேகூறப்படும். அவற்றைக் கவனியுங்கள்.

முதலாவது கல்வி கற்பதின் முக்கிய நோக்கத்தை நீங்கள் அறிய வேண்டும். உங்களில் அநேகருக்குப் பரீக்ஷையில தேறுவதுதான் உயர்ந்த லக்ஷியமாயிருக்கிறது. இதற்காக இவர்கள் படும்பாடு பார்க்கப் பரிதாபமாயிருக்கிறது. பரீக்ஷைக்கு முதல்நா ளிரவில் கோழி கூவும் வரைப் புத்தகங்களைக் கண் பஞ்சடைய வாசித்துக்கொண்டிருந்து, எங்கு மறந்து விடுவோமோ என்ற திகிலால் பரீக்ஷைக்காக உள்ளே புகுவதற்கு முந்தியும் மரணத்தறுவாயிலிருப்பவன் தன்னருமைச் சுற்றத்தாரைக் கடைசியாகப் பார்ப்பது போலப் பார்த்துவிட்டுக் கேள்விக்கடிதம் கையில் கொடுத்ததும் உடனே பேனாவை எடுத்துத் தங்கள் ஞாபகத்திலிருந்த விஷயங்களை எல்லாம் எழுதிவிட்டு வந்து விடுகிறார்கள். காக்கை உட்காரப் பனம்பழம் விழுந்ததுபோல் இவர்கள் எழுதியதும் கேட்ட கேள்விக்குக் கொடுக்க வேண்டிய விடையும் ஒத்திருந்தால் தேறுகிறார்கள். இல்லாவிட்டால் அழுகை. இதற்கெல்லாம் காரணம இவர்கள் நோக்கம் ஓட்டைச் செம்புக்கு சமானமாயிருந்ததுதான். பரீக்ஷை எனனும் பாத்திரத்தில் விஷயம் என்கிற நீரை அவசர அவசரமாக மொண்டு கொட்டுவது; வேண்டிய அளவு இருந்துவிட்டால் தேறுவது, இல்லையேல் இல்லை. இது பெருந்தவறு. இத்தகைய சிறு நோக்கம் கொண்டிருப்பதால் பலர் பரீக்ஷையில் தேறியும் கல்வி கற்காத சாமானியரிலும் கேடாக நடக்க ஹேதுவாகிறது. ஆகை

யால் நீங்கள் முதலிலேயே சிறந்த லக்ஷியத்தை முன்னிட்டுக்கொள்ள வேண்டும்.

நீங்கள் உங்கள் முன் சதா வைத்திருக்கவேண்டிய நோக்கங்களாவன:— எப்பொழுதும் நல்லதையே செய்யவேண்டும்; நல்லது எது கெட்டது எது என்பதை அறியவேண்டும்; அறிந்தபடி செய்ய உங்கள் தேகமும் மனமும் தயாராய் இருக்கவேண்டும். உத்தியோகம் செய்யவே படிக்கிறோம் என்ற எண்ணத்தை விட்டுவிட வேண்டும்.

இவற்றில் முதலில் சொன்ன நல்லதைச் செய்யவேண்டும் என்கிற விஷயத்தை சதா மனனம் செய்து நல்ல எண்ணம், நல்ல காரியம், நலல சொல் முதலியவற்றில் அத்தியந்த பிரியத்தையும் கெட்ட எண்ணம் கெட்ட காரியம் கெட்ட சொல் முதலியவற்றில் மிகுந்த வெறுப்பையும் உண்டு பண்ணிக்கொள்ள வேண்டும்.

இரண்டாவதாக, நல்லது எது கெட்டது எது என்பதை அறிய விஷயங்கள் கிரமபத் தெரிந்து கொள்ளவேண்டும். அப்படித் தெரிந்துகொள்ள பல வழிகள் உண்டு; பிறர் சொல்லக்கேட்பது, நீங்களாகக் கண்டறிவது, புஸ்தகங்கள் மூலம் தெரிந்துகொள்வது என்னும் மூன்றும் முக்கிய வழிகள். இம்மூன்றிலேயே எல்லா வழிகளும் அடங்கும். இவற்றுள் நீங்கள் அதிகமாகக் கையாளுவது புத்தகங்களை வாசித்தல். எந்த வழியாக விஷயங்களைத் தெரிந்துகொண்டாலும் சரியே சந்தேகமற அறியவேண்டும்; அறிந்தவற்றை மறவாது ஒழுங்காக மனததிடைப்பதிய வைத்துக்கொள்ள வேண்டும். இது போதும் என்றிராமல் மேன்மேலும் தெரிந்துகொள்ள முயலவேண்டும். ஆனால் புது விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் ஊக்கத்தில் பழைய சங்கதிகளை மறககலாகாது.

கடைசியாக, இவ்விரண்டினுக்கும் அடிப்படையாயுள்ள தேகத்தையும் மனத்தையும் பண்படுத்தும் விஷயததில் கவனத்தைச் செலுத்துவது அத்தியாவசியம். இது சிரமமான காரியம் என்பதற்கு ஆக்ஷேபனை இல்லை; ஆனால் கஷ்டப்பட்ட வரைக்கும் லாபம் உண்டு. முதலில் தேக சம்பந்தமாகப் பேசுவோம். தேக ஆரோக்யம் எந்தக் காரியத்துக்கும் அஸ்திவாரம் போன்றது. ஆகையால் அது விஷயத்தில் மிக்க கவலை எடுத்துக்கொள்வது அவசியம். அன்ன பானங்களில் ஓர் நியதிவேண்டும். எந்த உணவை உண்டால் தேகத்துக்கு, சோம்பல் மதமதப்பு முதலியவை இன்றிப் பலமும் சுறுசுறுப்பும் மாத்திரம் ஏற்படுகின்றனவோ அவ்வுணவே ஏற்ற உணவு. இதை ஒவவொருவரும் அனுபவத்தில் உணர்ந்து கொள்ளவேணடும். அவ்வாறே பசி யடங்கும வரை கொள்ளக்கூடிய ஆகாரத்தின் அளவையும் கண்டறிந்து ஒருகாலும் அதனை மீறாமல் அருந்தவேண்டும். குடிப்பதற்கு முதல் தரமானது சுத்த ஜலம். மற்றைய எல்லாம் அடுத்தபடியே. புகையிலை, வெற்றிலை முதலியவற்றை விலக்குங்கள், வெற்றிலையைச் சிலர் சிலாகிக்ககூடும். அது விஷயமான வாதம் இப்பொழுது வேணடாம். நீங்கள் அதைத் தவிர்த்திருப்பதே நலம். பொதுவாக விசேஷ போகத்திற்குரிய வற்றை (Luxuries) அறவே ஒதுக்குங்கள். தேகப்பயிற்சியை விடாது செய்தல்வேண்டும. வேறு ஒன்றும் செய்ய சௌகரியப்படாவிடினும் குறைந்தது நாலு மைல் தூரம் பிரதிதினமும் நடக்கலாம். இதனால் அளவற்ற நன்மையை அடைவீர்கள். தேகத்தையும் ஆடையையும் சுத்தமாய் வைத்திருப்பதுவும் முக்கியமானது.

இனி மனோ சம்பந்தமாகச் சில கவனிப்பாம். இந்தமனது ஒரு பெரிய குரங்கு; சதா அலைந்து கொண்டேயிருக்கும். கெட்ட விஷயங்களைச் சட்டெனப்பற்றும். ஆகையால் அதற்கு இடங் கொடுக்கலாகாது. அதை மெள்ள மெள்ள உங்கள் சுவாதீனத்தில் கொண்டுவரப்பாருங்கள். இதற்கு ஒரு சிறு வழி கூறுவோம்.

பிரதிதினமும் அதிகாலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்த பிறகு படிப்பு விஷயமாக இன்றைய தினம் இன்னின்ன காரியங்கள் செய்வது என்று ஓர் குறிப்புப் (Programne) போட்டுக்கொள்ளுங்கள். உதாரணமாகச் சரித்திரத்தில இன்ன அரசனின் ஆட்சி முடிய வாசித்தல், கணிதத்தில் இன்னின்ன மாதிரியில் இத்தனை கணக்குகள் போடுவது, வாசக பாடத்தில் இத்தனை பக்கங்கள் வாசித்துக் கடின சொற்களின் பொருளை அகராதி முதலியவற்றில் இருந்து தெரிந்து கொள்வது. இவ்விதம் காலையில் சங்கல்பித்தபடியே நடக்கவேண்டும். அப்படியே நடக்கமுடிகிறதா இல்லையா என்பதைப் பிரதி சாயந்திரமும் சரிபார்க்க வேண்டும். ஆனால் இவ்விதம் ஊக்கத்துடன் எண்ணிய காரியத்தில் கருத்தா யிருக்கும்போது இடையூறு நேரிட்டால் அமைதியையும் பொறுமையையும் பாராட்டவேண்டுமே யொழியக் கோபமும் படபடப்பு மடையலாகாது.

இப்படிச் செய்து வருவீர்களேயாகில் பரீக்ஷையில் தேறுவது மட்டு மன்றி, உங்கள் வாழ்நாளையும் இனிதாகக் கழித்து இறுதியிலும் இன்பத்தை அடைவீர்கள்.

C. V. சுப்பிரமணிய அய்யர்,
ஜலகண்டாபுரம் P.O.

---

## தமிழ் மாதருக்கு ஆங்கிலக்கல்வி அவசியமா?

சகோதர சகோதரிகளே! தற்காலத்திலே காலத்திற்கேற்ற கோலங்களும், நாட்டுக்கேற்ற சாட்டுகளும், குலத்திற்கேற்ற குணங்களும், குணத்திற்கேற்ற கொள்கைகளும், பாஷைக்கேற்ற ஞானங்களும் ஆங்காங்கு உலாவுகிறதை நாங்கள் நாளுக்கு நாள் கண்ணாரக்கண்டும் காதாரக்கேட்டும் வருகின்றோம்.

அப்படியிருந்தும், சிறியேனுகிய நான் எங்களுக்கு நாளுக்கு நாள் அறிவைப் புகட்டிவருகின்ற ஆனந்தன் ஆங்காங்குப்போய் அனேக விஷயங்களை அனேகருக்கு ஊட்டி அவர்களைத் தீய வழியில் நின்று நீக்கியும் நல்வழியிற் செலுத்தியும் வருகின்றுனென்பதை யுணர்ந்து என் சிற்றறிவுக் கெட்டிய வரையில் எழுதப்போகிற இவ்விஷயத்தையும் அவன் தமிழ் நாடெங்குஞ்சென்று நந்தமிழ் மாதாவின் புத்திர புத்திரிகளுக்கு ஊட்டி அவர்களை நன்னெறியிலே நாட்டி வைப்பா னென்று உணர்ந்து இதை வரையலானேன்.

நம் நாட்டுத் தமிழ் மாதருக்கு ஆங்கிலேயக்கல்வி அவசியமா வென்று ஆராயுமுன்னர், நம் சகோதரர்களுக்கு இது எதுவரையில் பிரயோசனப் படுகின்ற தென்பதைப்பற்றிச் சற்றே ஆராய்வாம்: எங்கள் நாடடு ஆடவர்களில் அனேகர் உயர்ந்த கல்விகற்று உயர்ந்த பட்டம்பெற்று இருக்கிறார்கள். அவர்கள் நோக்கம் முழுதும் உயர்ந்த உத்தியோகம் பண்ணவும்

தகுந்த சம்பளம் பெறவுமே. இதுவல்லாமல் இக்கல்வி யேற்றத்தின் அறிவுடைமையால் அவர்கள் தேகாரோக்கியத்தைத் தேடிக்கொள்ளவுமில்லை, தேசாசாரங்களைத் தெளிந்து கொள்ளவுமில்லை, நல் நடத்தைகளை நாடிக் கொள்ளவுமில்லை. இன்னும் இவர்கள் இக்கல்வி யேற்றத்தினால் அவசியமில்லா ஆசாரங்களைக் கையாண்டு கொண்டு தங்கள் வாணாட்களை வீணாட்களாக்குகின்றனர். இம்மட்டோ, விலைமாதருடன் குலமாதரைச் சேர்ந்து கும்மி யடிக்கச் சொன்னால் அப்படிச் செய்யக் குலமாதர் எவ்வளவு நாணுவார்களோ அவ்வளவு நாணும் வண்ணம் அருமையான எங்கள் தாய்ப் பாஷையாகிய தமிழுடன் சிற்சில சமயங்களில் ஆங்கிலத்தைக் கலந்து தேன்போன்ற தமிழை அலங்கோலப்படுத்தி விடுகிறார்கள்.

ஆடவர்கள் ஆங்கிலங்கற்றதினால் இவ்வளவு அலங்கோலங்கள் நம் தேசத்திலேற்பட்டிருக்கப் பெண்கள் கற்கவேண்டுமென்று ஆங்காங்கு ஆங்கிலேய வித்தியா சாலைகளுக்கு அவர்களை அனுப்புகிறதைப் பார்த்தால் ஒரு பக்கத்தில் வெட்கமும் மறு பக்கத்தில் துக்கமுமாயிருக்கிறது. தந்தைமார்களே! தாய் மார்களே! உங்கள் பெண் குழந்தைகளை என்னத்திற்காக ஆங்கிலேயங்கற்க அனுப்புகிறீர்கள்? அவர்கள் உத்தியோகம் பண்ணப் போகிறார்களா? அப்படித் தான் உத்தியோகம் பண்ணினாலும் விவாகஞ் செய்யாமலிருக்கப் போகிறார்களா? விவாகஞ் செய்துவிட்டால் இவ்வுத்தியோகம் எங்கே போய் விடும்? விவாகஞ் செய்யு முன்னமே கொஞ்சச் சம்பாத்தியமிருக்கட்டுமென்று உங்கள் மனதிற்படுமானால் நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்று சொல்லப்படும் இந்நான்கு விசேஷ குணங்களும் எப்படி கடன மாதரிடமில்லையோ அப்படியே இவர்களிடமுமிருக்கமாட்டா தென்றறிந்து இவர்களை ஒருவரும் விவாவகஞ் செய்ய உடன்படார்களே. அப்போது இவர்கள் வெள்ளையர்களி லொருவரைத்தான் மணக்கப் போகிறார்களோ? அவர்களும் தன் சாதியை விட்டு வேறோர் சாதியிலே விவாகஞ் செய்யாதவர்களாச்சே. அம்மம்ம! இவர்கள் கதியென்னவாகும்?

இல்லாவிட்டால் தமிழ் மாதிடம்பிறந்து ஆங்கிலேய மாதிடம் வளர்ந்த ஒருவருக்கு விவாகஞ்செய்து கொடுக்கிற நோக்கமா? அப்படியிருந்தாலும் அவரிடந் தமிழ் மாதின் குணம் பாஷையெல்லாம் இயற்கையாயிருக்குமே. ஆகையால் அவர்களுக்கு ஆங்கிலேயங்கற்ற மாதர்தான் வேண்டுமென்று அவசியமில்லையே.

பிறதேசங்களிலே போய் உத்தியோகம் பண்ணும் தங்கள் நாயகர் எழுதும் காகிதங்களை வாசித்தறிய ஆங்கிலேயககல்வி அவசியமென்று சிலர் வாதாடுகின்றனர். அப்படி ஆங்கிலத்திலெழுதும் தமிழ் வீரவான் தமிழிலே வரைந்தனுப்பலாமே, தன் சொந்தப்பாஷையிலிருக்கும் பிழைகளைத் தன்மனைவி கண்டுபிடித்து விடுவாளென்ற நோக்கமா. அல்லது தன் ஆங்கிலேயத் திறமையைத் தன்னில்லாளிடம் காட்டவேண்டுமென்ற ஏக்கமா? எல்லாம் கருணைக் கடலாகிய இறைவனுக்கே அற்பிதம்.

ஆங்கிலேயங்கற்றால் பெண்கள் தேகாரோக்கியத்திற்கு வேண்டிய விதிகளையும் காலத்திற் கேற்ப உணவுப் பொருட்களைப் பாகம் பண்ண வேண்டிய முறைகளையும் அறிந்து காலத்திற்கேற்ற விதமாகத் தங்கள்நாயகரையும் குழந்தைகளையுங் காப்பாற்றுவார்களென்று சிலர் சொல்லுகிறார்கள். இவ்வாறு கூறும் புத்திமான்கள் தங்கள் தாய்ப்பாஷையிலிவைகளைப்

பற்றிக் கூறும் சாஸ்திரங்களனேக மிருக்கின்றனவென்று அறியவில்லைப் போலும். அப்படிச் சாஸ்திரக்கட்டுகளை ஆராய்ச்சி செய்ய நேரங்கிடையா விட்டாலும் ஆனந்தனின் பக்கங்களில் ஆங்காங்கு இவைகளைக் குறிக்கும் விஷயங்களை வாசித்தறிந்தாலும் போதுமே.

வீட்டைச் சுத்தமாக வைத்திருக்க வேண்டிய முறைகளையும், உணவுப் பொருட்களைப் பாகப்படுத்த வேண்டிய முறைகளையும், இன்னும் மற்றும் இல்லறத்திற்கு வேண்டிய முறைகளையுங் கூறும் சாஸ்திரக்கட்டுகள் அனேகம் எங்கள் தாய்ப்பாஷையி லிருக்கின்றனவே. அவைகளை அனேகர் படித்தறியாமற் பரதவித்து ஆங்கிலேயத்தில்தான் ஆறுதலைக் கொடுக்கும் விதிகளையும் முறைகளையுங் கூறும் சாஸ்திரங்கள் அனேக மிருக்கின்றன வென்று ஏமாந்து தங்கள் பெண்மணிகளை மண்மணிகளாக்குகின்றனர்.

இன்னும் அனேக சீர்திருத்தங்களையும் அதிக தேர்ச்சியையும் ஆங்கிலக்கல்வியினால் பெண்கள் அடைந்து விடுகிறார்க ளென்று அனேகர் பறை முழக்குகிறதை யான் கேள்விப்பட் டிருக்கிறேன். உலகிலே ஒருவர் ஒழுக வேண்டிய முறைகள் நாயனாரால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட திருக்குறளிலும் பார்க்க எந்தப்பண்பிலே எந்த நூலிலே விசேஷமாகக் கூறப்பட் டிருக்கிறது? நஞ்சகோதரிகள் என் ஆங்கிலேயத்தி லமிழ்ந்திக்கிடக்கும் நேரத்தை இவ்வகையான தமிழ்நூல்களிலே செலவழிக்கக்கூடாது? அதிக கிரயங்கொடுத்து என் அவசியமில்லாப் பஷையைக் கற்றுக்கொள்ள வேண்டும்? என் அன்னிய ஆசாரங்களைப் பெற்றுக் கொள்ள வேண்டும்? நாயனார் நூலே இல்லறத்திற்கு வேண்டிய முறைகளையும் ஒழுங்குகளையுங் கூறுவதல்லாமல் எங்கள் ஆன்மா கடைத்தேறக்கூடிய வழியையுங் காட்டி வைக்கிறது. அது தமிழ் வேதமல்லவோ!

சிலர் ஆங்கிலேய பாஷை உலகெங்கும் தெரிந்த ஓர் பஷையானபடியால் எல்லாரும் அந்தப்பாஷையை அவசியம் கற்றிருக்க வேண்டு மென்று ஆர்ப்பரிக்கிறார்கள். அவர்கள் அப்படிக் கூறுமுன்னர் தங்கள் பெண்கள் இன்றைக்கு முன்னராவது, அல்லது இப்போதாவது ஆடவரில்லாமல் வெளியேறின துண்டாவென்று சற்றே யோசிக்கட்டும். இதுவரையிலாவது அல்லது இனிமேலாவது அவர் தனிமையாகப் பிரயாணம் பண்ணவு மில்லை, பிரயாணம் பண்ணப் போகிறதுமில்லை. ஆகையால் அவர்களுக்கு ஆங்கிலேய பாஷை என்?

தமிழ்க்கல்வியிலேயும் பெண்களுக்கு வேண்டியவைகளையே அவசியமாகக் கற்பிக்கவேண்டும். அவசியமில்லா உயர்ந்த நூல்களைக் கற்கவைத்தால் சிற்சில வேளைகளில் கெடுதலாயும் முடியும். ஏனென்றால் பெண்களோ மனத்திண்மை குறைந்தவர்கள். அவர்கள் தாங்கள் அதிகங்கற்றுக் கொண்டோமென்ற செருக்கினால் பிரசங்கஞ்செய்ய வெளிக்கிளம்பினால் சீக்கிரத்திலே கெட்டுப்போவார்கள்.

ஆங்கிலேயக் கல்வியில் உயர்ந்த பரீட்சை கொடுத்து அறிந்துகெட்ட பெண்கள் சிலரும் அறியாமற் கெட்டவர்கள் அனேகரும் இருக்கிறார்கள். ஆனால் நஞ்சகோதரிகளுக்கு என் தமிழ்க்கல்வியினால் மோசமுண்டாகாதென்றால், தமிழ்க்கல்வியேற ஏற அறிவுமேறிக்கொண்டேவரும். துன்மார்க்கம் விலகிச் சன்மார்க்கம் நெருங்கும். பதிவிரதாத்தன்மை அதிகரிக்கும்.

ஏனெனில் தமிழ்நூல்களில் ஆன்மார்த்தம், கற்பு, தெய்வவழிபாடு இவை கூறப்பட்டிருக்கின்றன.

முற்காலத்திலே ஆங்கிலேயங்கல்லாத பெண்களில் எத்தனையோபேர் சிறந்த கற்பரசிகளா யிருந்திருக்கிறார்கள். அவர்களுக்கு யார்தான் தற்காலத்திலே நிகரானவர்களுளர். முற்காலத்திலே சீர்திருத்த மில்லையே யென்று சிலர் கூறுவார்கள். இவர்கள் சமீபகாலத்தையே முற்கால மென்பார்கள். அனேகவருஷங்களுக்கு முன்னே இருந்த திருத்தங்களெல்லாம் சமீபத்தில் கொஞ்சகாலத்தில் கெட்டிருந்தன. அக்காலத்தையே அனேகர் குறித்து, தாங்களிப்போது அனேக சீர்திருத்தங்களை அடைந்திருக்கிறோமென்று மெச்சிக் கொள்ளுகிறார்கள். முற்காலத்திலே விசேஷ சீர்திருத்தங்களும் நாகரீகங்களும் நமது பரதகண்டத்திலே யிருந்திராவிட்டால், நாயனார் தங்கள் நூலிலே இவ்வளவு சீர்திருந்திய முறைகளையும் படிப்பினைகளையுங் கூறியிருக்கமாட்டார். அந்நாகரீகம் ஒருவகையாலும் தற்காலத்திலுங் குறையவில்லை.

இருவகையான நாகரீகம் தற்காலம் பெண்களுக்குள் நிகழ்கின்றது. ஒரு சாரார் தங்கள் நாயகர் காலையிலே நித்திரை விட்டெழுந்து வேலைக்காரரிடம் காப்பியாவது, தேநீராவது வாங்கிப் பானம்பண்ணிவிட்டுத் தங்கள் உத்தியோகத்திற்குப் போனபின்பின் நித்திரை விட்டெழுபவர். இவர்கள் நித்திரை விட்டெழுந்தவுடன் ஸ்நானம் செய்யமாட்டார்கள். ஏதோ தங்கள் கால்முகத்தை கை நோகாமல் துடைத்துவிட்டுக் காலைப்போசனத்திற்காவது, மற்றும் நேரப்போசனத்திற்காவது வேலைக்காரரைப் பார்த்திருப்பார்கள். மற்றவர், தங்கள் நாயகர் நித்திரை விட்டெழுமுன், நித்திரை விட்டெழுந்து வீட்டுக்கருமங்கள் யாவையும் சூரியோதயத்திற்கு முன் முடித்து சலசுகரையை யடைந்து ஸ்நானஞ் செய்து, தங்கொழுநருக்கு வேண்டிய கடமைகளைச்செய்து அவரவர் முயற்சிக் கனுப்புவர். எது விசேஷமான நாகரீகமென்று நீங்களே யோசித்துப்பாருங்கள்.

ஆகையால் சகோதரிகளே! "தமிழ்க்கல்வி நாகரீகத்திற்கு வழிகாட்டாது. வீட்டுக் காரியங்களைப் பார்க்கும் முறைகளைக் கூறாது. ஆகையால் நாங்கள் ஆங்கிலேயர்தான் கற்கவேண்டும்" என்ற எண்ணத்தைவிட்டு விடுங்கள். உங்களுக்குத் தேவையான வரையிற் கற்கத் தமிழ்மாது இடங்கொடுப்பாள். ஆகையால் தமிழ்மாது மகிழ அவளை நாமெல்லாம் ஆதரிக்க வேண்டுமாய்க் கருணைக்கடலாகிய சிவபெருமானைப் பிரார்த்திக்கிறேன்.

மகேஸ்பரி,
தமிழ் நாடு, லங்கா.

---

## இருதயவியாதி அல்லது பித்தவாய்வு

இந்த வியாதியைச் சாதாரணமாய் மேல் நாட்டார் Heart Disease. (இருதய வியாதி) என்றும் கீழ்நாட்டார் பித்தவாய்வு என்றும் சொல்லுகின்றார்கள். இந்த வியாதியானது (Bile என்னும் Hydrochloric acid) பித்தநீரும் காற்றும் ஒன்றுசேர்ந்து இருதயத்தில் இரத்தத்தின் பகுதியைக் குறைத்தும் இரத்தத்துடன்கலந்தும் வியாபிக்கும் பட்சத்தில் உண்டாவது. அப்போது மார்வலியும் அல்லது குத்தல், எரிச்சல், மார் அடைப்பு இத்த

கைய வியாதிகளில் ஏதாவதொன்று காணும். இவற்றுள் சிலர்க்கு விட்டு விட்டு மார் இலேசாய்குத்தல் அல்லது வலியுண்டாகும். சிலசமயங்களில் ஜீரணப்பையில் கோளாறு ஏற்பட்டாலும் வலியுண்டானாலும் அதனாலும் மார் வலிப்பதுபோல் தோன்றும். ஆனால் அதைப்பித்தவாய்வு என்று சொல்லக் கூடாது; அதைப் பித்த குன்மம், அல்லது பித்த அஜீரணம் என்று சொல்லுவார்கள். இத்தகைய வியாதிகளுக்கு மேல்நாட்டார் சாதாரணமாய்ச் சிகிச்சைசெய்தும் குணப்படுத்திக்கொண்டும் வந்தாலும் அவ்வியாதிக்குத் தகுந்த ஔடதம் ஒன்றும் இதுவரையிலும் கீழ்க்கண்ட ஔடதங்களைத் தவிர மேலானதும் கட்டாயமாய்க்குணம் செய்யக்கூடியதும் மேற்படி வியாதியை நிவர்த்திக்கக் கூடியதும் கண்டு பிடிக்கப்பட்டதாய்த் தெரியவில்லை. ஆனால் தற்சமயம் மேல்நாட்டார் செய்யும் சிகிச்சைகளில் இருதயவியாதி என்னும் பித்தவாய்வுக்கு (Tincture Digitalis) டிஞ்சர்டிஜிடலிஸ், டிஞ்சர் ஸ்டிக்கனைன், எக்ஸ்டிராக்ட் காக்டி என்னும் ஔடதங்களையே வெகுவாய் உபயோகப் படுத்தி வருவதாய்த் தெரிகின்றது. கீழ்நாட்டார்களில் அநேகர்களுக்குப் பித்தவாய்வு என்னும் வியாதியையே மேல் நாட்டார் இருதய வியாதி என்றும் கொடுமையான வியாதி என்றும் சொல்லுகிறார்கள் என்று தெரியாமலிருப்பதால், இருதயவியாதி என்பது என்னமோ ஒருவியாதியென்று மதிக்கின்றார்கள். ஆனாலும் பித்தவாய்வு என்று சொல்லவும் அதற்கு ஔடதம் கொடுக்கவும் அநேகர்களைச் சொஸ்தப்படுத்தவும் செய்கிறார்கள். அவற்றுள் பலர் விரோசனம் கொடுத்து சொஸ்தப் படுத்துவார்கள் சிலர் விரோசனமில்லாமல் லேக்கியங்களினாலும் கியாழங்களினாலும் சொஸ்தம் செய்கின்றார்கள். அவற்றுள் விரோசனத்தினால் குணம் செய்யும் சிகிச்சை அபாயகரமானதும் உபயோக மற்றதும் என்று கருதவேண்டும். இருதயத்தின் கண்ணுள்ள பித்தத்தையும் காற்றையும் அவ்விடம்விட்டு நிவர்த்தி செய்யப் பித்தத்தை மாற்றும் விஷத்தை இரத்தத்தில கலக்கும்படி செய்யக்கூடியதும் இரத்தத்தின் மத்தியில் காற்றை நிற்கவொட்டாமல் நிவர்த்தி செய்யக்கூடியதுமான விஷசம்பந்தமான ஔடதத்தை உபயோகிக்கவேண்டும். அத்தகைய விஷத்தையுடைய ஔடதங்களாகிய, வில்வாதிலேக்கியம், பறங்கிச் சக்கைலேக்கியம், திப்பிலிலேக்கியம், நெல்லிக்கனி லேக்கியம், மிளகுலேக்கியம், முதலாகிய லேக்கியங்களினாலும் அல்லது கியாழங்களினாலும் சொஸ்தம் செய்வது உத்தமமென்று அப்படியேஅநேகர்செய்து வருகின்றார்கள. யூனானி சிகிச்சைகளில், முத்து, காருபா, யஷாம், பாவுசார், பெம்பு, தங்கம் இன்னும் சிலவித்துகளும் சேர்த்து ஷர்பத்துகளால் அரைத்துக் கிருதபதம்செய்து உபயோகப்படுத்திக்கொண்டு வருகின்றார்கள். இத்தகைய சிகிச்சைகளில் மேல்நாட்டார் செய்யும் சிகிச்சையைவிடக் கீழ்நாட்டுச் சிகிச்சைகளே மேலானவையென மதிக்கவேண்டும். ஆனால் மேல்நாட்டார் சொல்லும் தோஷங்களில் முக்கியமாய் (Heart) இருதய வியாதியைக் கண்டுபிடிக்கும் திறமை கீழ்நாட்டுவைத்தியர்களுககு இல்லை எனறும் அதற்குச் சிகிச்சை செய்யவும் அவர்களுக்குத் தெரியாதென்றும் சொல்லுகினறார்கள்.

(இன்னும் வரும்)

டாக்டர் மே. மாசிலாமணி முதலியார்.

---

## இல்லறம்—கன்மம்.

(223-ம் பக்கத் தொடர்ச்சி)

இதுகாறும் கூறியவதனால் எல்லாம் கன்மத்தான் முடியுமெனவே முடிகின்றது. எல்லாங் கன்மத்தால் முடியுமானால் தெய்வத்தால் யாது பயன்? என்பது ஓர் பெருங்கேள்வி. இதன் கருத்துயாதெனில், கன்மத்தால் எல்லாமாகும் என்பது ஒருவாறு பொருந்தும். யாங்ஙனமெனில் நீர், தீ முதலிய பொருள்களுக்குத் தண்மையும் வெப்பமும் இயற்கைக் குணமாம். இப்படியே ஒவ்வொரு பொருளினிடத்திலும் சில இயற்கைக்குணமுண்டு. அவ்வவற்றை யுபயோகிப்பதினால் அவை தத்தம்பயனை அளித்தே தீரும். அறிவுள்ளார், அறிவில்லார் என்கிறபேதம் கருதாது யாவரிடத்தும் ஒரேபயனை யளிக்கும். எங்ஙனமெனில் தீயைத்தொட்டால் அது அறிவுள்ளவனையும் சுடும். அறிவில்லாதவனையும் சுடும். நீருமப்படியே யாவருக்குந் தன் குளிர்ச்சியாகிய பயனையளிக்கும். அவை இப்பயன்களை யளிப்பது அவற்றுக்கு இயல்பாயமைந்த சக்தி. ஆதலால் அதற்கென வேறு ஒரு அறிஞனைத் தேடவேண்டுவ தில்லை. தீயையும் நீரையும்போலக் கன்மத்துக்கும் அகக்கரண புறக் கரணங்களைச் சுத்தியாக்கி ஞானத்தை விளக்கும் சக்தி இயல்பா யமைந்திருக்க அதன் பயனைத் தருவதற்குக் கடவுள் என்ற வேறொரு அறிஞனை அவாவுவதேன்? எனெனில் ஒரு அறிஞனது கட்டளையும் உதவியுமில்லாமலே அக்கினி சுடுதலும் நீர் குளிர்ந்திருப்பதும் இயற்கையிற் காணப்படுகின்றது. அதுபோலக் கன்மத்திற்கும் பலனை யளிக்கும் சக்தியியற்கையில் அமைந்திருத்தலாமென்க. உலகத்திலிருக்கும் பொருள்களெல்லாம் தம்மியல்பில் அமைந்த பயனைத் தாமே கொடுப்பது பிரத்தியட்சமாதலால், மீமாஞ்சகர் கருத்துப்போலக் கன்மம் ஒன்றேபோதுமென்று கொள்ளலாம். அல்லது சில வேதாந்திகள் கூறுவதுபோலக் கடவுள் ஒன்றே போதுமெனக் கொள்ளலாம். இரண்டையும் தழுவுதல் அநாவசியமாம் என்பது.

காலமிடம் பொருள்களைப் பற்றிக் கன்மம் பலவுருவமா மென்று முன்னர்க்கூறினும். பலவுருவம் பெற்றகன்மம் ஒன்று கூடியே பயனளிக்கின்றது. அக்கன்மம் அசேதனம். அசேதனமான எந்தப்பொருளும் ஒரு வறிஞனது பிரேரணையாலன்றித் தன்பயனைக் கொடுப்பதில்லை. அரிசி முதலிய தானியங்களுக்குப் பசியைத்தணித்துச் சரீரத்தை வளர்த்து வரும் சத்தியியல்பி லமைந்ததே. ஆயினும் அது கடையிலிருந்து கொண்டேயாவது, வீட்டில் பானையிலிருந்து கொண்டாவது பயனளிப்பதில்லை. அறிவுள்ளவனாகிய ஒருவனானவன் அதைப்பாகம்பண்ணி உட்கொண்டாலன்றித் தன் பலனாகிய பசிதீர்த்தலை யது செய்வதில்லை. பேரீந்து பித்தத்தை ஒழிக்கும் சக்தியுடையதே யாயினும் அது மாத்தி விருந்துகொண்டாவது கடையி லிருந்து கொண்டாவது தன் பலனைத் தருவதில்லை. அறிவுள்ள ஒருவன் அதன்குணத்தையறிந்து கூறக்கேட்டு அதைஉண்டவனுக்கே அது தன்பயனைதரும். இவை பிரத்தியட்சமாம். அதுபோலக் கன்மமும் அசேதனமாம் (சடம்) ஆதலால் அது தன் பயனைத்தரும் ஆற்றலுடையதல்ல. மற்றொரு அறிஞனை அவாவியேநிற்கும். ஆதலால் கன்மங்களெல்லாம் பொதுவிலாவது நேரிலாவது பரம்பரையில் ஆன்மா, மனம், சரீரம் இவற்றைச் சுத்தியாக்கும் சக்தியே யியற்கையிற் பெற்றுள்ளன. அச்சுத்தி மனத்தின்

வழியாய் ஆன்மாவைப்பற்றும். ஆன்மாவோ அணுரூபமாயுள்ளது. அவ்வணு மனதோடு கூடினால் அசையுந் தன்மையுள்ளது. மனம் இயற்கையிலே அசையுந்தன்மை யுள்ளது. ஆன்மாவின் உபாதியான மனம் அசைவற்று நின்றாலே ஆன்மாவின் அசைவு ஒழிந்து நிலையாய் நிற்கும். அவ்வசைவு கருணாமூர்த்தியாகிய கடவுளுதவியாலன்றி மற்றெவராலும் ஒழியாது. அசையும் சக்தியுள்ளவற்றை நிறுத்தும் சக்தி கடவுளுக்கே யுரியது. கடவுளுக்கு இச்சை கிரியை ஞானம் என மூவகைச் சக்திகளுண்டு. இவற்றை முறையே அசைத்தல் இழுத்தல் நிறுத்தல் என்பார் மேலோர். ஞானசக்தியே நிறுத்தும் சக்தியாம். அந்தஞானமே கடவுளின் சொரூபமும். இதனாலேயே கடவுளை இச்சாஞான கிரியாசொரூப னென்று நூல்கள் கூறுகின்றன; கன்மங்கள் மனத்தை ஒடுக்கி மனத்தை நிறுத்துந்தன்மை யுடையன. பலன் தரும் ஆற்றலற்றன. இவ்வாறு ஒடுங்கின்ற மனதில் கடவுளின் சொரூபமாகிய ஞானம் நிலைபெறும். அந்தஞானம் ஆன்மாவில் பிரகாசிக்கும். அப்போது மனம் ஆன்மாவிலொடுங்க ஆன்மா பரம்பொருளில் ஒடுங்கும். நிறுத்தும் சக்தியாகிய ஞானத்தில் ஒடுங்கிய ஆன்மா அசைவற்று ஒரேநிலையாய் நிற்கும். அதுவே மோட்ச மென்னப்படுவது. ஆன்மா மனங்களை அசைவற நிறுத்திய கன்மம் நசிக்கும். எதுபோல வெனிற் பசி, நோய்களை நீக்கிய பொருள்கள் தாம் நசித்துப்போவது போலவாம். தன் தொழிலைச் செய்தபின் நசித்துப்போகும் தன்மையுள்ளது மோட்சத்தைப் பயவாது. நசித்துப்போன அரிசி முதலியவற்றின் பயன் சரீரத்தில் நின்று இன்பந் தருவதுபோல கன்மத்தாலாய பயனாகிய ஞானமே மோட்ச இன்பத்தைத் தரும். அந்த ஞானமே பரமான்மாவின் சொரூபமாதலால் பரமான்மாவே மோட்சமளிப்பதாம். ஆதலால் கன்மத்தால் ஞானத்தைப் பெற்று, ஞானத்தாற் பரமான்மாவைத் தரிசித்தலால் வரும்பயனே மோட்சமெனப் படுதலால் பரமான்மாவே மோட்சமளிக்கு மாற்றலுடையவனும். கன்மமோ துணைக்காரணமாய் நிற்கும். அதுபற்றிக்கன்மமும் கடவுளும் மோட்ச காரணப் பொருள்களாம். நிமித்தகாரணமும், துணைக்காரணமு மின்றிக் காரியசித்தி பெறுவது கூடாதாதலால் கன்மத்தையும் கடவுளையும் அனுஷ்டித்தே தீரவேண்டு மென்பது கற்றுணர்ந்த பெரியோர்களின் துணிபாமென்க. இதுபற்றியே "கடவுள் நற்கிரியைகளைச் செய்விப்பான், அவனே தீத்தொழில்களைச் செய்விப்பான், அவனே மேலான பதவியைச் சீவர்களுக்கருளுவான். இவனே ஜீவர்களை யிழிந்த பதவிகளில் விழுத்துவான்" என்று வேதம் கூறுகின்றது. இங்ஙனமாயின் தீயதொழில்களைச் செய்வித்துச் சீவவர்க்கங்களை நரகத்தில் தள்ளித் துன்புறுத்துங் கடவுள் கருணையற்றவனாவான் எனில் கூறுதும்.

கடவுள் எல்லாவற்றிற்கும் சாட்சியாய் நிற்பவர். காந்தம் இரும்பை அசைவிப்பதுபோலப் பிரபஞ்சத்தை யிருந்தவிடத்தி லிருந்தே நடத்துவார். காந்தம் இரும்பை அசைக்கும்போது அவ்விரும்பு வடபுறமோ தென்புறமோ எப்புறம் அசையுமென்று சொல்ல முடியாது. அவ் விரும்புத் துண்டுகளுக்கு ஏற்றவாறு அசையும். அவ்விரும்பு காந்தத்தைவிடச் சிறியதும் சிறிய மூலையு முள்ளதாயின் காந்தத்தை நோக்கியே யசையும். அஃது சதுரமாயின் எப்புறங்கிட்டியதோ, அப்புறமாக அசையும். காந்தத்தைவிட அதிக பருமனாயிருந்தால் இரும்பு அசையாது. இப்படியேகடவுளும் ஜீவான்மாவுமாம். அநேக ஜன்மங்களிற் செய்த புண்ணிய பலத்தால் சுத்தியாயுள்ள

ஆன்மாவைக் கடவுள் தன்னை நோக்கிவர இழுப்பார். கன்மவாசனை ஒழிந்தும் ஒழியாமலு முள்ள ஜீவான்மாவைக் காந்தம் சதூரமான இரும்பை ஓர் புற மிழுப்பதும் ஒருபுறம் விடுவதும்போல இயக்குவார். அதாவது சொர்க்க நாகங்களில் விடுவார். முற்றும் பந்தமொழிந்த ஆன்மாவைத் தாமேதம் மிடம்சேர்த்துக் கொள்வார். பருமனுன இரும்பை இழுக்காததுபோல மல நிறைந்த ஆன்மாவை ஒதுக்கிவிடுவார். காந்தம் இரும்பை எப்படிப் பிரேரிபிக்கின்றதோ அதுபோலக் கடவுளும் ஆன்மாவைப் பிரேரிப்பார் என்று சொன்னவேண்டும். அதுவேயன்றி, கடவுள் ஒருவரைப் பிரியத்தினுல் சொர்க்க மோட்சங்களில் வைப்பதும் அப்பிரியத்தினுல் ஒருவரை நாகத்தில் தள்ளுவதும் இல்லை யென்பது திண்ணம். கடவுள் எவ்வகையிலும் குற்றப் படமாட்டார். கடவுள் கன்மப்பலனை யளிப்பார் என்பதும் அக்கன்மப் பயன்களை யனுபவிக்கத்தக்க சரீரத்தைக் கொடுப்பாரென்பது முண்மையாம். கன்மப்பயனுக்கேற்ற சரீரத்தைக் கொடுப்பது கடவுளிடத் தமைந்த சக்தியாதலால் கடவுளின்றி எதுவும் சித்தியாகாதென்க.

ஆனுல் கன்மத்தைத் தவிரக் கடவுளுக்குப் பிரியத்தை யுண்டாக்கத் தக்கது மற்றொன்றும் கிடையாதோ வென்று ஓர் கேள்விகேட்பார் சில்லோர்; இதன் கருத்து என்னவென்றுல், கன்மத்தைத் தவிர வேறொன்றுண்டாயின் அது கொண்டே முததியடையலாமே. கஷ்டமான கன்மத்தை அனுஷ்டித்து ஏன்வருந்தவேண்டு மென்பது.

கன்மம் என்பதைத் தொடங்கும்போதே, கன்மங்களெல்லாம் மலரூபமாய்ச் சரீரத்தைப்பற்றி நிற்குமென்றும், அது ஒழிந்தாலன்றி யானமா சுத்திபெறு தென்றும் கூறினேம். அக்கன்மபலத்தை ஒழிப்பதற்கு கன்மஞ் செய்வது இன்றி யமையாததென்று கூறினேம். சாயுஜ்யபதவியை யடைந்தவனுக்குக் கன்மம் விட்டொழிக்கத் தக்கது. மற்றவனுக்கு முடியாது. ஏனெனில் கன்மஞ்செய்யாதவன் ஒருவனுமில்லை. அது பாபமாகவாவது புண்ணிய மாகவாவதுதா னிருக்கும். கனமத்தைக் கன்மத்தாற் போக்க வேண்டுமேயன்றி வேறெதனுலு மாகாது. ஆதலால் எல்லாரும் சற்கருமத்தை அனுஷ்டித்தே தீரவேணடும். (தொடரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்

(229-ம் பக்கத் தொடர்ச்சி)

(பகவான் தாம் அகர்த்தாவே யென்பதை யறிவிக்கிறுர்.)

ஏ பார்த்தா! நானே மாயையால் (சத்துவாதி குணங்களின் பேதத்தாலும், சமதமாதி கருமங்களின் பேதத்தாலும் பிராம்மணுதி நான்கு வருண பேதமாக) சிருஷ்டித்தேன். நானே இரட்சிப்பேன். அவ்வாறு நான் செய்யினும் மயக்கததிற் கேதுவான கர்மபலன்களில் இச்சைவையேன் ஆதலால் அக்கர்மங்கள் எனக்கு அன்னியமாகவே யிருக்கும். என்னேடு சம்பந்தியா. இவ்வாருக என்னை யறிபவரும் என்போலவே கர்மத்தினின்றும் விடுபடுவார்கள்.

இவ்வாறு ஆன்மாவை அகர்த்தா அபோக்தாவாக அறிந்து கர்மபலத்தில் இச்சைவையாது கர்மத்தைச் செய்தி.

(சத்துவாதி குணங்களின் பேதத்தாலும் சமதமாதி கருமங்களின் பேதத்தாலும் ஜாதிபேதம் ஏற்பட்டது என்று பகவான் அருளியது கவனித்துணரத்தக்கது) சத்துவகுணப் பிரதானமாக வுடையவர்கள் பிராம்மணர்கள். சத்துவ குணத்தை அப்பிரதானமாகவும் இரஜோகுணத்தைப் பிரதானமாகவும் உடையோர் க்ஷத்திரியர்கள். தமோகுணத்தை அப்பிரதானமாகவும் இரஜோகுணத்தைப் பிரதானமாகவும் உடையோர் வைசியர். தமோகுணத்தையே பிரதானமாக வுடையோர் சூத்திரர்கள்.

பிராம்மணர்களுக்கு சமதமாதி கர்மங்களும், க்ஷத்திரியர்க்கு வீரம் பொருந்திய தருமயுத்தம் செய்தலும் பிரஜா பரிபாலனமுமாகிய கர்மங்களும், வைசியர்க்கு கிருஷி வாணிபம் முதலிய கர்மங்களும், சூத்திரர்க்கு மற்ற மூவருணத்தவர்க்கும் ஊழியம் செய்வதாகிய கர்மமும் விதிக்கப்பட்டன.

(பகவான் க்ர்மம் அகர்மம் என்றவற்றைப் பற்றிக் கூறுகிறார்.)

ஏ பார்த்த! கடந்த யுகங்களில் எல்லாமுணர்ந்த முமூட்சுக்களான ஜனகனுதியோர் பலேச்சையின்றிச் செய்யும் கர்மங்கள் பந்தத்தை யுண்டாக்கமாட்டா வென்பதை யறிந்து வருணுச்சிரம கர்மங்களை யநுஷ்டித்தார்கள். நீயும் அவ்வழியில் ஒழுகுவாய். கர்மம் எது, அகர்மம் எது என்பதன் உண்மையை யறிவதில் கற்றுணர்ந்த வித்வான்களும் மயக்கமடைகிறார்கள். சில அறிஞர் சாத்திரங்களில் செய்ய வேண்டுமென்று விதித்தது கர்மமென்றும், செய்யத்தகாத தென்று விலக்கப்பட்டது அகர்மம் என்றும் கூறுகின்றனர். அவற்றின் உண்லமயான சொரூபம் இன்னதென்று அறிவது அருமை. அவற்றின் செயலை யியம்பக் கேட்பாயாக.

ஆற்றில் ஓடத்திற் செல்லும் ஒருபுருடன் கரையில் நிற்கும் மரங்கள் ஓடுவதைப்போல் காண்கிறான். கரையில் இருக்கும் விருக்ஷங்கள் எப்போதும் ஓடாமல் நிலைத்தே நிற்பவையென் றுணர்ந்த அறிவாளி நாமே ஓடத்திலோடுகிறோம் என்று உணர்கிறான்:

உண்மையில் தேகம் இந்திரியம் புத்தி யிவற்றின் வியாபாரமே கருமமாம். அது தேகேந்திரியாதிக ளிடத்திலேயே யுண்மையில் உளதாம். விசாரணையில்லாதவன், அதை 'நான் செய்கிறேன்' என்று ஆன்மாவின் கண் ஆரோபணம் செய்கிறான். இவனே ஓடத்தில் தான் ஓடும்போது கரையிலுள்ள மரம் ஓடுவதாகக் காண்பவன். தேகேந்திரியாதிகளிடமே கருமம் இருப்பினும் 'நான் சும்மாவிருக்கிறேன், ஒரு கருமமும் செய்யவில்லை' என்ற அத்தியாசத்தால் கர்ம மில்லாததுபோல தோற்றுகிறது.

இவ்வாறு கருமமுடையதாய்த் தோற்றும் ஆன்மாவினிடம் அகர்மத்தையும், அகர்ம முடையனவாய்த் தோற்றும் தேகேந்திரியாதிகளிடம் கர்மத்தையும், அதாவது கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பவனே மனிதரில் அறிவாளியும், யோகத்தோடு கூடியவனும் கிருதகிருத்தியனுமாவான்.

சாத்திரத்தில் விதித்துள்ளவை கருமமாம்; நிஷேதித்துள்ளவை விகருமமாம்; எவ்வித வியாபாரமுமின்றிச் சும்மாவிருத்தல் அகருமமாம்; இவற்றின் உண்மையை நீ யறிய வேண்டும்.

ஆன்மா கர்த்தா போக்தாவன்று, கருமம் தேகேந்திரியாதிகளைப் பற்றியதே யென்றுணர்ந்து கர்மபலனில் இச்சைவையாது கருமத்தை யியற்றின் பந்தமுண்டாகாது. அவனே கர்மத்தில் அகர்மத்தைக் காண்கிறவனாகும். கர்த்திருத்வ அபிமான மற்றவிடத்துத்தான் கர்மம் பந்தத்தை யுண்டாக்காது. அந்த அபிமானம் இருந்துகொண்டே யிருக்கையில் நான் சும்மா இருக்கிறேன் என்று உதாசீனமாயிருத்தல் கருமமேயாகும். அதுபந்தந்தரும்.

ஆகையால் ஏ பார்த்தா! கருத்திருத்வ அபிமானம் விடுத்து பலேச்சையற்று சுபகருமத்தைச் செய்வாயாக.

[ இத்தகைய அறிவாளி செய்யும் கருமங்களனைத்தும் உலக நன்மையின் பொருட்டும் சரீரஜீவனமாத்திரத்தின் பொருட்டுமே யாதலின் அவை பிராரப்த கர்மவசத்தால் நடைபெறுவன வாதலின் பந்தத்தை யுண்டாக்கத் தக்கவை யாகாவாம் ]

எவனுடைய சர்வகர்மங்களும், கர்த்திருத்வமும், ஆசையும் ஞானத்தினால் தகிக்கப்பட் டொழிந்தனவோ அத்தகையோன் பிறப்பிறப்பை யொழித்த முக்தனும். அவ்வாறு நிலையில் நின்று கருமங்களைச் செய்பவன் கருமத்தால் நாம்மேல் அனுபவிக்க வேண்டிய பலன் உண்டென்று மறந்தும் கருதான். இகபரபோக இச்சையற்று, ஒடுங்கிய இந்திரியங்களோடு சித்தநிரோதனத்தை யுடையவன் சரீரஸ்திதியின் பொருட்டு பிராரப்த வசத்தால் செய்யும் கருமங்கள் அவனைப் பந்திக்கமாட்டா. அவன் பிரத்தியட்சத்தில் கிடைத்த ஆகாரத்தைக் கொண்டு திருப்தியடைபவன்; சுகதுக்கத்தில் சமதிருஷ்டி யுடையவன்; காமக்குரோதாதிக ளற்றவன்.

மேலும் கர்த்திருத்வ அபிமானம் விடுத்து பலாபேக்ஷையற்று ஆன்ம சாக்ஷாத் காரத்தில் பதிந்த சித்தமுடைய அந்த ஞானபுருஷன் செய்யும் எக்ஞாதி கர்மங்களும் பலத்தோடு நாசமாகுமேயன்றி மேல் அனுபவிப்பதற்கு எஞ்சிநிற்கா.

யாவும் பிரம்மசொரூபமே யென்றுணர்ந்து பிரம்ம சாக்ஷாத்காரமடைந்தோர் பிரம்மரூபமாகிய அக்னியில் பிரம்மரூபமான மந்திரத்தால் பிரம்மரூபமான அவிசைப் பெய்தபின், பரமானந்த சொரூபமாகிய பிரம்மத்தையே யடைவார்கள். சிலர் பிரம்மரூபமாகிய அக்னியில் பிரத்யகான்மாவையே ஓமம் செய்வர். சிலர் நிவர்த்தி செய்யத்தக்க இந்திரியாதிகளை ஓமஞ்செய்வர். சில யோகிகள் சப்தாதி விஷயங்களைச் சுரோத்திராதி இந்திரியரூபங்களான அக்னியில் ஓமம்செய்வர். சிலர் இந்திரியங்களின் தொழில்களையும் பிராணாதி வாயுக்களின் தொழில்களையும் விவேகமாகிய நெய்யைச்சொரிந்து யோகமாகிய அக்கினியில் ஆகுதிசெய்வார்கள். இத்தகையோரெல்லாம் பாபங்களினின்றும் விடுபட்டவராவர்.

இப்போது நாம்கூறிய இவையாவும் வேதத்தில் கூறப்பட்டுள்ளனவேயாகும். வேதத்தில் பிரதிபாதிக்கப் பட்டதாக நாம் கூறிய எல்லா எக்ஞங்களைக் காட்டிலும் ஞான எகனுமே மிக்க சிரேஷ்டமானது. மேற்கண்ட எல்லா எக்ஞங்களிலு முன்ன இச்சையையொழித்து ஞானத்தையடையத் தக்க உபாயம் யாதெனின் கூறுதும் கேட்பாய்.

(பகவான் ஆன்ம ஞானமடையும் மார்க்கத்தை யருளிச்செய்கிறார்.)

ஏ! தனஞ்செய! அபரோக்ஷ ஞானானுபவரான ஆசாரியனையடைந்து பக்தியோடு சேவைசெய்து "பகவானே! இத்துக்கரூபமான சம்சார சோகத்தினின்றும் விடுபடத்தக்க ஞானத்தை யடியேற்கருளல் வேண்டும்" எனப் பிரார்த்தித்தால் அவர் தொம்பத இலக்ஷியார்த்தமான பிரத்யேகான்ம தரிசனம் உனக் குண்டாகச்செய்து பிறகு தத்பத இலக்ஷியார்த்தமான என்னிடத்து உன்னை யபேதமாயறியும் வண்ணம் அநுக்கிரகம் செய்வார்" என்றருளினர்.

இவ்வாறடையும் ஞானத்தால் யாதுபயன் என்று வினவிய அர்ச்சுனனை நோக்கிப் பகவான் அருளிச் செய்கிறார்:—

"ஏ பார்த்த! இந்த ஞானத்தால் என்ன பயனெனின், எத்தகைய பாதகங்களாகிய வினைச் சாகரத்தில் வீழ்ந்துத் தத்தளிப்பவனாயினும், ஒருவன் இந்த அபேத ஞானமென்னும் தெப்பத்தால் சுலபமாய் முத்தி யென்னும் கரைசேரலாகும். அது எவ்வாறெனின். பெருந்தீப் பிடித்தெரியும் கானகத்தில் எத்தகைய விருக்ஷமாயினும் தகிந்து சாம்பராய் விடுமேயன்றி எதுவும் தப்பிநிற்காது. அதுபோல் விசாரத்தால் ஜனித்த ஞானாக்னியானது புண்ணிய பாபமாகிய கர்மக்கூட்டங்க ளனைத்தையும் நீறாக்கிவிடும்.

எத்தகைய கர்மத்தையும் அடியோடழிப்பதில் ஞானத்திற்குச் சமமானது எதுவுமின்றாம். இத்தகைய ஞானத்தைக் கருமயோகத்தை யனுஷ்டிப்போன் நெடுநாட்களுக்குப்பின் சித்த சுத்தியடைந்து அத்துவாரா தானே அந்தக் கரணத்தி லடைவன். நல்வினைகளையே செய்துகொண்டிருப்பவருள்ளும் குரு சாஸ்திரங்களினிடத்து சிரத்தாபக்தியுடையோரும் ஈசுரபக்தி யுடையோரும் ஐம்புலன்களை யடக்கியவர்களுமானோர் சில நாட்களிலேயே ஞானத்தை யடைவார்கள்.

குருவாக்கையும் சாத்திரார்த்தங்களையும் அறிந்து கொள்ள மாட்டாத மந்தரும், எவ்வாறு உபதேசித்தாலும் சந்தேகங் கொள்வோரும், குருசாஸ்திரங்களில் பக்தி யில்லாதோரும், நாஸ்திகரும் ஞானத்தை யடையார்கள். இவர்கள் இகபரமிரண்டினும் பயனடையார்கள்.

சுகதுக்காதிகளில் சமத்வபுத்தி கொண்டு சகல கருமங்களையும் ஈசுரார்ப்பணம் செய்தோரும், ஆன்ம சாக்ஷாத்கார ஞானத்தால் சகல சமுசயங்களையும் சேதித்தோரும் துறவிகளேயாவர். அவர்களைக் கருமம் பற்றாது.

ஆதலின் ஏ! அர்ச்சுனா! நீயும், அஞ்ஞானத்தினின்றும் உண்டாகி உன் புத்தியினிடத்தே வளர்ந்துள்ள சமுசயத்தை ஆன்ம ஞானமாகிய கட்கத்தால் சேதித்தொழித்து நிட்காம கருமத்தைச் செய். இக்காரணத்தானே உனது தருமமாகிய போரைச்செய்யத் தொடங்குவாயாக" என்றருளினர் உறியிலுள்ள நவநீதத்தையும் இவ்வுலகத்தையுமே உண்ட திருவாயையுடைய பகவான்.

நான்காவது அத்தியாயம் முற்றிற்று.

(தொடரும்.)

சீடன்.

---

## புராதன இந்திய நன்னாடு.

நேயர்களே! முன்னீர் முழுதினையும் மேகலையாக் கொண்ட விம்மேதினி யெங்கணும் ஒரு கால் பேரும் பெருமையும் பெற்றுச் சீர்த்தி மல்கிச் சிறப்பு விளங்க ஒப்புயர்விலாது பொலிவுபெற் றிருந்தது நம்மிந்திய நன்னாடு. அக்காலத்து இது நாடுகட்கெல்லாம் நடுநாயகமாய் விளங்கியது. இதற்கு இந்தியா வென்ற பெயர் எப்படி வந்தது என்று ஆராயப்புகின், அருகில் நின்றோர்க்கு அச்சத்தைக்கொடுப்பதும், கண்டவர்க்குக் கம்பலையை விளைப்பதும், எண்ணிடக்கூடாத பிரவாக வேகமுள்ளதும், புண்ணிய நதிகள் பலவற்றுள் முன்னாட்டிக் கூறப்படும் சிறப்பினை யுடையதும், வட இந்தியாவை யலங்கரித்துக் செல்வதுமாகிய ஸிந்து வென்ற புராதன நதி நமது நாட்டின் வடமேற்குப் புறத்தில் செல்வதால்தான். இஃதன்றி, சந்திர குலத்துக்கே யொரு சூடாமணி போன்ற பரதனென்ற நெடுமுடி மன்னன், மன்னுயிரைத் தன்னுயிராகப் போற்றி, நிலவுலகுக்கெல்லாம் நன்மை விளைத்து, எவ்வாற்றானும் தனது பிரஜைகட்கு நேர்ந்த துன்பங்களைத் துடைத்து, செங்கோல் வளங்குன்றாது அரசாண்டு வந்த நாடாதலின் இதற்குப் பரதகண்டம், பரதநாடு என்ற பெயர்களும் உள.

(2) அறிவாளர்களே! பெயரினால் மட்டுமே இத்துணை பெருமை படைத்த நம் நாட்டின் கீர்த்தியைப் புல்லனாகிய யான் சொல்ல வொண்ணுமோ? அன்றி, அப்பேருரகமாய ஆதிசேடன்தான் அதைப்பற்றிச் சிறிதளவேனும் சொல்ல வியலுமோ? இயலாது, இயலாது. ஆயினும், எனக்குத் தெரிந்த வரை, எனது புல்லறிவுக் கெட்டின மட்டில் நம் நாட்டின் பூர்வப் பெருமையை, நேரும் நிகருமற்ற சீர்த்தியை, சிறிதளவு சொல்லி இவ்வியாசத்தை முடிப்பேன்.

(3) உண்மை யறிவு பொலியும் உத்தம சிலரே! இற்றைக்குச் சற்றேறக்குறைய மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நமது நாட்டின் நிலையையும், இப்போழ்து அது வகிக்கும் ஸ்தானத்தையும் ஒப்பிடுமிடத்து, நம் நாட்டின் தற்கால ஈன ஸ்திதியைக் குறித்து வருந்தாதவர் ஒருவருமிரார் என்பது திண்ணம். 'மானங் குலங் கல்வி வண்மை யறிவுடைமை தானந்தவ முயற்சி தாளாண்மை தேனின்—கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும், பசிவந் திடப்பறந்து போம்' என்ற அரிய செய்யுளும் பொய்க்குமோ? ஆம்! நம் தற்கால வறுமை காரணமாகப் பசி முற்றி நம்மைப் பல்காலும் வருத்த அவையாவும் பறந்தன போலும்.

(4) நிற்க, இந்நாளில் நவீன நாகரீகம் நலம் பெற விலங்கும் பல நாடுகள் நாடுவாரின்றிப் பாழாய்க்கிடந்த காலமும், பிறதேயத்தவர்கள் உண்ண உணவும் உடுக்க உடையும் தயாரிக்க வறியாது நிர்வாண சரீரிகளாய், வர்ணம் பூசித்திரியும் காலமுமாகிய வப்புராதன காலத்தில் நம்மிந்தியா, கைத்தொழிலிலும் வாணிபத்திலும், கல்வியிலும், நாகரீகத்திலும், ஈடுமெடுப்பு மற்று உலகெங்கும் பொலிந்து விளங்கியது. அவ்வாறாயின் செல்வத்தில் நிகரற்றது அதுவென்று சொல்லவும் வேண்டுமோ"

(5) இஃதன்றி, ஏனைய தேயத்தவர்கள் கொஞ்சமும் இரக்கமென்பதின்றிப் பிராணிகளையும், மனிதர்களையும் கொன்று ஜீவித்து வருநாட்களில் நமது இந்தியர்கள், தானம், தவம், வள்ளன்மை, ஆதியவற்றின் பெருமை

களை யறிந்து அவைகளின் வழி நின்றதன்றி, கொலை,களவு, புலாலுண்ணல், கட்குடித்தல், பொய்யுரைத்தல், பிறரில்லம் நயத்தல், முதலியவைகளைப் பெரும்பாதகங்களாக மதித்து, அவைகளை அறவேகடிந்து தேசுற்றுத் தரும சிலராய் விளங்கி வந்தனர். இவைகளால் நமது நாட்டின் பெருமை நன்கு விளங்கும். இவையன்றி, சத்தியமே நித்தியமெனக் கொண்ட அரிச்சந்திர மன்னர் முதலியோரும், கேட்டோர்க்குக் கேட்டவாறு வரையாது கொடுக்கும் வள்ளன்மையே தெய்வ முள்ளளவும் குறையாப்பேறென்று மதித்த கன்னன் சிபி முதலிய முடிவேந்தர் பலரும், மன்னுயிரைத் தம்முயிராய்ப் பாராட்டிப் பரிவுடனே அவர்கட்கு நேர்ந்த இடுக்கண்களைப் பலவகையாலும் துடைத்துத் தமது செங்கோல் வளத்துக்குப் பழுது வாராதவாறு காத்துக் கொண்ட சேர சோழபாண்டியராதி விறல்வேந்தரும் ஆண்டநாடு இது வாகும். குட முனிவராகிய அகத்தியர் முதலாய உலகப்பற்றை முற்றத் துறந்த வுண்மை யிருடிகள் பலர் இருந்த நாடும் இதுவே. கற்புக் கணிகலன் போன்ற காரிகைகள் வதிந்த நாடும் இதுவே. பொற்பு வாய்ந்தபூவையர் பலர் பொதிந்த நாடும் இதுவே. கோதற்ற கோமகளிர் களியாட்டுடனிருந்த நாடும் இதுவே. களங்கமற்ற கலை மடந்தையர் பொருந்திய நாடும் இதுவே. மாசற்ற மடமங்கையர் மன்னியநாடும் இதுவே. நாற்பத் தொன்பதின்மர் நாவலர் நலமுடன் நற்றமிழ் நிறுவின நாடும் இதுவே. இத்தகைமைத்தான இவ்விந்தியாவின் மாட்சியை முழுதும் வரைவதென்பது இயலாததாகலின் சில வரை யறைகளின்படி, எனது சிற்றறிவுக் கெட்டின வரை இம்மட்டிலா மாநாட்டின் பெருமைகளை ஈண்டுக் கூறுகின்றேன். அப்பிரிவினைகள் கீழ்க் கண்டவாறு.

1. புராதன இந்தியாவின் வாணிபமும் கைத் தொழில்களும்.
2. இந்தியக் கல்வியும் நாகரீக மேன்மையும்.
3. இந்து மாது சிரோன்மணிகள்.

(6) தெள்ளறிவு வாய்ந்த ஒள்ளிய ஐயன்மீர்! இப்பொழுது இவற்றில் முதல் பிரிவினையைச் சிறிதளவு ஆராய்வாம். நாம் எல்லோரும் இவ்விந்தியா மிகத்தொன்மை வாய்ந்த தேசம் என்று அறிவோம். அவ்வளவு தொன்மை வாய்ந்த இந்நாடு எக்காலத்தும் எல்லா வளப்பங்களும் நிறைந்த தென்பதை ஒருவராலும் மறுக்கவியலாது. நீர் நிலவளங்களில் இந்நாட்டுக்கு மேம் பட்டது அல்லது ஈடானது ஒருநாடேனுமில்லை. ஏனைய நாடுகளில் முக்கியமான நதிகளுக்குக் கிளைநதிகள் வெட்டிச் சாகுபடி செய்யவேண்டிய அவசியம் உண்டு. ஆனால் இந்நாட்டிலோ வெனில் ஒவ்வொரு பெரிய நதியும் தானாகவே பல கிளை நதிகளை உற்பத்திசெய்து அவைகளின் மூலமாகச் சென்று கடலிற் கலப்பதால் கிளை நதிகள் வெட்டவேண்டிய அவசியமே யில்லை. இவை யன்றிச் சிலநதிகள் வருஷம் முழுதும் வற்றாது ஓடிக் கொண்டிருப்பதனால் அந்நதிகளைச் சேர்ந்த பாகங்களில் வருஷம் முழுதும் சாகுபடி செய்யலாம். இதனால் இந்தியாவுக்கு நீர் வளம் போதாதென் பதற்கு ஆதாரமேயில்லை; அன்றியும் தக்ஷிண இந்தியாவிலே கொஞ்சம் உஷ்ணம் அதிகமிருப்பினும் வடநாடு சமசீதோஷ்ணம் வாய்ந்தது. இந்நாட்டில் எல்லா விளை பொருள்களையும் பயிரிடலாம். ஏனெனில் சமசீதோஷ்ணப் பிரதேசங்களில் அவைகளுக்கேற்ற விளை பொருள்களையும் உஷ்ணப் பிரதேசங்களில் அவைகளுக் கேற்ற விளைபொருள்களையும் விதைத்

தால் இவ்விருவகைப் பிரதேசங்களுக்குரிய விளை பொருள்களும் மூட்டின்றி விளையுமன்றோ? இதனால் நம் நாட்டில் நிலவளத்துக்கும் குறைவு ஒன்று மில்லை என்பது தெற்றென விளங்கும்.

(இன்னும் வரும்.)

சி. சீனிவாச ராகவன்,
48. பக்தபுரி அக்கிரகாரம், கும்பகோணம்.

---

## தபால் கொள்ளைக்காரர்கள்

(238-ம் பக்கத்தொடர்ச்சி)

வண்டி புறப்பட்டதே சாமிநாதன் மெயில் ஏஜன்டாகையால் தன் வேலை செய்யும் மேஜைக்குச்சென்று உட்கார்ந்தான். எதிரில் மேஜைமேல் துண்டு கடிதம் இருந்தது. அதில் பின் வருமாறு தெளிவாய் எழுதப்பட்டிருந்தது :—

"கள்ளர்களே. இனி நடக்கப்போவது உயிர்ச்சண்டையே. எச்சரிக்கை" இதைக்கண்டதே யவர்களுக்குப் பேரிடி விழுந்த மாதிரியாய் விட்டது.

ஆனந்தஸிங் மேல் கண்டவாறு அவர்களுக்குப் பயமுண்டாகச்செய்து விட்டு ஸ்டேஷன் மாஸ்டரிடமிருந்து பெற்ற சாவியால் மெயில் வண்டியின் கதவைத் திறந்துகொண்டு சென்று அச்சீட்டைச் சாமிநாதன் மேஜை மேல் வைத்துவிட்டு மறைந்துகொண்டான். பிறகு அவன் மேலையூரி லுள்ள பிரதான ஹோட்டலில் மாறுவேட மணிந்துகொண்டு தங்கினான். இப்போது அவனுக்கு ஒரு விஷயமாய் ருசுக்கள் வேண்டும். இரங்கநாதன் தற்சமயம் அந்த ஹோட்டலில்தான் வசித்துக்கொண் டிருக்கிறான் ஆகையால் தானும் அவன் அறைக்குப் பக்கத்து அறையிலேயே தங்கினான்.

ஆனந்தஸிங் இரண்டு நாள் தங்கியும் இரங்கநாதன் வரவில்லை. மூன்றாவது நாள் மாலை கீழ்க்கட்டிலிருக்கும் பெரிய கூடத்திற்குள் வந்து நுழைந்தான். அங்கு குடிவகைகள் விற்பது. அச்சமயம் ஆனந்தஸிங்கும் அங்குதான் நின்றுகொண் டிருக்கிறான். ஆனால் அவன் அணிந்திருக்கும் மாறுவேடத்தின் சாமார்த்தியத்தால் அத்துஷ்டன் அவனை யறிந்துகொள்ள வில்லை. நேராய் சாராயம் விற்பவனிடம் சென்று தனக்கு வேண்டியதை வாங்கிக்கொண்டு பத்து நிமிடங்களுக்குள் தன்னறைக்குச் சென்று உட்கார்ந்து சுருட்டுப்பிடிக்க ஆரம்பித்தான். அறையை யுள்பக்கம் தாளிடாமல் கதவை மட்டும் மூடிக்கொண்டான். இதனால் இவன் யாருடைய வரவுக்காகவோ எதிர் பார்க்கிறானென்று ஆனந்தஸிங் தெரிந்துகொண்டான்.

சுமார் கால்மணி நேரம் கழித்து யாரோ வந்து கதவைத் தட்டினார்கள். இரங்கநாதன் எழுந்து செல்லாமலே "வாருங்கள் உள்ளே" என்றான். உடனே சாமிநாதனும் கள்ளத்தலைவனுகிய ஜக்கனும் உள்ளே நுழைந்து கதவைமூடித் தாளிட்டுக் கொண்டார்கள்.

சாமிநாதன் இரங்கநாதனை நோக்கி "நண்பரே வந்தனம். சரியான வேளைக்கு வந்துவிட்டோம்."

இராங்:—" நான் கூறவேண்டிய சங்கதி யவ்வளவு முக்கியமானது; அதனால் நீங்கள் சீக்கிரம் வந்ததைப்பற்றி சந்தோஷப்படுகிறேன் " என்றான்.

சாமி:—" அப்படிப்பட்ட சங்கதியாயின் உடனே கூறுவதுதானே! நானும் என் நண்பரும் ஆயத்தமாயிருக்கிறோம்." என்றான்.

இராங்:—" ஆம் நான் உங்களை வரவழைத்தது மிக்க முக்கியமான விஷயமே. அது நமது எதிர் கால க்ஷேமத்தைப் பொருத்தது. நம்முடைய நிலைமை யிப்போதிருக்கும் ஆபத்தான நிலைமையைப்போல் எப்போதும் இருக்கவில்லை." என்றான்.

இதைக்கேட்ட துஷ்டர்கள் இருவரும் திடுக்கிட்டு ஒரேகுரலாய் " ஏன் ? அப்படிப்பட்ட காரணம் என்ன விருக்கிறது ?" என்றார்கள்.

இராங்:—" நண்பர்களே ! போதுமான காரணங்கள் இருக்கின்றன. எல்லாம் கூறுகிறேன். எல்லாவற்றையும் நான் நிதானமாய்ச் சீர்தூக்கிப் பார்த்தேன். நாம் இப்படியே இன்னும் இத்தேசத்தில் இருப்போமாயின் நாம் அழிவது நிச்சயம். ஆகையால் நாம் இந்நாட்டை விட்டுப் போய்விடவேண்டும்.

சாமிநாதன்:—அப்படி நாட்டை விட்டுப்போய்விட வேண்டிய காரணமென்ன விருக்கிறது.?

இராங்:—காரணமா ? பல விருக்கின்றன. முதலாவது சாகமாட்டேனென்று ஹடம் செய்யும் அத்துப்பறியும் ஆனந்தவிங் நம்மை யடியோடழிக்கும் வரையில் கண்ணுறங்கான். அவன் உதவியாலேயே அந்த அம்பலவாணன் சிறையிலிருந்து மீட்கப்பட்டிருக்கிறான். அவன் வெளி வந்ததைப்பற்றி பயமில்லை. ஆனால் காரியமில்லாமல் ஆனந்தவிங் அவனை மீட்கமாட்டான். நான் கூறுகிறேன். இருண்ட மேகம் நம் தலைமேல் நிறையக்குவிந்து கவிந்துகொண் டிருக்கிறது. எச்சமயம் இடியிடிக்குமோ தெரியாது.

சாமி:—ஆயினும் இத்துப்பறியும் நாய்க்கு வேண்டிய ருசுவு ஏது ?

இராங:—" அப்படி நம்பி யேமாறவேண்டாம். சாமிநாதம் ! அவன் இந்த விஷயத்தில் ருசுவுக்காகக் காத்துக்கொண்டில்லை. அவன் ஒரு தந்திரமான வேலை செய்துக்கொண் டிருக்கிறான். அதாவது, சாமிநாதம் ! அவன் அந்தப்பழைய விஷயத்தைக் கிளறிக்கொண்டிருக்கிறான் " என்றான்.

இதைக்கேட்டதே சாமிநாதன் திடுக்கிட்டு மரம்போ லாய்விட்டான். சற்று நேரம் சிந்தித்துப்பின் தன் நண்பனை நோக்கி முகவாட்டத்தோடு,

" நண்பனே ! நீ கூறுவது உண்மையே. நாம் உடனே இந்நாட்டை விட்டுப் போய்விட வேண்டியதே. துர் அதிஷ்ட வசமாய் இத்தபாலாபீஸ் விவகாரத்தில் என் மேலும் சந்தேகமுண்டாகும்படி யிடங்கொடுத்துவிட்டேன்." என்றான்.

இரங்கநாதன் "சந்தேகமில்லை. நீயன்று அரசமரச்சாலைத் திருப்பத்தில் பையை யெறிந்ததை யவனே நேராய்ப்பார்த்திருக்கிறான் என்பதை மறவாதே. மற்ற பேர் எவ்வளவு ஆழத்தில் அமிழ்ந்துகொண் டிருக்கிறோமோ அவ்வளவு ஆழத்தில் நீயும் சிக்கிக் கொண்டிருக்கிறாய்" என்றான்.

சாமி:—"கடைசியில் நான் இம்மாளிகையையும் இதைச்சேர்ந்த பூஸ்திதிகளையும் இழந்துவிட நேரிடுகிறது. மற்றவற்றைப்போல் இதுகையில் எடுத்துக்கொண்டு போவதாயில்லையே" என்றான்.

இரங்:—இல்லை யில்லை. இழக்கவேண்டியதில்லை. அதன் விலையைக் கையிலெடுத்துக்கொண்டு செல்லலாம்.

சாமி:—அப்படி திடீலென்று விற்றால் சந்தேகமுண்டாகி ஆபத்து நேரிடாதா?

இரங்.—"செய்கிற மாதிரி செய்தால் ஆபத்து வராது. நீ பகிரங்கமாய் விற்கவேண்டிய அவசியமேயில்லை." என்றான்.

சாமி:—நாம் எப்படி இரகசியமாய் அவ்வாறு செய்யமுடியும்?

இரங்:—நவீனபுரியில் ஒருவன் இருக்கிறான். அவன் ஜாதியார் அங்கு வேறு யாருமில்லை யாதலால் அவன் பெயர் கொழும்புச் செட்டியென்றே சொல்கிறார்கள். அவன் இம்மாதிரி சந்தர்ப்பங்களில் பலருக்கு உதவியிருக்கிறான். சங்கதியை யாருக்கும் வெளியில் கூறமாட்டான்.

சாமிநாதன்:—ஆ! நண்பரே! நீர் கூறியபடி அவன்றான் நமக்கு உதவி செய்வான். ஆனால் அவன் சரியான விலை கொடுக்கமாட்டான்.

இரங்:—அட! அடியோடு இழப்பதற்கு பாதி வருவது மேலல்லவா? அதைப் பெற்றபின், தபால் களவில் நமக்கிருக்கும் பாகத்தை யெடுத்துக்கொண்டு, நேராய் வெள்ளைக் குடிசைக்குச் சென்று அப்பெண்ணைக்கூட்டிக்கொண்டு உடனே துறை முகத்திற்குச் சென்று தூரதேசம் செல்லும் முதற் கப்பலில் ஏறிச் சென்றுவிடவேண்டும்.

சாமி:—நண்பரே நீர் கூறுவதே சரியான ஏற்பாடு. அதின்படியேதான் நடக்கவேண்டும். அச்செட்டியை யெப்போது வரவழைக்கிறாய்?

இரங்க:—நாளைக்கே யவனுக்குத் தந்தி கொடுக்கிறேன்.

சாமி:—"சரி இவ்வளவுதானே சமாசாரம். நான் பிரயாணத்திற்கு அனேக ஏற்பாடுகள் செய்யவேண்டிய திருக்கிறது. போய் வரலாமல்லவா?" என்றான்.

இரங்காநதன் ஆகா என்று கூறிக்கொண்டே நண்பர்களை வழிகாட்டி யனுப்புவதற்காக எழுந்து வாசற்படி யருகிற்சென்றான். அச்சமயம் யாரோ ஒருவன் வாசற்படி யருகிலிருந்து செல்வதுபோல் சத்தம் கேட்டது. உடனே கதவைத்திறந்து பார்த்தார்கள். தங்களுக்குத் தெரியாத ஒருமனிதன் தாழ்வாரத்தின் கோடியில் திரும்பிப் போவதைக் கண்டார்கள். சாமிநாதன் ஆத்திரத்தோடு ஓடிப்போய் அவனை யாரென்று பார்க்க முயன்றான் ஆனால் இரங்காநதன் அவனைப் பிடித்துக் கொண்டான். கள்ளர் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து மிரண்டு விழித்தார்கள். தங்கள் இரகசியம் பத்திரமாயில்லை யென்று அவர்களுக்குள் பூரண சந்தேகம் உண்டாய் விட்டது. (தொடரும்.)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## ஆச்சரியம்.

### ஆகாயத்தில் சமாச்சாரம் தெரிவித்தல்

ஆறுகளில் திடீரென உண்டாகும் வெள்ளங்களால் பலவித இடையூறுகள் உண்டாவது வழக்கம். ஆற்றில் பிரயாணம் செய்யும் படகுகளும் ஆற்றைக் கடந்து செல்லும் பிரயாணிகளும் எதிர்பாராத வெள்ளப்பெருக்கால் ஆறுகளில் மூழ்கிப்போவது அடிக்கடி நிகழும் சம்பவங்கள். இவற்றை நிவர்த்திக்க புது மாதிரியான எற்பாடுகள் கண்டு பிடிக்கப்பட் டிருக்கின்றன. எங்ஙனமெனின் ஆற்றங்கரையில் 30 அடி உயரமுடைய ஓர் பலகைக் கோபுரம் கட்டப்படுகின்றது. அக்கோபுரத்தின் உச்சியில் சப்தங்களை விரிவாக்கும் கருவிகளும் சப்தங்களை வெகுதூரம் செலுத்தும் கருவிகளும் வைக்கப் படுகின்றன. இவைகள் பெரும் பாலும் அணைக் கட்டுகளுக்கு சமீபத்திலேயே அமைப்பதற்கு எற்றவை. ஆற்றில் வெள்ளம் வருவதைக் கண்டதும் ஒருவன் அக்கோபுரத்தின் மீது ஏறி கருவிகளின் வழியாய் வெள்ளம் வரும் விஷயத்தை தெரிவிக்கவேண்டும். அந்தக்கருவியை எந்தெந்த திக்கில் அவன் திருப்பிப் பேசுகின்றானோ அந்தத்திக்கில் நாலு மைல் தூரம் சமாச்சாரம் யாவருக்கும் கேட்கின்றது. 4 மைல் தூரத்தில் உள்ளவர்கள் அனைவரும் சமாச்சாரத்தை அறிந்து கொள்வதால் எச்சரிக்கையுடனிருக்க சாத்தியமாகின்றது. இவ்வித முயற்சி பயன்படுகிறதா என்பதை முதலில் அமெரிக்காவிலுள்ள காட்ஸ்கில் மலையில் ஓர் இரவில் சோதித்துப் பார்த்தனர். இவ்வித கோபுரம் ஒன்று மலையின்மீது கட்டப்பட்டது. மலையின்மீது 4 மைல் தூரம் வரையில் மைலுக்கு ஒவ்வொருவனாக 4 ஆட்கள் நிறுத்தப்பட்டனர். ஒவ்வொருவருக்கும் ஓர் தீவட்டி கொடுக்கப் பட்டது. கோபுரத்தின் மீது நின்றவன் கருவி மூலமாக தீவட்டியைக் கொளுத்துங்கள் எனக் கட்டளை யிட்டான். இச்சொற்கள் 4 மைல் தூரம் வரைக்கும் எல்லோருக்கும் கேட்டன. நாலு தீவட்டிக்காரரும் ஏககாலத்தில் தீவட்டிகளைக் கொளுத்தினர்' இவற்றால் ஏற்படுவதென்ன வெனில், கருவிகளின் ஒத்தாசையைக் கொண்டு நாலுமைல் தூரம்வரையில் ஆகாயத்திலே சப்தங்களைச் செலுத்தலா மென்பதும், நாலுமைல் விஸ்தீரணத்திற் குள்ளிருப்போர் யாவரும் கம்பி யில்லாமலும் கருவியில்லாமலும் இச்சொற்களைக் கேட்கலா மென்பதுமே. இனி இம் முயற்சி, ஆற்றோரத்திலே செய்து பரிசோதிக்கப் பெறும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## துந்துபிஹு மாசிமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
## பசலி 1332—கோல்லம் 1097-98—ஹிஜரி 1341
## இங்கிலீஷ் 1923ஹு பிப்ரவரிமீ—மார்ச்சுமீ

| மாசிமீ | பிப்ரவரி | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 12 | திங் | து40-3 | பூரா-50-33 | மர-60 | கும்பரவி நா 18-0 கலி யுகாந்தம் |
| 2 | 13 | செ | திர40-35 | உத்-52-45 | பி52-45சி | மஹா சிவராத்திரி |
| 3 | 14 | புத | சது42-18 | திரு-56-0 | சி56-0பி | தானியம்வாங்க |
| 4 | 15 | வியா | ● 45-5 | அவி-60 | சித்-60 | சர்வத்திர அமாவாசை |
| 5 | 16 | வெ | பிர49-15 | அவி-0-30 | சித்-60 | பால்குண சுத்தம் |
| 6 | 17 | சனி | துதி54-23 | சதை-6-18 | அ6-18 ம | மாடு வாங்க |
| 7 | 18 | ஞா | திரி-60... | பூரட்-12-43 | சி12-43அ | பிரயாணம் விலக்க |
| 8 | 19 | திங் | திரி0-25 | உத்-20-3 | சித்-60 | |
| 9 | 20 | செ | சது6-58 | ரேவ-27-50 | சித்-60 | ஸாந்த சதுர்த்தி |
| 10 | 21 | புத | பஞ்13-43 | அசு-35-35 | ம-35-35சி | சஷ்டி [ங்க |
| 11 | 22 | வியா | சஷ்19-53 | பர-42-48 | சி42 48ம | அடுப்பு வைக்க, மாடுவா |
| 12 | 23 | வெ | சப்25-28 | கிரு-43-58 | ம48-58சி | கிருத்திகை |
| 13 | 24 | சனி | அஷ்29 30 | ரோ-53-35 | சித்60 | குளம் கிணறு வெட்ட |
| 14 | 25 | ஞா | நவ31-38 | மிரு-56-25 | சித்60 | |
| 15 | 26 | திங் | தச31-40 | திரு-57-15 | சி57-15அ | கரிநாள் |
| 16 | 27 | செ | ஏக295 50 | புன-56-8 | சித்-60 | சர்வ ஏகாதசி, கரிநாள் |
| 17 | 28 | புத | து26-5 | பூச-52-50 | சித்-60 | பிரதோஷம், கரிநாள் |
| 18 | 1 | வியா | திர20-33 | ஆயி-48-28 | சி48 28 அ | பகலில் தனியநாள் |
| 19 | 2 | வெ | சது13-40 | மக 43-23 | ம43-23சி | மாசி மகம், ஹோலி [பண்டிகை |
| 20 | 3 | சனி | ○ 6-5 பிர57-40 | பூர-37-10 | சி37-10 ம | |
| 21 | 4 | ஞா | து53-30 | உத்-30-33 | அ30-33சி | |
| 22 | 5 | திங் | திரி40-50 | அஸ்-23-58 | சி23-58பி | |
| 23 | 6 | செவ் | சது32 58 | சித்-17-53 | சித்-60 | |
| 24 | 7 | புத | பஞ்26-3 | சுவா-12-38 | சித்-60 | |
| 25 | 8 | வியா | சஷ்20-18 | விசா-8-ஐ | சித்-60 | |
| 26 | 9 | வெ | சப்15-53 | அனு 5-23 | சித்5-23ம | |
| 27 | 10 | சனி | அஷ்12-53 | கேட்-3-35 | சித்-60 | பகலில தனியநாள |
| 28 | 11 | ஞா | நவ13 53 | மூல-3-33 | அ3-33சி | |
| 29 | 12 | திங் | தச11-28 | பூரா5- | மர-60 | |
| 30 | 13 | செவ் | ஏக12-53 | உத்-7-48 | பி7-43சி | சர்வ ஏகாதசி |

1923ஆ மார்ச்சுமீ

| | | | |
|---|---|---|---|
| செ | | | |
| சூ கே | 10உ மே-செ<br>24உ கும்-பு<br>28உ மக-சு | | |
| பு | | | ராகு |
| சு | | குரு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| தொகுதி 8 | துந்துபி௵ மாசி௴ ௧௨<br>1923௵ பிப்ரவரி௴ 12உ | பகுதி 8 |
|---|---|---|


## கடவுள் வணக்கம்.

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கண் மித்திரர்கள்
பக்கமுண் டெக்கா லமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிர மணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளு முண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் னருளிற்
கருத்தொன் று முண்டா குமேல்
நதியுண்ட கடலெனச் சமையத்தை யுண்டபர
ஞானவா னந்த வொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தை தீர்த்தென்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூத னன்றங் கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்கா தலிப்பெ ணுமையே.

---

எதுக்குச் சும்மா விருமனமே யென்றுனக்குப்
போதித்த வுண்மையெங்கே போகவிட்டாய்—வாதுக்கு
வந்தெதிர்த்த மல்லரைப்போல் வாதாடி னையேயுன்
புந்தியென்ன போதமென்ன போ.

சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தாற் றுக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா—திகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான வத்துவிதக்
கட்டுக்கு ளாவதென்றோ காண்.

## அரும்பொருள் விளக்கம்.

**1.** பதி—இடம். பவிசு—திறமை. தவிசு—இருக்கை. யமபடர்—யம தூதர். திமிரம்—இருள். கதி—மோக்ஷம். ஞானமாம் கதிர்—ஞான சூரியன். காயசித்தி—தேகத்தை நீடித்தகாலம் வைத்துக்கொண் டிருத்தல். கறையுண்ட கண்டர்பால் அம்மை—ஆலகால விஷத்தையுண்ட நீலகண்டரின் பக்கல் அமர்ந்துள்ள அம்மையே.

நின்றனிற் கருத்தொன்று முண்டாகுமேல்—உனது பாதாரவிந்தத்தில் என்மனம் மட்டும் நிலைத்து விடுமாயின். "நதியுண்ட கடலென...... ஞானவானந்த வொளியே"—எல்லா நதிகளையும் தன்னுள் ஏற்று அடக்கிக்கொண்டு தான் வித்தியாச மின்றி விளங்கும் கடல்போல் எல்லாமதங்களையும் ஏற்றுக்கொண்டு யாவற்றுக்கும் தானே ஏககடவுளாய் விளங்கும் ஞானமயமாகிய சோதியே.

(தாயுமானவரே—மற்றொரு இடத்தில்,

"குன்றாத மூவுருவா யருவாய் ஞானக்
கொழுந்தாகி யறுசமயக் கூத்துமாடி
நின்றாயே * * * " என்றார்.)

நாதாந்தரூபமே—நாததத்துவத்தைக்கடந்த உருவமே. வேதாந்தமோனமே—வேதமுடிவான மௌன நிலையே (அதாவது பிரம்மான்ம ஐக்யநிலை)

நானெனு மகந்தை—நான் என்கிற ஆணவம்
என்மதி யுண்ட—என் அறிவை விழுங்கிய
மதியான—பேரறிவான
மதிவதன வல்லியே—சந்திரன் போன்ற குளிர்ந்த பிரகாசம் பொருந்திய முகத்தையுடைய தேவியே.

குடநீர் கடல்நீரில் இலயமாவதுபோல் ஆன்மா பரமான்மாவில் ஒடுங்கி விடுவதால் அவ்வாறு கூறப்பட்டது.

"வரைராஜ......காதலிப்பெணுமையே."—உமாதேவியார் ஓர் காலத்தில் பர்வதராஜனுக்குப் புத்திரியாகப் பிறந்ததாய்க் கூறப்பட்டிருப்பதால் அவ்வாறு அருளினர்.

பகவானது அருளின்றி யொன்றும் கிட்டாததலாலும், அருளே சத்தியாகிய உமாதேவி யாதலாலும், அவள் பாதாரவிந்தங்களில் நம்மனம் பதிந்து விடும்படிச் செய்தால் இவ்வுலகில் அடையத்தக்க சகல போக பாக்கியங்களும், மேலுலக பாக்கியங்களும், சித்திகள், ஞானம், முத்தி ஆகிய யாவும் அடையலாம் என்பது இதன் கருத்து.

**2.** இது எவ்வளவு அடக்கினாலும் அடங்காமல் விஷயாதிகளில் ஓடியலையும் மனதை நோக்கிப் புத்திகூறியது. மனமே பிறப் பிறப்பிற்குக் காரணம்.

" இறப்பும் பிறப்பும் பொருந்த—எனக்
கெவ்வணம் வந்ததென் றெண்ணியான் பார்க்கில்
மறப்பு நினைப்புமாய் நின்ற—வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது தோழி—சங்கர "

என்றார் சுவாமிகளே.

இத்தகையமனம் செயலற்று ஆன்மாவில் நிலைத்து நிற்கில் ஞானோதய முண்டாகி முத்தியிற் கூட்டாநிற்கும் ஆதலின் " ஏ மனமே! உன் புத்தியிருந்தவா றென்னே! சும்மா இரு என்று நான்கூறிய நல்லவழியை என் எங்கோ போகவிட்டு முரட்டுத்தனமாய் அலைகின்றனை. வேண்டாம் அசைவற்று உன் நிலையில் நில் " என்றார்.

3. சகமனைத்தும் பொய்......பொய்யன்றோ—பிரபஞ்ச மனைத்தும் மாயா காரியமாதலின் கனவைப்போல் பொய்யென்ற உண்மையையுணர்ந்தால் சுகதுக்காதிக ளனைத்தும் பொய்யே யல்லவோ!

கனவினின்றும் விழித்தபோது கனவிற்றோன்றிய யாவும் பொய் யென்று தோன்றுவது போல, அஞ்ஞானம் நீங்கி ஞானோதயம் உண்டான போது உலகம் பொய்யென்பது தோன்றிவிடும். கானல் நீர்போல் தோற்ற மாத்திரமாயிருப்பினும் ஞானிக்கு அதில் விவகாராதிகள் இல்லை. ஒருகாலத்தி லிருந்து ஒருகாலத்தி லில்லாமற் போவதால் அது அநித்தியமே என்பது துணிபு. ஆகையால் மாயை அநாதியாயினும் அநித்தியமே யென்றும், அதாவது பசு பாசங்கள் அநாதியாயினும் அநித்தியமே யென்றும் பதி அதாவது பிரம்மம் ஒன்றே அநாதி நித்தியம் என்றும் கூறப் பட்டது.

பிரம்மமே ஆரோபத்தால் பிரபஞ்சமாகத் தோன்றுவதால் ஆன்ம தரிசன முண்டாகி யாவும் பிரம்ம மயமாய்த் தோன்றும்போது பிரபஞ்சம் பொய்யென்று விளங்கும். அதிஷ்டானம் தோன்றின் ஆரோபம் மறையு மன்றோ.

" இகபரத்தும்......கட்டுக்குள்ளாவ தென்றோகாண் "—பரமான்மா ஆன்மாவோடு எப்போதும் அத்துவிதமாகவே பிரிவின்றி யிருக்கிறபடி யால் ' இகபரத்தும் விட்டுப்பிரியாத ' என்றார்.—அஞ்ஞான தசையில் அந்த உண்மை புலப்படாம லிருக்கிறது. அஞ்ஞானம் நீங்கி ஞானோதய முண்டானபோது அந்த உண்மை புலப்பட்டு ஆன்மா பரமான்மாவில் ஒடுங்கி விடுகிறது. அப்பர் சுவாமிகள். "......காணொ நாதனைத்தேடி என்னுள் கண்டு கொண்டேனே " என்றும்

" விறகிற் றீயினன் பாலிற்படு நெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
* * * * " என்றும் கூறினர்.

# ஆனந்தபோதினி

துந்துபிஸூ மாசிமீ கஉ

## மதஸ்தாபனங்கள், தேவாலயங்களின் வரும்படி.

நமது நாட்டில் அனேக மடங்களும், தேவாலயங்களும் உள்ளனவென்பதும் இவற்றிற்கு ஏராளமான வரும்படி வரத்தக்க சொத்துகள் உளவென்பதும் யாவரும் அறிந்த விஷயம். இவற்றின் வரும்படியில் செலவுபோக அதிக பணம் மிஞ்சுகிறதென்றும், அப்பணம் சரியான வழியில் செலவழிக்கப்படுவதில்லையென்ற காரணத்தால் அப்பணத்தை பாதைகள் போடுவது, கிணறுகள் வெட்டுவது, வைத்தியசாலைகள், பாடசாலைகள் அமைப்பது, முதலிய செலவுகளுக்காக உபயோகப்படுத்திக்கொள்ள அதிகாரம் பெறவேண்டுமென்றும் நமது சென்னை மந்திராலோசனை சபையில் ஒரு மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இவ்விஷயம் இன்னும் பெரும்பாலார்க்குத் தெரியாது.

இது நீதிக்கும் சட்டத்திற்கும் விரோதமானதென்றும், இதனால் அனேகங் கெடுதிகள் நேரிடுமென்றும், மத விஷயத்தில் துரைத்தனத்தார் பிரவேசிப்பது மகாராணியவர்களின் வாக்குத்தத்தத்திற்கு மாறான நடக்கையென்றும், ஆகையால் இது சட்டமாக்கப்படலாகாதென்றும் மடாதிபதிகளும், பொது ஜனங்களும் இதை யொரே வாக்காய் ஆட்சேபிக்கிறார்கள். பொதுஜன அபிப்பிராயத்திற்கும், மனவருத்தத்திற்கும் எவ்வளவு மதிப்பளிக்கப்படுமோ அது போகப்போகத் தெரியும். ஆயினும் நாம் கூறவேண்டியதைக் கூறியேதீரவேண்டும்.

1. இது இத்தாபனங்களுக்குச் சொத்தைவைத்த மூல புருஷர்கள் அதன் வருமானம் எந்த தரும கைங்கரியங்களுக்கு உபயோகப்படுத்தப்படவேண்டுமென்று கருதினார்களோ அந்த நோக்கம் ஈடேறாமற் செய்துவிடும்.

இம்மடாலயங்களெல்லாம், சுத்த ஞானிகளும், தெய்வீகத் தன்மை பொருந்தியவர்களுமான மகான்களால் தாபிக்கப்பட்டவை. இவற்றிற்குத் திரண்ட சொத்துக்களை வைத்தோர் அக்காலத்தில் இருந்த அரசர்களும், பெருங்கொடையாளிகளாகிய வள்ளல்களுமே. சில மகான்கள் நமது மதத்தின் உண்மை பெருமைகளைப் பிரத்தியட்சமாய் யாவரும் பிரமிக்கும்வண்ணம் நிரூபித்து மடங்களின் கைங்கரியங்கள் சாசுவதமாய் நடைபெறுவதற்காகச் சொத்துக்களைப் பெற்றார்கள். இதற்கு இரண்டொரு திருட்டாந்தமட்டுமே கூறுகிறோம்.

மூவாயிரவருடங்கள் யோகம்புரிந்து தமது அனுபவத்தை வருடம் ஒரு பாவாக மூவாயிரம் பாக்களால் திருமந்திரம் என்ற (இன்னும் உரைகாண்டற்கரிய) மிக்க அருமையான நூலை வெளியிட்டவரும், நந்தி யெம்பெருமானிடம் உபதேசம் பெற்றவருமாகிய திருமூலநாயனாரால் தாபிக்கப்பட்டதே திருவாவடுதுரைமடம். தமிழ்க்கல்வியில் ஒப்புயர்வற்ற மேதாவிகளும், தெய்வவருள்பெற்றவர்களுமான மகாஞானிகளில் அனேகர் இம்மடத்தின் ஆதீனத்தை வகித்திருந்தனர். இன்றும் தமிழ்மாதுக்கு அது உறைவிடமாகவும் தமிழ்ப்புலவர்க்குத் தாயகமாகவும் விளங்குகிறது. காலஞ்சென்ற மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்களும், இப்பொழுது தமிழில் தலைமைவகித்திருக்கும் மகாவித்வான் பிரம்மஸ்ரீ சாமிநாதய்யரவர்களும் அம்மடத்தின் வழி வந்த பேரறிவாளரேயாவர்.

பிரம்மபுர ஆதீனத்தைச் சேர்ந்த ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள் காசிக்கு யாத்திரை சென்றபோது, காசி நவாப்பைக் கண்டு, காசியில் ஒரு சைவ மடத்தைத் தாபிக்கக் கருதி மடங்கட்ட இடந்தர வேண்டுமென்று கேட்டபோது, நவாப்பிடமிருந்த மகம்மதிய குருமாரின் தூண்டுதலால் நவாப் "பழுக்கக் காய்ந்த இரும்பைக் கையிலெடுத்து உமது மதவுண்மையை நிரூபியும்" என்றார். சுவாமிகள் அவ்வாறே யொப்புக்கொண்டு, இராஜசபை முன்னிலையில் இரும்பு பழுக்கக் காய்ந்தபோது தமது சீடனை விளித்து இரும்பு நன்ருகக் காய்ந்திருக்கிறதா பார்த்துக் கூறு என்றனர். சீடன் சென்று அக்கினிமயமாகச் சொலிக்கும் இரும்பைக் கரத்தில் தூக்கிச் "சுவாமி! இரும்பு இன்னும் சுடவில்லை" என்ருன்.

அந்த அதிசயத்தைக்கண்ட நவாப்பும், அவர் குருமார்களும் சீடன் மகிமையே யிவ்வாருயின் குருவின் பெருமை யெவ்வா

றிருக்குமோவென்று பிரமித்துவிட்டார்கள். அதன்பிறகு நவாப், சுவாமிகள் பிரியப்பட்டபடி அரண்மனையினெதிரில் மடங்கட்டப் பூமியளித்ததோடு, திரண்ட மானியமும் விட்டார். சுவாமிகளின் சரித்திரத்தில் இதைப்பற்றிய விஷயங்களை இன்னும் விவரமாகக் காணலாம்.

இவ்வளவு அருமையாய் நம்முன்னோராகிய மகான்கள் மடங்களையும், கோயில்களையும் தாபித்ததும், அரசர்கள் முதலியோர் அவற்றிற்குத் திரண்ட பொருளையும் பூமியையும் அளித்ததும் எதற்காக? மகான்கள் அவற்றின் ஆதீனத்தை வகித்து ஹிந்துமதம் பரவச்செய்யவும், முத்தி விருப்புடையோர்க்கு அன்னமளித்து சாத்திரங்களைப் போதித்து ஞானோபதேசம்செய்யவும், அன்னதானம் புரியவும், மடத்தைச்சேர்ந்த ஆலயங்களுக்குவேண்டிய கைங்கரியங்களை நடத்தவும், பொதுவாய் நமது மதத்தைப் போதிக்கவுமே.

பாதைகள் செப்பனிடவும், வைத்தியசாலை பாடசாலை முதலியவைகளுக்கும் செலவுசெய்தல் பொதுநலம் என்று கூறப்படுகிறது. துரைத்தனம் நடப்பதே பொதுநலத்திற்குத்தான். ஆகையால் எந்தத் துரைத்தனகாரியத்திற்குப் பொருள் வேண்டியதாயினும் அதற்கு இத்தரும வருமானத்திலிருந்து எடுத்துக்கொள்ள அதிகாரமுண்டாகிவிடும்.

சாதாரணமாக ஜனங்களிடம் வசூலிக்கப்படும் வரிப்பணத்திலிருந்து செலவுசெய்யவேண்டிய பாட்டைகள், வைத்தியசாலைகள், பாடசாலைகள் முதலியவற்றிற்காக இத்தாபனங்களின் வரும்படியிலிருந்து செலவுசெய்வது வெங்கடாசலபதியின் உண்டிப்பணத்தையெடுத்து அல்லாபண்டிகை நடத்துவதுபோலாகும்.

மந்திரிமார்களாகவிருக்கும் நம்மவர்களே நமது மதத்திற்கு இடையூறு செய்யத்தக்க காரியத்தைச்செய்ய நினைப்பது மிக்க விசனிக்கத்தக்கதே. இதோடு இது 1858ஞு நவம்பர்மீ 1உ காலஞ்சென்ற கனம்பொருந்திய விக்டோரியா மகாராணியவர்கள் 'மத விஷயத்தில் துரைத்தனத்தார் தலையிடுவதில்லை' யென்று அளித்த வாக்குக்கு விரோதமாகவிருக்கிறது.

சில மடாதிபதிகள் மதத்தைப் பாதுகாப்பதிலும், பரவச்செய்வதிலும் சிரத்தையின்றி மடத்து வரும்படியை, துரைத்தன அதிகாரிகள் முதலியவர்களுக்கு விருந்தளித்தல், வழக்காடுதல்

முதலிய தகாத விஷயங்களில் செலவு செய்ததும் செய்வதுமே இதற்குக் காரணமாயிற்று. ஆனல் அப்படி அவர்கள் நடவாதபடி தடுக்க வேறு திருப்திகரமான மார்க்கங்கள் எவ்வளவோ விருக்கின்றன. இப்போது கையாட முயலும் மார்க்கம் மதத்திற்கே அழிவையுண்டாக்கக்கூடியது. அதற்கஞ்சியே நாம் இதை வரையத் துணிந்தோம். எவ்வாறு இது மதத்தை யழிக்குமெனின்:—

1-வது.—சில மடாதிபதிகள் மதத்தின் வருமானத்தை யிக்காலத்திற்கு அவசியமான மதப்பிரசாரம், மதபோதனை முதலிய தக்க வழிகளில் செலவிடாமல் மனம்போனபடி செலவு செய்கிருர்கள் என்ற வதந்தி யுண்டாகியிருப்பதால் ஜனங்களுக்கு அந்த ஸ்தாபனங்களிலிருந்த பக்தியும் மதிப்பும் குன்றத் தலைப்பட்டிருக்கின்றன. இம்மடாதிபதிகள் கடவுளுக்கு இரண்டாவதாகக் கருதப்பட்டவர்கள். அவர்களிடம் ஜனங்களுக்கு பக்தியும், நம்பிக்கையும் குன்றின் மடத்தின் பெருமைக்கும், வருமானத்திற்கும் அது இடையூறு செய்யும் என்பதிற் றடையேயில்லை.

2-வது.—இத்தகைய சமையத்தில் மடவருமானம் பாதை போடல், கிணறுவெட்டல், வைத்தியசாலை பாடசாலை தாபித்தல் முதலிய மதசம்பந்தமில்லாதவையும் தரும சம்பந்தமல்லாதவையுமான வழிகளில்—அதிலும் மடாதிபதிகளாலன்றி அன்னியரால்-செலவழிக்கப்படலாம் என்ற ஏற்பாடுண்டாகினல், பிறகு ஜனங்கள் அதை ஒரு மதசம்பந்தப்படாத மடம் என்று கருதி ஒரு காசுமளிக்க மாட்டார்கள்.

3-வது.—கல்வியாளராகிய ஞானவான்களே பெரும்பாலும் மடாதிபதிகளாக அமர்கிறவர்கள். அவர்கள் அம்மடத்திலும் அதைச்சேர்ந்த விவகாரங்களிலும் பூரண சுயாதீனத்தோடு நடந்துகொள்வோர்.

அத்தகையோர் சுயாதீனம் கட்டுப்படுத்தப்பட்டு மடத்தின் வருமானத்தை அன்னியர் செலவுசெய்யவும் அதிகாரம் ஏற்பட்டுவிடின், அப்பதவியை உண்மையான ஞானிகள் ஒருபோதும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். சுயநலங் கருதி அதிகாரிகளுக்கு ஐக்கியப்பட்டு நடக்கக் கூடியவர்கள்தான் அப்பதவியை யேற்றுக் கொள்வார்கள். அத்தகையோர் ஒருபோதும் அப்பதவிக்குத் தகுதியுடையோராகார்கள். மடத்திற்குச் செல்வவந்தர் பெருந் தொகையான பணமளிப்பதும், மடத்திற்கு மதிப்பும் மகிமையும்

ஏற்படுவதும் அந்த மடத்தின் அதிபதியாயுள்ளோர் உண்மையான மகானாக விருப்பதைப் பொருந்தியதாகும்.

அத்தகையோர் அப்பதவிக்கு வருவதொழிந்தால் கொஞ்சக் காலத்திற்குள் மடம் என்ற பெயரே யொழிந்துபோம்-அதோடு நம்மதமும் போம்.

4-வது.—இப்போது அன்னியமத போதகர்கள் நம்மதத்தை யழிக்கவும், நமது மதத்தவரை யெல்லாம் தங்கள் மதத்தில் சேர்க்கவும் பல்வித தந்திரமான வழிகளில் பலமான முயற்சி செய்கிறார்கள். கிருஸ்தவர்களாகிய அவர்களுக்கு இராஜாங்கத்தின் அனுசரணை யிருக்கிறது. அந்த மத போதகர்களுக்கு அவர்கள் நிதிகளிலிருந்து சம்பளம் கொடுக்கப்படுகிறது. அவர்கள் ஆங்காங்கு பாடசாலைகளை வைத்து நம் நாட்டிலுள்ள தாழ்ந்த வகுப்பாருக்குக் கல்வி கற்பித்தல், உடை, உணவு அளித்தல், ஜீவனத்திற்கு வழிகாட்டல், அவர்களைச் சீர் திருத்தல் முதலிய காரியங்களைச் செய்து தங்கள் மதத்தில் சேர்த்துக்கொள்கிறார்கள்.

அந்தோ! இச்சமயத்தில் நமது மடங்கள், மதஸ்தாபனங்கள், கோயில்கள், இவைகளின் வரும்படியை முக்கியமாய் இத்தகைய வழிகளில் நாம் செலவு செய்யவேண்டியது இன்றியமையாத கடமையாயிருக்கிறது. நமது சகோதரராகிய தாழ்ந்த வகுப்பாரைச் சீர்திருத்தி, அவர்களுக்காகத் தருமபாடசாலைகளை யேற்படுத்தி, அவர்களுக்கு மதக்கல்வியுமளித்து வேண்டிய உதவிகளைச் செய்து அன்போடு ஆதரித்து, அவர்கள் தங்கள் முன்னோரின் சத்தியமும் பூர்வீகமுமான மதத்தை விட்டு நீங்காவண்ணம் செய்யவேண்டியதல்லவோ மதத்தைக் காப்பாற்றுவதற் கடையாளம்.

இத்தகைய சமயத்தில் அதற்கு நேர்மாறாக மடங்கள் என்ற பெயரே மறைந்துபோகும் வண்ணம் மேற்கண்ட மசோதா சட்டமாகும்படிச் செய்தால் அன்னிய மதத்தார் நமது மதத்தை யழிப்பதற்கு, அவர்களுக்கு உதவிசெய்வதேயாகும். நேரே யுதவி செய்யவில்லையென்றால், நமது மதத்தாபனங்களின் செல்வத்தை (வேறு வழியில் செலவழிப்பதால்) குறைத்து, மதப் பிரசாரம் செய்வதற்கு அவசியமான அனுகூலங்கள் இல்லாமற் செய்யும் வழியாய், அன்னிய மதஸ்தர் நமது மதத்தை யழிக்க உதவி செய்வதாகவே ஆகிறது.

நமது ஆசாரம், சீர்திருத்தம், நாகரீகம் யாவற்றிற்கும் மதமே

அஸ்திவாரமன்றோ. தருமம் செய்வதாயினும் காலத்திற்குத் தக்க தருமத்தையன்றோ செய்யவேண்டும். நமது மதத்தைப் பாதுகாக்கவேண்டியது அவசியமாயிருக்கும் இக்காலத்தில் அதற்கு வேண்டியதைச் செய்வதை விட்டுப் புது மடங்கள் கட்டுதல், கோயில்கள் கட்டுதல் முதலிய காரியங்களைச் செய்வது சுவரின் அஸ்திவாரத்தை வெள்ளம் அறுத்துக்கொண்டிருக்கையில் மேலே சித்திரம் எழுதிக்கொண் டிருப்பவன் செயலாகுமே யன்றி வேறில்லை.

ஹிந்துக்களுக்கு மதமே ஆன்மாவினும் சிறந்ததென்றும், சனாதன தர்மத்திற்கு மேற்பட்ட தொன்றுமில்லை யென்றும் வாயாற் கூறிக்கொண்டு, மதத்திற்குக் கேடுண்டாவதைத் தடுக்காமல் வாளா விருப்பதில் பயனென்னை. முற்காலத்தில் நம் முன்னோராகிய சமயாசாரியர்கள், ஆழ்வாராதியர் முதலிய மகான்கள் புறமத கண்டனம் செய்து நமது மதத்தை நிலைநிறுத்தினர். சங்கராச்சாரியர் பாரதபூமி முழுதும் சென்று புறச்சமயங்களை வாதில் வென்று திக்விஜயம் செய்து நமது மதத்தை நிலைநிறுத்திப் பரவச் செய்தார். இப்போதுள்ளவர்கள் மதத்தைப் பாதுகாக்கவாவது சிரத்தை யெடுத்துக்கொள்ளவேண்டாமோ. முன்னே நமது மதத்திற்கு மிக்க தீங்கு விளைவிக்கத்தக்க இம்மசோதா சட்டமாகாவண்ணம் தடுக்கவேண்டியது ஹிந்து என்ற ஒவ்வொருவனுக்கும் முதற்கடமையாகவிருக்கிறது.

"ஓ! எம்பொன்னம்பலக் கூத்தரே! இடிவிழச் செய்தும், வைகையில் ஏடேறவிட்டும், சம்பந்தர் எழுதிய ஏடு தீயில் வேகாது செய்தும், நீற்றறை குளிர்ச்சியாயிருக்கச்செய்தும், கருங்கல் தெப்பமாகச் செய்தும், விஷ மமுதாகச் செய்தும், நல்லரவின் விட நீங்கச் செய்தும், முதலையுண்ட மகவை உயிர்பெற்று வரச் செய்தும் இவ்வனாதிமதம் நிலைத்தோங்க வருள்புரிந்த கருணாநிதியே! உமது பேரருளே இவ்விக்கட்டினின்றும் நம்மதத்தைக் காத்தருளல் வேண்டும். 'நம்மவர்க்கு அதிகாரம் கிடைத்தால் நமக்கே தீங்காய் முடியும்' என்று கூறுவோர் வாக்கு மெய்யாக முடியாவண்ணம் கிருபை பாலிக்க வேண்டும்" என்று நாம் அனைவரும் ஆனந்தத் தாண்டவம் புரியும் ஆதிநாயகனைப் பிரார்த்திப்போமாக.

ஓம் தத் ஸத்.



## "தந்தையை மறப்பதும் தகுதியோ"

"உயர்வற வுயர்நல முடையவன் யவ னவன்
மயர்வற மதிநல மருளினன் யவ னவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவ னவன்
துயரறு சுடரடி தொழுதெழன் மனமே
(திருவாய் மொழி)

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச்சிறப் பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு (ஆன்ரோர்)

எமதன்பின் மிக்க நண்பர்காள்!

கண்டிநகர்வாசரு மெமதாப்த நேச விஸ்வாசரும் சிற்சில நூல்கட்காசிரியருமாகிய ஸ்ரீமந் சு. செல்வநாயகம் அவர்கள் ஆனந்தபோதினியில் "தாயை மறப்பதும் தர்மமா" என்ற மகுடம் புனைந்தற்புதமாய் பகிரங்கப் படுத்திய வாசகத்தைக் கண்ணுற் றகமகிழ்ந்தேம்.

அவ்வரும் பெரும் வாக்கியங்களனைத்தையும் நோக்குங்கால் எமக்குத்தேனெனத் தித்தித்ததன்றே. சுடர் விளக்காயினும் தூண்டுகோலொன்று வேண்டுமென்ற ஆன்றோர் வாக்கைக் கைக்கொண்டின்னவரை மேன்மேலு முற்சாகப் படுத்துமாறு எம்மாலியன்றவரை இந்த "தந்தையை மறப்பதும் தகுதியோ" என்ற வியாசத்தை வரையத் துணிந்தேம். என்க.

இன்னவரின்னு மிதனைப்போன்ற "ஸத்" விஷயங்களை இம்மாநிலத்தாருக்குப் புகட்ட முன்வருவரேல் பெரும்பாலும் நன்மை பெருகுமென்பதை யாமீண்டு மிவண்கண் பொறிப்பது மாவசியக மின்றே. இவ்வரிய ஸஜ்ஜந இளவலைப்போலின்னும் பலர் முன் வருவரேல் நமது "சிவமதம்" மிகவு முன்னதஸ்தானத்திற்கு வரும் என்பதும் எட்டுணையும் திண்ணமே. இதுநிற்க,

அண்ட பிண்ட சராசரங்க ளெல்லாவற்றிற்கும் அதி சிரேஷ்டகர்த்தாவும் எல்லா மங்களங்கட்கு மாதிபீடமுமாகிய சிவபெருமானே பரமபிதாவென்பது முண்மையே. அப்பிரான் ரூபியாயு மரூபியாயுமிருக்கிறதாகவுமெழுதாக்கிளவி விளம்புகின்ற தன்றே? அஃதெவ்வாறெனில்,

"மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் மாசொன் றில்லா
ளொப்புடைய னல்ல னொருவ னல்ல
னோரூர னல்ல னுவம னில்லி
யப்படியு மந்நிறமு மவ்வண் ணமு
மவனருளே கண்ணாகக் காணி னல்லா
லிப்படியன் இந்நிறத்த னிவ்வண் ணத்த
னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொ ணாதே"

என்றும் பெரியோர் கூறியுள்ளார்.

அப் பரமபிதாவானவர் ஆதி அனாதியராய், ஆதியந்த மில்லாதவராய், ஆதிமத்தியந்த ரஹிதராய், அநாதிமல முத்தராய், சர்வ வியாபகராய், நித்தியராய், சர்வஞ்ஞராய், சர்வானுக்கிரகராய், சர்வகர்த்தராய், அடியார்களிடர்களையும் அருட்பெருஞ்ஜோதியாய், சின்னமாத்திர மூர்த்தியாய், அதிசூக்மராய், அதிமகானாய், நிராதரராய், நிர்க்குணராய், சாந்தராய், சர்வதோமுகராய், சுயம்புவாய், நிருபாதிகராய், சுவப்பிரகாசகராய், அதிபரமாப்தராய், தனக்குவமை யில்லாதவராய், அநாதரக்ஷகராய், மார்க்கசகாயகராய், ஈறில்லாதவராய், மாறில்லாதவராய், சிறியதற்குச் சிறியதும், பெரியதற்கதினும் பெரியதுமாய் எங்கும் விளங்கி, படைத்தல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அநுக்கிரகித்தல் என்னும் பஞ்சகிருத்தியங்களையும் தம் பிரயோசனங்குறியாது ஜீவகோடிகளி னயங்கருதிச் செய்தருளும் ஜகத்பதியாயுள்ளவர்.

அவர் அமல, விமல, நிர்மல, ஸ்வச்ச பிரசாந்த, அவியாகுல நிராகுல, சாந்தசித்த, சுத்தசாட்குண்ய, ஸர்வவல்லப கிருபாகரர் என்றும் எல்லா மங்கள லக்ஷணங்களும் பொருந்திய சிவபொருமானே முழுமுதற் கடவுள் என்றும் சர்வலோகங்கட்கும் இவரே பரமபிதாவென்றும் இவர் அருளிய வேதமே, அனாதி மதமென்றும் சாஸ்திரம் முறையிடுகின்றது.

இந்த மார்க்கத்திலேயே தான் நித்தியமான மோக்ஷ சாம்பிராஜ்யத்தை யடையும் வழி வகைகளையும், வேதம், ஆகமம், ஸ்மிருதி, புராணம் முதலிய பகிரங்கசாஸ்திரதாற்பரியங்களையும், முத்திக்கு மார்க்கமாகிய ஞானம், பக்தி, நிஷ்டை, யோகம், கருமம் முதலிய அந்தரங்க பகிரங்க சூக்குமமான அரியபெரிய விஷயங்களையும் நன்குணரலா மென்பதும், சரிகை, கிரிகை, யோகம், ஞானம், என்னுமிந்த நான்கு ஸாதனங்கட்கும் முறையே 1. சாலோக 2. சாமீப 3. சாரூப்ய 4. சாயுச்சிய என்று சொல்லப்படா நின்ற பதவிகள் லபிக்கும் விதிகளும் தெள்ளத் தெளிய விளங்குகின்ற தென்பதும் வெளிப்படையே.

இப்பரம பிதாவை அதி சிரத்தையுடன் அவரின் திருநாமத்தை சிவமே என்று மூன்று தரம் உச்சரிப்பவரை அவர் பிரியமாய் ரக்ஷிப்பார் என்பதாம். அஃதெவ்வித மெனில்,

"சிவனே சிவனே சிவனே என்பார் பின்
சிவனுமையாளோடேந் திரிவன்-சிவனருளாற்
பெற்ற விளங்கன்றைப் பிரியாமற் பின்னோடிச்
சுற்றும் பசுப்போற் றொடர்ந்து."

ஆகவே மேற் கூறி யிரா நின்ற சாயுச்சிய பதவியடைய ஞானம் வேண்டும்(ஞானம் என்பது வேதாந்ததத்துவம்) இதில் துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் என்று மூன்று வகைப்படும். துவைதம், என்பது ஆத்துமா வேறு பரமார்த்மாவாகிய பிரம்மம் வேறு என்பது, அத்வைதம்

என்பது ஆத்மாவும் மற்றவைகளும் பிரம்மமும் ஒன்றே என்பதாம் வைஷ்ணவர்கள் அநுசரிக்கும் விசிஷ்டாத் வைதம் என்பது பிரமம் வேறு என்றும் ஆத்மாவும் மற்றவைகளும் வேறு என்றும் பிரமமும் ஆத் மாவும் ஒன்றும் என்றும் சொல்வதேயாம் அதெப்படி யென்றால்,

. இப்பூலோகத்தில் ஆத்மாவும் மற்றவைகளும் வேறாக விருந்து கடைசியில் தெய்வத்தன்மை போன்ற உருவங் கொண்டு கடவுள் சந்நி தானத்திலேயே சேர்ந்திருக்கிறதென்று கொள்ளும் எண்ணம்.

மேற்கண்ட ஞானங்களை பிரம்ம சூத்திரத்தினின்றும் போதாயனர் வியாக்யாநம் பண்ண இதைக்கொண்டு சிவபெருமானே சங்கராச்சாரிய ராக அவதரித்து பாஷியம் செய்து அத்வைதம் என்பதை நிலை நிறுத் தினதுடன் அக்காலத்தில் பிராமண மதத்திற்கு விரோதமான பௌத்த ஜைனியமதங்களைக் கண்டித்து திக்விஜயம் செய்தார் அத்வைதத்தை மத் வாசாரியார் என்பவர் மேற்படி சூத்திரத்தால் நிலை நிறுத்தி பாஷியம் செய் தார்.

விசிஷ்டா த்வைதத்தை ராமாநுஜாசாரிய ரென்பவர் சங்கராசாரி யரைப்போலவே நிலை நிறுத்தினர்.

இந்த ஞானவிஷயமானது மிக வெளிதில் தேர்ந்து கொள்ளத்தக்க தன்று. ஆகலினிதற்கு பரம தந்தையாராகிய சாக்ஷாத் சிவபெருமானே நல்லருள் பாலிக்கும் கிருபை யுடையாரென்பதும் சாலவும் உள்ளங்கை நெல்லிக்கனியே. இஃதெவராலும் பிறிதாகாத காரியமன்றோ?

எங்கள் பரமபிதாவாகிய சிவபெருமான் தம் மெய்யடியார்களை ஆட் கொள்ளுமாறு தாமாகவே வந்து காட்சி கொடுத்தருளி யிருக்கிறதாகவும் பல சைவநூல்கள் அன்று மின்று மென்றும் சான்றாகுமன்றோ. உதாரண மாக ஸ்ரீ கண்ணப்ப நாயனார் இன்னும் பல பக்த சிரோன் மணிகளின் திவ்ய சரித்திரங்களில் காண்க. ஆகலின்,

இப்பெருங் கருணைத் தடங்கடலாகிய தந்தையை நாம் எங்ஙன் மறப்பது தகுதி. அந்தோ என்றன் அரிய நேசர்காள் இனியாகுதலிவ்வரிய வாசகத்தைச் சிந்தித்து நினைமின் நினைமின் நித்யராகிய எந்தையை சிவ பெருமானை நினைமின் நினைந்துய்மின் சுபம்!!

ப. இராமலிங்கப்பிள்ளை

வாரியப்பளை, மாத்தளை, சிலோன்.

---

## கதர் உடை யேன் தரிக்கவேண்டும்?

நாம் டிராம் வண்டியில் வந்துகொண் டிருக்கையில் "சுயராஜ்யந் தான் இன்னும் வரவில்லையே, கதர் உடையேன் தரிக்கவேண்டும்?" என்ற சொற்கள் நமது செவியில் வீழ்ந்தன. இதைக் கூறியவர் ஓர் சாதா

ரண மனிதர். இதனுல் நமது நாட்டுப் பாமர ஜனங்களின் அறிவு என்ன நிலைமையி லிருக்கிற தென்பதும், நமது க்ஷேமத்திற்காக நாம் செய்ய வேண்டியது இன்ன தென்பது கூட அவர்களுக்கு விளங்கவில்லை யென்பதும் தெரிகின்றனவன்றே. இன்னும் தேச பக்தி யின்னதென்றே இவர்களுக்குத் தெரியவில்லை யெனலாம்.

சுயராஜ்யம் வருவதானுல்தானு கதர் உடை தரிக்கவேண்டும்? கதர் உடையென்றுல் என்ன? அது ஒரு விசேஷ ஆபரணமா? அல்லது ஜெயவிருது என்ற எண்ணமோ? அப்படி யொன்றுமில்லை. சுயராஜ்யம் வருவது என்பது பிரத்யேக விஷயம். ‘கதர் உடை’ என்றுல் நம் நாட்டிலுற்பத்தியாகும் பஞ்சை நாமே நூலாக நூற்றுத் தரியில் சீலையாக நெய்து தரித்துக்கொள்ளும் உடை யென்பதே பொருள். அதாவது நம்நாட்டுத் துணிகளை நாம் உடுத்துக்கொள்ள வேண்டு மென்பதே அதனர்த்த மன்றி வேறில்லை. நமக்கு அப்புத்தி வந்தால் பிறகு சுயராஜ்யம் தானேவரும்.

உலகில் மனிதர் வாழ்க்கைக்கு முக்கியமாய் வேண்டியவை பசியை யொழிக்க உணவும், மானத்தை மறைக்கக் குளிர் வெயிலைத் தாங்க உடையும் ஆக இரண்டுமே. மிருகங்களுக்கு உணவு ஒன்றே வேண்டும். எந்தத் தேசத்தார் தங்களுக்கு வேண்டிய உணவு உடை இவற்றைத் தாங்களே யுற்பத்திசெய்து கொள்ள வில்லையோ அவர்கள் மனிதராகவாழ அருகரல்லவென்றே கூறலாம். நம்மானத்தை மறைக்க உடைக்கு அந்நியநாட்டை யெதிர் பார்த்துக்கொண் டிருப்போர் வாழ்க்கையும் ஒருவாழ்க்கை யாகுமோ. அதைவிடச் சோம்பேறித்தனமும் அகௌரவமும் வேறில்லை. அதோடு அது தரித்திரத்தை யுண்டாக்கு மென்பது திண்ணம். கடவுள் நமக்கு வேண்டிய இயற்கைப் பொருள்கள் யாவும் நம் நாட்டில் உற்பத்தியாகுமாறு அருள் புரிந்திருக்க நமக்கு நாமே தரித்திரத்தை யுண்டாக்கிக் கொள்வது மதியீனமன்றே.

நம் நாட்டில் உற்பத்தியாகும் உடையையே நாம் தரிப்பதால் பலவித நன்மைகள் நமக் குண்டாகின்றன. எவ்வாறெனின்;—

1-வது. பருத்தியைப் பயிர்செய்வதால் விவசாயம் அதிகமாக நடைபெறுகிறது.

2-வது. அப்பருத்தியை வர்த்தகர் மொத்தமாய் வாங்கிவைத்துக்கொண்டு சில்லரையில் நூல் நூற்போர்க்கு விற்று இலாபம் பெறுகிறுர்கள். இதனுல் வர்த்தகமும் நடக்கிறது.

3-வது. பஞ்சை நூலாக நூற்பதால் நம் நாட்டிலுள்ள ஏழைகள் ஆடவர், பெரும்பாலான மாதர், இவர்களுக்குச் சீவனத்திற்கு வழியேற்படுகிறது.

4-வது. பிறகு இந்த நூலைக்கொண்டு வஸ்திரம் நெய்வதால் நெசவுத் தொழில் விர்த்தியடைகிறது.

5-வது. நூலுக்குப் பலவித நிறங்கொடுக்கும் வேலையில் சாயம்போடு வோர்க்கும் வேலையகப்படுகிறது.

6-வது. வர்த்தகரே, நெய்த வேஷ்டிகள் சேலைகள் முதலியவற்றை வாங்கிச் சில்லரையில் விற்கவேண்டும். இதனால் நாட்டு ஜவுளி வியாபாரம் அதிகமாகும்.

7-வது. நமது நாட்டில் கூலிகுறைவு. மேலும் நம் நாட்டுத் துணிகளின் விலையில் எவ்விதமான வரியும் ஏற்றப்படுவதில்லை. அதனால் துணி விலை சரசமாகும். நம் செலவு குறையும்.

8-வது. இதுமட்டு மல்ல. நாம்கொடுக்கும் நூல் நூற்கும் கூலி, நெசவுக்கூலி, சாயக்கூலி, வர்த்தகர் இலாபம் ஆகியயாவும் நம் நாட்டாரே-நமது சகோதரரே-யடைகிறார்கள். இவர்களெல்லாம் ஒரேகுடும்பமாயின் நாம் கொடுக்கும் பணம் குடும்பத்திலேயே யிருக்கிறது; யாவர்க்கும் உணவாகிறது. உடையும் சும்மாகிடைத்த தாயிற்று.

நாம் நம் நாட்டுத் துணியையே யுடுப்பதால் நாம் செலவிடும் பணம் நம் நாட்டிலேயே நம் சகோதர சகோதரிகளுக்கே அளிக்கப்பட்டதாகிறது.

இதை விட்டு அந்நிய நாட்டுத் துணிகளை யுடுத்தால் எல்லாவிஷயங்களிலும் இவற்றிற்கு நேர்மாறான பலனே யுண்டாகிறது. அவற்றைச் சுருக்கமாகக் கூறுகிறோம்.

நமது நாட்டி லுற்பத்தியாகும் பஞ்சு வெளிநாட்டிற்குச் செல்கிறது. அதுமுதல் அது துணியாகிவந்து நமது தேகத்தி லேறுமட்டும் அது சம்பந்தமாய் எதெதற்கு நாம் பணம் கொடுக்கிறோம் தெரியுமா?

1-வது. பஞ்சுக்கு இங்கிருந்து ஏற்றுமதி வரி, சீமையில் இறக்குமதி வரி, கப்பல் கூலி.

2-வது. நூல் நூற்கும் கூலி.

3-வது. நெசவுக்கூலி.

4-வது. சாயக்கூலி.

5-வது. அங்குள்ள வர்த்தகர்லாபம்.

6-வது. துணிவரும்போது சீமையில் ஏற்றுமதி வரி, இங்கு இறக்குமதி வரி, கப்பல்கூலி, கிடங்குக் கூலி.

7-வது. இங்கு அவற்றைவிற்கும் கம்பெனிக்குத்தரகு, தரகர்கூலிகள்.

8-வது. அதை வாங்கும் நமது வர்த்தகர்களின் செலவு, இலாபம், இவ்வளவும் துணியின் விலையோடு சேர்கிறது.

நேயர்களே! இத்தனைசெலவில் நம் நாட்டுவர்த்தகர் பெறும் இலாபம் ஒன்று தவிர மற்றயாவும் அன்னிய நாட்டாரே யடைகிறார்கள். அதிலும் அந்நியநாட்டுக் கூலி விகிதம் மிக்க அதிகம். நம் நாட்டுப் பஞ்சுக்கே இவ்வளவும்கொடுத்து நாம் அதைத்துணியாய் வாங்கிக் கட்டிக்கொள்கிறோம்.

இப்படி நாம் மூடத்தனமாய் நடந்துகொண்டால் தரித்திரம் நம்மைப் பாதாளத்தி லழுத்தக் கேட்க வேண்டுமோ. சற்று அறிவைக்கொண்டு நாம் கூறியவிஷயங்களைக் கவனித்துப்பார்த்தால் கதர்உடை தரிப்பதால் எத்தகைய நன்மை யிருக்கிறது, கௌரவ மிருக்கிறது என்பது நன்கு விளங்கும், நம் நாட்டின் தரித்திரம் ஒழிந்து நாம் க்ஷேமப்பட வேண்டுமாயின் நம் நாட்டுத்துணியையே நாம் கட்டவேண்டு மென்றும், இன்றேல் நம் நாட்டிற்கு நாமே தீங்குவிளைக்கும் துரோகிகளாகிறோம் என்பதும் நன்குவிளங்கும்.

சகோதர சகோதரிகளே! இனியேனும் நம் தாய்நாட்டின்-பாரதமாதின்-நன்மையைக் கருதிப் பாபத்திற்கஞ்சி நம் நாட்டில் நூற்று நெய்யப்பட்ட துணியையே யணியுங்கள். பாரதமாதாவாகிய பராசக்தி அருள் புரிவாளாக.

சீடன்.

---

## கம்பராமாயண நீதிச் செய்யுள்.

(257-ம் பக்கத்தொடர்ச்சி)

அரியரர் தம்முள் அபேதராகையால், சிவன் பெரியவன் விஷ்ணு பெரியவனெனப் பேதித்துத் துவேஷம் பாராட்டி வாதாடித் திரிவோர் நற்கதி யடையாரென்னுங் கருத்தைக்கொண்ட,

அரனதிக னுலகளந்த அரியதிக னென்றுரைக்கு மறிவிலோர்க்குப்
பரகதிசென் றடைவரிய பரிசேபோல் *
* * * * (கிட்கிந்தா-நாடவிட்ட-24.)

என்ற செய்யுளும் ஈண்டறியத் தக்கதாம்.

11\. இறப்பெனு மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
மறப்பெனு மதனின்மேற் கேடு மற்றுண்டோ
துறப்பெனுந் தெப்பமே துணைசெ யாவிடிற்
பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ.

(அயோ-மந்திர்-21)

சக்கர வர்த்தியார் நாட்டை ஸ்ரீராமனிட மொப்புவித்துத் தாம் துறவு மேற்கொளல் வேண்டுமென்றெண்ணித் தனயனை விளித்து, “கண்மணி! இவ்வுலகத்தில் எல்லாவற்றினும் வெகு நிச்சயமாய்க் கூறக்கூடுவது மரணமே. அது தவறாது நம்மை வந்தெய்தும் என்னும் உண்மையை மறப்பதைவிட மன்னுயிர்க்குப் பிறிதொரு கேடுமுண்டோ? இல்லை. தவிர, அம்மரணத்திற்குக் காரணமாகிய ஜனன சாகரத்தைத் துறவென்னுந் தெப்பத்தாலன்றி வேறொன்றாற் கடத்தலியலுமோ? ஆகையால், யானும் அத்துறவையடைய விழைந்தேன்” என்றனர் என்பது இதன் பொருளாம்.

இஃதோர் சிறந்த உபதேசம். மரணத்தின் வாயினின்றும் தப்பிப் பிழைத்தோ ரெவருமிலர். நாம் கூற்றுவன் வாயிலிருக்கிறோம். வாயை மூடி அவன் நம்மை விழுங்குங் காலம் எப்போதோ? “இப்பவோ

பின்னையோ இன்னும் சற்று நேரத்திலோ?" "நேற்றிருந்தான் இன்று வெந்து நீருனன்," என்னும் பெருமையுடைய திவ்வுலக வாழ்க்கை என்னும் இக்கொள்கையை மறவாது மனத்தமைப்போமாயின், அஃதொன்றே நம்மை யீடேற்றும் மார்க்கமாகும். எவ்வித தீய காரியங்களையும் செய்ய வொட்டாது. சகல பந்தங்களையும் போக்கும். நாம் அதைச் சுத்தமாய் மறந்தேவிட்டோம். கற்ப கோடிகாலம் வாழ்ந்திருப்போ மென்னு மெண்ணமே நம் மனத்தில் வேரூன்றிக் கிடக்கிறது. இம்மறதியே எல்லாக் கேடுகளுக்குங் காரணம். ஏதோ மயர்ன வைராக்கியமாய்ச் சில வேளைகளில் உண்டாம் நினைப்பும் உடனே அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டு விடுகிறது. அவ்வஞ்ஞானத்தை நீக்கி, இதைச் சிந்தித்துக்கொண்டேயிருப்போமாயின், பிறவிக் கேதுவாகிய எல்லா வகைத் துன்பங்களினின்றும் விடுபடுவோம். இதை மறப்பதைவிடக் கெடுதி வேறில்லை யென்பது முதலிரண்டடிகளின் கருத்தாம்.

பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம். (மணி மேகலை)

என்றபடி, பிறவியே துன்பற்திற் கிருப்பிடமாவது. பிறவி யுள்ளவரை துன்பம் நீங்குவதில்லை. அப்பிறவியோ கடலைப்போல் கடத்தற் கரியது. சர்வ துக்க நிவிர்த்தியை விரும்புவோர் பிறவியாகிய கடலைக் கடத்தல் வேண்டும். அதற்குப் புணையாயிருப்பது துறவேயாம். அது "யான், எனது" என்னும் அகங்கார மமகாரங்களாகிற அகப்பற்று புறப்பற்றுக் களை விடல்.

யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த வுலகம் புகும்... ... . ... ... (குறள்)

இத்துறவை யடைந்தோரே பிரம்மஞான வாயிலாகப் பிறப்பை யொழிப்பார். ஏனையோர்க்காகா. இதுவே தவமெனப்படுவது.

(ஈண்டுத் தயரதன் கருதியது புறத்துறவே, அது மனைவியோடு செல்லில் வானப் பிரஸ்த மென்னப்படும். ஆயினும் அகத்துறவின்றிய புறத்துறவு பயனற்ற தாகலானும், இல்லறம் இடையூறுண்டாக்குமென்பது கருதியே துறவறங் கொள்ளவேண்டு மென்பராகலானும், இவ்வாறு கொள்ளப்பட்டது.)

இக்கருத்தைக்கொண்ட இந்நூலிலுள்ள வேறுவாக்கியம்.

துறத்தலும் நல்லறத் துறையு மல்லது
புறத்தொரு துணையில்லை பொருந்து மன்னுயிர்க்கு.

* * * * * *

12. தூம கேது புவிக்கெனத் தோன்றிய
வாம மேகலை மங்கைய ரால்வரும்
காம மில்லை யெனிற்கடுங் கேடெனும்
நாமமில்லை நரகமு மில்லையே. (மந்தரை சூழ்ச்சி-21)

பட்டத்திற் கொப்பிய இராமனுக்கு நீதிகளைக் கூறும் சந்தர்ப்பம், "ஸ்ரீராமா! இவ்வுலகக் கேட்டிற் கறி குறியாகத் தோன்றும் தூமகேது வென்னும் ஓர்வகை வால் நக்ஷத்திரம்போலுள்ள, பரஸ்திரீகளா லுண்டாகும் காமமென்பதில்லையானால், கேடு என்பது மொன்றிராது. நரகமுமிராது." என்று கூறப்பட்டது. இதனால்,

"பகை பாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்"

என்ற திருமறையின்படி, பிறர்மனை நயத்தலாகிய காமத்தால் பல கெடுதிகளுண்டாம். செல்வம், அறிவு, அழகு முதலிய கெடும். நரகஞ் சித்திக்கும். இக்காமமே கொடிய பகையாகும். பல நாளும் பல துன்பங் களையுந் தந்து இம்சிக்கும் காமத்தினும் உண்டவுடன் உயிர்போக்கும் நஞ்சே சிறந்தது. ஆகையால் இக்காமத்தீயை அறிவென்னும் நீரால் அவித்தொழுகல் வேண்டுமென்பது அறியக்கிடக்கின்றது.

இக்கருத்தைக் கொண்ட இந்நூலிலுள்ள வேறு செய்யுள் வாக்கியம்.

"காமத்தாற் கனலும் வெந்தீ, சீலத்தா லவிவதன்றிச் செய்யத் தானுவதுண்டோ."

13. பரவு கேள்வியும் பழுதில் ஞானமும்
விரவு சீலமும் வினையின் மேன்மையும்
உரவி லோய்தொழற் குரிய தேவரும்
குரவ ரேயெனப் பெரிது கோடியால் (கிளைகண்டு நீங்கு-106)

அந்த நற்பெருங் குரவ ராரெனச்
சிந்தை தேர்வுறத் தெரிய நோக்கினல்
தந்தை தாயரென் றிவர்க டாமலால்
எந்தை கூறவே றெவரு மில்லையால்... (ஷை-107.)

அரணிய மடைந்த அண்ணனை யனுசனுகிய பரதன் சென்றழைக்க விராகவ னிளவலை நோக்கி, "தம்பி பரத! மிக்க கேள்வியும், குற்றமற்ற ஞானமும், ஒழுக்கமும், வினைகளின் மேன்மையும், தொழத்தக்க கடவுளும், சகலமும் பெரியோர்களே. அப்பெரியோர்கள் யாரென வாராயுமிடத்துத் தந்தையும் தாயுமே யன்றிப் பிறரொருவருமல்ல. ஆகையால் பெற்றோர் வார்த்தையை மீறலாகாதென்றனன்" என்பதாம்.

இதனால், "ஈன்றாரினென்ன கடவுளுமில்", "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்றபடி, பெற்றோரைத் தெய்வமாக்கருதிப் பேணல் வேண்டுமென்பதும், அவர்களை யுதாசினம் பண்ணி வருத்தி "மாதா மனங் கலங்க மகேஸ்வரபூஜை" யென்றபடி, எத்துணைத் தானதருமங்களியற்றினும் பரம பாகவத சிகாமணியாக விளங்கினும் பயனில்லை யென்பதும் பெற்றாம்.

14. மாதவத் தொழுகலெம் மறைகள் யாவையும்
ஓதலெம் ஓதுவார்க் குதவ லாற்றலெம்
மூதெரி வளர்க்கிலெம் முறையி னீங்கினேம்
ஆதலி னந்தண ரேயு மாகிலேம்...... (ஆர-அகத்திய-14.)

தண்ட காரண்ய வாசிகளாகிய அந்தணர்கள் காகுத்தனிடம் வந்து "சீதாபதி! அரக்கரின் கொடுமையால் நாங்கள் தவஞ் செய்ய வியலாதவர் களானேம். வேதமோதலும் ஓதுவித்தலும் செய்கிலோம். காருகபத்யம், ஆகவனீயம், தக்ஷிணுக்கினி யென்னும் முத்தீவேள்வியு மியற்றகில்லோம். அதிகமாகச் சொல்வானேன்; எங்கள் ஒழுக்கமும் குன்றியதாகையால் நாங்கள் பிராம்மணர்களென்னும் பெயர்க்கு முரியராகோம்" என முறையிட்டனர். (எ-று) இச் செய்யுள் ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தலென்னும் அறு தொழிலாளராகிய அந்தணரியல்பை விளக்குகின்றது.

பிரம்ம ஞானமடைந்தோர் பிராம்மணர். வேதாந்தப் பொருளை மேற்கொண்டோரே அந்தணர். அருளுடையோரே அந்தணர். உபநயனம் என்பதற்குப் பிரம்ம தரிசனத்திற் குதவியாகிய ஞானக்கண் என்றும், அதைப்பெற்ற பின்னரே ஒருவனுக்கு பிராம்மணத்வ முண்டாவதன்றி அதற்கு முன் அவன் சூத்திரனுக்கொப்பாமென்றும்; இருபிறப்பாளர் அல்லது துவிஜர் என்னும் பெயருடைமையே இதை வற்புறுத்துவதாமென்று முணர்க.

அந்த அணர்=வேதாந்தப் பொருளையே மேற்கொண்டோர்.
அம்தண் அர்=அழகிய குளிர்ந்த அருளை யுடையோர்.

"அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்" ... ... (குறள்.)

15. தக்க வின்ன தகாதன வின்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்நெறி
புக்க வேலவ் விலங்கும்புத் தேளிரே. (கிட்கிந்தா-வாலிவதை-112.)

மிருகங்களாகிய எங்களிடத்தில் நல்லொழுக்க மிருக்குமோ? இராதாகலின் நீ என்னைக் கொன்றது குற்றமே யென்ற வாலியை நோக்கி தாசரதி கூறுவார். "நன்மை தீமைகளின் தன்மையை யாராய்ந்துணரு மறிவில்லாமையா லன்றோ, மிருகங்களுக்கும் மனிதருக்கும் பேத முண்டாயிற்று? இது செய்யத்தக்கது இது செய்யத்தகாதது என்றாராய்ந் துணற்று மறிவிலராயின், அவர்கள் மானிடராயினும் மிருகங்களே; அவ்வறிவைப் பெற்றிருந்தால் மிருகங்களும் தேவர்களொப்ப வுயர்ந்தவையேயாம்." என்றார் (எ-று) ஆகையால் உயர்வாகிய மானிடப் பிறவியைப் பெற்ற நாம் அதற்கேற்றவாறு காரியா காரியங்களை யாராய்ந்து, விதி விலக்குகளின்படி விதிகளை மேற்கொண்டும், விலக்குகளை விலக்கியும் ஒழு

கினால் மாத்திரம் மனிதரென்னும் மாண்புடைப் பெயர்க்கு அருக ராவோம். வெறும் உடலுருவால் உயர்ந்தோராகோம் என்பதை யுணர்ந்து ஒழுகுவோமாக.

(தொடரும்)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## ஜாதிபேதமும் தேசதிக்கும்

இந்தத் தென் இந்தியாவில் ஜாதிச் சண்டைக்கு எனக்கு ஒரு விசித் திரமான காரணம் தோன்றுகிறது. இந்தியா (Map) படத்தைப் பார்க்கும் போது வடபுறம் விசாலமாகவும், தென்புறம் குறுகியும் இருக்கின்றன. அதாவது மேலே போகப்போக விசாலமான நோக்கமும், கீழேவரவரநெ ருக்கமான பார்வையும் உண்டாகின்றன. அதுவுமன்றித் துருவனும், குபேர னும் வடதிக்கு அதிபதிகள்; ஆனால் இயமனும் தலைகீழ்நிற்கும் திருச்சங்கும் தென்திக்கு நாயகர்கள். அதுதான் அப்படி என்றால், நதிகளிலும் வட நாட்டுக் கங்காநதி ஜீவநதியாயும் (அதாவது எப்பொழுதும் ஓடுவதாயும்) பனிக்கட்டி கரைந்து கரைந்து நமக்கு அவசியம் தேவையான கோடை காலத்தில் வெள்ளம் வருவதாயும் இருக்கிறது; ஆனால் நம்முடைய தென் னாட்டுக் காவேரிநதி மழைக்காலத்தில் மாத்திரம் ஓடி அப்புறம் உலர்ந்து போகிறது. நம்முடைய தேசமிருக்கட்டும். அமெரிக்கா தேசத்திலும் 1861ஆ குடிகள் சண்டை செய்தபோதும் (Civil War) வடநாட்டார் எதேச்சை வேண்டுமென்றும், தென் தேசத்தார் அடிமைத் தேவையென் றும்தான் போர்புரிந்தார்கள். அதே மாதிரிதான் இப்பொழுதும் இவ்விடம் ஜாதிச்சண்டை ஆரம்பித்து பிராம்மண-அப்பிராம்மண விவாதம் நடந்து வருகிறது. ஆனால் இந்தக் கலியுகத்தில் கலகம்தான் பலமாகிக்கொண்டு வரும்போலிருக்கிறது. "கலி" என்றால் கலஹம் என்றே பொருள். உலக சகோதரத்வம் வாயில் பேசும் மேல் நாட்டாருக்கும் "வர்ண" ச்சண்டை (Colour-War) இருந்து கொண்டே இருக்கிறது. உதாரணமாக இந்தியர் கள் தென் ஆப்ரிகாவில் படும்பாடும் அமெரிக்காவில் நீக்ரோஜாதியார் (மேல்நாட்டுப் பஞ்சமர்கள்) அனுபவிக்கும் துன்பமும் பார்க்கலாம்.

உ. துரைசாமி ஐயர்,
வாலாஜா.

---

## இருதயவியாதி அல்லது பித்தவாய்வு

(267-ம் பக்கத் தொடர்ச்சி.)

அது வாஸ்தவமே. ஏனெனில் கீழ் நாட்டார்கள் மேற்சொன்ன வியா தியைக் குணம் செய்துகொண்டு வந்தாலும், சரீர தத்துவப்பயிற்சியும் சரீரதத்துவங்களின் நிலைமைகளும் அவ்வவற்றின் தொழில்களும் இருப்பி டம் தெரிந்து கொள்ளாத கீழ்நாட்டு வயித்தியர்கள் பலருளர். ஆனால்

கைநாடியைப் பார்த்து வாதபித்த சிலேத்துமங்களில் ஏற்பட்டுள்ள வித்தியாசங்களைச் சொல்லி ஔடதம் கொடுத்து வருகின்றார்கள். அத்த கையவர்களுக்கு மேற்சொன்னதத்துவ உணர்ச்சியுமிருக்குமாகில் பொன் மலர் கந்தமுடையது போலாம். நமது இருதய மானது இரத்தத்தையும் காற்றையும் ஒருவழியில் உட்கொண்டு மீண்டும் அவ்வழியில் வரவிடாது எலிபிடிக்கும் போனைப்போல் அடைப்பதால், மறுவழியில்சென்ற இரத்த மானது காற்றின் சகாயத்தாலும் அவற்றின் பலத்தினாலும் சரீரத்தி லுள்ள சகல நரம்புகளுக்கும் சென்று சரீரத்தில் மேனியையும் பலத்தை யும் கொடுத்துக் கொண்டு வருகின்றது. இவற்றுள் காற்றின் சகாய மில் லாமல் இரத்தமானது சரீரத்தில் பரவும் தன்மை இல்லாமையால் எப்போதும் காற்று அவசியமா யிருக்கின்றது. இரத்தக்குறைவு நேர்ந்து காற்று அதிகப்படும் பட்சத்தில் இரத்தத்தோடு காற்றும் பரவிச் சரீரங்க ளில் வலியுண்டாகும்படிச் செய்யும். அப்படி யுண்டாகும் வலிகளையும் பல விதமாய்ப் பிரிக்கவேண்டி வரும். எப்படி யெனின், வாய்வுடன் சம்பந்தப் பட்டுச் செல்லும் இரத்தத்திலும் மேகம் என்னும் இந்திரியம் அதிக உஷ் ணத்தினால் கலந்து விடுமாகில் அதை மேகவாய்வு என்றும், இந்திரியம் கலக் காமல் காற்றுமாத்திரம் பரவுமாகில் உஷ்ணவாய்வு என்றும் அல்லது பித்த மும் கலக்கும்பட்சத்தில் பித்தவாய்வு என்றும் கூறப்படும். அவற்றின்பிரிவு அண்டவாய்வு என்றும், நீர்வாதம் என்றும் இன்னும் அனேக விதங்க ளாய்ப் பிரியும். எத்தனை விதங்களாய்ப் பிரிந்தாலும் அவைகள் யாவும் காற்றையே ஆதாரமாய்க்கொண்டிருக்கும். இவற்றுள் மேகவாய்வு என்பது அதிக உஷ்ணத்தினால் அதாவது பரஸ்திரீகளின் கெட்ட சகவாசத்தினால் சிறுநீர்த்துவார மூலமாய்ச் சிரசிற்கு விஷமேறி இரணமாய் அவ்விடமிருந்து இந்திரியமானது சதா கசிந்து சரீர முழுமைக்கும் பரவி இரத்தத்தையும் கெடுக்கும். அத்துடன் காற்றும் சேரும் பட்சத்தில் இதையே மேகவாய்வு என்றும் மேகப்பிடிப்பு என்றும் கீல்வாய்வு என்றும் சொல்லுவார்கள். இதைவிட வேறுவிதமாய் மேகவாய்வு உண்டாகாது. அப்படி யுண்டாகு மானால் அதை வேறு வியாதியாய்க் கொள்ளவேண்டும்.

(இன்னும்வரும்)

டாக்டர்-மே. மாசிலாமணிமுதலியார்.

---

## வர்த்தகம்

நமது அன்பார்ந்த தைமாத ஆனந்தபோதினியின் தலையங்கத்தில் வர்த்தக விஷயமாக வெளிவந்த அநேக அரிய விஷயங்களை நமது இந்திய வர்த்தகர்கள் கவனித்திருப்பார்க ளென்று நம்புகின்றேன்.

வர்த்தக விர்த்திக்கு இன்னும் இரண்டொரு முக்கியமான விஷயங்க ளும் கவனிக்கவேண்டியவைகளா யிருக்கின்றன. அவை எவையெனில் இந்தியவர்த்தக சாலைக்குள் நுழையும்போது நமக்குக் கொடுக்கும் மரி

யாதை அக்கட்டிடத்தைவிட்டு வெளிவரும் வரைக்கும் இருப்பதுசந்தேகந் தான். ஏதாவதொருசாமான் வாங்கினுல் தப்பித்தோம், அல்லாவிட்டால் அவர்கள் பேசும் அவமரியாதையான வார்த்தைகளைச் செப்பத்தரமல்ல. பெரும்பாலும் குஜிலிக்கடைக்குள் இவ்வழக்கமதிகம். ஆனால் மேல்நாட் டாரிடம் இக்கொடியவழக்கம் கிடையவே கிடையாது. அவர்கள் முதலி லிருந்து கடைசிவரைக்கும் காட்டும் மரியாதையோ நமது சொந்த இனத் தாரிடத்திலும் பெறமுடியாது. அவ்வளவு மரியாதை அவர்களிடம். இன் னொரு அரியகுணம் யாதெனில் எழுதிய கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதுவது. உதாரணமாக:—நான் ஐக்கியமலேய நாட்டில் இருந்த போது சென்னையிலுள்ள பிரபலஜவுளி வர்த்தகர் ஒருவருக்கு 1 டஜன்டுவில் ஷர்ட்அனுப்பும்படியாகப் போஸ்டல் ஆர்டர் 5 ரூபாய்க்கு அனுப்பியிருந் தேன். 1 டஜன் ஷர்ட் அனுப்பினார்களே யொழிய எனது ரூபாயில் எவ் வளவு மிச்சம் இருக்கிறதென்று எத்தனை காகிதம் எழுதினாலும் பதில் இல்லை. அவ்விடமிருந்தே மெஸ்ஸரஸ் ஹெக்கின்பாதம் அவர்களுக்கு ஓர் புத்தகம் அனுப்பும்படியாக போஸ்டல் ஆர்டர் ரூபாய் 8 க்கு அனுப்பியிருந் தேன். அவர்கள் உடனே புஸ்தகம் அனுப்பியதுடன் எனது ரூபாயில் மிச் சம் 6 பைக்கு ஸ்டாம்பு ஒன்று அவர்களுடைய பதிலில் அடக்கம் செய்து அனுப்பியிருந்தார்கள். இன்னம் நம் தமிழ்வர்த்தகர்களின் ஊழல் அநே கம் உண்டு. விரிக்கிற் பெருகுமென்று இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன். இதனால் எவர்களிடம் வியாபாரம் செய்ய விருப்பமிருக்குமென்று நேயர் களே அறிந்துகொள்ளலாம். ஆகையால் மேல் நாட்டாரிடம் வர்த்தக விஷயத்திலுள்ள அநேக நற்பழக்கங்களை நாமும் கற்று அவர்களைப்போல் நாமும் பிரபல வியாபாரம் செய்ய எல்லாம் வல்ல ஈசன் கருணை புரிவாராக.

எம். எஸ். புருஷோத்தம நாயகர்.
சூளை-சென்னை.

குறிப்பு:—நமது வர்த்தகர் விஷயத்திலுள்ள மேற்படி குறைகளையெடு த்துக்காட்டிய நமது நண்பர்க்கு மிக்க வந்தன மளிக்கிறோம். நம் நாட்டு வர்த்தகர் மேல் நாட்டாரைப்போல் வெளிவிஷயங்களில் மட்டும் நடக்க முயல்கிறார்களே யன்னியில் மேல்நாட்டாரிடமுள்ள நல்ல விஷயங்களைப் பின்பற்றுகிறார்களில்லை. அவர்களைப்போல் கடிதங்களின் தலைப்பில் விலா சம் அச்சடித்துக் கொள்கிறார்கள். ஆனால், “விளம்பரவிகிதம் 5 ரூபாய். இதில் எக்காரணத்தாலும் குறைக்க அனுகூலப்படாது” என்று எழுதினால் “நாங்கள் இன்னும் அனேக விளம்பரங்கள் அனுப்புவோம். ஆகையால் இதற்குமட்டும் தயவுசெய்து 4 ரூபா வைத்துக் கொள்ள வேண்டும்” என்று பதில் எழுதுவார்கள். வர்த்தகன் யாரிடத்திலும் அன்போடும் மரி யாதையோடும், வந்தவன் மறுபடி தனது கடைக்கே வர விரும்புமாறு நடந்து கொள்ளவேண்டியது முதற்கடமை யென்பதை யவர்கள் கவனிப் பதில்லை. சிலரிடம் இன்னொரு கெட்டவழக்கமுமுண்டு. அதாவது ஒரே

பொருளை யொருவனுக்கு நான்கு ரூபாய்க்கும் பத்துமிடங் கழித்து அதேமாதிரிப் பொருளை மற்றொருவனுக்கு மூன்று ரூபா அல்லது ஐந்து ரூபாய்க்கும் விற்பார்கள். உள்ளூரானுக்கு ஒருவிலை, உளவறியா வெளியூரானுக்கு ஒரு விலையாக விற்பார்கள். நமது நாட்டுவர்த்தகர் முன்னே குறைகளை நீக்கிக்கொள்வார்களாயின் மிக்க நலமாகும்.

பத்திரிகாசிரியர்.

## ஹிந்து மதத்தைத் தழுவினர்

"மிஸ் எஸ்தர்ஹௌல்டன் என்ற 18 வயதுள்ள கிறிஸ்தவமாது தனது மதத்தைத்துறந்து ஹிந்து மதத்தைத் தழுவி யிருக்கிறார். இராஜகுமாரி தேவி பெயருடன் விளங்குகிறார். ஜனவரிமீ 2உ பம்பாய் ஹிந்துமதப் பிரசாரசங்கத்தினர் ஆதரவிலேயே மேற்படி மாது ஹிந்துமதத்திற்கு வந்து சேர்ந்திருக்கிறார்." என்று 6-1-23-ல் வெளியான "ஹிந்து" முதலிய பத்திரிகைகளில் கண்டோம்.

மேற்கண்ட மாது போன்றவர்கள் தம்மதத்தையும் பிறமதங்களையும் ஆராய்ச்சிசெய்தே அவ்வாறு நடந்து கொள்கிறவர்கள். அனுபவமா யறியக்கூடிய மோக்ஷமார்க்கத்தைக் கண்டறிய வேண்டுமென்று ஆராய்ச்சி செய்த வேறு பல ஐரோபிய கிறிஸ்தவர்கள் கூட ஹிந்துமதத்தைத் தழுவிக்கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்குச் சாதாரணமாக இவர்கள் மதக் கல்வி சிறுவயது முதலே கற்பிக்கப்பட் டிருக்கிறது. இவர்கள் அன்னியர் தூண்டுதலால் தம் மதத்தைவிட்டுப் புறச்சமயம் புகுபவரல்ல;அல்லது எவ்வித உலகபோக இச்சைவைத்தாவது வேறு சௌகரியங்கள், உதவிகள் இவற்றைப்பெற வெண்ணியாவது வருபவருமல்ல. மேலும் நாம் அன்னிய மதத்தவரை வலிய அழைப்பதில்லை. அவர்களே வலியவந்து நமது மதத்திலுள்ள ஞானமார்க்கத்தைப் போதிக்கும்படி கேட்டுக் கொண்டால், அப்போதும் அவர்களது அறிவின் தரத்தைச் சோதித்தே நம்மவர்கள் போதிப்பார்கள்.

அன்னிய மதஸ்தர் உண்மையறிந்து இவ்வாறு நடக்கும்போது நமது மதத்தவர் சுயமத ஆராய்ச்சி சற்றுமின்றி அற்பமாகிய உலக சுகங்களின் ஆசையால் மயக்கப்பட்டு வீணே புறமதத்தில் வீழ்ந்தழிவது என்ன மதியோ; மதத்தைப் பாதுகாக்கவும் பரவச்செய்யவு மென்றே ஏற்பட்டுள்ள மடாதிபதிகள் மதாசாரியர்கள் இவ்விஷயத்தில் இன்னும் பராமுகமாக விருப்பது பெருந் தவறேயாகும்.

பத்திரிகாசிரியர்.

## சிவஞானபோத சூத்திரம்.

இது சந்தனாசாரியருள் ஒருவராயமெய்கண்டதேவரால் அருளிச்செய்யப் பட்டதோர் சைவசித்தாந்த செந்தமிழ்நூல். இதன் அருமை பெருமைகளை அறியாத சைவசமயத்தவர்கள் மிகவுஞ் சிலரே. தமிழ்த் தெய்வ நூலாகிய திருக்குறளிலுஞ் சுருக்கமான நூல் யாதோவெனில், அதுவே

சிவஞான போதமென்னும் அருமைச் செந்தமிழ் ஞான நூலாகும். இது பன்னிரண்டு சூத்திரங்களுடையது; பன்னிரண்டு சூத்திரங்களும் நாற்பத்தோரடிகளும் இருநூற்றுப்பதினாறு சொற்களுமுடையன. இவ்விருநூற்றுப்பத்தினாறு சொற்களும் அறுநூற்று இருபத்தி நான்கு எழுத்துக்கள் உடையனவாம். பன்னிரண்டு சூத்திரங்களினாலாய சிவஞான போதம் இருபத்தெட்டாகமங்களில் ஓர் படலத்தினின்றும் மொழி பெயர்க்கப் பட்டதெனப் பெரும்பாலும் கூறப்படுகிறது. தமிழில் முதநூலாகவுள்ளது சிவஞான போதம். இதனையே பின்னுள்ளார் மொழி பெயர்த்து எழுதி இரௌரவ ஆகமத்திற் சேர்த்துக் கொண்டார்கள் என ஒரு சிலர் மொழிகின்றனர். தனக்கொப்புவமை யில்லாததோர் பாஷியம் சிவஞான போதத்துக்கு அருளிய மாதவச் சிவஞான யோகிகளும் பின்னுள்ளாரும் கூறும் உரைப் பிரமாணங்களால் அது வடமொழியிலிருந்து நேரேதமிழிற் கொண்டுவரப்பட்ட நூலேயெனக் கூறல் சால்புடைத்தென முன்னையவர் கூறா நிற்பர். மற்றையர் "தொன்று தோன்றிய யாவவை தூயன-வின்று தோன்றிய யாவவை தீயன - வென்றியம்பு மியல் புண ராமக-னன்றிமூதறி வாளரறைவரோ?" என்றும், "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்—மெய்ப்பொருள் காண்ப தறிவு" எனவுங்கூறி இவற்றின் உண்மையினை ஆராய்ந்து முடிவுகட்டப் புகுந்தனர். நடுநிலை குன்றாது நடுநின்றாராயும் ஒருவருக்கு இவற்றில் உண்மை யாதென வறிதல் இலகுவிலமையும். தமிழிலே எழுதப்பட்ட தொன்மையான நூல்களையும் பிறவற்றையும் தமிழபிமான மற்றார்தாம் ஆரியமொழியிற் கொண்டதோர் பற்றுக் கோட்டினால் ஆரியத்திலிருந்தும் மொழி பெயர்க்கப்பட்டதெனக் கூறிவருவோராயினர். உண்மையில் மொழிபெயர்ப்பு நூல்களல்லாத தமிழ் நூல்கள் பல, காலகதியில் மொழி பெயர்ப்பு நூல்களாகவே மதிக்கப்படலாயின. தமிழிலே எத்தனைச் சிறந்த நூல்களைக் காணினும் அவை இதிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டன, அதிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டன எனக் கூறுங்கொள்கை பலரிடத்திருந்து வந்தது. இங்ஙனமே நமது பெருந்தகையாகிய மெய்கண்ட தேவர் தமது ஞானானுபூதி முதிர்ச்சியால்தமிழுலகுய்யுமாறு தமிழில் முதல் நூலாக அருளிச் செய்த ஞானச்செந்தமிழ் நூலாம் சிவஞான போதத்தையும் மொழி பெயர்ப்பு நூலெனத் தம் மனம்போனவாறு கூறத்தலைப்பட்டனர். அங்ஙனம் கூறுவர் தாம் கூறுங் கூற்றினை வலியுறுத்த வேண்டும்என்பதற்காக இத்தமிழ்நூலை வடமொழியி லெழுதித் தம் நூல்களுட்சொருகிக் கொண்டனர். ஆரியப்பிரவாகம் தெற்கே பெருக்கெடுத்து எங்கும் அலைபுரண்ட அக்காலந்தொட்டே வடமொழி பயிலாவிடின் மோட்ச மடைவது அசாத்தியம் என்னும் கொள்கையுந் தலையெடுக்கலாயிற்று. இதனால் வடமொழிக்கு எவ்வளவு உயர் வினைவுகற்பிக்கினும் ஆட்சேபமின்றி அங்கீகரிப்பது பெரும்பாலும் சகசமாயிருந்தது. இவற்றால் சிவஞான போதம் வடமொழியினின்றும் மொழி பெயர்க்கப்பட்டுதென நாட்டுதல் கடினமாக இருக்கவில்லை.

மெய்கண்ட தேவர் தமது நூலை மொழி பெயர்த்தார் எனக் கூறுவதற்கேற்ற பிரமாணம் எவ்விடத்துங் காணப்படவில்லை. சந்தான நூல் மரபும், சந்தான மரபுங்கூறிய உமாபதி சிவனார் அருணந்தி சிவனார் முதலியோர் வாக்கியங்களை எழுத்தெழுத்தாக்ப் படித்துப் பார்ப்பினும் சிவஞான போதம் மொழி பெயர்ப்பு நூல் எனப் பொருள்கொள்ளத்தக்க வாக்கியங்கள் காண்டலரிது. பரஞ்சோதி முனிவர் திருக்கயிலாயமலையிலிருந்து வந்தமையால் அவர் வடமொழியிற்றான் உபதேசஞ்செய்தார் எனச்சிலர் கருதுகின்றனர். திருக்கயிலாயத்திலே சேரமான் பெருமான் நாயனார் தமது பொன்வண்ணத் தந்தாதியை அரங்கேற்றினார். கயிலாயத்திலே தமிழ் வளர்க்கப்பட்டு வந்தது. ஆதலின் ஆண்டுவைகும் முனிவருக்குத் தமிழறிவில்லை எனக் கருதல் வெறும் மடமையாகும். பேசும் மொழியை ஒழித்துப் பேசாத வடமொழியில் முனிவரர் உபதேசித்தார் எனக்கோடலும் அசம்பாவிதமே யாகும். நிற்க நமது அருட் பெருந்தகையார் பிறிதோர் நூலின் ஒரு பகுதியை மொழி பெயர்த்தார் எனக்கூறுதல் அவர் பெருந்தகமைக் கிழுக்காம். ஓர் நூலிலுள்ளவற்றை மொழிபெயர்ப்பதற்காகவா? நம் பெருந்தகைபோல்வார் திருவவதாரஞ் செய்தல் வேண்டும்!

சிவஞான போதம் பிறபாடையிலிருந்து மொழி பெயர்க்கப்பட்டதல்ல. அது தமிழிலே முதல் நூலாக மெய்கண்டதேவரால் அருளிச் செய்யப்பட்டது. இதனைப் பிற்காலத்தில் தமிழ் ஆரியப்பயிற்சியுள்ளார் அதன் அருமையை நோக்கி வடமொழிப் படுத்தினர்.

வடமொழிச் சிவஞானபோத சூத்திரங்கள் தமிழின் மொழி பெயர்ப்பென்பதை விளக்குவதற்கு ஸ்ரீமான் T. பொன்னம்பலப் பிள்ளையவர்கள் சைவமகா சங்கத்திற்செய்த பிரசங்கமொன்றில் வடமொழிச் சூத்திரங்களையும் தமிழ்ச் சூத்திரங்களையும் எடுத்துக் காட்டி வடமொழிச் சூத்திரங்கள் பொருட் குறைவுடையனவா யிருத்தலை நன்கு தெளிவிட்டி யிருக்கிறார்கள். இன்னும் பன்னிரண்டாவது சூத்திரத்தால் அதே பிறமொழியினின்றும் மொழி பெயர்க்கப் பட்டதெனப் படிப்பார் அறியுமாறு இருத்தலை விளங்கக் காட்டியிருக்கிறார். (அவற்றையெல்லாம் 'சைவ மகாசங்கக் கட்டுரைப்பகுதி 8 ல் பார்த்தறியவும்.)—(தமிழகம்.)

---

## பகவத்கீதை வசனம்.

(273-ம் பக்கத் தொடர்ச்சி.)

## 5-வது ஞானகர்ம அத்தியாயம்

[3-ம், 4-ம் அத்தியாயங்களால் பகவான் கர்மம், ஞானம் இவ்விரண்டையும் நிரூபித்தார். 5-ம், 6-ம் அத்தியாயங்களால் கர்மத்தையும், சகல கர்மத்தியாக ரூபமான சந்நியாசத்தையும் நிரூபிக்கிறார். 4-ம் அத்தியாயத்தினந்தத்தில் சகல கர்மபந்தனங்களையும் ஆன்மஞானமாகிய அக்னிதகித்து

ர்சமாக்கு மென்றும், அதுவே யாவற்றிலும் சிரேஷ்டமென்றும் கூறி, ஆன்மஞானத்தால் உன்னிடத்துள்ள சகல சந்தேகங்களையும் ஒழித்து உனது தருமமான யுத்தத்தைச் செய்தி என்று கர்மாநுஷ்டானத்தையும் பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்தருளினர். சகல கர்மத்தியாக ரூபமான ஞானமும், கர்மாநுஷ்டானமும் பரஸ்பர விரோதிகளாதலின், இரண்டையும் ஒருவன் எவ்வாறு அநுஷ்டிப்பதென்னும் கலக்கத்தால், இரண்டில் தனக்கு அவசியமான தெதுவென்று அர்ச்சுனன் சங்கிக்க பகவான் விரக்தி, விரக்தியின்மை யென்ற காலபேதத்திற்குத் தக்கபடி ஒருவனே இரண்டையும் அநுஷ்டிக்க வேண்டுமென்று அருளிச் செய்கிறார்.]

பகவான் அருளிய வார்த்தையைச் செவியேற்ற பார்த்தன் அவர் கருத்தை யறியாது பின்வருமாறு வினவுகிறான் :—

" பகவான்! கருமாநுஷ்டானமே சிரேஷ்டமென்று உபதேசித்தீர். பிறகு சந்நியாசமே மிகச் சிறந்ததென்று கூறினீர். இதனால் எனக்குச் சமுசய முண்டாகிறது. ஆதலின் அடியேனது சம்சார துக்கம் ஒழியுமாறு இவை இரண்டனுள் அடியேன் அநுஷ்டிக்க வேண்டியது இன்னதென்று உபதேசித்தருள வேண்டுகிறேன் " என்றான்.

**பகவான்:**—" ஏ பார்த்த! சாத்திரத்தில் கூறியுள்ளபடி சர்வ கருமங்களின் தியாகவடிவம் சந்நியாசமாம். தத்தமக்குரிய வருணாசிரம தருமத்தின் கடமைகளைச் சரியாய் அநுஷ்டித்தல் கருமயோகமாம். இவ்விரண்டும் ஆன்மஞானத்தை யளிக்கக் காரணமா யுள்ளவையே. இவற்றில் அந்தக்கரண சுத்தியுடையவனே சந்நியாசத்திற் கதிகாரியாகும். அந்தக்கரண சுத்தியில்லாதவனாற் கொள்ளப்பட்ட சந்நியாசத்தைக் காட்டிலும் கருமயோகமே சிரேஷ்டமாம். அசுத்த அந்தக்கரண முடையவனது சந்நியாசத்தால் ஆன்மஞானம் சித்திக்காது. ஆனால் அவன் நிஷ்காம கர்மயோகத்தைச் செய்யின் சித்த சுத்தியுண்டாகி அதன் வாயிலாக ஆன்ம ஞானத்தை யடைவன். இக்காரணத்தால் சந்நியாசத்தினும் கர்மயோகமே சிரேஷ்டமாம்.

(பகவான் நிஷ்காம கருமயோகத்தின் சிறப்பைக் கூறுகிறார்.)

ஏ அருச்சுன! எவனிடத்தில் இலாபத்தில் இச்சையும் நஷ்டத்தில் வெறுப்பும் இல்லையோ, எவனிடம் இராகத் துவேஷாதிகள் இல்லையோ, அத்தகைய நிஷ்காம கருமயோகிகள் சந்நியாசத்தில் நிற்பவரே யாவர். விருப்பு வெறுப்பையும் இராகத் துவேஷங்களையும் உடையோர் கர்மங்களைத் தியாகம் செய்வதாகிய சந்நியாசத்திலிருந்தாலும் துக்கமயமான பந்தத்தில் நிற்பவரே யாவர்.

சந்நியாசம், கர்மயோகம் என்ற இரண்டனுள் தமது அதிகாரத்திற்கு ஏற்ற ஒன்றைச் சாத்திரோக்தமாய் விதிப்படி யநுஷ்டிப்போர் அவையிரண்டினாலும் அடையத்தக்க மோக்ஷபலத்தை அடையாநிற்பர். சாத்

திர விசாரமுடைய அறிவாளிகள் இவை யிரண்டும் ஒன்றே யென்றுணர் வார்க்ள். இவை யிரண்டும் வெவ்வேறு பலனையுடையவை யென்று கருதுவோர் இவையிரண்டையும் உணர்ந்தவரல்லர்.

பகவான் அருளிய இம்மொழிகளைக்கேட்ட அர்ச்சுனன், "ஏ பரந் தாமா! சுத்த அந்தக்கரணமுடைய புருடனும் ஆன்ம ஞானத்தைப்பெறச் சந்நியாசம் என்ற சாங்கிய நெறியில் நிற்கவேண்டும் என்பதால் ஞானத் திற்குச் சந்நியாசம் அத்தியாவசியம் என்று தெரிகிறது. ஆதலின் ஞான த்தையடைய சுத்த அந்தக்கரணமுடைய புருடன் சந்நியாசத்தைக்கொள் வதுபோல், அசுத்த அந்தக்கரணமுடைய புருடனும் முதலிலே அச்சந்நி யாசத்தையே செய்யலாமன்றோ?" எனவினவினான்.

**பகவான்.**—"ஏ பார்த்த! சித்தசுத்தி யில்லாதவன் செய்யும் சந்நியாசம் ஞானத்தை யொருபோது மளிக்காது. அது துக்கப்பிராப்தியையே தரும். ஆதலின் சித்த சுத்தி யளிப்பதாகிய நிஷ்காம கருமயோகத்தை முதலில் செய்து, அதாவது சித்த சுத்தி யுண்டானபின் சந்நியாசத்தை யடைந்து யாவரும் என்னை யடைவர். இதுவே சிறந்த மார்க்கமாம். இச்சம்சாரதசையில் நினைத்தற்கரிதான மோக்ஷத்தைப் பெறுதற்கு நிஷ்காம கருமயோகத்தை யன்றி வேறு மார்க்கமில்லை.

[பகவான் கூறி யருளிய சந்நியாசம் கருமயோகம் என்ற இரண்டின் விவரத்தாலும், கீழ்க்கண்ட உண்மை நன்கு விளங்குகிறது. அதாவது:— துறவில் அகத்துறவே முக்கியமாய் வேண்டியதென்றும், அகத்துறவின் றிய புறத்துறவாகிய சந்நியாசத்தால் ஒரு பயனுமில்லை யென்றும் அறிய லாம். நிஷ்காமகருமத்தால் சித்த சுத்தியாகிய அகத்துறவு உண்டாகிறது. மனப்பற்றொழியாமல் பெண்டு பிள்ளையாதியை மட்டும் விட்டு வெளிச் செல்வது பயனற்றதேயாகும். சித்தசுத்தியடைந்தவன் அதாவது சுக துக்காதிகளில் விருப்பு வெறுப்பும், இச்சை, இராகத் துவேஷாதிகளும் ஒழித்தவன்றான் சகல கர்மத்தியாக ரூபமான சந்நியாசத்துக்கு அதிகாரி யாகும். அவன் நிட்டையில் ஆத்மஞானமடைய யோக்கியதையுடையவன். மற்றையரெல்லாம் நிஷ்காமகர்மத்தால் சித்தசுத்தியடைந்து அத்துவாரா ஞானமடைவதே தகுதியென்பதாம்.]

அர்ச்சுனன் பகவானை நோக்கி "பகவான்! ஜனங்கள் கர்மத்தால் பந்தப்படுத்தப்பட்டு ஜனனமரணங்களையடைகிறார்கள் என்று கூறப்பட் டிருக்கும்போது, கருமயோகத்தோடு கூடிய புருடன் பிரம்மசாக்ஷாத்கா ரத்தை யடைவான் என்று தாங்கள் அருளியது அசங்கதமாகப் புலப்படு கிறதே" என்றான்.

**பகவான்:**—ஏ பார்த்த! பலத்தை இச்சிக்காமல் கருமங்களைச் செய்வதா கிய கர்மயோகத்தால் ரஜோதமோகுணங்கள் நீங்கிய மனமுடையவ னும், மயக்கத்தைத் தருவதாகிய இந்திரியங்களைச் செயித்தவனும், ஆன்ம சாக்ஷாத்காரமடைந்த ஞானிகளும் அந்நியர்க்குப் பந்தத்தைத்

தரத்தக்க கர்மங்களைச் செய்யினும் அக்கர்மங்கள் அவர்களைப் பந்தப் படுத்தா.

[ஈண்டு இரஜோதமோகுணங்கள் ஒழிந்த மனம் என்பது சத்துவ குணமாகச் சேஷித்த மனமாகும். இதற்கு மனோதண்டம் என்று பொருள். இவ்வாறே இந்திரியாதிகளை யடக்கும் வாக்குத்தண்டம், தேகச் செயல் களை யடக்கும் காயதண்டம், இந்த மூன்றையும் உடையவனே சந்நியாசி யாகும். இதே திரிதண்ட சந்நியாசம் என்று கூறப்படுவது.]

பகவான் மேலே கூறப்பட்டவர்கள் செய்யும் கர்மங்கள் அவர்களைப் பற்றுவதில்லை யென்பதை யின்னும் விரிவாய்க் கூறுகிறார்:—

ஏ பார்த்த! நிஷ்காமகர்மத்தைச் செய்து மேற்கண்ட குணங்களை யடைந்தோன் கண்ணால் பார்ப்பதும், காதால் கேட்பதும், வாயால் பேசு வதும், மூக்கால் முகர்வதும், காலால் நடப்பதும், உண்பதும், உறங்குவ தும் ஆகிய பல கர்மங்களைச் செய்யினும் அவை யாவும் இந்திரிய கரணங் களின் செயலே என்றும் ஆன்மாவாகிய தன்னிடம் ஒரு கர்மமுமில்லை யென்றும், தான் கர்த்தாவுமல்ல போக்தாவுமல்ல (கர்மத்தைச் செய்பவ னுமல்ல, போகத்தைப் புசிப்பவனுமல்ல) வென்றும் திடமான பிரக்ஞை யுடையவனாக விருப்பான். அத்தகையோன் மலையைப் போன்றும் ஸ்தம் பத்தைப்போன்றும் ஒன்றாலும் சலனமடையான்.

(கர்மங்களில் பிரவேசிக்கும் அஞ்ஞானி கர்மத்தியாகம் செய்யும் சந்நி யாசத்தாலடையத்தக்க ஞானநிஷ்டையை யெப்படியடைவான்? கர்மங்க ளைச் செய்துகொண்டே அவை பற்றாவண்ணம் எப்படி நடப்பான்? என்ற அர்ச்சுனனது சங்கைக்குப் பகவான் பதிலருளுகிறார்.)

ஏ பார்த்த! எவன் எத்தகைய சுவர்க்காதி போகபலனையும் இச்சிக்கா மல், நான் ஆண்டவனது திருப்தியின்பொருட்டே செய்கிறேன் என்று சகல கர்மங்களையும் செய்கிறானோ, அப்புருடன் ஞானியைப்போல் அக் கருமங்களால் பந்திக்கப்படுவதில்லை. எப்படித் தாமரை யிலையின்மேல் தண்ணீர் இருந்தாலும் அந்த நீர் இலையில் பற்றுவதில்லையோ, அவ்வாறே ஒருவன் ஈசுரார்ப்பணமாய்ச் செய்யும் கர்மம் அவனைப் பற்றாது. அக்கருமம் அவனுக்குச் சித்தசுத்தியையே தரும்.

(இவற்றால் கருமம் ஒன்றே பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் இரண் டிற்கும் காரணமாகவல்லவோ விருக்கிறது என்ற அர்ச்சுனனது சங்கைக் குப் பகவான் கூறுகிறார்.)

ஏ பார்த்த! அது கர்மத்தைச் செய்பவனது அதிகாரத்தன்மையைப் பொருத்ததாக விருக்கிறது. யாதொரு பலத்தையும் இச்சியாமல் நான் ஈசுவரன் பொருட்டாகவே இக்கர்மங்களைச் செய்கிறேன் என்ற திட சித்தத்தோடு ஒருவன் கர்மங்களைச் செய்யும்போது அவை அவ னுக்குப் பந்தத்தை யுண்டாக்காமல் சித்தசுத்தியையுண்டாக்கி அத்துவாரா ஆன்மஞானத்தால் மோக்ஷத்தையடையக் காரணமாகும். அப்படிக்கின்றி

ஒருவன் சுவர்க்கம் முதலிய போகபலன்களை யடையவேண்டு மென்கிற எண்ணத்தோடு கர்மங்களைச் செய்யும்போது அக்கர்மங்கள் அவனுக்குப் பந்தத்தையுண்டாக்கி ஜனனமரண துக்கத்தை யளிக்கக் காரணமாகின்றன.

(இதுகாறும் அசுத்த அந்தக்கரணமுடையவனுக்குச் சந்நியாசம் பயனளிக்காதென்றும் அவனுக்கு நிஷ்காம கர்மமே சிரேஷ்டமானதென்றும் விரிவாய் விளக்கிக் கூறி இனி, சித்தசுத்தி யுடைய புருடனுக்குச் சகல கர்மங்களின் தியாகவடிவ சந்நியாசமே சிறந்ததாம் என்பதைப்பற்றி அருளிச் செய்கிறார்.)

ஏ! கிரீடி! சித்தசுத்தியுடைய புருடன் ஆன்ம சாக்ஷாத்கார மடைவதால் சகல கருமங்களையும் அவற்றாலடையும் பலன்களையும் பரித்தியாகம் செய்து, நவத்துவாரங்களையுடைய இத்தேகத்தின்கண்ணே எவ்விதத் துக்கமுமின்றி ஆனந்த வடிவமாகவே யிருப்பன். அவன் பிராரப்தவசத்தால் நிகழ்காலத்தில் எதிரில் வந்தடையும் எக்கருமத்தையேனும் செய்பவனும் செய்விப்பவனும் ஆவதில்லை.

(அவன் ஆன்மசொரூபமா யிருப்பதாகிய ஜீவன் முத்த நிலையிலிருப்பவனாதலால், அவன் சாக்ஷிமாத்திரமாகவிருப்பவன்; அவனிடம் செய்கையும் செய்விக்கையுமில்லை. ஸ்காந்தமலைமுன் இரும்புத்துண்டுகள் சேட்டித்தாலும் அம்மலையசைவற்றிருப்பதுபோல், பிராரப்தத்தின்படி கருமங்கள் அவன் முன் நிகழினும் அவன் எதிலும் தாக்கற்று நிற்பான் என்பதே பகவான் கூறியது. அத்தகையோன் அசுத்த மலபாண்டமாகிய இத்தேகத்திலிருப்பினும் ஆனந்த வடிவமாகவே யிருப்பான்.

" செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச்
சிலைமலைமுன் னிரும்புகள் சேட்டிக்கு மாபோல்
செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்கு மென்முன்
செடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யும்
மெய்கலந்த விந்திரிய விகார ரூப
விவகார விருத்திக்கும் விருத்தி தானா
மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சி யேநான்
வெயில்போலென் றுரைத்தவனே விபுமா கர்த்தன் "

என்றும்,

" அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டும்
நிசத்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா யிடின்மைந்தா
அசத்த தேகத்தி லிருக்கினு மானந்தக் கடல்வடி வாவாயே "

என்றும், (கைவல்லிய நவநீதம்.)

(தொடரும்)

சீடன்.

---

## இல்லறம்—கன்மம்.

(270-ம் பக்கத் தொடர்ச்சி.)

கடவுளின் கருணையைப் பெற்றுச் சிறந்த பெரியோரும் கன்மத்தை விடாமற் செய்து வருவதனால் அதன் உண்மை விளங்கும். யோக முதலிய விருந்தாலும் அவைகளும் கன்மத்தின் துணையின்றி நடவா. ஆதலாற் சித்த சுத்திக்குக் கன்மமே சிறந்தது. அந்தக் கன்மங்களின் உண்மையைக் கடவுள் ஒருவரே யறிவார். ஏனையோர் அறியமாட்டார்கள். தவமகிமையாற் கடவுளைப்போன்ற நிர்மலராயுள்ள பெரியோர்கள் அதனுண்மையைச் சிறிது வெளியிட்டு அதை அனுஷ்டித்தே தீரவேண்டும் என்று கூறியுள்ளார். உண்மை யுணரும் பேரறிவில்லாத யாம் அவ்வழிபற்றி நடப்பதே யுசிதமாம். கடவுளின் கருணையைப் பெறுவதற்குக் கன்மத்தையன்றி வேறொன்றுமில்லை. ஆதலாற் கன்மமே எல்லாவற்றினும் சிறந்தது. யோகத்திற்குரிய எட்டு அங்கங்களுள் இரண்டாவது அங்கமாகிய நியமத்துள் கன்மம் அடங்கும். ஆதலால் யோகத்துக்கும் கன்மமே ஜீவாதாரமாமென்க. இதுபற்றியே கண்ணனும் கீதையில் "ஜனகன் முதலிய யோகிகள் கன்மத்தாற் பெருமை பெற்றனர்" என்று கன்மத்தைப் புகழ்ந்து கூறினர். "ஏ பார்த்தா! நான் பெறவேண்டியது யாதுமில்லை. ஆயினும் நான் கன்மத்திலேயே யிருக்கிறேன். உலக க்ஷேமத்தை நோக்கி நீ கன்மத்தை விடாமற் செய்யக்கடவாய்" என்று கூறிக் கன்மமின்றியமையாததென முடித்தார். அவ்வாறே வேதமும் "கன்மத்தைச் செய்துகொண்டு இவ்வுலகில் ஒருநூறு வருஷம் இருக்கக்கருது" என்று கட்டளை யிட்டது. ஆதலால் கடவுளின் கருணையைப்பெறக் கூடிய பற்பல வழிகளுள் கன்மமே சிறந்தது. அதுவே யோக முதலியவற்றிற்கும் உயிர் நிலையாம் என்று கொள்க.

இனிக் கன்மங்களால் ஜீவர்களை நிர்ப்பந்திப்பதனாற் பயன்யாது? என்பது ஓர் கேள்வி. இக்கேள்வியி னுட்கருத்து யாதெனின், இக்கன்மம் அநாதியான கடவுளின் கட்டளையாயின் அதைச் செய்யாதொழிந்தால் கடவுள் கோபிப்பாரென்பதும் உண்மையாம். இவ்விதமான கொடுமையான வழியைக் காட்டி யதைச் செய்யத் தவறினால் அந்தச் சீவனைக் கொடுமையாகத் தண்டிக்கும் கடவுளும் கொடியவரே யாவார். இன்றேல் சுலபமான ஒரு வழியைக் காட்டி யதனால் அநாதி கன்மத்தையொழித்து முத்தியின்பத்தை யளிக்கக்கூடாது என்பதாம்.

கடவுளின் அன்பை யடைவதற்கு வேறு வழியில்லையா என்ற வினாவுக்குப் பதில்கூறிய வதனாலேயே இதற்கும் விடை யளித்ததாகும். ஆயினுமிங்கும் சிறிது கூறுவாம். கடவுளே ஜீவனைக் கன்மத்தாற் பந்தித்தார் என்பது அறியாமையேயாம். ஜீவர்களே கன்ம வலையிற் சிக்குண்டார்கள். அதனால் அளவற்ற துன்பத்தை யனுபவிக்கின்றார்கள். கருணையே சொரூபமாகக் கொண்ட கடவுள் அதை விலக்கிச் சீவர்களை யிரட்சிப்

பதற்குரிய ஒரு வழியைக் காட்டினர். இது கருணையாற் செய்ததே யன்றிக் கோபத்தால் தண்டிப்பதற்கல்ல. இது உஷ்ணம் உஷ்ணத்தாலொழியும் என்பது போலக் கன்ம பந்தத்தைக் கன்மத்தாலேயே யொழிக்க வேண்டும். செம்பினிடத்தில் அநாதியா யியற்கையில் அமைந்த களிம்பை புளி எலுமிச்சம்பழம் முதலியவற்றாற் சிறிது போக்குவதுபோலாம். இவ்வாறு ஒழிக்கப்பட்ட களிம்பு மறுபடியும் ஊறி மேலிடுவது போல அநாதி கன்மம் மேலும் விளையும். தக்க மூலிகைச் சாற்றை யச்செம்பிலிட்டுப் புடம் போட்டால் களிம்பு முற்று மொழிந்து பொன்னுவது போலச் சிவ பூஜை முதலிய பெருங் கன்மத்தால் சரீரத்தை வாட்ட அநாதி மல வாசனை யொழிந்து அந்தச் சீவன் சிவத்தையே யடையும். களிம்பற்ற செம்பு பொன்னுவது போல மல வாசனை யற்ற ஜீவன் கடவுளின் பேராற்றலில் அடங்கி நிற்பான். ஆதலாற் கன்மம் துன்பத்தைச் செய்வதென்று பெரியோர் கருதுவதில்லை. இன்பத்துக்கே காரணமாமென்று கருதுவார்கள். அநாதியிற் செம்பில் களிம்பு பற்றியதுபோல அநாதியிலே ஜீவனை யடைந்த கன்மத்தாலன்றி மற்றெதனுலுந்தீராதென்க. ஆதலாற் கன்மத்தைக் கைவிடாமற் செய்வதே யறிவுடைமையாம் என்பது ஆன்றோர் கொள்கையாகும்.

இது அநாதியோ என்பது ஒரு கேள்வி. இதனுட்கருத்து யாதெனில், அது அநாதி வஸ்துவானுல் அழிதலில்லை. அழிதலுளதாயின் அப்போது அநாதியாகாது. அங்ஙனமிருக்க அது அநாதியாயுள்ளதென்பதும், பிரம ஞானத்தாலழியுமென்பதும் ஒவ்வத்தக்க தன்றுமெனின், முன்னரே விருக்ஷத்தையும் விதையையும் திருஷ்டாந்தங்காட்டி இதற்கு விடையளித்திருக்கிறோம். வித்தும் முளையும் போலக் கன்மமும் ஆன்மாவும் அநாதி வஸ்துவேயாம். அது பற்றியே ஆன்றோர்கள் "ஜக ஜீவ பரம்" என்றும், "பதி பசு பாசம்" என்றும், சித், அசித், ஈசுவரன் என்றும் கூறி திரிபதார்த்தமே அநாதி வஸ்துவென்று விதந்து கூறினர்கள். நூல்களுங் கூறுகின்றன. ஜகம், பாசம், அசித் என்பன கன்மத்தைக் குறிக்கும். அது பற்றியே ஆணவமலம், கன்மமலம், மாயாமலம் என்று சைவசித்தாந்தம் விரித்துக் கூறி யிம் மூன்றையும் ஒரு பெயரால் பாசமென்று கூறியது. ஏனையவற்றுக்கும் இவ்வாறேகொள்க. அநாதி வஸ்து அழியாதோ எனில், அழியாது. வறுத்துவதக்கின வித்தினிடம் முளைக்கும் சக்தி யொழிந்தால் எல்லா விதைகளினிடத்துமிருக்கும் அச்சக்தி ஒழியாமல் நிலைபெற்றிருப்பதுபோல, பிரமஞானத்தால் தகிக்கப்பட்ட கன்மம் ஜீவனைவிட்டு ஒழிந்தால் அக்கன்மம் வேறோரிடத்தில் நிலை பெற்றே நிற்கும். இவ்வாறு கன்மம் அழியாமலிருக்குமென்பது ஞான நூல்களினபிப்பிராயம். ஆதலால் கன்மம் என்கிற அந்த வஸ்து முற்றிலும் அழிந்து போவதில்லை. அங்ஙனமிருந்து ஜீவனைப் பந்தித்தலால் பாசம் எனப்பெயர் பெறும். ஆன்ம சொரூபத்தை மறைத்தலால் மலம் என்று பெயர்பெறும். அம்மலமொழிந்து நின்ற ஜீவனும், பாசத்தாற் கட்டுண்டமைபற்றி புண்டான பசு என்

கிற பெயரையும் இன்ப துன்பங்களை யறியுந்தன்மை பற்றி எழுந்த ஜீவ னென்னும் பெயரையும் அடைவதில்லை. ஆன்மாவென்றே கூறப்படும்.

இதனுள் உண்மை யாது எனில், அக்கன்மம் உலகப்பொருளாதலால் இல்பொருளென்றுவது உள்பொருளென்றுவது துணிந்து கூறப்படாத நிலைமையிலுள்ளது. மலத்திற்கு ஒரு சொரூபத்தை மறைப்பதன்றி வேறு சொரூபவிலக்கணங் கூறப்படவில்லை. அதுதான் மேற்பட்டு எல்லாப் பொருள்களையும் மறைத்துக்கொண்டு நிற்குந் தன்மை யுளதாயின் அதனை யாவருணர்வார்கள்! இம்மலத்தை அவித்தை யென்றும், அது துணிந்து கூறப்படாத நிலைமையிலுள்ளதாதலால் அநிர்வசனீயம் என்றும் வேதாந்த நூல்கள் கூறும். இது பற்றியே, "இருள்சே ரிருவினையுந் தீண்டா விறைவன்—பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்ற திருக்குறளுக்கு உரை விரித்துக் கூறிய பரிமேலழகரும் "இருள் என்றது அவித்தையை, அது இத்தன்மையது என்று மனிதர் அறிவுகொண்டு துணிந்து கூறப் படாமையின் 'இருள்' என்றார்" என்று கூறினர். சைவசித்தாந்தத்திலும் பதியை நோக்கப் பசு பாசங்கள் அசத்தாம். பசு பாசங்களை நோக்கப் பதி சத்தாகவே யிருப்பின், பசு என்பது பதியை நோக்க அசத்தும் பாச த்தை நோக்கச் சத்துமாவான். பாசம் என்பது பதியை நோக்க அசத் தும், பசுவை நோக்கச் சத்துமாம்; பதி பசுக்களை நோக்க அசத்தாகவே யிருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. பாசம் பசுவை நோக்கச் சத்தா மென்று கூறியது, அதைப் பந்தித்து நிற்குந்தன்மை பற்றியாம். இயல் பில் அசத்தேயாம். இன்னும் சைவசித்தாந்தத்துள் ஒருசாரார், பதியை நோக்கப் பசுபாசங்கள் அசத்தாவதுபோல பதி பசுவை நோக்கப் பாசம் அசத்தேயாமென்பர். ஆதலால் அநிர்வசனீயம் என்று பாசவிலக்கணங் கூறிய சான்றோர் தன்மை வியக்கத் தக்கதேயாம்.

மற்றுமோர் சைவசித்தாந்திகள் அநாதியாகிய பாசம் முத்தியிலும் அழியாமலிருக்கும் என்று கூறுவார். அவர் கூறியது எவ்வாறெனில்,

"வாக்கு மனமிறந்த வான்கருணை யாளனொரு
தாக்கறவே நிற்குந் தனிமுதல்வா—நீக்காப்
பதியினைப்போ னித்தம் பசுபாச மென்றாய்
கதியிடத்து மூன்றினையுங் காட்டு"

என்று குருவை நோக்கிச் சீடன் வினவியவாறு கூறிற்று. அவ்வினு வாவது, பதியைப்போலப் பசு பாசங்களும் அநாதியாகு மென்று கூறி னீரே. முத்தியிடத்தில் அம்மூன்று முதலும் நிலைபெற்று நிற்கும் முறை மையை எனக்கருளிச் செய்யவேண்டுமென்பது. அங்ஙனம் வினவிய கேள் விக்குக் குரு வருளிச்செய்தவாறு:

"முத்திதனின் மூன்று முதலு மொழியக்கேள்
சுத்தவநு போகத்தைத் துய்த்தலணு—மெத்தவே
யின்பங் கொடுத்தலிறை யித்தைவிளை வித்தன்மல
மன்புடனே கண்டுகொளப் பா"

பதி பசு பாசங்களாகிய முப்பொருள்களும் முத்தியிலும் நிலை பெற்று நிற்கு நிலைமையைக் கூறுகிறேன் கேள். முத்தியில் பேரின்பத்தைப் புசிக்கிறது ஆன்மா. பேரின்பத்தை மிகுதியாகக் கொடுப்பது பதி. பேரின்பத்தை மேன்மேலும் விளைவிப்பது மலம் என்பதாம்.

இதனால் பந்த காலத்தில் ஜனன மரணாதி துன்பங்களையும் சம்சார துக்கத்தையும் அபரிமிதமாகக் கொடுத்த மலம் பந்தித்தலொழிந்து நிற்குங் காலத்தில் பேரின்பம் ஒன்றனையே மிகுதியாக விளைவிக்குமென்று அதன் தன்மை கூறப்பட்டது. இவ்வாறு மதாசாரியர்கள் பற்பலவிதமாய்க் கூறுகின்றமையால் கன்மத்தின் தன்மை அநிர்வசனீயம் என்பதேயுசிதமாம்.

ஆணவம் கான்மியம் மாயேயம் எனக் கூறப்படும் மூன்றையும் மலமென்பர். இவற்றுள் ஆணவமென்பது ஆன்மாக்களை யுடனிகழ்ந்து அநாதியிலே பற்றிப் பந்தித்து நிற்பது. இது நீங்கினாற்றான் ஆன்மாக்களுக்கு முத்தி கிட்டும். கான்மியம் என்பது ஆன்மாவின் சரீரத்தைப் பற்றி நின்று இன்பதுன்பங்களை யளிப்பது. மாயேயம் என்பது பிரமலோகபரியந்தம் ஆன்மாக்களுக்குத் தனுகரண புவனபோகங்களாய் நிற்பது. இவற்றுள் முதற்கூறிய விரண்டும் யாம் ஈண்டு விவரித்துக் கூறிய கன்ம மெனப்படுவன. அவற்றுள்ளும் ஆணவம் காரணமும் கன்மம் அதன் காரியமுமாகும். காரிய மெனப்படும் இக்கன்மம் அகன்மம், விகன்மம், கன்மம் எனப்படும். புண்ணியம் பாவமிரண்டு மாகாத செய்கை அகன்மமெனப்படும். அது சிரித்தல் விக்கல் முதலியன. செய்த பாவமாவது விகன்மம். அது திருடல் பொய்கூறல் பிறர் மனைவியை விரும்புதல், கட்குடித்தல், தத்தம் வருணாச்சிரம தருமங் கடந்தொழுகுதன் முதலாயின. இதனாலாம்பயன் நரகதுன்பமாம். ஒழியாப்பெரும் சம்சாரமுமாம். கன்மம் என்ற மூன்றாவது நித்தியம், நைமித்திகம், காமியம் என மூவகைப்படும். நித்திய கன்மம், செய்யாமல் விட்டால் பாவத்தை யுண்டாக்கும். செய்தால் அதை விடுவதால் வரும் பாவத்தை வராது தடுக்கும். நிமித்தங் கண்டவிடம் செய்வது நைமித்திகம். இது செய்தால் புண்ணியமும் செய்யாது விட்டால் பாவமுமாம். காமியம் என்பது செய்தால் நற்பயனைத்தரும். செய்யாமல் விட்டதனால் குற்றமாகாது. நித்தியகன்மத்துக்கு உதாரணம் சந்தியா வந்தனாதிக் கிரியைகள். இவற்றைச் செய்யாவிட்டால் பிராமணத்துவம் ஒழியும். செய்தால் அதை நீங்காமல் தடுக்கலாம். நைமித்திகத்துக்கு தாரணம் அமாவசை தர்ப்பணம். இதைச் செய்தால் பிதிர்த்தேவதைகள் திருப்தி யடைந்து ஆசீர்வதிப்பார்கள். விட்டால் சபிப்பார்கள். சாந்திராயணாதி விரதங்களே காமிய கர்ம மெனப்படும். இவற்றைச் செய்தவன் நற்பயன்களைப் பெறுவான். செய்யாதவன் குற்றப்படமாட்டான். ஆகையா லிம் மூவகைக் கன்மங்களையும் அவசியம் அனுட்டிக்க வேண்டும். இக்கன்மங்களைத் தவிர மனமும் சரீரமும் சுத்தப்பட வேறு வழியில்லையாகையால் கன்ம மின்றியமையாததா மென்க. எல்லாங் கன்மத்தால் முடிவாகின்றது என்பது முதல் இதுகாறும் சுபட்ச நோக்கியே கூறப்பட்டது பெரும்பான்மையு மாதலால் ஆரிய சிகாமணிகள் கன்மத்தை விடாமற் செய்யவேண்டுவது அவசியமாமென்பது புலப்படும். கன்மத்தைப்பற்றி நெடுந்தூரம் சுபட்ச பரபட்ச முறையாக விரித்துக் கூறியவதனால் இதுகாறும் முடிவு பெறுதிருந்தது. இன்று செந்திலாண்டவன் திருவருளை முன்னிட்டுக் கன்மத்தைப் பூர்த்திசெய்கின்றோம்.

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

முற்றிற்று.

## மகா அலக்ஸாண்டரும் பிராம்மண சந்நியாசிகளும்.

[இது ஸ்ரீமான் இராவ்ஸாஹேப் R. கிருஷ்ணராவ் போன்ஸ்லே, M. R. A. S. (Asstt. Secretary to the Commissioner of Govt. Examinations, Madras.) அவர்களால் வரையப்பட்டு இந்தியன் ரிவியூவில் பிரசுரிக்கப் பட்டிருந்ததன் மொழிபெயர்ப்பு.]

(இதிலுள்ள விஷயங்கள் மேல்நாட்டுப் பண்டிதர்கள் வரைந்துள்ள பூர்வீக இந்தியசரித்திரங்களிலிருந்து திரட்டப்பட்டவையாகும் என்று ஸ்ரீமான் போன்ஸ்லே அவர்கள் தமது வியாசத்தின் தலைப்பில் விவரமாகக் கூறியிருக்கிறார்கள்.)

உலகம் முழுமையும் இந்தியாவிற்குப் பட்டிருக்கும் கடன் ஒவ்வொரு நாளும் மிக்க அதிகமென்றே நான் உணருகிறேன். கவிவாணரும் சாத்திர ஆராய்ச்சிப் பண்டிதருமான லாரென்ஸ் பினியன், (Laurence Binyon) என்பவர் "மகா அலக்ஸாண்டர் தன் தீவிரபுத்தி யுச்சத்திலிருந்த காலத்தில், தியான பூமியும், யோகபூமியும், ஞானபூமியுமாகிய இந்தியாவின்மீது படையெடுத்த காலம் உலகம் மிக்க பிரமையடையத்தக்க காலங்களில் ஒன்றென்றே நான் எப்போதும் கருதுகிறேன்" என்று கூறுகிறார். இன்னும் அவர் பின்வருமாறு கூறுகிறார் :—

"மகா அலக்ஸாண்டர் படையெடுத்து வந்தது அதிகமான பூமியைக் கட்டியாளவேண்டுமென்ற ஆசையாலேயே யென்று சாதாரணமாய்க் கருதப்படுகிறது. ஆனால் அது மனிதரின் அஞ்ஞானம் ஒழிவதற்காகவென்ற முன்னமைப்பின்படி நடந்த ஒரு விஷயம் என்றே நான் கருதுகிறேன். அலக்ஸாண்டர் அதுகாறும் தான் எங்கும் சந்தித்திராத ஒன்றை இந்தியாவில் சந்தித்தார். அவரைப் பிரமிக்கச்செய்து மேற்கொண்டுவிட்ட ஒன்றை—அதாவது இந்தியரின் மனதைச் சந்தித்தார். மனதைப்பற்றிய (மனோதத்துவ) விஷயங்களையும் ஆன்மசொரூபத்தைப்பற்றிய விஷயங்களையும் இடைவிடாது சலிக்காது சிந்திப்பதே இந்தியருக்கு எப்போதுமுள்ள இயற்கைக் குணமென்று சரித்திரத்தால் விளங்குகிறதென்றும் அந்நாட்கை ஐரோப்பாவிலுள்ள நம்மைப் பந்தயத்திற் கழைக்கிறதென்றும் நான் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்."

அர்ரியன் (Arrian) என்பவர் எழுதியுள்ள நூலில் பின்வரும் விஷயத்தைக் கூறுகிறார் :—

"மகா அலக்ஸாண்டர் இந்தியாவிற்குப் படையெடுத்து வந்தபோது பாம்பின் விடத்தை நீக்கக் கிரேக்க வைத்தியர்களிடம் தக்க ஔஷதமில்லை யென்று தெரியவந்தது. ஆனால் இந்தியர்கள் அந்த விஷத்தை நீக்கும் சக்திவாய்ந்தவர்களாக விருந்தார்கள். ஆகையால் அலக்ஸாண்டர் சாமர்த்தியவான்களான இந்திய வைத்தியர்களைத் தமதருகில் வைத்துக் கொண்டிருந்தாரென்றும், தமது பரிவாரத்தைச் சேர்ந்தவர்களில் யாருக்கேனும் விஷந்தீண்டினாலும், யாரேனும் வியாதியுற்றாலும் அவர்கள் உடனே தமது கூடாரத்திற்கு வந்து அங்குள்ள பிராம்மண வைத்தியர்களிடம்

கூறினால் அவர்கள் ஆச்சரியமும், இன்னும் தெய்வீக சக்தியுள்ளதுமான வழிகளால் இவர்களுக்குச் சுகமுண்டாக்குவார்களென்றும், தமது பாஷைய முழுமையும் விளம்பரப்படுத்தி யிருந்தார்" என்று பியர்சஸ் என்பவர் கூறுகிறார்.

அந்தப் பிராம்மணர்களில் சிலர் திகம்பர அதாவது நிர்வாண ஞானிகளாகவும் ஹடயோகிகளாகவும் இருந்தார்கள். மகா அலக்ஸாண்டர் அவர்களில் சிலரைச் சந்திக்கும் அதிஷ்டம் பெற்றவராக விருந்தார்.

இந்தப் பிராம்மண விருடிகள் சுயேச்சையா யிருப்பவர்கள். அவர்கள் அடவிகளில் தாமாக உதிர்ந்து கிடக்கும் காய், கனி, இலை, சருகு முதலியவற்றை யுண்டு ஆற்று நீரைப் பருகி சீவிப்பதன்றி மாமிசபக்ஷணமாவது தீயில் பக்குவப்படுத்தப்பட்ட எவ்வித உணவையாவது புசிப்பதில்லை. அவர்கள் போர்வை மரப்பட்டைகளே. அவர்கள் விசேஷமாய் இத்தேகம் ஆன்மாவிற்கு ஓர் போர்வையாகக் கடவுளாலளிக்கப்பட்டதென்று கூறி நிர்வாணிகளாகவே வாழ்நாட்களைக் கழிக்கிறார்கள். அவர்கள் கடவுள் சோதிமயமானவர் என்ற கொள்கையுடையவர்கள். ஆனால் அச்சோதி சூரியன் அல்லது அக்னிபோன்றதாவது அல்லது நாம் ஊனக்கண்ணால் காணத்தக்கதாவது அல்ல. ஆனால் கடவுள் அவர்களுக்குப் பிரபஞ்சமாகவே விளங்குகிறார். அவர்கள் அப்படிக் கூறுவது வீண் வாய்ப்பேச்சுமட்டுமல்ல. ஞானிகள் அந்த ஞான சொரூபத்தை யெவ்வாறு தரிசிக்கிறார்கள் என்ற மர்மத்தைத் தக்க ஊகத்தோடு உணர்கிறார்கள். அவர்கள் கடவுளின் நாமத்தை ஒருவித பக்திபொருந்திய தொனியோடு உச்சரிக்கிறார்கள். கீர்த்தனங்களால் பகவானை பஜிக்கிறார்கள். மேலும் அவர்கள் எல்லா மனிதர்களும், யுத்தத்தில் பிடிபட்ட சிறையாளர்களைப்போல் தங்களுக்குள்ளிருக்கும், விருப்பு, வெறுப்பு, காமக்குரோதாதிகள் முதலிய எதிரிகளின் அடிமையா யிருக்கிறார்கள் என்றும், அந்தக் காமக்குரோதாதிகளாகிய எதிரிகளை யடக்கிப் போர்வீரன் யுத்தகளத்தில் ஜெயமடைவதுபோல் ஜெயம் பெற்றவனே கடவுளை யடைவான் என்றும் உறுதியாய்க் கூறுகிறார்கள். அவர்கள் மரணத்தை வெறுப்போடு அலட்சியமாகக் கருதுகிறார்கள்.

(தொடரும்)

---

## தபால் கொள்ளைக்காரர்கள்

(279-ம் பக்கத் தொடர்ச்சி)

### 16-வது அத்தியாயம்.

கள்ளர்கள் ஆலோசனை செய்தமறுநாள் ஆனந்தலிங் தன்குறிப்புகளை மிக்க சுறுசுறுப்போடு கவனிக்கத் தொடங்கினான். இப்போது நேரிட்டிருக்கும் சமயம்போல் எப்போதும் நேரிட்டதில்லை. இச்சமயம் எப்படியும் கள்ளரைப் பிடிக்க இதுவே யனுகூலமான சமயமென்று அவன் மனதில் நம்பிக்கையாயிருந்தது.

அவர்கள் ஆலோசனை செய்த சமயம் யாரோ ஒத்துக் கேட்டதாய்க் கள்ளர்கள் பயந்தார்களல்லவா ! அந்த ஆள் நமது ஆனந்தஸிங்கேயன்றி வேறு யாருமல்ல. அவன் அவர்களுடைய வார்த்தைகள் ஒன்று விடாமல் கேட்டுக்கொண்டான். இப்போது அதற்குத் தக்கமாதிரிதான் நடந்து கொள்ள ஆலோசனை செய்யத் தொடங்கினான்.

ஒரு விஷயம்மட்டும் அவனுக்கு விளங்கவில்லை. அதாவது அக்கன்னிகையிருக்குமிடம் வெள்ளைக் குடிசை யென்று கள்ளர் பேசிக்கொண்டார்கள். அக்குடிசை யெங்கிருக்கிறதென்று அவனுக்கு விளங்கவில்லை. ஒருசமயம் நகரைக்கடந்து சமீபத்திலுள்ள ஆற்றோரத்தில் சில விடங்களிருக்கின்றன. அவற்றில் ஒன்றாயிருக்குமோ என்று நினைத்தான். அவன் உத்தேசித்ததே யுண்மை.

தன் வேலைகளை யொருபக்கம் நடத்திக்கொண்டிருந்தாலும் ஒருபக்கம் இரங்கநாதன் அறையின்மேல் விடாது கண்வைத்தபடி யிருந்தான். அன்று பிற்பகல் கையில் ஒரு சிறு கடிதத்தை வைத்துக்கொண்டு ஒரு சிறுவன் இரங்கநாதன் அறையிலிருந்து வெளிவந்ததைக் கண்டான்.

உடனே அவன் இன்ன காரியமாய்ச் செல்கிறான் என்று ஆனந்தஸிங்கின் மனதிற் பட்டபடியால் அச்சிறுவன்மேல் கவனத்தை நாட்டினான். சிறுவன் செல்லும் பாதையையே பின்னால் சென்று அவன் வீதியைக் கடந்து வேறு வீதிக்குத் திரும்பியபின் இரண்டெட்டாய்ச் சென்று அவன் தோளைப் பற்றினான்.

அங்கு கூலிக்குச் சில்லரை வேலைகள் செய்யும் சிறுவர்கள் சாமானியரல்ல. ஆனந்தஸிங் அவனைப் பிடித்ததே அவன் "விடையா! நான் அவசரவேலையாய்ச் செல்கிறேன்" என்று கூறிக்கொண்டே தன்னை விடுவித்துக்கொள்ள முயன்றான்.

**ஆனந்தஸிங் :**—இருடா இரு ஒரு சங்கதி யிருக்கிறது.

**சிறுவன் :**—நான் நிற்கமுடியாது. அவசரமாய்ச் செல்லவேண்டும்.

**ஆனந் :**—என்ன வேலை? அப்படிப்பட்ட வேலை?

**சிறு. :**—என் சங்கதிகளை நான் யாருக்கும் கூறமாட்டேன். நான் மூடனல்ல.

**ஆனந் :**—அப்படியா ! உன்னைக் கூறும்படி செய்கிறேன் பார்.

**சிறு :**—நீ யென்ன செய்வாய். நீ போலீஸ்காரனாக இருக்கலாம். இருந்தாலென்ன? நான் எங்கும் திருடவில்லை.

**ஆனந் :**—அது மெய்யே. நீ திருடவில்லை. எனக்கு வேண்டிய ஒரு வஸ்து உன்னிடமிருக்கிறது.

**சிறு :**—என்ன வஸ்து ?

**ஆனந் :**—ஒரு தந்தி சமாசாரம்.

இதைக் கேட்டதே பையன் திடுக்கிட்டுவிட்டான். "உன் விவகாரம் என்ன? வெளிப்படையாய்க் கூறு. அப்படி விவகாரமாய்ப் பேசினால் சரி" என்றான்.

ஆனந் :—"ஏதோ அதைக் கொடு!" என்றான்.
சிறு :—அது என்னுடையதல்ல. அதைக் கொடுக்கமாட்டேன்.

ஆனந்தஸிங் உடனே சிறுவனை நோக்கி நீ யதைக் கொண்டுபோகக் கூலி என்னவென்றான்.

சிறுவன் ஆறணு கொடுத்தானென்றான்.

ஆனந்தஸிங் உடனே ஒரு ரூபாயெடுத்துச் சிறுவனிடம் கொடுத்தான்.

சிறு :—"ஆ இது விவகாரத்திற்கு ஒழுங்கு. இப்படி முன்னமே கூறுவது தானே" என்று கூறிக்கொண்டே தன்னிடமிருந்த கடிதத்தைக் கொடுத்தான்.

ஆனந்தஸிங் அதை வாங்கிக் கீழ்க்கண்டபடி வாசித்தான்.

"நவீனபுரி - கொழும்புச் செட்டிக்கு முக்கியமான அவசரபேரம், நாளைக்காலை அவசியமாய் மேலையூருக்கு வரவும். ஸ்டேஷனில் சந்திக்கப்படும்."

இதை வாசித்ததே ஆனந்தஸிங் முகமலர்ச்சியடைந்து புன்னகை புரிந்து, "அடே இரங்கநாதா! கொழும்பு செட்டியா? உனக்கு அவனைப் பற்றி என்ன தெரியும். எனக்கு மிகுதியாய்த் தெரியுமென்று நீ யறியாய் பாபம்" என்று கூறிக்கொண்டே அதை மடித்துக் கையில் வைத்துக் கொண்டு திரும்பினான்.

அதைக் கண்ட சிறுவன் "என்ன அதைக் கூடவே எடுத்துக்கொண்டு போகிறாயே. அதைக் கொடுத்துவிட்டுப் போ" என்றான்.

ஆனந்தஸிங் "சரிதான் நீ போ" என்றான். சிறுவன் அப்படியானால் என்னிடம் அதைக் கொடுத்த மனிதனிடம் எல்லாச் சங்கதியும் சொல்லி விடவேண்டியதே யென்று கூறிக்கொண்டே ஓட்டம் பிடித்தான்.

ஆனந்தஸிங் அவனைத் துறத்திச் சென்று பிடித்துக்கொண்டு, தன் மார்பிலுள்ள பதக்கத்தைக் காட்டி "நான் யார் தெரியுமா. பத்திரம், நீ மறுபடி யந்த ஹோட்டலருகிற் சென்றால் சுட்டுத் தள்ளிவிடுவேன்" என்றான். அவன் அவ்வளவுகூடச் சொல்லவேண்டிய அவசியமேயில்லை. ஏனெனில் துப்பறியும் ஆசாமிகளுடைய விஷயம் அந்நகரத்துக் கூலிச் சிறுவர்களுக்கு நன்றாய்த் தெரியும்.

பையனை விட்டுப் பிரிந்தபின் ஆனந்தஸிங் மறுபடி அந்தச் சீட்டைப் பார்த்தான். அவன் மனதில் திடீலென்று ஒரு புது யோசனை யுதித்தது. அவன் முகத்தில் ஒருவிதப் பிரகாசம் உண்டாயிற்று. தனக்குத்தானே சற்றுநேரம் சிந்தித்து "ஆ கள்ளப்பயல்களே! உங்கள் பிரியப்படிக்கே கொழும்பு செட்டி நாளைக் காலை வண்டிக்குக் கட்டாயம் வருவான்" என்று கூறிக்கொண்டே தன்னறைக்குச் சென்று அரைமணி கழித்து நவீனபுரி மார்க்கமாய்ச் சென்ற இரயில் வண்டியி லேறிச்சென்று நான்காவது ஸ்டேஷனில் இறங்கி இரவு அங்கு தங்கிவிட்டான்.

மறுநாட் காலை நவீனபுரியிலிருந்து வரும் மெயில் மேலையூரில் வந்து

நின்றதே அதிலிருந்து இறங்கிய மனிதர்களில் ஒருவன் யாவரும் கவனமாய்ப் பார்க்கத்தக்கவனுயிருந்தான்.

அவனுக்கு வயது 50-க்கு மேலிருக்கும். அவன் தலைப்பாகை பிரம்மாண்டமானதா யிருந்தது. அவன் புருவங்கள் மயிர் நிறைந்து தொங்கிக் கொண்டு அவனுடைய கண்களிலிருந்த கூர்மையான பார்வையை மறைத்துக்கொண்டது. க்ஷவரச் செலவை மீத்திக்கொள்ள விரும்பியவன் போல் அவன் தாடியும் மீசையும் அவ்வளவு ஒழுங்கு கடந்து வளர்ந்து அவன் நாசி தவிர மற்ற முகத்தின் பாகத்தை யெல்லாம் மூடிக்கொண்டிருந்தன.

அவன் ஜாதி வழக்கம்போல் உள்ளே இரண்டு மூன்று அங்கிகளை யணிந்துகொண்டு மேலே ஒரு நீண்ட அங்கி யணிந்திருந்தான். அந்த அங்கி சற்று விலையுயர்ந்த துணியால் தைக்கப்பட்டதெனினும் அது புதிதாய்த் தைக்கப்பட்டுப் பலவருடங்களாயிருக்கும் என்று நன்ருய் விளங்கியது. அதில் குறைந்தது இருபது வட்டங்களாவது போடப்பட்டிருந்தன. அம்மாதிரியே, பலதரம் பழுது பார்க்கப்பட்டதால் அனேகம் சிறிதும் பெரிதுமான வட்டங்கள் போட்டுத் தைக்கப்பட்ட ஒரு பெரிய குடையை அக்குளிலும், புராதனமான ஒரு பிரயாணப் பையைக் கையிலும் வைத்துக் கொண்டும், ஒரு கையில் மூங்கில் தடியை வைத்துக்கொண்டும் இருந்தான். அவன் பாதரட்சையோ மற்றவைபோலவே அவனுடைய உலோப குணத்தைக் காட்டிற்று.

அவன் வண்டியிலிருந்து இறங்கியதும் ஸ்டேஷனில் பின்பக்கம் சென்று யாரையோ தேடுபவன்போல் பார்க்கத் தொடங்கினுன். சாமிநாதனுடைய வண்டி யங்கு வந்து காத்துக்கொண்டிருந்தது. சாரதி தனக்குக் கூறப்பட்ட அடையாளத்தால் இவனை யறிந்துகொண்டு "தாங்கள் தானே கொழும்பு செட்டியார்" என்று கேட்டறிந்துகொண்டு வண்டியில் ஏற்றிக்கொண்டுபோய்ச் சாமிநாதன் மாளிகையில் இறக்கிவிட்டான். செட்டி கள்ளர் இருவரையும் கண்டதே,

"ஆ! உங்கள் தரிசனங் கிடைத்தது எனக்குப் பெரும் புண்ணியம். அதிலும் தங்களைப்போன்ற பெரிய மனிதரிடம் நான் இலேவாதேவி செய்ய நேரிட்டது எனக்குப் பெரிய கௌரவமே" என்ருன்.

**இரங்கநாதன்** :—"நல்லது நீ ஆயத்தமாய் வந்திருக்கிருயா. ஏனெனில் நாங்கள் மிக்க அவசரமாய் ஊரைவிட்டுப் போகவேண்டும்" என்ருன்.

**செட்டி** :—நீங்கள் ஊரைவிட்டுப் போகவேண்டிக் கட்டாயப்படுத்தப் படுகிறீர்கள்போலும்" என்ருன்.

இரங்கநாதன் குற்றமுள்ள நெஞ்சாகையால் அவன் மனதில் செட்டியின் வார்த்தை உருத்தியது. அதனுல் அவன் கோபமடைந்து "நீ சொல்வதென்ன? எங்களைக் கேலி செய்யும்படி நான் உன்னை வரவழைக்கவில்லை" யென்று கூறினுன்.

கொழும்புச்செட்டி மிக்க பயந்தவன்போல்,

"நான் குற்றமாய் நினைந்து ஒன்றும் கூறவில்லை. உங்களைப்போன்ற பெரிய மனிதர்கள் அனேகர் என்னிடம் வருவதுண்டு. சில சமயம் மிக்க வியாதியடைந்து திடீலென்று வெளிநாட்டிற்குப் போகவேண்டி நேரிடும். சிலசமயம் தங்கள் சுற்றத்தார் அல்லது நண்பர்கள் ஏதாவது ஆபத்தில் சிக்கிக்கொள்வார்கள். அவர்களுக்கு உதவிசெய்யவேண்டி யிருக்கும். வியாதியினால் அவசரமாய் இடம் மாறவேண்டி யிருக்கும். இவ்வளவேயன்றி மற்றபடி நான் குற்றமாய் நினைத்து ஒன்றும் கூறவில்லை........"

இரங்கநாதன் செட்டியிடம் அதிககோபமாய்ப் பேசக்கூடாதென்று சிந்தித்துக்கொண்டு "நண்பரே! நீ கூறுவது உண்மையே. நாங்கள் எவ்வளவு துரிதமாய்ச் செல்லக்கூடுமோ அவ்வளவு துரிதமாய்ச் செல்லவேண்டியதே. அதற்காகவே யுன்னை யிவ்வளவு அவசரமாய் வரவழைத்தது. இனி விவகாரம் நடக்கட்டும். இந்த மாளிகையை யெவ்வளவிற்கு எடுத்துக்கொள்ளுகிறாய்? இதோ இதைச் சேர்ந்த பத்திரம் முதலியவைகள்" என்று ஒரு கடிதக்கட்டை யவனிடமளித்தான்.

செட்டி யாவற்றையும் பார்த்தான். மொத்தம் 12 ஆயிரம் தாளும். செட்டி எவ்வளவோ சாமர்த்தியமாய்ப் பேசிக் கடைசியில் இரண்டாயிரம் கொடுப்பேன் என்றான். பிறகு பேரம் நடந்ததையும் செட்டியின் தந்திர சாமர்த்தியங்களையும் விவரமாய் எழுதவேண்டுமாயின் பல பக்கங்கள் கொள்ளும். ஆகையால் சுருக்கமாகவே கூறி முடிக்கிறோம்.

செட்டி அடிக்கடி தன் கூர்மையான பார்வையால் சாமிநாதனைப் பார்த்துக்கொண்டே யிருப்பான். கள்ளர்கள் சொத்தின் அளவு அதிலுள்ள விலையுயர்ந்த சாமான் இவற்றின் மதிப்பைக்கூறி அதிகவிலை தரும்படி கேட்டால்,

"நான் இது தாளாது என்று கூறவில்லை. நான் அவ்வளவு பணக்காரனல்ல. அவ்வளவு பணம் என்னிடமில்லை" யென்பான். இவ்வாறு பேசிப்பேசி முடிவில் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கொடுப்பதாய் ஒப்புக்கொண்டான்.

கள்ளர்கள் மிக்க ஆத்திரத்தோடு "சரி சரி எடு பணத்தை" யென்று துள்ளிக் குதித்தார்கள். செட்டியாரோ "இவ்வளவு ஆத்திரப்படவேண்டாம். நான் பணம் கையில் வைத்துக்கொண்டில்லை" என்றான்.

இதைக்கேட்ட இருவரும் பெருங் கலக்கமும் கோபமும் அடைந்து ஒருவரை யொருவர் பார்த்து மிரளமிரள விழித்தார்கள். இரங்கநாதன் தன் கோபத்தை யடக்கிக்கொண்டு "செட்டியாரே நான் தந்தியிலேயே சர்வ ஆயத்தமாய் வரும்படி கூறியிருந்தேனே. நீ கையில் பணத்தைக் கொண்டுவந்திருக்கிறாய் என்றல்லவோ வெண்ணியிருக்கிறோம். நாளையிந்நேரம் வெகுதூரம் போய்விட்டிருக்கவல்லவோ வெண்ணியிருந்தோம்" என்றான்.

(தொடரும்)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

---

## சந்தா நேயர்கட்கு

அறிவிப்பு:—பிப்ரவரிமீ சந்தா செலுத்தவேண்டுமென்ற விளம்பரம் 'மனமோகினி' சஞ்சிகையின் சந்தாதார்களுக்கேயன்றி, "ஆனந்த போதினி"யைப் பற்றியதல்ல.

2. 8-வது வருட சந்தாவை தவணைக்குள் (14-6-'22) செலுத்தியவர்களுக்கெல்லாம் உருத்ரோத்காரி வருட பஞ்சாங்கம் மாசிமீ முதல்வாரம் தொடங்கி யனுப்பப்படும். ஆதலின் சந்தாதார்கள் அதற்காக வீணே கடிதம் வரையவேண்டாம்.

## இங்கிலாந்தில் பத்திரிகை.

இங்கிலாந்து தேசத்தில் வெளியாகும் பத்திரிகைகளின் மொத்தம் 2300. தினசரி 180 பத்திரிகைகள்தான். இதில் "டெரிலி ஹிராலடு" என்ற ஒரு தினசரியும், 45 வாரப் பத்திரிகைகளும், 75 மாதாந்தரமும் தொழிலாளர்களுக்குச் சொந்தமானவை.

| பத்திரிகைகள் | சந்தாதார்தொகை | பத்திரிகைகள் | சந்தாதார்தொகை |
|---|---|---|---|
| "டெயிலி மெயில்" | 18,17147 | "டெயிலி ஸ்கெட்ச்" | 8,37,654 |
| "டைம்ஸ்" | 75,000 | "ஈவினிங் நியூஸ்" | 8,94,568 |
| "டெயிலி மிர்ரர்" | 10,59,861 | "ஸ்டார்" | 7,02,600 |
| "டெயிலி எக்ஸ்பிரஸ்" | 8,55,000 | | |

பத்திராதிபர்களிடமிருந்து சர்க்காருக்குக் கிடைக்கும் வருமான வரி ஒரு கொடியே முப்பது லட்சம் பவுனாகும். இந்தியாவில் ஒரு லட்சம் சந்தாதார்களுள்ள பத்திரிகை கூடக் கிடையாது.—(லோகோபகாரி)

## 100 வயதுள்ளவர்கள்.

பால்கன் நாடுகளுள் ஒன்றான ஸெர்வியாவில் நூறு வயதுள்ளவர்கள் மிகுதி. அங்கேயுள்ளவர்களுள் 2260 பேர்களுக்கு ஒருவன் 100 வருஷம் வாழ்ந்தவன். இந்தக் கணக்குப்படி அந்தச் சிறிய நாட்டில் 100 வயதுள்ளவர்களும் மேற்பட்டவர்களுமாக 575 பேர் இருக்கிறார்கள். அயர்லாந்திலுள்ள ஜனங்களில் 8130 பேருக்கு ஒருவன் 100 வருஷம் வாழ்ந்தவன். அங்கே மொத்தம் 576 பேர் நூறு வயது சென்றவர்கள் இருக்கிறார்கள். ஸ்பெயினில் 48,000 பேரில் ஒருவன் நூறு வயது சென்றவன். நார்வேயில் சுமார் லட்சம்பேரில் ஒருவன்வீதம் 23 பேர் 100 வயது சென்றவர்கள் இருக்கிறார்கள். இங்கிலாந்தில் 2 லட்சம் பேரில் ஒருவன்வீதம் 192 பேர் இருக்கிறார்கள். பிரான்ஸிலும் அப்படியே 218 பேர் இருக்கிறார்கள். ஸ்வீடனில் 20 பேர் 100 வயது சென்றவர்கள். டென்மார்க்கில் இருவர் மட்டும் 100 வயது சென்றவர்கள். 30 கோடிப் பேரைக் கொண்ட நமது தேசத்தில் 100 வயது சென்றவர் இப்பொழுது மிகவும் சிலரா யிருக்கின்றனர்.

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

## துந்துபிளு பங்குனிமீ—சாலிவாகனம் 1845—கலி 5024
## பசலி 1332—கோல்லம் 1097-98—ஹிஜரி 1341
## இங்கிலீஷ் 1923ளு மார்ச்சுமீ—ஏப்ரல்மீ

| பங்குனி | மார்ச்சுமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | புத | து15-38 | திரு-11-53 | சி11-51பி | மீனரவி நா-10-55 ஷடசீதி புண்யகாலம் |
| 2 | 15 | வியா | திர19-35 | அவி-17-5 | சித்17-5ம | நாமகரணம் செய்ய |
| 3 | 16 | வெ | சது24-35 | சதை-23-13 | சித்-60 | போதாயன அமாவாசை |
| 4 | 17 | சனி | ●30-5 | பூரட்-30-10 | ம30-10சி | அமாவாசை |
| 5 | 18 | ஞா | பிர36-23 | உத்-37-38 | அமி60 | யுகாதி பண்டிகை, சைத்ரசுத்தம் |
| 6 | 19 | திங் | துதி42-55 | ரேவ-45-23 | சித்-60 | கரிநாள் |
| 7 | 20 | செ | திரி49-33 | அசு-53-8 | சித்-60 | ஆண்டோளன் திரிதிகை |
| 8 | 21 | புத | சது55-48 | பர-60... | சித்-60 | மேஷாயனம் நா-36-48 |
| 9 | 22 | வியா | பஞ்-60... | பர-0-38 | சி0-38மர | கிருத்திகை |
| 10 | 23 | வெ | பஞ்1-23 | கிரு-7-23 | சி7-23மர | சஷ்டி |
| 11 | 24 | சனி | சஷ்5-50 | ரோ-13-5 | சித்60 | கங்கோற்பத்தி |
| 12 | 25 | ஞா | சப்8-53 | மிரு-17-43 | சித்60 | [நவமி |
| 13 | 26 | திங் | அஷ்10-10 | திரு-19-55 | சி19-55அ | ஸ்ரீராமஜயந்தி, ஸ்ரீராம |
| 14 | 27 | செ | நவ9-30 | புன-20-38 | சித்-60 | தர்மராஜா தசமி |
| 15 | 28 | புத | தச6-55 | பூச19-23 | சித்-60 | கரிநாள், ஸ்மார்த்த ஏகா |
| 16 | 29 | வியா | ஏகா2-3 துவ56-25 | ஆயி-16-20 | சி16-20அ | வைஷ்ணவ, மத்வ ஏகாதசி, வாமன துவாதசி |
| 17 | 30 | வெ | திர48-55 | மக-11-43 | ம11-43சி | பிரதோஷம், மதன திர |
| 18 | 31 | சனி | சது40-25 | பூர-5-48 உத்-58-53 | சி5-48மர | பங்குனி உத்ரம் [யோதசி |
| 19 | 1 | ஞா | ○ 31-18 | அஸ்-51-30 | சித்-60 | கரிநாள் |
| 20 | 2 | திங் | பிர21-50 | சித்-44-5 | பிர44-5அ | சைத்ரபகுளம் |
| 21 | 3 | செவ் | து12-33 | சுவா-37-0 | சி37-0மர | மாடுவாங்க, வாகனமேற |
| 22 | 1923ளு ஏப்ரல்மீ 4 | புத | திரி4-3 சது56-25 | விசா-30-45 | சித்-60 | |
| 23 | 5 | வியா | பஞ்50-10 | அனு-25-43 | சி25-43பி | |
| 24 | 6 | வெ | சஷ்45-35 | கேட்-22-13 | ம22-13அ | |
| 25 | 7 | சனி | சப்42-48 | மூல-20-33 | சித்-60 | |
| 26 | 8 | ஞா | அஷ்42-8 | பூரா-20 .. | சித்20-0அ | |
| 27 | 9 | திங் | நவ43-10 | உத்-22-53 | ம22-53அ | |
| 28 | 10 | செவ் | தச46-8 | திரு26-45 | சித்-60 | |
| 29 | 11 | புத | ஏ50-25 | அவி32-8 | பி32-8சித் | |
| 30 | 12 | வியா | து55-50 | சதை33-38 | ம38-38சி | தானியம், மாடு முதலானவை வாங்க |

| | | | |
|---|---|---|---|
| சூரி | சே | | |
| கே 4 | 12உ கும்-சுக் 13,,மீன-புத | | |
| சுக் | 23,,ரி-சே 28,,மே-புத | | ராகு |
| | | குரு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நமஃ

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 8 | துந்துபிஸு பங்குனிமீ கஉ | 1923ஸு மார்ச்சுமீ 14உ | பகுதி 9

## கடவுள் வணக்கம்.

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
　　பொய்யென் றெனைக் காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
　　போதபூ ரணவெ ளிக்கு
ளேதுமற நில்லென்று பாயமா வைத்துநினை
　　வெல்லாஞ்செய் வல்ல சித்தா
மின்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
　　யெளியேன் மறந்துய் வனோ
வேதமுத லாகநல் லாகமத் தன்மையை
　　விளக்குமுட் கண்ணி லார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
　　வீறுவா தம்புகலும் வாய்
வாதநோ யாளர்க்கு மெட்டாத முக்கணுடை
　　மாமருந் துக்கமிர் தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
　　வளர்கா தலிப்பெ ணுமையே. (1)

நேராயம் மௌனநிலை நில்லாமல் வாய்பேசி
யரரா யலைந்தீர்நீ ராகெடுவீர்—தேரீர்
திரையுந் திரையுநதிச் சென்னியனை நாவாற்
கரையுங் கரையுமனக் கல். (2)

அற்ப மனமே யகிலவாழ் வத்தனையுஞ்
சொற்பனங் கண்டாய்சொன் னேனுன்—கற்பனையொன்
றில்லா விடத்தே யெனைச்சும்மா வைத்திருக்கக்
கல்லாய்நீ தானோர் கவி. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. பூதமுதலாக நாதபரியந்தமும்=பஞ்சபூதங்கள் முதல் நாதத்துவம் ஈருகவுள்ள எல்லாத் தத்துவங்களும்.

பொய்யென்று=அநித்தியமென்று

எனைக்காட்டி=(பூதங்கள் முதல் நாதம் ஈருக உள்ள எல்லாத் தத்துவங்களும் ஒன்றையொன்று அறியமாட்டா வுன்மாவையுமறியமாட்டாவாதலின் அநித்தியஜடம். ஆகவே யுன்னாலறியப்பட்ட அவைகளில் எதுவும் நீயல்ல. அவையனைத்தையும் அறியும் ஆன்ம சொரூபமே நீயென்று) என் உண்மைச் சொரூபத்தை நான் அறியக்காட்டி.

என் போதத்தின் நடுவாகி=என் அறிவினுள்ளாகி

போத பூரணவெளி=ஞான பூரணமான ஆகாயம். அதாவது சிதாகாயம்.

ஏதுமறநில்=மனமாதி தத்துவங்களியாவும் விட்டு நில்.

தாயுமான சுவாமிகளே, "சின்மயானந்த குரு" வில்,

"கூடுத லுடன்பரித லற்றுயிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரித லற்று
*   *   *   *   *   *
வாடுதலு மற்றுமே லொன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமு மற்று
*   *   *   *   *   "

என்று கூறியதன்பொருள் ஈண்டு சிந்திக்கத்தக்கது.

"உபாயமாவைத்து"—சகல கேவலங்கள் தாக்காத நிலை யின்னதென்று வாக்கால் கூறமுடியாததாதலின், அந்த நிலையில் நான் நிற்குமாறு உபாயமாக அருள்புரிந்தனை என்ருர்.

உட்கண்=ஞானக்கண்

வீறுவாதம் புகலும்வாய் வாதநோயாளர்=ஆசானே, ஆப்த நண்பனே சுருதியுக்தியனுபவங்களுக்கு ஒத்ததாகக் கூறும் உண்மையையேற்று ஞானனுபவத்தைப் பெற முயலாமல், தன் கூற்றையே சாதிக்க வெண்ணி வீண்குதர்க்கம் பேசிக்கொண்டும், வேதாந்தம் மெய் சித்தாந்தம் பொய், சித்தாந்தம் மெய் வேதாந்தம் பொய் என்று வாதச்சண்டை யிட்டுக்கொண்டும் காலம் போக்கும் மந்தமதியினர்.

முக்கணுடை மாமருந்து=பரமசிவம்

## விசேஷம்.

உமாதேவியார் சிவபிரானது அருளாகிய சத்தியாதலால் அவருக்கு அமுதம்போன்றவள் என்றருளினர். பரம்பொருள் ஒன்றே சர்வக்ஞத்வமாகிய ஞானமுடையதாதலின் அதற்குச் சூரியன் சந்திரன் என்ற

இரண்டு நேத்திரங்களன்னியில் ஞானமாகிய ஒரு கண்ணும் உளதென்று வேதங் கூறியது. இலலாட மையமாகிய சுழிமுனையே ஞானம் பிரகாசிக்கு மிடமாதலில் நெற்றிக்கண் என்று அதற்குப் பெயர். பிரகாசத்தை யளிப்பதால் அக்னியாகிய கண் என்றும் கூறப்படும். பரம்பொருள் ஞானமே சொரூபமாக வுடையதாதலின் பரமசிவன் "அழல்வண்ணன்," "தீவண்ணன்," "அழலாடி" என்றும் வேதம் கூறுகின்றது. வெண்மை சத்துவகுணத்தையும் ஞானத்தையும் குறிக்கும் நிறமாதலின் சிவபிரான் நீறு பூசிய மேனியன் என்றும் கூறப்பட்டது. இவ்வாறே சடை, மதி, அரவம் முதலிய சின்னங்கள் யாவும் அவரது பலவித சத்திகளைக் குறிப்ப வைகளேயாகும்.

உருவம், அருவம், உருவாருவம் மூன்றுங் கடந்ததும், இன்னதென்று வாக்கால் கூறவொண்ணாததும், மனதால் நினைக்க வொண்ணாததுமாகிய பரம்பொருளை மேற்கண்டவாறு உருவகப்படுத்திக் கூறியிருப்பதால் தான் கடவுளின் எண்ணிறந்த சத்திகளையும், பூரண இலக்ஷணங்களையும் நாம் உணரவும், நீடித்தகாலம் பகவானைப்பற்றி விவகரிக்கவும், அதனால் சித்தசுத்தி யடைந்து அவனருளைப் பெறவும் சாதகமாகிறது. அதோடு இந்த உண்மைகள் மனிதன் ஆராய்ச்சிக்கு மறைபடாமல் எப்போதும் அறியக்கூடியவண்ணம் வெளிப்படையாகவும் விளங்கிக்கொண்டிருக்கின்றன. மேலும் ஒரு வரம்பிலடங்காத ஒன்றை வரையறுத்துக் கூறுவதாகும்.

இவற்றை யெல்லாம் விட்டு "கடவுள் அரூபி" என்றுமட்டும் கூறி விடுவது "கடவுள் யாரோ எனக்குத் தெரியாது" என்று கூறுவதாகுமே யன்றி எள்ளளவேனும் கடவுள் இலக்ஷணம் அறிந்த தன்மையாகாது.

இந்த உண்மையை யறியாதவர்களும் ஆன்மாவின் இலக்ஷணமும், ஞானம் இத்தன்மையதென்பதையும் அடியோடறியாதவர்களுமாகிய புறச் சமயிகள் நாம் கடவுளை யுருவமுடையவராகவும், மனைவியுடையவராகவும் கருதுகிறோமென்று கூறுகிறார்கள். நம்மவர்கள் அவர்கள் வார்த்தை களுக்குச் செவி கொடாதிருக்கவேண்டும்.

2. "மௌன நிலை"—மௌனம் என்பது மனோமௌனம், வாக்கு மௌனம், காஷ்ட மௌனம் என மூவகைப்படும். இவற்றில் மனம் ஒன் றையும் சிந்தியாமல் அசைவற்று நிவாத தீபம்போலும், அலையற்ற சாகரம் போலும் நிற்பது மனோமௌனம். வாக்கால் ஒன்றையும் வசனிக்காம லிருப்பது வாக்கு மௌனம். தேகத்தால் ஒன்றையும் செய்யாதிருப்பது காஷ்ட மௌனம்.

ஈண்டு கூறியது இந்திரியங்களின் வழிச்செல்லவொட்டாது மனதை யடக்கிச் சலனமின்றி ஈசுவரத்தியானத்தில் நிலைக்கச்செய்வதாகிய நிலை.

திரை உந்து இரையும் நதி=அலைபொருந்திச் சத்திக்கு நதி. அதாவது கங்கை.

வீணாக வாசாஞானம் பேசிக்கொண்டு திரியாமல் மனதை ஒரு வழிப் படுத்தி ஈசுவரத் தியானத்தில் நிலைக்கச்செய்தால் அவனருள்பெறலாம் என்பதாம்.

3. உலகவாழ்வு அத்தனையும் சொற்பனம்—மாயா காரியமாகிய உலகமும் அதிலுள்ள போகங்களும் கனவுபோன்றனவாகும்.

அதாவது கனவு காணும்போதுமட்டும் உண்மையாகத் தோற்றும். அப்போது சம்பவிக்கும் நன்மைகளுக்குச் சந்தோஷமும், துன்மைகளுக் குத் துக்கமும் அடைகிறோம். ஆனால் விழித்தபோதோ யாவும் பொய் யெனத் தோன்றும். உலக விஷயங்களும், நாம் அஞ்ஞானமாகிய தூக் கத்திலிருக்குமட்டும், மெய்யாகவேதோற்றும். அஞ்ஞான நித்திரை யொழிந்து ஞானமாகிய விழிப்பு வந்ததே உலகம் கனவுபோல் பொய் யாய்த் தோன்றிவிடும். விழித்தபின் முன்புகண்ட கனவைப்பற்றி நினைத் தால் சந்தோஷமாவது பயமாவது தோற்றாமல் வீணான பெரும்பயம் நீங் கியதுபோன்ற ஒருவித நிம்மதியே தோன்றும். அதுபோலவே ஞானம் வந்தவனுக்கும் உலக விஷயங்களில் சுகதுக்கங்கள் புலப்படா. ஞான தசையில் உலகம் பொய்த்தோற்றமாய்ப் போவதால், ஒருகாலத்தில் மெய்யாகவும், ஒருகாலத்தில் பொய்யாகவும் தோன்றும் உலகமும் அதன் காரணமாகிய மாயையும் அநித்தியமேயாகும். மாயையும் நித்தியம் என்று சிலர் கூறுகிறார்களேயெனின்,

இரண்டு பட்சமும் உண்மையே. எப்படியெனின் வியஷ்டியில் நோக் குங்கால் மாயை அநாதி, ஆனால் அநித்தியமே. ஒரு மனிதன் ஞானத்தை யடைந்ததும் அந்த ஆன்மாவரையில் மாயை யொழிந்தது. தாயுமான சுவாமிகள் "மாயையெனும் திரையை நீக்கி நின்னை யாரறியவல்லார்?" என்றார். மாயை நித்தியமாயின் அவனால் அது ஒழிக்கப்பட்டிராது. ஆத லின் அநித்தியமே.

அவன் வரையில் மாயை அநித்தியமாய் முடிந்தாலும் சமஷ்டியாகிய உலகமாயை யொழியாமலே யிருக்கும். அம்மாயையின் காரியமாகிய உலகமும் இருந்துகொண்டே யிருக்கிறதன்றோ; இதனால் மாயை நித்திய மென்று கூறப்பட்டது.

இந்த இரண்டு பட்சங்களிலும் நாம் மாயையை யொழித்து முத்தி யடையவேண்டியவர்களாதலின் மாயை அநித்தியம் என்ற பக்ஷத்தையே சித்தாந்தமாகக் கொள்ளல் வேண்டும். ஆனால் மற்ற பட்சம் தவறென்று கண்டித்து வாதாடுவது அறியாமையாகும்.

"கற்பனையொன்றில்லாவிடம்"—ஒரு கற்பனையுமின்றி ஆன்மசொரூப மாத்திரமாய்த் தனித்துள்ள விடம்—முதல் பாசுரத்தில் "ஏதுமறநில்" என்று கூறிய நிலைமை எந்தத்தானமோ அதையே இதுவும் குறிக்கிறது. அந்தப் பொருளே இதற்கும் பொருந்தும்.

---

## சரியை கிரியை.

நேயர்களே! சரியை கிரியைகளைப் பற்றியும், கடவுளை உருவமாகப் பாவித்துப் பூசிப்பதாகிய சகுணோபாசனையைப்பற்றியும் நமது சஞ்சிகையில் ஆங்காங்கு நம்மாலும் விஷயதானம்புரியும் நண்பர்களாலும் வரையப்பட்டுள்ளது. ஆயினும் இப்போது ஒருவர் சரியை, கிரியை, சகுணோபாசனை, கர்மம் என்பவற்றைப் பற்றிச் சஞ்சிகையில் வெளியிடும்படி நமக்கு ஒரு வியாசம் வரைந்தனுப்பியுள்ளார். சஞ்சிகையில் வெளியிடும்படி எழுதியவர் பலபேருக்கு அவ்விஷயங்களை வாயாலும் போதித்திருக்கலாகும். அவர் உபகாரச் சம்பளம் பெற்றிருப்பவர் என்று தெரிகிறபடியால் வயது முதிர்ந்தவராகவுமிருக்கவேண்டும். அவர் நாமத்தால் அவர் பிராம்மணரென்றே தெரிகிறது. அவர் கடிதத்தில் தம் பெயரை வரைந்திருப்பினும் வியாசத்தின் முடிவில் "கோவிந்தன்" என்று புனைப்பெயர் குறித்திருப்பதால் அவர் பெயரை நாம் வெளியிடவில்லை. நாம் கூறப்போவதும் கண்டிக்கப்போவதும் அவர் வியாசத்தில் கூறியுள்ள விஷயங்களையேயன்றி அவரையல்ல. வயது முதிர்ந்த ஒரு பிராம்மணர் கூறும் ஆன்மார்த்த விஷயங்களைச் சாதாரணமாக யாவரும் ஏற்றுக்கொள்வதோடு அவற்றில் நம்பிக்கையும் கொள்வார்கள் என்பது சுபாவம்.

ஆனால் அவர் கூற்றுக்களைச் சாத்திர ஆராய்ச்சி செய்த அறிவாளிகளில் ஒருவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். உலகில் பெரும்பாலோர் ஆராய்ச்சியின்றிப் பக்தி மார்க்கத்திலிருப்போரே. அவர் கூற்றுக்கள் அத்தகையோரை யெல்லாம் அடியோடு கெடுத்து அவர்கள் ஆன்மார்த்த விஷயத்திற்குக் கேடு விளைவிக்கத்தக்கவைகளாக விருப்பதால் நாம் அவற்றைக் கண்டித்துச்

சாத்திரங்களில் கூறியுள்ள உண்மை யின்னதென வெளியிடவேண்டியது அவசியமாயிற்று. அவர் அனுப்பியுள்ள ஞானம் என்ற விஷயத்தை அவர் எழுதியபடியே இங்கு வெளியிடுகிறோம்.

ஞானம்.

(1) நண்பர்காள்! மா. மௌன குரு சுவாமியால் அடியேன் அறிந்த சில விஷயத்தை எழுதி யிருக்கிறேன். ஒருவன் ஞானம் அடையவேண்டின் காமக்குரோதாதியை நீக்கவேண்டும்; மன * பதைபதைப்பு ஆகாது; மன உறுதிவேண்டும்; சர்வ உயிர்களும் சிவமாய் பாவிக்கவேண்டும்; சாதி பேதம் கூடாது; சாதிபேதமே வஸ்துவை நிந்தித்தது ஆகும்.

(2) தன்னுயிர்போல் மன்னுயிர்களையும் பாவித்து இரங்குவதே கருணை யுள்ளவன் என்றும் சிவபூசை செய்வோன் என்றும் பக்திமான் என்றும் சத்தியத்தை உடையவன் என்றும் சொல்லலாம். ஆதலால் ஞானம் அடைபவனுக்கு இதே ஓர் ஆதரமாகக் கொண்டு ஞானம் அடையலாம். மேல்கீழ் என்பதைத் தள்ளவேண்டும். சர்வமும் தானுகவும் தான் சர்வமுமாகவும் இருக்கவேண்டும்.

(3) சரியை கிரியை எப்போதும் ஆகாது. அதைச் செய்தால் ஞானம் அடையமுடியாது. புண்ணிய ஸ்தல தீர்த்தங்களுக்குப் போவதால் ஒரு பிரயோஜனமுமில்லை. சிலர் சரியை கிரியை செய்துதான் ஞானம் அடையவேண்டும் என்று சொல்லுகிறார்கள். அது ஞானத்தை அடையவிடாது.

(4) சில ஞானத்தில் சகுணோபாசம் செய்துதான் ஞானம் அடையவேண்டும் என்று சொல்லியிருக்கிறது. அது தப்பு. ஒருவன் ஒரு உருவத்தை நினைத்துக் கண் மூடிக்கொண்டு தியானம் செய்தால் அவ்வுருவம் தோன்றும். விளித்தால் போய்விடும். இது பொய்த்தோற்றம். இது விட்டுவிடவேண்டும். இதனுல் ஒரு பயனும் கிடையாது. ஞானமும் உண்டாகாது.

(5) முன்னோர்கள் கட்டுப்பாடு செய்துவைத்த இதிகாச புராணங்களை நம்பி அதன் வழி செல்வோர்களுக்கு ஞானம் ஒருபோதும் வராது. கர்மம் செய்து ஞானம் அடையமுடியாது. கர்மத்தைத் தொலைத்தால் ஞானம் அடையலாம். கர்மம் என்றால் சரியை கிரியை செய்பவர்கள் க்ர்மவான்கள். சரியை கிரியைவிட்டு

* யாதொரு காரணத்தால் பயம் உண்டாக்குதலே.

உண்மை அறிந்த யோகிகளிடம் அடைந்து உடல் பொருள் ஆவி மூன்றும் தத்தம் செய்து ஞானம் அடையவேண்டும்.

(6) இதைப்போல் ஞாயமில்லாத சங்கதிகள் இன்னும் அநேகம் எழுதி வைத்திருக்கிறார்கள். இவைகள் பிராமணன் என்று சொல்லப்பட்ட ஆரியன் பிழைப்புக்காகவே கட்டுக்கதை யாக இதிகாச புராணங்கள் எழுதி யிருக்கிறார்கள்.

(7) ஆதலால் கன்மம் என்ற சரியை கிரியைவிட்டு திரேகம் அசையாது நிமிர்ந்து உட்கார்ந்து மனம் அலையாமல் இருகண் களைமூடி நிஷ்டை என்ற பாவனைபோல் செய்துகொண்டு வந் தால் பந்தம் விலகி ஞானத்துக்கு வழி யுண்டாக்கும் ஆதலால் ஞானம் அடைய விரும்புவர்கள் தீர்த்த ஸ்தலங்களை நம்பிக் கல் மண் உருவத்தைக் கண்டு எவ்வளவு பூசை செய்தாலும் ஞானம் அடைய முடியாது. இது சத்தியம்.

கோவிந்தன்.

---

நேயர்களே! முதலாவது பிரிவில் ஆரம்பத்தில் அவ்விஷயங் கள் மௌனகுரு சுவாமி தமக்கு அறிவித்தவை யென்கிறார். மௌனமாகவுள்ளவர் எவ்வாறு இவ்வளவு சங்கதிகளை யறிவித் தாரோ நமக்கு விளங்கவில்லை. எந்த அனுபவ ஞானியேனும் அவ்வாறு சரியை யாதிகளை யடியோடு அனாவசியமென்றும், 5-வது பிரிவில் கூறியபடி இதிகாச புராணங்களால் ஞானம் ஒரு போதும் வராதென்றும், கர்மம் செய்து ஞானமடைய முடியா தென்றும் எங்கேனும் கூறுவரோ என்பதை இதை வாசிப்போரே சிந்தித்துப் பார்க்கலாம்.

அவர் 1, 2, பிரிவுகளில் கூறியுள்ளவை சரிதான். அதைப் பற்றி நாம் ஒன்றும் கூறுவதற்கில்லை. ஆனால் எடுத்ததே எல் லோரும் அம்மார்க்கங்களை யனுஷ்டிக்க முடியாதென்பது உண்மை. வாயால் மட்டும் கூறிக்கொண்டிருக்கலாம். தெய்வ சிந்தனையேனும் வழிபாடேனும் இல்லாமல் பேய்போலலைந்து பொருள்தேடி உண்டுடுத்து உறங்குவதிலேயே காலங்கழிக்கும் சிலர் கோயிலுக்குப் போகும் ஒருவனைக்கண்டால் "அங்கென்ன விருக்கிறது? எல்லாம் நமக்குள்ளே யிருக்கிறது" என்று கூறித் தாம் தமக்குள்ளேயே பகவானைக் கண்டவர்போல் வாய் ஞானம் பேசுகிறார்கள். வாயால்மட்டுமே யப்படிக் கூறலாமன்றி

இவர்கள் காணப்போவதென்னமோ இல்லை. ஞானிக்கு ஜாதி மத பேதமில்லை யென்பது நூல்களில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

பின்னால் 3, 4, 5, 6, 7, பிரிவுகளில் கூறப்பட்டவைகளே முழுமையும் தவறென்றும், அவை பூரண சாத்திர ஆராய்ச்சி யில்லாது சரியையாதிகளை யனுஷ்டிக்கும் யாவரையும் கெடுக்கத் தக்க ஆபாசமான துர்ப்போதனைகள் என்றும் கண்டிக்கிறோம். சாத்திர விசாரணை செய்து சரியை யாதிகளின் அவசியத்தையும் உண்மையையுமறிந்தோர் இக்கூற்றைக் கண்டால் இகழ்ந்தொதுக்கித்தள்ளி இதை மொழிவோரின் நிலைமைக்கு இரக்கங் கொள்வர்.

அந்தோ! பெரும்பாலோர் சரியை யாதிகளையே யனுஷ்டிப்போர். ஞான அப்பியாசம் செய்வோரும் ஆரூட ஞானிகளுங்கூட உலகில் கலந்திருக்கிறவரையில் இவற்றை அனுஷ்டிக்கிறார்கள். சாத்திர ஆராய்ச்சி யில்லாது, ஞானமடையும் பக்குவம் வராது, பக்தி மார்க்கத்திலிருப்போரே உலகில் அதிகம். இத்தகைய போதனையை நம்மதப் பிராம்மணர் ஒருவரே கூறுவதைக் கேட்டால் அவர்கள் மயக்கமடைவார்களன்றோ.

கிருஸ்தும்த போதகர்கள் நம்மவர்களில் பாமரர்களை மயக்கித் தம் மதத்திற்கு இழுக்க முயலும்போது யோக ஞானங்களைப் பற்றிப் பேசுவதில்லை. அவற்றைப்பற்றி அவர்கள் மதத்தில் கூறப்படாததால் அவர்களுக்குத் தெரியவுந் தெரியாது. எங்கோ ஒவ்வொருவர் அறிந்து இரகசியத்தில் நம்மத யோகஞான மார்க்கங்களை யனுஷ்டிக்கிறார்கள். ஆனால் அவர்களதை வெளியிடுவதில்லை. வெளியிட்டால் சம்பளம் போய்விடும். மற்றபடி கூலிக்கு மதப் பிரசாரம் செய்யும் கிருஸ்தவர்கள் சரியை கிரியைகள் புராணக் கதைகள் இவற்றில் குற்றங்கூறியே நம்மவர்க்கு நமது மதத்தில் ஐயமுண்டாகச் செய்து பிறகு வேறு உலக ஆசைகளைக் காட்டித் தம் மதத்திற்கு இழுத்துக்கொள்கிறார்கள். சரியையாதிகளின் தன்மையையும் புராணங்களின் அந்தரங்கக் கருத்துக்களையும் அறியாத நம்மவர் மயங்கி விடுகிறார்கள்.

1-வது பிரிவில் தாம் கூறிய 'மனப்பதைப்பு' என்பதற்குப் பொருள் 'யாதொரு காரணத்தால் பயம் உண்டாக்குதலே' என்று கீழே இவர் வரைந்திருக்கிறார். 'மனப்பதைப்பு' என்பதற்கு இவர் அறிந்த அர்த்தம் இதுபோலும். சாதிபேதம்

கூடாது என்கிறார். ஒருவன் எடுத்ததே சாதிபேதத்தை விட்டு விடுவானோ? இவர் விட்டுவிட்டாரா? வாய் ஞானம் பேசி யாவரையும் கெடுப்பதற்கா நாம் சாத்திர ஆராய்ச்சி செய்வது?

6-வது பிரிவில் கூறியுள்ளதை நோக்க இவர் அந்தணரல்லர் என்று ஐயமுண்டாகிறது. பெயரின் முடிவில் ஐயர் என விருக்கிறது. 7-வது பிரிவில் "தேகம் அசையாது நிமிர்ந்து உட்கார்ந்து இருகண்களை மூடி நிஷ்டை என்ற பாவனைபோல் செய்து கொண்டு வந்தால் பந்தம் விலகி ஞானத்துக்கு வழியுண்டாக்கும்" என்கிறார். நிஷ்டை என்ற பாவனை எப்படியோ விளங்கவில்லை. எந்த பாவனையை இவர் நிஷ்டை என்று எண்ணியிருக்கிறாரோ நாமறியோம்.

நம்மவர்க்குச் சரியையாதிகளின் அவசியத் தன்மையையும் புராணங்களின் கருத்தையும் தெரியக்காட்டி, பிறமத போதகர்களின் வார்த்தைகளுக்கு அவர்கள் மயங்காவண்ணம் செய்ய வேண்டியது அத்தியாவசியமாயிருக்கும் இக்காலத்தில், இவர் இத்தகைய தீங்கிழைக்கத்தக்க போதனையை நம்மவர்க்குக்கூற முயன்றதைப்பற்றி மிக விசனிப்பதோடு, பிராம்மணராகிய இவர் நமது மதக்கொள்கையைப்பற்றி இத்தகைய பெருந்தவறாக உணர்ந்திருப்பதற்காகப் பின்னும் அதிக விசனமடைகிறோம். உண்மையில் சரியையாதிகள் அத்தியாவசியமேயாகும்.

## சரியையாதிகள் ஏன் அத்தியாவசியம்?

கடவுளோடு ஆன்மா இரண்டறக் கலந்து விடுவதாகிய நிலையே எவரும் அடையத்தக்க உயர்வான நித்திய மோக்ஷமாகும். இதற்கு ஞானமே நேரான மார்க்கமாகும். இன்னும் மோக்ஷமடைய நான்கு சாதனங்கள் வேண்டும் என்று கூறப்பட்டது. அவை—1. ஜீவகாருண்யம், 2. ஈசுர பக்தி, 3. பாசவைராக்யம், 4. பிரம்மக்ஞானம்.

இந்த நான்கில், மற்றவை யெல்லாமிருந்தாலும் ஈசுரபக்தி ஒன்றின்றேல் பயனில்லை. ஆனால் மற்றவை யொன்றுமின்றி அதிதீவிரமான ஈசுரபக்தி ஒன்று மட்டும் இருந்தால் மோக்ஷம் சித்திக்கும். எப்படியெனில், எல்லாம் வல்ல ஈசுவரனருளால் மற்ற மூன்று சாதனங்களும் ஏககாலத்தில் உடன் சித்திக்கும். கடவுள் சர்வ வல்லமையுடையவர். நாம் எந்த உருவமாகப் பாவித்து உபாசிக்கிறோமோ அந்த உருவமாகக் காட்சியளிக்க

வல்லவர். அவரே பிரத்தியட்சமாக தரிசனமளிக்கும்போது ஏககாலத்தில் ஞானமுண்டாகச் செய்வார். முத்தியுமளிப்பார். அது முடியாதெனின் அவர் சர்வவல்லமை யுடையவர் என்பது பொய்யாகிவிடும். பக்தி ஒன்றினாலேயே ஆறே நாட்களில் முத்திபெற்ற ஸ்ரீ கண்ணப்ப நாயனாரே இதற்கு அத்தாட்சி. இன்னு மனேகருண்டு.

இதனால் மோக்ஷமடைய பக்தி இன்றியமையாததென ஏற்பட்டது. பக்தி என்றால் கடவுளின்மேல் வைக்கும் அன்பு. மனம் ஈசனிடம்பற்றி யுருகவேண்டும். மனமோ அனாதிதொட்டு நாம ரூபமுடைய வஸ்துக்களிடத்திலேயே பற்றுவைத்துப் பழகியது. இச்சையே மனதின் சொரூபம். அந்த இச்சை நாமரூபத்தையே பற்றும். அந்த இச்சை முழுமையும் பகவானிடத்தில் வைப்பதே பக்தியாகும்.

எப்போதும் நாமரூபத்திலேயே நாட்டம் வைக்கும் சுபாவமுடைய மனம் நாமரூப மற்ற கடவுளிடம் எப்படி ஆரம்பத்திலேயே நிலைத்து நிற்கும்? எப்படி அன்பு வைக்கும்? எப்படி ஒரு நிமிடமேனும் அதைச் சிந்திக்கும்? இதற்காகவே சகுண உபாசனையும், சரியை கிரியையாதிகளும் ஏற்பட்டன. மேலே யுள்ள மாடிக்குச் செல்லவேண்டின் ஏககாலத்தில்தாண்டிச் செல்ல முடியாததால் சில படிகளில் ஏறிச்செல்கிறோம். அதைப்போலவே மோக்ஷமாகிய மேடைக்குச் செல்ல சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கும் நான்குபடிகளாம். இவற்றில் ஞானமே நான்காம்படி. நான்காம்படியி லிருந்துதான் நேராக மேடைமேல் கால் வைத்துச் செல்கிறோம். ஆயினும் மற்ற 1, 2, 3-ம் படிகள் உதவாதவை யென்று கூறிவிடலாமா? அது மூடத்தனமல்லவோ? அவற்றைக் கடந்த பின்தானே 4-ம் படியில் ஏறினோம்? நான்காம் படியில் ஏறி விட்டவன் நேராய் மேடைமே லேறிவிடலாமாதலால் அவன் 1, 2, 3, படிகளைக் கவனிக்க வேண்டியதில்லையாயினும், மற்ற எல்லார்க்கும் அவை அவசியமேயாகும். உண்மையில் அப்படிகளி லேறி மேடைமேல் சேர்ந்தவன் அக்கீழ்ப்படிகள் அவசியமல்ல என்று ஒருபோதும் கூறான். ஏனெனில் நாம் முதலில் 1, 2, 3, படிகளில் ஏறித்தான் 4-வது படிக்கு வந்தோம் என்று அவன் அறிவான். இச்சன்மத்தில் ஒருவனுக்கு எடுத்ததே ஞானம் வந்துவிட்டால், அவன் முன் ஜன்மங்களில்

சரியையாதி மூன்று படிகளையும் கடந்து விட்டவனேயாகும் என்று நூல்கள் கூறுகின்றன. அதனால்தான் இச்சன்மத்தில் அவனுக்கு அவற்றில் மனம் செல்லாது ஆரம்பத்திலேயே ஞானப் பியாசத்தில் முயல்கிறான்.

இப்போது நமது கோவிந்தன் என்பவர் கூறுவது 1, 2, 3, படிகளிலேறினால் நீ யொருபோதும் மேடைமேல் போய்ச்சேர மாட்டாய் என்று கூறுவதுபோ லிருக்கிறது. பி. எல் பரீட்சை கொடுத்தால்தான் வக்கீல் வேலைக்குப் போகலாம் என்பது உண்மையே. ஆனால் அதற்குக் கீழுள்ள பரீட்சைகள் அனாவசிய மென்றாவது அவைகளுக்காக வாசித்தால் நீ ஒருபோதும் பி. எல். பரீட்சையில் தேறமாட்டாய் என்றாவது எவரேனும் கூறத் தகுமோ? அப்படிக் கூறுவோர் பரீட்சைகளைப்பற்றிய விஷயங் களையே யறியாதவராகவல்லவோ இருக்கவேண்டும்.

நமது மார்க்கத்தில் கூறப்பட்டுள்ள சரியையாதிகள் ஞான மடையப் பெருஞ் சாதனங்களாக விருக்கின்றன. ஈசுரபக்தி மோக்ஷத்திற்கு இன்றியமையாத சாதனம். அத்தகைய பக்தியை யுண்டாக்கச் சரியையாதிகள் பேருதவியா யிருக்கின்றன. "உருவ மற்ற நம்மை உருவமாகப் பாவித்து வணங்குகிறான் என்று கடவுள் கோபிப்பார்" என்று கருதுவது அறிவின்மையே யாகும். கடவுள் 'அருவம்' என்று கூறினால், அவரை வரை யறுத்துக் கூறுவதாகும். அவர் 'உருவம் அருவம் உருவாருவம்' என்ற மூன் றுமல்ல—மூன்றுமாம்-யாவுமாம்-இன்னதென்று கூறத்தக்க ஒரு வரம்பில் அடங்கியவரல்ல—அவர் வரம்பற்றவர். வாக்குமனாதீதர்.

நாம் ஒரு விக்கிரகரூபத்தை வணங்கினாலும் அந்த உருவத்தைக் குறிப்பாக வைத்துக்கொண்டு அகண்ட பரிபூரணச் சச்சிதானந்த சொரூபியாகிய, எல்லையற்று எங்கும் நிறைந்த பகவானையே துதிக் கின்றோம். "ஓம் செம்பே நமஃ, ஓம் பஞ்சலோகமே நமஃ, ஓம் மனித உருவமே நமஃ, ஓம் கண்மூக்குக் கைகாலுடையவனே நமஃ" என்று பூஜிப்பதில்லை. "ஓம் அகண்டரூபாய நமஃ, ஓம் நின்மலாய நமஃ, ஓம் சங்கராய நமஃ, ஓம் சச்சிதானந்த சொரூபாய நமஃ" என்பது முதலிய பரப்பிரம்மத்தின் இலக்ஷணங்களைக் கூறியே துதிக்கின்றோம்.

"ஒருருவம் ஒருநாமம் ஒன்றுமிலார்க் காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ"

என்று மாணிக்கவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளினர்.

இந்த உண்மையறியாத மூடரன்றோ நாம் கடவுளை விக்கிரக ரூபமாய் வைத்து வணங்குவது குற்றமெனக் கூறவேண்டும். மேலும் பசுவின் தேகத்தில் பால் எங்கும் வியாபித்திருந்தாலும் முலைக்கண்களின் வழியாக வெளிவருவதுபோல்,கடவுளின் அருள் விலாசம் எங்கும் வியாபகமாக விருந்தாலும் விக்ரகங்களினிடம் பிரகாசிக்கும்படி மந்திரம் கிரியைகளின் மூலமாய்ச் செய்யப்பட்டிருக்கிறது.

சரியையாதிகளால் கடவுளிடத்து நாம் வைத்திருக்கும் அன்பை, அபிஷேகம் செய்தல், அலங்காரம் செய்தல், நைவேத்யம் முதலிய உபசரணைகள் செய்தல் முதலிய பலவழிகளில் வெளியிடவும், காலத்தை ஈசுவர சிந்தனையில் செலவழிக்கவும், அனுகூலம் உண்டாகிறது. மனம் அவனைச் சிந்திப்பதிலும், வாக்கு அவனைத் துதிப்பதிலும், அவயவங்கள் அவன் பணி செய்வதிலுமாகத் திரிகரணங்களும் அவன் வழியில் ஈடுபட்டு நிற்கின்றன. இவ்வாற்றால் பக்தி பெருகினல் சித்த சுத்தி யுண்டாகி அவனருளால் ஞானத்திற்கு வேண்டிய சாதனங்க ளியாவும் தானே யமைந்து ஆன்ம ஞானம் சித்திக்கும் என்பதில் சற்றும் ஐயமின்று. திரிகரணங்களும் அவன் வழிப்பட்டு நாம் அவன்மேல் வைத்த அன்புருவமாய்விடின், அதற்குமேல் ஞானம் என்பதும் மோட்சமென்பதும் மிக்க தூரமில்லை.

உலகில் ஏககாலத்தில் ஞானத்தை யடையத்தக்க அதிகாரம் உடைத்தாயிருப்பது அரிதினுமரிது. ஆதலின் படிப்படியாகவேனும் எந்த அதிகாரியும் ஞானத்தை அடையுமாறு சரியை,கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு படிகள் வகுக்கப்பட்டுள்ளன. அதனுனே வேதம் அவ்வாறே கிரியா காண்டம் பக்தி காண்டம் ஞான காண்டம் என மூன்ருகக் கூறியது. சமாயாசாரிகள் ஆள்வாராதியர் முதலியோரும், 3000 வருடங்கள் சிவராஜயோக ஞானசமாதியிலிருந்த திருமூலர் முதலியோரும் இவற்றை யவசியமெனக் கூறியுள்ளார். மெய்ஞ்ஞானச் செல்வராகிய தாயுமானவரும் "விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞான மொருநான்கும்— அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே" என்று அவைகள் நான்கு படிகள் என்ற விசேஷப் பொருள் விளங்குமாறு கூறி யருளினர்.

நேயர்களே! சுருதிக்கும், இத்தகைய மகான்களுடைய அருள் வாக்குகளுக்கும், அனுபவத்துக்கும் மாருகக் கூறப்பட்ட

விஷயம் எக்காலத்தில் யார் கூறினும் சரியே—அது முற்றுந் தவறேயாதலின் வெறுத்துத் தள்ளத்தக்கதேயாகும். இத்தகைய தவருன விஷயங்களால் நாம் மயக்கமடையலாகாது. எண்ணிறந்தோர் பக்தி மார்க்கத்தால் மோக்ஷமடைந்திருக்க சரியையாதிகள் ஞானத்தை யளிக்கா வென்ற வார்த்தை யெள்ளளவேனும் நம்பத்தக்கதோ ?

தீர்த்தம், ஸ்தல சேவைகள் இவைகளும் பயனற்றவையல்ல ; இவைகளெல்லாம் அவரவர்கள் தரத்திற்குத் தக்கபடி ஏற்படுத்தப்பட்டவை. இவைகளும் புண்ணியத்தை யதிகப்படுத்தி, சித்த சுத்தியுண்டாக்கி, படிப்படியாய் ஞான மார்க்கத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும் என்பது திண்ணம்.

" மூர்த்திதலந் தீர்த்தம் முறையாற் ருெடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே "

என்ருர் தாயுமான சுவாமிகள். விரிக்கிற் பெருகும்.

கர்மத்தால் ஒருகாலும் ஞானம் வராதென்று கூறுவதும் பெருந்தவறே. " ஜனனமரணத்திற்குக் காரணமாகிய கர்மத்தைக் கர்மத்தாலேயே யொழிக்கவேண்டும். அதாவது நிஷ்காம கர்மம் சித்த சுத்தியை யளித்து அத்துவாரா ஞானமளிக்கும் " என்று பகவான் கீதையில் கூறியிருக்கிருர். அதைப்பற்றி நாம் நமது சஞ்சிகையில் வரைந்துவரும் பகவத்கீதை வசனத்தின் 4-வது 5-வது அத்தியாயங்களில் (தை மாசிமீ சஞ்சிகைகளில்) தெளிவாய்க் கூறியிருப்பதைக் காணலாம்.

நண்பர்களே ! 'கோவிந்தன்' என்பவர் கூறிய இத்தகைய மொழிகளையும், அன்னிய மதத்தவர் உங்களை மயக்கச் சரியை கிரியைகள் புராணங்களைப்பற்றிக் கூறும் ஆபாசங்களையும் செவியேற்காது எட்ட விலகுங்கள். எல்லாம் வல்ல பரம்பொருள் நல்லருள் புரிவாராக.

ஓம் தத்ஸத்.

---

## மது மாமிசம்

தற்போது உலகில் மாமிசம் சாப்பிடக் கூடியவர்களுக்கு நற்புத்தியாக ஜீவகாருண்யம் முதலானவைகளில்லாமலில்லை, ஆனல் ஜீவகாருண்யம் என்ருல் மனிதனுக்குத்தான் ஜீவனிருக்கிறது, அதைத்தான் காப்பாற்றி நல்ல ஸ்திதியில் வைக்கவேண்டுமென்று அநேகர் நினைத்து மிருகங்களிட

முள்ள ஜீவனிடம் காருண்ய மில்லாமல் அவைகளை, கதறக் கதறக்கொன்று மனித ஜீவனின் வயிற்றுப்பசியைத் தணித்து விட்டால்போதுமென்று நினைக்கிறார்கள். இது ஜீவகாருண்ய மாகுமா? ஒருகாலுமாகாது; இப்படி வதைப்பவர்களை ஜீவகாருண்ய மில்லாதவர்க ளென்றால் கோபப்படுகிறார்கள். மிருகங்களை வதைப்பவர்களுக்கு அவற்றில் ஜீவன் இருக்கிறதெனத் தெரியாதா! தெரியும்; ஆனால் ஏன் அப்படித் தெரிந்தும் தெரியாததுபோல் கொன்று மாமிசத்தைச் சாப்பிடுகிறது பழக்கத்திலிருந்து வருகிறதென்பதை ஆராய்வோம்.

தகாதவையானாலும், முப்பாட்டன் செய்ததைப் பாட்டன் செய்வதும், பாட்டன் செய்ததைத் தகப்பன் செய்வதும், தகப்பன் செய்ததைத் தான் செய்கிற தென்பதும் பரம்பரையாய்ச் செய்து வருவது புண்ணியமாகவேயிருக்குமென்ற நம்பிக்கை யாலேயே மிருக ஜீவனை வதைப்பது ஜீவகாருண்யத்திற்கு முற்றிலும் விரோத மென்று தோன்றவில்லை. ஆனால் தகப்பனிடம் நன்னடை யிருந்தால் மகனுக்கு அறிவு எட்டினவுடன் அதைப் பின்பற்ற வேண்டும், கெட்ட நடையிருந்தால் அதை விலக்குவதுடன் தகப்பனையும் நல் வழிக்குக் கொண்டுவர, பிரகலாதனைப் போல் முயல வேண்டும். அதன்றித் தகப்பனுக்குள்ளது தனக்கும் உண்டென்று கெட்ட நடையை மட்டும் பின் பற்றுவதும் நற்குணமிருந்தால் அதை விட்டு விரோதமாய் நடப்பதும் பழக்கத்திலிருக்கிறது. பின்னும் தகப்பன் மாதிரியே தானும் நடக்கவேண்டுமென்று சபதம் பேசுவோர், தகப்பன் நொண்டி நடக்கும் சுபாவமானால் தானும் ஏன் நொண்டி நடப்பதில்லை? தகப்பன் பொட்டையாயிருந்தால் மகன் தன் கண்களை ஏன் பொட்டை யாக்கிக்கொள்கிறதில்லை? இப்படிச் செய்து கொள்ள எப்படிச் சம்மதப்படவில்லையோ, அப்படியே தகப்பன் பரம்பரையில் செய்துவரும் அடாத செயல்களையும் தழுவி நடப்பது ஆகாது. ஆனால் முன்னோர் மேற்கண்டபடி ஜீவகாருண்ய மில்லாமல் மிருகங்களைக் கொலை செய்தல் மாமிசம் புசித்தல் முதலிய பாதகத்தொழிலுக்கு ஆளானது என்ன காரணமென்பதை இனி விவரிப்போம். இதற்கு ஆதி மதுபானமே யாதும். மதுபானம் ஜீவகாருண்யத்தை நீக்குமென்பது கீழ்க்கண்ட திருஷ்டாந்தத்தால் நன்கு விளங்கும்:—

ஓரிடத்தில் உள்ளே போகும்படியான நாலுபாதையுள்ள ஓர் கட்டிடமிருந்தது. ஒரு பாதையில் ஓர் யௌவனஸ்திரீயும், மற்றொன்றில் ஓர் பசுவும், கத்தியும், வேறொன்றில் பக்குவப் படுத்திய மாமிசமும், நாலாவது பாதையில் ஒரு குடத்தில் மதுவும் இருந்தன. ஒருவன் அந்தக் கட்டிடத்திற்குள் அவசியம் செல்லவேண்டியவனாக விருந்தான். முதலாவது ஸ்திரீயிருந்த பாதை வழியாய்ச் செல்லப்போனான். அங்கிருந்த பெண் தன்னைச் சேர்ந்தால்தான் உட் செல்லலாமென்றாள். அதைக்கேட்ட அம்மனிதன் பரஸ்திரீகமனம் மகா பாதகமாயிற்றே,

"பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்"

என நாயனரும் கூறியுள்ளார். இது தகாதென அவ்விடத்தை விட்டுப் பசு இருந்த பாதை வழியாய்ப் போகப் போனான். அங்கிருந்த ஒருவன் அவவிடமிருந்த கத்தியால் பசுவைக் கொன்றால் உட்செல்லலாமென்றான். அதைச் செவியுற்று மனம் பதறி ஜீவஹிம்ஸை பெரும்பாதகமாயிற்றே.

"கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ் நாண் மேற்
செல்லா துயிருண் ணுங் கூற்று"

என ஆன்றோருரைத்தபடி இது கூடாதென அவ்வழியை விட்டகன்று வேறொரு வழியில் போக, அங்கிருந்தவன் அவ்விடமிருந்த மாமிசத்தை உண்டால் மாத்திரம் உள்ளே போகலாமென்றான். அதைக்கேட்டு மன வெறுப்படைந்து,

"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற
னுயிர்செகுத் துண்ணாமை நன்று"

என்றபடி புலால் புசிப்பது பெரும்பாவமாயிற்றே; இதுவும் கூடா தென அதை விட்டகன்று கடைசியா யுள்ள பாதை வழியே போவோ மென்று போனான். அவ்விடமிருந்த மதுவைக்குடித்தால்தான் உள்ளே போகலாமென்று அங்குள்ளவன் சொன்னான். உட்செல்லப் போனவன் என் செய்வான் பாவம்! அவனுக்கோ உட்செல்லவேண்டியது அவசியமா யிருக்கிறது; வேறு வழியோ இல்லை. மனக்கலக்கமடைந்து, முன்னுள்ள மூவகைக் குற்றத்தைப் பார்க்கிலும் மதுபானம் அவ்வளவு கெடுதலல்ல வென்று ஒருவாறு தீர்மானித்துக் குடித்தாவது போவோமென்று முடிவு செய்தான். அப்படியே குடித்தான். போதை உண்டாயிற்று. ஆவேசம் வந்தவன் போல், யார் நமக்கு நிகர், எதையும் செய்யலாம், பாவமாவது புண்ணியமாவது என்று மனத்துணிபு கொண்டவனானான். உடனே மாமி சத்தைப் புசித்தான். அத்துடன் நில்லாமல் பசுவையும் கொன்று ஸ்திரீயை யும் கற்பழித்தான். இவ்வாறு இவன் கெட்டதற்குக் காரணம் மதுபானமே. தற்காலத்திலும் மதுபானக் கடைகளுக்குப் பக்கத்தில் சாக்கணாக் கடை களிருப்பது யாவருமறிந்ததே.

நண்பர்காள்! தற்போது சுபாவமாய் மாமிசம் சாப்பிட்டு வரும் ஒரு வனை ஒருகோழியின் கழுத்தில் வாயை வைத்து அதின் இரத்தத்தை உறிஞ்சச் சொன்னால் மனந்துணிந்து அதைச்செய்ய உடன் படுவானா? மாட்டான். இப்படிச் செய்ய மனமிசையாத உத்தமன், வீரன், காட்டேரி, என்னும் சில தேவதைகளுக்கு ஜீவராசிகளைப் பலி கொடுத்தால் மட்டும் பிரீதி யென்றெண்ணி அதன் காரணமாய் ஆவேச முண்டாக்கிக்கொண்டு அந்த நேரத்தில், மாடு, ஆடு, கோழி, முதலானவைகளை வெட்டவும், வாயால் கௌவி இரத்தத்தை உறிஞ்சவும் துணிகிறான். ஷை தேவதைகள் போல் உண்டாக்கிக்கொண்ட ஆவேசத்தைப் போன்ற ஆவேசத்தை உண்டு பண்ணக்கூடிய மதுவைக்குடித்ததும் எதைத்தான் செய்யத்துணிய மாட்டான்?

ஆனால் இக்கொடிய பானத்தால் சகல பாவத்தொழில்களும் விளைகின்றன வெனத் தெரிந்த அறிஞர்கள் மதுபானத்தையே விலக்கி விட்டார்கள். அதனால் உண்டான ஜீவவதை செய்து புசிக்கும் மாமிசத்தை விட்டாரில்லை. ஆகையால் மதுபானம் செய்பவர்கள் அதனாலுண்டாகும் கெடுதல்களனைத்தையும் தெரிந்து மதுபானத்தை விலக்கவும், பானத்தால் உண்டான மாமிசம் புசித்தலை விலக்கவும் முயல்வோமாகில் நம் தாய்நாட்டினர் ஜீவகாருண்யத்தைக் கைக்கொள்ளும் நீதியாகும்.

ஹக்கீம் ம. அ. ஷம்சுத்தீன் சாஹிப்
தமிழ் சித்த வைத்தியம், மாயவரம்.

குறிப்பு:—சிலர் மனிதருக்கு மட்டுமே ஆன்மாவுண்டு ; மற்ற ஜெந்துக்களுக்குப் பகுத்தறிவில்லை யாதலால் ஆன்மா இல்லை என்ற கொள்கையுடையவர்களாக விருக்கிறார்கள். இது ஆன்மாவென்றால் என்ன வென்பதையே அறியாக்குறை யாகும். பகுத்தறிவு மற்ற ஜந்துக்களுக்கு அடியோடில்லாது போகவில்லை. எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு பகவான் பிறவியிலேயே யவற்றிற் களித்திருக்கிறார். அதை நாம் இயற்கை யறிவென்கிறோம். மனிதனுக்குப் பிறந்த உடனே அவ்வளவு அறிவு கூட இல்லை. அப்படியாயின் குழந்தைகளுக்கு ஆன்மா இல்லையென்று அர்த்தமோ? ஆன்மாவிற்கு ஆறறிவு உண்டு. சத்தம், பரிசம், ரூபம், ரஸம், கந்தம் என்றவற்றை யுணரும் ஐந்தறிவுகளும் மிருகங்களுக்குண்டு. மனிதனுக்கு மட்டும் பகுத்தறிவாகிய ஆறாவதறிவு முண்டு. ஆனால் பிறந்த உடனே அவை யுண்டா யிருப்பதில்லை. அப்போது பரிச அறிவு ஒன்று மட்டுமே யுண்டு. பிறகே ஒவ்வொன்றாக உண்டாகின்றன. மரம் செடி முதலிய எதெது வளர்கிறதோ அதற்கெல்லாம் ஓரறிவு மட்டும் உண்டு. ஆன்மாவிருந்தாலே அறிவுண்டு. சாதாரண புத்தியைக்கொண்டு பார்த்தாலே உண்மை விளங்கு மன்றோ. பட்சிகளுக்கும் மிருகங்களுக்கும் அடிபட்டால் நோகாதோ ; ஒரு உயிருக்கு வருத்தத்தை யுண்டாக்குவதே பாவமன்றோ. பட்சி மிருகம் முதலியவற்றிற்கு ஆன்மா இல்லையென்றும் கருதுவது பெரிய அஞ்ஞானமான மூடமதியே யாகும்.

மதுபானத்திற்கும் மற்ற பொய், கொலை, களவு, காமம் நான்கிற்கும் ஒரு வித்தியாசமுண்டு. எவ்வாறெனின் மற்ற நான்கு செய்கைகளும் அவற்றைச் செய்ததே பாவத்தையுண்டாக்கி விடுகின்றன. மதுவோ அதை யருந்துதல்மாத்திரத்தாலேயே பாவத்தையுண்டாக்காது. ஆனால் மதுவையருந்தியபின் புத்தி சபலித்து மனம் கடினத்தன்மையடைய நேரின் அப்போது சிறியோர், பெரியோர், பாபம், புண்ணியம், நல்லது, கெட்டது தெரியாமல் கெட்ட காரியங்களைச் செய்கிறான். அக்காரியங்களால்தான் பாபம் உண்டாகிறது. மேற்கூறப்பட்ட திருஷ்டாந்தக் கதையிலேயே அது நிரூபிக்கப்படுகிறது. மதுபானம் செய்து மனதைக் கலவரமடையாது வயப்படுத்தி வைத்துக்கொண்டிருக்கச் சக்தியுடையோர் மிகத் துர்லபம். அதனாற்றான் மதுபானமும் அப் பாதகங்களில் ஒன்றெனக் கூறப்பட்டது.

பத்திரிகாசிரியர்.

## 'முருகம்மையார்'

(1) " ஒருமுரு காவென் றுள்ளங் குளிர உவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெரு வாநிற்ப ரையங்ஙனே
தருமுரு காவென்று தாம்புலம் பாநிற்ப தையல்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவரும் சேவகனே "

என்று நக்கீரர் பாடியதே அம்மையார் முருகன் பக்தியிற் சிறந்த மாதென்பதையும் நக்கீரற்கு வெகுகாலத்திற்கு முன்னர் ஜீவித்திருந்தனரென்பதையும் தெரிவிக்கும்.

(2) இந்த அம்மையாரின் தாய்தந்தையர் வைசிய குலத்தவர். வெகுநாள் வரையிலும் மக்கட்பேறின்றி வருந்தினர். சோதிடவல்லவர் முருகன் கிருபையினுல் சந்தானம் கிடைக்கக்கூடுமென்று செட்டியாருக்குணர்த்தினர். அதுமுதல் அவர் கந்தன் ஆலயங்கள்தோறும் சென்று வழிபடுவதும், செவ்வாய், சஷ்டி விரதங்களைக் கைக்கொண்டு அனுஷ்டிப்பதுமாய் வாழ்நாள் கழித்தனர். கடைசியாகக் கருணாநிதியின் அருட்பிரசாதமென ஒரு மகளைப் பெற்றனர். முருகன் பூசையின் தவப்பயன் என்று அடிக்கடி அறிவுறுத்தற்பொருட்டு இம்மகவுக்கு 'முருகம்மை' என நாமகரணம் செய்தனர்.

(3) நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்த குழவிக்கும் கந்தன் பால் அன்பு கமழக் கண்டனர். அவ்வம்மையார் சிவபுராணக் கதைகளைக் கற்றுணர்வதில் மிகுந்த ஆவலைக் காண்பித்தனர். இத்தகைய மதவொழுக்கமும் ஆசாரமும் அவரிடம் பல்கிப் பெருகவேண்டிய ஆதரவு தாய்தந்தையர் அமைத்துவைத்தனர். அவளுக்குக் கலியாணப் பருவம் கிட்டியது. தாய்தந்தையரின் பழக்கத்தாலும் தன் அன்பின் பெருக்கினுலும் அவள் எப்பொழுதும் முருகா முருகா என்று நாத் தடித்துத் தழும்பச்சொல்லும் தகைமை உடையவளாயினள்.

(4) தன் குலத்திற் கிசைந்த மணமகன் ஒருவனைத் தேர்ந்தெடுக்கப் பல முயற்சியும் செய்தும் பயன்படாது காலந்தாழ்த்தியதால் அம்மையாரின் தாய்தந்தையர் மனம் தளர்ந்தனர். உறவினர் பலரும் இம்மங்கை 'முருகா முருகா' என்று சொல்லியவண்ண மிருந்ததைக் கண்டே இவளை மருமகளாகக்கொள்ள மனமில்லாதிருந்தனர். அப்போது தாய்தந்தையர்களை இளமைப்பிராயத்திலே இழந்த ஓர் செட்டி மணம்செய்துகொள்ள விரும்பி இப்பெண்ணை நாடிவந்தனன். அயலார் பலபடியாகக் கூறிய குற்றங்களைப் பாராட்டவில்லை. இச்செட்டியார் பெயர் தனஞ்செயன் செட்டி. தனஞ்செயன் செட்டிக்கும் முருகம்மைக்கும் திருவருளை முன்னிட்டு மணம் நடைபெற்றது.

(5) மணமகனேடு புக்ககம்சென்று இல்லறம் வழுவா தொழுகிவரும் நாளில் தனஞ்சயன் செட்டிக்கு வியாபார வருவாய் குறைந்து வர

லாயிற்று. வணிகர்களின் நிலை 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்பதே. தனஞ்செயன் செட்டி சிறியவனுயினும் தைரியம் மிகுதியும் உள்ளவன். பணம் சேர்ப்பதில் மிக்க கெட்டிக்காரன். இழந்த திரவியத்தை ஈடு செய்யச் சூழ்ச்சி செய்துகொண்டிருந்தான். கடல்தாண்டித் தீவாந்தரங்கட்குச் சென்று வியாபாரம் செய்ய விரும்பிய ஒரு நண்பனைச் சேர்ந்தான். அவனுக்காகத் தானே வெளிநாடுபோய்க் காரியம் பார்ப்பதாகவும் அதற்காக ஒருபங்கு லாபம் அதிகமாகக் கிடைக்கவும் ஏற்பாடமைத்து, மனைவியிடம் தன் எண்ணத்தைத் தெரிவித்தான். அவள் பணத்தாசையில் விருப்பம்வைக்காதவளேனும் கணவனைப் பிரிந்திருக்க மனமாற்றுதவளாயினள். பெண் பிள்ளைகளைக் கப்பலில் அழைத்துப்போவது அக்கால வழக்கத்திற்கு உரித்தாயிராததோடு வைதீக மார்க்கத்திற்கும் விரோதமாயிருந்தது.

(6) முருகம்மையாரோ கொஞ்சம் பிடிவாதமுள்ளவர். தானுண்டு தன் கணவனுண்டு தான் வழிபடுங் கடவுள் முருகனுண்டு. வேறொன்றையும் அறியாள், கவனியாள். நாத்திமுதலியவர்க்குரிய பணிவிடையைச் செய்தாளேனும் அவைகளில் பற்றில்லாதவளா யிருந்தனள். இதனுல் நமது அம்மையாருக்கும் தனஞ்செயன் செட்டியின் உறவினர் பலருக்கும் கேண்மை பெரிதும் குறைவு. நெருங்கிய உறவினர் வகையில், பெண் எடுக்காத மனத்தாபமுள்ளவர்களாயிருந்த உறவினர் நமது அம்மையாரிடம் உரிமை காட்டினரில்லை. பலபடி பேசுவானேன். சமயம் வந்துழி அம்மையாருக்குச் சுருக்குக் காட்டவேண்டுமென்ற எண்ணம் உறவினர் பலர் மனத்திலும் ஆழ்ந்து வேரூன்றியது.

(7) இப்படி யிருக்கும் தன்மையைத் தனஞ்செயன் செட்டி நன்கு அறிவர். மனைவியிடம் நல்லெண்ணம் நிரம்ப உள்ளவர். தன் உயிர்த்துணைவியென அவரை மனமாற அறிந்தவர். மேலும் அம்மையார் தொட்ட மண் பொன்னுகும். வாய்மொழியோ தேன்மொழியாகும். தான் வெளிநாடு போவது தெரிந்தால் மனம் பொறுள் என நினைந்து முருகன் என்ற வேலையாளை வீட்டைக் கவனித்துக்கொள்ள அமைத்து வெளியே போய்வருகிறேன் என்று மனைவியிடம் கூறிக் கப்பலேறி வியாபாரம் நிமித்தமாய் தீவாந்தரயாத்திரை போயினர். ஒரு நாள் இரண்டு நாள் கணவன் வீடு திரும்பாதிருக்கவே, முருகம்மையார் கடவுளர் முன் தோத்திரம் செய்த வண்ணமாய் ஒரே நிலையில் இருந்தனள். வாய்விட்டுக் குறை கூறினள். இதைக் கேட்ட முருகன் என்ற வேலைக்காரன் செட்டியார் வெளியூர் ஏகினர். வரச் சிலகாலம் தாழ்க்கும். கவலைப்படுவதில் பயன் ஒன்றுமிலது என்று சொன்னதைத் தெய்வவாக்கென நம்பி, கணவன் பிரிவைக் கொஞ்சமும் சகியாது அவன் வரவையே நினைந்தவண்ணமாய் அன்னபானுதிகளில் அவா இல்லாது தேகம் மெலிவுற்றுச் சர்வகாலமும் முருகா வா முருகா போ, முருகா போதும், முருகா என்ன விசேஷம் என்று யாருடன் உசாவும்போதும் பேசும்போதும் முருகா என்ற வார்த்தையையே கூட்டிப் பேசிவந்தனர். இதுகண்ட உறவினர் தனஞ்செய செட்டியார் மனைவிக்குப் புத்தி

சுவாதீனம் இல்லையென்றும் முருகன் முருகா என்று கூறுவதால் எப்பொழுதும் வேலைக்காரனாகிய முருகனிடம் பிரேமை யுள்ளாள் என்றும் தீய வெண்ணம் கொண்டனர். உடம்பு மெலிவதைக் கண்டு சில சமயங்களில் பரிதபித்தனர். எல்லாவற்றிற்கும் முருகன் இருக்கிறான் என்ற வார்த்தையைக் கேட்டவர் எவரும் துஷ்ட எண்ணத்தில் அழுத்தம்கொண்டனர். இனி இவள் நம் குலத்திற்குக் கேடுவிளைவிப்பாள். இவளை விலக்கி வைக்க ஏற்பாடு செய்வதே தகுதி எனத் தீர்மானித்துத் தனஞ்செயன் செட்டியின் வரவை எதிர்பார்த்திருந்தனர்.

(8) ஒன்று, இரண்டு, மூன்றுநான்கு, ஐந்தாறு மாதங்களுமாயின. செட்டி வரவில்லை. இன்று வருவார் நாளைவருவார் என்ற வதந்தி ஊரெங்கும் பரவிற்று. இந்நிகழ்ச்சி ஒன்றுமறியாள் நமது அம்மையார். வந்தார் செட்டியார். வீடு புகுந்தார். மனைவியின் நிலைமையைக் கண்டு மிகவும் வருந்தினர். கணவனைக் கண்ட அம்மையார் முருகா க்ஷேமமா? முருகா ஏன் சொல்லாது சென்றது? முருகா நான் தனியே யிருக்கவிட்டுச் செல்லலாமா? என்று கேட்பதோடு ஆனந்தக் கண்ணீர் பெருக்கியவண்ணமாய் உணவுப்பொருள்களைத் தயாரிப்பதில் கண்ணும் கருத்துமாயிருந்தனள். இதற்குள் உறவினர் பலர் செட்டியாரைக்கண்டு உசாவ வந்தனர். நெருங்கிய உறவினர் தங்கள் தீய எண்ணத்தை வாழைப்பழத்தில் ஊசியை ஏற்றுவதென்னச் செட்டியார் மனத்தில் விஷமாகத் தீட்டினர். செட்டியாருக்கு மனைவியிடம் உள்ள அன்பின் மிகுதியால் இத்தீக்கோட்களைக் காதில் கொண்டாரில்லை. ஒன்று இரண்டு நாளாயிற்று. செட்டியார் வேற்று நாடு சென்ற நாள்முதலாக முருகா முருகா என்று பேசிய நாப்பழக்கத்தைச் சுட்டிக்காட்டி முருகன் என்ற வேலைக்காரனிடம் அம்மையாருக்குப் பிரேமை உளது என்று சாலவும் வற்புறுத்தினர்.

(9) "கலைப்பார் கரைத்தால் கல்லுங் கரையும்" என்ற பழமொழிக்குச் சான்றாகச் செட்டியார் தன் மனைவியை நோக்கி இனி முருகன் என்ற வார்த்தையைப் பேசொணாதெனக் கட்டளையிட, இல்லை முருகா என்று பதில் பகரக்கண்ட கணவனுக்குப் பொறாமை (Jealousy) என்ற பேய் உடனே பிடித்தது. வெறிபிடித்தவனெனப் பேசி இனி முருகன் என்று பகருவையேல் உன் கையைத் துணிப்பேன் என்று சீறினான். அம்மையார் நடுக்கங்கொண்டனர். "உமது மனதிற்கு விரோதமாகிய முருகன் பெயரை இனிப் பகரேன்" முருகா என்று கடைசியில் சேர்த்து மறுமொழி கூறினள். பொறாமைப்பேய் தீயெனச் சொலிக்கக் கண்சிவக்க, கைகால் நடுங்க, அருகாமையிலிருந்த வாளினால் அம்மையாரின் வலக் கையை துண்டித்தெறிந்தனன். இரத்த வெள்ளம் பெருகி வீழ்ந்தோட அம்மையார் மனந்தாளாது என்ன காரணத்தால் முருகா எனக்கு இத்தண்டனை யென்ன, அவன் உன் முருகனே உனக்குக் கைதரக் காண் என்ன, உடனே அம்மையார் தன் கற்பின் பெருமையைத் தன் நாயகன் காண முருகா, முருகா, முருகா என்று மும்முறை கூவ, ஆதிமூலமே என்று அல

றிய கஜேந்திரனுக்குத் திருமால் அந்நாள் அருளியவாறு, மருகனாகிய முரு கனும் முதல் முருகா என்றலும் மயில்மேல்வந்தும், மறுமுருகா என்றலும் கைவளரச்செய்தும், மூன்றாமுறை முருகா என்றலும் யாது தேவையம்மா? என வினவா நின்றனர். பரந்த திருமுகப் பொலிவைக்கண்ட முருகம்மை யார் பரவசமாயினர். ஞானப்பொலிவு உற்றனர். என் கணவன் பணமே பெரிதென்று தீச்சங்கை கொண்டவரா யிருத்தல் நின்தகைமைக் குற் றமோ என இறைஞ்ச, தனஞ்சயன் செட்டியை கடவுள் நோக்கிய தரு ணமே, முதிர்ந்த சிவபோதம் பெற்றான். பதம்விழுந்து போற்றாநின்ற னன். அவனையும் ஆட்கொள வேண்டியவணமே, வாமனர் பலியிடம் பெற்றதுபோல், அன்னானிடமிருந்து திரவிய மனைத்தையும் அவன் தரத் தான் பெற்றுச் செட்டியைத் தன் அடியவனாய்க் கொண்டனர்.

பின்னர் முருகக்கடவுள் திருவுருமறைய முருகம்மையாரும் தனஞ் சயன் செட்டியும் வாழ்நாட்களைக் குகன் திருப்பணிகளில் செலுத்தி முரு கன் திருவடி நிழலில் சாயுஜ்யமடைந்தனர்.

இக்கதை புராணக்கதை யாகாதென நக்கீரர் மேற்கோளால் விளங் கும். இது பகவந்நாம விசேஷத்தின் கீர்த்தியை விளக்குகின்றது. கோள் கேட்கும் குணத்தின் தீமையின் சிறுமையை விரிக்கின்றதெனப் படிப்ப வர் யாருக்கும் நன்கு புலனாம்.

N. S. இராமச்சந்திரய்யர், B. A., L. T.
முத்தியால்பேட்டை ஹை ஸ்கூல், சென்னை.

---

## புராதன இந்திய நன்னாடு

(276-ம் பக்கத் தொடர்ச்சி)

7. நிற்க, நமது புராதன இந்தியாவில் நீர்நில வளப்பங்களுக் கேற்ப வும், பருவங்களுக் கேற்பவும் தக்க விளைபொருள்களை விதைத்து மிகுந்த பயனடைந்தனர். விளைபொருள்கட்கு முட்டுப்பாடு யாதொன்று மில்லா திருக்கவே, நம்நாட்டார் கைத்தொழில்களையும் ஏற்றவாறு விருத்தி செய்யத் தலைப்பட்டனர். மெல்லியனவாயும் சற்று முரடானவையாயும் வேண்டுவோர்க்கு வேண்டுவன போன்று ஆடை நெய்ய ஸ்திரீகள், பால் யர், வயோதிகர், ஆகியயாவரும் கற்றிருந்தனர். ஆடவர்களிலும், பெண் பாலார் மிகுதியும் அத்தொழிலைக் கற்றுத் தங்கள் ஓய்வு நேரங்களில் வேலைசெய்து தக்க ஊதியமும் பெற்றனர்.

8. அன்றியும், அக்காலத்து வேண்டுமென்றே வளர்க்கப்பட்ட பல கானகங்களில் கிடைத்த மரங்களைக் கொண்டு மரக்கலங்கள் செய்ய வும் சிலர் தொழில் கற்றிருந்தனர். இக்காலத்து ஆகாயவெளியே பறந்து செல்லும் ஆகாயக் கப்பலைப்போல் அக்காலத்தும் கண்ணிமைப் பொழு துக்குள் நூற்றுக் கணக்கான மைல்கள் செல்லும்படி தக்க சூத்திரங்களு

டன், குதிரைபோன்றும், இரதம் போன்றும், ஆகாயக்கலங்களும் செய்யப்பட்டு வந்தன. உதாரணமாக, நாம் இராமாயணத்தில் குபேரன் புஷ்பகவிமானம் ஒரு விநாடிக்குள் பலயோசனைகள், ஆகாயகமனஞ் செய்ததாகக் கேள்விப்படுகிறோம். இவைகளினால் புராதன இந்தியா கைத்தொழில்களில் மிகவும் சிறந்திலங்கியது என்று அறியலாம்.

9. இஃதன்றி, இப்பொழுது, உலகமெங்கும் சர்வசாதாரணமாய் வழங்கப்படும் 'சர்க்கரை' என்னும் பதார்த்தம் ஆதியில் நம்மிந்தியாவில்தான் கண்டு பிடிக்கப்பட்டது என்பதற்குத் தக்க சான்றுகள் பலவுள. 'சர்க்கரை' யென்பது ஒரு வடமொழிச்சொல். அது ஆதிக்கிரந்தங்களில் பல சந்தர்ப்பங்களில் காணப்படுவதுமன்றிக் கிரேக்கு, பாரஸீகம், யவனம் முதலிய நாட்டுப் பாஷைகளிலும் காணப்படுகின்றது.

10. மேலும், நீலிச்சாயம் விசேஷமாக வகப்படும் அவுரி என்ற பச்சிலையும் இத்தேசத்தில்தான் முதலில் கண்டு பிடிக்கப்பட்டது. பருத்தியும் முதலில் இங்குத்தான் பயிரிடப்பட்டது.

11. இதுவுமன்றி, முத்துக்குளித்தல், இரத்தினம், முதலிய மணிகளை வெட்டி யெடுத்துச் சுத்தம்செய்தல் முதலிய பல கைத்தொழில்களும் விருத்தி செய்யப்பட்டன. இவைகளை யெல்லாம் தவிர, மானிடராவார்க்குச் சுகமே ஜீவனம் செய்வதற்கு இன்றியமையாத பலவேறு வகைத்தான கைத்தொழில்களும் நம்மிந்தியாவில் ஆர்வத்துடன் வளர்க்கப்பட்டன.

நிற்க, வாணிபத்தை யெடுத்துக் கொள்வோம். அதிலும் முன்பு குறையொன்று மில்லை. ஏராளமான விளைபொருள்களும், அவைகளுக்கேற்றவாறு கைத்தொழில்களும் மலிந்துகிடந்த இந்தியாவில் வாணிபத்தில் ஏதாகிலும் குறையுண்டு என்று எவ்வாறு சொல்லலாம். மரக்கலம் செய்தற்றொழில் அந்நாளில் பல்வகைத்தானும் விருத்தி செய்யப்பட்டிருந்ததால் போக்கு வரவுக்குரிய முக்கிய சாதனம் ஏற்பட்டிருந்தது. இந்தியாவின் விளைபொருள்களையும், விசேஷமான கைத்தொழில்களையும் கேள்வியுற்ற கிரேக்கர், பாரஸீகர், உரோமர், யவனர், சீனர் முதலியயாவரும் இந்தியாவுடன் போக்குவரவும் வியாபாரமும் செய்யத் தலைப்பட்டனர். நாட்பல கடக்க, இந்தியாவுக்கும் மேற்கூறப்பட்ட தேயங்கட்கும் மிகுதியாகப் போக்குவரவும் வியாபாரமும் ஏற்படலாயின. கிரேக்கர் முதலாயினோர் இந்தியர்களிட மிருந்து பலவகைக் கைத் தொழில்களையும் கற்றது மன்றி, மிளகு, வாசனைத் திரவியங்கள், சுகந்த தைலங்கள், முத்து, இரத்தினம், முதலியவைகளை வாங்கிக்கொண்டு வியாபாரமும் செய்யலாயினர். இவ்வாறு நம் புராதன இந்தியாவில் வாணிபமும் மிகச்செழிக்க, குடிவளந் தழைத்துக் கோல்வளம் ஓங்கலாயிற்று.

நேயர்களே! அறிஞர்களே ! இப்பொழுது நமது இந்தியதேசத்தின் புராதனக் கல்வியையும் நாகரீகத்தையும் சற்று ஆராய்வாம்.

அகண்டமாம் இப்பூவுலகின் கண் நிலைபெற்றுள்ள ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈறாகவுள்ள சகலவுயிர்களினும் மனிதனே மேம்பட்டவன். அஃதெவ்வாறெனில், ஏனைய உயிர்களின் புத்திகோசரத்துக்கும் மனிதனது புத்திகோசரத்துக்கும் ஒரு முக்கியவேறுபாடு உண்டு. அதாவது மனிதனுக்குப் பகுத்தறிவு (அல்லது பகுத்துப் பார்த்தற்குரியசக்தி) ஆறுமறிவு ஒன்று உண்டு. அதுதான் மனிதனுக்கு அவ்வளவு சிறப்பைத் தருவது. மேற் சொல்லப்பட்ட அப்பகுத்தறிவு தானும் கல்வி, கேள்வி, நற்றகை சான்ற பெரியோரது சேர்க்கை, நல்லோருடன் கூட்டுறவு ஆதிய வற்றாற் பெரிதும் விருத்தி யடைகின்றது. ஆகிலும் இவைகளில் பெரும்பாலும், கல்விகேள்வி என்பன விரண்டே அப்பகுத்தறிவை விருத்தி செய்ய, மனிதன் அறம், பொருள், இன்பம், வீடு என்ற புருஷார்த்தங்கள் நான்கினையும் எய்துவன். ஆதலால்தான் கல்விக்கு மிகுந்தபெருமை இந்நாளும் நிலவுகின்றது.

நிற்க, நமது முன்னோராகிய இந்தியர் இவ்வகைத்தான கல்வியின் பெரும்பயனையும், 'கல்வி கரையில, கற்பவர் நாட்சில'என்பதையும் நன்கு அறிந்தவராதலின் இக்காலத்து நாகரீக விந்தியர் போலன்றித் தமது தாய்ப் பாஷையிலுள்ள முக்கிய கிரந்தங்களைக் கசடறக்கற்று, அந்நூற்களில் நுவன்றபடி முறைபிறழாது ஒழுகியும் வந்தனர். இதனால் நமது இந்தியர் கல்வியில் மிகுதியும் வல்லுநர் ஆயினர்.

தவிர இக்காலத்துக் கல்விபோலன்றி அக்காலத்துக் கல்வியினால் பல பெருங்குணங்கள் பால்யர்களுக்கு அருங்கலன்களா யமைந்தன. முதலில் கல்வியைக் கற்கும்போது உபாத்தியாயரிடத் துண்டாகும் பயமும், கஷ்டமும், அவர்களுக்குத் தக்கவயது வந்தக்கால் பொறுமையையும், பக்தியையும் தரும். இவையன்றி அக்காலத்துப் படிப்பால் திருஷ்டிபூர்வமாய் விஷயங்களை உணரும் சக்தியும், தேகத்திற்குத் திண்மையும், சுறுசுறுப்பும், மனவலியும் உண்டாயின. இவைகளினால் அக்காலத்துக்கல்வியின் பெருமை நன்கு விளங்கும். இளமையிலேயே குழந்தைகட்கு நல்லறிவூட்டுவதினும் சிறந்தது யாதுளது.

பார்ப்பனக் குழந்தைகட்கு முதலில் சிறுகதைகள், பெருங்கதைகள், புராணங்கள், இதிகாசங்கள் முதலியவைகளை முறைப்படி குருமார் ஓதுவிப்பார். உபநயனம் முதலியவை ஆகிய பின்னர் வேதம், வேதாங்கம், முதலிய ஆறு சாத்திரங்களையும் ஓதுவிப்பர். இக்காலத்திற் போன்று புஸ்தகங்கள் அதிக மில்லாததால் எல்லாச் சீடர்களும் முறைபோட்டு மனப்பாடம்தான் செய்து கல்விகற்பர். இதனால் பாலியர்களுக்கு இளமையிலிருந்தே ஞாபகசக்தி விருத்தியாம். மேற்சொன்னவைகள், அந்தணச் சிறுவர்க்குச் சிறப்பா யுரித்தாவனவாம்.

மற்ற மூன்று வருணத்தினருக்கும் சிற்பம், வியாபாரம் முதலிய தொழில்கள்தான். இவை தவிர, அக்காலத்துக் கல்வியைப் பின்னுமாராயப்

புகின், ஜோதிடம், கணிதம், வானசாஸ்திரம் முதலியவைகளும் போதிக்கப்பட்டன வென்பது நன்கு விளங்கும். இக்காலத்து அபூர்வமாகவழங்கப் படும் க்ஷேத்திரகணிதம், திரிகோணசாத்திரம் (டிரிக்னுமெட்ரி,) முதலியனவும் அக்காலத்தில் இருந்தன.

தவிரவும், வடநாட்டில் எப்படி ஸம்ஸ்கிருதம் பரவி நின்றதோ அதே போல தென்னாட்டிலும் தமிழ் மிகப்பரவியிருந்தது. அகத்தியர் தென்னாட்டுக்கு வருவதற்கு முன்னரே வழங்கப்பட்ட தமிழ், அவர் வந்தபிறகு இலக்கணத்தினால் பெருமை யுறலாயிற்று. நாட்கள் பல கடக்கவும் முதல், இடை, கடை என்ற மூன்று தமிழ்ச் சங்கங்கள் வெவ்வேறு காலவளவிற் குள் ஸ்தாபிக்கப்பட்டன. இவை தென்னாட்டிலிருந்து தமிழாராய்ந்த காலத்தில் தமிழ் வடநாட்டில் பரவினதன்றி, சீனம் முதலிய தேசங்களிலும் வழங்கப்படுவ தாயிற்று. தமிழிலும் பல பெருங்காப்பியங்களும் மானிடராவார்க்கு இகத்திலும் பரத்திலும் நன்மை பயப்பனவாகிய பல நூற்களும் இயற்றப்பட்டன. இவைகளைக் கற்றுத் தமிழரும் கல்வியில் மிகுந்த தேர்ச்சியுற்றனர். ஜோதிடம் முதலியன பலவும் இயற்றப்பட்டன. உதாரணமாக, இடைக்காடர் என்றவர் ஜோதிடத்தில் மிக வல்லவரென்றும், ஒருகாலத்தில் பஞ்சத்தினின்றும் மன்னுயிரைக் காக்கும் பொருட்டு நவக்கிரகங்களையே மழை பெய்யும்படி செய்தனரென்றும் நாம் அறிகிறோம்.

நிற்க, சிற்பம் முதலிய சாஸ்திரங்களும், பல வியற்றப்பட்டன. இதனால் தமிழ்நாட்டிலும் வடநாட்டிலும் சிற்பசாஸ்திரத்தைக் கற்க ஒரு முக்கிய சாதன முண்டாயிற்று. தக்க காலவளவில் இந்தியச் சிற்பிகள் எங்கும் புகழ்பெறலாயினர்.

இப்பொழுது, பெண்கல்வியை எடுத்துக் கொள்வாம். ஆடவர்களைப் போல் பெண்களும் அக்காலத்துக் கல்வி கற்றிருந்தனர் என்பதற்கு ஐயமே இல்லை. ஔவைபோன்ற பல மூதாட்டிகள் நமது நாட்டில் இருந்திருக்கின்றனர். ஆனால் இக்காலத்துப்போல் அவர்கள் கல்விகற்றதினால் சிறிதும் அகம்பாவ மடையவில்லை. தமது கொழுநர்க்குச் செய்யவேண்டிய சிசுருஷை முதலியவைகளைச் சாஸ்திரீக முறைப்படி வழுவின்றிச் செயயலாயினர். இதனல் ஆங்கில நாகரிகத்திற்குப் பின்பு தான் பெண்கல்வியின் இன்றியமையாமை நமக்குப் புலப்பட்டது என்று சொல்வது அறிவீனமாகும் என்பது நன்கு விளங்கும். பிற்காலத்தில் இராஜரீக மாறுபாட்டால் பெண்கல்வி குன்றியதன்றி முதலில் இல்லாமலில்லை.

நேயர்காள் ! இப்பொழுது நமது மூன்றும் பிரிவினையை எடுத்து ஆராயப்புகுவாம். இவ்விந்தியா நற்குலக் கற்பரசிகட்கு மிகுதியும் பெயர் வாய்ந்த நாடு. கற்பின் திண்மையும் பயனும் முற்றுமுணர்ந்த நாடு. தகை சான்ற பெண்மணிகள் தவமகளிராய் வாழ்ந்த நாடு. கோதற்ற குணமங்கையர் கொழுநரைப் பேணி நற்பதமடைந்தநாடு. அம்மங்கையர் திலகங்

களால்தான் நம்நாடும் நாமும் இன்றளவும் உண்டுடுத்துக் கொண்டாட்டத்துடன் இருப்பது. ஒவ்வொரு மாதரசியின் பெயரையும் சொல்வதென்பது இயலாதது.

நிற்க, தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் தமது பொய்யாக்கிளவியாகிய திருக்குறளில் பெண் என்பாளை யறிவதெங்ஙன மென்பதைப் பின்வரும் திருக்குறளால் கூறியுள்ளார், அதாவது,

‘ தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண் ’ என்பது.

நமது புராதன காலத்துப் பெண்களிடம் இக் குணங்கள் யாவும் வதிந்தனவென்று சொல்லலாம். உதாரணமாக, நளாயனியையும், ஜமதக்னி முனிவரின் பாரியையும் பற்றி நாம் புராணங்களில் கேட்கிறோம். இவ்விரண்டு கதைகளினின்றும் பதிவிரதா தன்மையின் ஒப்பற்ற பெருமையையும், அதை இழந்தவர்களின் கதியையும் நாம் தெற்றென வறியலாம்.

மேற்சொன்ன குணங்கள் யாவும் பொதிந்த பல கற்புக்காரிகைகள், பெண்மணிகள், நற்குல தீபங்கள், மாதுசிரோமணிகள், நம் நாட்டில் எண்ணிடக்கூடாதவர்கள் இருந்திருக்கின்றனர். இவ்வாறெனில் மாதமும்மாரிபெய்யவும், குடிவளந் தழைக்கவும், கோல்வளமோங்கவும் யாதுதடை.

நேயர்களே ! மேற்சொல்லப்பட்ட விஷயங்களினின்றும் நமது புராதன இந்தியாவின் இணையு மெடுப்புமற்ற மாட்சி ஒருவாறுபுலப்படும்.

(பொய்யாமொழி)

சி. சீனிவாச ராகவன்,
48, பக்தபுரி அக்கிரகாரம், கும்பகோணம்.

**குறிப்பு:**—நம் தாய்நாட்டின் புராதன நிலைமையை யுணர்ந்து, இப்போதுள்ள நிலைமைக்காக வெட்கி மனம் நொந்து, வீண் நாகரீக மயக்கில் சிக்கி யழியாது நம் தாய்ப்பாஷையும், நம் நாட்டுக் கைத்தொழிலும் அபிவிருத்தியடையும் வழியில் உழைத்து, நம் பூர்வீகப் பெருமையை யடைய முயலவேண்டும். அதுவே தாய்நாட்டிற்குச் செய்யவேண்டிய கடமையாகும். அதை விட்டு “நம் நாட்டில் நெய்த துணி முரடாயிருக்கிறது. நான் தலைமுறை தலைமுறையாகச் சீமை மல் கட்டியே வாழ்ந்தேன். அது வருமுன் அம்மணமாகவிருந்தேன்” என்று கூறுவதுபோல் நடந்துகொண்டு, வாயால்மட்டும் எங்கள் பூர்வீகப் பெருமை யிப்படி யிருந்ததென்று கூறிக் கொள்வது வெட்கக்கேடேயாகும். அப்போது நாம் நம்முன்னோர் பெருமையையும், தாய்நாட்டின் பூர்வீக உன்னத நிலைமையையும் மனதார உணர்ந்தவர்களாகோம். இனியேனும் நம்மவர்களுக்கு நல்லுணர்வுண்டாக எல்லாம் வல்ல பரம்பொருள் அருள்புரியுமாறு பிரார்த்திக்கிறோம்.

பத்திரிகாசிரியர்.

---

## பிழைதிருத்தம்.

321-ம் பக்கம் 3-வது பாட்டின் இரண்டாவது வரியை "சொற்பனங் கண்டாயுண்மை சொன்னேனுன்—கற்பனையோன்" என்று திருத்திக் கொள்ளவும்.

---

## இல்லறம்—கன்மம்.

(312-ம் பக்கத் தொடர்ச்சி.)

குறிப்பு :—ஐயா! யாமிதுகாறும் இல்லற தருமத்தைப்பற்றியே யெழுதிவந்தோம். அவ்வில்லறத்தோடு மாறுபட்டு நிற்கும் துறவறத்தை யெழுதவில்லை. இல்லறத்தார்க்குரிய பல கன்மங்களுள் சிராத்தமென்பது மிகச் சிறந்தது. அது ஜீவன் உடலைவிட்டுப் புறப்பட்டதுமுதல் தான் செல்லுமிடத்தைச் சென்றடையுமட்டும் செய்யவேண்டிய கன்மங்களுடன் கூடியது. அதற்கு ஜீவகதி யென்று பேர். அதைக் கூறுமிடத்து வியாதியால் மடிந்த சரீரத்தைத் தகனம் செய்வது சிலாக்கியமுடையது என்பதும் அது துவிஜர்கள் எல்லாராலும் அனுஷ்டிக்கப்படுவதென்றுங் கூறினேம். அதுவும் நூல்களின் கருத்தேயொழிய எமது சொந்தக் கருத்தல்ல. இது இல்லறத்தார்க்கே யுரியது. இருளு மொளியும்போல இல்லறத்தோடு மாறுபடுவதாகிய துறவறதருமம் வேறு. அதை இனிமேல் யாம் சிறிது எழுதுவோம். நிற்க,

ஞானயோக சமாதியால் மலங்களைத் தகித்து நின்மலமான துறவிகளின் சரீரத்தைச் சமாதியி லடக்கம்செய்வதே யுசிதம். ஏனெனில் உலகங் கடந்த அவர்களுக்கு மரணமும் கிடையாது. அவர்கள் சரீரமும் தீ நீர் காற்று மண் முதலியவற்றால் ஊறுபடுவதில்லை. அவர்கள் இறந்தவர்களைப்போலக் காணப்பட்டாலும் பிரமரந்திர ஸ்தானத்தில் சென்று பிரமத்தோடு வசிப்பார்கள். அவர்கள் மீண்டும் உயிர்த்து வந்து உலகத்துக் குபசரிப்பதும் கூடும். ஆதலால் மடாதிபதிகள் யோகிகள் இவர்களைச் சமாதியி லடக்கம் செய்வதே தகுதி. நிற்க,

கிறிஸ்துவ மஹமதியர் கொள்கைகளை யாம் அறியோம். அம்மத ஸ்தாபகர்கள் ஏதோ ஒரு ஆதாரத்தின்மேல் மதத்தை ஸ்தாபித்து நிலைநிறுத்தி யிருக்கின்றார்கள். ஆதலால் அம்மதஸ்தர்கள் தமது பூர்வாசாரியர்கள் கொள்கைகளைப்பற்றி யொழுகுவதே சரி. ஒவ்வொருவரும் தத்தம் மதநெறி கடவாமல் ஒழுகுவதே சன்மார்க்க நெறி யென்பதுதான் அத்வைத சித்தாந்தமென்பது எமது கொள்கை. அதுபற்றி யெமக்கு யாதும் விரோத புத்தியில்லை யென்பது கொள்க.

---

## துறவறம்.

யாம் இதுகாறும் இல்லறத்திற்குரிய சில நியம விதிகளைப்பற்றி யெழுதிவந்தோம். அவ்வில்லறதருமம் ஒருவாறு முற்றுப்பெற்றபடியால் அதனைவிடுத்து, இல்லறத்திற்கு முற்றும் மாறானதும், உலகம் கடந்த பரம்

பொருளின் கருணையிலடங்கி நிற்பதும், ஜனனமரண பயங்களை யொழிப்பதும், எந்தப் பிராணிகளோடும் கலவாமல் தனித்து நின்று செய்யப்படுவதும், ஜீவன் முத்தத்தன்மையை எளிதில் அளிப்பதும், ஒப்புயர்வற்றதும், அநந்தகோடி ஜன்மாந்தரங்களிற் செய்த புண்ணிய கன்மங்களின் பலனாக அடையப்படுவதும், சத்துச் சித்தாநந்தப் பரம்பொருளொடு தானதுவென்னும் வேற்றுமையறக் கலந்துநிற்பதுமாகிய துறவறத்தைப்பற்றிச் சிறிது வரையக் கருதுகின்றோம்.

"இல்லறமல்லது நல்லறமன்று" என்று அன்னையாரால், அல்லது என்னும் எதிர்மறைச் சொல்லால் தழுவிக்கொள்ளப்பட்டது இதுவே. தேவரும் (நாயனார்) "புறத்தாறு" என்ற சொல்லால் தழுவிக்கொண்டார். பிறரொடு கலவாமல் தனித்து நின்று செய்யப்படுவதனாலும், சிறிது தவறு நேரினும், பிறரால் பழிக்கப்படுவதாதலானும் அதனை நல்லறமன்று என்று அன்னையார் கூறினாராயினும் அது இழிவென்பது அவரது கருத்தல்ல. "பர்த்தாவுக்கேற்ற பதிவிரதை யுண்டானால், எத்தாலுங் கூடியிருக்கலாம்-சற்றேனும், ஏறுமாறாக விருப்பாளேயாமாயின், கூறாமற் சன்னியாசம் கொள்" என்றதனால் இல்லறவாழ்க்கைக்குரிய பதிவிரதையான மனைவியில்லாவிடின், துறவறமே மேலானதென்று கூறினாராதலாலென்க.

"அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதூஉம்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று"

என்று தேவரும் கூறினர். இவற்றால் பதிவிரதையான மனைவி யில்லாவிடின் இல்லறதருமம் கெடும் என்பதும், பிறரால் பழிக்கப்படுந் தன்மையுடையதாயின் அத்துறவறதருமமும் பயன்படாதென்பதும் புலப்படுகின்றன. இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் இடையில் வானப்பிரஸ்தம் என்றொரு தருமமுளது.

தனது ஆயுளின் இரண்டாம் பாகத்தை யில்லறத்தில் கழித்து மூன்றாம் பாகத்தில் வனத்தை யடையவேண்டும். இரண்டாம் பாகமென்றது இருபத்தைந்து வயதுக்குமேல் ஐம்பது வயது வரையுமாம். நமது முன்னோர்கள் தத்தம் குலாசார ஒழுக்கம் தவறாது நடந்து வந்ததனால் அநேகமாய் எல்லாரும் அபமிருத்யு முதலிய இடையூறுகளின்றி நூறு வருடம் ஜீவித்து வந்தார்கள். அந்த நியாயம்பற்றிப் புருஷாயுசை நாலு பாகமாக்கி, முதற்பாகத்தை பிரமசரியத்திலும், இரண்டாம்பாகத்தைக் கிரஹஸ்த தருமத்திலும், மூன்றாம் பாகத்தை வானப்பிரஸ்த தருமத்திலும், நாலாம் பாகத்தைச் சந்நியாச தருமத்திலும் செலுத்தவேண்டுமென்றும் நூல்கள் கூறுகின்றன. கூறினவேனும் பரிபாக முதிர்ச்சிபெற்றவர்கள் பிரமசரியாச்சிரமத்தை முடித்தவனந்தரமே சந்நியாசத்தைக் கைக்கொள்ளலாமென்றும் நூல்களே கூறின. ஆயினும் ஏனையர் பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்ற முறை வழுவாது செய்வதே யுசிதமாம்.

இனி "வானப் பிரஸ்தம்" என்பதும் ஓர் வகையில் துறவேயாம்,

எவ்வாறெனில் வானப்பிரஸ்தர்கள் (வனத்தில் வசிப்போர்) இந்திரிய நிக்கிரகம் செய்யவேண்டும். இந்திரியங்களை யடக்கித் துறவிகளைப்போலவே யுலகப் பற்றற் றிருக்கவேண்டும். வண்டி குதிரை முதலிய வாகனங்களிலேறக்கூடாது. நெல் முதலியவற்றாலாக்கப்படும் உணவுகளைப் புசித்தல் கூடாது. தன் புத்திரர்களுக்குப் புத்திரர்கள் பிறந்தபின் பேரப்பிள்ளைகளின் முகத்தைக்கண்டு மகிழ்ந்து பின் வனம்புகவேண்டுமென்னும் சிறந்த விதியொன்றுண்டு. தன் பத்தினியைப் புத்திரர்களிடத்தில் ஒப்புவித்துவிட்டாவது, அல்லது தன்கூடவே அழைத்துக்கொண்டாவது வனம் புகலாம். மனைவியோடு வனம் செல்பவன் கிரகஸ்த தர்மமாகிய ஔபாஸனுதி அக்கினி காரியங்களைச் செய்யவேண்டும். மனைவியைவிட்டுச் செல்பவன் பிரமசரிய விரதத்தை அனுஷ்டிக்கவேண்டும். ஜடை வளர்க்கவேண்டும். முக க்ஷவரம் செய்துகொள்ளக்கூடாது. கைகால்நகங்களைக் களையாமல் விட்டுவிடவேண்டும். காட்டில் தானுக விளையும் காய்கனி கிழங்குகளைப் புசிக்கவேண்டும். அவற்றைக்கொண்டே யதிதிகளை யாராதிக்கவேண்டும். அக்கினிஹோத்திரம் பிதிர்காரியங்கள் எல்லாம் கனி கிழங்குகளைக்கொண்டே செய்யவேண்டும். தேவாராதனை செய்யவேண்டும். காயத்திரி மஹா மந்திரத்தை ஜபிக்கவேண்டும். கண்டவைகளைப் புசிப்பது கூடாது. கண்டவைகளை விக்கிரயம் செய்வதுங் கூடாது. திரிகாலமும் ஸ்நானம் செய்யவேண்டும். மரவுரியே தரித்தல் வேண்டும். காய் கிழங்குகளைக்கொண்டு பஞ்சமஹாயக்ஞங்களையும் தவறுமற் செய்யவேண்டும். ஒருவரிடத்திலும் தானம் வாங்கக்கூடாது. எல்லாரிடத்தும் அன்பும் தயவுமுடையவனு யிருக்கவேண்டும். மான் முதலியவற்றின் தோல்களையும் ஆடைகளாக வுடுக்கலாம். தாடி, மீசை, சரீரத்திலுள்ள ரோமம், நகம் இவைகளை யெடுக்கக்கூடாது. இந்திரியங்களை யடக்குவதும், வைதிக கிருத்தியங்களைத் தவறுமற் செய்வதும், இதர ஜீவர்களிடத்தில் அன்புடைமையும், எல்லாரிடத்தும் இனிமையாகப் பேசுவதும், பனி, மழை, காற்று, வெயில் இவற்றைப் பொறுத்துக்கொண்டிருப்பதும், வேதமோதுவதும், பரமநிஷ்டை கூடியிருப்பதும் வானப்பிரஸ்த தருமமாம்.

இந்த வானப்பிரஸ்த தருமமும் இருவகைப்படும். வனத்திலிருந்து கொண்டு கிரகஸ்த தருமத்தை அனுஷ்டிப்பதும், சன்னியாச தருமத்தை யனுசரிப்பதும் என்பனவாம். இதுவரையிலும் கூறியது கிரஹஸ்த தருமம் பற்றிய வானப்பிரஸ்தம். கிரஹஸ்த தருமத்தை யனுசரித்தாலும் புத்திரர்களைப் பெறுவதும், சுகத்தைக் கருதுவதும் கூடாது. சாந்திராயணம் கிருச்சிரமம் முதலிய விரதங்களைச் சக்திக்குத் தக்கபடி அனுஷ்டிக்கவேண்டும். நரகத்துக்கு மூன்று மார்க்கங்களுள்ளன. அவை காமம், குரோதம், லோபம் என்பனவாம். பிட்சுகனுக்குச் (சந்நியாசிக்கு) சமானனுயிருக்கிற வானப்பிரஸ்தன் இம்மூன்று குணங்களையும் முற்று மொழித்

துவிடவேண்டும். கட்டிடமின்றி யிருக்கிற பூமியில் படுப்பதும், நடமாடு வதும் அவருக்கியல்பாம். சிரௌதாக்கினியிலுண்டான பஸ்மத்தை யுட் கொண்டு, நீவாராதி புல்லரிசியையு மொழித்துத் தானே பழுத்துதிர்ந்த காய்கனிகளைப் புசித்து வரவேண்டும். மனைவி மக்கள் இனிப்பு புளிப் பான ருசியுள்ள கனிகள் இவற்றில் பற்றுதல் வைப்பது கூடாது. பிரம சரியத்தை யனுசரித்து மரத்தினடியில் படுக்கவேண்டும். அவ்விடத்தி லேயே வசித்தல் வேண்டும். தவம்புரிவோர், கிரகஸ்தாச்சிரமத்தி லிருப் பவர், கிராமத்திலிருப்பவர் இவர்களிடத்தில் தனது வயிற்றுக்குப் போது மான உணவை யாசித்துவரவேண்டும். எட்டுக் கவளத்துக்குமேல் பிக்ஷை யெடுக்கக்கூடாது. தனது கைகளிலாவது, அல்லது உடைந்தமண்பாண்ட த்தின் ஓட்டிலாவது பிக்ஷை யெடுக்கவேண்டும். இத்தருமங்களைக் கைக் கொண்டு உபநிஷதங்களைக் கற்றுக்கொண்டு அதன்படி ஒழுகவேண்டும். வைத்தியத்தினால் வியாதி நீங்காமலிருக்குமாயின் அவன் மேழ்திசையை நோக்கி வேகமாய்ச் செல்லவேண்டும். அப்பொழுதும் ருசியுள்ள உணவு களில் சித்தம் வைக்கக்கூடாது. தண்ணீர் காற்று இவற்றைமட்டும் புசித் துவரவேண்டும். பஞ்சாக்கினி மத்தியிலிருந்து தவம்புரிவதும் இவர்க ளுக்கு விதியாம். இவ்வாறு கூறிய தருமங்களில் தன் சக்திக்கு ஏற்றதை யனுசரித்து அந்நெறியினின்று தவறாதொழுகும் வானப்பிரஸ்தனுக்கு ஜனனமரணபயம் கிடையாது. அவன் பிரமலோகமென்ற மோட்ச வுல கத்தையடைவான். இந்த வானப்பிரஸ்த தருமம் மிகவும் மங்களகரமா னது. அசுபங்களையெல்லா மொழிப்பது. வனத்தில் வசித்து அருமை யான தவம்புரிந்து சமாதியிலிருந்து வரும் வானப்பிரஸ்தன் சகல பாபங் களினின்றும் விடுபட்டு மோட்சத்தை யடைவான். புராணாதிகளிலே கூறப்படும் ரிஷிகள் எல்லாரும் மேற்கூறிய தருமங்களை அனுஷ்டித்து வந்த கிருகஸ்தரும் வானப்பிரஸ்தருமேயாம். இவர்களே வனத்தில் வசி த்து அநேக அரிய அற்புத விஷயங்களைத் தமது தபோமகிமையினால் அறி ந்துகொண்டு உலகத்தாருக்கு அனுக்கிரகித்து வந்தார்கள். அடிக்கடி அர சர்களைக் கண்டித்துப் பிரஜாபாலனத்தை முறைதவறாமல் நடத்தும்படி செய்தார்கள். அவர்கள் மகிமை அளவுகடந்ததென்பது நமது பரதகண் டத்தில் பிறந்தவர்களிலறியாதா ரில்லை.

வானப்பிரஸ்தம் முற்றும்.

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பகவத்கீதை வசனம்.

(808-ம் பக்கத் தொடர்ச்சி.)

அர்ச்சுனன் :—ஏ பகவான்! சந்நியாசி, அசந்நியாசி, ஞானி, அஞ்ஞானி யாவருமே நவத்துவாரங்கள் பொருந்திய இத்தேகத்தின்கண் வசிக் கின்றனர். அப்படியிருக்க ஒருவர் ஆனந்த வடிவமாகவும் மற்றையர் துக்க ரூபமாகவும் இருப்பானேன்?

பகவான் :—ஞானி பஞ்சபூதங்களாலாகிய இத்தேகத்தில் இருப்பினும் தன்னை யித்தேகத்தினும் வேறாகிய பிரத்யகான்ம சொரூபமாய்க் காண்கிறானேயன்றித் தேகரூபமாகக் காண்பதில்லை. அன்னியர் வீட்டில் வசிக்கும் ஒருவன் அவ்வீட்டின் க்ஷேமம் ஹானி இவற்றால் சந்தோஷமும் துக்கமும் அடைவதில்லை. அதுபோல் ஞானியாகிய சந்நியாசியும் சரீரத்தில் அபிமானமற்றவனாதலின் அதன் துதி நிந்தைகளால் சுக துக்கங்களை யடைவதில்லை. அகந்தை மமதைகளும் அவனிடமிரா. அதனால் அவன் சுகரூபியாயிருக்கிறான்.

அஞ்ஞானியோ தன்னை ஆன்மாவாக அறியாமல் தேகரூபமாகவே யறிகிறான். அதனால் நான் கர்த்தா போக்தாவென வெண்ணிச் சுகதுக்கங்களால் மொத்துண்டு உழல்கிறான். உண்மையில் ஆன்மா ஒன்றைச் செய்வதுமில்லை செய்விப்பதுமில்லை.

அர்ச்சுனன் " ஏ பகவான் ! தேவதத்தன் என்பவனிடம் உண்மையாயுள்ள கமனவடிவக்கிரியை அவன் நிலைத்திருக்குங்காலத்தில் இல்லாதது போல் ஆன்மாவினிடத்துள்ள செய்யும் தன்மை செய்விக்குந் தன்மையாகிய கிரியைகள் சந்நியாச நிலையில் இல்லை யென்பது தங்கள் கருத்தோ? அல்லது ஆகாயத்தில் நிறம் வடிவம் உண்மையில் இல்லாது ஆரோபத்தால் தோன்றுவதுபோல் ஆன்மாவினிடம் செய்யுந்தன்மையும் செய்விக்குந்தன்மையும் உண்மையில் இன்று என்பது தங்கள் கருத்தோ?" என்று வினவிய சங்கைக்குப் பகவான் அருளிச்செய்கின்றார் :—

ஏ பார்த்த! இவ்வான்மா கர்த்திருத்வத்தையும், கர்மத்தையும், கர்ம பலன்களோடு சம்பந்தத்தையும் உண்டாக்குவதில்லை. அது கர்மத்தைச் செய்வதுமில்லை செய்விப்பதுமில்லை. அஞ்ஞான வடிவமாகிய மாயையே இக் காரியமனைத்தும் செய்விப்பதிற் பிரவிருத்திக்கிறது.

அந்த மாயையால் அஞ்ஞானத்தின் வயப்பட்ட ஜீவர்கள் தாதான்மியங்களை யடைந்து நான் இக்கர்மத்தைச் செய்கிறேன், இப்போகத்தைப் புசிக்கிறேன், என்று மோகத்தால் கருதி ஜனனமரண துக்கத்தை யனுபவிக்கிறார்கள்.

"அப்படியாயின் இஜ் ஜனனமரணதுக்கம் எவ்வாறு ஒழியும்?" என்ற அர்ச்சுனனது சங்கைக்குப் பகவான் விடை யருள்கிறார் :—

ஏ பார்த்த ! ஞானத்தால் ஆவரணரூபமான அஞ்ஞானம், அனாதியாயினும், முழுமையும் அழியும். எப்புருஷனுடைய அஞ்ஞானம் ஒழிந்ததோ அவனுக்கு ஆன்மஞானம், அந்தகாரத்தை நீக்கிய சூரியன் சுடர்விட்டுப் பிரகாசிப்பதுபோல், பிரகாசிக்கும். இவ்வாறடைந்த ஞானத்தால் பரமான்மா வேறு நாம் வேறு என்ற பேதபுத்தியின்றி, அதுவே நாம், நாமே யது என்ற ஐக்கிய நிலையையடைந்தோர் மீண்டும் பிறவாத முத்தியையே யடைவர். ஆன்மா வேறு, பரமான்மா வேறு என்ற பேதபுத்தி நீங்காதோர் பரமான்வை யறிந்தவராகார்.

பொன்னை யன்றிப் பூணில்லை பூணை யன்றிப் பொன்னில்லை
என்னை யன்றிச் சிவனில்லைச் சிவனை யன்றி யானில்லை
யின்ன வண்ண மறிந்தோனே யீசன் றனையு மறிந்தோனு
மின்ன வண்ண மறியாதா னீசன் றனையு மறியானே. (வள்ளலார்)

ஆன்மா வேறு, பரமான்மா வேறு என்ற பேதம் தோன்றுமளவும் முத்தியில்லை. எனெனில் உண்மையில் பரமான்மாவையன்றி வேறாக ஆன்மா என்ற ஒன்றில்லை. பரப்பிரம்மம் ஒன்றே அஞ்ஞான தசையில் ஜகம், ஜீவம்; பரம் என்ற மூன்று பேதமாய் விளங்குகிறது. இதனுனே ஜகஜீவபரம் மூன்றும் அநித்தியம் என்று கூறப்பட்டது. ஆதலின் சிவமே நாம் நாமே சிவம், நம்மைவிட்டுச் சிவம் வேறாக இல்லை என்ற அபேத ஞானமே முத்தியளிக்கும்.

உடலொறு முயிரு மாகி யுயிர்தொறு முணர்வு மாகிச்
சடமச டங்க டோறுஞ் சாக்கியு மாகி நின்ற
வட்டல்புனை சிவனார் நம்மை யன்றிவே றில்லை யென்றே
யுடைகுட விசும்பு போலொன் றுதலே யோக மாமே.(வள்ளலார்)

ஞானமடைந்த ஆன்மா தன்வரையில் மாயையை நீக்கிக்கொள்வதால் மாயை அனுதியாயினும் அநித்தியமே யென்றும், ஆனுல் மற்ற உலக மாயை யிருந்துகொண்டே யிருக்கிறபடியால் அதைக்குறித்து. நித்திய மென்றும் கூறப்பட்டது. ஆதலின் ஜகஜீவபரம் மூன்றும் நித்தியம் என்ற பட்சமும் அநித்தியம் என்ற பட்சமும் இரண்டும் அங்கீகரிக்கத் தக்கவையே. ஞானநிலையில் அநித்தியமும், அஞ்ஞான நிலையில் நித்தியமுமாம்.

வள்ளலார் "சித்தாந்த தரிசனம்" என்ற நூலில் பாசவியல் கூறுங்கால்,

"மாயை சடமயக்க மதந்தா மதம்பொய்ம்மை
காயம் விளக்குங் கனு"—என்றருளினர்.

அருணகிரிநாதர் "இல்லேயெனு மாயையி லிட்டனை நீ—பொல்லே னறியாமை பொறுத்திலையே" என்றருளினுர்.

அப்படியாயின் இது விஷயமாகச் சிலர் வாதாடுகிறுர்களே யெனின் அது தவறே. அறிவாளிகளுக்கு அப்பேதமிராது.

வேதமோ டாகம மெய்யா மிறைவனு
லோதுஞ் சிறப்பும் பொதுவுமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. (திருமந்திரம்)

ஆன்மாவும் ஒன்றைச் செய்வதுமில்லை செய்விப்பதுமில்லை. பரமான்மாவும் அகண்டமாக எங்கும் நிறைந்திருப்பினும் ஒன்றையும் செய்பவருமல்ல, செய்விப்பவருமல்ல. ஆன்மாக்களின் பாபபுண்ணிய கருமங்களில் ஒன்றும் அவரைப் பற்றுவதில்லை. மற்றபடி யார் செய்தும் செய்வித்தும்

பிரவிர்த்திப்பவர் எனின், தெய்வீகமாயையாகிய பிரகிருதியே பிரவிருத்திக்கின்றது. சூரியன் எவ்வித பாரபக்ஷமுமின்றிப் பிரபஞ்சத்தின் நன்மைக்கே பிரகாசித்தபோதிலும், உலகிலுள்ள வஸ்துக்கள் அவ்வவற்றின் சுபாவத்திற்குத் தக்கபடி ஒன்றுக்கொன்று மாறான பலவித நிலைகளை யடைகின்றன. எவ்வாறெனின் ஜலத்திலுள்ள தாமரை மலர்ந்து பிரகாசிக்கிறது. தரையிலுள்ள தாமரை வாடியுலர்கிறது. பனிக்கட்டி நீராக மாறுகிறது. ஜலம் நீராவியாய்ப் போகிறது.

இவ்வாறே எங்கும் பிரகாசித்துக்கொண்டிருக்கும் பரமான்மாவின் சந்நிதானத்தில் ஜீவன்கள் அவ்வவற்றின் கர்மத்திற்குத் தக்க பலன்களை யனுபவிக்கவும் காரியங்களைச் செய்யவும் மாயையாகிய பிரகிருதியே பிரவிருத்திக்கின்றது. உண்மையில் ஆன்மாவினிடம் ஒரு கருமமுமில்லை.

அஞ்ஞானம், ஆவரணம், அவித்தை, பிரகிருதி, மாயை, சத்தி என்பன ஒரே பொருளைக் குறிக்கும் சொற்களே. இந்த அஞ்ஞானம் சீவனையே பற்றி நின்று, சீவன் தன் நிஜவுருவைக் காணாவண்ணம் மறைக்கிறது. சூரியன் உதயமானதே இருள் நீங்குவதுபோல் ஞானம் உதயமானதே அஞ்ஞானம் நீங்குகிறது. ஒரு குகையில் இருள் சிருட்டிகாலத்திலிருந்தே இருந்தாலும், தீபத்தைக்கண்டதே மறைவதுபோல் அஞ்ஞானம் அனாதியாயினும் ஞானோதயமானதே நீங்கும். ஆன்மா ஞான சொரூபமே. அது தன்னை யறியாத் தன்மையே அஞ்ஞானமாம். கதையிலில்லாத பெரும்பொய்போன்றதே மாயையென்றும், "யாதொன்றில்லாதது அது மாயையாகும்" என்றும் வாசிட்டம், கைவல்யம் முதலிய பிரபல நூல்கள் கூறியிருக்கின்றன. ஏனெனில் அறிவைக்கொண்டு பார்க்கும்போது மாயை புலப்படாது. அதனாலே மாயையும் மாயாகாரியங்களுமாகிய யாவும் பொய் யென்றும், ஞானநிலையில் பொய்யாய்ப்போய் அஞ்ஞான நிலையில் தோன்றுவதால் மாயையாகிய ஆவரணம் கானல்நீர், கயிற்றரவு, கிளிஞ்சில் வெள்ளி இவற்றிற்கு ஒப்பிட்டுக் கூறப்பட்டது. அதற்கு ஒருவித சொரூபமுமில்லை யாதலின் அவாச்சிய வடிவம் எனப்பட்டது.

"போத மென்பதே விளக்கொவ்வு மவித்தைபொய் யிருளாம்
தீதி லாவிளக் கெடுத்திரு ளேடவுஞ் சிக்கா
தாத லாலறி வாய்நின்ற விடத்தறி யாமை
யேது மில்லையென் றெம்பிரான் சுருதியே யியம்பும்"

என்று தாயுமான சுவாமிகள் கூறியருளினர்.

அந்தகாரம் எவ்வாறு வீட்டைப்பற்றி யிருந்து வீட்டையே மறைக்கிறதோ, அவ்வாறே மாயை யல்லது அஞ்ஞானம் சீவனைப் பற்றிக்கொண்டிருந்து அதன் அறிவாகிய கண்ணை மறைக்கிறது.

(இதுகாறும் பகவான் ஆன்ம ஞானத்தால் பெறப்படும் விதேககைவல்யத்தைப்பற்றிக் கூறி யருளினர். இனி ஆன்ம ஞானத்தால் இத்தேகத்தி

விருக்கும்போதே யடையத்தக்க ஜீவன்முக்தத் தன்மையைப்பற்றிக் கூறி யருளுகின்றார்.)

ஏ அர்ச்சுனா! சத்துவ ரஜோ தமோகுண பேதங்களான எல்லாச் சீவன்களிடத்தும் அபேதமாய் என்னை எவன் காண்கிறானோ அவன் தேகத் தோடிருந்தாலும் தேகசம்பந்தமான ஜனன மரணாதிகளைச் சயித்தவ னாவான்.

சூரியன் சுத்தமான கங்காஜலத்திலும், அசுத்தமான சாக்கடை நீரி லும், நறுமணம் பொருந்திய மலர்மேலும், துர்நாற்றமுடைய மலத்தின் மேலும் பிரகாசித்தாலும் அந்த வஸ்துக்களின் சுத்தா சுத்தங்களால் பற் றப்படாமல், தான் பரிசுத்தமாகவே பிரகாசித்துக்கொண் டிருக்கிறது. ஆகாயம் இந்த அண்டரண்ட சராசரமனைத்திற்கும் இருப்பிடமாக விருந்து கொண்டு இவற்றின் உட்புறம் எங்கணும் வியாபித்து நின்றாலும் எதிலும் நீக்கற்று இருக்கிறது. அதைப்போலவே பரமான்மா யாவற்றினும் உள் ளும்புறம்புமாய்ச் சர்வவியாபியாய் நிறைந்து நின்றாலும், எதிலும் தாக்கற் றுப் பரிசுத்தமான சச்சிதாநந்த மயமாய்ப் பிரகாசித்துக்கொண் டிருக்கி றது. அத்தகைய பிரம்மத்தைத் தன் ஆன்ம சொரூபத்தோடு அபேதமாய் எவன் காண்கிறானோ அச்சீவன் முத்தன் பிறப்பிறப்பை யொழித்தவனே யாவான். (தொடரும்)

சீடன்.

---

## மகா அலக்ஸாண்டரும் பிராம்மண சந்நியாசிகளும்.

(314-ம் பக்கத் தொடர்ச்சி.)

அவர்கள் உதயம் முதல் அஸ்தமனம் வரையில் சூரியனை இடை விடாது இமை கொட்டாமல் பார்த்தவண்ணமாய் நிற்கின்றனர்; பகலள வும் கொதிக்கின்ற சுடு மணலில், முன்னர் ஒரு காலிலும் பிறகு மற்றொரு காலிலும் நிற்கின்றனர்; குளிர்காலத்தின் நடுக்கத்தையும், காக்கஸஸ் (Caucasus) மலையின் பனியையும் சற்றும் துன்பமுறாது சகிக்கின்றனர்.

அலெக்ஸாண்டரையும் அவர் சேனையையும் அச்சந்நியாசிகள் கண்ட தும் அவர்கள் தங்கள் கால்களால் பூமியை உதைத்தனரன்றிப் பிறிதொன் றும் செய்தாரில்லை. இயற்கையாய் அலெக்ஸாண்டருக்குக் கோபமூண் டது. கற்றுச் சொல்லிகள் அவர்களிடம் சென்று அவ்வாறு செய்ததற் குக் காரணம் வினவ, அவர்கள், "ஓ, அலெக்ஸாண்டர் அரசனே! ஒவ் வொரு மானிடனும் நாங்கள் நின்றிருக்கும் இந்த அளவு மண்ணுக்கே உரிமை வகிக்கிறான். ஆனால் நீயோ எங்களைப்போன்ற மனிதனேயாயி னும் அதிக அகங்காரமும், அன்னியருக்குத் தொந்தரவு கொடுக்கும் குண மும் உடையவனாய், உனக்கும் அன்னியருக்கும் கஷ்டங்களை விளைவித்துக் கொண்டு, உலகின் பெரும்பாகத்தைக் கடந்துவந் திருக்கிறாய். இருந்த போதிலும் நீயும் சீக்கிரமிறந்து உன்னைப் புதைப்பதற்குப் போதுமான பூமிக்கு மாத்திரமே உரியவனாவாய்" என்றனர். (அர்ரியன்-Arrian.)

கீர்த்தியடைவதிலுள்ள பேராவல் மிக்க அதிகமாய் அலக்ஸாண்டரைப்பற்றிக் கொண்டிருந்தாலும் மேலான விஷயங்களை உணரும் ஞானம் அவரிடம் அடியோடில்லாமலில்லை. ஆகையால் அலக்ஸாண்டர் அவர்கள் கூறியதைக் கேட்டதும், கோபத்தால் விளையும் அனர்த்தச் செயல்களில் கையிடாமல், அவர்கள் கூறியதை மெச்சினார்; இவ்விதமாய் அவர் அன்னாருடைய கொள்கைகளை அறிய ஆவல்கொண்டார். மற்றையோர் தங்களை அழைப்பினும், இச்சந்நியாசிகள் அதற்கு இணங்காமல், அவர்களைத் தங்களிடம் வந்து, பயின்றுகொண்டோ அல்லது சம்பாஷித்துக்கொண்டோ இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறார்கள் என்பதை அலக்ஸாண்டர் அறிந்துகொண்டார். விஷயம் இப்படி இருப்பதால், அலக்ஸாண்டர், அவர்களிடம் தான் போவது தன் அந்தஸ்துக்குத் தகுதி என்று எண்ணவில்லை. அதோடு அவர்களுடைய நாட்டு வழக்கங்கட்கோ உ சைக்கோ விரோதமாய் நடக்கும்படி அவர்களை வற்புறுத்தவும் வில்லை. ஆனால் அவ்விருடிகளில் ஒருவரைத் தன்னிடம் வரச்செய்து, கூமானால், அவரைத் தன்னோடு வசிக்கச் செய்யவேண்டும் என்ற ஆ டையரானார். ஆகையால், தன் கப்பலுக்கு மாலுமியும் டயோஜெனிஸ (Diogenes) தத்துவ சாத்திரத்தின் விரக்தி மார்க்கங்களை ஆர்வத்துடன் பின்பற்றினவனும் ஆன ஒன்ஸிகிரிடாஸ் (Onesikritos) என்பவனை அவர்களிடம் அனுப்பினார். அவன் அத்தபோதனர்களில் ஒருவரான கலனூஸ் (Kalonos) (கல்யாணர் என்பதன் சிதைவு மொழிபோலும்) என்னும் சந்நியாசியைச் சந்தித்து முதலில் பேசினான். அவர் அப்போது கற்களின் மீது படுத்துக்கொண்டிருந்தார். தூதன் அவரை அணுகி விளித்து, "நான் தங்கள் ஞானமார்க்கத்தைக் கேட்டுச் சென்று அதன் சுபாவத்தை அரசர்க்கு அறிவிப்பதற்காக அவரால் அனுப்பப்பட்டு வந்தேன்" என்று அறிவித்து, ஆகையால் யாதொரு ஆக்ஷேபனையும் இல்லாதபக்ஷத்தில் தான் அவர் கூறுவதைக் கேட்கத் தயாராயிருப்பதாகக் கூறினான். கலனூஸ் என்னும் இருடி, தூதனணிந்திருந்த மேலங்கியையும் அகன்ற, தலையணியையும், நீண்ட பாதரட்சையையும் பார்த்து நகைத்துத் தன் உபதேசங்களைக் கேட்கவிரும்பின் அவ்வுடுப்புக்களைக் களைந்துவிட்டுத் தன்னுடன் நிர்வாணமாய் அதே கற்களில் படுத்துக்கொள்ளவேண்டும் என்றார். தூதன் என்ன செய்வது என்று தடுமாற்றமுற்றிருக்கையில், அங்கிருந்த எல்லாச் சந்நியாசிகளிலும், வயதிலும் ஞானத்திலும் மிக்கவரும், முண்டித சிரமுடையவருமான மாண்டனிஸ் (இவரை டாண்டமிஸ் என்று சிலர் தவறாகக் கூறுவர்) என்னும் இருடி, கற்களில் படுத்துக்கொண்டிருந்தவரை அவரது அகந்தையான நடத்தைக்கும், பிறரிடமிருப்பதற்காக அவர் குற்றங்கூறும் அதே துர்நடக்கை அவரிடமே யிருப்பதற்காகவும் அவரைக் கண்டித்தார். அவர் பிறகு தூதனைத் தம்மிடம் அழைத்து, "அலக்ஸாண்டர் அரசன் இவ்வளவு பெரிய இராஜ்ஜியத்தை ஆளுகிறான் என்றாலும், ஞானத்தையும் விரும்புவதால் நான் அவனைப் புகழ்கிறேன். ஏனெனில்

யுத்த நிபுணர்களில் ஞானத்தை விரும்புபவன் இவன் ஒருவனையே நான் கண்டேன்" என்றார். (ஸ்ட்ராபோ-Strabo)

தூதன், "பிராம்மணரின் குருவே, வந்தனம்! மகா பராக்கிரம மமைந்த ஸீயஸ் (Zeus) கடவுளின் புத்திரரும், எல்லா மானிடர்களுக்கும் ஏக சக்கிரவர்த்தியுமாகிய அலக்ஸாண்டர், உங்கள் சம்மதத்தின்மேல் உங்களைத் தம்மிடம் வரும்படிக் கேட்டுக்கொள்கிறார். அவர் தங்களுக்குப் பெரிய உயர்ந்த சன்மானங்கள் அளிப்பர். நீர் வர மறுத்தாலோ தங்களுடைய சிரசைக் கொய்துவிடுவார்" என்றான்.

மாண்டனிஸ், களிபொருந்திய புன்முறுவலிப்புடன் கூடியவராய் அவன் கழன்றனவெல்லாம் கேட்டாரெனினும், தான் படுத்துக்கொண்டிருந்த தழைகளினின்றும் சிறிதுகூடத் தலையைத் தூக்கிப்பார்க்காது, [illegible]தபடியே வெறுப்போடு பின்வருமாறு பதிலளித்தார் :—

[illegible]லக்ஸாண்டரைப்போல நானும் ஸீயஸ் கடவுளின் புத்திரன்தான். [illegible]எல்லாவற்றிற்கும் தனி இறையாய் விளங்கும் கடவுள், அகங்காரத்தாற் [illegible]ம் துர்ச்செயல்கட்குக் காரணரல்லர். அவர் வெளிச்சத்தையும், [illegible]னத்தையும், ஜீவியத்தையும், தண்ணீரையும், மானிட சரீரத்தையும், [illegible]ன்மாக்களையும், சிருஷ்டித்துத் தீய எண்ணங்கட்கு இடம் கொடாதவராய் அவைகளின் முடிவு காலங்களில், அவைகளை மீட்டும் தன்னிடம் இழுத்துக்கொள்ளுகிறார். கொலைத்தொழிலை வெறுப்பவரும் போர்புரிதற்கிடங் கொடாதவருமான அவ்வொருவரே நான் போற்றுதற்குரிய கடவுள். அலக்ஸாண்டரோ இறக்கவேண்டியவனேயாதலால் கடவுளன்று. அப்படியிருக்க டிப்ஸ்போஸ் (Tibsboas) நதியின் மறுபுறக் கரையளவும் கூடச் சென்றிராதவனும், பூலோக சிம்மாதனத்தி லமராதவனுமான இவன் எப்படி உலக முழுவதுக்கும் எஜமானுவன்? மேலும் அலக்ஸாண்டர் இன்னும் உயிரோடு பிதுர்லோகத்திற் பிரவேசித்ததுமில்லை, பூமியின் மத்திய பிரதேசத்தில் சூரியன் செல்லும் மார்க்கத்தை யறிந்ததுமில்லை. இவனுடைய பெயரைக்கூட இன்னும் அனேக தேசத்தார் கேட்டறியார்களே.

அப்படி யிருந்தாலும் நான் கூறுவதைக் கேள். அலக்ஸாண்டர் இப்போது அளிக்க இருக்கும் பரிசுகளடங்கலும் எனக்கு முற்றும் பயனற்றவை என்று அறியக்கடவை. என் வாசஸ்தலத்திற்கு ஆதாரமான இத்தழைகளும், தினம் உணவு தரத்தக்க செழிப்பான இச் செடிகளும், குடிக்கவுதவும் இத்தண்ணீருந்தான் நான் மெச்சுபவையும், உண்மையில் எனக்குப் பயனளிப்பவையுமாக விருக்கின்றன. அதிக ஆவலோடு சேர்த்துவைக்கப்பட்ட மற்றைய உடைமைகளும், வஸ்துக்களும் அவைகளைச் சேகரிப்பவனுக்குக் கஷ்டத்தையே உண்டுபண்ணும். பாவம்! ஒவ்வொரு மனிதனும், ஏற்கனவே இத்தகைய துக்கமும் மனமுறிவுமான கஷ்டத்தையுடையவனுகவே யிருக்கிறான். ஆனால் நானோ இக்காட்டில் உள்ள இலைகளின்மீது படுக்கிறேன். பாதுகாக்கவேண்டிய பொருள்கள் நீங்கப்பெற்றவனுதலால், கவலையற்றுச் சுகநித்திரைகொள்ளுகிறேன். என்னிடம் திரவியம் இருப்பின் அது என் தூக்கத்தை ஓட்டிவிடும். தாய் தன் குழந்தைக்குப் பால் ஊட்டுவதுபோன்று இம்மாநிலம் எனக்கு வேண்டுவன எல்லாம் அளிக்கின்றது. சுயேச்சைப்படி நான் எங்கு வேண்டுமாயினும் போகிறேன். என் மன விருப்பத்திற்கு மாருய் நடக்கும்படி என்னைக் கட்டாயப்படுத்தும் கவலைகள் என்னிடமில்லை.

மாண்டனிஸ் சற்று வாளாவிருந்து மீட்டும் கூறுகிறார் :—

அலக்ஸாண்டர் என் சிரசைக் கொய்வானாயினும் என் ஆன்மாவையும் சேர்த்து அழிக்க அவனால் முடியாது. என் தலைமாத்திரம் அப்போது பேசாமற் கிடக்கும். கிழிந்த உடையை வீசி யெறிவதுபோல் என் ஆன்மா இச் சரீரத்தைத் தன் ஜென்ம க்ஷேத்திரமாகிய இப்பூமியிலேயே தள்ளிவிட்டுத் தன்னுடைய கர்த்தாவிட மேகும். பிறகு, நான் என்னை இச்சரீரத்தில் தங்கவைத்து இவ்வுலகில் விட்ட என் கடவுளண்டை சூட்சுமரூபமாய்ப் போய்ச் சேர்வேன். அவர் இவ்வாறு செய்வது தாம் இயற்றியருளிய விதிகட்கேற்ப நாம் இவ்வுலகிலிருக்கையில் ஒழுங்காக நடக்கிறோமா என்பதை யறியும்பொருட்டே. ஆதலால் நாம் இங்கிருந்து அவர் சமுகத்தில் செல்லும்போது, நம் ஜீவிய சரித்திரங்களைக் கேட்டு நீதி வழங்கும் ஒரு நியாயாதிபதியாய் அவர் விளங்குகிறார். ஏனெனில் துன்பத்திற்காளானவர்களின் அழுகுரல் துன்பப்படுத்தியவரைத் தண்டிக்குமன்றே

அவ்விருடி மேலும் கூறுகிறார் :— உ (பகுதி

பொன்னையும் செல்வங்களையும் விரும்புவோரையும், மரணத்தி பயப்படுவோரையுமே அலக்ஸாண்டர் இவ்விதம் பயங்காட்ட 10 பிராம்மணருக்குப் பொன்னிலாசையாவது மரணத்திற்கு ப இல்லை. ஆதலால் இந்த மிரட்டுக்களாகிய ஆயுதங்கள் எங்க சக்தியற்று அடங்கும். நீ சென்று அலக்ஸாண்டருக்கு இதைத் தெரிவி:— உங்களுக்குச் சொந்தமாய் உள்ள எந்த வஸ்துவும் மாண்டனிஸுக்குத் தேவையில்லை. ஆதலால் அவன் உம்மிடம் வரமாட்டான். அலக்ஸாண்டருக்கு ஏதாவது மாண்டனிஸிடமிருந்து வேண்டுமெனின், அலக்ஸாண்டர் அவனிடம் வரவேண்டும். (பிராக்மெண்ட்-Fragment 55.)

பிறகு மாண்டனிஸ் தூதனைப்பார்த்து, “கிரேக்கர்களிடம் இவ்விதக் கொள்கைகள் இருக்கின்றனவா?” என்றார். தூதன், “பிதாகொராஸ் (Pythagoras) இதுபோன்ற கொள்கைகளைக் கற்பித்துத் தன் சீடர்களைப் புலாலுண்ணுதலினின்றும் விலக்கினார். சாக்ரெடிஸ், டயாகினிஸ் (Socrates, Diogenes) இவர்களின் போதனைகளை நான் கேட்டிருக்கிறேன்; அவர்களும் இதுபோன்றவையே உபதேசித்தனர்” என்றான்.

மாண்டனிஸ் பின்னும் சொல்கிறார், “அவர்களின் போதனைகள் நல்லவை என்றே நான் எண்ணுகிறேன். ஆயின் ஓர் விஷயத்தில் தவறினர். இயற்கை சுபாவத்தைக் காட்டிலும் வழக்கத்தையே மேலாகக் கொண்டாடினர். அதனால்தான் அவர்கள் நிர்வாணமாய் நடக்க வெட்கப்பட்டவர்களாயும், மிகவும் குறைந்த வுணவைப் புசியாதவர்களாயும் இருந்தனர்.” (ஸ்ட்ராபோ-Strabo.)

இவ்விருத்தாந்தத்தை அலக்ஸாண்டர் கேட்டதும், மாண்டனிஸை மெச்சி அவரைத் தம் பிரியப்படி நடக்க விட்டுவிட்டார். எனினும் அவரைக் காணவேண்டும் என்னும் அவா முன்னிலும் அதிகரித்தது. வயது சென்றவரும் நிர்வாண ஸ்வரூபத்தோடு கூடியவருமான அச்சன்னியாசி ஒருவரிடம்தான், பல தேசங்களையும் ஜயித்த அலக்ஸாண்டர், தன்னிலும் உயர்வான ஒருவரைக் கண்டார். அவ்வரசர், “நான் வந்தேன், பார்த்தேன், ஜெயித்தேன்” என்று சொல்வதைவிட, “நான் வந்தேன், பார்த்தேன், சரீர சம்பந்தமான யுத்தத்தில் வெற்றிபெற்ற ஒரு நிர்வாண சந்நியாசியால் ஜெயிக்கப்பட்டேன்” என்று கூறியிருக்கலாம்.

இந்த விஷயத்தை முடிக்கும் தறுவாயில் பாரஸீகக் கவியாகிய பர்டாவிஸி (Fordausi) யால் கூறப்பட்டதும், அபுல் பாஸல் (Abul Fazl) என்ற வித்வான் எய்னி அக்பரி (Aini-Akbari) என்னும் நூலில் அலக்ஸாண்டரைப்பற்றிக் கூறும் சந்தர்ப்பத்தில் மேற்கோள் காட்டியதும் ஆகிய பின்வரும் வரிகளைக் கூற விரும்புகிறேன். அவர் அந்நூலில் கூறுகிறார்:—
"அலக்ஸாண்டர் பிராம்மணரின் நாட்டிற்குத் திரும்பினார். அவர்களில் தலைமைவகித்தவர், 'செல்வத்தையும் உலகப் பொருள்களையும் தேடிய அரசனுக்குத் தங்களிடம் அவைகளில் ஒன்றும் அகப்படா' என்று தெரிவித்தார்.

* ஞானமு மறிவும் நீங்காது தங்கி
ஆனந் தத்தை அளிக்கும் கண்டீர்!
நிலவுல கணையாய் நீட்கங் கூரையாய்
செலவுள இடத்திற் சிந்தையைத் தூண்டுமே.

(...நீள்கம்=நீள்கம்—நீண்ட ஆகாயம்)

---

## தபால் கொள்ளைக்காரர்கள்

(318-ம் பக்கத் தொடர்ச்சி)

செட்டி :—அப்படிப்பட்ட அவசரத்தில் உங்களில் ஒருவர் பத்திரங்களையெடுத்துக்கொண்டு நேரில் வந்திருந்தால் கலந்து பேசித் தோராயமாய் இவ்வளவு பணம் வேண்டுமென்றறிந்துகொண்டு கையில் கொண்டுவந்திருக்கலாம். நான் எவ்வளவு பணம் வேண்டுமென்று உத்தேசிப்பது? மேலும் இவ்வூரில் தனியே பெருந்தொகையை யென்போன்ற கிழவன் எப்படி எடுத்துவருவது. இப்போதும் ஒன்றும் கெட்டுப்போகவில்லை. ஐந்நூறுக்கு ஒரு உண்டி (செக்) கொடுக்கிறேன். பணம் பெற்றுக்கொண்டு போங்கள். மீதிப் பணத்தை யெவ்விடத்திற்கு அனுப்பச் சொல்லுகிறீர்களோ அங்கு அனுப்பிவிடுகிறேன்" என்றான்.

கள்ளர்களுக்கு அந்த ஏற்பாடு சம்மதியில்லை. இருவரும் சற்றுநேரம் சிந்தித்தபின், "அப்படி வேண்டாம். இன்னும் அரைமணி நேரத்திற்குள் நவீனபுரிக்கு ஒரு வண்டி செல்கிறது. அதில் போய் நாளை யிரவு 9 மணிக்கு இங்கு வரும் மெயில் வண்டியில் பணத்தோடு வந்து அவசியம் சேரவேண்டும். நாங்கள் பிரயாணத்திற்குச் சர்வாயத்தமாய் ஸ்டேஷனில் உன்னைச் சந்தித்துப் பணத்தை வாங்கிக்கொண்டு அதே வண்டியில் ஏறிவிடுவோம்" என்றார்கள்.

செட்டி சற்றுநேரம் சிந்தித்துப் பிறகு "சரி அப்படியே யாகட்டும். உங்களுக்கு இடையிலிருக்கும் காலம் பிரயாணத்திற்கு ஆயத்தம் செய்யப் போதுமல்லவா?" என்றான்.

சாமிநாதன் தன் நண்பனை நோக்கி "என் அதற்குள் நமது ஏற்பாடுகளை யெல்லாம் முடித்துக்கொள்ளலா மல்லவா? இப்போதே புறப்பட்டு

---

* ஞானமும் அறிவும் நம்மோடு இருந்து ஆனந்தத்தை (நமக்குத்) தரும். உலகமே படுக்கும் அணையாகவும், நீண்ட ஆகாயம் கூரையாகவும் (இருந்துகொண்டு) அடையவேண்டிய மோட்சத்தினிடத்து (நம்) சிந்தையைத் தூண்டும்.

வெள்ளைக் குடிசைக்குச் சென்று அந்த வேலையை யுடனே முடித்துக் கொள்வோம்......" என்பதற்குள்,

செட்டி அவன் கடைசியில் கூறிய மொழிகளைக் கேட்காதவன்போல் "எங்காவது போங்கள், எதாவது செய்துகொள்ளுங்கள். அவற்றையெல்லாம் நான் கேட்கவில்லை. நாளை யிரவு சரியாய் வண்டிவரும் வேளைக்கு ஆயத்தமாய் ஸ்டேஷனில் இருக்கவேண்டும். அவ்வளவே எனக்கு வேண்டியது" என்றான்.

இரங்கநாதன் உடனே செட்டியை வண்டியில் ஏற்றிக்கொண்டு ஸ்டேஷனுக்குச் சென்று நவீனபுரிக்கு ஒரு பிரயாணச்சீட்டு வாங்கியளித்து இரயில் வந்தவுடனே அதில் ஏற்றித் தவறாமல் வேளைக்கு வந்து சேரும்படி கூறிவிட்டுச் சென்றான்.

செட்டியாரோ பிரயாணச் சீட்டிற்குக் கொடுத்த பணம் வீணாயிற்றே யென்று கூடக் கருதாமல் அடுத்த ஸ்டேஷனிலேயே அவசர இறங்கிப் பிரயாணிகள் தங்கும் ஒரு அறைக்குள் சென்று க கொண்டார். அச்சமயம் ஒருவன் பார்த்திருந்து பிறகு கால்மணிநே கழித்தபின் மறுபடி ஆள் வெளியில் வருவதைக் கண்டிருந்தால் அ குண்டாகும் வியப்பு கொஞ்சமா யிருந்திராது. ஏனெனில் செட்டி மாயமாய் மறைந்துபோய் நமது ஆனந்தசிங் வெளியில் வந்தான்.

## 17-வது அத்தியாயம்.

நமது கோமளவல்லி அருஞ்சிறையிலிருக்கிறாள். அவள் மனம் பீதியடைந்துவிட்டது. ஏனெனில் இதுகாறும் ஒருவரும் தைரியம் கூறுபவரு மில்லை.

அத்துஷ்டர்கள் அவளை யங்கு சிறைவைத்தபின் ஒருதரமே யவளைக் கண்டார்கள். அந்த வெள்ளைக் குடிசை ஹரியாற்றின் கரையில் (ஆனந்தஸிங் கருதியதுபோலவே) ஒரு மேடான விடத்திலிருந்தது. அவள் அறை ஆற்றோரத்தின் பக்கமாயிருந்தது. அதின் சாளரத்திலிருந்து பார்த்தால் நேரே செங்குத்தாய் நூறு அடிகளுக்குக் கீழ் ஆற்று ஜலம் ஓடுகிறது. அதைக் கண்டதே அக்கன்னிகை தப்பித்துக்கொண்டு போக முயற்சி செய்யலாம் என்ற எண்ணத்தை யடியோடு விட்டுவிட்டாள்.

இங்கு அவளுக்குக் காவலாயிருக்கும் மாது முன் சாமிநாதன் வீட்டிலிருந்தவளைப்போல் இரக்கமுடையவளல்ல. அவள் மனம் முறிந்துபோக வேறென்னவேண்டும். இவ்வாறிருக்க ஒருவாரம் கழித்துச் சாமிநாதன் திடீலென்று அவள் அறைக்கு வந்தான். அவன் அவளைப் பயங்கரமான பார்வையாய்ப் பார்த்து,

"கோமளவல்லி! நான் முடிவாய் ஒரு விஷயத்தைப்பற்றிக் கேட்க வந்தேன். இதுவரையில் நீ யென் காதலை அலட்சியம் செய்துவந்தாய். நான் உண்மையாகவே யுன்மேல் மனப்பூர்வமான காதல் கொண்டிருக்கிறேன். நீயோ ஒரு ஆதரவுமில்லாத அனாதையாயிருக்கிறாய். உனக்கு உதவி அவசியம் வேண்டியது......" என்றபோது,

கோமளவல்லி:—"இரு இரு அவசரப்படாதே. எனக்கு யாரும் ஆதரணை யில்லைதான். ஆனால் ஆண்டவன் எனக்கு இரண்டு கரங்களையு மளித் திருக்கிறார். அவை யிருக்குமட்டும் நான் கஷ்டப்பட்டு ஜீவனம் செய்துகொள்வேன்" என்றாள்.

சாமிநாதன் :—"இரு இரு. நான் சொல்வதைக் கேள். என்னை மணம் புரிந்துகொண்டால் நான் உன் பிரியமனைத்தும் பூர்த்திசெய்வேன். நீ கஷ்டமின்றி யொரு சீமாட்டியைப்போல் வசிக்கலாம். இன் னும்........." என்பதற்குள்,

கோமளவல்லி :—"பொறு பொறு, போதும் போதும்; வீணாய் இன்னும் ஒரு வார்த்தைகூடப் பேசவேண்டாம். நான் ஒரே வார்த்தையில் முடித்துவிடுகிறேன். அதாவது உன்னை நான் மணம்புரிவதைவிடப் பிராணத்தியாகம் செய்துகொள்வேன்" என்றாள்.

சாமிநாதன் தன் கோபத்தை யடக்கிக்கொண்டு புன்னகையோடு, "அப்படித் தற்கொலை புரிந்துகொள்வாயாயின் சரிதான் உன் பிரியம். அப் படியாகாதவரையில் நான் உன்னை மணம்புரியாமல் விடுவதில்லை. நீ யிது வரையில் கொண்டிருந்த பிடிவாதத்தை விட்டுவிடு. நாளை யிரவு நமது கலியாணம் முடிந்து நாம் உடனே அன்னிய நாட்டிற்குச் செல்வோம். நீ சர்வாயத்தமா யிருக்கவேண்டும்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

அவன் சென்றதே கோமளவல்லி மிக்க திகிலடைந்து கடவுளே கதி யென்று பிரார்த்தித்துக்கொண் டிருந்தாள். இரவு அதிக இருள் சூழ்ந் திருந்தது. அச்சமயம் ஏதோ ஒருவித சத்தம் கேட்டதும் உடனே அவள் மனதில் ஒருவித உற்சாகமும் சந்தோஷமும் உண்டாயின. கூடவே பயமும் திகிலு முண்டாய்விட்டன. நிதானித்துப் பார்த்தாள். சாளரத் திலிருந்து "பயப்படவேண்டாம்; நான் சிநேகிதன்" என்று ஒரு சத்தம் மெதுவாய்க் கேட்டது.

உடனே அவளுடைய பயம் திகில் யாவும் போய்விட்டன. அதற்குள் ஒரு ஆள் அச் சாளரத்தின் வழியாய் அறைக்குள் வந்தான். சிநேகன் என்றதே அவன் அம்பலவாணனோ வென்று சந்தேகித்தாள். ஆனால் உற் றுப் பார்த்தபோது தபாலிலாகாத் துப்பறிபவன் என்று தெரிந்தது.

ஆனந்தஸிங் அவளை நோக்கி "குழந்தாய்! ஒன்றுக்கும் நீ அஞ்சவேண் டாம். நாளையிரவு பொழுது விடிவதற்குள் நான் உன்னை யடியோடு அத் துஷ்டர்கள் கையிலிருந்து விடுவித்து விடுவதோடு அத்துஷ்டர்களையும் சிறைப்படுத்திவிடுவேன்" என்றான். பிறகு இருவரும் அரைமணி நேரம் சம்பாஷித்துக்கொண்டிருந்தார்கள். அதன்பின் ஆனந்தஸிங் தான் எப் படிச் சாளரத்தின் வழி யேறிவந்தானோ அவ்வழியே யிறங்கிச் சென்றான்.

* * * * * *

கள்ளர்களுடைய ஏற்பாட்டிற்கு ஒரு இடையூறும் நேரவில்லை. ஆகையால் அவர்கள் நிம்மதியாய்த் தங்கள் தங்கள் ஏற்பாட்டின்படி நடக்

கத் தொடங்கினார்கள். அதாவது இதுகாறும் தபால் வண்டியிற் கொள்ளையடித்த பொருளைப் பங்கிட்டுக்கொள்ள வேண்டும். அதாவது ஜக்கனையும் அவன் நண்பர்களையும் மறுநாளிரவு எட்டு மணிக்குள் சாமிநாதன் மாளிகைக்கு வரும்படி சமாசார மனுப்பியிருந்தார்கள். சாமிநாதன் கோமளவல்லியை முன்னாடியே தன் வீட்டில் கொண்டுபோய் மிக்க பந்தோபஸ்தில் வைத்துக்கொண்டான். முன் வந்திருந்த அதே குருவை யன்று வரும்படி திட்டமாய் ஏற்பாடு செய்துவிட்டிருந்தான். அன்று இரவு யாவும் முடித்துக்கொண்டு பதினொரு மணிக்கு வரும் வண்டியிலேறிச் செல்வதென்பது அவர்கள் தீர்மானம். இரங்காநாதன் துறைமுகத்திலிருந்து மறுநாட் காலை செல்லும் புகைக்கப்பலில் தூரதேசம் செல்லப் பிராயாணச் சீட்டும் வாங்கிவிட்டான். (தொடரும்)

ஆரணி. குப்புசாமி முதலியார்.

---

## பொது சமாச்சாரம்

### பாம்புக்கடி விஷத்தால் பரிகாரம். கூ (பகுதி 10

சீயத்தின் ஆராய்ச்சி:—பாம்புக்கடியைத் தீர்க்கும் பரிகாரங்களை காலா காலமாய் ஜனங்கள் தேடினார்கள். இலேசாக நம்பிவிடும் ... கள் எவ்வளவோ சூது வாதுகள் செய்யப்பட் டிருக்கிறார்கள். ... விஷத்துக்குச் சிறந்த பரிகாரம் பாம்பின் விஷமேயென்று இப்பெ மேதாவிகள் அறியலானார்கள். தற்காலம் இந்தப் பரிகாரம் ஓர் அவசியமுடையதாயிருக்கின்றது. ஏதோ அசந்தர்ப்பத்தால் ஒருவனைத் திடீரென்று நல்லபாம்போ விரியன் பாம்போ தீண்டிவிட்டால் அவனுக்குச் செய்ய வேண்டிய சிறந்த பரிகாரமென்னவென்றால் அவனை எந்தப் பாம்பு தீண்டியதோ அதன் விஷத்தையோ நிண நீரையோ அவனுக்கு ஏற்றுவதேயாகும். ஒருவனை ஒரு பாம்பு கடித்திருக்க நாம் மற்றொரு பாம்பின் விஷத்தைக்கொண்டு அவனுக்குப் பரிகாரம் செய்யமுடியாது. ஒருவனைத் தீண்டிய பாம்பு இன்னவகைப் பாம்பென்று தெரிந்துகொள்வது அவசியம். அவனைக் கடித்த பாம்பின் நிண நீர் (serum) உடனே கிடைக்காவிட்டால் அவனுக்கு வேறெந்தவிதமான பரிகாரமுஞ் செய்யமுடியாது. ஜில்லா வைத்திய உத்தியோகஸ்தரிடம் பரிகாரம் பெறச்செல்லும் அநேக சுதேசிகளுக்குத் தங்களைக் கடித்த பாம்பு இன்னவகையைச் சேர்ந்ததென்று தெரியாமலிருக்கின்றது. பாம்புக்கடியால் இந்தியாவில் அதிகமானவர் மாண்டுபோகிறார்கள். இதைத் தடுக்கவேண்டுமானால் எந்தவகைப் பாம்பு தீண்டினாலும் அதன் விஷத்தை மாற்றக்கூடிய ஒரு பரிகாரத்தைக் கண்டுபிடிப்பது மிகவும் அவசியமாகும். பிரேஸ்ல் வாசியும் செரோதிராபிக் கூட்டத்தின் தலைவருமாகிய (Serotherapic Institute) டாக்டர் வைடல் எந்தவிதமான பாம்பு தீண்டினாலும் அதற்கெல்லாம் பரிகாரமாயிருக்கும்படி ஒரு நிண நீரைக் கண்டுபிடித்திருக்கிறாரென்று வெளியிடப்பட்டிருக்கிறது. இதைக்கண்டு இதைப்போன்ற ஒரு கூட்டத்தை இந்தியாவில் ஏற்படுத்த வேண்டுமென்ற உத்தேசத்தை ஆதரிக்கும்படி இந்தியா கவர்ன்மெண்டைத் தூண்டியது. இந்தியாவிலிருக்கும் நச்சுப் பாம்புகளின் கடிக்குப் பரிகாரமாகக்கூடிய ஒரு நிண நீரைக் கண்டுபிடிப்பது சாத்தியமானதென்று இந்திய வைத்தியர் அபிப்பிராயப்படுகிறார்கள். பாங்காக்கிலுள்ள பாஸ்டர்கூடம் சயாம்தேசத்திற்கு இதே விஷயமாக ஆராய்ச்சி செய்யும் வேலையை ஏற்படுத்துவதாகவும் சயாம் தேசத்துப் பாம்புகளிலிருந்து நிண நீரைத் தயார் செய்வதாகவும் நம்புகின்றது. (தமிழகம்.)

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

உருத்ரோத்காரிஞு சித்திரைமீ-கலி 5025—சாலிவாகனம் 1846
பசலி 1332—கோல்லம் 1098-99—ஹிஜரி 1341
இங்கிலீஷ் 1923ஞு ஏப்ரல்மீ—மேமீ

| சித்திரை | ஏப்ரல்மீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வெ | திர60 | பூரட்-45-55 | சித்-60 | வருஷப்பிறப்பு, விஷு புண்யகாலம் |
| 2 | 14 | சனி | திர1-55 | உத்-53-53 | சி53-53ம | மாத சிவராத்திரி |
| 3 | 15 | ஞா | ச[illegible]8-25 | ரேவ-60 | அமி60 | சர்வத்திர அமாவாசை, |
| [illegible] | [illegible] | திங் | அ14-58 | ரேவ-1-45 | சித்-60 | [திருதினஸ்பிருக் |
| [illegible] | [illegible] | செ | பிர21-18 | அசு-9-20 | சித்-60 | வைசாகசுத்தம், சந்திர தரிசனம் உற்றுப்பார்க்க |
| [illegible] | 18 | புத | துதி27-18 | பர16-40 | சி16-40அ | கிருத்திகை |
| [illegible] | 19 | வியா | திரி32-25 | கிரு-23-20 | மர-60 | அக்ஷயத்திரிதிகை |
| [illegible] | [illegible] | வெ | சது36-50 | ரோ-29-18 | ம29-18சி | மாசசதுர்த்தி விரதம் |
| [illegible] | 21 | சனி | பஞ்40-3 | மிரு-34-10 | சித்-60 | ரிஷபாயனம் நா-6-38 |
| 10 | 22 | ஞா | சஷ்42-3 | திரு-37-53 | சித்-60 | சஷ்டி, பிரயாணம் விலக |
| 11 | 23 | திங் | சப்42-30 | புன-40 3 | ம40-3சித் | சங்கோற்பத்தி |
| 12 | 24 | செ | அஷ்41-20 | பூச40-40 | சித்60 | பிரயாணம் விலக்கல் |
| 13 | 25 | புத | நவ38-23 | ஆயி-39-35 | சித்60 | பிரயாணம் விலக்கல் |
| 14 | 26 | வியா | தச3[illegible]-55 | மக-36-45 | அ36-45சி | மங்கிலியஞ் செய்ய |
| 15 | 27 | வெ | ஏகா27-48 | பூர 32-23 | சித-60 | மத்வ, சர்வ, ஏகாதசி |
| 16 | 28 | சனி | துவா20-8 | உத்-26-43 | மர-60 | சனிப்பிரதோஷம் |
| 17 | 29 | ஞா | திர11-35 | அஸ்-20-0 | அ20-0சித் | நரசிம்ம ஜயந்தி |
| 18 | 30 | திங் | சது2-20 ○ 52-5[illegible] | சித்-12-45 | பி12-45அ | அர்த்தநாரீசுவர விரதம், சித்ராபௌர்ணமி |
| 19 | 1 | செவ் | பிர 43-53 | சுவா-5-18 விசா-53-0 | சி5-13மர | வைகாசபகுளம், அவமாகம் [செய்ய |
| 20 | 2 | புத | து34 43 | அனு 51-35 | சித்-60 | பும்சவனம் நிஷேகஞ் |
| 21 | 3 | வியா | திரி27-5 | கேட்-46-28 | பி46-28சி | பார்த்தீப கல்பாதி |
| 22 | 4 | வெ | சது21-3 | மூல-42-45 | அ42-45பி | கத்திரி ஆரம்பம் |
| 23 | 5 | சனி | பஞ்16 45 | பூரா-41-8 | சித்-60 | |
| 24 | 6 | ஞா | சஷ்14 33 | உத்-41-35 | அமி-60 | |
| 25 | 7 | திங் | சப்14 25 | திரு14-10 | அ41-10சி | |
| 26 | 8 | செவ் | அ16-28 | அவி48-38 | சி48-38ம | |
| 27 | 9 | புத | நவ20-8 | சதை54-35 | சி54-35அ | |
| 28 | 10 | வியா | தச25-15 | பூரட்60 | சித்-60 | |
| 29 | 11 | வெ | ஏ31-30 | பூரட்-1-53 | சித் 60 | |
| 30 | 12 | சனி | து37-58 | உத்-9-35 | சி9-35மர | |
| 31 | 13 | ஞா | திர44-25 | ரேவ-17-28 | அ17-28சி | |

1923ஞு மேமீ

| | | | |
|---|---|---|---|
| | சூரி புத | செ | |
| சே சுக் | 8உ மீன-சுக் | | |
| | 14உ ரிஷ-பு | | ராகு |
| | | குரு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE "ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.

௳

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.




| | | |
|---|---|---|
| தொகுதி 8 | உருத்ரோத்காரிஹூ சித்திரைமீ கஉ<br>1923ஹூ ஏப்ரல்மீ 13உ | பகுதி 10 |


## கடவுள் வணக்கம்.

கந்துக மதக்கரியை வசமா நடத்தலாங்
கரடிவெம் புலிவா யையுங்
கட்டலா மொருசிங்க முதுகின்மேற் கொள்ளலாங்
கட்செவி யெடுத்தாட் டலாம்
வெந்தழலி னிரதம்வைத் தைந்துலோ கத்தையும்
வேதித்து விற்றுண் ணலாம்
வேறொருவர் காணும லுலகத் துலாவலாம்
விண்ணவரை யேவல் கொளலாம்
சந்ததமு மிளமையோ டிருக்கலா மற்றொரு
சரீரத்தி னும்புகுத லாம்
சலமே னடக்கலாம் கனன்மே லிருக்கலாந்
தன்னிகரில் சித்திபெற லாம்
சிந்தையை யடக்கியே சும்மா விருக்கின்ற
திறமரிது சத்தா கியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவான தெய்வமே
தேசோ மயானந் தமே. (1)

ஏதுக் திருவருளி னிச்சையா மென்றென்றெப்
போதும் பொருந்தும் புனிதர்பாற்—றீதுநெறி
செல்லுமோ செல்லாதே செல்லுமிட மின்பமலாற்
சொல்லுமோ வேதத் தொனி. (2)

அப்பொருளு மான்மாவு மாரணநூல் சொன்னபடி
தப்பில்லாச் சித்தொன்றுஞ் சாதியினு—லெப்படியுந்
தேரிற் றுவிதஞ் சிவாகமமே சொல்லுகிட்டை
யாருமிடத் தத்துவித மாம். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. கந்து உக மதக்கரி=கட்டுத்தறியினை முறியச்செயயும் மதயானை.

இரதம்=பாதரசம்.

ஐந்துலோகம்=பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆகிய பஞ்ச லோகங்கள்.

வேதித்து=பரிசவேதிசெய்து (பொன்னாக்கி)

“வேறொருவர் காணும லுலகத்துலாவல்” என்பது-குளிகை, மை முதலியவற்ருல் தன் உருவம் பிறர் கண்களுக்குப் புலப்படாவண்ணம் செய்துகொள்வது.

“மற்றொரு சரீரத்தினும் புகுதல்” என்பது-ஒரு தேகத்தை விட்டு வேறொரு தேகத்தில் நுழைதல்-இதற்குப் ‘பரகாயப்பிரவேசம்’ என்று பெயர்.

சிந்தையை யடக்கி=மனச்சலனத்தை யொழித்து.

“சும்மாவிருக்கின்ற திறம் அரிது”—இங்கு ‘சும்மா விருத்தல்’ என்ருல், தற்செயலற்றுப் பூரண மௌனம் பொருந்தி யிருத்தல் என்பது பொருள்.

சித்திமுத்திகளாகிய இரண்டுபேறுகளில் முன்னே கூறப்பட்ட மத யானையை வசப்படுத்தல், கரடி புலி முதலிய துஷ்ட மிருகங்களையும் அடக்கியாளல், இரசவேதி செய்தல், உரு மறைந்திருத்தல், பரகாயப்பிரவேசம் முதலிய யாவும் அட்டமாசித்திகளிலடங்கும். ஆனல் இவை மோக்ஷத்தையளிக்கா. முத்திநெறிக்கு அவசியமான ஞானத்தை யளிக்கும் சாதனம் மனேலயமேயாகும்.

“அட்டமாசித்திகளும் அனைத்துள்ள பேறுகளும்-கட்டமாங்கதிகள் தரும் பரகதி காணக்கொடா” என்று பரமசிவம் ‘தேவிகாலோத்தரம்’ என்ற நூலில் கூறியிருக்கிருர். சித்திகளில் ஒன்றிரண்டு கைவந்தோரைக் கண்டால் உலகோரில் பெரும்பாலர் மயங்கிப்போய் அத்தகையோரை மகான்களென்று மதித்து மோசம் போகிருர்கள். உண்மை ஞானி சித்திகளை யிச்சியான். சித்திகளைக்காட்டி அவற்ருல் உலகோர் தன்னை மதிக்கும்படி கருதமாட்டான். மனேலயமே ஞானமடைய இன்றியமையாத சாதனம். மனதை யடக்கித் தன் வயப்படுத்தலே மிக்க கஷ்ட சாத்தியமான காரியம். ஆதலின், சித்திகளை யெல்லாமடைவதைவிட மனேலயம் வாய்க்கப் பெறுதலே சிறந்ததாம் என்பது கருத்து.

2. ஏதும் திருவருளின் இச்சையாம்=எல்லாம் பகவானுடைய சங்கற்பமேயாகும்.

எப்போதும் பொருந்தும் புனிதர்பால்=எக்காலமும் அமைதியோடிருக்கின்ற, அதாவது தற்செயலற்று இருக்கின்ற பரிசுத்த உள்ளமுடையோர்களிடத்தில்.

தீதுநெறி செல்லுமோ=கெட்ட மார்க்கங்கள் சேருமோ—சேரா என்றபடி.

செல்லுமிடம் இன்பம்=அவர்கள் அடைதற்குரிய இடமானது ஆனந்தமேயாகும்.

அலால்=அப்படிக்கின்றி.

வேதத்தொனி சொல்லுமோ=வேறென்றுண்டென்று வேதங் கூறுமோ—கூருதென்றபடி.

[எல்லாம் பகவான் செயல்தான், நாம் எது செய்தாலும் பகவான்ருன் தூண்டுகிருர் என்று கூறிக்கொண்டு தன் மனம்போனபடி நடப்பதல்ல. உண்மையில் எல்லாம் சிவச்செயல் என்று நடப்பவன் தற்செயலற்றிருக்கவேண்டும். தனக்கு வரும் சுகதுக்கம் நன்மை தீமை யாவும் பிராரப்தத்தின்படி சிவன்செயலே யாகுமென்று பொறுமையோடு சகித்துக்கொண்டிருப்பான். அவனிடத்து இச்சை யிராதாதலால் அவன் கர்மங்களனைத்தும் நிஷ்காம கர்மங்கள். அதனுல் துர்க்கிருத்தியங்கள் முதலிய பாபச்செயல்கள் அவனிடம் நிகழா. எப்போது அகங்காரமற்றிருக்கிருனே அவன் ஆனந்தமயமாகவே யிருப்பன்.]

3. அப்பொருள்=பரமான்மா.

ஆரணநூல்=வேதம்.

நிட்டை ஆருமிடத்து=நிட்டை பூரணமடையும்போது.

கருத்து—அஞ்ஞானதசையில் துவைதம் என்று சிவாகமங் கூறும் நிஷ்டை ஆரூடதசையில் பூரணமடையும்போது அத்துவிதமாகும்.

தாயுமானவரே "ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை யுண்டுபணு ஞானமாகும்" என்றருளினர்.

அத்துவிதம் (இரண்டல்ல) என்றது—ஒன்று இரண்டு என வரையறுத்துக் கூறெணு நிலே.

"ஆங்கென்று மீங்கென்று முண்டோ—சச்சி
தானந்தசோதி யகண்ட வடிவாய்,
ஓங்கி நிறைந்தது கண்டாற்—பின்ன
ரொன்றென் றிரண்டென் றுரைத்திடலாமோ—
சங்கர சங்கர சம்போ"

என்று இம்மகானே கூறியருளியது ஈண்டு சிந்திக்கத் தக்கது.

ஒன்று எனின் முத்தியடைபவன் இல்லே. இரண்டு எனின் ஐக்கியம் கூடவில்லே. மேலும் அன்னியமாக ஒன்றிருக்கும் வரை பிறவியுண்டாகும். ஆதலின் 'ஒன்றிரண்டெனுச்சமரசநிலே' என்றனர் இச்சுவாமிகளே. இந்த நிலே அனுபவித்தறியவேண்டிய நிலே. சொல்லொணுதது நினேக்கவொண்ணுதது ஆதலின் இந்த நிலேயை 'எவர்க்கார் சொல்வர்? அதுவாஞல் அதுவாவர் அதுவே சொல்லும்' என்று இம்மகான் 'சிதம்பர இரகசியம்' 22-வது பாசுரத்தில் கூறியருளினர்.

# ஆனந்தபோதினி

உருத்ரோத்காரிஹூ சித்திரைமீ கஉ

## தேசாபிமானம்.

மனித சமூகத்தில் தேசாபிமானம், பாஷாபிமானம், மதாபிமானம், ஜாதியபிமானம் எனப் பலவிதமுண்டு. இவற்றில் பாஷை, மதம், ஜாதி முதலிய அபிமானங்கள் அந்தந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் வரையில் மட்டுமே யிருக்கும். தேசாபிமானமோ ஒரு தேசத்திலுள்ள எல்லா ஜாதியாருக்கும், எல்லா மதத்தினருக்கும், எப்பாஷை பேசுகிறவர்களாயினும் யாவர்க்குமே தங்கள் தாய் நாடாகிய அத்தேசத்தின்மேல் இருக்கவேண்டிய அபிமானம் அல்லது அன்பாகும். தாய்நாடு முன்னேற்றமடைந்து க்ஷேமமான நிலைமையிலிருக்கவேண்டும் என்பதில் கருத்து வைத்திருப்பதே தேசாபிமானம் என்பதாம்.

மனதில் வேரூன்றி யிருக்கும் தேசாபிமானம் செய்கையளவில் வெளிப்பட்டாலன்றி ஒரு பயனுமில்லை. உண்மையான தேசாபிமானம் செய்கையில் வெளிவராமலிராது. தேசாபிமானமுடைய ஒருவன் தன் சக்திக்கு இயன்றவரையில் தன் தாய்நாட்டின் முன்னேற்றத்திற்காக ஒரு காரியத்தையேனும் செய்யாமலிருக்கமாட்டான். ஒருவனுக்குத் தன் புத்திரன்மேல் அன்பிருக்கிறது. அது மனதில்மட்டுமா விருக்கிறது? தன் புத்திரன் க்ஷேமமாய் வாழ்வதற்கு வேண்டிய காரியங்களை யெல்லாம் சிரத்தையோடு அவன் செய்கிறானன்றோ. அவ்வாறே தன் தாய் நாட்டின் விஷயத்தில் நடந்துகொள்வதுதான் தேசாபிமானம்.

தேசக்ஷேமத்திற்காக வேலை செய்பவன் சுயநலங் கருதலாகாது. கௌரவம், அந்தஸ்து, கௌரதா-பட்டம், செல்வம் முதலியவற்றைக் கோருகிறவன் பொதுநலத்தொண்டு செய்ய அருகனாகமாட்டான். இதுமட்டுமல்ல, தன் தாய்நாட்டின் க்ஷேமத்திற்

காக உழைப்பவன் தன்னுலியன்றவரையில் எதையும் தியாகம் செய்யக்கூடிய உள்ளமுடையவனுக விருக்கவேண்டும். அத்தகை யோனே உத்தம தேசபக்தன் எனப்படுவான். தேசாபிமானம் என்ற விஷயத்தில் நமக்குள் இருக்கும் ஜாதிமதம் முதலிய வித்தி யாசங்களைச் சற்றும் கவனிக்கலாகாது. ஒவ்வொருவருக்கும் தம் தம் தாயினிடம் எவ்வாறு அன்பிருக்கிறதோ அவ்வாறே தாம் பிறந்த தேசத்தினிடம் ஒவ்வொருவருக்கும் பக்தியிருக்க வேண்டும். அவ்விஷயத்தில் எல்லாரும் ஒரு தாயின் மக்களே. அதற்கும் மற்ற அபிமானங்களுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. ஒரு தாயின் புத்திரர் மூவரில் ஒருவன் சைவனுயிருக்கிருன், இன் னெருவன் கிருஸ்தவனுய்விட்டான், மூன்றுமவன் இஸ்லாம் மார்க் கத்தில் சேர்ந்துவிட்டான் என்று வைத்துக்கொள்வோம். அவர் கள் ஒருவரோடொருவர் போசனம் செய்தல் முதலிய எந்தவிஷ யத்திலும் கலக்காவிடினும் மூவர்க்கும் தங்களைப்பெற்ற தாயி னிடம் மட்டும் அன்பிருக்குமன்றே! உங்கள் தாயாரை யாரோ அடிக்கிருர்கள் என்றுல் உடனே மூவரும் சேர்ந்து ஓடுவார்க ளன்றே! இப்படிப்பட்டதே தேசபக்தியாகும். இத்தகைய தேசா பிமானம் ஜனங்களுக்கில்லாவிடின் அந்த நாடு க்ஷேமமும் கௌரவ மும் அடையாது.

திருஷ்டாந்தமாய் உலகில் முன்னேற்றமடைந்திருக்கும் நாடு களிலெல்லாம் தேசாபிமானம் நிறைந்திருக்கக் காணலாம். 16-வது நூற்றுண்டில் ஸ்பெயின் தேசத்தார் பெருங் கூட்டமான யுத்தக்கப்பல்களைச் சேர்த்துக்கொண்டு இங்கிலாந்தின்மேல் படை யெடுத்துச் சென்றுர்கள். அச்சமயம் இங்கிலாந்தின் இராஜாங்கப் படைமட்டுமே அவர்களை யெதிர்த்து யுத்தம் செய்திருந்தால் ஜெயித்திராது. ஆனுல் குடியானவர் முதல் சகல ஜனங்களும் தங் கள் தாய்நாட்டிற்கு ஆபத்து வந்துவிட்டதென்று கலப்பை அரி வாள் முதலிய விவசாயக் கருவிகளை யெறிந்துவிட்டுக் கத்தி, ஈட்டி முதலிய ஆயுதங்களை யேந்திக் கடற்கரையோரம் சென்று குழுமி விட்டார்கள். இதுதான் சரியான தேசாபிமானமென்பது. இங்கி லாந்திலுள்ளவர்களெல்லாம் ஒரே ஜாதி, யொரே மதமாதலின் ஒற் றுமையாயிருக்கிருர்களென்று சிலர் கருதலாம். உண்மை யப்படி யில்லை. அவர்களிலும் இங்கிலீஷ்காரர், வேல்ஸ் ஜாதியார், ஸ்காட் ஜாதியாரென்ற பிரிவுகளும், காதலிக்மதம், புரொடஸ்டான்ட் மதம் முதலிய மதபேதங்களும், பலவேறு இராஜாங்கக் கட்சி

களும் உண்டு. ஆனால் தேசாபிமானம் என்ற விஷயத்தில் அவர்கள் கட்சி பேதங்கள், மத பேதங்கள் முதலிய ஒன்றையும் கவனியாமல் எல்லாரும் ஒற்றுமையோடு சகோதரபாவமாய் ஒன்று கூடிவிடுவார்கள்.

இனி நம் நாட்டில் தேசாபிமானம் என்ன நிலைமையி லிருக்கிறதென்பதைக் கவனிப்போம். ஆனால் அது சற்றும் கஷ்டமான காரியமல்ல. ஏனெனில் நம் தாய்நாட்டின் தற்கால நிலைமையே தேசாபிமானமென்பது நம்மிடம் மிகக் குறைவென்று அங்கை நெல்லிபோல் பிரத்தியட்சமாய்க் காட்டுகிறது. இன்னும் அனேகருக்குத் தேசாபிமானம் என்பது என்னவென்றே தெரியாது என்பது நிச்சயம். நம் நாட்டிற்குத் தீங்கையுண்டாக்கும் விஷயங்களைப் புகழ்ந்து, நாட்டிற்கு நன்மைசெய்வோரை யிகழும் அவிவேகத் துரோகிகள் அனேகர் நம் நாட்டிலுள்ளர். இவர்களெல்லாம் பெற்ற தாய்க்குத் துரோகம் செய்யும் மாபாதகர்களாவர்.

வேறு சிலர் தாய்நாட்டிற்கு நன்மை செய்யவே பாடுபடுபவர்கள்போல் அபிநயித்து, உண்மையில் கௌரதா பட்டங்கட்கும், வருமானம், உயர்ந்த அந்தஸ்து முதலியவற்றிற்கும் ஆசை வைத்துத் தாய்நாட்டிற்குத் தீமையே இழைக்கிறார்கள். இவர்களே கோடரிக்காம்புள். இவர்களை நோக்கத் தேசத்திற்கு ஒரு நன்மையும் செய்யாமல் சும்மாவிருப்பவர்கள் மகா உத்தமர்களெனலாம். இக்கோடரிக்காம்பு போன்றவர்கள் பெரும் பாபத்திற்காளாவார்கள்.

சாதாரணமாய் நகரபரிபாலன சபைகளில் அவயவிகளாகச் செல்வோர்களில் உண்மையாகப் பொதுஜன நன்மைக்குப் பாடுபடவேண்டுமென்று மனதார எண்ணிச் செல்வோர் எத்தனைபேர்? சிலர் தங்களுக்கு வாக்களிக்கும்படி ஜனங்களை வேண்டிக்கொள்ளும்போது மட்டும் தாங்கள் ஊருக்கு எவ்வளவோ நன்மை செய்துவிடப் போவதாய்க் கூறுகிறார்கள். ஆனால் அப்பதவி கிடைத்துவிட்டால் மிக்க கௌரவம் வந்துவிட்டதாகக் கருதிவிடுகிறார்களேயன்றி, பிறகு ஜனங்களுக்குள்ள குறைகளை நீக்க எள்ளளவு முயற்சியும் செய்யாமல் சுயநல காரியங்களில் மட்டுமே கண்ணா யிருக்கிறார்கள். இத்தகையோர் தேசாபிமான முடையோரா? ஒருகாலுமில்லை.

நம் நாட்டாருக்குப் பூர்வீகமுதல் மதாபிமானமே யாவற்றி

னும் சிறந்ததாயிருப்பது யாவரு மறிந்ததே. இக்காலத்தில் அதி லேயே நம்மவர்க்குச் சிரத்தை மிகக் குறைவு. இப்போது மடங் கள், கோயில்கள் முதலிய தரும ஸ்தாபனங்களின் வருமானங் களைப் பாதைகள் போடல், பாடசாலைகள், வைத்தியசாலைகள் முதலியவைகளுக்குச் செலவு செய்யலாம் என்பதைப்பற்றிக் கொண்டுவரப்பட்ட மசோதா சட்டமாக்கப்பட ஆலோசனையி லிருக்கிறது. இதனால் நமது மதத்திற்குப் பெருந்தீங்கு நேரிடு மென்பதைப்பற்றி நாம் முன்னமே கூறியிருந்தோம். பொதுஜன அபிப்பிராயத்தை மதியாமல் இச்சட்டம் அமுலுக்கு வருமாயின் மிக்க விசனிக்கத்தக்கதே. அதிலும் இது ஹிந்துமதசம்பந்தமான தரும ஸ்தாபனங்களைமட்டுமே பாதிக்கக்கூடியதாயிருப்பது இதி லுள்ள மற்றொரு விசேஷம். ஆனால் இதற்குக் காரணம் யார்? நம்மவர்கள்தானே. மதத்தையே உயிரினும் சிறந்ததாகக் கரு தும் மூதாதைகளின் வழிவந்தோர்தானே. "தன்னாலே தான் கெட்டால் அண்ணாவி என்ன செய்வான்?"

தரும ஸ்தாபனங்களின் வருமானங்களை ஒரு வகுப்பாரே அனுபவிக்கிறார்கள் என்ற காரணம் சிலர் கூறுகிறார்கள். சிலர் பிராமணர்கள் கோயில் வருமானங்களை விழுங்கி விடுகிறார்களாத லால் அவர்கள் கொட்டத்தை யடக்க இப்படிச் செய்யவேண்டி யது அவசியமே யென்கிறார்கள். சிலர் மடாதிபதிகள் எல்லாம் கொழுத்துவிட்டார்கள், இப்படிச் செய்தால்தான் அவர்கள் வழி க்கு வருவார்கள் என்கிறார்கள்.

சில மடங்கள் முதலியவற்றின் வருமானங்கள் ஒழுங்கீனமான வழியில் செலவழிக்கப்படுவதும், தகுதியல்லாத காரியங்கள் நடை பெறுவதும், வீண் விரையம் செய்யப்படுவதும் உண்மையே. ஆனால் அவற்றை விலக்க வேறு வழியில்லையோ? கோபுரத்தில் பழுதிருப்பது உண்மையே. ஆனால் அதைப் பழுதுபார்க்கக் கோயிலை யிடிக்கும் காரியம்போலல்லவோ இது நடந்திருக்கிறது. இது அமுலுக்கு வரின், முன்னே, முதலாவதாக இனி மடாதீனத் திற்குக் கர்த்தராகத் தகுதியுடையவர்கள் வரமாட்டார்கள். மடா திபதிகளாக வருவோர் பிறர்க்கு ஞானோபதேசம் செய்யத்தக்க உண்மை ஞானிகளாக விருக்கவேண்டும். அத்தகைய துறவி களுக்கு வேந்தனும் துரும்பேயாகும். அவர்கள் இன்னொருவர் க்கு எவ்விதத்திலேனும் கட்டுப்பட்டிருக்கவேண்டிய பதவியை

யேற்றுக்கொள்ளவே மாட்டார்கள். அத்தகையோர் அப்பான் களில் அமராவிடின் அந்த ஸ்தலங்களுக்கு மகிமையும் மதிப்பும் குன்றி அவை சாதாரண செல்வவந்தர்களின் வீடுகள்போலவே ஆய்விடும். பிறகு மடங்கள் என்பதும், சுவாமியார் என்பதும், சீடர்கள் அங்கு போய் ஆன்மார்த்த நூல்களைக் கற்பதென்பதும் யாவும் பழங்கதையாய் மறைந்துபோய் மடங்களெல்லாம் மூடங்க ளாகும். அதற்குமேல் ஏற்படக்கூடிய நிலைமை யெத்தகையதென் பதை யிதை வாசிப்போரே யூகித்துணரலாம்.

நமக்குள் துவேஷபுத்தியும், பொறாமையும், கட்சிபேதமும் வளர்த்துக்கொண்டு, எனக்கு இரண்டு கண்களும் போவதாயினும் சரி அண்டைவீட்டுக்காரனுக்கு ஒரு கண்ணேனும் கெடவேண் டும் என்று கோருவதுபோல் நடப்பதுதானா ஒற்றுமை யடை வதும் சீர்திருத்தம் பெறுவதும்? இதுதானா சகோதரத்வம்? இது தானா சுய நலங்கருதாப் பெருந்தன்மை?

சிலர் நம் நாட்டில் பல ஜாதிகளிருப்பதால் எப்படி ஒற்றுமை யுண்டாகும் என்கிறார்கள். இது அறியார் கூற்றேயாகும். எத் தேசத்தில்தான் இத்தகைய பிரிவினைகள் இல்லை? எங்குமேயுண்டு. மனம் மட்டும் ஒரே விஷயத்தில் நாட்டம் வைத்துவிட்டால் இச் சில்லரைப் பேதங்கள் தோன்றவேதோன்றா. தாய் நாட்டின் முன்னேற்றத்தைப் பொறுத்த விஷயத்தில் இப்பேதங்களையெல் லாம் மறக்காத வரையில் நாம் செய்யும் பிரயத்தனங்களில் எது வுமே கைகூடாது.

தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கு இப்போது நாம் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்தாலன்றி நாம் தேசாபிமானம் உடையவர்களாகோம். ஒரு நாடு முன்னேற்றமடையக் கல்வி யும் செல்வமும் வேண்டும். செல்வம் விவ்சாயம் [வா நன்மை] வர்த்தகம் இவற்றால் வருமேயன்றி அடிமைத் தொழிலாகிய சேவகா விர்த்தியால் ஒருபோதும் வராது. நம்நாட்டில் உற்பத்தி யாகும் இயற்கைப் பொருள்களைக்கொண்டு நமது வாழ்க்கைக்கு வேண்டிய வஸ்துக்களை நாமே செய்துகொள்ளவேண்டும். நமது நாட்டில் உற்பத்தியான பொருள்களையே நம்மால் கூடியவரை யில் உபயோகிக்க வேண்டும் என்ற அபிமானம் இருக்கவேண்டும். மேல் தளுக்கைக்கண்டு மயங்கி, நம்நாட்டுப் பொருளை விட்டு அன் னியநாட்டுப் பொருளை வாங்கி உபயோகிப்பது தேசாபிமான

காது. புத்திசாலித்தனமுமாகாது. நம் நாட்டுத்துணி சற்று முரடாயிருக்கின்றதென்று கூறி, அதையணியாது அன்னிய நாட்டுத்துணியை யணிவது தன் தாய் நாட்டுப்புறத்தாள்போல் இருக்கிறளென்று தள்ளிவிட்டு மேனிமினுக்கிக்கொண் டிருக்கும் ஒரு அன்னியமாதை என்தாய் என்று கூறுவதேயாகும்.

இந்த விஷயங்களில் அபிமானம் வைத்து நடந்துகொள்ளாவிட்டால் நாம் ஒருபோதும் தேசாபிமானமுடையோராகமாட்டோம். எத்தனை பேர் எத்தனை முயற்சிகளைச் செய்தாலும் நாம் முன்னேற்றமடைவது குதிரைக் கொம்புபோல் தான். வாயால் வீண் பிரசங்கங்கள் செய்துகொண்டும் நம் நாட்டுச் சங்கதிகளையே நம்முடைய விவகாரம் என்ற உணர்ச்சியின்றி மூன்றுவது மனிதர்போல் பேசிக்கொண்டும் இருப்பதில் ஒரு பயனுமில்லை. இது அறிவிலார் செய்கையேயாகும். ஆகையால் சகோதர சகோதரிகளே! எதிர் காலத்தில் தாய்நாட்டின் பாதுகாப்புத் தொழிலை யேற்றுக்கொள்ளவேண்டிய மாணவ சகோதரர்களே! உண்மையான தேசாபிமானம் இன்னதென உணர்ந்து அதை மனதில் வைத்து நம் தாய் நாடு முன்னேற்றமடையும் வழியில் நடவுங்கள். ஆண்டவன் நமக்கு நன்மதி புகட்டி. நம்மைச் சரியான உண்மைத் தேசாபிமானிகளாகச் செய்வாராக.

ஓம் தத்ஸத்.

---

## அன்னையே அனைத்திற்கும் ஆதாரம்.

பொதுவாய் நோக்குமிடத்து நாம் இரு கடவுளர்பால் அன்பு செலுத்துகின்றேம். கடவுளை ஆணெனவும் பெண்ணெனவும் பாவித்துத் தொழுதலே ஈண்டு குறித்ததாகும். இவ்விரண்டில் எது தொன்மைத்து? அறிவாளிகள் எதைத் தேர்ந்தெடுப்பர்? ஏன்? என்பவைகளைப்பற்றியே ஈண்டு உசாவுவாம்.

சிவன் அனுதியோ, சத்தியாகிய பார்வதி அனுதியோ? என்பதே முதல் வினவாகும். (ஈண்டு சிவன் பார்வதி என்ற சொற்கள் ஆண் கடவுள் பெண் கடவுள் என்ற வேற்றுமையையே விளக்கவந்தவை.) பிரமத்தின் [illegible] அவதாரமாம் ஸ்ரீ சங்கராசாரியர் இயற்றியருளிய சவுந்தரிய இலகரி ஆனல் அவ்[illegible]னேபோல் போற்றத்தகும் நூலினை, ஓர் புலவர் தமிழ்ப் பாக்களான ஆ[illegible]யுள்ளார். அவைகளுட் சில ஈண்டு எடுத்து எழுதுவாம்.

சிவனெனும் பொருளும் ஆதிசக் தியொடு
சேரினெத் தொழிலும் வல்லதாம்
இவள் பிரிந்திடி னியங்கு தற்குமரி
தரிதென மறையிரைக் குமால்
நவபெரும் புவன மூவ்வகைத் தொழில்
நடத்தி யாவரும் வழுத்துதாள்
அவனி யின்கணெரு தவமி லார்பணிய
லாவதோ பரவ லாவதோ.

சிவம் என்று சொல்லப்பட்ட பொருளும் ஆதிசக்தியோடு சேரின் எத்

தொழிலும் நடத்தவல்லதாகும். இச்சக்தி பிரிந்திடில் அப்பொருள் அசைதற்கும் அரிது அரிது என்று வேதங்கள் முழங்காநிற்கும். ஆதலால் ஒன்பது வியூகமான புவனங்களைப் படைத்தல் காத்தல் அழித்தல் முதலாய தொழில்களை நடத்தாநின்ற, யாவரும் துதிக்கும் அவளுடைய பாதத்தை இவ்வுலகில் ஒரு தவமும் செய்யாதவர்கள் மெய்யினால் வணங்கவும் வாக்கினால் புகழவும் கூடுமோ? கூடாது.

வியூகம்=கூட்டம். அவை, (1) காலம், (2) குலம், (3) நாமம், (4) ஞானம், (5) சித்தம், (6) நாதம், (7) விந்து, (8) கலை (9) சிவம்.

பிராணன் முதல் கற்பமளவும் கால வியூகம். இதில் சூரிய சந்திராதிகள் எல்லாம் அடங்கின. இதுபோன்று நவவியூகங்களில் எல்லா உலகங்களும் அடங்கும்.

சக்தியை அன்றிச் சிவத்துக்கு ஓர் செயல் இல்லை என்றாராகலின், அவளையன்றி எவ்வகைப்பட்ட உயிர்கட்கும் ஓர் செயல் இல்லை என்பது பெறக் கிடக்கின்றது.

பாத தாமரையின் நுண்து கள்பரம
அணுவி னிற்பல இயற்றினால்
வேத நான்முகன் விதிக்க வேறுபடு
விரிதலைப் புவன மடையமால்
மூத ராவடி வெடுத் தனந்தமுது
கண பணுடவி பரிப்பமேல்
நாத னார்பொடி படுத்து நீறணியின்
நாமு ரைத்தெனவள் பான்மையே.

தேவியின் பாததாமரையில் பொருந்திய நுண்ணியதுகளாம் பரம அணுவைக்கொண்டு பலவகை யியற்றுக்களால் வேதநான்முகன் அகன்ற புவனங்களைப் படைக்கிறான். திருமால் அவைகளைப் பாம்பின் வடிவு கொண்டு அனேக பெரிய படக்கூட்டமாகிய அடவியால் தாங்குகின்றான். பிறகு உருத்திரன் அவற்றைப் பொடிபடுத்து விபூதியாக மெய்யில் பூசிக் கொள்ளுகின்றான். என்றால் அவள் பெருமை எவ்விதம் அடங்கும்?

இதனால் தேவியின் பாததுளியே முத்தொழில்கட்கும் காரணம் என்பது வெளிப்படை.

வேதியர்க ளயன்நாவில் விஞ்சைமக ளென்றும்
சீதரன்தன் மணிமார்பில் செழுங்கமலை என்றும்
நாதரிடத் தரிவைஎன்று நாட்டுவரெ ணடங்கா
ஆதிபரன் மூலபரை யாமளையுன் மயக்கால்.

அறிவிற்கு அடங்காத, ஆதிபரனுடைய பராசக்தியாகிய, யாமளையே! உன்னுடைய மாயையால், வேதியர், அயன் நாவில் கலைமகள் என்றும், திருமால் மார்பில் செழும் திருமகள் என்றும், சங்கரனின் இடைப்பாகத்தில் உமை என்றும் சொல்வர்.

'மயக்கால் நாட்டுவர்' எனவே அம்மயக்கத்தை நீக்கி ஆராய்ந்து தெளிவாராயின் உன்னை அன்றி வேறொருவரும் இல்லை என்பார் என்னும் கருத்து ஊகிக்கற்பாலது.

மூவ ருக்கு முதல்பி றப்புநின்
முக்கு ணக்கட லென்றுமுன்
சேவ டிக்கண் இருப்பர் சென்னிகு
வித்த செங்கை பிரிக்கிலார்
பூவெ டுத்தவர் சென்னி வைத்திடு
போதம் உற்றவர் அம்மைநின்
காவ லர்ப்பொதி தாளில் வைக்கவும்
மூவர் சென்னி களிக்குமே.

தாயே! திரிமூர்த்திகளின் முதல் பிறப்புக்குக் காரணம் நின்முக்குண மாகிய கடல் என்று நின்முன் சேவடியின்கீழ், முடிமேல் குவித்த செங் கைகளைப் பிரியாதவர்களாய் (மும்மூர்த்திகள்) இருப்பர். ஆதலால் பூவை எடுத்துத் தனித்தனி மூவர் முடிமேல் வைத்து அருச்சனை செய்யும் அறி வுடையோர், (அதைவிட்டு) வனத்தில் உள்ள அலரினால் பொதிந்த நின் தாளில் பூவைத்து அருச்சனை செய்ய அம்மூவர் முடியும் இன்பமடையும்.

இதனால் உன்னைப் பூசிப்பதன்றிப் பின்னும் ஓர் தெய்வத்தைப் பூசிக் கவேண்டாம் என்பது பெற்றும்.

'மூவர் சென்னிகளிக்கும்' என்றாராகலின், மூவராலும் நின்னாலும் (ஆக நால்வரானும்) தரப்படும் வரங்களை நின்பாதார்ச்சனை புரிவோர் பெறுவர் என ஆயிற்று.

தேவி மாணிக்கமயமாய் விளங்கும் கட்டிலின்மேல் இருக்கும்போது ஜாம்பூநதம் என்னும் பொன்னால், மும்மூர்த்திகளும் மூன்று கால்களாகத் தாங்கும்படிச் செய்த முக்கால் பீடம் எடுத்துவந்து தெய்வ மகளிர்பாதம் தாங்கவைப்பர். அதனால் 'முன் சேவடிக்கண் இருப்பர்' என்றார்.

இப்படி ஆதிசங்கரரே கூறுகின்றாராகலின் அவர் சாக்தரன்றே! என்றால் உண்மை அத்துவித நிலையை அடைவான் ஆராதித்த சங்கரரின் மூர்த்தி ஸ்வரூபம் பராசக்தியே. இராமகிருஷ்ண பரமஹம்ஸர், கம்பர், ஒட்டக்கூத்தர், காளமேகப் புலவர், காளிதாசர் முதலியோரும் இவ்வாறே செய்தனர் என்பதை அவரவர் சரித்திரங்களால் அறிக.

கம்ப இராமாயணத்தில் வாலிவதைப்படலத்தில், வாலி இராமனை விளித்துப் பின்வருமாறு கூறுகிறான் :—

கோவியல் தரும முங்கள் குலத்துதித் தோர்கட் கெல்லாம்
ஓவியத் தெழுத வொண்ணா உருவத்தா யுடைமை யன்றோ
ஆவியைச் சனகன் பெற்ற வன்னத்தை யமிழ்தின் வந்த
தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை.

சித்திரத்திலும் எழுதிக் காட்டமுடியாத அவ்வளவு அழகிய உருவத்

தை உடையவனே! இராஜ தர்மம் என்பது நுங்கள் குலத்து உதித்த அரசர்கட்கெல்லாம் உரிமை அன்றோ? (அப்படி யிருக்க அதினின்றும் நீ வழுவக் காரணம் என்னே?) ஆவியும், ஜனகன் பெற்ற அன்னமும், அமிருதத்திலிருந்து பிறந்த தேவியும் ஆகிய சீதையைப் பிரிந்ததுமுதல் உனக்கு மயக்கம் ஏற்பட்டுத் தவறின பாதையில் நடக்கின்றாய்போலும்.

(ஆவி=உயிர்)

'அவள் நினக்குமாத்திரம் ஆவியல்லள். சர்வ சராசரங்கட்கும் ஆவியாவள். ஆதலால் எனக்கும் ஆவியே. ஆவி உன்னைவிட்டுப் பிரிந்தது. ஆதலால் என்னையும் இப்போது விட்டுப் பிரிகின்றது. அவள் நின் அருகில் நிற்பின், உனக்கு நியாய அனியாயங்களின் வேற்றுமை தெற்றென விளங்கும். மேலும் அவள் தன் ஸ்வரூபமாகிய கருணையை உனக்கு ஊட்டுவள். அப்போது நீ என்னை இவ்விதம் மறைந்திருந்து அம்பு எய்யத் துணியமாட்டாய். ஆகவே நான் உய்ந்திருப்பேன்' என்ற கருத்து இதில் காணக்கிடக்கின்றது.

நவக்கிரகங்களில் சந்திரன் தலைமைத்து என்பது சோதிடநூல்களின் துணிபு. பரமசிவன் பார்வதியைப் பார்த்து, "நான் சூரியரூபி, நீ சந்திர ஸ்வரூபம்" என்றார். காலசக்கிரதசை உடுதசை முதலிய தசைகள் சந்திரன் நிற்கும் ஸ்தானத்திலிருந்தே கணிக்கப்படுகின்றன. அதாவது ஜாதகனின் ஜீவிய சரித்திரத்தின் ஆரம்ப ஸ்தானம் சந்திரன் நிற்கும் இடமே. சந்திரன் நிற்கும் இடத்தை இலக்கினமாகக் கருதுகின்றனர் என்ற விஷயமே இதற்கு ஆதாரம். இப்படிச் சூரியனைக் கருதுவார் யாருமில்லை. இதுமட்டுமல்ல; சர்வசுப பண்டிகைகளும் நக்ஷத்திரத்தை (சந்திரன் நிற்குமிடம்) அடி ஸ்தானமாக உடையன. சந்திரன் மனதில் உதிக்கும் சந்தோஷத்திற்குக் காரணமாகிறான் என்பதும் சாஸ்திர சம்மதம்.

'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதற்குப் பதில் 'பிதாவும் அன்னையும் முன்னறி தெய்வம்' என்று ஏன் சொல்லக்கூடாது? நாம் முதலில் தாயை அறிகிறோம். அவள் பிறகு நமக்கு, "இவர் தந்தை" என்று கற்பிக்கிறாள். சீதா கலியாணம், வள்ளி திருமணம், ருக்மணி கலியாணம் என்ற இத்தொடக்கத்தன எல்லாம் எதைப் போதிக்கின்றன? இராமன் கலியாணம், முருகன் கலியாணம், கிருஷ்ணன் கலியாணம் என்று ஏன் கூறுவதில்லை? நாம் ஞானமடைய ஏதுவாம் வித்தையே பெண்ணின் (சரஸ்வதி) உருவமாய் நின்றது. வேதங்களின் சாராம்சமும் தனக்குத்தானே நிகரானதும், மூன்று வேளைகளிலும் தவறாமல் பிராம்மணர்களால் ஜபிக்கத்தகுந்தது மாய காயத்ரீ மந்திரத்திற்குப் பெண்ணின் ரூபகமன்றோ பண்டைக்காலத்தவர் கற்பித்திருக்கின்றனர்.

நம் தலையங்கத்திற் பொதிந்துகிடக்கும் உண்மைக்கு இவையே போதுமென உன்னி இவ்வியாசத்தைப் பெருக்காது விடுத்தனம்.

கி. வீ.

## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(299-ம் பக்கத் தொடர்ச்சி.)

(16) சிதைவகல் காதற் றாயைத் தந்தையைக் குருவைத் தெய்வப்
பதவியந் தணரை யாவைப் பாலரைப் பாவை மாரை
வதைபுரி குநர்க்கு முண்டா மாற்றலா மாற்றல் மாயா
உதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலாமுபாயமுண்டோ.

(கிட்கி-கிட்கி-62.)

(இ-ள்.) அழியாத அன்புடைய தாயையும், தந்தையையும், குருவையும், தெய்வத்தன்மை பொருந்திய பிராமணர்களையும், பசுவையும், பாலரையும், ஸ்திரீயையும் கொன்ற பாவிகட்கேனும் அப்பாவங்களைப் பரிகரிக்கும் மார்க்கங்களுண்டாம். அழியாத உதவியை மறந்தோர்க்கு அப்பாவத்தினின்றும் நீங்கும் உபாயமுண்டோ? இல்லையே." ஆகையால் நாங்கள் நன்றி மறந்தோமில்லை. (எ-று.)

இது இராகவன் வாலியைச் சங்கரித்துச் சுக்கிரீவனுக்குப் பட்டங் கட்டியபின்னர், சுக்கிரீவன் சிதையைத் தேடுங் கயிங்கரியத்தைக் கார்காலங் கழித்துச் செய்வோமெனச் செப்பிச் சென்றவாறு வராமையின், காகுத்தன், 'அதன் காரணத்தை யறிந்துவா,' வெனத் தம்பியை யேவ, அவர் சென்று மிக்க சினத்துடன் மாருதியைக் கண்டு, "நீயும் சொன்ன சொல் மறந்தனைபோலும்" எனக் கடாவ அதற்கு அஞ்சனை தாயன் விடையிறுத்த சந்தர்ப்பத்திலுள்ளது.

இதனால், நமக்குப் பிறர் எட்டுணை நன்றி செய்தனராயினும், அதை மரணபரியந்தம் மனத்துய்த்து நன்றிபாராட்டல் வேண்டும். எக்காலத்தும் எக்காரணத்தைக்கொண்டேனும் அந்நன்றியை மறத்தலாகாது. ஒரு காலத்தி லொரு நன்றி செய்தோரே, பின்பு பல தீமைகளைச் செய்தாலும் அவ்வொரு நன்றி காரணமாக, அக்குற்றங்களைப் பொறுத்தல் பெரியோர்க்கழகாம். "ஒருநன்றி செய்தாரை யுள்ளத்தே வைத்துப்—பிழை நூறுஞ் சான்றோர் பொறுப்பர்" என்றார் செந்நாப் புலவர். தாய் தந்தை முதலானோரைக் கொன்ற பாவத்தினும் செய்ந்நன்றி கொன்ற பாவம் கொடிதெனக் கூறியிருத்தலால், அக்கொலையாலுண்டாம் பாவம் அதிகமல்லவென்க் கருதலாகாது. அன்னார் செய்தநன்றி அளவிடுந்தரத்ததோ? 'உப்பிட்டவரை உள்ளளவும் நினைக்கவேண்டும்.' 'அன்னமிட்ட வீட்டிற் கன்னமிடலாகாது.' இதனை மறந்து உப்பிட்டோரை உள்ளளவும் பகைப்போரும், அன்னமிட்ட வீட்டிற் கன்னமிடப் பார்ப்போரும், உண்ட வீட்டிற் கிரண்டகம் நினைப்போரும், தன் விஷநோயை நீக்கி ரக்ஷித்த வைத்தியனைக் கொன்று பக்ஷித்த புலியைப்போல், துன்பம் போக்கி இன்பமாக்கினோர்க்கு இன்னல் விளைக்குந் துன்மார்க்கரும் எத்தனைபேர் இருக்கின்றனர்! தாயைத் தவிக்கவிடுந் தறிதலைகள் எத்தனைபேர்! தந்தையைத் தடிகொண்டடிக்கும் தடியன்கள் எத்தனைபேர்! குருவைக் குரூரமாய்ப் பேசும்

குலநாசரெத்தனைபேர்! கடவுளைக் கனவினுங் கருதாக் கயவர் எத்தனை பேர்! அந்தோ! இவர்களுக்கெந்த நரகஞ் சொந்தமோ வறியேம்! தினைத்துணைநன்றி செய்தாலும் பனைத்துணையாக் கருதவேண்டாவோ? வென்னும் நீதி விளங்குகிறது. இக்கருத்தையே பொதுமறையும்,

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என விதித்தது.

ஔவையும் "நன்றி மறவேல்" எனச் சுருங்கச் சொற்றார். இக்கருத்தைக்கொண்ட இந்நூலிலுள்ள வேறு வாக்கியம்.

* * * * * *

"நன்றியை மறந்திடு நயமில் நாவினோர்
என்றிவர், உறும்நர கென்ன தாகவே."

(17) வஞ்சமுங் களவும் பொய்யும் மயக்கமும் மரபில் கொட்பும்
தஞ்சமென் றாரை நீக்கும் தன்மையும் களிப்புந் தாக்கும்
கஞ்சமெல் லணங்குந் தீரும் கள்ளினை லருந்தி னாரை
நஞ்சமுங் கொல்வ தல்லால் நரகினை நல்கா தன்றே. (ஷை-95)

(இ-ள்.) கள் குடித்தலால் வஞ்சனை, களவு, பொய், அறியாமை, துராசாரம், அடைக்கல மடைந்தோரை யகற்றுந்தன்மை, இறுமாப்பு முதலான தீக்குணங்களுண்டாகும். லக்ஷ்மிகடாக்ஷம் நீங்கும். ஆகையால் கள்ளைவிட விடமே சாலச் சிறந்தது. விஷமானது உண்டாருயிரை யொழித்தலல்லது நரகிடை யுய்க்காதாகையால் (எ-று.)

"மதுவுண்டு மயங்கி யிருந்தமையாலன்றோ ஜானகீ பதியிடங் கூறி வந்த வாக்குறுதியை நிறைவேற்றத் தவறினேன்;" எனச் சுக்ரீவன் கள்ளுண்டலி னிழிவைக் கூறுஞ் சந்தர்ப்பத்திலுள்ளது இச்செய்யுள்.

மதுபானன்—மதியீனன். அது பஞ்சமகாபாதகத்தொன்று. அறிவுச் சுடர்கொளுத்தி அஞ்ஞான விருளகற்ற முயல்வதை விட்டு, அறிவைக் கெடுக்கும் நறவைமாந்தி, நாசமுற முயல்வ தெவ்வள வறியாமை! பிரபஞ்ச மாயையிற் கட்டுண்டலமரச் செய்யும் மயக்கத்தை மாய்க்குந் திறமையற் றல்லலுறுவதை யறியாது, மதுவின் மயக்கத்தையும் அதனுடன் சேர்த்தல் மதியீனமல்லாமல் வேறென்ன? குடி குடியைக் கெடுக்கும். குடியால் கெட்ட குடிகளெத்தனை. சரீரத்தைக் கெடுத்து அநேக வியாதிகளை யுண்டாக்கி, இம்சித்துக்கொல்லும் மதுவை, பணத்தை வீணாகச் செலவழித்து வாங்கியுண்டு திரவிய நஷ்டம், மானக்கேடு, மயக்கம், வியாதி, மரணம் முதலானவைகளை வருவித்துக்கொள்வோர், சனியனை விலைகொடுத்து வாங்குவோரின் வேறல்லர். இதுபற்றியே, "எஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண்பவர்," என்றனர் தேவர். ஆகையால் சகல தீமைகளுக்கும் காரணமாயிருக்கும் கட்குடியைக் கடிதலத்தியாவசியமென்னும் நீதியை இது போதிக்கின்றது.

(18) வெங்கனல் மூழ்கியும் புலன்கள் வீக்கியும்
நுங்குவ வருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர் குலனில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவம் நவிலற் பாலதே......(சுந்-காட்சி-72)

(இ-ள்.) நல்ல குடும்பத்திற் பிறந்து இல்லறத்திற்குரிய ஒழுக்கங்களை யுடைய பதிவிரதைகள், தங்கள் மனதைப் பல விடங்களிலும் செல்ல விடாது நிறுத்தும் தபோமகிமைக்கு, வெப்பம் பொருந்திய பஞ்சாக்கினி மத்தியில் நின்றும், இந்திரிய நிக்ரகஞ்செய்தும், அன்னபானுதிகளைத் துறந்தும், செய்யப்படுகின்ற மகரிஷிகளின் தபோமகிமையும் ஈடாகாது. ஆகையால் கற்பின் பெருமை அளவிடற் கரியதே (எ-று.)

இச்செய்யுள் அசோக வனத்திற் சீதையைக் கண்ட சிறிய திருவடி (அநுமார்) அவ்வம்மையாரின் நிலையை யறிந்து, அதிசயித்து, கற்பின் மகிமையைப் புகழும் சந்தர்ப்பத்துள்ளது.

பெரும்பாலும் தவம் ஆடவர்க்கும், கற்பு பெண்டிர்க்கு முரியன. இவ்விரண்டு மனத்தை யடக்குதலாலுண்டாதலின் ஒக்குமாயினும், கற்பானது தன்னிலையிற் சிறிது தவறின் அடியோடழிந்து பெயருமின்றிப்போம். தவம் அங்ஙனமாகாது. விசுவாமித்திரர் முதலிய பல முனிவர் இதற்குத் திருட்டாந்தமாவர். பரமாதரைப் புணர்தலாகிய அகிருத்தியத்தைச் செய்தும் தவமிழக்கப் பெற்றாரில்லை. ஓர் கற்புடை மடந்தை வேறோராடவனைக் கண்டு காதல்கொள்வாளேல், அக்கணமே அவள் கற்பழியும். ஆகலின் தவத்தைக் காத்தலினும் கற்பைக் காத்தலே கடினமாமென்க. அநசூயா, தன்னைச் சோதிப்பான்போந்த முப்பெருங்கடவுளரைப் பாலராக்கிப் பாலருத்தியதும், வாசுகியார் கொங்கணவரைக் 'கொக்கென்றெண்ணினையோ ?' வென்று கர்வபங்கப் படுத்தியதும், பொழுது புலர்வதற்குள் அமங்கலியாகும்படி மாண்டவியரிட்ட சாபத்தை நளாயினி இரவு கழியாதிருக்கச் செய்து தடுத்ததும், கற்பின் மகிமையாலன்றோ? ஆகையால் கற்பின் பெருமை தவத்தினும்சிறந்ததென்பது விளங்குதல் காண்க.

(19) சலந்தலைக் கொண்டன ராய தன்மையார்
அலந்திலர் செருக்களத் தஞ்சினு ரலர்
புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணுர்
குலங்களி னவிந்தனர் குரங்கி னுலென்முர்.
(சுந்-கிங்கரர்-58.)

(இ-ள்.) தமது சேனுவீரர் போர்க்குச் செல்ல நேர்ந்ததைக் குறித்து வருந்தினுரில்லை. செருக்களத்துப் பயங்கொள்ளவுமில்லை. ஆயினும், அவ்வொரு குரங்கினுல் அத்தனை வீரரும், " தங்கள் மனதிற்குத் தெரிந்தவொன்றை இல்லையெனப் பொய்ச்சாட்சி புகல்வோருடைய குலமழிவது போல," அழிந்துபோயினர் ; என, அசோகவனத்தை யழித்த வநுமனைக் கொல்லச்சென்ற கிங்கரர் அவனுல் அழிக்கப்பட்டதைத் தப்பி யோடி வந்த சிலர் இராவணனிடம் கூறினர். (எ-று.)

பொய்சொன்ன வாய்க்குப் போசனம் கிடைக்காது; பொய் புதைக்கும் உண்மையுயர்த்தும்; என்பதை யறிந்து பொய்பேசலாகாது. அதிலும் பொய்ச்சாக்ஷி சொல்லி மற்றவர்க்குத் துன்பமுண்டாக்குவது மிகக் கொடியதாகும். அவர் குலம் கூண்டோடழியும். விளையாட்டுக்கேனும் பொய் பேசலாகாதெனின், பிறரால் வஞ்சிக்கப்பட்டு நியாயம் பெறப் பாடுபடுமொருவனுக்கு மாறாக, மனமறிந்தவொன்றைத் திரவியாபேக்ஷை முதலிய காரணங்களால் இல்லதை யுள்ளதாகவும், உள்ளதை யில்லதாகவும் பொய்ச் சாக்ஷி சொல்வானாயின் அவன் வமிசம் அழியாதொழியுமோ ? ஒரு பொய் கூறத் துணியாமல் அரிச்சந்திரன் என்ன பாடுபட்டான் ? பொய்யாமையினும் சிறந்த அறமுண்டோ ? இல்லை.

"பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"—என்பது குறள் நீதியாம்.

இக்கருத்துள்ள இந்நூலின் வேறு செய்யுள்.

பொய்க்கரி கூறினேன் போருக் கஞ்சினேன்
கைக்கொளு மடைக்கலங் கரந்து வௌவினேன்
எய்த்திடத் திடர்செய்தோ னென்றின் னோர்புகும்
மெய்க்கொடு நரகிடை விரைவின் வீழ்கயான்.

ஆகையால் எவ்வளவுக் கெவ்வளவு இத்தீய காரியத்தினின்று விலகுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு கடவுளைச் சமீபிக்கிறோமென்பதை யறிந்து உய்யவேண்டுமென்னும் நீதி இச்செய்யுளால் அறியக் கிடக்கின்றதென்க. (தொடரும்)

பூ. ஸ்ரீனிவாசன், தமிழ்ப்பண்டிதர்,
இராணிப்பேட்டை.

---

## நம் சபையும் வேற்றுமையும்.

சகோதரர்களே ! சபை யென்பது நமது சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் முறைப்படி ஒரு பிரதான ரூபத்தைச் சூழ்வது என்று பொருள் படுகிறது. சூழ்ந்துகொள்வதென்றால் சூழப்படும் பொருள் ஒன்று இருக்க வேண்டுமல்லவா ? அதற்காகவே சபாநாயகர் என்ற ஒருவரை எல்லாரும் சூழ்ந்து இருத்தல் சபையெனப் படுகிறது. இப்படிப்பட்ட சபையின் நாயகருக்கு அக்ராசனர் என்று சொல்வதுமுண்டு. அக்ராசனர் என்றால் மேலான ஆசனத்தை யுடையவர் என்று பொருள்படுகிறது. சபையில் உள்ள எல்லோரையும் விட ஒருவர் மட்டும் மேலான ஆசனத்தில் உட்கார வேண்டுமானால் அவரிடத்தில் கடவுள்தன்மை இருந்தால் ஒழிய அவர் வயதிலாவது, அந்தஸ்திலாவது, ஜாதியிலாவது பெரியவராய் இருந்தால் அவரை அக்ராசனராகக் கருதமுடியாது. சபையில் எல்லோரும் யாரை அக்ராசனராக்க ஒரேமனதாய்க் கருதுகிறார்களோ, அவரே அக்ராசனராக இருக்கத் தகுந்தவர் என்று சாஸ்திரமும் அனுபவமும் இருக்கிறபடியால் அவரிடத்தில் கடவுள்தன்மை ஏற்பட்டுவிடுகிறது. இப்படிப்பட்ட கட

வுள் தன்மை வாய்ந்த அக்ராசனருக்குச் சபையில் உள்ள எல்லோரையும் சம மரியாதையாய்ப் பாவிக்கும் தன்மை யிருக்கவேண்டி யிருக்கிறது. கடவுளுக்கு எல்லோரும் சரியே (எம்மதமும் சம்மதமே). சபையில் அக்ராசனர் உபன்யாசகர் இருவர் தவிர மற்றெல்லாரும் சம மரியாதையுடன் இருத்தலே சபையின் சரியான முறை. நண்பர்களே! நமது நாட்டில் மத்தியில் கொஞ்ச நாட்களுக்கு முன் சபை கூடுவது மிகவும் குறைவாக இருந்தது. இப்பொழுதும் நம்மவர்களில் அனேகருக்குச் சபையைப்பற்றிய ஏற்பாடுகள் நம்முடைய சாஸ்திரங்களில் இருக்கின்றனவென்றுகூடத் தெரியாது. சில இடங்களில் சபைகூடும்பொழுது அந்தஸ்துக்குத் தக்கபடியான ஆசனங்கள் ஏற்படுத்திக்கொள்ளுகிறார்கள். கொஞ்சம் ஏழைகளாய் இருப்பவர்களுக்கு உட்காரக்கூட இடம் கிடைக்கிறதில்லை; அதிலும் தாழ்ந்த வகுப்பினர்களுக்கு மிறகவும் இடம் கிடையாது; ஆனால் சபைக்கு வருகிறவர்களும் பக்கமான இடத்துக்குப் போகாமல் அங்கேயெல்லாம் பெரிய மனுஷாள் உட்காருவார்கள் எனக் கருதி அனேகமாய் அவரவர்களுக்குத் தகுந்த இடங்களில் உட்கார்ந்திருந்தாலும்கூட மத்தியில் யாராவது செல்வவந்தர் வந்துவிட்டால் உட்கார்ந்திருந்தவன் எழுந்து தூரத்தில் போய் விடவேண்டி யிருக்கிறது. இப்படிப்பட்ட சபைகளைப் பார்த்த மாத்திரத்திலேயே ஏழைகளும், தாழ்ந்த வகுப்பாரும் வருவதற்குக்கூட மனம் தோன்றாமலும் வந்தாலும் தூரமாய் பயந்து ஒடுங்கி நிற்கவேண்டியதாயும் இருக்கிறது. இந்தக் கொள்கையானது நமது நூல்களின் முறைப்படி எத்தனை பாபங்களைத் தரக்கூடியது. இந்தப் பாபம் சபாநாயகர்க்கேயன்றோ? ஆனால் சபையில் உபன்யாஸம் செய்யப்பட்ட விஷயமோ எல்லோரும் சம மரியாதையாகப் பாவித்து ஒழுகவேண்டுமென்றும், வேற்றுமை, தீண்டாமை முதலானவைகள் கூடாவென்றும் பத்திரிகைகள்மூலியமாய்ப்படித்ததை வாய்ப்போக்காய் ஒப்புவித்துவிடுகிறார்கள்; எல்லோரும் சரியென்று தலையசைத்துவிடுகிறார்கள். விஷயத்தின் கருத்தைக் கவனிப்பது கிடையாது. நம் குடும்ப விஷயங்களில் ஏற்படும் விவாகாதி சுபகாரியங்களுக்குக் கூடும்சபையிலும் ஒரே இன பந்துக்களாய் இருப்பினும்கூடச் செல்வ அந்தஸ்தின் உயர்வு தாழ்வுக்குத் தக்கபடி வேற்றுமையைப் பலவிதமாய் அனுசரிக்கிறார்கள். மேல்நாட்டார் செல்வ அந்தஸ்துக்குத் தக்கபடியாய் ஜாதி வேற்றுமையைப் பாராட்டுகிறார்கள். நம் நாட்டில் அப்படியில்லை; நம் கொள்கையே சரியானது என்று நாம் வாயில் சொல்லிக்கொள்கிறோமேயொழிய நடத்தையில் நம்மிலே செல்வத்தின் வேற்றுமை அதிகமாக இருக்கிறது. நம் நாட்டில் ஒரு செல்வவந்தன் தன் பெண்ணுக்கு விவாகம் செய்யவேண்டியதாய் இருப்பின் தன் செல்வத்துக்குத் தகுந்த செல்வமுள்ளவன் வீட்டுப் பிள்ளையைத் தேடுகிறானே யொழியத் தனக்கு நெருங்கிய சொந்தமுள்ளவன், புத்திமானும், கல்விமானும், அழகுள்ளவனுமாக இருப்பினும் செல்வந்தனாய் இல்லாவிடில் அவனைக் கவனிப்பதே கிடையாது. எது இல்லாவிட்டாலும் செல்வமொன்றிருந்துவிட்டால் அவனையே அங்கீகரிக்கிறான்.

இம்மாதிரியான அனேகம் செல்வத்தைப்பற்றிய வேற்றுமைகள் நம் நாட்டில் அதிகமாய்ப் பரவி வருகின்றன. மேல்நாட்டாரை விட நாம் இரண்டு பங்கு வேற்றுமையுள்ளவர்களாய் இருக்கிறோம். அதிலும் நிலையில்லாத இச்செல்வ வேற்றுமையைப் பெரிதாகப் பாராட்டுகிறோம். நாம் முன்னேற்றமடைய முயற்சிசெய்ய வேண்டுமேனால் முதலில் வேற்றுமையை நீக்கவேண்டுவது அவசியம் என்று நாம் பல முகாந்திரங்களிலும் தெரிந்து கொண்டிருக்கிறோமல்லவா? தீண்டாமையை ஒழிக்கவேண்டும் என்றால் அனேகர் பஞ்சமர்களோடு சமமாய் உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டால் தீண்டாமை ஒழிந்ததென நினைக்கிறார்கள். சமமாய்ச் சாப்பிடுவதினாலேயே தீண்டாமை ஒழிந்துபோகாது; வேற்றுமை மாறாது. இப்பொழுது சமபந்தியாய்ச் சாப்பிடுகிறவர்களுக்குள்ளும் பலவிதமான வேற்றுமை பாராட்டுகிறார்களே. சாப்பிடுவதையும் பெண் கொடுப்பதையும் தவிர மற்ற வேற்றுமைகளை என் ஒழிக்கக்கூடாதோ தெரியவில்லை. பஞ்சமர்களைத் தவிர அதிசமான வித்தியாசம் இல்லாத ஜாதியார்களேனும் வேற்றுமையில்லாமல் என் இருக்கக்கூடாது? படிப்படியாய் ஒழித்துக்கொண்டு வந்தால் எந்தக் காரியமும் சுலபத்தில் முடிந்துவிடும். நமது சாஸ்திரப்பயிற்சி நமக்கு மிகவும் குறைவாய் இருப்பதினாலல்லவா நாம் வேற்றுமையை ஒழிப்பதற்காக ஏற்படுத்தும் சபைகளிலேயே பலவிதமான வேற்றுமைகளைச்செய்து பாபத்தைச் சம்பாதித்துக்கொள்ளுகிறோம். நாம் வேற்றுமையை ஒழிக்க அடிக்கடி சபை ஏற்படுத்தவேண்டும். அந்தச் சபைகளில் ஒருவிதத்திலாவது வேற்றுமையைப் பாராட்டக்கூடாது. அதிலும் அநித்தியமான செல்வவேற்றுமையை அறவே ஒழிக்கவேண்டும். தீண்டாமை கூடாது என்று சொல்வதற்கு முன்னமேயே படிப்படியாய் அதிக வித்தியாசமில்லாத ஜாதியார் வேற்றுமையை அவசியம் நீக்கிக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் நாம் வேற்றுமை யில்லாதவர்கள் ஆவோம். நமக்குப் படிப்படியாய் வேற்றுமையை நீக்கி நடக்கும்படியான அறிவை அளிக்குமாறு ஆண்டவனை அன்புடன் பிரார்த்திப்போமாக.

C. S. இரகுநாதய்யன், செட்டிபாளையம்.

---

## திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை.

"திக்கற்ற வர்க்குத் தெய்வந் துணையெனச் செப்பு வார்கள்
மிக்கதன் பொருள் வியப்பை மேதினி யோர்கள் நாடார்
தக்கநல் லறிவு கல்வி போதிலாத் தமியேன் றீட்டும்
இக்குறு வியாசந் தன்னை யினிதெனக் கொள்வர் மேலோர்."

"திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை." இஃது பண்டைக்காலத்தினின்றும் வழங்கிவரும் ஓர் பழமொழியாயிருந்தும், நம்மவருட் பெரும்பாலார் அதன் கருத்து இன்னதென்றும் அஃதியாது காரணம்பற்றி உண்டாயிற்றென்றும் ஊன்றிப்பார்த்து ஆராய்ந்தறிந்தனரில்லை. யானும்

பன்னுளிடர்ப்பட்டு என் சிற்றறிவிற் கெட்டியமட்டில் இப்பழமொழி விஷயமாய் ஆராய்ந்தறிந்த சிலவற்றைப் பலரும் தெரிந்து ஞானந்திக்குமாறு "நம்மானந்தன்" வாயிலாக வெளியிடலானேன்.

இப்பழமொழியின் உண்மைக்கருத்து தெற்றென விளங்குவதற்கு இதன் சொற்றொடர்களைப் பிரித்து ஒவ்வொரு சொல்லையும் பொருள் ஆராய வேண்டியது அவசியமாகலின் ஈண்டு ஒவ்வொரு சொல்லைப்பற்றிய குறிப்பு என்னென்று பார்ப்போம்.

"திக்கு" என்பது எண் திக்குகளையுமே (திசைகளையும்) குறிக்கும். பிறகு ஒவ்வொரு திக்கின் அமைப்பை நோக்குங்கால் ஒவ்வொரு திக்கிலும் ஒவ்வொரு யானையும் ஒவ்வொரு காவலாளியும் (அதாவது திக்குப் பாலகர்) இருக்கிறார்கள். அதனால் ஒவ்வொரு திக்கும் ஆதரவுபற்றியே நிற்கிறது. இதனால் திக்கு என்றதற்கு ஆதாரம் (ஆதரவு) என்னும் இரண்டாவது பொருள் உண்டாயிற்று.

இனி "அற்றவர்க்கு" என்பதைப் பதச்சேதம் செய்ய, அற்றவர்—கு எனவாயிற்று. அற்றவர் என்பது இன்மையையுடையவர் அதாவது இல்லாதவர்கள். கு-என்பது நான்காம் வேற்றுமையினுருபு.

தெய்வம் என்பது தேயு என்னும் பெயரடியான், தே-பிரகாசம் என்ற பொருளை யுடையதாய், அம் என்னும் தொழிற்பெயர் விகுதிசேர்ந்து தெய்வம் என்றாகி பிரகாசிப்பது என்று பொருள்பட்டு,

"சோதியே சுடரே" என்ற மணிவாசகப் பெருந்தகையின் வாக்கிற்கிலக்கியனாய்,

"உத்தமத் தேவர்தம்மு ளுத்தமனாகும்" அழல் வடிவினனாகிய சிவபெருமானைக் குறிக்கும்.

"ஏ" தேற்றப் பொருளில், சர்வ வல்லமை யுடைய கடவுளைத் தவிர வேறொருவருமில்லை என்பதை நிச்சயிக்கவே வந்தது.

"துணை" என்பது பற்றுக்கோடு என்னும் பொருள்பட்டுப் பற்றி நிற்றல் என்னும் முதன்மைப் பொருள்கொண்டு பின் ஆதாரம் என்னும் பொருளில் வரும்.

எனவே "திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை" என்பதற்கு ஆதாரமற்றவர்களுக்குச் சர்வ வல்லமையுடைய சிவபெருமானே ஆதாரமாவார் என்பது திரண்ட பொருள்.

இனி இதைப் பல்வேறு விதமாகக் கொண்டு பல்வேறு பொருள்களும் கூறலாம்:—அவை வருமாறு.

1-வது திக்கு—அற்றவர்—கு: தாம் போகும்வழி அல்லது மார்க்கத்தினின்றும் தவறியவர்க்கு அதாவது வழிதெரியாமற் போனவர்களுக்கு, தெய்வமே துணை=சர்வேசுரனே வழிகாண்பிக்கும் நல்ல துணைவனவன்

எனவும் பொருள்படும். இங்கு "தோன்றாத் துணை ஈசுரர்" என்ற கடவுளின் திருநாமமும், மார்க்கசகாயர் என்ற கடவுளின் திருநாமமும் உய்த்து நோக்கற்பாலன; தவிரவும் "தோன்றாத் துணையாயிருந்தனன் றன்னடியோங்களுக்கே" என்ற அப்பர் தேவாரமும் கவனிக்கத்தக்கது. ஈண்டுரைத்த பொருளைப் பின்வரும் சரிதம் மெய்ப்பிக்கும் ஆதலால் அதைக் கூறுவாம். மாட்டின்மீது மிளகுப் பொதிகளை ஏற்றிக்கொண்டு வந்த தனபாலன் என்னும் ஒரு வணிகன், திருவிரிஞ்சைப்பதிக்கருகில் வருகையில் பொழுது அஸ்தமித்துவிட்டபடியால் ஆங்கு கள்வர்பய மிகுதி என எற்கனவே கேள்விப்பட்டுள்ளவனாதலால், கள்வருக்குப் பயந்து கடவுளை நோக்கிப் பிரார்த்திக்க அப்பதிக் கடவுள் அவ்வணிகனுக்கு வழித்துணையாக வந்து கள்வர்பய மகற்றிப்போயினர். அதனால் அவ்வூர்ச் சிவபெருமானுக்கு "மார்க்கசகாயர்" என்று பெயருண்டாயிற்று. இதை "செட்டிதனக்கு வழித்துணையானவ செங்கோசெங்கீரை" என்ற திருவிரிஞ்சை முருகன்பிள்ளைத் தமிழ்வாக்கும் தெரிவிக்கின்றது.

2-வது திக்கு என்பது போமிடம் அதாவது சுற்றம், அற்றவர்க்கு= இல்லாதவர்க்கு, தெய்வமே துணை=கடவுளே சுற்றத்தாராவார் என்றும் பொருள்கொள்ளலாம். இங்கு திருச்சிராப்பள்ளியிலுள்ள சுவாமிக்கு "தாயுமானவர்" என்ற திருநாமம் உண்டானதும், அத்தலக் கடவுள் சுற்றத்தாரற்ற ஓர் கர்ப்பிணியான மாதுக்கு அவள் தாய்போல் வந்து மருத்துவம் பார்த்துக் காப்பாற்றிய சரித்திரமும், நோக்கத்தக்கன. தவிரவும் பன்றிக் குட்டிகளுக்குத் தாயாகி வந்த திருவிளையாடலும், மாமனாக வழக்குரைக்க வந்த திருவிளையாடலும் கவனிக்கத்தக்கன.

3-வது திக்கு—அற்றவர்—கு=(வேறு ஆதாரமில்லாமல் கடவுளையே சகலமும் என்று நம்பி) மற்றவைகளைக் கைவிட்டவர்களுக்கு, தெய்வமே துணை=அக்கடவுளே துணையாவர். இங்கு "திக்குவேறில்லைத் திருவுளமேயல்லாமல்" என்ற வாக்கும் "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்ற பழமொழியும் நோக்கத்தக்கன. மதுரையின்கண் தெய்வமேதுணையென நம்பிக் கோயிலின்கண் வந்து அழுது முறையிட்டுக்கொண்ட "வந்தி" என்னும் பிட்டுவாணிச்சிக்கு ஸ்ரீ சோமசுந்தரப் பெருமான் ஆளாக எழுந்தருளிவந்து மண்சுமந்த திருவிளையாடல் இதற்குச் சான்றாம்.

4-வது திக்கற்றவர்க்கு=தன்னையடையும் சரியான வழியினின்றும் அல்லது ஞானமார்க்கத்தினின்றும் (திக்கு=மார்க்கம், வழி) விலகியவர்க்கு, தெய்வமே துணை=சர்வ வல்லமையுடைய கடவுளே துணையாக விருந்து அவரை ஆட்கொண்டு உண்மை நெறியில் உய்ப்பர். ஈண்டு சுந்தரமூர்த்தி சுவாமிகளை உலகமாயை பற்றுவண்ணம் மணம் தவிர்த்து வலிய வழக்காடித் தடுத்தாட்கொண்ட சரிதமும், புறச்சமயம் புக்க ஸ்ரீ வாகீசப் பெருந்தகையைச் சூலைநோயால் திருவதிகையின்கண் ஆண்டருளிய சரிதமும் இதனை நன்கு வலியுறுத்தும்.

5-வது தெய்வம் என்பதற்கு பிரகாசமுடையது என்னும் பொருள் உள்ளதால் திக்கற்றவர்களுக்கு (அஞ்ஞானமாகிய இருளால் மூட்டப்பட்டு) மயங்கினவர்களுக்கு, தெய்வமே துணை=கடவுளே (மெய்ஞ்ஞானமாகிய வழியைக் காண்பிக்கும்) சோதியாவர் என்னும் பொருள்கொள்ளலாம். இதனை "கண்பாரார் கண்ணுதலாக் காட்டாக்காலே" என்ற நாவுக்கரசின் வாக்கும், "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்ற போதவூர் மேவிய வாதவூரண்ணல் வாக்கும் அன்பர்களுக்கு விளக்கும். இங்கு ஜனகாதி நால்வருக்கு அறமுரைத்த வருட்டிறம் நோக்கத்தக்கது.

இப்பழமொழிக்கு அறிஞர்கள் இன்னும் பல்வேறுவிதமாகவும் பொருள்கொள்வர். நிற்க. இப்பழமொழி சர்வ வியாபகராகிய ஸ்ரீ சிவ பெருமான் தனபாலன் என்னும் செட்டிக்கு வழித்துணையாக வந்த கால முதற்கொண்டு பிரசித்தமான பழமொழியாக வழங்கிவரலாயிற்றென்பது ஒரு சாரார் கொள்கை. மற்றொரு சாரார் மாமனாக வந்து வழக்குரைத்த திருவிளையாடலுக்குப் பிறகு இப்பழமொழி வழக்கமாயிற்றென்று கூறுவர்.

சிவபெருமானுக்கு ஆபத்சகாயேசுரர் - நற்றுணையப்பர் - தோன்றாத் துணையீசுரர் - அடைக்கலங்காத்த நாதேசுரர் - தாயுமானேசுரர் - துயர் தீர்த்த நாதர் - எனப் பல திருநாமங்கள் தொன்றுதொட்டு வழங்கி வருகின்றன. ஆகலின் இப்பழமொழியானது தொன்றுதொட்டே சிவபெருமானின் அருட்பெருக்கின் மேலீட்டினால் உலகத்தில் வழங்கிவருகின்றதென்பது துணிபு. சுபம்.

K. S. இராமலிங்க முதலியார்,
கண்டாச்சிபுரம், S. Arcot.

---

## சோதிட சாஸ்திரமும் புகைரத விபத்தும்.

"சோதிடமென்பதின் சாதாரணக் கருத்தாவது, இராசிமண்டலத்தில் சூரியன் முதலிய கிரகங்களானவை சுற்றிவருதல், ஒன்றோடொன்று சந்தித்தல், ஒரு தானத்தில் சங்கமமாயிருத்தல் ஆகிய பலவித விகற்பங்களைத் தெரிந்து அவற்றால் நேரிடும் சூரிய சந்திர கிரகணங்கள், மழைகாலம் கோடைகாலம் முதலிய கால விகற்பங்கள், சலப்பிரவாகம், பெரும்புயல் முதலிய விசேஷ அற்புதங்கள் ஆகியவைகளைத் தெரிந்துகொள்ளுங் கணிதமுறையேயாமென்றும், இது ஆறங்கங்களில் முதன்முதலாகிய நேத்திராங்கமென்றும், கிரகங்களுக்கும், சீவர்களுக்கும், சராசரங்களுக்குமுண்டாகிய சம்பந்தத்தைக்கொண்டு பூதபௌஷிய வர்த்தமான காலங்களை இதனால் தெரிந்துகொள்ளலாமென்றும்" சோதிட நூலொன்றில் கூறப்பட்டிருக்கின்றது. ஒவ்வொருவருடைய ஆயுள் நிர்ணயத்தைத் தெரிந்து கொள்வதற்கும், சவுக்கியா சவுக்கியங்களை யறிந்து நடந்துகொள்வதற்கும் ஆதாரமாயுள்ள ஜாதகத்தையும் விசேஷ கருமங்களை ஆரம்பிக்க முகூர்த்த காலங்களையும் கணிக்கச் சோதிட சாஸ்திரம் உதவுகின்றது.

இச்சாஸ்திரத்தினுண்மை பெரும்பாலும் எல்லோருக்கும் பிரத்தியட்சமாயிருப்பினும், இலங்கையில் மதவாச்சி யென்னும் புகைரத ஸ்தானத்திற் கணித்தாய் ஜனவரிமீ 25உ வியாழக்கிழமை இரவு 12½ மணிக்கு, இலங்கையில் முன்னொரு பொழுதும் நடந்திராத விதமாய் அனேகம் பிரயாணிகளுக்குக் காயங்களையும், சில பிரயாணிகளுக்குச் சிவமோசத்தையும் உண்டுபண்ணத்தக்கதாகச் சம்பவித்த கொடிய புகைரத விபத்தால் மிகவும் நன்றாய் விளங்கக்கூடியதா யிருக்கின்றது. அன்றையதினம் அஷ்டமி திதியும், பரணி நட்சத்திரமும், மரணயோகமும் கூடிய அமுகூர்த்த காலமாகப் பஞ்சாங்கங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது. துந்துபிஷு மார்கழிமீ "ஆனந்தபோதினி"யில் 240-ம் பக்கத்திலுள்ள "ஆனந்தபோதினி" பஞ்சாங்கத்திலே மேலே சொல்லப்பட்டவைகளோடு நிறுத்தாமல், அன்றைய தினத்திலே பிரயாணம் விலக்கவேண்டுமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியாக எச்சரிக்கை பண்ணப்பட்ட நாளிலே இக்கொடிய விபத்து சம்பவித்தது சோதிட சாஸ்திரத்தினுண்மையையும் "ஆனந்தபோதினி" பஞ்சாங்கத்தைக் கணித்தவர்களின் நுண்ணிய அறிவையும் தெளிவாய்ப் புலப்படுத்துகிறது.

மற்றெல்லா அவயவங்களிலுங் கண்ணானது எவ்வளவு விசேஷமாயிருக்கின்றதோ அதுபோல் சாஸ்திரங்களுள் சோதிடம் விசேஷமா யுள்ளது. மேலே சொல்லப்பட்ட புகைரதத்தில் சிங்கப்பூர் முதலிய தூரதேசங்களுக்குப் போகும் பிரயாணிகளும் இருந்தார்களென அறியப்படுகிறது. மிகுதியும் பிரயாணஞ் செய்யவேண்டியவர்கள் சோதிடத்தைக் கவனித்து நடப்பது கஷ்டமென்று சொல்லலாம். ஆனால் முதன்முதலாகத் தங்கள் சுய தேசங்களைவிட்டு அன்னிய நாடுகளுக்குப் பிரயாணஞ் செய்பவர்களும் மிகவுந் தூரதேசங்களுக்குப் பிரயாணஞ் செய்பவர்களும் சோதிடத்தைக் கவனித்து நடப்பது அவசியம்.

சிலர் சோதிட சாஸ்திரத்திலுண்மையில்லை யென்றும், சிலர் கூடாத நாட்களில் பிரயாணம் முதலிய கருமங்களைச் செய்பவர்களுக்குத் தீங்கு எப்போதும் வரவில்லை யென்றும் சொல்லுகிறார்கள். எச்சாஸ்திரத்திலாவது எவராவது மிகவும் நிபுணனாயிருப்பது அருமை. ஆனால் சோதிட சாஸ்திரஞ் சரியாகக் கணிக்கப்பட்டால் முற்றிலும் நம்பக்கூடியதென்பது "ஆனந்தபோதினி" பஞ்சாங்கத்தினால் நன்றாய் விளங்குகின்றது. அமுகூர்த்த காலங்களில் பிரயாணம் முதலிய கருமங்களைச் செய்து விபத்து இல்லாதிருப்பவர்களுக்குக் கொஞ்சமேனும் வசதியின்மை முதலிய கஷ்டங்களாவ தில்லாம லிருந்திருக்கமாட்டாது. இப்படியுமில்லாம லிருந்தால் சோதிடம் சரியாகக் கணிக்கப்படவில்லை யென்று கொள்ளல் வேண்டும்; அல்லது அவர்களுடைய பூர்வ புண்ணிய வசத்தினாலும், கடவுளுடைய அனுக்கிரகத்தினாலும் விபத்திலிருந்து தப்பிக்கொண்டார்களென்று கருதல் வேண்டும்.

சி. முருகேசன், அனுராசபுரம்.

பணவிஷயமும், பெண் மாணவிகளும்.

நாளது மார்ச்சுமீ 2உ மாலை 6 மணிக்கு மதுரை அமெரிக்கன் மிஷன் பெண்கள் உயர்தரப் பாடசாலையின் மாணவிகளால் தற்கால நவீனக் கோட்பாட்டை யொக்க "வேஷமணிந்து" இரு சரிதைகள் வெகு விமரிசையாய் நடித்துக் காட்டப்பட்டன. ஷை இரு நாடகங்களில் ஒன்று இந்திராணி என்ற ஓர் இனிய தமிழ்ச் சரிதை, மற்றொன்று அனேகருக்கு விளங்காத ஓர் ஆங்கில சரிதை. இங்குள்ள எட்வர்டு விக்டோரியா மண்டபத்தில் நடத்தக் கேட்டு இடம் கிடையாததால் ஷை பாடசாலையிலேயே நடைபெற நேரிட்டது. யாவரும் தடையின்றி ஷை நாடகத்தைப் பார்க்குமாறு வகுப்புவாரி டிக்கட்டு விகிதம் ரூபா 1, ½, ¼ ஏற்படுத்த திரளான ஜனங்கள் படிக்கும் வாலிபப் பெண்களின் நடனத்தைப் பார்க்கவே சென்றனர். ஐரோப்பியர், சர்க்கார் உயர்பதவியிலிருக்கும் உத்தியோகஸ்தர்கள், மற்றும் வக்கீல்கள், தனவந்தர்கள் முதலியோருக்குக் கௌரவ அழைப்புச் சீட்டுகள் அனுப்பி வரவழைக்கப்பட்டனர். அன்று நாடக வசூல் ரூபா 500 எனவும் கௌரவ டிக்கட்டு பெற்ற மகான்களும் அவரவர்கள் பிரியப்படி பண உதவி செய்ததாயும் தெரிகிறது. அஃது பிரத்தியேகம். ஷை பணத்தைக் கடந்த சில வருஷங்களுக்கு முன் ஷை பாடசாலைக்கு எதிரில் ஓர் கோவில் அஸ்திபாரம் போட்டு அது கொஞ்சமும் முற்றுப்பெறாதிருப்பதைத் தீர்ப்பதற்கு உபயோகிக்கப்போவதாய்த் தெரியவருகிறது. பாடசாலையில் படித்துவரும் வாலிபப் பெண்களைக் கொண்டு பகிரங்க நாடகம் நடிக்கச் செய்து அவ்வருமானத்தைக் கொண்டு ஆலய உபயோக உதவி செய்விக்க ஐரோப்பிய அவ்வம்மைக்கு அதி நுட்ப யோசனை பகர்ந்த நம் ஆசானின் சாமர்த்தியம் மெச்சத்தக்கதே. இதுவும் கலிகால யோசனையோ! பெண் கல்வியும் மேல்நாட்டு நாகரீகமும் அதிலும் கிறிஸ்துவர்களின் விஷயத்தில் பொது அபிப்பிராய பேதமும் பாரதமாதா பிள்ளைகளுக்குள் ஒருவிதமாயிருக்க, இவை ஒன்றுமே கவனியாது "கண்ணை மூடிப் பால் குடிக்கும் பூனைக்குட்டி" தான் பால் குடிப்பதை ஒருவருமே அறியார்கள் என்றெண்ணியவாறு-ஷை பாடசாலை மேல்விசாரணைக்காரர்களும் ஆசிரியர்களும் ஒருங்கே துணிந்து விட்டனர். பெண் கல்வியையும், ஆங்கில பாஷையையும் விரும்பும் நானு திக்குகளிலுமுள்ள பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை இங்கு அனுப்ப; "இவர்களோ" அவர்களைப் பகிரங்க நாடகத்துக்கு பக்குவப்படுத்துகின்றனர். இதைப் பெற்றோர்க ளறிந்தால் எவ்விதம் ஆதரிப்பார்களோ. இவ்விஷயத்தை ஏற்கனவே யறிந்த பெற்றோர்கள் எத்தனைபேர் மனப்பூர்வமாய் நாடகம் நடிக்கத் தம் பிள்ளைகளை அனுப்பினார்களோ! இந்தியாவின் சகல விஷயங்களையும் நன்கறிந்த நம் ஆசிரியர்களாவது சற்று கவனித்தார்களில்லையே. சம்பளத்துக்காக உழைக்கும் அவர்களுக்குத் தேச அபிமானமுமா அற்றுப்போயிற்று?

பொதுவாய் கிறிஸ்து சபையார் யாவரும் இந்த லெந்து நாட்களில் மகா பக்தி வைராக்கியமாய் கிறிஸ்து நாதரின் பாடு மரண தியானங்கள் செய்து ஈஸற்றர்வை அனுதின வுபவாசம் செய்வதுமுண்டு. அதிலும் ஒவ்வோர் வெள்ளிக்கிழமையும் மகா முக்கியம். அப்படி யிருக்க, அவை ஒன்றுமே கவனியாது இந்தச் சுப நாட்களிலே நாடகம் நடந்தது மிகவும் விசனமேயாம். மேலும் இந்நாடகம் நடந்ததினம் வெள்ளிக்கிழமை. பக்கத்திலுள்ள லூத்தரன் சபை ஆலயத்தில் அன்று 6 மணிக்கு ஆராதனை மணியும் இங்கு நாடக தடபுடலும். இத்தால் கடவுளைத் தொழுவதிலும் காசு சம்பாத்தியம் பண்ணுவதே முக்கியம் என அவர்கள் கோட்பாடு போலும். ஷை நாடகத்துக்கு டிக்கட்டு விற்பனை செய்ய வாலிபப் பெண்களைக் குதிரை வண்டியில் எற்றி டவுனுக்குள் தெருவுகள்தோறும் அனுப்பி விற்பனை செய்விக்கச் செய்தது எவ்வளவு தூரம் மேலானதோ தெரியவில்லை. மேல்நாட்டு நாகரீகத்தால் உண்டாகும் இவ்வித ஏதுவால் “சுடு பால் குடித்த பூனைபோல்” பெண் கல்வியும் மேல்நாட்டு நாகரீகமும் வேண்டவே வேண்டாம் என நம்மவர்கள் சொல்ல ஏதுவாகிறது. மாலை 6 மணிக்குத் தொடங்கி இரவு 9 மணிக்கு முடியும் அந்நாடகத்துக்கு மாலை 4 மணிக்கே வரும் எலிமெண்டரி பாடசாலைப் பிள்ளைகளுக்கு இலவச டிக்கட்டு கொடுப்பதாய் அனுமதித்தப்படி சென்ற பாலகர்கள் எவ்விதம் அவ்வளவு நேரம் பசிதாங்கக்கூடும்? அதற்கு நாடக அதிகாரிகள் என்ன சிற்றுண்டி பகிர்ந்தனரோ? தெரியவில்லை. கைப்பிள்ளைகளுடைய தாய்மார்களுக்கு இடமில்லை எனவும், பின்னரோ 6 வயதுக்குமேல் அரைச்சார்ஜ் விகிதம் வசூலிக்கும் ரெயில்வேக்காரர் வரிக்கு மேலாக அரைவயது ஒரு வயதுள்ள பிள்ளைகளுக்கும் அரைசார்ஜ் வாங்கி பிரவேசக்கட்டணம் கொடுக்கப்பட்டது. கர்னுடக விஷயங்களும் போய் பெண்களுக்குச் சற்று விடுதலையும் கிடைக்கப்பெறும் இக்காலத்தில் இவ்வித அரிய காரியங்கள் நடப்பதால் “பழைய குருடி கதவைத்திறடி” என்ற மொழிப்படிக்கு பெண்களை வீட்டில்போட்டு கதவைச்சாத்திப் பெண்கல்வியும்போதும், மேல்நாட்டு நாகரீகமும் போதும், நாடகம் நடித்தலும் போதும் என அபிப்பிராயப்படாதவரும் அன்றுளரோ? பெண்கள் வாலிப வயதில் இவ்விதம் நடித்தலால் அப்பெண்களைப் பழக்கும் ஆடவர்களின் ஸ்திதியும் மனரம்மியமும் எவ்வாறிருக்கும்? ஷை நாடக ஸ்தலத்தில் பார்த்த அப்பெண்களை அடையவரும் மாப்பிள்ளைகள் அவர்களைப்பற்றி என்ன அபிப்பிராயப்படுவர்? பின்னர் இவர்களின் ஜீவியத்திலும் “தொட்டிற் பழக்கம் சுடுகாடுமட்டும்” என்றாற்போல் சகல பகிரங்க நாடகங்களுக்கும் கடன் வாங்கியாவது பார்க்கத் தலைப்படாரோ? மேல்நாட்டு நாகரீகத்தைக் கடைப்பிடித்தால் நம் தேசப் பெண்களின் விஷயங்களை எவரும் குறைகூற ஏதுவுண்டாமே.

ஆகையால், மதுரையில் இதுவரை இவ்விதம் நடந்திராத புதுமாதிரியான பழக்கம் தலைகாட்டுவது பெரும் விசனமே. இத்தால் யாவருக்கும் அதிருப்தியும் அவநம்பிக்கையும் உண்டாவதுடன் பெண்கள் நாடகம்

நடித்ததால் கிரிஸ்து சகோதரர்களைப்பற்றியும் கூடப் பொது அபிப்பிராய பேதமுண்டாகிறது. இனிமேலாவது இவ்விதம் நடைபெறுதிருக்குமாறு யாவரும் எதிர்பார்க்கிறார்களாகையால் பாடசாலை மானேஜரும் தலைமை உதவி உபாத்திமார்களும் சீர்திருத்தம் செய்யவேண்டியது மகா முக்கியம்.

"ஸௌராஷ்ட்ர."

குறிப்பு:—ஹிந்து தாய் தந்தையர்கள் தமது பெண்மக்களின் விஷயத்தில் இத்தகைய ஜாக்கிரதை குறைவாய் நடந்துகொள்வது பெருங் குற்றமாகும். அன்னியமதம் ஆசாரம் போதிக்கப்படும் பாடசாலைகளுக்கு நமது பெண்மக்களை யனுப்புவதே பெருந்தவறு. இதனால் நேரிடும் பெருந் தீங்குகளைப் பன்முறை கண்டும் கேட்டுமிருந்தும் இன்னம் நம்மவர்க்கு உணர்வு வராதது காலக்கொடுமையே. அதிலும் பெண்களுக்கு நாடகம் கற்பித்து நடிக்கச் செய்வதைவிட அவர்களுக்குச் செய்யவேண்டிய தீங்கு வேறொன்றுமில்லை. பெண்கள் நாடகம் பார்ப்பதே தகுதியல்லவென்று ஆன்றோர் கூறும்போது, அவர்களையே நடிக்கவிடுவது அறிவுடைய பெற்றோர் செய்கையாகுமோ! பெற்றோர் இனியேனும் தம் பெண்மக்களைக் கவனித்தாலன்றி பெருந்தீங்கு விளையுமென்பதில் ஐயமின்றாம்.

பத்திரிகாசிரியர்.

---

## பகவத்கீதை வசனம்.

(352-ம் பக்கத் தொடர்ச்சி.)

[எங்கும் வியாபகமாக விருப்பவை சத்து, சித்து, ஆனந்தம், நாமம், ரூபம் என்ற ஐந்து அம்சங்களே. இவற்றில் சச்சிதானந்தமாகியது பரப் பிரம்மம். நாமரூபமாயுள்ளது உலகம். சச்சிதானந்தமாகிய பிரம்மம் அதிட்டானம். அதனிடத்தில் இந்த நாமரூபமாகிய பிரபஞ்சம் ஆரோபமாகத் தோன்றியிருக்கிறது. ஆரோபம் தோன்றிக்கொண்டிருக்கும் வரையில் அதிஷ்டானமாகிய பிரம்மம் தோன்றாது. சாதாரணமாய் மனம் நாமரூபத்திலேயே நாட்டம் வைத்திருக்கிறது. "அந்த நாட்டம் உள்ளளவும் பிரம்மசொரூபம் தோன்றாது. நாமரூப நாட்டம் விடின் நமது சொரூபம் தோன்றிவிடும்" என்றருளினர் ஸ்ரீ குமாரதேவர்.

"நாம ரூபந் தனைநோக்கி நாடன் மனமும் புறமுகமும்
நாம ரூபந் தனைநீக்கி நாட லறிவு முண்முகமும்
நாம ரூபத் தெவ்வளவு நாட்டஞ் சொரூபந் தோன்றாது
நாம ரூப நாட்டம்விடி னமது சொரூபந் தோன்றிவிடும்."

(ஸ்ரீ குமாரதேவர்.)

நாமரூப நாட்டம் மறைந்தால் சச்சிதானந்தம் தோன்றும். அது தோன்றியபின் உலகத்தோற்றம் மறையும். (சூரியனை நோக்கிக்கொண்டிருந்து பிறகு உலகைப்பார்த்தால் உலகம் தோன்றாததுபோல்)

"ஆதவன் றன்னைப் பார்த்திட் டகிலத்தைப் பார்த்த போது
ஆதவ னொளிமே லிட்டே யகிலந்தோன் றாதவா போற்
சேதனச் சிவத்தை நோக்கிச் செகத்தினை நோக்குங் காலை
சேதனச் சிவமே லிட்டுச் செகமெலா மறைந்து போமே"
(வள்ளலார் - பதிபசுபாசவிளக்கம்.)

ஞானி எங்கும் எல்லா வஸ்துக்களையும் சச்சிதானந்த சொரூபமாகவே காண்கிறான். அவன் யாவற்றிலும் சமதிருஷ்டியுடையவனாதலின் குதிரை, யானை, கழுதை, நாய் முதலியவற்றில் ஒரு வித்தியாசத்தையும் அவன் காண்பதில்லை. ஏனெனில் அவனுக்கு நாமரூபத்தில் திருஷ்டியில்லை. இத்தேகத்திலிருக்கும்போதே அவன் துவித உலகத்தைக் கடந்தவனா யிருக்கிறான். இத்தகைய ஜீவன்முத்தன் தேகம் நீங்கியதே விதேக கைவல்யத்தை யடைகிறான்.

"எல்லாம் சிவமென்னு மெண்ண முனக்குண்டே
லெல்லா நலனுமுனக் கெய்துமே" என்றனர் வள்ளலார்.]

அர்ச்சுனன் "ஏ பகவான்! இந்திரியங்கள் விஷயங்களில் பிரீதி யடைந்து பிரவேசிப்பது பல ஜன்மங்களில் பழக்கமானதாதலால், பாகிய விஷயங்களில் மனம் செல்லுமே. அப்போது பிரம்ம சொரூபத்தில் எவ் வாறு நிலைத்து நிற்கும்?" என்று வினவிய சங்கைக்குப் பகவான் அருளிச் செய்கின்றார் :—

"ஏ பார்த்த! சத்தாதி விஷயங்களிற் செல்லும் இந்திரியங்களால் அடையத்தக்க விஷய சுகங்களனைத்தையும் உள்ளத்தில் வெறுத்து நிரா சையுடையவனே பிரம்மானந்த சுகத்தை யடைவான். பிரம்மசுகமே யழி யாததென்றும் விஷய சுகங்கள் அழியத்தக்கவை யென்றும், பின்னர் அவற் றால் துன்பங்கள் உண்டென்றும் அறிந்த விவேகி அவற்றில் எள்ளளவும் இச்சைவையான்.

[இந்திரிய வாயிலாய் அனுபவிக்கப்படும் விஷயசுகங்க ளனைத்தும் அஞன்ம சம்பந்தமானவை. அவை அற்பமும், ஆதியந்தமுடையவையும் துன்பங்களை யுண்டாக்கத்தக்கவையுமாகிய அனித்தியங்களாம். பிரம்ம சுகம் ஒன்றே துக்கமற்ற நித்திய நிரதிசயானந்தமாம். விஷயசுகங்களை வெறுத்தவர்க்கே நித்தியானந்தமான பிரம்ம சுகம் கிட்டும்.]

(காமக் குரோதாதிகள் மோக்ஷத்திற்குப் பிரதிபந்தங்களாகையால் அவற்றை யடக்கியவனே முத்திக்குரியவனென்று பகவான் அருளிச் செய்கின்றார்.)

ஏ! பார்த்த! எவன் சரீரத்துடனே கூடியிருந்தும் விஷத்திற்கொப் பான காமக்குரோதாதிகளால் தகிக்கப்படாவண்ணம் அவற்றின் வேகத் தைச் சகித்து அடக்கிவிட்டுச் சர்வ சாந்தனாக விருக்கிறானோ,அவனே தீர னும் சுத்தனும் ஞானியுமாவன். அவனே பிரம்மானந்த சுகத்தையும் மோக்ஷத்தையும் அடைதற் குரியனாவன்.

[குடும்பத்தோடு கூடியிருக்கையிலேயே காமக்குரோதாதிகளின் வேகத்தைச் சகித்துச் சுகதுக்கங்களில் சமதிருஷ்டியுடையவனு யிருக்கப் பழகவேண்டும். அத்தகையோனே பின்னர் சந்நியாச நிலையில் அக் காமக் குரோதாதிகள் ஜனிக்காவண்ணம் தடுத்து பிரம்மஞானத்தை யடையத் தகுதியுடையவ னுவான்.]

(பகவான் காமக்குரோதாதிகளைச் சகித்தல் மாத்திரத்தானே மோக்ஷம் சித்தித்துவிடாதென்றும், இன்னும் அந்தர்முக சாதனம் வேண்டுமென்றும் அருளிச்செய்கின்ருர்.)

ஏ பார்த்த! எப்புருடன் அந்தரான்மாவிலேயே திருஷ்டிவைக்கின் ருனே, எவன் அந்தரான்மாவிலேயே சுகித்திருக்கிருனே, எவன் அந்த ரான்மாவையே தான் பிரியப்படும்ஸ்தானமாய்க்கொள்கிருனே அத்தகைய ஞானி பிரம்மானந்தத்தை யனுபவிப்பன்.

[பாகிய விஷயங்களின் இச்சையைவிட்டு அந்தர்முகத்தில் ஆன்ம சொரூபத்தில் இலயித்திருப்பவன் பிரம்ம சுகத்தை யனுபவிப்பான் என் பதாம்.]

(இப்போது பகவான் இனி ஆருமத்தியாயத்தில் அருளிச் செய்யப் படும் பிரம்மஞானத்திற்குச் சாதனமான தியான யோகத்தைக் குறிப்பா யருள்கின்ருர்.)

ஏ பார்த்த! சுரோத்திரம் முதலிய பஞ்சேந்திரியங்களைச் சத்தாதி விஷயங்களில் பிரவேசியா வண்ணம் தடுத்து, இரண்டு நேத்திரங்களின் பார்வையையும் இரண்டு புருவங்களின் மத்தியில் நிறுத்திவைத்து, பிரா ணன் அபானன் இரண்டையும் சமமாய் அசையாமல் கும்பிக்கச்செய்து, இந்திரியம் மனம் புத்திகளைச் செயித்து, இச்சை, பயம், குரோதம் இவ ற்றை யொழித்துச் சகல விஷயங்களிலும் விரக்தராய்ப் பழகும் யோகி களே ஜீவன் முக்த நிலையையடைவார்கள்.

இத்தகைய யோகி எப்பொருளை யுணர்ந்து முக்தியடைகிருன் என் னும் அர்ச்சுனனது சங்கைக்கு ஆதிமத்தியாந்தங்களொன்றும் தனக்கின்றி, யாவும் தானேயாய் யாவர்க்கும் புகலிடமாயுள்ள பகவான் அருளிச்செய் கின்ருர்:—

ஏ பார்த்த! பிராம்மணராதி ஜாதியபிமானமுடையோர் செய்யும் ஹோமாதி எக்ஞங்களுக்கும், அறிவுடையோர் செய்யும் குற்றமற்ற தபசு களுக்கும், ஏழுலகங்களுக்கும் சேருமிடமாயுள்ள (சச்சிதானந்த சொரூபி யாகிய) என்னை வேதங்களெல்லாம் சொல்லி முடித்தபடியே உள்ளவாறு அறிந்தவர் மீண்டும் ஜனியார்.

[சுரோத்திரம் முதலிய பஞ்சேந்திரியங்களை விஷயங்களில் பிரவே சியாவண்ணம் தடுத்தல், மனதையுண்முகப்படுத்தி அதன் சலனத்தை யடக்குவதாலும் இச்சையை யொழிப்பதாலும் கைகூடுவதாகும். இரண்டு புருவங்களின் மையம் என்பது இலலாடமெழுழ் சன்ற ஸ்தானம். அதுவே

சுழுனை அல்லது சுழிமுனை யென்பது. அங்குதான் ஆன்மா சாக்கிராவஸ்தைப்போது இருக்குமிடம். கண்களைப் பாதி மூடி இரண்டு கண்களின் பார்வையையும் ஒரே யிடத்தில்—நாசிநுனியில்—நாட்டினுல், நாட்டம் புருவ மையத்தில் சேரும்.

ஆன்மா மனதோடு சம்பந்தப்படின் மனதின் இரஜோ தமோகுணங்களால் சலனமடைகிறது. ஆன்மா லலாடமையத்தில் தனித்து நிற்பதே இங்கு வேண்டிய விஷயம். கண்கள் முழுமையும் மூடிக்கொண்டால் கேவலம் (நித்திரை) உண்டாகும். முழுமையும் திறந்துகொண்டால் சகலம் அதாவது பகிர்விஷயங்கள் தோன்றும். சகல கேவலங்கள் யோகாப்பியாசத்திற்கு விரோதிகள். சகல கேவலங்கள் தாக்காத இடமே நாம் அடையவேண்டிய இடமாகும். ஏககாலத்தில் மனதை யொடுக்கிப் புருவ மைய ஸ்தானத்தில் நிலைத்துநிற்கக் கூடியவர்களுக்கு இருவிழிகளின் பார்வையையும் ஒரு இடத்தில் நாட்டுதல் முதலிய தொழில் வேண்டுவதின்று. ஆனுல் அது எல்லாருக்கும் சாத்தியமான காரியமல்ல. அதனுனே இந்த அப்பியாசம் விதிக்கப்பட்டது.

அபானன் பிராணன் என்ற இரண்டு வாயுக்களில் அபானன் அதோமுகமாகவும் (கீழ்நோக்கி), பிராணன் ஊர்த்துவமுகமாகவும் (மேல்நோக்கி) செல்வன. கும்பகத்தால் இவற்றை நிறுத்தல் மனமடங்குவதற்காகவே. வாயுவடங்கிடின் மனமடக்கும் என்பது ஒருவழி. ஆனுல் வாயு மறுபடி கிளம்பின் மனமும் அலையத்தொடங்கும். மன ஒடுக்கமே வேண்டுவது. ஆதலின் நேரே மனதை யொடுக்குவதே உத்தமமார்க்கம் என்பது மேலோர் கருத்து.]

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

## 6-வது *யோக அத்தியாயம்.

(ஐந்தாமத்தியாயத்தி னிறுதியில் கூறப்பட்ட யோகத்தைப்பற்றி இந்த ஆறும் அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்படுகிறது.)

முன் அத்தியாயத்தில் பகவான் சர்வ கர்மங்களின் தியாகமேயோகம் என்று அருளினர். இதனுல் சர்வ கர்மங்களும் விடற்பாலன வென்றுகிறது. ஆகவே சந்நியாசத்தினும் யோகத்தினும் கர்மம் மிக்க கீழானதாகிறது என்று அர்ச்சுனனுக்குண்டாகும் சங்கையைப்பற்றி, அவனை யுத்தரூபமான கர்மத்திற் பிரவிர்த்திப்பித்தற் பொருட்டுப் பகவான் மீண்டும் அக்கர்மயோகத்தின் சிறப்பைக் கூறியருள்கின்றார் :—

ஏ பார்த்த ! தான் செய்யும் கர்மங்களின் பயனை யிச்சியாமல், செய்ய வேண்டிய நித்திய கர்மங்களைச் செய்கிறவன் சந்நியாசியும் யோகியுமாவான்.

---

* வடநூலில் 'அத்தியாத்ம யோகம்' என்று பெயர்.

தம்மிடத்துப் பொருந்தின சங்கற்பங்களனைத்தும் தியாகம் செய்யாதோர் யோகிகளாகமாட்டார்கள். பலவிச்சையோடு சர்வ கர்மங்களின் தியாகமே சரியான சந்நியாசமும் யோகமுமாகும்.

நிஷ்காம கர்மம் செய்வோர் யாகாதிகளையும் நித்திய கர்மங்களையும் விட்டவரல்லரேனும்,கர்மபலனைத் தியாகம் செய்தவர்களாதலின் சந்நியாசிகளும் யோகிகளுமாவர். சந்நியாசம் என்பது சகல இச்சைகளையும் தியாகம் செய்தல். யோகம் என்பது சித்தத்தின் கண்ணுள்ள விக்ஷேபத்தையொழித்தல். நிஷ்காம கர்மம் செய்வோனிடம் கர்மபலத்தியாகமும், கிடையாதவற்றில் இச்சையில்லாததால் சித்தத்தில் விக்ஷேபமின்மையும் உளவாமாதலின் அவன் சந்நியாசியும் யோகியுமாவன்.

[இச்சையற்ற விடத்தில் யோகம் சுலபமாய்ச் சித்திக்கும்—என், ஞானமே சித்திக்கும். மனம் இச்சாசொரூபம். இச்சையற்றால் மனம் ஒடுங்கும். உலகசம்பந்தமான இச்சை யெப்போதும் நாமரூபத்திலே நாட்டமுடையது. அதனால் இச்சையொழியின் நாமரூபநாட்டமும் மனதில் தரியாது. நிஷ்காமகருமம் செய்பவன் இச்சையற்றவனாகவே யிருக்கவேண்டும். ஆதலின் அவனிடம் சந்நியாசம், யோகம், இவற்றின் குணம் உண்டு என்பது கருத்து.]

பகவான் கர்மயோகமே சிரேஷ்டமானதென்று உபதேசித்ததாலும், சுருதியும் ஒருவன் சீவியகாலம் முழுமையும் கர்மயோகம் செய்யத்தக்கது என்று கூறியிருப்பதாலும், யாவருமே (யோகசாதனை கைவந்த அதிகாரி கூட) சீவியபரியந்தம் கருமயோகம் செய்யவேண்டுமோ என்று அர்ச்சுனனுக்கெழும் சங்கையை யொழிக்கப் பகவான் அக்கர்மயோகத்தின் கால அளவைப்பற்றிக் கூறியருள்கின்றார் :—

ஏ பார்த்த ! யோகசாதனம் கைவர இச்சையுடையவனுக்கு நிஷ்காம கருமம் சாதனமாகும். அச்சாதனத்தால் சித்தசுத்திபெற்று யோகத்தையடைந்தபின் (யோகத்தில் ஆரூடனாயின்) அவன் சகல கர்மங்களையும் தியாகம் செய்யவேண்டுமேயன்றி, பின்னும் கர்மத்தில் ஈடுபடுதல் உசிதமன்றாம். யோகபூமி கைவந்தபின் கர்மங்கள் விக்கினங்களாகும்.

[சித்தசுத்தி வாயிலாய் யோகம் கைவருமட்டுமே நிஷ்காமகருமம் அதற்குச் சாதனமாகவேண்டுவதாகும். இச்சையற்று மனோலயம் வாய்ந்து யோகம் கைவந்தபின் சகல கர்மபரித்தியாகம் செய்துவிட்டு, ஞானநிஷ்டைகூட முயலவேண்டுமாதலின், பின்னும் கர்மம் செய்துகொண்டிருப்பது ஞானநிஷ்டைக்கு இடையூறாகும் என்பது கருத்து. நிஷ்காம கர்மம் சித்தசுத்தியை யளிப்பதற்காகவே வேண்டப்படுவது. மற்றபடி சாதாரண கர்மங்கள் அஞ்ஞானத்தை யொழிக்கா. சித்தசுத்திபெற்றுத் தன்னை யறிந்தாலன்றி எவ்வளவுகாலம் கர்மம் செய்யினும் ஞானமுதியாது.

"பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக்கும்
துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே"

"மனக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடனூ றழுதாலும்
நினைத்து ணர்ந்தபின் கிட்டுமெப் படியிந்த நின்மல வான்மாவும்
அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத்தன் னறிவினாற் காணாமல்
கனத்த கர்மங்க ளாறுகஞ் செய்யினுங் காணுமோ காணாதே."

(கைவல்லிய நவநீதம்)

(தொடரும்) சீடன்.

## துறவு—யோகம்.

(348-ம் பக்கத் தொடர்ச்சி.)

இதுகாறும் கூறிப்போந்த பிரமசரியம் முதல் வானப்பிரஸ்தம் வரையிலும் கன்மமே யனுஷ்டிக்கப்படும். இக்கன்மத்தைக் கன்மயோகமென்று நூலுணர்ந்த பெரியோர் கூறுகின்றனர். ஏனெனில் கன்மமும் மனமொரு வழிப்பட நிலைநிறுத்திப் பரப்பிரமதியானத்துடன் செய்யப்படுவதால் என்க. யோகமென்பது என்ன? சலன சுபாவமுள்ள மனம் அசையாமல் நின்று பிரமத்துடன் ஆன்மாவைக் கலக்கச்செய்வதேயாம். யோகமென்பதற்குக் கலத்தல் கூடுதல் என்பதே பொருளாம். ஆன்மா பரமான்மாவாகிய பிரமத்தோடு கலப்பதே யோகமென்பர் பெரியோர். சிலர் சிவஜீவக்கலப்பே யோகமென்று பொருள்படுத்துவர். எங்ஙனமாயினும் மனமொரு வழிப்பட வேண்டுவதே யோகத்தின் இயல்பு. ஆதலால் யக்ஞம், ஹோமம், தவம், பக்தி, தெய்வாராதனை, குருபக்தி, மாதுர்பிதுர்பத்தி, பெரியோர் சேவை, தீர்த்தயாத்திரை, க்ஷேத்திரயாத்திரை, ஆலய தரிசனம், அதிதிபூஜையாகிய இவைகளும் இவைபோல்வனவான சற்கருமங்களும் கன்மயோகத்தின்பாற்படும். இக்கன்மயோகத்திலேயே அஷ்டாங்கயோகமும் அடங்கும். சரியை, கிரியை, யோகம், என்பனவெல்லாம் கன்மத்திலேயேயடங்கும். இந்த யோகமே துவிஜர்களுக்குப் பிரமோபதேசமென்று உபதேசிக்கப்படுவது. இதனை உபாயனமென்றும் கூறுவர் ஆதலால் பிரமசரிய முதல் வானப்பிரஸ்தம் வரைக்கும் உள்ள கன்மமெல்லாம் யோகமேயாம். யோகமில்லாமல் கன்மம் பலசித்தி தருவதில்லை. அதனால் கன்மசித்தியுடையவனுக்கே ஞானம் சித்திக்கும். அந்த ஞானத்துடன் பிரமதியானத்திலிருப்பதே ஞான யோகமாம். இதுபற்றியே ஞானயோக கருமயோகம் இரண்டும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட கர்மங்களென்று நினைக்கவேண்டாம். இரண்டு மொன்றேயாம். அப்படிச் சொல்லுகிறவர்கள் கசடறக் கற்றவர்களல்ல. இவ்விரண்டில் ஒன்றைச் செய்கிறவனும் ஒரே பலனை யடைகிறான். ஞானயோகத்தைச் செய்கிறவன் அடைகிற பலனையே கர்மயோகியும் அடைகிறான். ஆகையாலிரண்டு மொன்றே, வேறல்ல*. இந்த உண்மையை யுணர்ந்தவனே பண்டிதன். கர்மயோகமின்றி ஞானயோகத்தை யடையமுடியாது. கர்மயோகத்தைப் பூர்ணமாய்ச் செய்து முடித்தவன் சித்தசுத்திவாயிலாய் ஞானம் பெற்று மோட்சத்தை யடைகிறான். பலனை விரும்பாமல் எவன் கர்மத்தைச் செய்கிறானோ அவனைப் பாபங்கள் அணுகா. "இந்தக் கன்மயோகத்தை முன்பு சூரியனுக்குபதேசித்தேன். அவன் புத்திரனாகிய மனுவுக்குச் சொன்னான். அவன் இக்ஷ்வாகுவுக் குபதேசித்தான். இவ்வாறு பரம்பரையாக வந்த கன்

---

*தரம் பற்றி யிரண்டாகக் கூறப்பட்டது. சித்தசுத்தி வாய்க்கப்பெற்றவர்கள் ஞான யோகத்தையும், ஏனையோர் கர்மயோகத்தையும் அனுஷ்டிக்கவேண்டிய அதிகாரிகளாவர்.

மயோகத்தை இராஜரிஷிகள் அனுஷ்டித்து வந்தார்கள். அந்தக் கன்மத்தை ஏ பார்த்தா! நீயும் அனுஷ்டிக்கக்கடவை" என்று கண்ணன் தமது கீதையில் கன்மயோகத்தை வெகுவாக விரித்துரைத்தருளினர். ஆதலால் நித்திய நைமித்திக கன்மங்களைக் குறைவறவனுஷ்டித்து அஷ்டாங்கயோகத்தை யுணர்ந்து ஒழுகுவதே தவநெறி யென்று கூறப்படும்.

இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு அங்கங்களுடன் கூடியதாதலால், இது அஷ்டாங்கயோகமென்று கூறப்பட்டது. 1. இயமம்,—கொல்லாமை, சத்தியம் பேசுதல், திருடாமை, பிறர் பொருளை இச்சியாமை முதலிய சற்கருமங்களடங்கியது. 2. நியமம்-தவம், தூய்மை, உண்மை நூல்களை யோதியுணர்தல், சந்தோஷமாயிருத்தல், தெய்வாராதனை முதலியவை. 3. ஆசனம்-பிராணயாமம் செய்வதற்குத் தக்கவாறு உட்காருதல். அது சுவஸ்திக முதல் சுகமிறுதியாக யோகநூலிலுரைக்கப்பட்டவையாம். 4. பிராணயாமம்—இரேசகம், பூரகம், கும்பகம் என மூவகையாம். பிராணவாயுவை யுள்ளுக்கிழுத்தல் பூரகமாம். அவ்வாயுவை யுள்ளுக்குள்ளே நிறுத்தல் கும்பகமாம். இரேசகம் வாயுவை அளவறிந்து வெளிவிடுதலாம். இந்தப் பிராணயாமமே யோகத்துக்கு உயிர்போல்வது. இது சித்தியானல் மற்றவை யெளிதில் சித்தியாம். இதுவே மனதைச் சலியாமல் நிறுத்துவதற்குச் சாதனமாக நிற்பது. பிராணவாயு இயங்குந்தோறும் மனமும் சலித்தலால் வாயுவடங்கினுல் மனமும் அடங்கும் என்பது இந்த யோகக்காரர் கருத்து. இதனுல் பிராணவாயுவை வாசி (குதிரை) என்றும், மனம் அதிலேறி யுலாவிவரும் இந்திரிய ராஜனென்றும் கூறுப. வாசி யடங்க மனமுமடங்கி நிற்குமென்பர். "ஆபின் மிக்க வறிஞர் செயலெலாம், நேயமிக்க மனத்தை நிறுத்தல்காண், வாயுநிற்க மனமு முடனிற்கும், தோயநிற்குறி னிற்குந் துரும்புமே" என்று ஆன்றோர் கூறியுள்ளார். ஆதலால் பிராணயாமமே கன்மஞான யோகங்களுக்குச் சிறந்த சாதனமாயிருக்கின்றது. இதைக் குருமுகத்தாலுணர்ந்து சித்திபெற்றவனே சித்தன், யோகி, ஞானி யென்று புகழ்ந்து கூறப்படுவான். அவனுக்குச் சித்தியாகாதது ஒன்றுமில்லை. 5. பிரத்தியாகாரம் உபாதியை நீக்கி அந்தர்முகனுயிருத்தல், 6. தாரணை—கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி, புருவநடு இவற்றில் ஒன்றில் சதா மனதைச் செலுத்தியிருத்தல். புருவநடுவில் சிந்தைவைத்திருப்பதே சிலாக்கியமாம். 7. தியானம்—புலன்களை யடக்கி யோகத்திலிருத்தல். 8. சமாதி—இந்த யோகவலிமையால் சரீரத்துக்குள் ஆன்மாவாகிய தன்னைக்கண்டு தரிசித்தல்.

இவ்வாறு எட்டுவகையாகக் கூறப்படினும் பூரக கும்பக ரேசகத்தால் வாயுவைபுள்ளடக்கி மூலாதார அக்கினியை எரியச்செய்து, ஆண்டு பிரமரந்திர துவாரத்தை யடக்கிக்கொண்டு, பிராணவாயுவை ஆன்மாவுடன் பிரமரந்திர மார்க்கத்தில் செல்லாதபடி தடுத்து நிற்கும் குண்டலி சத்தி யென்னும் நாடியை விலகச்செய்து, அந்தப் பிரமரந்திர மார்க்கமாய்ச்

சென்று, துவாதசாந்தஸ்தானத்தில் அளவற்ற ஆதித்தர்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் பரசிவனைத் தரிசித்து, அதனோடு கலத்தலே யோகமாம் என்பர்.

இதற்கு இடைகலை பிங்கலை நாடிகளைச் சோதித்துச் சுழுமுனைநாடியில் பிராணவாயு வியங்குமாறு அப்பியாசிக்கவேண்டும். அப்போதுதான் பிராணவாயு சரீரம் முற்றும் பூரித்துக் கபாலமளவும் செல்லும். அப்போது பாம்பின் வடிவாய்ப் பிரமரந்திரவாயிலை யடைத்துக்கொண்டு தூங்குகிறதுபோ லிருக்கும் குண்டலிசத்தி ஜ்வலிக்கிற மூலாதார அக்கினியால் சூடுகொண்டு அவ்விடத்தை விட்டு விலகும். விலகினால் பிரமரந்திர வழி திறக்கப்படும். அந்தவாயில் வழியாய் பிராணவாயுவோடு ஜீவன் அதில் பிரவேசிக்கும். (தொடரும்.)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

---

## பெண்கள் பக்கம்.

### ஒரு கடிதம்.

பிரிய சகோதரிக்கு,

நீ இங்கிருந்து புகுந்த வீடு சென்று சுமார் ஒரு மாதம் ஆகிறது. நீ இனிமேல் இங்கு இருந்ததுபோலிராமல் ஒரு புதிய வாழ்வில் வாழ்வதாக நினைத்து ஒழுகவேண்டும். உனக்கு எவ்விதம் ஒழுகல் வேண்டுமென்பது, உன் வித்தியாப்பியாஸத்தாலும், பிறர் சொற்களாலும் நன்கு தெரிந்தபோதிலும், உன்னிடத்தில் எனக்குள்ள சகோதரவாஞ்சையாலும், நீ கற்றவற்றையும், கேட்டவற்றையும் அனுஷ்டித்து நற்குணவதியாய் நடக்கவேண்டுமேயென்ற இயற்கைக் கவலையாலும்,உனக்கு ஏற்கனவே கூறியுள்ள புத்திமதிகளிற் சிலவற்றை உனக்கு ஞாபகப்படுத்த இக்கடிதம் எழுதுகிறேன்.

நீ இங்கிருந்ததுபோல் புகுந்த வீட்டில் இருக்கமுடியாது. இருக்கவும் கூடாது. உன்னுடன் அடுத்துப் பழகாத புது மனிதர்களுடன் பழகி அவர்களுக்கு, ஹிதமாயும், அனுகூலமாயும் இருந்து அவர்கள் பிரியத்தைச் சம்பாதிக்கவேண்டும். நீ எப்போதும் இனிமையாகவும், மெதுவாகவும், மரியாதையாகவும் பேசவேண்டும். காரியமுண்டானால் மாத்திரம் பேசவேண்டுமேயல்லாது வீணாக வார்த்தைகளைச் செலவழிக்கக்கூடாது. கொஞ்சப் பேச்சும், கீழ்ப்படிதலுமே ஒருவளைப் பெருமைப்படுத்தும். உனது நாத்தியோ, மாமியோ, உன்னைக்குறித்து ஏதாவது சொன்னால் அதற்காக வருந்தவோ, பதில் பேசவோ, அதைக்குறித்து உன் சிநேகிதிகளிடத்து பிரஸ்தாபிக்கவோ கூடாது. அவ்விதம் சொல்வது அவர்களுக்கு உன்பேரிலுள்ள பிரியக்குறைவு வளர ஹேதுவாயிருக்கும். எப்போதும் சந்தோஷமுகத்துடனேயே இருக்கவேண்டும். உன் பொறுமையே உன்னைப் பெருமைப்படுத்தவேண்டும்.

உன் பர்த்தாவுக்கு மனம் கோணுதபடி நடந்துகொள். அவர் கோபித்தால் நீயும் பதிலுக்குக் கோபியாதே. பர்த்தாவிடம் பேசும்போது சமயமறிந்துபேசவேண்டும். நான்குபேருடனிருக்கும்போது பேசக்கூடாது. உனது நாத்தி, மாமி முதலியவர்களைக் குறித்து உன் பர்த்தாவிடம் ஒருபோதும் கோட் சொல்லாதே. அவ்விதம் சொல்வதால் உன் பர்த்தா உன்னை மேன்மையான குணங்கள் வாய்ந்தவளாய்க் கருதமுடியாது. எப்போதும் சுறுசுறுப்பாகவே யிருக்கவேண்டும். ஏனென்றால் சோம்பலிருக்குமிடம் மூதேவி யிருப்பிடம். உனது ஒழிவு நேரங்களை நல்ல பிரபந்தங்களை வாசிப்பதிலும், சத்விஷயங்களைப்பற்றிச் சிந்திப்பதிலேயும் கழிக்கவேண்டும். ஆடல், பாடல், நாடகசாலை முதலிய விஷயங்களைக் குறித்து உன் சிநேகிதிகள் பிரஸ்தாபிக்கக்கூட நீ இடங்கொடுக்கலாகாது. உன் சிநேகிதிகள் எங்காவது உன்னை அழைத்தால் புருஷன் அனுமதியின்றிப் போகாதே. தனியே வீட்டைவிட்டு ஒருபோதும் செல்லாதே. மற்றவர்களுக்கு உன்னிடத்தில் அச்சமும், மரியாதையும், வீட்டிலுள்ளவர்களுக்குப் புத்திரவாஞ்சையும், உன் பர்த்தாவுக்கு மாறுத வாத்ஸல்யமும் உண்டாகத்தகுந்தவிதத்தில் நடந்து, நீ உனக்கும், உனது பிறந்த வீட்டுக்கும், புகுந்த வீட்டுக்கும் கௌரவத்தை உண்டுபண்ணுவாயாக. அதற்கு ஈசுவரன் உன்னை அனுக்கிரகிப்பாராக.

N. சுப்பிரமணிய அய்யர்,
கோல்ஸ்டன் ஹில், நாகர் கோவில்.

---

## சந்தா நேயர்களுக்கு ஓர் அறிக்கை.

1922ஞு ஜூன்மீ 14உக்குள் நம்மிடம் வந்து சேருமபடி முன்னுடிச் சந்தாத்தொகையை யனுப்பினவர்களுக்கு ஏற்கனவே நாங்கள் செய்திருந்த விளம்பரப்படி "உருத்ரோத்காரி வருஷத்திய ஆனந்த போதினி சுத்த திருக்கணித பஞ்சாங்கம்" இனுமாக 7-4-1923க்குள் அனுப்பிவிட்டிருக்கிறோம்.

---

## 9-ம் ஆண்டு.

அடுத்த ஆடிமீ 9-ம் ஆண்டு பிறக்கிறது. கடந்தவருடம் அனுப்பியது போல் ஆனிமாத சஞ்சிகையை வி-பி-யிலனுப்பி 9-ம் வருட சந்தாவை வசூலிக்கத் தீர்மானித்திருக்கிறோம். முன்பணமனுப்பாமல் வி-பி-யில் சஞ்சிகை பெறுவதால் 3 அணு அதிகச்செலவும் வீண் ஆலசியம் முதலியவைகளும் நேர்வது யாவருமறிந்ததே.

கடந்த வருடம் மேமீ 30உ வரைக்குமேல் தவணை வைத்திருந்தோம். சிலர் ஜூன்மீ முதலில் சம்பளம் வருங்காலமானதால் அப்போது சந்தாவை யனுப்ப அனுகூலமாயிருக்குமென்று வரைந்தார்கள். அதனுல் பிறகு ஜூன்மீ 14உ வரைத் தவணையை யொத்திவைத்தோம். ஆனுல் அவ்விஷயம் ஜூன்மாதம் வெளியான சஞ்சிகையில்தான் பிரசுரிக்கப்பட்டது

ஆகவே அதனால் சந்தாதாரர்களுக்கு அனுகூலமில்லாமற்போக அனேகம் வி. பி.கள் திரும்பிவர நேர்ந்தது.

யாவும் யோசித்தே யிப்போது 1923ஹு ஜூன்மூ 14உ வரையில் தவணை யளித்திருக்கிறோம். ஆகையால் சந்தாநேயர்கள் ஜூன்மாத ஆரம்பத்திலாவது சந்தாவை அனுப்பிவிடலாம்.

அடுத்த வருடம் சஞ்சிகை வேண்டாதவர்கள் மேல்கண்ட தவணைக்குள் தெரிவித்துவிட்டால் வி. பி. யனுப்பாமல் 12-வது ஆனிமீ சஞ்சிகையை சாதாரண தபாலில் அனுப்பி விடுவோம். அப்படித் தெரிவிக்காமலிருந்து வி. பி. வந்தபின் வாபீஸ் செய்வோர்க்கு 12-வது சஞ்சிகை பிறகு அனுப்பப்படமாட்டாது.

சஞ்சிகையை நிறுத்தும்படி வரைவோரும், மணியார்டர் அனுப்புவோரும் சந்தா நம்பரை தெரிவிக்காவிட்டால் பின்னால் வி. பி. வரும். ஆகையால் ஒவ்வொரு சந்தாதாரும் தயவுசெய்து இம்மாதம் வரும் சஞ்சிகையின் மேல்விலாசத்தில் பெயருக்குமுன் அச்சிலாவது, அல்லது வலது மேல் மூலையில் கையெழுத்திலாவது குறித்திருக்கும். நம்பரை யவசியம் தெரிவிக்கும்படி பிரார்த்திக்கிறோம். பத்திராதிபர்.

---

## நவீன நாகரீக தடபுடல்.

சகோதர சகோதரிகளே! மேல்நாட்டாரைச் சேர்ந்தொழுகி அவர்களிடத்தினின்றும் அநேக கொடுஞ் செய்கைகளைக் கைக்கொண்டு அவையே ஐரோப்பியர் கையாடும் முறைகளில் மிகவும் அத்தியாவசியமானவையும், சிறந்தவையும் என எண்ணி அநேக இந்திய சகோதரர்கள் ஏமாந்து பின்பற்றி வருகின்றனர். அந்தோ! அவர்கள் அதனை ஊன்றி யோசிப்பார்களாகில் அறிவுள்ளோர் அப்பொழுதே அகற்றிவிடுவார். அவை என்னெனிற் கூறுதும்:—நம்மிந்திய மக்களுக்கு வைதிக லௌகிக கிரிகாதி விஷயங்களுக்குச் சிகை அத்தியாவசியம் வேண்டியதிருக்க, அதனை முற்றிலும் கைவிட்டு ஷோக்காயிருக்கவேண்டுமெனக்கருதி ஷேக் வைத்துக்கொள்ளுகின்றனர். குளிரும் பனியும் நிறைந்த அந்நாட்டிற்கு அமைந்த உடைகளை உஷ்ணம் நிறைந்த இந்நாட்டினர் தரித்துக்கொண்டு அரைத் துரையாகி விடுகிறார்கள். இதனால் உஷ்ணம் அதிகரித்துப் பலவிதப் பிணிகள் ஏற்படுகின்றன. இம்மட்டோ! இன்னும் உக்கா, சிகரட், பீடி முதலியவை உறிஞ்சுதல், மதுபானம் செய்தல் முதலியவைகளாம். இவற்றால் க்ஷயம் முதலிய நுரையீரல் சம்பந்தமான வியாதிகளும், புத்தி சுவாதீனமின்றித் திரிவதால் மதிப்புக் குறைதல், மூளைக்கொதிப்பு முதலிய பலவித கெடுதல்களும் உண்டாகின்றன. இவையன்றித் தாய்பாஷையைக் கைவிட்டன்னியபாஷையைக் கைக்கொண்டு தமிழ்வார்த்தை சரியாய் வாயில் நுழையவில்லை என்கின்றனர். அந்தோ! இம்மாதிரி தாய்நாட்டின் கொள்கைகளுக்கு மாறாக நடப்பதால் மாதுர்துரோகம் என்பதை கிஞ்சித்தும் நினையாது நாகரிகம் நாகரிகம் எனக் கையாடி வருகின்றனரே, இதுவோ நாகரிகம். இந்நாகரிகத்தை முற்றிலும் மறந்து ஆன்றோரின் கொள்கைகளை

உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

" எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "—திருவள்ளுவர்.



தொகுதி 8 } உருத்ரோத்காரி௵ ஆனிமீ கஉ 1923௵ ஜூன்மீ 15௳ { பகுதி 12

## கடவுள் வணக்கம்.

மத்தர் பேயரொடு பாலர் தன்மையது
மருவி யேதுரிய வடிவமாய்
மன்னு தேசமொடு கால மாதியை
மறந்த நின்னடிய ரடியிலே
பத்தி யாய்நெடிது நம்பு மென்னையொரு
மைய றந்தகில மாயையைப்
பாரு பாரென நடத்த வந்ததென
பார தத்தினுமி துள்ள தோ
சுத்த நித்தவியல் பாகு மோவுனது
விசுவ மாயைநடு வாகவே
சொல்ல வேணும்வகை நல்ல காதிகதை
சொல்லு மாயையினு மில்லையென்
சித்த மிப்படி மயங்கு மோவருளை
நம்பி னோர்கள்பெறு பேறிதோ
தெரிவ தற்கரிய பிரம மேயமல
சிற்சு கோதய விலாசமே. (1)

வெள்ளங் குலாவுசடை வெள்ளக் கருணையினன்
கள்ளங் குலாவுவஞ்சக் கள்ளனே—னுள்ளத்தி
லில்லனென்று லன்னவன்று னெங்கும் வியாபகத்தா
னல்லனென் றுஞ் சொல்லவழக் கரம். (2)

எதுக் குடற்சுமைகொண் டேனிருக்தே னையனே
யாதிக்க மோன வருட்டாயே—சோதியா
மன்ன நிருவிகற்ப வானந்த நிட்டையிலே
பின்னமற நில்லாத பின். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. மத்தர் = ('உன் மத்தம் பிடித்தவன்' என்று கூறுவதுபோல்) எப்போதும் ஒரே விதமாய்ப் புகழ்ந்தவரையும் வைதவரையும் வித்தியாசமாய்க் கருதாமல், தன் தேகத்தைப் பற்றிய சுத்தா சுத்தத்தையும் கவனியாதிருப்பவர்.

பேயர் = பேய்பிடித்தவர்—அவர்களுக்குப் பிறர் செய்யும் துன்பங்களை அப்பேயே தாங்கிக்கொள்வதாக, அவர்கள் அவற்ருல் உறுத்தப் படாதவர்கள் போல் இருப்பார்கள்.

பாலர் = குழந்தைகள்—குழந்தைகள் பசி வந்தபோது பாலுண்டு மற்றபடி எவ்விதக் கவலையுமின்றி, எதிர்காலத்தைப்பற்றி எவ்வித ஏக்கமுமின்றி ஏதற்கும் அஞ்சுதலுமின்றி, பிறர் சுக துக்கமும் தமக்குத் தாக்காமல், வேண்டுவது வேண்டாமையின்றி ஆனந்தமா யிருக்கும் தன்மையுடையன. அவைகள் ஏதேனும் செய்யினும் எவ்விதப் பயனையும் கருதிச் செய்வதில்லை.

துரியம் = சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி எனும் மூன்றவத்தைகட்கும் அப்பாற்பட்ட நான்காம் நிலை. கருவிகரணாதிகளை யெல்லாம் கழித்த பின் ஆவரணம் அல்லது மாயை யென்பதையும் கடந்து ஆன்மா தான் மாத்திரமாய்த் தனித்து நிற்கும் சுத்த நிலையே துரியமாகும்.

தேசமொடு காலமாதியை மறந்து = கால தேச வஸ்து பரிச் சேதமற்று.

காதிகதை மாயையின் அதியற்புதமான பிரபாவத்தைக் காட்டுதற்கு வாசிட்டத்தில் கூறப்பட்டுள்ள ஒரு கதை.

மத்தர் பேயர் பாலர் அரசர் இவர்கள் தன்மையை யடைந்திருப்பது துறவிகளாகிய சுத்த ஞானிகள் இருக்கும் நிலையாதலால் அவ்வாறு கூறினர்.

2. வெள்ளம்=ஜலம். இங்கு கங்கையைக் குறிக்கும்.

வெள்ளக்கருணையினன்=கருணாசமுத்திரமான ஈசுவரன்.

வியாபகத்தான் அல்லன்=சர்வவியாபக முடையவனல்ல.

"நான் கள்ளம் பொருந்திய வஞ்சநெஞ்சுடையவ னாதலின் என் உள்ளத்தில் பரமசிவன் இருக்கமாட்டான் எனில், ஈசுவரன் சர்வவியாபக முடையவன். அதாவது எள்ளுக்குள் எண்ணெய்போல் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்து நிற்பவன் என்ற உண்மை பொய் யென்று கூற நியாயமுண்டாகும். ஆகையால் என் உள்ளத்திலும் பரமசிவன் உளன்" என்று பரமாத்மா நமக்குள் அனன்னியமாக உளன் என்பதைத் திறப்படுத்தக்கூறி யருளினர். இதை யெப்போதும் மறவாதிருப்பது அனன்னிய பக்தியாகும். இதனல் சித்தசுத்தியும் அத்துவாரா மெஞ்ஞானமும் சித்திக்கும்.

3. ஏதுக்கு=என்னத்திற்காக.

உடற்சுமைகொண்டு ஏன் இருந்தேன்=உடலாகிய சுமையைத் தாங்கிக்கொண்டு எதற்காக உலகில் வாழ்ந்துகொண் டிருக்கிறேன்.

பிரம்மான்ம ஐக்கியமாகிய அத்துவித முத்தி நிலையை யடைதற் கேதுவாகிய நிருவிகற்ப நிட்டையில் நிலைத்து நிற்காமல் தேகத்தைச் சுமந்துகொண்டு திரிவதில் ஒருபயனு மில்லை யென்பது கருத்து.

---

## ஆனந்தபோதினி

உருத்ரோத்காரி௵ ஆனி௴ க௳

### மதாசாரம்.

ஒதற்கரிய வாதிநாயகனும் ஆண்டவன் அருள் கொடளித்த விப்பூவுலகின்கண் ஆன்மாக்கள் அவனையறிந்து வழிபட்டுய்யும் வண்ணம் தோன்றி நிலவும் மதங்கள் பல. எனினும் அவற்றுள் தற்காலம் உலகில் பெரும்பாலாரால் அநுசரிக்கப்படுபவை, நமது சமயம், பௌத்த சமயம், ஈஸ்லாம் மார்க்கம், கிருஸ்து சமயம், என்பவைகளே யாகும். ஒவ்வொரு மதத்திலும் கூறப்பட்டுள்ள நெறி நின்றொழுகற்குச் சில முறைகளும் விதி நிஷேதங்களும் உள. இவையே மதாசாரம் எனப்படும். இவ்வாசாரம் ஒவ்வொரு மதத்திற்கும் வெவ்வேறு மாதிரியாக விருக்கும். சில அம்சங்களில் ஒன்றுக்கொன்று நேர்மாறாகவும் தோற்றும். அவ்வாறாயின் இவ்...ல் எது சரி எது தப்புஎனின், அவ்வாறு தீர்மானித்தற்...லாது. ஏனெனின் அந்தந்த மதத்தின் ஆசாரம் அதற்குப் பொருத்தமாயும், தக்க காரணமுடையதாகவுமே யிருக்கும். சில முக்கியமான விஷயங்களில் எல்லா மதங்களின் ஆசாரமும் ஒரே விதமாகவிருக்கும். திருட்டாந்தமாய் நமது ஆலயங்களெல்லாம் கிழக்குநோக்கியே யிருக்கும். நாம் தெற்கு அல்லது வடக்கு முகம்திருப்பி நமஸ்கரிக்கிறோம். நிட்டை சாதிப்போர் வடக்கு நோக்கியே யமரவேண்டுமென்பது விதி. மஹம்மதியர் மேற்கு நோக்கியே வணங்குகின்றனர். கிருஸ்தவர்களுக்கு இந்தத் திக்கென்ற நியதியில்லை. இவ்வாறிருப்பினும் அந்தந்த மதத்தில் அதற்குத்தக்க காரணமுண்டு. திரியாங்கம், பஞ்சாங்கம், அஷ்டாங்கம், சாஷ்டாங்கம் முதலியவற்றில் ஒன்றாலோ சிலவாலோ கடவுளை வணங்குவதும், மனதை யொருவழிப்படுத்திக் கடவுளைத் துதிப்பதும் ஆகிய இவ்வாசாரங்கள் எல்லா மதத்தினர்க்கும்

பொதுவாகவேயுள. அதோடு எல்லா மதங்களும் சச்சிதானந்த சொரூபியாகிய அந்த ஒரு கடவுளாகிய இடத்திற்கு ஆன்மாக்கள் செல்லவேண்டிய மார்க்கங்களையே காட்டுகின்றன. மார்க்கங்கள் வெவ்வேருய், தூரம், சமீபமாகவும், நேர்வழி, சுற்றுவழியாகவும் இருக்கக்கூடுமெனினும், கடவுளாகிய இடம்மட்டும் ஒன்றே யாகும்.

ஆதலின் இங்கு நமது மத ஆசாரத்திற்கும், பிறமத ஆசாரத்திற்கும் ஒப்பிட்டுப் பார்க்கவாவது ஒன்று உயர்வு ஒன்று தாழ்வு என்று நிரூபிக்க வெண்ணியாவது நாம் இதை வரையத் தொடங்கவில்லை. மற்றபடி எதற்காகவெனின், மேல்நாட்டுக் கல்வி ஆசாரம் இவற்றின் சகவாசத்தால் அந்நாட்டு நாகரீகத்தின் மயக்கிற் சிக்கி, நமது மதாசாரங்களை யாராய்ந்துணராமல் அவை வீணான மூடக் கொள்கைகளென்று அலட்சியமாய்க் கூறி ஈசுரசிந்தனையே யற்று உள்ளத்தில் உலோகாயதனுய்க் கெட்டழியும் வழிநடக்கும் நம்மவர்க்கு நமது மதாசாரங்களின் விசேஷங்களைச் சுருக்கமாய்க் கூறி ஆத்மாவின் ஈடேற்றத்திற்கு அவை யவசியம் என்பதை எடுத்துக் காட்டவே இதை வரையநேர்ந்தது. அதுவும் இச்சமயம் வரைய நேர்ந்த காரணமென்னவெனில், உத்தமத் துறவியாகிய பட்டினத்தடிகள் முத்திபெற்றதும், சமயாசாரியரால் பாடப்பெற்றதும், என்றும் மகான்கள் வாசம் செய்ய இச்சிப்பதும், நடராஜப் பெருமான் எழுந்தருளி யிருப்பதுமாகிய திருவொற்றியூர் க்ஷேத்திரத்தில் பிரதி சுக்கிரவாரந்தோறும், சோமவாரமும் அனேகர் சென்னை முதலிய வெளி யிடங்களினின்று அம்மன் தரிசனத்திற்கும் சுவாமி தரிசனத்திற்கும் வருவதைக் காண்கிறோம். இவர்களில் உள்ளன்போடு ஈசுவரனைத் தரிசிக்கவந்து ஆசாரத்தோடு அதைச் செய்கிறவர்களும் உண்டுதான். ஆனல், பெரும்பாலோர் வாரமுழுமையும் தெய்வம் என்ற சிந்தனையே யின்றி, எவ்வழியிலேனும் சரி, ஒழுங்கான உடையணிந்து பெரிய மனிதர் என்று பெயர் வைத்துக்கொண்டு யாரை மோசம் செய்தேனும் சரி பொருள் சம்பாதிப்பதும் ஒய்வுகாலங்களிலும் பின்னல் எப்படி யாரை யேய்த்துப் பணம் பறிக்கலாம் என்று சிந்திப்பதும் உண்பதும் உறங்குவதும் அல்லது சிற்றின்பக் கேளிக்கைகளில் காலங் கழிப்பதுமாக இருப்பவர்கள் அன்று வாரத்திற் கொருமுறையோ இரண்டு வாரங்களுக்கொருமுறையோ உல்லாசமாய்த் திருவொற்றியூருக்கு வண்டியேறி வருகிறர்கள். இவர்களில் சிலர் தம்

அருமை மனையாட்டி "அம்மனைச் சேவிக்க நான்கூட வருகிறேன். நான் திருவொற்றியூர் பார்த்ததேயில்லை. பட்டினத்தார் கோயிலைத் தரிசிக்க மிக்க ஆசையா யிருக்கிறது" என்றால் "சீ கழுதை வேலையில்லை. இன்னும் இந்தப் பசங்களை யிழுத்துக்கொண்டு ஒரு வண்டி வைத்துக்கொண்டு — என்ன இலச்சை! எல்லாம் இன்னொருமுறை பார்த்துக்கொள்வோம்" என்று கூறிவிட்டு நேரே கடைக்குச் சென்று மிட்டாய், பழவர்க்கங்கள், புஷ்பம், தேங்காய், வெற்றிலை பாக்கு யாவும் வாங்கிக்கொண்டு ஒரு முதல்தர ஜட்காவண்டி சகிதம் தங்கள் காதற்கணிகை வீட்டிற்குச்சென்று அவளையும் அவள் தோழியையுமழைத்துக்கொண்டு வருகிறார்கள்.

ஆனால் இத்தகையோர்கூட நல்ல உயர்ந்த ஆடையாபரணங்களால் தங்களை யலங்கரித்துக்கொண்டு கேளிக்கையாக அன்னியர் மெச்சவேண்டுமென்ற எண்ணத்தோடு சந்நிதிக்குச் சென்றாலும் வெளிக்காவது ஆசாரத்தோடு காணப்படுகிறார்கள். ஆனால் தன் தாய்ப்பாஷையைக் கலப்பில்லாது இரண்டு வாக்கியங்கள் சரியாய்ப் பேசத்தெரியாத, ஆங்கிலங்கற்ற (அதிலும் அரைகுறையாகவே) அண்ணாத்தைகள் உண்டே, இவர்கள் கோவிலுக்குள் போவதுதான் ஏனோ நமக்கு விளங்கவில்லை — இவர்கள் கடவுளைத் தரிசிக்கவேண்டுமென்ற எண்ணத்தோடு சென்றால் நெஞ்சில் அச்சம் தானே யுதிக்கும். அதற்குத் தக்க ஆசாரத்தோடும் பயபக்தியோடுமே ஈசுவரத்தியானத்தோடு செல்வார்கள். இவர்கள், வேடிக்கையை அல்லது, மேலே கூறப்பட்ட ஆசாமிகள் அழைத்து நம் மாதர்களைப்பார்க்க வருபவர்களே. இத்தகையோர் கோயிலில் ஜனங்களில்லாத காலத்தில் எட்டிக்கூடப் பாரார்கள்.

ஒரு சுக்ரவாரம் மாலைப்போது இத்தகைய இரண்டு ஆசாமிகளைச் சந்நதியினெதிரிலுள்ள திருக்குளத்தருகில் கண்டோம். இருவரும் மேல் அங்கியும் (ஷர்ட்) சரிகை அங்கவஸ்திரங்களும் அணிந்திருந்தார்கள். இருவரில் ஒருவன் மேல் வேஷ்டியை ஒரு கையில் சுருட்டிக்கொண்டு சட்டையைக் கழற்றிக்கொண்டே மற்றவனை நோக்கி, "இரத்னம் ஷர்டை யிங்கே அதோ அந்தச் செட்டிக்கடையில் வைத்துவிட்டுப்போய், வரும்போது எடுத்துக்கொள்ளலாம்" என்றான். இரத்னம்! என்பவன் "சரி, நோக்கு வேலையில்லையாக்கும். கழற்றிக்கொண்டு, மறுபடி போட்டுக்கொண்டு— ஏனோ இப்படியே போய்வந்துவிட்டால் போகிறது" என்றான்.

மற்றவன்:— அப்படிக்கன்று கோயிலுக்குள் போவதானால் திருக்குளத் தீர்த்தத்தில் கைகாலலம்பிக்கொண்டு ஜலத்தை மேலே புரோக்ஷித்துக் கொண்டேனும் விபூதி யணிந்துகொண்டுதான் செல்லவேண்டும்'' என்றான்.

இரத்னம் என்பவன் வெறுப்போடு மற்றவனை நோக்கி (ஆங்கிலத்தில்) "கிட்டு! தீஸ் ஆர் ஆல் ஸ்டுபிட் ஸூபர்ஸ்டிஷன்ஸ்—ஸ்பிரிங்க்ளிங் தெட் டர்டி வாடர் ஆன் ஹெட்! யூ கென்டு ஆல் யூ லைக் அண்ட் கம் ஸூன். ஐ உல் பி என்ஜாயிங் குட் பிரீஸ் ஹியர்'' என்றான். அதாவது "கிட்டு! இவை யெல்லாம் முட்டாள் தனமான மூடக்கொள்கைகள். அந்த அழுக்குச் சலத்தைத் தலை மேல் தெளித்துக்கொள்கிறதாம். நீ வேண்டுமானாலவற்றைச் செய்துகொண்டு சீக்கிரம்வா. நான் இந்த நல்ல கடற்காற்றை யனுபவித்துக்கொண்டு இங்கேயே யிருக்கிறேன்'' என்றான்.

கிட்டு என்பவன் பேசாமற்போய்க் குளத்திலிறங்கிச் சுத்தி செய்துகொண்டு விபூதி யணிந்து சட்டையைக் கடைக்காரனிடம் வைத்துவிட்டு அங்கவஸ்திரத்தை அரையிற் சுற்றிக்கொண்டு தேங்காய் பழம் கற்பூரம் வாங்கிக்கொண்டு இரத்தினத்திடம் வந்தான். பிறகு இருவரும் கோயிலுக்குள் சென்றார்கள். இரத்னம் சட்டையும் மேலே அங்கவஸ்திரமும் அணிந்தபடியே கைபாட்டிக் கொண்டே சென்றான். கிட்டுமட்டும் துவஜஸ்தம்பத்தைக் கடந்து சற்றுதூரம் சென்றபின் கைகளைக் கட்டிக்கொண்டான். நாமும் இவர்களைக் கவனித்துக்கொண்டே இரண்டாம் முறையாகச் சந்நதிக்குள் சென்றோம். கிட்டு சுவாமி சந்நதிக்கும் அம்மன் சந்நதிக்கும் சென்று சேவித்து வந்தான். இரத்னம் என்பவன் "உள்ளே பயங்கரமான புழுக்கம். நீ போய்வா நான் இங்கேயே நிற்கிறேன்'' என்று ஆங்கிலத்தில் வெறுப்போடு மிக அலட்சியமாய்க் கூறிவிட்டான்.

கடைசியில் வெளிவந்தபோது இரத்னம் கிட்டுவை நோக்கி ஏதோ ஒரு பந்தயம் ஜெயித்தவன்போல் "இப்போது நானும் கோயிலைப் பார்த்தேன், நீயும் பார்த்தாய். நீ அனுபவித்த வீண் கஷ்டங்களால் உனக்கென்ன விசேஷபலன் கிடைத்தது?'' என்று ஆங்கிலத்தில் கேட்டான்.

கிட்டு மனவருத்தத்தோடு "நீ கோயிலுக்குள் மட்டும் வந்தாயேயன்றிச் சுவாமியையாவது அம்மனையாவது தரிசிக்கவில்லையே'' என்றான்.

இரத்னம் அது மெய்யென்று அவன் மனச்சாட்சி கூறுவ தால் சற்றுநேரம் விழித்தான். பிறகு சமாளித்துக்கொண்டு "அந்த இருட்டிலும் ஜனநெருக்கத்திலும் வந்து சொல்லொணுக் கஷ்டத்தோடு உன்போல் வியர்வை யொழுகிக்கொண்டு அக்கல் லுருவங்களை — ஒன்றேனும் மானிடவுருவும், மற்றது எந்த வுரு வமுமல்ல, குழவிக்கல்லில் பாதியிருக்கும் (இவன் மூலஸ்தானம் பார்க்காதவன்)— அவற்றைக் கண்ணுல் கண்டுவிட்டால்தான் சுவாமியைத் தரிசித்ததாகுமோ?" என்றுன்.

பாபம் கிட்டு பதில் கூறமுடியவில்லை. அதற்குமேலும் மௌனமாயிருக்க நம்மால் முடியவில்லை. சம்பாஷணையால் இரு வரும் மறையோர் குலமைந்தர்கள் என்று தெரிந்ததால் நம்மனம் பின்னும் வேதனை யடைந்தது. நாம் கிட்டுவை நோக்கி "ஐயா! நீர் அக்கல் உருவங்களை ஈசுவரசொரூபமாகப் பாவித்து தரிசித்த தால் தன்னைவிட விசேடபலன் நீர் அடையவில்லையென்று உமது நண்பர் கூறுகிறுர். நீர் விசேடபலன் அடையாதிருப்பினும் தரி சித்ததற்குத் தக்க பலனை யடைவீர் என்பது சத்தியம். இவர் ஈசுவரனைத் தரிசித்ததாக இவர் மனச்சாட்சி கூறுதென்பதும் சத்தியம். ஏனெனில் நீர் அவ்வுருவை யீசுவரனென்று நம்பினீர், இவர் கல்லென்றெண்ணி யிருக்கிறுர். அவரவர் மனேபாவப்படி பலன் கிடைக்கும்" என்று கூறிவிட்டுத் துரிதமாய்ச் சென்றேம். அந்த இரத்னம் என்பவன்போன்ற அறிவிலாமூடர் இன்னும் பலர் இருக்கலாகுமென்றெண்ணியே யிதை வரையலாயினேம்.

இனி முன்னே, மற்ற மதங்களுக்கு ஒவ்வொரு பெயரைக் கூறிவிட்டு, நமது மதத்திற்குத் தனியாய்ப் பெயர் கூறுமல் நமது மதம் கூறுவானேன்? ஏன் ஹிந்துமதம் என்று கூறவில்லை எனின், அதற்குக் காரணம் இருக்கிறது. நாம் ஹிந்து என்பதை யிதுகாறும் யாவரும் அறிந்தே யிருப்பீர்கள். அதனுல் நமது மதம் என்று நாம் கூறியது ஹிந்துமதமேயென்று அறிந்துகொள் வீர்கள். நீங்கள் அவ்வாறு அறிந்துகொள்ளக்கூடுமே யன்றி நமது மதத்திற்கு ஒரு பெயர் இல்லை. எப்படியெனில்,

1-வது:—ஹிந்துமதம் என்றுல் ஹிந்துக்கள் அநுசரிக்கும் மதம் என்றே பொருள். கிரேக்கர் முதலிய நாட்டார் ஏதோ காரணங்கொண்டு நம் பாரதநாட்டிற்கு இந்தியா என்றும் அதன் ஜனங்களுக்கு ஹிந்துக்கள் இந்தியர் என்றும் பெயரிட்டார்கள்.

அவ்வழியே நமது மதத்திற்கு ஹிந்துமதம் என்ற பெயரும் வந்ததேயன்றி அது நமது மதத்தின் பெயராகாது. நாம் அனு சரிக்கும் மதத்தைக் கூறுவது வேதமாதலின் இதற்கு வைதீகமதம் எனவும், உட்பிரிவுகளில் சைவம் வைஷ்ணவம் எனவும் கூறத் தகுமேயன்றி நமது மதத்திற்கு வேறு பெயரில்லை. நமது மதத் தின் உண்மையறியாத அன்னிய மதத்தவர்—நாம் அதாவது ஹிந்துக்கள் அநுசரிக்கும் மதம் என்றறிவதற்குக் குறிப்பாய்— கந்தன் புத்தகம் என்பதுபோல், ஹிந்துமதம் என்று கூறிக் கொண்டார்கள். கந்தன் புத்தகம் என்றால் கந்தனுக்குச் சொந்த மான புத்தகம் என்று அதைக் குறிப்பிடுமேயன்றி அது அப்புத்த கத்தின் பெயராகாது. அதன் பெயர் பாரதம் என்றிருந்தாலு மிருக்கலாம். பாகசாத்திரம் என்றிருந்தாலு மிருக்கலாம்.

2-வது. என் இப்படி வேறு பெயரில்லை யெனில் இம்மதம் மற்ற மதங்களைப்போல் மானிடராகச் சனித்த ஒருவரால் தாபிக் கப்பட்டதல்ல. இதற்குக் காலவரையும் கூறமுடியாது. ஏனெனில் இதில் கூறப்பட்டுள்ள பாரமார்த்தீக விஷயங்கள் ஆதியும் அந்தமு மின்றி என்று மழியாது நித்தியமாய், எவராலும் மறுக்கக்கூடா தவைகளாய், ஏனெனில் பிரத்தியட்ச அநுபவமாய் உணரக்கூடி யவைகளாயுள்ள சத்தியங்களே யாகும்.

3-வது. வேதத்தில் கூறப்பட்ட உண்மைகள் இயற்கையாய் என்று முள்ளவையேயன்றிப் புதிதாக ஒருவர் கண்டுபிடித்துக் கூறியவையல்ல. ஆனால் நம் முன்னோர்களாகிய மகான்கள் தம் அரிய முயற்சியால் தங்கள் ஆத்ம சக்தியால் அவ்வுண்மைகளை அநுபவமாய்ப் பிரத்தியட்சத்தில் கண்டறிந்து அவற்றை விரிவாய் எழுதியும், தம் சந்ததியார்க்கு அநுபவத்திற்கு வரும்படி போதித் தும் வைத்தார்கள். அவர்கள் வழியறிந்து தங்கள் ஆயுளைப் பல யுகங்கள் வரையிலுங்கூட விர்த்தி செய்துகொண்டு இவ்வுல கம் பஞ்சபூதமாய் மாறும்போது அவ்வப் பூதமயமாய்த் தாங் களும் பிரளயலட்சணத்தையும், பிறகு சிருஷ்டியுண்டாகும் இலட் சணம் முதலியவற்றையும் யாவற்றையும் கண்டறிந்து நமக்காக அவற்றை வெளியிட்டு வைத்தார்கள். (வாசிட்டத்தில் புசுண்டர் கதையில் இதைப்பற்றி விரிவாய்க் காணலாம்) அத்தகைய மகான் கள்தான் வேதத்தைப் பிரித்தெழுதி வைத்தார்கள். அவர்கள் பெயர்கள் அவற்றை யெழுதியவர்களாய்க் கூறப்பட்டிருக்கின்

றனவேயன்றி, நமது வேதம் பலரும் கும்புகூடி எழுதிய ஒன்றல்ல. அன்னிய நாட்டாரும் அன்னிய மதஸ்தருமாகிய சிலர் எழுதிய நமது தேசசரித்திரங்களில் வேதம் என்பது சில காலத்திற்குமுன் இரிஷிகள் என்ற சிலரால் எழுதப்பட்டதென்றும், ஆதியில் நம்மவர் நாகசர்ப்ப உருவம் செதுக்கப்பட்ட கற்களையும் மரங்களையும் சூரியனையும் தெய்வங்களாக வணங்கி வந்தார்களென்றும் எழுதி யிருக்கிறார்கள். இது மட்டுமல்ல. ஆதியில் நமது நாகரீகம் சுத்த கேவலமாகவும், நம் முன்னோர் மிக்க மூடத்தன்மையில் இருந்ததாகவும் இப்போது மேல்நாட்டார் இங்கு வந்தபிறகே நாம் நாகரீகம் செல்வம் சீர்திருத்தம் யாவுமடைவதாகவும், அதோடு நம்மவர் துரைத்தனம் செய்யவே தெரியாதவர்களென்றும் ஒரு சாத்திரமு மறியாதவர்களென்றும் எழுதியிருக்கிறார்கள். இப்போது அவர்கள் வரைந்தவை பெரும்பொய் யென்றும், அவர்கள் நம்மை மயக்கித் தாங்களும் தம்மவர்களும் க்ஷேமமடையக் கருதியே யப்படிச் செய்தார்களென்றும், இப்போது மேல்நாட்டார் தாங்கள் புதிதாய்க் கண்டுபிடித்ததாகக் கூறும் சாத்திரங்களில் பெரும்பாலானவை நம் நாட்டிலிருந்து ஆதியில் கிரேக்கர் முதலியோரால் கொண்டுபோகப்பட்டு அவ்வழியாய் மேல்நாட்டாரால் அறிந்துகொள்ளப்பட்டவை யென்றும் தற்கால மேல்நாட்டு ஆராய்ச்சிக்காரர்களான கல்விவான்களாலும் நம்நாட்டு அறிவாளிகளாலும் தக்க அத்தாட்சிகளோடு நிரூபிக்கப்பட் டிருக்கின்றன. நம்மவர்கள் எங்கும் நிறைந்த கடவுளை அவருடைய அனந்தசக்திகளாகிய பலவற்றின் சொரூபங்களிலும் கண்டு இப்போதும் வணங்குவதுபோல் அப்போதும் வணங்கி வந்தார்களேயன்றி வேறில்லை.

அத்தகைய மாறுபாடான தேசசரித்திரங்களும் வேறு நூல்களும் நம் சந்ததியாரின் தற்பெருமையையும் தைரியத்தையும் உற்சாகத்தையும் மேலோங்காவண்ணம் செய்து, நாம் மேலிருந்து கீழிறங்கி வருகிறோம் என்ற உண்மையை யுணராது அதற்கு மாறாக, 'நாம் ஆதிமுதல் மிக்க கேவல நிலைமையிலிருந்து இப்போது அன்னியரால் மனிதத்தன்மையான மேல்நிலைமையை யடைந்துவருகிறோம், என்று நாம் கருதும்படி, கொடிய மாயப் பொடியை தூவிவந்தன. நற்காலமாய் இப்போது உண்மை வெளிப்படத் தொடங்கிவிட்டது.

உலகில் மனிதனுல் இதுகாறும் கண்டுபிடிக்கப்பட்டனவும், இனிமேலும் கண்டுபிடிக்கக் கூடியனவுமாகிய எல்லாச் சாத்திரங்களும் நமது அறுபத்துநான்கு கலைக்கியானங்களில் அடங்கிவிட்டிருக்கின்றன. ஆனல் அவற்றில் பல மறைவுண் டிருக்கின்றன. அது வுண்மையாயின் ஏன் நம்மவர் முன்னமே நீராவி, மின்சாரம் முதலியவற்றையும் கண்டு பிடித்து உபயோகத்தில் கொண்டுவரவில்லையென்று கேள்வி பிறக்கலாம். அவர்கள் திரிகாலக் கியானிகளாகையால் காரணமறிந்தே அவ்வாறு செய்யா தொழிந்தனர். நம்மவர்க்கு உலகம் அநித்தியமென்ற வுண்மை தெரியும். ஆகையால் உலகவாழ்க்கையை நித்தியமாகிய பேரின்பமடைவதற்கு ஒரு உபகரணமாக மட்டுமே கருதினர்களன்றி, உலக போகமே மனிதன் அனுபவிக்கவேண்டிய நித்திய சுகம் என்று அவர்கள் எண்ணவில்லை. அதற்குமாருக உலகபோகம் வெறுக்கத் தக்கதென்பதும் மனிதஜன்மம் நமக்குக் கிடைத்தது ஆண்டவனையறிந்து அவனை யடைதலாகிய பேரின்பப்பேற்றை யடைவதற்கேயென்றதுமாகிய கொள்கையோடு நடந்துவந்தார்கள். நமக்கும் அவ்வாறே நூல்களின் வழியாய்ப் போதித்திருக்கின்றனர்.

இதனுலவர்கள் உலகில் நாம் மிக்க ஆவலும் மனப்பதைப்புமின்றி மனோநிம்மதியோடு சுகமாகவும் க்ஷேமமாகவும் வாழ்வதற்கும், அதோடு கூடியவரையில் அதிக காலத்தை ஆன்மார்த்த விஷயங்களில் (ஈசுர உபாசனை, சாத்திர ஆராய்ச்சி, ஞானப்பியாசம் முதலியவைகளில்) செலவழிப்பதற்கும் அனுகூலமாக விருக்க அவசியமானவைகளை மட்டும் வெளியிட்டுப் போதித்து அனுபவத்திற்கு வரச் செய்தார்கள். அதனுற்றுன் நம் நாடு பல்லாயிர வருடங்கள் இணையற்ற நாகரீகம் செல்வம் கல்வி சுகம் யாவும் நிறைந்ததாகவே யிருந்துகொண்டிருந்தது. அக்காலங்களில் நம் நாட்டார் கிரீஸ், அரேபியா ஆப்ரிகா, சைன, ஜப்பான் முதலிய தூரதேசங்களுக்கெல்லாம் கப்பல்களில் சென்று வர்த்தகம் செய்து வந்தார்கள்.

மேல்நாட்டார் நாகரீகமடைந்து பூரணமாய் இரண்டாயிர வருடங்கள்கூட ஆகவில்லை. ஆனல் மேல்நாட்டார் "நம்மாலியன்றவரை உலகில் எவ்வளவு போகங்களை யனுபவிக்க முடியுமோ அவ்வளவும் அனுபவிக்கத்தான் நாம் பிறந்தோம், இதைவிட வேறு அடையத்தக்க மேலான இன்பம் ஒன்றுமில்லை" என்ற கொள்கை

யோடு பஞ்சபூதங்களை யெவ்வளவுவரை யடக்கியாண்டு ஆச்சரிய மான காரியங்களைச் செய்யக்கூடுமோ அவ்வளவும் செய்யத் தொடங்கிவிட்டார்கள். கடைசியில் ஆசையும் பொறாமையும் அளவுமீறி அதிகரித்துவிடவே, ஒவ்வொரு ஜாதியாரும் மற்ற யாவரையும் அடக்கித் தாமே உலகையாள வேண்டுமென்ற ஆவல் கொண்டு ஒரு நொடியில் ஒரு பெரிய நகரை யழிக்கவும் பல்லாயி ரம் ஜனங்களை விஷப் புகை, விஷ நீரால் கொல்லவும் கருவிகளைக் கண்டுபிடிக்கிறார்கள். அதாவது இரண்டாயிர வருடங்களுக்குள் உலகை யடியோடழிக்கும் நிலைமைக்கு வந்துவிட்டார்கள். இதற் காகவே நம்மவர் இவற்றைக் கைப்பற்றவில்லையே யன்றி அவர்க ளிடம் சாத்திரங்களில்லாமலில்லை.

4-வது. நமது வேதம் கடவுளின் பூரண இலக்ஷணங்கள், ஆன்மாவின் இலக்ஷணம், ஆன்மா ஜன்மமெடுத்த காரணம், ஜன்ம விவரம், ஆன்மா கடவுளையடையும் மார்க்கம் இவற்றைப் போதிப் பதோடு, கடவுள் தாம் செய்யும் சிருட்டியாதி கிருத்தியங்களில் எத்தகைய சக்திகளை யுபயோகிக்கிறார் என்பதையும் அதைப்பற் றிய மர்மங்களையும் கூறுகிறது. இவற்றால் நமது வேதத்திலுள்ள விஷயங்கள் கடல்போன்று பரந்துள்ளவை. இவைகளை மீண்டு விரிக்கின் பெருகும்.

நிற்க, நம்வேதம் ஆண்டவனை அருவமாகத் தியானித்து அவன ருளைப்பெறவேண்டு மென்பதோடு நிற்கவில்லை. ஏனெனில் உலகில் ஆண்டவனை யருவமாய் உபாசிப்பது எல்லாராலும் ஆகக்கூடிய காரியமல்ல. உலகில் பலஅதிகாரிகள் உளர். கர்ம அளவின் வித்தி யாசப்படி தரத்தில் பலவிதமுண்டு. ஆகையால் நமது வேதத்தில் மோக்ஷமடைவதற்குச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற சோபானங்கள் நான்கு படிகளாகக் கூறப்பட் டிருக்கின்றன. இவைகள் தக்க மந்திரவிதிகளோடும் ஆசாரத்தோடும் இயற்றப் படவேண்டும். யாவற்றிற்கும் தக்க காரணமுண்டு.

மனிதன் அடையவேண்டியது மோக்ஷம். மனிதன் முக்கிய நோக்கம் மோக்ஷமே. மந்தமதியினர் அழியும் அற்ப விஷயங் களை யிச்சித்துக் கடவுளை யுபாசிப்பார்கள். சித்த சுத்தி யின்றி மோக்ஷமார்க்கம் கிட்டாது. சரியையாதிகளை யனுசரிப்பதால் சித்த சுத்தி யுண்டாகிச் சீக்கிரம் மனம் ஞானமடையப் பக்குவப் படும்.

“ கோயிலுக்குச் சென்று சுவாமியைத் தரிசிப்பது தானே முக்கியம். குளத்தில் ஏன் சுத்திசெய்து கொள்ளவேண்டும்?” என்று கருதலாகாது. இன்றேல் சித்த சுத்தியுண்டாகாது. மனச் சுத்தி யிருந்தால் போதும் என்று வாயால் கூறலாமே யன்றி ஏககாலத்தில் மனச்சுத்தி யொருகாலு முண்டாகிவிடாது. ஒரு துறவி கோயிலுக்குள் சென்று சுவாமி தரிசனம் செய்கிறான். அவனுக்கு ஒரு ஆசாரமும் வேண்டுவதில்லை. ஏனெனில், அவன் அந்தக் கரணங்கள் முன்னமே சுத்தியடைந்து ஈசுவரன் அவன் உளத்தைக் கோயில் கொண்டிருக்கிறான். அவன் தனக்கும் தேகத்திற்கும் சம்பந்தமே யில்லை யென்று துணிந்தவன்.

மற்றையரெல்லாம் ஆசாரம் தவறின் செய்யும் பூசைகள் ஒரு காலும் பயன்படா. ஆசாரமே பக்தியை விளக்குகிறது. பக்தி யின்றி ஈசுவரனருள் கிட்டாது. ஒருவன் தொழில் முறைமையில் அவனுக்கு மேல் அதிகாரியா யுள்ளவன் அவன்போன்ற சாதா ரண மனிதனே. அவன் இவனுடைய தொழிலை மேல்பார்வை பார்ப்பவனேயன்றி இவனுக்கு அன்னமளிப்பவனல்ல. அப்படி யிருந்தும் அவன் எதிரில் செல்லும்போது இவன் பயபக்தியோடு உடைகளை யொழுங்கு படுத்திக்கொண்டு, அவயவங்களைச் சரி யான நிலையில் வைத்துக்கொண்டு, அவனுக்கு முன் தலை குனிந்து வணங்கி நமஸ்கரித்து நிற்கிறான்.

அப்படி யிருக்க எவ்வளவோ கருணையோடு நாம் தம்மிடம் வந்து சேருவதற்காகத் தநுகரண புவன போகங்களை நமக் குத் தந்து உயர்ந்த ஜன்மத்தையு மளித்துச் சதா கருணையே காட்டிவரும் தாயினும் இனிய ஈசுவரன் முன் செல்லும் நம்மிடம் உண்மையான நன்றியும் பக்தியும் இருந்தால் நாம் சட்டை மாட் டிக்கொண்டும், அசுத்தமாகவும் அவன் சந்நதியில் பிரவேசிப் போமோ.

ஈசுவர தரிசனத்திற்குச் செல்லும்போது தேகத்தைச் சுத்தம் செய்துகொண்டு, மாசிலாச் சுத்தஉடை யணிந்துகொண்டு செல்ல வேண்டும். விபூதியோ, திருமண்ணோ அவரவர்க்குத் தக்கபடி யணிந்து அநுஷ்டானம் செய்துகொள்ள வேண்டும். விலை மதிப் புள்ள டம்பாகாரமான உடைகளும் ஆபரணங்களும் அணிந்து அலங்காரம் செய்துகொண்டு போகக் கருதலே கூடாது. அலங்கரித்தல் என்ற எண்ணமே கொள்ளலாகாது. ஆடவர் வேஷ்டியை முழங்காலுக்குக் கீழ்விடாது, மேல் வேஷ்டியை

இடையிற் கட்டிக்கொண்டு செல்லவேண்டும். கரங்களைக் கூப்பிக் கொண்டோ கட்டிக்கொண்டோ சந்நதிக்குள் சென்று வலம் வரல் முதலியன செய்யவேண்டும். மனம் சுத்தமாய் ஈசுர சிந்தனையிலேயே யிருக்கவேண்டும். வாய் அவனைச் செபித்தபடி யிருக்கவேண்டும். கண்கள் அவன் சொரூபம் தவிர வேறொன்றில் நாட்டம் வைக்கலாகாது.

நமது மதாசாரங்கள் ஒவ்வொன்றும் தக்க காரணத்தோடு ஏற்படுத்தப்பட்டவை யென்றும், அவை ஆன்மார்த்தப் பயனை யளிக்கத்தக்கவை யென்றும் நன்குணருமாறு நமது சகோதர சகோதரிகளை வேண்டிக்கொள்ளுகிறோம். இச்சிறு சஞ்சிகையில் இவ்வளவே அளவுமீறிய இடங் கொண்டுவிட்டதால் இவ்வளவோடு நிறுத்தி, இவற்றால் விளையும் பயனைப்பற்றி யின்னொரு முறை கூறுவாம்.

ஓம் தத் ஸத்.

---

## கம்பராமாயண நீதிச்செய்யுள்.

(376-ம் பக்கத் தொடர்ச்சி)

(20) திறந் திறம்பிய காமச் செருக்கினால்
மறந்து தத்த மதியின் மயங்கினார்
இறந் திறந்திழிந் தேறுவ தேயலால்
அறந் திறம்பின ராருள ராயினர்.— (சுந்-பிணி-96)

(21) பொருளுங் காமமு மென்றிவை போக்கியே
திருளுண் டாமென வெண்ணல ரீதலும்
அருளுங் காதலிற் றீர்தலு மல்லதோர்
தெருளுண் டாமென வெண்ணலர் சீரியோர்.—(ஷை-98)

பிரம்மாஸ்திரத்தால் கட்டப்பட்டு தசக்கிரீவனெதிரில் விடப்பட்ட மாருதி, அவ்விராவணனுக்கு நீதிபோதிக்குஞ் சந்தர்ப்பத்துள்ள விப்பாக்களின் பொருள். (20) “அநுசிதமாகிய காமமயக்கத்தால் தம்மைத் தாம் மறந்து, மதிமயக்கங்கொண்டு, நீதிதவறி நடந்தோர், இம்மையிற் சகல செல்வங்களையு மிழந்து மரணமடைந்து நிரயந்துய்த்து, மீட்டும் பிறந்து உழல்வதேயன்றி, யாவர்தாம் நிலைபெற்ற வாழ்வை யடைந்தனர்? (21) ஓ! இராவணா! உண்மையுணர்வுடைய பெரியோர், பொருளுங் காமமுமாகிய இவ்விரண்டையன்றி வேறு நரகமுண்டென்றும், தானமும், ஜீவகாருண்யமும், காமமில்லாமையுமாகிய இவைகளைவிட வேறு முத்தியுண்டென்றுங் கருதமாட்டார்கள்” என்றார். (எ-று.)

இவற்றால் காமமானது தனக்குச் சிறிதேனு மிடங்கொடுப்போரினறிவை மயக்கித் தீநெறிகளிற் செலுத்தி நரகத்திற்றள்ளி வருத்துமாக

வின் அதற்குச் சிறிதும் இடந்தராது, அறிவென்னும் வாள்கொண்டு சேதிக்கவேண்டுமென்பதும், செல்வமும், "மதம் மோகம் குரோதம் துன்மார்க்கமும் மூர்க்கமும் யார்க்கும்," உண்டாக்கி அறிவைக்கெடுத்துத் தீநெறிப் புகுத்துவதாகலின், "ஓடும் இருநிதியும் ஒன்றாகக் காணும்" தம்மைத்தாம் மறவாப்பெரியோர், காம செல்வங்களைக் கருவெனக் கருதிப் போக்கி, தானமும் சீவகாருண்யமும் காமமின்மையுமாகிய ஞானசோபானங்களைக் கைக்கொண்டு, அவற்றின் பயனாய் மனச்சுத்தம் பக்திவிராகமாதிய சான்றாண்மை யுடையோராய், தாம் சச்சிதானந்த சொரூபமென்னும் அபரோக்ஷானுபவ ஞானத்தை யவற்றின் வாயிலாயடைந்து, வேதனையற்றுச் சர்வதுக்கநிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவமுத்தி நிலையை யடைவராதலின், இந்நெறியே செந்நெறி யென்று யாவரும் கடைப்பிடித் தொழுக முயலல்வேண்டுமென்பதும் பெற்றாம்.

தருமந் தவறினோர் நல்வாழ்வடையா ரென்பதை விளக்கும் இந்நூலிலுள்ள வேறு வாக்கியம்.

"வாழ்மைதா னறம்பிழைத் தவர்க்கு மாகுமோ?"

(22) தோல்லருங் கால மெல்லாம் பழகினுந் தூய ரல்லார்
புல்லல நுள்ளந் தூயார் பொருந்துவ ரெதிர்ந்த ஞான்றே.
ஒல்லைவந் துணர்வு மொன்ற விருவரு மொருநா ளுற்ற
எல்லியும் பகலும் போலத் தழுவின ரெழுவிற் றோளார்.
(உயுத்த-விபீடணனடை-123.)

"அடைக்கலமென்று வந்தோரை யாதரிப்பதே முறைமையாகலின் சுக்ரீவ! நீயேயேகி அவ்விபீஷணனை யழைத்துவிரைக" என்ற, சுவாமியின் ஆஜ்ஞையின்படி சென்றபோது இருவரும் பரஸ்பரம் ஆலிங்கனம் செய்துகொண்டதைக் கூறும் இச்செய்யுளின் பொருள். "பரிசுத்த குணமுடையவரல்லாப் புல்லர் அநேககாலம் ஒருவரோடொருவர் கூடிப் பழகினாலும் மனமொத்த நட்பினராகார். மனத்திற் பரிசுத்தமுடைய பெரியோர் கண்டமாத்திரமே மனங்கலந்த நட்பாவார். (இதனால்) இருப்புத் தூண்போன்ற தோள்களை யுடையவர்களான சுக்ரீவனும் விபீஷணனும் ஒருவரையொருவர் பார்த்தபொழுதே இருவர் மனமும் ஒரு சேரக்கலக்க ஒரு தினத்திற் பொருந்தியிருக்கிற இரவும் பகலும்போலத் தழுவிக்கொண்டனர்" என்பதாம். இதனால் பொறாமை, பொய், வஞ்சனை, கோபம் முதலான தீக்குணங்களுடையவர்களாகலின் அற்பர்கள் எவ்வளவு காலம் பழகினாலும் பயன்படுவதில்லை. சுத்தமனப் பெரியோர் கண்ட மாத்திரமே வெகுநாள் பழகியவர்களைப்போலக் கலந்த கேண்மையராவர் என்பது விளங்குகின்றது. "நூறாண்டு பழகினும் மூர்க்கர் கேண்மை நீர்க்குள் பாசிபோல் வேர்க்கொள்ளாதே," "ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை, இருநிலம்பிளக்க வேர்வீழ்க்கும்மே," "அளவளாய், நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்," "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்

சிதான், நட்பாங்கிழமை தரும் " என்ற ஆன்றோர் வாக்கியங்களும் இப்பொருளன.

(23) நீர்வரு மின்ன றம்மைச் செய்யினுஞ் செய்ய சிந்தைப்
பேரரு ளாளர் தத்தஞ் செய்கையிற் பிழைப்ப துண்டோ
கார்வரை நிறுவித் தன்னைக் கனலெழக் கலக்கக் கண்டும்
ஆர்கலி யமர ருய்ய வமிழ்துபண் டளித்த தன்றே.(வை-128)

(இ-ள்.) மிக்க அருளையுடைய பெரியோர்கள் தமக்குப் பிறர் நீக்க முடியாத தீமைகளைச் செய்தாலும், தமக்கியற்கையாயுள்ள அருள் செய்வதினின்றுந் தவறுவதுண்டோ? தேவர்கள் மந்தரமலையை நாட்டி நெருப்புப்பொறி பறக்குமாறு கலக்கிக் கடைந்த காலத்தும் பாற்கடலானது அத்தேவர்கட்குச் சாவாமருந்தாகிய அமுதத்தையே கொடுத்ததல்லவா? (எ-று.)

தன்னைத், 'தன் மனைவியை யபகரித்துச் சென்ற சத்துருவின் றம்பி' யென்பதையும் பாராது, அடைக்கலமீந்த விராமனது பெருந்தன்மையைக் கண்டு வியந்து விபீஷணன் கூறிய வாக்கியமிஃது.

பொருளிலார்க் கிவ்வுலக மில்லாததுபோல அருளிலாருக் கவ்வுலக மில்லை யென்பதறிந்து அருளையே ஆபரணமாகக்கொண்டொழுகும் ஆன்றோர், தமக்குப் பிறர் பல துன்பங்களைச் செய்தாலும், 'அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலவும்,' 'மாந்தர் குறைக்குந்தனையும் குளிர்நிழலைத் தந்து மறைக்கும் மரம்போலவும்,' அன்னோர்க்கிதத்தையே புரிவர். நன்மைசெய்தோர்க்கு நன்மைசெய்யுந்தன்மை இழிந்தோர் கண்ணுமுண்டன்றே? துன்பஞ்செய்தோருக் கின்பஞ்செய்தலே அருளுடைமையாம். இதுபற்றியே பொய்யாமொழியாரும் " இன்னுசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்னபயத்ததோ சால்பு " என்றார். நட்பும் தயையும் கொடையும் பிறவிக்குணம் என்பவாகலின், அருளைப் பெரியோர் இயற்கைக் குணமாக்கொண்டிருப்பர். இது நோக்கியேபோலும் இயற்கைப் பொருள்களையே உதாரணமாகக் காட்டுகின்றன கவிகள். ஆகலின், " அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம், பூரியார் கண்ணுமுள " என்னுங் குறளின்படி, எல்லாச் செல்வங்களிலும் சிறந்ததும் முத்திநெறிக் கின்றியமையாத் துணையாவதுமாய அருளுடையராயொழுக முயலவேண்டும் என்பது, இச்செய்யுளின் தேர்ந்த கருத்தாமென்க.

(24) ஆய்வினை யுடைய ராகி யறம்பிழை யாதார்க் கெல்லாம்
ஏய்வன நலனே யன்றி யிறுதிவந் தடைவ துண்டோ ?
மாய்வினை யியற்றி முற்றும் வருணன்மேல் வந்த சீற்றம்
தீய்வினை யுடையார் மாட்டே தீங்கினைச் செய்த தன்றே.
(வருணனை வழிவேண்டு-80)

(இ-ள்.) எக்காரியத்தையும் ஆலோசித்துச் செய்யுந்தன்மை யுடையராய்த் தருமநெறியினின்றும் தவறு தொழுகுவார்க்கு எக்காலமும் நன்மை

யுண்டாகுமே யல்லாமல் துன்பமுண்டாகுமோ? அழித்துவிடும்படியாக வருணன்மேலுண்டான கோபமானது, தீவினையுடையவர்களாகிய இராக்கதர்க்கே தீமையைச் செய்தது. (எ-று)

வருணன் தன் வேண்டுகோளுக்கிரங்கி வராததைக்கண்டு சினங்கொண்ட இராமன், அவ்வருணனை யழிப்பேனெனக் கோதண்டத்தை வளைத்து அம்பெய்யுங்காலை, வருணன் ஓடிவந்து பணிதலும், இராகவன் சீற்றந்தணிந்து அவன் விருப்பப்படி வீணாகாத தன் சரத்தை, மருகாந்தாரமெனுந் தீவில் நூறுகோடிக்கதிகமாயுள்ள இராக்கதர்மேலேவி யவர்களை யழித்ததாகக் கூறுஞ் சந்தர்ப்பத்துள்ள இச்செய்யுள், எப்போதும் கடவுளை நம்பி நல்வழிப்படருவோர்க்கு நன்மையேயுண்டாமன்றித் தீமையுண்டாகாது. ஒருகால் உண்டாயினும் ஆதவனைக்கண்ட பனிபோல் நீங்கும். தீயோர் முதலில் இன்பமடைவதாகக் காணப்படினும் முடிவில் பலவித துன்பங்களை யடைந்து, குடும்பசமூல மழியப்பெற்று, பழியும் பாவமும் தொடர மீளாநரகத்தாழ்வர். இவ்வாறழிந்த குடும்பங்கள் எண்ணிறந்தன.

'துஷ்டர்கள்தாம் சுகமாயிருக்கிறார்கள். தருமம் பார்த்து நடப்போருக்குத் துன்பந்தான்,' என நினைப்போருமுண்டு. இது அறியாமை. ஒருவன் தன்னிரு புதல்வரில் நல்லபிள்ளையானவன் சிறிது தீயகாரியம் செய்யினும் தண்டித்துப் புத்திபுகட்டலும், துஷ்டப்பிள்ளையை அங்ஙனம் செய்யாது விட்டுவிடுதலும் போலவே, கடவுள் நம்மைச் சீர்திருத்தவே துன்பம் விளைத்தலுமுண்டு. இதனுண்மையை, "தெய்வமுள தென்பார் தீயசெயப்புகின், தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்—இலதென்பார்க் கில்லைதன் இன்புதல்வர்க்கன்றே, பலகாலும் சொல்வார் பயன்" என்னும் குமரகுருபரர் வாக்கானு முணர்தலாம். தீயோர் நன்மையும் நல்லார் தீமையும் அடைந்ததாக எச் சரித்திரமுமில்லை. ஆகலின் தருமநெறியிற் செல்லலே தகுதியுடைத்தாமென்பதைப் போதிக்கின்றது. (தொடரும்)

பூ. ஸ்ரீனிவாசன், தமிப்பண்டிதர்,
ராணிப்பேட்டை.

---

## காப்பி - தேத்தண்ணீர்.

பண்டைக்காலத்தில் நம்முன்னவரெல்லாம் சாத்தீர்த்தம் என்றும் நீத்துப்பாகம் என்றும் சொல்லப்படுகிற பழஞ்சோற்று நீரை அதிகாலையில் ஆனந்தமாயருந்திச் சுகதேகிகளாய் நீடூழிகாலம் வாழ்ந்திருந்தனர். கலியுக நாகரிகம் நிறைந்த தற்காலத்திலோ நம்மவரெல்லாரும் நன்மையும் சுகத்தையும் தரக்கூடிய நீத்துப்பாகத்தை விட்டு விட்டுக் காப்பியென்றும் தேத்தண்ணீரென்றும் புதுவகை பானங்களையே அருந்தி வருகிறார்கள். படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்போதே சிறு குழந்தையானது 'காப்பி'

என்று சொல்லிக்கொண்டே எழுந்திருக்கிறதென்றால் தற்காலம் காப்பிக் குடி எவ்வளவு தூரம் பரவிவிட்டதென்பதைத் தெரிந்துகொள்ளுங்கள். விதவையான பாட்டிகள்கூட தங்களுக்குச் சாப்பாடு இல்லாவிட்டாலும் பரவாயில்லை காப்பி இல்லாமல் தீராது என்கிறார்கள். காப்பியில் காப்பின் (Coffein) என்று சொல்லப்படும் ஒரு விஷப்பொருள் அடங்கியிருக்கிறது. சாதாரணமாய் ஒரு கப் காப்பித் தண்ணீரில் 4 கிரேன் காப்பின் இருக்கிறது. காப்பியை ஓர் பானமாக உபயோகப் படுத்தாமல் மருந்தாக உபயோகிக்கலாம். அது நரம்புகளை முறுக்கேற்றி இரக்தநாடிகளில் திணுக்கு உண்டாக்குகிறது. நோயாளிகளுக்கு அது கொடுக்கவேண்டியது அவசியந்தானா என்பது வைத்தியருக்குத்தான் தெரியும். அதுவும் இவ்வித நோயாளிக்கு இவ்வளவு கொடுக்கவேண்டுமென்பது அவர்களுக்கே தெரியும். சிலருக்குக் குறைவாகவும் சிலருக்குக் கூடுதலாகவும் கொடுக்கவேண்டியது வரும். வேறு சிலருக்குக் குணம்தராமல் வேறு பல வியாதிகளை உண்டாக்கும். இவைகளையெல்லாம் கவனித்துச்செய்யவேண்டியது தேர்ந்த வைத்தியர்களுக்குத்தான் தெரியும். நம்மில் அநேகம்பேர் ஓயாத காப்பிக் குடிகாரராகிவிட்டார்கள். அப்படி ஆனதினால் நல்ல சுகதேகிகளாயிருக்க வேண்டிய நடுப்பிராயத்தில் பலவித வியாதிகளுக்காளாகி வாதைப்படுகிறார்கள். காப்பியை மிகுதியாய் உபயோகிப்பதனால் தூக்கமின்மையும் நரம்புத்தளர்ச்சியும், மனக் குழப்பமும், நினைவு தடுமாற்றமும், ஒழுங்கீனமான இரத்த ஓட்டமும் இன்னும் பலவிதமாய் ஜீரணக்கருவிகளில் தொந்தரவுகளும் ஏற்பட்டுவிடுகின்றன. கண்ணில் ஒளிமங்குதலும், கண் குருடாகுவதும், மிதமிஞ்சினக் காப்பிக் குடியினால்தான் என்றால் அதன் கொடுமையை இன்னும் சொல்லவும் வேண்டுமோ.

தேத்தண்ணீரும் காப்பியைப்போலவே விஷவஸ்து கலந்த பானமாகிறது. அதில் டானின் (Tannin) என்ற விஷவஸ்து சேர்ந்திருக்கிறது. தேயிலையானது எவ்வளவுநேரம் சூடுள்ள தண்ணீரில் இருக்கிறதோ அவ்வளவு அதிகம் அந்த வஸ்து அதில் இரங்குகிறது. இதையும் காப்பியைப் போலவே மருந்தாக உபயோகப்படுத்தலாம். அதுவும் தேர்ந்த வைத்தியருடைய அனுசரணையின்பேரில்தான் செய்யவேண்டும். தற்சமயம் ஒவ்வோர் ஊரிலும் வீதிதவறாமல் ஏற்பட்டிருக்கும் காப்பி ஹோட்டல்களையும் டீ ஷாப்புகளையும் பார்த்தால் இப்பானங்களை நமது ஜனங்கள் எவ்வளவு தாராளமாய் உபயோகப்படுத்தி வருகிறார்கள் என்பது நன்றாய் விளங்குகிறது. ஐயோ! ஏழை ஜனங்கள் இவைகளின் கெடுதியை இன்னும் அறியாமலிருக்கிறார்கள். அறிந்தவர்களுங்கூட வழக்கமாய்விட்டதே நிறுத்தமுடியவில்லையே என்றுசொல்லி அடிக்கடி சாப்பிட்டுக்கொண்டே வருகிறார்கள். இவைகள் மிதமிஞ்சினவுடன் நம்சரீரத்திலுள்ள சகல கருவிகளிலும் தீங்குசெய்கின்றன. சடுதியான மரணங்கள் கூடச் சம்பவிக்கின்றன. முந்தின நாள் இரவு 8 மணிவரையும் தன் இஷ்டரோடு சந்தோஷமாய்ப் பேசியிருந்து வீட்டிற்குப் போனவர் மறுநாள்

காலையில் மரித்துவிட்டார் என்று கேள்விப்பட்டால் இம்மாதிரி மரணத்தைப்பற்றி என்ன யோசிக்கிறீர்கள். காலக்கொடுமையோ மட்டுக்கு மிஞ்சின டீ காப்பிக்கொடுமையோ. இப்படி எத்தனையோ மரணங்கள் சம்பவிக்கின்றன. காப்பி டீ முதலானவை நம் வழக்கத்துக்கு வருமுன்னிருந்தவர்கள் இந்தமாதிரி மரணத்துக்குள்ளானது வெகு அபூர்வம். இப்போதோ சகஜமாய்விட்டது. நித்தியம் ஒரோரிடத்தில் ஒரொன்று நடந்துகொண்டு வருகிறது. 'இப்படி டீ காப்பிக்குடி மிஞ்சினதினால் நம் ஜனங்களுக்குள் மனக்கிளர்ச்சியும், முற்கோபமும், மதிமோசமும் இருக்கிறது ஆச்சர்யமாகமாட்டாது'. இருதய வியாதிகளும் அதிகரித்துக்கொண்டே வருகின்றன என்று சொல்லுகிறார் டாக்டர் ராமாராவ் என்பவர்.

(ஆரோக்கியமும் சிசுவின் சுகவாழ்வும்.)

---

## சக்தி தத்துவம்.

1. பிரம்மமானது ஜகஜ்வபரங்களாய்த் தோன்றுகிறது. ஜெகம் என்றால் உலகம். ஜீவன் என்றால் உலகத்தில் வாழும் பிராணிகள். பரம் என்றால் சிருஷ்டி, திதி, ஸம்ஹாரங்களை நடாத்தும் பிரம்மா-விஷ்ணு ருத்திரர்கள்.

2. ஜெக ஜீவ பரங்களெல்லாம் உண்மையில் பிரம்மத்தின் தோற்றமே யன்றி வேறல்ல. இவ்வாறிருக்கப் புறமதத்தார் ஒருவர் பள்ளியில் வாசிக்கும் மாணாக்கர்களை நோக்கி, உங்கள் மதத்தில், மூன்று கடவுளிருக்கின்றன. கடவுள் ஒருவராயிருக்க மூன்று எப்படிச் சொல்லலாமெனக் கேட்கிறார்கள்.

அதற்குச் சமாதானஞ் சொல்லத்தெரியாத இந்துப் பிள்ளைகள் ஆந்தைபோல் விழிக்கின்றனர். இத்துடன் விடுகிறார்களா கிறிஸ்தவர்கள்.

பிரம்மாதானே உலகிலுள்ள எல்லாவற்றையுஞ் சிருஷ்டித்தவர். சரஸ்வதியையும் அவர்தானே சிருஷ்டித்தார். அப்படி யிருக்க அவர் தம் பெண்ணாகிய சரஸ்வதியைத் தாமே கல்யாணம் செய்துகொள்ளலாமா என்னும் அசந்தர்ப்பமான கேள்வியைக் கேட்கிறார்கள்.

3. முன்கூறியபடி பிரம்மமானது திரிமூர்த்திகளாய்த் தோன்றி, சிருஷ்டி, திதி, சம்மாரம் என்னும் முத்தொழிலை நடத்துகிறதென்று வைத்துக்கொள்வோம். சிருஷ்டிப்பதற்கு வித்தை அவசியம். ஆதலின், பிரம்மாவானவர் வேதமாகிய வித்தையைக் கொண்டிருக்கிறார். வித்தையைத்தான் சரஸ்வதி என்கிறோம். சரஸ்வதி என்பது கையும் காலும் தலையுமுள்ள ஓர் ஸ்திரீயைக் குறிக்கவில்லை; வித்தையையே குறிக்கிறது. அவனுடைய நாக்கில் சரஸ்வதி இருக்கிறாளெனின் அவனுடைய நாக்கில் சரஸ்வதி யென்று 150 பவுண்டு நிறையுள்ள ஓர் பெண்ணிருக்கிறாளென்று அர்த்தமாகுமா? இப்படித்தான் பிரம்மாவின் நாக்கில், சரஸ்வதி இருக்கிறாளென்பதும் பிரம்மாவுக்கு சரஸ்வதி மனைவி என்பதும். இந்தத் தத்துவத்தை யறியாமல் கிறிஸ்தவர்கள் அவலட்சணமான கேள்விகள் கேட்கின்றனர்.

4. இக்கேள்விகள் ஆபாசமென்பதை அறியாமல், பள்ளிப் பிள்ளைகள் வீணாய்க் கெட்டுப்போகின்றனர். இரக்ஷிக்கும் தொழில் விஷ்ணுவுக்குண்டு. இரக்ஷிக்கவேண்டுமானால் பணமிருக்கவேண்டும். பணத்தை லட்சுமி என்கிறோம். இப்போதும், பணக்காரனை லட்சுமி புத்திரன் என்கிறோம். நிஜமாகவே லட்சுமி என்பவள் ஓர் பெண்ணாகவும் அவள் விஷ்ணு என்னும் புருஷனுக்கு மனைவியாகவு மிருந்தால், அவ்விஷ்ணுவுக்குச் சொந்தமான வைகுண்டத்தை, லட்சுமி புத்திரர்களாகிய பணக்காரர்களன்றோ பங்கிட்டுக்கொள்வார்கள், ஆதலின், லசுட்மி என்பது தனத்தைக் குறிக்கும் சொல்லென் றறிக, இம்மாதிரியே சம்ஹாரம் செய்வதற்குத் தோள்வலி வேண்டும். அதாவது சக்தி அவசியம். இந்தச் சக்தியைத் தான் ருத்திரனுக்கு மனைவி என்று சொல்கிறோம். மேற்கூறியவற்றால் சரஸ்வதி, லட்சுமி, பார்வதி யென்னும் பதங்களெல்லாம் முறையே வித்தையையும் செல்வத்தையும் சக்தியையுங் குறிக்கின்றன வென்று, புறமதஸ்தர் கண்டுகொள்வாராக. முதலில், ஸ்தாபிக்கப்பட்ட பிரம்மமே சரஸ்வதி, அந்த பிரம்மமே லட்சுமி, அந்த பிரம்மமே பார்வதி, அந்த பிரம்மமே திரிமூர்த்திகளும், அந்த பிரம்மமே சகலமும். ஆனதால் இந்தத் தத்துவத்தையுணர்ந்து இந்து மாணாக்கர்கள் புறமதஸ்தர்களின், வினாக்களுக்குத் தக்கபடி விடை யளிப்பார்களென் றெண்ணுகிறோம்.

தத்துவ தரிசனியில்

வை. சே. நருசாமி பண்டாரம், தகை, சேலம்.

---

## நட்பு.

நட்பாவது ஒருவர்க்கொருவர் உதவியா யிருப்பது. இது மானுடராய, நம்மொவ்வொருவரு மறிந்தொழுகவேண்டிய தவசியமாதலின், இதை நன்காராய்வாம்;

நட்பு=நேசம். (நள் - பகுதி, பு - விகுதி).

இது, மேற்கொண்டோரின் செய்கைக்கேற்ப, நீடித்திருப்பினுமிருக்கும், அன்றி உடனே கெடினுங்கெடும், நலனைக் கொடுப்பினுங் கொடுக்கும். ஆதலின், நட்புக்கொளுமுன், செவ்வனே ஆராய்ந்து நட்டல் வேண்டும்.

நம்மை நட்பாகக்கொள வருவோரின் நட்பாளர், நற்குணராவென நன்காராய்ந்தும், பின் அவரைப்பற்றியுமாராய்ச்சி செய்தல் வேண்டும். அவ்வாறின்றி யோசியாது நட்டல், பெருந்தீங்கினை யூட்டி வளர்ப்பது போலாகும். ஆன்றோரும், "ஆய்ந்தோய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை, தான் சாந்துயரந்தரும்" என்றார்.

இனியாருடைய நேசம் நீடித்திருக்கும்; யாருடைய நேசங் கெடுமென்பதை யாராய்வாம்: நேசிப்போரிற் சிலர், தங்காரிய முற்றுந்துணை நேசித்துப் பின்னீங்குவர் ; சிலர் நம்மைக் கெடுக்கும் வண்ணமே நேசிப்பர்;

(இத்தகையோர் பகைவராவர்) இவரெலாம் நேசராகார். ஔவையாரும், "அற்றகுளத்தி னறுநீர்ப்பறவைபோ, லூற்றுழித்தீர்வா ருறவல்லர்" என்றார். மூர்க்கர் நேசத்தை, "நூற்றாண்டு பழகினு மூர்க்கர்க்கேண்மை, நீர்க்குட்பாசிபோல் வேர்க்கொள்ளாதே" எனவும், அறிவுடையார் நேசத்தை, "ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை, இருநிலம் பிளக்க வேர்வீழ்க்குமே" என்றுங் கூறினர். மூடரிடத்து நேசமாயிருத்த லினும், பகைமையா யிருத்தல்மேல். ஏனெனில், மூடரின் பகையால் பெரும்பாலுந் துன்பமே யுண்டாகாது; உண்டானாலும் எளிதிற்போக்கிக் கொள்ளக்கூடியதாயுமிருக்கும்; நீங்காவிடினுமவை, நட்பினாலுண்டாகுந் தீங்கினைப்போலவ்வளவு அதிகமாயுங் கஷ்டமாயுமிராது. தீயோர் நட்பு, காலைச் சூரியனின் சாயல் (நிழல்) போல் குறைந்துகொண்டும், மேலோர் நட்பு, மாலைச் சூரியனின் சாயல்போல் வளர்ந்துகொண்டும் போகுமென் பது ஆன்றோர் கொள்கை.

நம்நாயனாரும், "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதி
பின்னீர பேதையார் நட்பு" (என்றார்.)

நல்லோர் நட்பு மூன்றாம்பிறைச் சந்திரனைப்போல் வளரும்; மூடர் நட்பு, பூரணச் சந்திரனைப்போல் பின்னாற் குறையுந்தன்மை யுள்ளது என்பதாம்.

மேலும் நட்பைப்போ லீட்டுதற்கரிய பொருளொன்று மிலையாத லான் ஆராய்ந்தே நட்டல் வேண்டும்.

தெண்ணீருள்ள, ஏரி, தடம் முதலியவற்றில் சாக்கடைநீர் சேர்ந்த வுடன், தன் இயற்பெயரை நீக்கியும், பாலுடன் கொஞ்சம் ஜலம் சேர்ந் தால் தன்னிறமாறியும், பேதஸ்வரூபமுள்ள ஜலம், பால், என்றழைக்கப் படுவனபோன்று, நல்லறிவினரைச் சேர்ந்த வறிவிலிகளும் நற்குணராவர். நல்லோர், தன்னேசர், நியவழியிலிறங்காதனை போடுவர்

"உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு" (குறள்)

என்றபடி தக்கவமைய மாபத்திலுதவுவர். தீயரோ, அவ்வாறின்றிக் கெட்ட விடயங்களிலாழ்த்தித் துன்புறுமிடத்துத் தாமுங்கைவிட்டுக் களிப்பர். நல் லோரைச் சேரச் சேர, ஆரோக்கியமும், தீயோரைச் சேரச் சேர, நோயும் வளரும். நட்டபின்னாராயலாகாதோ வெனின், நன்றன்று;

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு."

என்றார் நம் மெய்ஞ்ஞானச் செல்வராகிய நாயனார்.

நட்டபின் பிரிதலாகாது. "கூடிப்பிரியேல்" என்னும் நம்மூதாட் டியாரி னமுதவாக்கிங் குணரத்தக்கது. மேலும்,

"குற்றமும் ஏனைக் குணமு மொருவனை
நட்டபின் நாடித் திரிவேனேல் — நட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
அறைகடல்சூழ் வையம் நக" (நாலடியார்)

நான் ஒருவனை நேசித்தபின், அவனுடைய குற்றத்தையும், குணத்தையுமாராய்ந்து திரிவேனுகில், நேசரது இரகசியங்களை வெளித்தெரியாமல் மறைக்காதவன் அடையுங் கதியை அடையக்கடவேன் என்று கூறியுள்ளார். மேலும்,

" குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
வினனு மறிந்தியாக்க நட்பு. " (குறள்.)

என்பதற்கிணங்க, குணத்தையும், குடிப்பிறப்பையும், குற்றத்தையும், சுற்றத்தையும், அறிந்தும் நேசித்தல் வேண்டும்.

இனி நட்டோ ரொழுகவேண்டிய தெங்ஙனமெனச் சிறிதாராய்வாம்:

நட்பாள ரிருவரு மொத்த மனதுடையவரா யிருத்தல்வேண்டும்; இன்றேல் நட்புக்கெடும். குற்றமாராய்வதானுல், எனையரிடமுங் காணலாம். ஆதலின் குற்ற மிருக்கின் கவனித்தலாகாது. நட்பிலாவயலார் செய்த தீக்குகளையே, பொறுத்தல், அறிவின்மிக்கார் கொள்கையெனக் கூறி யிருப்பதால், நட்டோர்செய்த அற்பக் குற்றங்களை, என் பொறுத்தலாகாது? முன்னேரும்,

" தமரென்று தாங்கொள்ளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயின்—அவரைத்
தமரினு நன்கு மதித்துத் தமரன்மை
தம்மு ளடக்கிக் கொளல். " (நாலடியார்)

எனக் கூறியதை இங்குய்த்துணர்வதவசியம். எஞ்ஞான்றும் கைவிடப் படாதோர் நஞ்சுற்றத்தாராய இயற்கை நட்பாளராவர். " குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை " கண்ணைக் குத்தியதென விரலைத் துணிப்பாரில்லை யாதலின்; பொறுக்கக் கூடிய குற்றங் கண்டவிடத்துக் கண்டித்தல் நலம். ஆனுல் ஒரு காரியம் முடியும் வண்ணம் ஒருவரிடம் நேசிக்க வேண்டின், அவரின்னரென வாராயாது நட்புக்கொள்வது காரியங்கொள்வோர் கடன்.

பெரியோரும் " தாநட் டொழுகுதற்குத் தக்கா ரெனவேண்டா
யார்நட்ப தாயினு நட்புக் கொளல்வேண்டும்
காநட்டு நாறுங் கதுப்பினுய் தீற்றுதோ
நாய்நட்டா நல்ல முயல்." (நாலடியார்)

இதன் பொருள் :—நாயோடு சேர்ந்தாலும் நல்ல முயல் கிடைக்கும்; என்ற பழமொழிப்படி, தங்காரிய முற்றுந்துணை, நட்புக்கொள்வதற்குத் தக்காரெனவுந், தக்காரில்லாரெனவு மாராய்த லவசிய மின்றுமென்பது. மேலும்,

" பகைசேரு மென்னுன்கு பற்கொண்டே நன்னு
வகைசேர் சுவையருந்து மாபோற்—றெகைசேர்
பகைவரிட மெய்யன்பு பாவித் தவராற்
சுகமுறுத லல்லோர் தொழில்."

என்பது ஆன்றோரின் கொள்கையும்; நிற்க, நாமிந்த வுலகின்கண், நேசித்து

வாழ்தலுக்கு, நல்ல நட்பாளர் வேண்டுவ தவசியமாதலால், அத்தகை யோரையடைய முன்னுராய்ந்து நல்லோர்களையே நட்டல்வேண்டும். விரிக்கின் நமதானந்தன் இடங்கொடானென் றஞ்சி இத்துடன் நிறுத்தி னேன். ஆன்றோர் பிழைபொறுத் தருள்புரிவாராக. கடவுள் நம்மைக் காப்பாராக.

B. சுப்ரமண்ய முதலியார்,
தலைமை உபாத்தியாயர், ரிஷிவந்தியம்.

---

(செந்தமிழ்ப் பத்திரிகை. தொகுதி 20, பகுதி 6-ல், திரிசிரபுரம், டி. வி. சாமிநாத ஐயர், பி.ஏ., எல்.டி. அவர்கள் எழுதியிருந்தது.)

## அந்தணர் என்போர் யாவர்?

அந்தணர் என்னும் சொல், அம்=அழகிய (செம்மையான), தணர்= தண்மை (குளிர்தன்மை) யுடையவர் (அதாவது, செம்மையான கருணை வாய்ந்தவர்) என்று பொருள்படும். அங்ஙனம் உயிர்களிடத்திற் கருணை யுள்ளார் யாவரும் குணத்தால் அந்தணர் ஆவரேயாயினும் அது, பிராம ணர் என்ற ஒரு ஜாதியாரையே சிறப்பாகக் குறிக்கும். இந்தச் சிறப்புப் பொருளை இக்காலத்திற் சில தமிழர்கள் மறுக்கிறார்கள். அவர்கள் எந்த ஆதாரங்கொண்டு மறுக்கிறார்களோ நமக்குத் தெரியவில்லை. திருக்குறள் 3-வது அதிகாரம் 10-வது செய்யுள் தங்களுக்குச் சான்றாக இருக்கிறதெ னக் கூறுவார்போலும். அதாவது :—

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்" என்பதாம்.

இக்குறள் அந்தணர் யாவர் என்று குறிப்பிட வந்ததேயொழிய, அற வோரை வரைய வந்ததில்லை. இச்செய்யுள் உள்ள அதிகாரம் நீத்தார் பெருமையைக் கூறுவது. அவர்கள் ஐம்புலன்களை அடக்கி யறம் கைக் கொள்ளுபவர். அவ்வறங்களிற் சிறந்ததும், எளிதிற் செய்யவல்லதும், உலகிற்கு நன்மை தரத்தக்கதுமாயது "அஹிம்ஸை." இந்தத் தர்மம் யாவரும் செய்யவேண்டியதாயினும், சிலர் ஜாதிபற்றியும், தொழில்பற்றி யும் பழவினையின் பயனாய், ஹிம்ஸையை விலக்க இயலாதவரா யிருக்கின் றனர். அறத்தின் ஆறு பலவிதம்; ஆகையால் அறவோரும் பலராவர். என்றாலும், யாதொரு உயிர்க்கும் ஹிம்ஸையைச் செய்வதில்லை என்று சங் கற்பித்து அவைகளிடம் கருணை பாராட்டுவதையே முக்கிய தர்மமாகக் கொண்ட ஒரு ஜாதியாரனைவரும் அறவோராவர். என்று திருவள்ளுவ நாயனார் "அஹிம்ஸையை" மேலான தர்மமாக உலகத்துக்குத் தெரிவிக் கவும், அங்ஙனம் கூறினார் என்று விளங்குகிறது. ஆதலால் இக்குறளுக்கு 'மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டொழுகலான், அந்தணர் என் போரே அறவோராவர்' என்று பொருள்கொள்ளல் வேண்டும். வேறு

எவ்விதம் கொள்ளினும் சிறப்பன்று. எளிதிற் பொருள்கோடலும் அன்று. அதிகாரமுறைக்கும் முரண்.

இனி, அந்தணர் என்பது ஒரு ஜாதியின் பெயராய்ப் பிராமணரையே குறிக்கும் என்பதற்குப் பிறமேற்கோள்களும் உள.

"ஐயர் வேதியர் இருபிறப் பாளர்
மெய்யர் மிக்கவர் மறையோர் பூசுரர்
அந்தணர் நூலோர் அறுதொழி லாளர்
செந்தீ வளர்ப்போர் உயர்ந்தோ ராய்ந்தோர்
ஆதி வருணர் வேத பாரகர்
விப்பிரர் தொழுகுலத் தோர்வேள்வி யாளர்
முப்புரி நூலோர் முனிவ ரென்றிவை
தப்பில் பார்ப்பார் தம்பெய ராகும்.

என்ற சேந்தன் திவாகரச் சூத்திரத்தில் அந்தணர் பார்ப்பாரென்றும், அறுதொழிலாளர் என்றும் வழங்கப்பட்டிருக்கிறது. இது ஒரு ஜாதியாரைக் குறிக்கிறதேயன்றிக் குணத்தினரைக் குறிப்பதன்று. இங்ஙனமே, சூடாமணி நிகண்டிலும்,

"ஐயர்வே தியரே நூலோ ரறுதொழி லாள ராய்ந்தோர்
மையில்பூ சுரரே செந்தீ வளர்ப்பவர் தொழு குலத்தோர்
பொய்யிலந் தணரே யாதி வருணர்முப் புரிநூன் மார்பர்
மெய்யர்விப் பிரரே வேத பாரகர் வேள்வி யாளர்".

"இருபிறப் பாளர் பார்ப்பார் ஏற்றமேற் குல ருயர்ந்தோர்
வருமறை யவர்தம் பேராம்" என்றும்,

ஒரு ஜாதித்தன்மை குறித்து வழங்கப்பட்டிருக்கிறது. 'பொய்யிலந்தணர், என்று கூறியது அக்காலத்திலேயே போலியந்தணராய் ஏனையோரும், அந்தணர் என்று தங்களை யழைக்க முயன்றதுபற்றிப்போலும். திவாகரத்திலும் அங்ஙனமே "தப்பில் பார்ப்பார்" என்று கூறியது தப்புடைப்பார்ப்பாருமுளர் என்று குறிப்பிக்கிறது. மேலும், குறளாசிரியர், செங்கோன்மை என்ற அதிகாரத்துள்,

" அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியா
நின்றது மன்னவன் கோல் "—என்றும்,

கொடுங்கோன்மை என்ற அதிகாரத்துள்,

" ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின் "—என்றும்,

கூறியிருப்பதை யொப்பிட்டுப் பார்த்தால் அந்தணர் என்பதும் அறுதொழிலாளர் என்பதும் ஒரு ஜாதியாரான பிராமணரைக் குறிக்கின்றனவன்றிப் பொதுவாய் அறவோரைக் குறிக்காமை விளங்கும். இன்னும், குறளாசிரியர் ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தில்

" மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும் "

என்று அருளியதில், 'பார்ப்பான் பிறப்பொழுக்கம்' என்பதனுல், பிறப்பால் பார்ப்பானை உணர்த்தியதேயன்றி, பார்ப்பான் குணமுடைய ஏனையோரைக் குறிக்காமை எளிதில் உணரப்படும்.

மேலும், தமிழிற் சேக்கிழார் புராணத்தில் அந்தணர் வீதியென்றும், சுந்தரமூர்த்தி நாயனுர் சரித்திரத்தில் " அந்தணர் அடிமையாதல் கண்டிலம் " என்றும் பார்ப்பார்தனித்தன்மை வழங்கப்பட்டிருக்கிறது. இவையெல்லாம் ஜாதி அந்தணரைக் குறித்தே சொல்லப்பட்டிருக்கின்றன.

இது நிற்க; சிலர் குறளாசிரியர், கிறிஸ்தவமதக் கொள்கையைப் பெரும்பாலும் பற்றினவர் என்றும், வேறு சிலர் சமணமதக் கொள்கையை உட்கொண்டவர் என்றும், கூறுவர். தமிழரிற் சிலர், வள்ளுவர் ஆதித்திராவிடரின் மதத்தையும் ஆசாரத்தையும் கைக்கொண்டவர் என்று வ்யவஹரித்து, ஆரியரல்லாதவரின் மதம் என்று தனியே என்று தென்னுட்டிலிருந்ததாயும், அந்தமதாசாரத்தைக் குறளாசிரியர் குறளில் வெளியிட்டிருக்கின்றனரேயன்றி, ஆரியர் மதாசாரத்தைச் சொல்லவில்லையென்றும், அபிப்பிராயப் படுகிருர்கள். இவை மெய்யன்று. ஏனெனில், குறளாசிரியர் அபிப்பிராயத்தை அவர் இயற்றிய நூலிலிருந்தும் அவர் காலத்திருந்த வித்வான்களுடைய மேற்கோள்களைக் கண்டும் தெரிந்துகொள்ளவேண்டுமேயன்றித் தம் மனம்போனவாறு கூறுவது சரியன்று.

ஆரியத்தில் ஸ்மிருதிகள் எங்ஙனம் தர்மத்தை வேதத்திலுள்ளபடி விளக்குகின்றனவோ, அங்ஙனமே, ஆர்யபாஷை தெரியாதவர்களுக்கும், வேதத்தி லதிகாரமில்லாதார்க்கும் பயன்படுமாறு, சுருதி ஸ்மிருதிகளின் அபிப்பிராயத்தைத் தமிழிற் குறளாசிரியர் செய்ததாகத் திருவள்ளுவமாலையிற் பல வித்வான்கள் பாடலால் நன்கு விளங்குகிறது. விரிப்பிற் பெருகுமாகையால் வெள்ளிவீதியார் மொழிந்த செய்யுளைச் சான்ருக வரைந்து இதை முடிப்பாம்.

" செய்யா மொழிக்கும் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
இதற்குரிய ரல்லாதாரில். "

இதைப்பார்க்கிலும், நமது மதாசாரத்வேஷிகளான பாதிரிகள் அபிப்பிராயமும், தங்கள் நன்மையைத் தாங்கள் தெரிந்துகொள்ளாத நம் பிராமணர் சிலருடைய விபரீதக் கொள்கையும் உண்மையான சாக்ஷியமாகா.

M. K. நாராயண ரெட்டி,
மாளிகைமேடு, குமாரமங்கலம்.

---

## சில ஐயவினு !

அடியிற்கண்ட ஐய வினுக்களுக்கு (விடை) பொருள் விளக்கம் தமிழ்ப் புராண காவியங்களில் எனது சிற்றறிவிற்குப் புலப்படாமையாலும், இந்துமதப் பற்றுடையவர்கள் யாவரும் அவசியம் சந்தேகமறத் தெரிந்தொழுக வேண்டுவ தவசியமாகையாலும், புறமதத்தினர்களின் இகழ்ச்சிக்குத் தக்கவாறு நமக்கே (எம்போன்றவர்களுக்கே) விஷயம் இத்தன்மையதென்று கூட அறிந்துகொள்ளக் கூடாதிருப்பது கேவலமாகையாலும், தெரிந்தபெரியோர்கள் சாஸ்திர சம்மதமாகவும் கல்வி யொழுக்கங்களில் மிக்க ஆன்ருேர்களின் அனுபவ சம்மதமாகவும் உள்ள பொருள் விளக்கங்களை நமதானந்தன் மூலமாய்த் தெரிவிக்கக் கோருகிறேன்.

1. மார்கழி மாதத்தைச் சூனிய மாதமென்றும் பீடைமாதமென்றும் அதில் சுபாசுப கிருத்தியங்களைத் தொடங்கலும் செய்தலும் கூடாவென விலக்குவதேன் ?

2. இம்மாதத்தில் மாத்திரம் பிரதிதினமும் பிராதகாலத்திற்கு முன்னமே ஒவ்வொரு ஊரிலும் சங்குநாதம் செய்வானேன் ?

3. வைஷ்ணவ சமயத்தார்களுக்கு விசேஷ மதிப்புள்ள வைகுண்ட ஏகாதசி விரதமும் சுவர்க்கவாயில் திறப்பும், சைவசமயத்தார்களின் பெருமதிப்புற்ற திருவாதிரை விரதமும், சிதம்பர தரிசனம் முதலியவைகளும் இம்மாதத்தில் ஏற்படுவதுடன், மற்ற மாதங்களைப்போலல்லாமல் பிரதிதினமும் இந்துக்கள் யாவரும் அவரவர்களின் வீடுகளையும் வீட்டு வாயில்களையும் மெழுகிக் கோலங்களால் அலங்கரித்துப் பூசனிப்பூவை மாத்திரம் வைப்பானேன்? மற்ற புஷ்பங்களை உபயோகிக்கக்கூடாதா ?

4. தினந்தோறும் பூஜாகைங்கரியங்கள் நடந்துவரும் எல்லாத்தேவாலயங்களுடன், பல மாதங்களாக மூடப்பட்டேயிருந்து சிலந்திப் பூச்சியின் வலையும் கலந்து பின்னப்படாமலிருக்கும் மற்றெல்லாக் கோவில்களிலுங்கூட இம்மாதத்தில் மாத்திரம் பிரதிதினமும் அதிகாலையில் பூஜாகைங்கரியங்கள் நடப்பதுடன் பஜனை கோஷ்டிகளும் பாகவதர்களும் சித்தசுத்தியுடனும் பக்தி ஸ்ரத்தையுடனும் தினம் ஊர்வலம் வருவானேன் ?

5. (a) இம்மாத முடிவில் ஏற்படும் 1. காப்புக்கட்டு, 2. போகிபண்டிகை, 3. சங்கராந்தி பண்டிகை, 4. வாசற் பொங்கல், 5. மாட்டுப்பொங்கல், 6. ஜல்லி மாட்டு பந்தயம் என்பவைகள் என்னென்ன காரணங்களால் என்னென்ன நோக்கங்களைக் குறித்துண்டாகியவை ?

(b) காப்புக்கட்டுக்கு வேப்பிலைக் கொத்தும், ஆவாரம்பூவின் கொத்தும், பூளைப்பூவும் மாத்திரம் வீட்டின் கூரைகளிலும் மற்ற இடங்களிலும் வைப்பானேன் ?

6. இரதசப்தமி என்றாலென்ன? அன்றையதினம் சில எருக்கந் தழைகளையும் இலந்தைப்பழங்களையும் மாத்திரம் வைத்து ஸ்நா னஞ் செய்வதெதற்காக?

7. யுகாதிபண்டிகை என்ன காரணத்தாலுண்டானது? அன்றைய தினம் வேப்பங்கொழுந்தும், வெல்லமுங் கலந்துபுசிப்பானேன்?

8. ஆடி பண்டிகை என்ன காரணத்தாலேற்பட்டது? அன்றைய தினம் யாவரும் தேங்காய் சுடுவதின் நோக்கம் யாது?

9. பலவிதமாகிய தேக அசௌக்கியமுள்ள சிசுக்களுக்கும், பெரி யோர்களுக்கும், சிலர் வைத்தியமுறையை அனுசரித்தோ, அல் லது மந்திர முறையை அனுசரித்தோ வேப்பிலைக்கொத்தாலும், வஸ்திரங்களின் மூலைகளாலும், குச்சிகளாலும் சாந்தி செய் கிறார்களே; மற்ற இலைகளாலும் வேறு வஸ்துக்களாலும் சாந்தி செய்ய வழிகளுண்டா?

ப. சுப்ரமணிய பிள்ளை,
நஞ்சுண்டபுரம், காளப்பநாயக்கன்பட்டி போஸ்டு.

---

## துறவு—யோகம்.

(426-ம் பக்கத் தொடர்ச்சி.)

இவ்வாறு மஹா மஹிமையுடன் விளங்குவதும், ஆரியரேயன்றி மற் றெவராலும் கண்டறியப்படாததும், ஆரியர்களுக்கே சிறந்த செல்வமா யுள்ளதுமான யோகத்தின் மகிமையை அளவிட்டுக் கூறுதலெவர்க்கு மிக வரிதே. இதனைச் சிறுவயது முதல் பழகிவந்த ஆரியர்களுக்கேயன்றி மற்றெவர்க்கும் இது சித்திப்பதுமரிது. மற்றவரால் சாதிக்கமுடியாததே யாம். இக்காலத்தவர் இதனை மறந்தேவிட்டார்கள். யாராவது சிலர் அப்பியாசம் செய்துவந்தாலும் முழுமையும் நிறைவேற்றி யதிற் சித்திபெற் றுப் பூர்வ மஹாத்மாக்களைப்போலப் பல கற்பங்களைக்கண்டு, மார்க்கண் டேயரைப்போல இளமை முதிராமலிருப்பது சாத்தியமாவதில்லை. ஆத் திசூடி அருளிச்செய்த ஔவையார் அம்மையவர்களே கணபதியின் அனுக்கிரகத்தாற் சித்திபெற்று முன்னூற்று நாற்பது வருஷகாலம் ஜீவித் திருந்து தேகத்தோடு கைலாசமேறினாரென்று பெரியோர் கூறக்கேட் டிருக்கிறோம். அதற்குப்பின் சிறந்த யோகிகள் கேட்கப்படவில்லை. கார ணம் யாதோவெனில் உலகப் பொருள்களிலும், சிற்றின்பத்திலும் பிரியம் மாறாமையேயாம்.

இந்த யோகம் இருவகையாயுள்ளது. அவை ஆதாரயோகம் நிராதார யோகமென்பனவாம். யோகாப்பியாசம் செய்ய விரும்புகிறவர்கள் முத லில் ஆதார யோகத்தை யனுஷ்டித்துப் பயின்று அதிற் சித்திபெற்ற பிறகு நிராதார யோகத்தை யனுஷ்டிக்கவேண்டும். ஆதாரயோகத்தில் நிலைத்து நின்றால் அதுவே நிராதார யோகமாய்விடும். சென்றுபோன

பல பல ஜன்மங்களிற் புண்ணியம்புரிந்த மஹாத்மாக்களுக்கு நிராதார யோக மெளிதிற் கைகூடும். அவர்களுக்கு ஆதாரயோகம் அனாவசிய மாகும்.

"ஆதார யோக நிராதார யோகமென
மீதானத் தெய்தும் விதியிரண்டே—யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளே யொன்றும்."

ஆதாரயோகம் நிராதார யோகமென்னும் இரண்டும் மோட்சத்தை யளிக்கும் மார்க்கங்களாம். மூலாதாரம் முதலாகக் கூறப்பட்ட ஆறுதாரங் களிலும் ஆசிரியனால் உபதேசிக்கப்பட்ட திவ்யசொரூபத்தை நிறுத்தி மனதை யதனிடத்திலேயே நிலைத்திருக்கச் செய்து தியானிப்பது ஆதார யோகமாம். இந்த யோகம் சித்தித்தபிறகு அவ்வாதாரங்களிற் றரிசித்த பொருளைப் பாராமல் பார்த்துத் தியானித்துக்கொண்டிருப்பது நிராதார யோகமாம்.

"ஆக்கி யொருபொருளை யாதாரத் தப்பொருளை
நோக்கி யணுவி லணுநெகிழப் பார்க்கில்
இவனுகை தானொழிந்திட் டேகமா மேகத்
தவனுகை யாதார மாம்"

ஆதாரங்களில் கற்பிக்கப்பட்ட பொருளைத் தியானித்துச் சித்தி பெற்ற பின்னர் அப்பொருளைத் தனக்குள்ளே வைத்துச் சிந்திக்கில் தியா னிக்கிறோ மென்கிற நினைவுமில்லாமல் போக அப்பொருளொன்றேயாம். இவ்வாறே தானும் சிவமும் வேறு காணப்படாம லேகமாய் நிற்பதே யாதாரயோகமாம்.

"கொண்ட தொருபொருளைக் கோடிபடக் கூறுசெயிற்
கொண்டவனு மப்பரிசே கூறுபடும்—கொண்ட
விருபொருளு மன்றியே யின்னதிது வென்னு
வொருபொருளே யாயிருக்கு முற்று."

இவ்வாறு தியானிக்கப்படும் பொருளை அணுவினும் நுண்ணிதாகப் பாவிக்க அது அவ்வாறே அணுவிலு மணுவாய் விளங்கும். அதற்குள் ளடங்கி நிற்கும் தானும் (ஜீவான்மாவும்) அவ்வாறேயாம். அவ்வாறாங் கால் இரண்டும் வேறற ஒன்றி யொருபொருளாகவே நிற்கும். இந்நிலை தான் தானே யதுவாய் அதுவே தானாய் நிற்கும் நிலையாமென்பர் கற்றறிந் தோர்.

இனி அகார உகார மகார விந்து நாதமானவை யொன்றுகூடியதும், பிரம விஷ்ணு ருத்திர மகேச சதாசிவர்களை அதிதேவதைகளாகவுடைய தும், பிரணவ சொரூபமானது மாகிய பஞ்சாட்சரத்தைக் குருவின் மூல மாக வுபதேசம்பெற்று, மூலாதாரத்தில் அகாரத்தையும் பிரமாவையும், நாபி ஸ்தானத்தில் உகாரத்தையும் விஷ்ணுவையும், இருதய ஸ்தானத்தில்

மகாரத்தையும் உருத்திரனையும், கண்டத்தில் விந்துவையும் மஹேஸ்வர னையும், லலாடஸ்தானத்தில் நாதத்தையும் சதாசிவத்தையும் நிறுத்திச் சுழிமுனையில் குருவுபதேசப்படி இவ்வைந்தெழுத்தையும் பிரமரந்திரம் செல்லும்படி உச்சரித்தால் சொரூபமும் அக்ஷரமும் கரைந்து நாதவடிவா வன் ஆன்மா. பிறகு நாதாந்த தரிசனத்தால் ஆன்மபோதமும் கெடும். கெடில் பரமசிவன் வெளிப்பட்டுத் தன் சொரூபத்தோடு சேர்த்து அருள் புரிவார். இது முத்தியாம். இவ்வாறு ஆதார யோகத்தை ஸ்தூல சூக் கும, அதி சூக்குமமாக வுபதேச முறையாலுணர்ந்து பயின்று சித்திபெற் றுக் கைவல்ய முத்திபெற்றோர் அநேகர். இதன்பிறகு நிராதாரயோகம் காணவேண்டும்.

"ஆக்கப் படாத பொருளா யனைத்தினிலும்
தாக்கித்தா னென்றோடுந் தாக்காதே—நீக்கியுடன்
நிற்கும் பொருளுடனே நிற்கும் பொருளுடனாய்
நிற்கை நிராதார மாம்"

ஆன்மாவினால் கற்பிக்கப்படாததாயும் எல்லாப் பொருள்களினிடத் திலும் கலந்திருந்தும் அவற்றோடு சம்பந்தப்படாததாயும், முத்திக்கு விரோதமானவற்றை விலக்கி நிற்கும் பரம்பொருளோடு தற்போதமொழி ந்து கூடி நிற்பது நிராதாரயோகமாம்.

"காண்கின்ற தோர்பொருளைக் காண்கின்ற யோகிகளே
காண்கின்றார் காட்சியறக் கண்ணுதலைக்—காண்கின்றார்
காண்பானும் காணப் படும்பொருளு மன்றியே
காண்கையினாற் கண்டனரே காண்."

"பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான்—பேசாதே
யெண்ணென்றும் வண்ண மிருக்கின்ற யோகிகள்பா
லுண்ணின்று போகா னுளன்"

ஞானத்தையே கண்ணாகக்கொண்டு சிவத்தைக் காண்கிறவர்களே யோகிகளாவார். யாவற்றையும் தனக்கு வேறுபடாததாகக் காண்கிற ஞானமயமாகவிருந்து சிவத்தை நோக்குதலால் அந்த ஞானத்தையே தனக்குச் சொரூபமாகவுடைய பரம்பொருளை யுடனே யடைந்து, அத னோடு வேறற்று அபேதமாய் நிற்பார்கள். இந்த நிராதாரயோகம் நிலை பெறுதற்குப் பேசாமையாகிய மௌனயோகம் அவசியங் கொள்ளத்தக் கது. கொண்டால் அவ்வியோகம் சித்திக்கும். இவ்வாறு மௌனயோகம் பூண்டு ஞானத்திலே ஆன்மபோதமிழந்து நிலைபெற்று நிற்பதே நிராதார யோகமாம். ஈண்டுக் கூறிய ஸ்தூல சூட்சுமங்களாகிற ஆதாரயோகத்தை யும், அதனைச் சாதிப்பதற்குபாயமாகக் கூறிய மந்திரயோகத்தையும், அத னாலடையப்படும் நிராதார யோகத்தையும், அதற்குபாயமாகக் கூறிய மௌன யோகத்தையும் நல்லாசிரியனை வழிபட்டுத் தெளிந்து அந்நெறி

தவருமல் ஒழுகுபவரே யோகிகளென்று உலகத்தாரால் புகழப்படுவார். அவர்களே பலகோடிக் கற்பகாலங்களைக் கணப் பொழுதாகக் கண்டு கழித்துத் தாம் அழிவற்று நிற்பவராவர். இவர்களுக்குந் தெய்வத்துக்கும் பேதங் காணப்படுவதரிது. எனெனில் அவர்கள் பரம்பொருளோடு வேறறக்கலந்து ஒன்றி யவனே தானுய்த் தானே யவனுய்ப் பேதமறநிற்பதனுலென்க. பரம்பொருளில்லாத விடமொன்றுமில்லையாயினும் இத்தகைய யோகியர்பால் விசேஷமாய்ப் பிரகாசித்து நிற்பன். அந்த யோகிகளுக்குச் செய்யும் வழிபாடுகளெல்லாம் சிவ வழிபாடேயாம். இதனுலேயே யோகிகளை வழிபட்டுப் பலர் மகத்தான ஐசுவரியத்தையும், ஒருவருக்கு மெட்டாத மேலான பதவியையும் பெற்றூர்களென்று எல்லா நூல்களுங் கூறுகின்றன. யோகத்தை யித்துடன் முடித்து எஞ்சிநின்ற மெய்த்துறவு (சந்நியாசம்) என்பதைச் சிறிது விரிப்பாம். (தொடரும்)

சிவானந்தசாகர யோகீஸ்வரர்.

யோக முற்றும்.

---

## உப்பு.

நமது ஆனந்தனின் நண்பர்கள் யாவரும் உப்பையும் அதன் உற்பத்தியையு மறிந்திருந்தாலும், அதிலோர் விசேஷித்த தன்மை அமைந்திருப்பதால் என் சிற்றறிவிற்கெட்டியவாறு இவ்வியாசத்தை யெழுதத் துணிந்துளேன்.

இவ்வுலகின்கண்ணே தோன்றும் விளை பொருட்களுள் உப்புமொன்று. இது மூன்றெழுத்தாலாகிய ஓர் பெயர்ச்சொல். கடல்நீரில் ஆதித்த கிரணங்கள் தாக்குவதனுல் அதிலுள்ள அணுக்கள் யாவுமொன்ரூய்ச் சேர்ந்து கட்டியாக மாறுவதினுலே உப்பு உண்டாகிறது. ஜனங்கள் கடல்நீரைப் பாத்திகட்டி மறித்து சூரியகிரணத்தினுதவியினுல் உப்பைச் செய்கை பண்ணுகிறூர்கள். சில இடங்களிற் தானுகவே விளைவதுமுண்டு.

இவன் ஓர் எளிமையான இடத்தில் உற்பத்தியானுலும் சமஸ்தகோடி ஜனங்களுக்கும் ஓர் நண்பன்போலத் தோன்றுகிறுன். இவன் உலகிலுள்ள யாவருக்கும் ஞான உபதேசம் செய்யும் ஓர் மௌனகுருபோலவும், தன்னை அண்டினேரைக் காக்கும் மண்டலாதிபனை ஒப்பவும், சகல ஜீவான்மாக்களுக்கும் ஓர் பரோபகாரியாகவு மிருக்கிறுன். இவனுடைய மேன்மையை உற்றுணர்ந்த வோர் ஞானி, மனிதரின் உன்னத நிலையை யெடுத்துப் பேசுமிடத்து, தன்னைச் சூழ்ந்திருந்த ஜனங்களையும், தமது சீஷப்பிள்ளைகளையும் பார்த்து, "நீங்கள் உலகத்திற்கு உப்பா யிருக்கிறீர்கள்" என்று கூறினர். அறுசுவைகளுளொன்ருகிய வுவர்ப்புச் சுவையைக் கொடுப்பது இவ்வுப்பே. நமதுணவுடன் இனிப்புப்புளிப்பாகிய எந்த விதமான சுவையைச் சேர்த்தாலும், உவர்ப்பாகிய சுவையில்லாவிட்டால்

அது நாவிற்கு உருசியைத் தராது. "உப்பில்லாப்பண்டத்தைக் குப்பையிலேபோடு" என்ற பழமொழி இதனாலேயே வழங்கப்பட்டு வருகிறது. அறுசுவைப் பதார்த்தங்களுள் உப்பு சிரேஷ்டமா யிருப்பதுபோலவே, மனுஷனும் கடவுளாற் சிருஷ்டிக்கப்பட்ட எழுவகைச் சிருஷ்டிகளுள் அதி சிரேஷ்டமுடையவனா யிருக்கிறான். உப்பானது சாரமற்றுப் போனாலொன்றிற்குமுதவாது. அப்படியே மனுஷனும், ஐம்புலவலையிலகப்பட்டுச் சத்து அற்றுப்போகும்போது தனக்கும் பிறருக்கும் அப்பிரயோசனமுடையவனாகிறான். உப்பே உணவிற்கு உருசியைக் கொடுக்கிறது; அது போலவே மனுஷனும் உலகத்திற்கு உப்பைப்போலவிருக்கிறான். உலகத்தைச் சிறப்பித்து வருகிறவன் மனுஷனே. உலகத்திற் றற்போது காணப்படும், நாகரீகம், சீர்திருத்தம் யாவும், மனுஷனது முயற்சியே.

உப்பிலே விசேஷித்த இரண்டு குணங்களுண்டு. ஒன்று தானழிந்தாலும் தன் சுவை கெடாமலிருப்பது. மற்றது தானழிந்து மற்றவர்களுக்குப் பிரயோசனப்படுவது. இவ்விரு இலட்சணங்களுமே உப்பின் மேன்மைக்குக் காரணங்களாயிருக்கின்றன. ஒரு கட்டி உப்பைத் தண்ணீரில் போடும்போது அதன் உருக்குலைந்து தண்ணீர் மயமாகிறது. ஒரு பதங் கெடத்தக்க வஸ்துவின்மேல் உப்பைப்போட்டு வைத்தால், அது பதங்கெடாதபடி காக்கப்படுகிறது. "தன்னைத்தான் தியாகஞ் செய்தல்" (Self sacrifice) என்னும் சிறந்த லட்சணத்தை மற்ற எந்தவஸ்துவிலும் பார்க்க உப்பிலேயே நாம் தெளிவாய்க் கற்றுக்கொள்ளலாம். சுயமதிப்பிழந்திருக்கும் இந்தியராகிய நாம் கற்றுக் கொள்ளவேண்டிய சிறந்த இலட்சணம் உப்பிடத்திலேயே யிருக்கிறது. ஒருவன் உலகில் மேலான நிலையை யடையவேண்டுமானால் "தன்னைத்தான் தத்தம் செய்தல்" (Self Sacrifice) என்னும் சிறந்த இலட்சணத்தைப் பொருந்தினவனாயிருத்தல் அவசியம். "மகான்" என்னும் பெயரைக் காந்தியடிகள் இதன் மூலமாகவே யடைந்துகொண்டார். இந்தியா சுயராஜ்யம் பெறவேண்டுமானால், யாவரும் இச்சிறந்த குணத்தைத் தங்களில் விருத்தியாக்கிக்கொள்ள வேண்டுமென்பதே அம்மகானின் போதனையும் சாதனையுமாகும். அமெரிக்காவிலுள்ள அடிமைகள் சுயாதீனமடைவதற்கு இச்சிறந்த இலட்சணத்தை ஆபரணமாகவுடைய ஆபிரகாம் லிங்கன் (Abraham Lincoln) முதலிய மகான்களே காலாயிருந்தனர். முன் தோன்றிய ஞானிகளிலொருவராகிய இயேசுகிருஸ்து, "ஒருவன் முதல்வனாயிருக்க விரும்பினால், அவன் மற்றவர்களுக்கு ஊழியக்காரனாயிருக்கக்கடவன்" என்று கூறியது வாஸ்தவமே. ஒரு வித்து முளைத்து மரமாகவேண்டுமானால் அது முதலாவது நிலத்திற் சாகவேண்டும். சாகாவிட்டால் அது தன்னில்தானே பிரயோசனமற்றதாயிருக்கும். தன்னுருக் கெடும்பொழுது ஒரு அழகான பூண்டைப் பிறப்பிக்கிறது. அப்படியே ஒரு இரும்புத்துண்டைக் கொல்லனுலையிலிடும்போது, அதனுருக்குலைகிறது. அதன்மூலம் பிரயோசனமான பல ஆயுதங்கள் அடிக்கப்படுகின்

றன. அவ்வாறே சகல காரியங்களுக்கும் "தன்னைத்தான் தியாகம் செய்தல்" என்னும் குணம் ஓர் ஊற்றாயிருக்கிறது.

"தன்னைத் தான் தியாகஞ் செய்தல்" என்ற நதி தனக்கிஷ்டமான இடத்திலோடி தன்னைச் சுற்றியுள்ள புல், பூண்டு, விருட்சம் முதலியவற்றைச் செழிப்பியாதபடி, சுயநயம் (Selfishness) என்னும் வரம்பு அதைத் தடுத்துக்கொண்டிருக்கிறது. இச்சுயநயம் மனுஷனுடைய தீய குணங்களுக்கு ஓர் ஊற்றும் காரணமுமாயிருக்கிறது. பெருமை, பொறாமை, கோபம், பிரிவினை முதலிய தீக்குணங்கள் இக்கசப்பான ஊற்றிலிருந்தே உற்பத்தியாகின்றன. இதுவே எல்லாத் தீங்குக்கும் வேர். இந்தியாவிற் காணப்படுக் ஜாதிபேதம், மதபேதம், முதலிய பேதங்கள் இதன் பிள்ளைகளே. இக்குணம் சகலமனுஷரிடத்திலுமிருக்கிறது. "தன்னைத்தான் தியாகம் செய்தல்" என்ற ஆறு சுயநயம் என்னும் வரம்பை யுடைத்துப் பாயவேண்டுமானால் அன்பு (Love) என்னும் பேராறு இதனுடன் வந்து கலக்கவேண்டும். அன்பே மனுஷனை உலகத்திற்கு உப்பைப்போற் சீவிக்கப்பண்ணும். சாரமுள்ள உப்பே மனுஷனுக்குப் பிரயோசனப்படும். அப்படியே அன்பினால் சாரமேற்றப்பட்ட மனுஷனே உலகத்திற்குப் பிரயோசனமுடையவனாயிருப்பான். திருக்குறளில் அன்பின் சிறப்பைக் குறித்துப் பேசுமிடத்து

"அன்பிலாரெல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு"

என்று "தன்னைத் தான் தியாகஞ் செய்தல்" என்னும் சுபாபத்திற்கு அன்பு எவ்வளவு இன்றியமையாதது என்பதை யெடுத்துக் காட்டியுள்ளார்.

ஒருவருக் கிடுக்கண்வருங்கால் அதனைக் கண்ணுற்று மனமகிழ்ந்து விலகி ஓடாமல், அவர்களிடஞ் சென்று போதிய வுதவிசெய்தல்வேண்டும். தன்னை நேசிக்குமாப்போல் பிறரை நேசித்து தன்னுயிரைப்போல் மன்னுயிரைக் காத்து நடப்பவனே மானிட ஜென்மமெடுத்ததின் பயனையடைவான். எவனொருவனுக்குச் சீவகாருண்யமுண்டோ அவனே உப்பைப் போல் கரைந்து மற்றவர்களுக்குப் பிரயோசனப்படுவான்.

பாரதமாதாவின் புத்திர புத்திரிகளே! அன்பெனும் சிறந்த லட்சணத்தை நாம் பெற்று உப்பைப்போல நாம் உலகத்திற் சீவிக்கவேண்டுமாயின், அன்புச் சொரூபியாகிய கடவுளோடு ஐக்கியப்பட்டுச் சீவிக்க வேண்டும். ஆகையால் நாம் உலகிற் பிரயோசனப்படுமாறு சீவித்து பரந்தாமனின் பாதகமலங்களை யடையவேண்டுமாயின் உப்பின் விசேஷத் தன்மைகளைக் கவனித்து நடக்கவேண்டியவர்களா யிருக்கிறோம். அவ்வண்ணம் நடக்கக் கருணையங் கடல் கருணை புரிவாராக.

வே. பொன்னையா,
பட்டணம், யாழ்ப்பாணம்.

---

## பகவத்கீதை வசனம்.

(433-ம் பக்கத் தொடர்ச்சி.)

இத்தகைய நிலையில் நிற்கும் யோகிகள், கொடிய பகைவர் தம்மை வேல் முதலிய ஆயுதங்களால் துன்புறுத்தினும், தீக்ஷணியமான நஞ்சை யுடைய கொடிய நாகம் தீண்டினும் எதற்கும் அஞ்சமாட்டார்கள். சர்வ விருத்திகளுமொழிந்த அச்சமாதியின்கண்ணே அவர்களடைந்துள்ள நிலை நிரதிசயானந்தமேயாகும். அந்த நிலையில் அவர்களுக்கு யாவும் பிரம்மா னந்தமயமே.

அத்தகைய யோகம் எவ்வித உபாயத்தால் அப்பியாசிக்கத்தக்கது? என்று அர்ச்சுனன் வினவ, நீலமேக சொரூபியாகிய கிருஷ்ணபகவான் அவ்வுபாயத்தை யருளிச்செய்கின்றார் :—

ஏ அர்ச்சுனா! சங்கற்பத்தினால் எழாநின்ற சர்வ காமங்களையும் அவற்றின் வாசனைகளோடு கூட பரித்தியாகம் செய்து, இந்திரியங்களை விஷயங்களில் செல்லவொட்டாது தடுத்து, மனதை யப்புறம் போகவொட் டாமல் பிரத்யகான்மாவினிடத்தில் நிலைக்கச் செய்வாய்.

நேத்திராதி யிந்திரியவாயிலாய்ப் புறம்போந்து நாமரூப விஷயங்க ளில் சஞ்சரிக்கும் மனதை உபாயமாய் அந்தர்முகத்திலிழுத்து, கேவல மாகிய நித்திரையடையாதபடி பிரத்யகாத்மாவின்கண் நிலைக்கச்செய்து, சித்தம் சற்றும் சலிக்காது வைக்கும் அப்பியாசத்தையே செய்வாயாக.

[மனம் இந்திரியவாயிலாகப் புறம்போந்து நாமரூபங்களாகிய விஷ யங்களைப் பற்றுவதும், நாமரூபமான அனான்ம பதார்த்தங்களைச் சிந்திப் பதுமாகிய இவை சகலம் என்னப்படும். மனதைச் சகலாவஸ்தையடையா தபடி தடுத்து இலயப்படுத்தும்போது தன் நிலைமறந்து சுழுத்தி மூடிக் கொள்ளுதல் கேவலம். இந்தச் சகல கேவலங்களிரண்டும் ஞானயோகம் கைகூடற்கு விக்கினங்களாமாதலின் சகல கேவலங்கள் தாக்காதபடி மனம் பிரத்யகான்மாவில் இலயிக்கச் செய்யவேண்டும். அப்போது தான் ஆன்ம தரிசனம் கிட்டும். இச்சகல கேவலங்களையே முறையே பகல் இரவென்று, நினைப்பு மறப்பென்றும் நூல்கள் கூறும். ஆதலின் சகலகேவ லங்களற்ற நிலையை, நினைப்பு மறப்பற்ற விடமென்றும், இராப்பகலற்ற விடமென்றும் கூறுப.

இவ்வாறு மனதை யிந்திரியங்களின் வழிச் செல்லாது தடுத்து சகல கேவலங்களற்ற நிலையில் நிறுத்தினால்தான் அருள் கிட்டும் என்பதை ஸ்ரீ அருணகிரிநாதர் பின்வருமாறு அருளியிருக்கிறார் :—

"அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்த வன்பாற்
குராப்புனை தண்டையந் தாடொழல் வேண்டுங் கொடிய வைவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பற வேண்டு மென்று
லிராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே.

(கந்தரலங்காரம்.)

மறவா நினையா மௌனத் திருக்கிற்
பிறவா ரிறவார் பினே. (ஔவைக்குறள்.)

இந்த நிலையில் சித்தம் சற்றும் சலனமின்றி சாக்கிரத்தில்மட்டும் அதாவது தன்னிலையை மறவாதுமட்டு மிருக்கவேண்டும். சலித்தலாவது சிந்தித்தல்—சமாதி நிலையின் சுகத்தை எதிரிட்டு நோக்குதல், இப்போது நாம் எவ்வளவுகாலமாகச் சமாதிநிலையிலிருக்கிறோம் என்று நினைத்தல் முதலியவைகளாம்—இத்தோஷங்களால் சகலம் தோன்றி நிஷ்டைகெடும்—சகலம் உண்டாகாவிடினும், மனதையிரண்டிலும் செல்லவொட்டாது தடுத்தும் சித்தம் அந்நிலையை யெதிரிட்டுணர்ந்துகொண்டிருக்கின், சித்தம் நடுநிலையில் நிற்குமன்றி ஆன்ம சாக்ஷாத்காரமடையாது. ஆதலின் சித்தம் சலனமற்று நிற்றல்வேண்டும். சித்தம் இவ்வாறு நிற்கும் நிலையே தானற்ற நிலை.

"நீயற்ற வந்நிலையே நிட்டையதி னீயிலையோ
வாயற் றவனே மயங்காதே—போயற்
றிருந்தாலு நீபோகா யென்றுமுள்ளாய் சும்மா
வருந்தாதே யின்பமுண்டு வா." (தாயுமானவர்.)]

(பகவான் இத்தகைய யோகி யடையும் ஆனந்தத்தைப்பற்றிக் கூறுகின்றார்.)

ஏ பார்த்த! சகல கேவலங்களற்ற தெளிந்த சித்தத்தையுடையவனாய் தன்னிலையன்றி வேறு கற்பிதமற்றவனாய் இத்தேகத்திலிருந்தே இதற்கு விலக்ஷணமான பிரமத்தையடைந்து ஆரூடனாய் நிற்கும் சீவன் முத்தன் நிரதிசயானந்தத்தையடைவன்.

இந்த யோகத்தில் எப்போதும் நிலைத்து நிற்பவன் என்று மழியாத இன்பத்தினை அநாயாசமாகவே யநுபவியாநிற்பன். அத்தகையோன் சர்வ பூதங்களையும் தன் ஆன்மாவினிடத்தும், சர்வபூதங்களிலும் தன் ஆன்மாவையும் காண்பான். (அதாவது தானாகிய ஆன்மா யாவற்றிலும் வியாபித்திருப்பதாகவும், சகலமும் ஆன்மாவிலிருப்பதாகவும் அபேதமாய்க் காண்பான். யாவும் தானாகவும் தன்னையன்றி இரண்டாவதொன்றில்லை யென்றும் காண்பான்.)

முன்பு, தேவர்களின் பகைவர்களாகிய அசுரர்களைச் சங்கரித்த கிரீடி! எந்த யோகி புருஷன் சர்வ வுலகங்களிலும் பரமேசுரனான என்னையும், என்னில் எல்லா வுலகங்களையும் அபேதமாகக் காண்கின்றானோ அவனுக்கு நான் அன்னியமன்று; அவனும் எனக்கன்னியமன்று.

எந்த யோகி புருடன் சர்வ பூதங்களிலு முள்ள தத்பத இலக்ஷியார்த்தமாகிய என்னைத் துவம்பத இலக்ஷியார்த்தமாகிய தன்னோடு அபேதமென நிச்சயித்து அனுபவிக்கிறானோ, அந்த யோகி புருடன் எத்தகைய விவகாரங்களைச் செய்யினும் நான் அவனாகின்றேன் என்று ஐயமற அறிவாயாக. (இது சாமவேதம் சாந்தோக்கிய உபநிடத மகாவாக்கியமாகிய "தத்துவமசி" என்பதன் பொருளாகும்.)

ஏ பார்த்த! எந்த யோகிபுருடன் அந்நிய உயிர்களின் சுகதுக்கங்களைத் தான் அனுபவிப்பதுபோல் சமமாய்ப் பார்க்கின்றானோ அந்த யோகி மேலானவனாகும்.

[இதுவே சீவகாருண்யம் என்பதன் பூரண அர்த்தம். எவ்வகைச் சன்மமெடுத்தபோதிலும் அததற்கு அததன் ஜீவன்மேல் மிகப் பிரியமே. மனிதன் கழுதையை மிக அலக்ஷியமான பிராணியெனக் கருதுகிறான்.

உண்மையில் மனிதனுக்குத் தன் உயிர் எவ்வளவு இனிமையாய்த் தோன்றுகிறதோ, அதுபோலவே கழுதைக்கும் அதன் உயிர் அவ்வளவு இனிமையாகவே தோன்றும். இது மாயையின் இரகசியங்களிலொன்றாகிய இயற்கையாகும். ஆதலின் எல்லா உயிர்களையும் நம்முயிரெனவே கருதல் வேண்டும் என்பது விதி.

"எவ்வுயிர்த் திரளு முலகி லென்னுயி
ரெனக்கு ழைந்தருகி நன்மையாய்
* * * *" என்றும்,
"எவ்வுயிருந் தன்னுயிர்போ லெண்ணுந் தபோதனர்கள்
செவ்வடிவை நாடிமிகச் சிந்தைவைப்ப தெந்நாளோ"

என்றும் தாயுமான சுவாமிகள் கூறியருளினர்.]

(மனதின் சஞ்சல சுபாவத்தால் எல்லா உயிர்களையும் சமமாகப் பார்க்கத் தன்னால் இயலாமையைப்பற்றிப் பார்த்தன் வினவுகிறான்.)

அர்ச்சுனன் :—"ஏ பரந்தாமா! யோகி புருஷன் எல்லா வுயிர்களையும் சமமாகப் பார்க்கவேண்டுமென வருளினீர். ஆனால் இம்மனமானது மிகச் சஞ்சல சுபாவமுடையதாய் சரீரேந்திரியங்களைக் கலங்கச் செய்துவிடுகின்றது. பலம்பொருந்தி இம்மனத்தை க்ஷணநேரமேனும் ஒரு நிலையில் நிறுத்துவது முடியாத காரியமெனத் தோன்றுகிறது. ஏனெனில் இம்மனதை நிறுத்துதல் வாயுவை நிறுத்துதலுக்குச் சமானமாகுமெனக் கருதுகிறேன்" என்றனன். (தொடரும்)



சீடன்.

## கருதாமற் கருமங்கள் முடிக்கவேண்டாம்.

இப்பூவுலகின் கண் மாந்தர் செய்யத்தக்க காரியங்கள் பல உள. அவைகளை இடம், பொருள், ஏவல், காலம் முதலியவற்றை நன்றாயறிந்து செயல்வேண்டும். ஒரு தொழிலைப் புதிதாய் ஆரம்பிக்கும் முன்னம் அதைத் தீர்க்கமாய் ஒருமுறைக் கிருமுறை,அல்லது அநேக முறை யோசித்துப் பிறகு செய்யத் துணிதல்வேண்டும். துணிந்து செய்துவிட்டுப் பிறகு அதனுடைய நற்பயனோ துர்ப்பயனோ பார்த்துக்கொள்ளலாம் என்று முன்பின் யோசியாமல் செய்துவிட்டுப் பிறகு கஷ்டப்பட்டு, நான்குபேர் சிரிக்க உடலெடுப்பதா மனித வாழ்வு! ஒரு காரியத்தில் புகுந்தால் கட்டாயமாய் அநேக இடையூறுகள் தோன்றும். அவற்றை யெல்லாம் கடந்து, தான் கொண்ட முடிவிற்கே வந்து நிலைப்படுத்தவேண்டும்; ஆடம்பரமாக ஆரம்பித்து இரண்டு நாட்களில் இருந்த இடம் தெரியாமல் போய் விடுவதைப் பார்க்கிலும் "தோன்றலிற் தோன்றாமைநன்று" அன்றோ! பாமரர் இதைத் தெரிந்துகொள்ளாதிருப்பதைப்பற்றி நமக்கு வருத்தமில. ஐயோ! கற்றறிந்த சிகாமணிகள்கூட, தெரிந்தோ அல்லது வேண்டுமென்றோ.

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு"

என்ற நாயனார் அமுதவாக்கினை அலட்சியப்படுத்துகிறதற்கே வருந்துகிறோம்.

ஆனந்த நேயச் செல்வர்காள்! இப்பொழுது நாம் இதை வரையயாது காரணமெனின், சென்ற வைகாசிமீ ஆனந்தனில் சந்தா நேயர்களில் பிரக்கியாதிபெற்ற ஒருவரால் "நண்ணிய கருமமு மெண்ணித்துணி" என்ற தலைப்பின்கீழ் வரையப்பட்டதை நேயர்களனைவரும் கண்ணுற்

திருப்பீர்கள். அதைப்போலவே இத்தென்னாட்டின்கண் இன்னுமொன்று நிகழ்ந்தவாறு மொழிவாம்.

நண்பர் சொல்லிய 'தமிழபிமானி'யின் மானேஜர் எம்மிடத்தில் எம்மாதிரி நடந்துகொண்டார் என்பதை ஒரு வார்த்தையில் சொல்லி விட்டு, மேலே யாம் இன்னொருவரால் அடைந்த கஷ்டத்தையும் நம் ஆனந்தன் வாயிலாக வெளியிட்டு ஆற்றிக்கொள்கிறேன்.

என் விலாசத்தையும் பெயரையும் 'தமிழபிமானி'யின் மானேஜர் பெயர் பெற்ற ஆனந்தனின் மூலமாகத்தான் தெரிந்திருப்பாரென்று உறுதியாகச் சொல்வேன். அன்னவர் அம்பாசமுத்திரத்தினின்று 19-12-20ல் ஓர் கடிதம் எழுதினார். அதில் சிறியேனை விஷயதானம் புரியவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அதற்கிணங்கி ஏதோ என் சிற்றறிவிற்கெட்டியவாறு ஓர் வியாசமும் ஓர் பதில் கடிதமும் எழுதியனுப்பினேன். பிறகு மாதிரி சஞ்சிகை யொன்றனுப்பினார். அதோடு முற்றுப் பெற்றது. அவர் என்னைச் சந்தாதாரர்களைச் சேர்க்கச்சொல்லவுமில்லை; ஆகையால் யானும் செய்யவுமில்லை.

அம்பா சமுத்திரத்திற்கும், மணற்பாறைக்கும் எவ்வளவு தூரமோ யான் அறிகிலேன். ஏனெனில் இக்காற்று அங்கேயும் அடித்ததுபோலும் 29-7-'21ல் "ரஞ்சிதம்" பத்திரிகாசிரியரும், மானேஜருமான ம-ா-ா-ஸ்ரீ K. N. நாராயணசாமி பிள்ளை என்பவர் என் விலாசத்திற்கு ஓர் கடிதம் அனுப்பினார். அதில் 15-8-1921 முதல் 'ரஞ்சிதம்' என்ற ஓர் மாதாந்திரத் தமிழ்ப் பத்திரிகை வெளியிடப்போவதாயும், அதில் அருமையான விஷயங்கள், பல பண்டிதர்களால் வெளியிடப்போவதாயும், அதற்கு வருட சந்தா ரூ. 1—8—0 ஆகவும், அதற்கு நான் ஒரு சந்தாதாரராய்ச் சேரவும், என்னையாவது, அல்லது வேறொருவரையாவது அப்பத்திரிக்கைக்கு மதராசில் ஏஜெண்டாயிருக்கவேண்டியும், உடனே பதில் எழுதினால், 20 ஆர்டர் கொண்ட புஸ்தகம் ஒன்றும், நோடீசும் அனுப்புவதாயும் பிறகு ரூ. 5 கமிஷன் எடுத்துக்கொண்டு வசூலித்த பணத்தை அனுப்பும்படியும், அதோடு வியாசம் ஒன்றெழுதியனுப்பும்படியும் கேட்டுக்கொண்டார். அதற்கு நான் உபசார பதில் எழுதினேன். அவர் 16-8-'21ல் "தாங்கள் வரைந்த விகிதமும் "செயல்" என்னும் வியாசமும் வந்து சேர்ந்தன. அதைப் பிரசுரிக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். மதராஸில் தங்களைத் தவிர சந்தாநேயராவது ஏஜெண்டாவது கிடையாது. ஆகையால் இத்துடன் தங்கள் பேருக்கு 20 ஆர்டர் கொண்ட மனுப்புஸ்தகம் இரண்டும் நோடீசும் அனுப்பியிருக்கிறேன். தாங்களே அவைகளைப் பூர்த்தி செய்தாவது அல்லது யாரையாவது ஏஜெண்டாக நியமனம் செய்தாவது ரூ. 10 கமிஷன் எடுத்துக்கொண்டு பாக்கியையும் பூர்த்தியான புஸ்தகத்தையும் அனுப்பிவைக்கவும். தங்களை ஏஜெண்டாய் எடுத்துக்கொண்டதால் முதலாவது சஞ்சிகையிலிருந்து தங்களை ஏஜெண்டென்று பிரசித்தம் செய்யப்படும்." என்று வரைந்தார்.

நேயர்களே! தமிழ்ப் பாஷை என்பது இந்நாட்டில் இன்னும் உயிரோடு உலாவி வருகின்றதா என்று அதிசயப்பட்டுக்கொண்டிருக்குந் தருணம் " ஆம் " என்று பதில் சொல்வதுபோல் நம் ஆனந்தன் உலாவி வருகிறான். இதைப்போலவே, தமிழபிமானி, ரஞ்சிதம் முதலான பத்திரிகைகள் வெளிவர முயன்றால், அவைகளுக்கு நம்மாலியன்றவளவு உதவிபுரிய வேண்டாமா? அதனால் உண்டோ இல்லையோ என்ற தமிழிற்கும் நம் பாரதமாதாவிற்கும் அற்ப நன்றி செலுத்தினவர்களாக மாட்டோமா?

உலகிலிருக்கும் அறிவாளிகளையும், செல்வவந்தர்களையும் விட்டுவிட்டு எம்மைப்போன்ற எளியோனையும் ஓர் பொருட்படுத்தி பத்திரிகாசிரியர் "தாங்கள் நமது சஞ்சிகைக்கு உதவி புரியவேண்டும்" என்று கேட்டுக் கொண்டால் அதற்குப் பின் வாங்குவதா? நாம் என்னகொடுத்து விடப் போகிறோம்; பணமா, காசா? சொற்ப தேக கஷ்டமும் பேனு ஓட்டும் வேலைதானே! உன்னத நிலையை யடைந்திருக்கும் பாஷைக்கு நாம் செய்ய வேண்டியவை யொன்றுமில்லை. செய்ய இயலும் இயலா — அந்தோ நம் தாய்ப்பாஷை க்ஷீணதிசை அடைந்து கொண்டிருக்குஞ் சமயம் இச்சிறிய உபகாரமாவது செய்ய நம்மைக் கடவுள் குறிப்பிட்டாரே என்று சந்தோஷங்கொண்டேன்.

மறுதபாலில் நோட்டீசுகளும், ஆர்டர்பாரங்களும் வந்துசேர்ந்தன. வேறொன்றுஞ் சொல்லவேண்டியதில்லை. என்னால் செய்யவேண்டியவை செய்தேன். கமிஷன் பற்றித் தொந்தரவு எடுத்துக்கொள்ளவேண்டா மென்று பதிலளித்து சந்தாக்களைச் சேர்த்தனுப்பினேன்.

அக்டோபர்மீ சஞ்சிகைகளை நவம்பர்மீ அனுப்பிவைத்தார். அவை களை சந்தாதாரர்களுக்கு நானே முறைப்படி நேரில் கொண்டுபோய்க் கொடுத்து, பத்திராதிபருக்கு, அடுத்த சஞ்சிகையிலிருந்து அவரவர்களு டைய விலாசத்திற்கு அனுப்பும்படி எழுதிவிட்டேன். இவ்வளவுதான் அதன் விவகாரம். அன்றுமுதல் இன்றையவரையிலும் ஒரு சஞ்சிகையும் வரவில்லை. யாம் எழுதிய கடிதங்கள் ஒன்றிற்காவது பதிலுமில்லை. சந்தா தாரர்கள் நம்மை நெருக்கினார்கள். நாம் ஒன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கிறது. நல்லது செய்யப்போய்க் கெட்டதுவந்து நேர்ந்தது. யாரை நோவது? கடைசியில் என் கையினின்று கொடுக்கவேண்டியதாயிற்று. நேயர்களே! சஞ்சிகையை நிறுத்திவிட்டால் வசூலித்தபணத்தைத் திரு ப்பி அனுப்பிவிடவேண்டுமென்பது பத்திராதிபருக்குத் தெரியாததல்ல. ஆனால் அவர் என்ன எண்ணமோ? கடலாழத்தைக் காணலாகும், நெஞ் சாழத்தைக் மனதில் காண வியலுமோ!

இவ்விதம் நம்பி மோசம் போனவர்களில் நான் ஒருவன்தான் என்று இதுகாறும் சும்மாவிருந்தேன். எம்மைப்போலவே நமது நண்பரும் அடைந்த நஷ்டத்திற்காக எம்மைவிட அவருக்காக வருத்தப்படுகிறேன். தமிழிற்கு உறைவிடமான தென்தேசத்தில் இவ்வாறு தமிழின் பெயரைச் சொல்லிப் பிழைக்கிறார்களே என்பதுதான் ஆச்சரியப்படத்தக்க விஷயம்.

நேயர்களே! "தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்—தோன்ற லிற் றோன்றாமை நன்று"—என்றவாறு ஆனந்தனின் தக்க புகழைப்பற்றி யான் எடுத்துரைக்கவல்லேனல்லேன். ஆனால் ஆனந்தன் எதற்கும் இரண் டாவதல்ல என்பதை மாத்திரம் தீர்க்கமாய்ச் சொல்வேன். இனி எந்த நாட்டுச் சஞ்சிகையின் விஷயத்திலும் நுழைவதில்லை. உழைத்தால் இனி ஆனந்தனுக்கேதான் உழைப்பது என்று முடிவு செய்துகொண்டேன். இன்று முதல்வருடா வருடம் ஒருசந்தாவையேனும் கட்டாயம் சேர்க்கா மல் விடுவதில்லையென்று கங்கணங் கட்டிக்கொண்டேன். நீங்களும் அதே மாதிரி செய்வீர்களென்று மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறேன். சஞ்சிகை யின் அபிவிருத்தியும், பரவலுமே தேசபிரபல விருத்திக்குக் காரணம். நாம் செய்யககூடிய தொண்டு இச்சிறிய தொண்டே யாம்.

மாதம் ஒருமுறை வரும் ஆனந்தனை இருமுறை வெளிவர எல்லோரும் முயற்சி செய்யவேண்டும். பத்திராதிபர் சந்தாவை இரட்டிப்புச் செய்யக்

கோருகிறோம். இதைப்பற்றி நாம் முன்னமேயே பத்திராதிபரை வேண்டிக்கொண்டோம். வேறொரு தென்னாட்டுச் சஞ்சிகை ஜோலி இனி நமக்கு வேண்டாம்.

பரிவா யெனக்குநீ யறிவிக்க வந்ததே
பரிபாக கால மலவோ
பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற
நிறைகின்ற பரிபூர ணானந்தமே.

பூ. அமிர்தலிங்கம்,
2/112 தம்புசெட்டி தெரு, மதராஸ்.

குறிப்பு :—நமது நண்பர் நன்மைசெய்யப்போய் வருத்தமடைய நேர்ந்ததற்காக மிகவும் விசனிக்கிறோம்.

நமது நண்பர் ஆனந்தனை மாதமிருமுறையாக்க விரும்புகிறார். இவ்வாறு பத்திரிகைகளின் அருமையையும், பயனையும் அறிந்து அவற்றை ஆதரிக்க விரும்பும் அறிவாளிகளாகிய அபிமானிகள் மிகச் சிலரே யுளர். நம்மவர் நாடகம், பயாஸ்கோப், வேடிக்கை இவைகளுக்கு வாரம் ரூபா 1, 2, 8 கூடச் செலவு செய்வார்கள். இத்தகைய தேச க்ஷேமத்தையும் தாய்ப் பாஷாபி விர்த்தியையும் பொறுத்த விஷயத்திற்கு வருடத்திற்கொரு முறை 2 ரூபா கொடுத்து நன்மைபெறப் பிரியமற்றவர்களாகவிருக்கிறார்கள்.

நம் சந்தாநேயர்களில் பாதிப்பேர்—பத்தாயிரம்பேர்—மட்டுமேனும் வருடசந்தா ரூ. 1-8-0 ஆகக் கட்டச் சம்மதித்தால் நாம் உடனே மாதம் இருமுறை வெளியிடாவிடினும் சஞ்சிகையை 10 வது ஆண்டு ஆரம்ப முதல் 64 பக்கங்களுடன் வெளியிட ஆவலுடையேம். பத்திரிகாசிரியர்.

---

## முக்கிய அறிவிப்பு.

சந்தாதாரர்களின் விலாசங்கள் அச்சடித்து வைத்திருந்த பிரதிகளனைத்தும் ஆய்விட்டபடியால், 9-வது ஆண்டு தொடங்கி மறுபடி அச்சியற்றப்படவேண்டுமாதலின் உடனே ஆடிமாதம் 10, 15 தேதிகளுக்குள் பணம் அனுப்பிவிடுகிறவர்களுக்கும் வி. பி. வந்தவுடனே பணங்கட்டிப் பெற்றுக்கொள்கிறவர்களுக்குமே பழைய நம்பர் நிலைக்கும். பிறகு பணம் அனுப்புகிறவர்களுக்கும் வி. பி. யை வாபீஸ்செய்து பிறகு சேருகிறவர்களுக்கும் புது நம்பர்கள் கொடுத்து வரப்படும். ஆதலின் சீக்கிரம் சந்தாவைச் செலுத்திவிட்டால் பழைய நம்பரையே சுலபமாகக் கடிதங்களில் குறிக்க அனுகூலமாக விருக்கும். பத்திராதிபர்.

---

## தபால் கொள்ளைக்காரர்கள்.

(438-ம் பக்கத் தொடர்ச்சி)

இரவணப்பன் உடனே தன் ஊருக்குச் சென்று விசாரித்தபோது, அவளை வடநாட்டிலிருந்து ஒரு வாலிபன் வந்து மணம் செய்துகொண்டு போய் விட்டதாய்க் கேள்விப்பட்டான். அவ்வாலிபன் இவனில் பாதி செல்வம் கூட இல்லாதவனென்றும் தெரிந்தது.

இப்போது அவன் மனநிலைமை மிக்க கலவரத்தில் வந்துவிட்டது. பாதி பித்தம் பிடித்தவனாய்விட்டான். எல்லா உலக விவகாரமும் மறந்துவிட்டான். தான் காதலித்த கன்னிகையை மணம்புரிந்துகொண்டவன்மேல் வஞ்சம் தீர்த்துக்கொள்ளவேண்டும் என்ற ஒரே பிடிவாதம்

அவன் மனதில் நிலையாய்விட்டது. அதற்காகவே தன் செல்வத்தையும் தன் முயற்சி முழுவதையும் உபயோகிப்பதென்று தீர்மானித்துக்கொண்டான். இதே எண்ணத்தோடு அவன் தன் தேசத்தைவிட்டுப் புறப்பட்டான்.

தன் நாட்டை விட்டு வெளிப்பட்ட இரவணப்பன் வடதேசம் சென்று பல விடங்களிலலைந்து திரிந்து கடைசியில் கமலாம்பாள் வசிக்குமிடத்தைக் கண்டுகொண்டான். இனி தன் வஞ்சத்தைத் தீர்த்துக்கொள்ள வேண்டியதே அவன் வேலை. அச்சமயம் கமலாம்பாள் முதல் குழந்தையொரு பெண்குழந்தை பெற்றிருக்கிறாள். அப்போது அப்பெண்ணுக்கு ஐந்து வயதாயிற்று.

இரவணப்பன் ஒருநாள் இரவு அவர்கள் வீட்டிற்குள் புகுந்து அக்குழந்தை தொட்டிலில் சயனித்துக்கொண்டிருக்கையில் அதைக் களவாடிக்கொண்டுபோய் நவீனபுரியிலுள்ள மார்க்கபந்து என்ற ஒரு ஹோட்டல்காரனிடம் வளர்க்கும்படி ஏற்பாடு செய்துவிட்டான். அதுமுதல் அவன் தன் கண்ணோக்கத்தை விடாமல் வைத்திருந்தான். இதோ விருக்கிறதே கோமளவல்லி என்ற பெண் இதுதான் அப்பெண்" என்றான்.

அதுவரையில் மிக்க வியப்போடு யாவும் கேட்டுக்கொண்டிருந்த கோமளவல்லி அம்மொழிகளைக் கேட்டதே ஆத்திரத்தோடு ஓடிப்போய் இரங்கநாதனிடம் முழங்காற் படியிட்டு, "அய்யா! அய்யா! உனக்கு என் தாய்தந்தையர் தெரியும். அவர்கள் பெயரென்ன? நான் யார்? உண்மையில் நான் யார்? தயவு செய்து கூறும்" என்றாள்.

இரங்கநாதன் "சற்று பொறுமையாய்க் கேள் யாவும் கூறிவிடுகிறேன். என் காலம் மிகக் கொஞ்சமே யிருக்கிறது" என்று கூறிவிட்டுக் கதையைத் தொடங்கினான்.

அவனுடைய வஞ்சனை யொருவித திருப்தியடைந்தது. எவ்வாறெனின், தன் குழந்தை காணமற்போய்விட்டதே கமலாம்பாள் அதே வியாகூலத்தால் இரண்டு மூன்று வருடங்களில் மடிந்துபோய்விட்டாள். அவள் கணவனும், புத்திரியும் மனைவியும் போனதால் சீக்கிரம் கிழப்பருவமும் பலகீனமு மடைந்துவிட்டான். ஆகையால் அவன் தனக்குத் துணையாகவும் அபிமான புத்திரனாகவும் ஒரு வாலிபனை வளர்த்துக்கொண்டான்.

ஆனால் அவ்வாலிபன் சுத்த அயோக்கியனாய், எல்லாத் துஷ்டத்தனத்திலும் பழக்கமுடையவனாகிவிட்டான். கிழவன் பலபேரைக்கொண்டு புத்திகூறியும் அவன் கொஞ்சமேனும் வழிக்கு வரவில்லை. ஆகையால் கிழவன் தன் ஆஸ்தியில் கொஞ்சமேனும் அவ்வாலிபனுக்கு வைக்கலாகாது எனத் தீர்மானித்துக்கொண்டான். கிழவன் அவ்வாறே மரண சாதனம் எழுத உத்தேசித்திருந்தான். கிழவனுக்கு வெறுப்புண்டானபிறகே சாமிநாதன் என்ற அவ்வாலிபன் இரயிலில் தபால் ஏஜெண்ட் வேலையில் அமர்ந்தான். கிழவன் மரணசாதனம் எழுதிவிட்டால் சாமிநாதனுக்கு ஒரு காசுகூட கிடைக்காது. ஆனால் எழுதாமலே இறந்துபோனால் யாவும் இவனுக்கே கிடைக்கும். இச்சமயம் சாமிநாதன் எப்படியோ தற்செயலாய் இரவணப்பனைக் கண்டு அவனோடு சினேகமாகிவிட்டான். இரவணப்பனுக்கும் கிழவன்மேல் வஞ்சமிருப்பதால், அவன், சாமிநாதன் கிழவன் ஆஸ்தி முழுமையும் அடைவதற்கு வழி காட்டினான். எவ்வாறெனின் ஒருநாள் இரவு கிழவன் நித்திரையிலிருக்கும்போது இருவரும் அவன் அறைக்குள் நுழைந்து அவனை மிகக் குரூரமாய்க் கொன்றுவிட்டார்கள். அதுமுதல் ஆஸ்தி முழுமையும் சாமிநாதனே அனுபவித்து வருகிறான்.

ஆனல் அக்காலம் முடிந்துவிட்டது. ஏனெனில் நியாயமான வாரிசு சமீபத்திலிருக்கிறது. சொல்லப்பட்ட கிழவன் கோபாலுசாமி சர்தார் இந்தக் கோமளவல்லியின் தந்தை. இவனே அந்த ஆஸ்தி முழுமைக்கும் சுதந்தரக்காரி.

நான்ருன் இரவணப்பன்; என் வஞ்சம் இதோடு நிற்கவில்லை. சாமிநாதனையும் இதோவிருக்கும் மூன்று கள்ளரையும் ஒரு கூட்டமாய்ச் சேர்த்து இத்தபாற்கொள்ளையை நடக்கச்செய்வித்தேன். இனி என் வேலை நெருங்கிவிட்டது" என்றதும் மல்லாந்து புரண்டு ஆவியை விட்டான்.

இனி நமது கதை முடிவிற்கு வந்துவிட்டது. நடந்த விசாரணையில் மூன்று கள்ளர்கள்மேலும் சாமிநாதன் மேலும் தபாற்கொள்ளைக்குற்றம் ருசுவாய்விட்டதோடு, சாமிநாதன்மேல் கோபாலு சர்தாரைக் கொன்ற குற்றமும் ருசுவாகிவிட்டது. ஆகையால் அவன் பிராணதண்டனை யடைந்தான். மற்ற மூவர்க்கும் 20 வருடம் தீபாந்தர சிக்ஷை விதிக்கப்பட்டது.

அம்பலவாணன் பூரண நிரபராதி யென்று நன்ருய் ருசுவாய்விட்டது. ஐந்தாறு மாதங்களுக்குள் அவன் தபாலாபீஸ் தலைமையதிகாரியாய்விட்டான். மறுமாதம் கோமளவல்லிக்கும் அவனுக்கும் மணம் நடந்து அவர்கள் என்றைக்கும் ஆனந்தலிங்கின் அன்பார்ந்த நண்பர்களாய்ச் சுகத்தோடு வாழ்ந்து வந்தார்கள். தேவராஜுலு தன் குற்றவாளியையும் ஆனந்தலிங் கண்டுபிடித்ததற்காக மிக்க நன்றிபாராட்டினன். ஆனந்தலிங் இதில் மிக்க புகழும் செல்வமுமடைந்தான்.

முற்றிற்று.

ஆரணி - குப்புசாமி முதலியார்.

---

## ஓர் அதிசய அறிவிப்பு.

நமது சந்தா நண்பரில் ஒருவரான P. R. சங்கரையர், வலிவலம் என்பவர், "மேல்விலாசம் தமிழில் அச்சடித்து அனுப்ப, பலதரம் எழுதியும் கவனிக்காததினல் 9-வது வருஷ சஞ்சிகை நமக்கு அனுப்பவேண்டியதில்லை" என்று எழுதி யிருக்கிருர். அவர்மட்டும் தமிழில் எழுதி ஆங்கிலத்தில் கையொப்பம் போட்டிருப்பதோடு மேல்விலாசமும் ஆங்கிலத்திலேயே எழுதியிருக்கிருர்.

மேல்விலாசம் ஆங்கிலத்தில் வரையவேண்டு மென்பதே தபால் இலாகாவின் நோக்கம்—நம் நாட்டாருக்குப் பத்திரிகை விஷயத்தில் இத்தகைய அபிமானமிருந்தால் நமது நாடு எவ்வாறு க்ஷேமமடையுமென்பதை நம் சந்தா நேயரே சிந்திக்கவேண்டும். பத்திரிகாசிரியர்.

## பொது சமாச்சாரம்.

ஓர் அதிசயமான ஈச்சமரம் :—தாட்பத்ரி தாலுக்கா, ராயல் சேரு என்னும் கிராமத்திற்கு 3 மைல் தூரத்தில் இருப்புப்பாதைக்கு அருகாமையில் 20 அடி உயரமுள்ள ஈச்சமரம் ஒன்று இரவு பனிரெண்டு மணிக்கு விழத்தொடங்கிச் சரியாய் பகல் உச்சிநேரத்திற்குத் தரையில் சாஷ்டாங்கமாய் விழுந்துவிடுகிறது. அது சரியாய் மறுபடியும் பகல் உச்சிநேரத்திற்கு நிமிரத்தொடங்கி இரவு 12 மணிக்கு அது தன் சரியான நிலைமையை யடைகிறது. மரத்தின் அடிவாரத்தில் கொஞ்சம் வளைந்தாற்போல் இருக்கிறது. அந்த வளைவிலிருந்து மரம் கீழே விழவும் நிமிரவும் தொடங்குகிறது. சுற்றிலுள்ள கிராமத்தார் நூற்றுக்கணக்காய் அந்நூதனக் காக்ஷியை தினே தினே பார்க்கப் போகிருர்கள். "இந்து"

# " ஆனந்தபோதினி " பஞ்சாங்கம்.

உருத்ரோத்காரிஞு ஆடிமீ—கலி 5025—சாலிவாகனம் 1846
பசலி 1333—கோல்லம் 1098-99—ஹிஜரி 1341-42
இங்கிலீஷ் 1923ஞு ஜூலைமீ—ஆகஸ்டுமீ

| ஆடி | ஜூலைமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | திங் | திரி53-50 | ஆயி24-35 | சி24-35ம | கடகரவி-நா 11-35 தக்ஷி[ணயன புண்யகாலம் |
| 2 | 17 | செவ் | சது50-0 | மக22-55 | சித்60 | கரிநாள் |
| 3 | 18 | புத | பஞ்45-40 | பூர20-58 | அமி60 | ஸ்கந்தபஞ்சமி |
| 4 | 19 | வியா | சஷ்40-45 | உத்18-0 | ம18-0சி | சஷ்டி, குமார சஷ்டி |
| 5 | 20 | வெ | சப்35-33 | அஸ்14-8 | அ 4-8சி | வித்தியாரம்பம் செய்ய |
| 6 | 21 | சனி | அ29-58 | சித்11-23 | ம11-23அ | பிரயாணம் விலக்கல் |
| 7 | 22 | ஞா | நவ24-10 | சுவா7-40 | சி7-40ம | லக்ஷிமி விரதாரம்பம் |
| 8 | 23 | திங் | தச18-20 | விசா3-45<br>அனு59-57 | ம3-45சி | வைவசுதமன்வாதி, கோடியுடுக்க, வாகனமேற |
| 9 | 24 | செவ் | ஏ12-40 | கேட்56-25 | ம56-25அ | மத்வ சர்வ ஏகாதசி |
| 10 | 25 | புத | துவா7-8 | மூல53-23 | ம53-23அ | பிரதோஷம், கரிநாள் |
| 11 | 26 | வியா | திர2-23<br>சது58-50 | பூரா51-8 | சித்60 | பவித்திராரோபணம், அவமாகம் |
| 12 | 27 | வெ | ○55-15 | உத்49-40 | சி49-40ம | பிரதமயஜுர்வேத உபா[கர்மம் |
| 13 | 28 | சனி | பிர53-50 | திரு50-3 | சித்60 | ஆஷாட பகுளம் |
| 14 | 29 | ஞா | துதி53-43 | அவி51-40 | ம51-40சி | காதுர்மாஸய துதிகை |
| 15 | 30 | திங் | திரி55-15 | சதை54-53 | சி54-53ம | தானியம், மாடு வாங்க |
| 16 | 31 | செவ் | சது58-23 | பூரட்59-28 | ம59-28சி | பிரயாணம் விலக்கல் |
| 17 | 1 | புத | பஞ்60 | உத்ரட்60 | சித்60 | திருதின ஸ்பிருக் |
| 18 | 2 | வியா | பஞ்2-50 | உத்ரட்5-35 | சித்60 | குளம், கிணறு வெட்ட |
| 19 | 3 | வெ | சஷ்8-15 | ரேவ12-33 | அமி60 | வித்தியாரம்பம் செய்ய |
| 20 | 4 | சனி | சப்14-15 | அசு20-0 | சித்60 | கரிநாள் |
| 21 | 5 | ஞா | அ20-10 | பர27-18 | சித்60 | அடுப்புவைக்க, மூலிகை உபயோகிக்க |
| 22 | 1923ஞு ஆகஸ்டுமீ 6 | திங் | நவ25-23 | ※கிரு33-53 | ம33-53அ | கிருத்திகை |
| 23 | 7 | செவ் | தச29-30 | ரோ39-18 | அ39-18சி | |
| 24 | 8 | புத | ஏகா32-8 | மிரு43-20 | சித்60 | |
| 25 | 9 | வியா | துவா33-10 | திரு45-40 | ம45-40அ | |
| 26 | 10 | வெ | திர32-30 | புன46-33 | சி46-33ம | |
| 27 | 11 | சனி | சது30-28 | பூச45-50 | சி45-50ம | |
| 28 | 12 | ஞா | ●26-58 | ஆயி43-55 | சி43-55ம | |
| 29 | 13 | திங் | பிர22-18 | மக41-5 | மர41-5சி | |
| 30 | 14 | செவ் | துதி17-0 | பூர37-28 | சி37-28அ | |
| 31 | 15 | புத | திரி11-8 | உத்33-25 | அ33-25ம | |
| 32 | 16 | வியா | சது5-5<br>பஞ்58-50 | அஸ்29-10 | சித்60 | சிம்மரவி-நா 32-30, நாக பஞ்சமி, கருடபஞ்சமி |

| | | | |
|---|---|---|---|
| | | | சுக் புத |
| கே | 4வ கட-பு<br>13 ,, கட-சு<br>19 ,, சிம்-பு | | சூ செ |
| | | | ராகு |
| | | குரு | சனி |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
" ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.